# ஆனந்தரங்கப் பிள்ளை

## நாட் குறிப்பு

### தொகுதி ஐந்து

கலை பண்பாட்டுத் துறை
புதுவை அரசு
1998

# ஆனந்தரங்கப் பிள்ளை

# நாட் குறிப்பு




தொகுதி ஐந்து

கலை பண்பாட்டுத் துறை

புதுவை அரசு

**1998**

☆ ஆனந்தரங்கப்பிள்ளை நாட்குறிப்பு (நகல் பதிப்பு) தொகுதி V

☆ மக்கள் பதிப்பு : ஜூன் 1998.

☆ விலை

☆ வெளியீடு : கலை பண்பாட்டுத் துறை,
புதுவை அரசு.

☆ பதிப்பாக்க மேற்பார்வை : புதுவை மொழியியல் பண்பாட்டு
ஆராய்ச்சி நிறுவனம்,
புதுவை – 605 001.

☆ அச்சு : மோகனா பதிப்பகம்,
புதுச்சேரி.

☆ வெளியீட்டுக் குழு : திரு. கி. இராசாராம்
திரு. ஆனந்தரங்க ரவிச்சந்தர்
திரு. பிரபஞ்சன்
திரு. செபஸ்தியான்
முனைவர். எல். இராமமூர்த்தி.

பிரத்தியேகமான

ஆனந்த ரங்கப்பிள்ளையவர்களின்

சொஸ்த லிகித

# தினப்படி சேதி குறிப்பு

ஐந்தாம் புத்தகம்

விலை ரூபாய் 3




கிடைக்குமிடம்:—

அரசாங்க புஸ்தகசாலை, புதுச்சேரி.

சந்தானம் பிரின்டிங் ஒர்க்ஸ், புதுவை.

1954






### பிரத்தியேகமான

## ஆனந்தரங்கப்பிள்ளை

# தினப்படி சேதி குறிப்பு.

## சொஸ்தலிகிதம்

### ஐந்தாம் புத்தகம்

*1748* ௵ ஏப்ரல் ௴ 1 ௳ ஸ்ரீ பிரபவ ௵ பங்குனி ௴ 23 ௳ சோமவாரம்.

இற்றைநாள் காலத்தாலே இமாம்சாயபு துஸ்த்தா சொக்கப்பமுதலி வந்து சேதிசொல்லி தன் மருமகன் ஆற்காட்டிலிருந்து அனுப்பின காகிதம் கொண்டுவந்து கொடுத்து படித்துப்பார்க்கச் சொன்னான். அந்த காகிதத்திலே எழுதியிருந்த வயணம்: அபரங்கபாது நாளிலிருந்து இமாம்சாயபு அவர்கள் அவர் குமாரன் அசனல்லிகான் பேருக்கு எழுதின காகிதமும் புதுச்சேரி கப்பித்தான் பேருக்கு ஒரு காகிதமும் அந்தக் காகிதத்திலேயிருக்கிற வயணங்கள், நக்கல் எழுதி சாயபு சாதா காகிதத்தில் வந்ததாகவும் நாசற்சங்கு கப்பித்தான் பேருக்கு எழுதின காகிதத்திலே தாம் அனுப்பினது பிறபீன்களும், சரீரங்களும், சுருபம் எழுதியிருக்கிற கித்தாப்பும் அதற்கு சாஸ்திர ஆயுதம் எழுதியிருக்கிற கித்தாப்பும் வந்து சேர்ந்ததென்றும் இதனாலே தம்முடைய மனது மெத்த சந்தோஷமாய் உமக்கு கிவலத்து அனுப்பினோமென்று மெத்தவும் பிரிதியெழுதி அனுப்பினார்களென்றும், அப்பால் இமாம் சாயபு காகிதத்திலே சிறிது உபசாரங்களாய் சிறிதுகள்

எழுதி அறித கர்ரியமும் யெழுதியிருக்கிறது யென்றும் அப்பால்சாயபு சந்தாவுக்கு எழுதின சாகிதத்திலே புதுச்சேரி கப்பித்தானுக்கு சிறேப்பா அனுப்பச்சொல்லியும் இருளி பட்டாணிகள் பெலத்துவந்து லாகூர் கோட்டை கட்டிக் கொண்டு இப்பால் சிலது சீமைகளும் கட்டினுர்களென்றும், அதன்பேரிலே பார்சாங்சி இருக்கிற காமதிகானும் அறுபது ஞயிரம் சுவார்களுடனே போய் லாகூர் கோட்டை பிடித்துக் கொண்டிருக்கிற இருளி பட்டாணிகளுடனே போய் சண்டைக் கொடுத்தாப்போலேயும் அந்த சண்டையிலே கறமதிகான் விழுந்துபோய் அந்த தளமுரிஞ்சுவந்த சேதி மகமது சாயா துசா கேட்டுத் தளங்களேயும் நாத்தன் பதினுயிரம் குதிரைகளே யும் கூட கூட்டி அனுப்பினுரென்றும் நிசாமை சீக்கிரமத்துக்கு பன்னசு கூட்டிக்கொண்டு வரச்சொன்னதாகவும் சவா பாசி ருயன் முதலான பேருக்குப் பத்து பணம் விசேஷமாய் சிலவு பண்ண அவர்களேயும் வரச்சொல்லிப்போட்டு நிசாமவர்கள் நாசற்சங்குக்குக் குல எகருத்தியரு அபரங்காபாது சுபாவும் கற்னுட்டகத்துக்கு எசமானத்துவமும், கொடுத்து இமாம் சாயபு சுபாவும் கற்னுட்டகத்துக்கு அவர்களேயும் நாசற்சங்கு அண்டையிலே இருக்கச்சொல்லி அப்பால் மாபூசுகான் கடப்பை அபுதுலு மொசேன்கான் கந்தனூர் நபாயிம்மத்து பாதர்கான் ஆதிவனனே நபாயிருயித்து முகமதுகான் முதலான சுபேதார்களே தங்கள் தங்கள் சாகாவுக்குப் போகச்சொல்லி அம்பகம் பண்ணிப்போட்டு அப்பால் நிசாம் கூச்சிதர் கூச்சி யாய் டில்லிக்கி சாகிப்போனுரென்றும், இப்போ இமாம்சாயபு அவர்கள் நாசற்சங்கு அண்டையிலே குல்லேக்குத்தான் இருக் கிறபடியினலே இப்போது எந்தப்பேச்சு எந்தக்காரியம் எப்படி நடத்தவேணுமோ அப்படி நடத்துகிறேன் என்றும் புதுச்சேரி கப்பித்தான் மனதிலேயிருக்கிறபடிக்கு அவர் எழுதின காரி யங்களெல்லாம் அனுகூலம் பண்ணுகிறதற்கு வேளே வந் திருக்கிறது. அப்படிச்செய்து அனுப்பிவிக்கிறேனென்று மருட்டியார் பத்தேசிங்கு ரகோசி பூசலா முதலான மருட்டி யார் சர்தார்கள் அந்த பிராந்தியங்களுக்குப் பவுன்சுடனே சுவார்கள் ஆனபடியினலே நீங்கள் ஆற்காட்டிலே இருக்க வேண்டாம் புதுச்சேரிக்கு தட்டுமுட்டும் சாகுவித்துக்கொண்டு நீங்களும் போய் சேரச்சொல்லி எழுதிவந்த வயணம்: இதல் லாமல் பின்னேயும் இரண்டு காகிதத்திலேயும் மருட்டியர்கள்

வருகிறார்கள் சீக்கிரமத்துக்கு புதுச்சேரிக்கு போங்களென்று இப்படியாக இமாம்சாயபு காகிதம் ஷெ துரான் அசனல்லி கான் பேருக்கு எழுதிவந்ததாகவும் புதுச்சேரிக்கு நாசற்சங்கு சீரோப்பாவும் காகிதமும் இமாம்சாயபு காகிதமும் கொடுத்து அவாய் சாயபை அனுப்புகிறதாய் யோசனை பண்ணினார்கள் என்றும், பின்னையும் அவர்கள் சொந்தக்கிரகச் சித்திரங்களும் எழுதிவந்த காகிதத்தையும் படித்துப் பார்த்து துரை அவர்களண்டைக்குப் போய் மேலே எழுதிய ராஜ்ய காரியங்களெல்லாம் சொக்கப்ப முதலியைய் கூட வைத்துக் கொண்டு சொன்னவிடத்திலே துரையவர்களுக்கு அத்தியந்த சந்தோஷம் வந்து அவர் முக மலர்ந்து சொக்கப்ப முதலியைப் பார்த்து உங்கள் எசமானுக்கு சகல துரைத்தனமும் வந்ததே யென்றார். அதற்கு சொக்கப்பமுதலி உங்கள் தயவினாலேயென்று சொல்லத்தக்க உபசாரப்படியே உபசாரம் சொன்னான். அப்பால் என்னைப் பார்த்து இமாம்சாயபுக்கு நல்லகாலம் வந்துதல்லவா என்று கேட்டார். உங்களுக்கு நாளுக்குநாள் கீர்த்தி பிறதாபம் உயர்ந்ததே அவருக்கும் உமக்கும் சினேகமாகையால் அவருக்குக்கூட யோகம் துவக்கினது. இனிமேல் நடக்கப்போகிற உற்சினயம் வெகுவாயுண்டு என்று சற்று பிறித்துச் சொன்னேன். அவர் மிக உற்சாகம் இருந்த சேதியை அவருடனேயும் சொல்லிக்கொண்டு கிராமத்து நில சம்மதிக்கு நிரெந்தயிரை அழைத்துச்சொல்ல சொன்னபடிக்குச் சொன்னேன். அந்தப் பட்டணத்தைச் சீக்கிறமத்துக்கு அனுப்பிவிட்டுப்போடென்று சொல்லி எனக்கானால் வெகுகரிசு ஒரு காசு ஆதாயமில்லை. எந்தயெந்த சம்மதியிலே எப்படியெப்படி வரப்பத்தவேணுமோ அந்தபடி நீ பார்க்காமல் இருக்கிறாய். நீ மனது வைத்துப்பார்க்கச்சே எவ்வளவு வந்தது இப்போது சற்று பின் வாங்கியிருக்கிறபடியிலே ஒரு காசாகிலும் வரவில்லை. இனிமேல் அப்படியிராமல் காரியத்தின்பேரில் திருஷ்டி வைத்துப்பாரென்று சொன்னார். அதைப் பார்க்க வேறே வேலையென்ன அப்படியே பார்க்கிறேனென்று உபசாரமாய்ச் சொன்னேன். உன் மனதிலேயிருக்கிறது எனக்குத் தெரியும்; இனிமேல் அப்படியிராமல் காரியா காரியங்களிலே நீ எப்படி சொன்னால், அப்படி நடத்துகிறேனேயெல்லாம் வேறல்லவே. இனி உபேஷயாயிருக்கவேண்டாமென்று சொன்னார். நல்லதென்று சொல்லி அப்பால்

பேச்சு நடக்கப்போகச்சே முசியே புரிதோத்தெல் வந்தார்கள். அவர்களுடனே பேசிக்கொண்டுபோய் உட்கார்ந்தார். நானும் அப்பால் பாக்குக்கிடங்குக்கு வந்து காரைக்கால் கந்தப்பனுக்கு இப்போது சேர்ந்திருக்கிற எழுநூற்றைம்பது வராகன் மட்டுக்கும் கும்பினீருக்குச் செலுத்திப்போடச்சொல்லி காகிதமெழுதிட்ட தபாலிலே துரை அனுப்பச்சே கூட அனுப்பிப்போட்டு நானும் பனிரெண்டு மணி மட்டுக்கும் பாக்கு கிடங்கிலேயிருந்து வீட்டுக்குப் போனேன்.

1748 ஆ எப்ரல் மீ 2உ க்கு பிரபவ ஞு பங்குனி மீ 24உ குருவாரம்.

இற்றைநாள் சீர் குவர்னதோர் துரை அவர்கள் வளவுக்குப் போய் யானும் கும்பினீர் கணக்கு நாகேசய்யன் மகன் முறுத்துனஞ்சயன், முசியே ஷோசி பேரில் பணம் வரவேணுமென்று துரை பேருக்கு அவர்கள் அம்மான் வீரணன் கொண்டுவந்த காகிதமத்தல்பு முந்தாநாள் தினசரியில்வயணமாய் எழுதியிருக்கிறேன். அந்த தெலுங்கு காகிதத்தை பிரான்சு படுத்தச் சொல்லி துரை சொன்னபடியினாலே அதை பிரான்சு படுத்தி இற்றைநாள் பிரான்சு ஆக எழுதின காகிதமும் அந்த தெலுங்கு காகிதமும் கூட கொண்டுபோய் துரை கையிலே கொடுத்ததற்கு அதை அவர் பிரான்சு எழுத்திலே எழுதினதை பார்த்துக்கொண்டு அப்பால் முசியே கியோ கையிலேகொடுத்துமதாம் சொசி கையிலே கொடுக்கச்சொன்னார். அவன் கொண்டு போன பிற்பாடு என்னைப் பார்த்து மதாம் சுவிசி சொல்ல வேண்டிய உத்திரம் அறிந்துக்கொண்டு சொல்லுகிறாரென்று சொன்னார். அப்பரல் சாவடி கபுருடாப்பு படித்துச்சொன்ன பிற்பாடு தருவாடி பாரபத்தியம் நம்ப கூட இல்லைபோலேயிருக்கிறது என்று சொன்னார். எனக்கு தோத்துகிறது கைக்கி வந்து சேருகிற மட்டுக்கும் சந்தேகமாயிருக்குதென்று சொன்னேன். கும்பினீர் வர்த்தகர் ஒன்றும் கொண்டுவரவில்லையென்று சொன்னார். இருபதுனாயிரம் ரூபாய் முஸ்தீதாக இருக்கிறது துரை பதினாயிரம் ரூபாயும் முஸ்தீது பண்ணிக் கொண்டுவந்து கொடுப்பீர்களென்று சொன்னேன். அப்படிக் கவையில்லை. இருபதுனாயிரம் ரூபாயிருக்கிறதே, கொண்டு வரச்சொல்லென்று சொன்னார். நல்லதென்று சொல்லிப்

போட்டு டாக்கு கிடங்குக்கு வந்து கும்பினீர் வர்த்தகரை அழைப்பித்து துரை எல்லாம் சம்மதி பண்ணச்சொல்லுகிரு ரென்று சொன்னதற்கு பணமெல்லாம் இப்போது வருமா இன்னும் சிறிது லாலாபேட்டையிலேயும் ஆற்காட்டிலேயுமாயிருக்கிறது. சிறிது சரக்கும் அப்படித்தான் இருக்கிறது இவ்விடத்திலேயும் சிறிது சரக்குமாயிருக்கிறது என்று சொல்லி எல்லாத்துக்கும் ராத்திரி யோசனைபண்ணிக்கொண்டு வருகிரேமென்று சொன்னார்கள். நல்லது போங்கள் நாளையதினம் பணம் கொண்டுவந்து செலுத்துங்களென்று சொல்லிவிட்டுப் பனிரெண்டு மணியானபடியினாலே நான் வீட்டுக்குப் போனேன்.

ஐந்தாம் நாள் எழுதவேண்டிய தினசரியிலே மறந்துபோய் இன்றைய தேதியிலே எழுதின சேதி இங்கிலீஷ்கார மனுஷர் தஞ்சாவூருக்குப் போய் சிறிது குதிரைகளைக்கொண்டு நாகப்பட்டணம் சற்று அங்கேயிருந்து கப்பலிலே ஏத்தி தேவனும் பட்டணத்திலே இறக்கிக்கொண்டார்கள். இப்படி இரண்டு மூன்று தரம் குதிரைகளை அழைப்பித்துக்கொண்ட சேதி மூசியே பாதி காரைக்காலிலேயிருந்து தஞ்சாவூரிலேயிருந்து இங்கிலீஷ்கார மனுஷர் ஒன்பது குதிரைகளை நாகப்பட்டணத்துக்குக் கொண்டுபோகச்சே காரைக்காலுக்கு முக்காத வழிமேலாக போகச்சே சேவகரும் சிப்பாய்களும் அறுபது பேர் போய் அந்த ஒன்பது குதிரைகளையும் மடக்கின விடத்திலே மூன்று குதிரைக்காரர் குதிரைகளை அப்பாலப்படுத்திக்கொண்டு ஓடிப்போய்விட்டார்கள். மற்ற ஆறு குதிரைகளையும் சிறிதுபேர் மனுஷரும் அகப்பட்டார்கள். அவர்களைமாத்திரம் கொண்டு வந்து காரைக்காலிலே சேர்த்தார்கள் என்றும் இங்லீஷ்கார மனுஷர்களில் இரண்டு பேருக்குச் சாவு காயம் இரண்டு பேருக்கு அசவு காயம் இவர்களில் இரண்டு பேருக்குக் காயம் அன்றுப்போலேயும் அந்த ஆறு குதிரைகளின் விலை ஆயிரத்தி ஞூறு வராகன் பாணித்தார்களென்றும், இப்படியாக திரு வேங்கடப்பிள்ளை காரைக்காலிலிருந்து எழுதி அனுப்பின காகிதம் முன் 19-ந் உ 20-ந் உ எழுதிவந்த காகிதத்திலே எழுதி வந்தது. தஞ்சாவூர் பிறதாபசிங்கு திருவாலூர் திருநாளுக்கு வந்தாப்போலே திருவாலூரிலே இந்தமட்டுக்கும் இருக்கிறார் என்றும் எழுதிவந்தது.

**1748 ஆ ஏப்ரல் மீ 3வ க்ஷ பிரபவ ஞு பங்குனி மீ 25 வ புதவாரம்.**

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் வளவுக்குப் போனவிடத்திலே நடந்த சேதி என்னவென்றால்: முசியே பாதி தோட்டம் முசியே தொலோராம் ஆயிரத்தி ஐந்நூறு வராகன் எட்டு மாதத்து விராகனுக்குக் கொண்டதாகவும் அது நொத் தாரியும் அண்டைக்குப் போய் எழுதிவைத்து அந்த தோட் டத்துக்குத் தீர்வையில்லையென்று எழுதச் சொன்னதாகவும் அந்த சேதிக்கு நொத்தாரியுமாகிய முசியே கோக்கோத் குவர்ன தோர் உத்தரவு ஆனால் தோட்டத்துக்கு தீர்வையில்லையென்று எழுதலாம். இல்லாவிட்டால் எழுதப்போகாதென்று சொன்ன தின்பேரிலே முசியே பாதி பெருகிறதோருகிய முசியே கயிபூர் மங்கனேத்திரி வந்து துரை அவர்களுடனே முசியே பாதி தோட்டத்துக்குத் தீர்வை மரப்புயென்று முசியே கோக்கோத் எழுதச்சொன்னால் உம்முடைய உத்தரவு வேணுமென்று சொன்னான். ஆனபடியினாலே முசியே கோக்கேந்துக்கு நீ உத் தாரம் கொடுக்கவேணுமென்று சொன்னார். அதன்பேரிலே துரையவர்களிருந்துகொண்டு இது முசியேதுலோராம் வாங்குகிற படியினாலே இந்த கிரயம் என்றென கணக்கும் அவனை யல்லவோ சேர்ந்ததுக்கு போதுமென்று சொல்லி ஒழுகரைகுத் தகைக்கும் தோட்டங்களுக்கும் குத்தகை பிணை தானியப்ப முதலியாரானபடியினாலே அவரை அழைப்பித்து முசியே பாதி தோட்டத்துக்குத் தீர்வை என்ன நடக்கிறதென்று கேட்டார். அதற்கு அவரிருந்துகொண்டு அதெனக்கு தெரியாது குத்தகைக் காரரை கேழ்க்கவேணுமென்று சொன்னார். அதன்பேரிலே முத்துகுமரப்பமுதலியை அழைப்பித்துக் கேட்டவிடத்திலே மெய்தான், அவர் தோட்டம் கோலி அதிலே செடி செட்டுகள் போட்டுக்கொண்டு அதிலே வீடு கட்டிக்கொண்டார். அதன் பேரிலே நான்கு தரம் இரண்டு தரம் நாங்கள் போய் தீர்வை கேட்டதுண்டு. அதற்கு அவரிருந்துக்கொண்டு துரை அவர் களுடனே சொல்லி உத்தாரம் வாங்கித்தருகிறோமென்று சொல்லிக்கொண்டு வந்தார். அப்படியிருந்தது என்று சொன் னார்கள். அதன்பேரிலே முசியே கயிபோருடனே துரையவர்கள் சொன்னது: மெய்தான் அவர் தீர்வை மாப்புப்பண்ண வேணுமென்று சொன்னதுமுண்டு. நல்லது அந்தப்படிக்குத்

தானே உத்தரவு தருகிறோமென்று சொன்னதுமுண்டு நாம் இவர்களுடனே சொன்னதில்லை பெதரு இருக்கச்சே நடந்தது அவரும் காலம் பணிப்போய்விட்டாரென்றும், அப்படியாக சொல்லி அனுப்பிவிட்ட பிற்பாடு முத்து குமரப்பமுதலியும் சின்னமுதலியார் இரண்டு பேரையும் அழைத்து நீங்கள் போய் முசியே கோக்கேந்துடனே எங்களுக்கு வருஷம் ஒன்னுக்கு வீ $10\frac{1}{4}$ விழுக்காடு இப்போது சென்னுப் போன ஐந்து வருஷத்துக்கும் வீ $51\frac{1}{4}$ வரவேணும் அது நாங்கள் முசியே பரதியவர்களை கேட்டிருக்கிறோம் அவர் கையிலே வாங்கிக்கொள்ளுகிறோம் இப்போ அது அவசரமாயிருக்கிறதோ அவர்களந்தப்படிக்கு வருஷம் ஒன்றுக்கு வீ $10\frac{1}{4}$ விழுக்காடு கொடுக்கவேணும் அந்தபடிக்கு யெழுதச்சொல்லி போடுங்கோ ளென்று சொல்லி அனுப்பிவிட்டார் அதின்பேரிலே தனியப்ப முதலியாரும் முத்துகுமரப்பமுதலியும் இரண்டுபேரும் போய் கோக்கேந்துடனே இந்தப்படிக்கு சொன்னார்களாம் அதற்கு அவ ரிருந்துக்கொண்டு முசியே பரதி காரியத்திக்கு பெருக்கிறதொரு யிருக்கிறவர் முசியே கயிபோ அவரண்டைக்கு நீங்கள் போய் சொல்லுங்கள் அவர் எப்படி சொல்லுகிறாரோ அந்தப்படிக்கு நான் எழுதி போடுகிறேனென்று சொன்னாரும். அந்த வார்த்தையை போய் முசியே கயிபோருடனே அவர்கள் சொன்னச் சொன்னதின்பேரிலே அதற்கு முசியே கயிபோருந்துக்கொண்டு எனக்கென்னதெரியும் நல்லது இந்த வயணத்தை முசியே பாதிக்கு யெழுதி அனுப்பிவித்து தெரிஞ்சிக்கொண்டு சொல்லுகிறோமென்று சொன்னானும் அந்த மட்டிலே அவர்கள் வீட்டுக்குப் போய்விட்டார்கள் இந்தப்படிக்கு நடந்தது.

பிற்பாடு சாவடி கபுறு சொல்லியான உடனே பரபத்திய சேதி என்ன அமர்ந்துதாவென்று கேட்டார் எல்லாத்துக்கும் பேசியிருக்குது ஒண்ணும் அமர்ந்ததில்லையென்று சொன்னேன் அதின்பேரிலே தறுவாடியை அழைத்துக் கொண்டுவரச் சொல்லெனறு சொன்னார் அந்தபடியே அவனை அழைக்கபோன விடத்திலே சாப்பாட்டுவேளையாயிருக்கிறது எனக்கிப்பவரக் கூடாதென்று சொல்லி சின்னதருவாடியை அனுப்பித்தார். அவன் வந்தவுடனே பரபத்திசேதி என்னவென்று கேட்டார். அதற்கவன் சொன்னது எங்கள் எசமானுக்கு எழுதியனுப்பி யிருக்கிறோம் இன்னும் சேதி வரவில்லை என்று சொன்னார்.

இற்றைநாள் ஸாயங்காலம் தேவனும்பட்டணத்திலேயும் இங்கிலீஷ் கப்பல்கள் பேரிலேயும் பீறங்கிகள் விஸ்தாரமாய் பொருத்து பொருத்து போட்டதும் உடனுக்குடனே போட்டதுமாய் சாயங்காலம் ஆறு மணிக்கு பீறங்கி சத்தம் கேட்டபடியினாலே அதே தொண்டு யோசனை பண்ணுமிடத்தில் தேவனும்பட்டணம் பெரியதுரை உனர் பினே ரென்கிறவர் சரீர சொஸ்தமில்லாமல் ரொம்ப லெகுவுதப்பி இருக்குதென்று சொல்லி நாலஞ்சு நாளாய்சேதிபாதிவந்துகொண்டேயிருந்தது அவன் செத்துப்போனான் ஆனபடியினாலே பீறங்கி சுட்டார்களென்று சொல்லிக்கொள்ளுகிறார்கள் அது இனிமேல் அறியவேணும்.

1748 ஆ௵ ஏப்ரல் ௴ 4 ௳ பிறபவ ௵ பங்குனி ௴ 26 ௳ குருவாரம்.

இற்ற்றநாள் காலத்தாலே ஏழுரை மணிக்கு நான் துரை வீட்டுக்குப் போகச்சே இப்போது பிறந்திருக்கிற குழந்தைக்கு வந்தவாசியிலே தார்தக்கஸாயபு அவர்கள் சிரேப்பாவும் நூருவிருகன் பொருத்த வோசிறமத்துக்கு சன்னதும் யெழுதி மிறுதியானதுல்லாவசம் அனுப்பிவித்து இருந்ததை மிறுதியான துல்லா மனுஷரும் மதனுந்தபண்டிதருக்கும் வந்த மிருதியான துல்லா மனுஷருக்கும் உபசாரமாய் சொல்லி மிறுதியான துல்லா மனுஷனுக்கு அஞ்சு ரூபாய் நாம் கொடுத்து அங்கேயிருந்து பாக்கு கிடங்குக்குப்போய் சிரேப்பாவும் சன்னதும் வீட்டுக்கு கொடுத்து அனுப்புவித்துப்போட்டு பாக்குகிடங்கிலே உட்கார்ந்துக்கொண்டிருக்கச்சே தேவனும்பட்டணத்திலே போட்ட பீரங்கி சப்தம் கேழ்க்கப்பட்டது ஆனால் நேற்று ராத்திரி ஏழரைமணி எட்டுமணி மட்டுக்கும் விஸ்தாரமாய் பீரங்கி சப்தம் கேட்டதும் பார்த்தால் அதற்கு முன் தேவனும்பட்டணம் குவர்னதோர் மேஷ்த்தார் பிளேயர் சரீர சுவஷ்த்தமில்லாமல் இருந்தபடியினாலே அவன் செத்துப்போனானென்று யோசனை பண்ணினது மல்லாமல் பீரங்கி இத்தனை விஸ்தாரமாய் போடவேண்டியது துரைத்தனம் பண்ணுகிறவன் செத்தாலே அல்லாமல் மற்றபடி போடத்தக்கதில்லை யென்று யோசனைபண்ணி அவன் செத்தானென்று யெழுதினதிற்கு இவ்டாந்திரம் சரியாய் இற்றைநாள்

காலத்தாலே ஏழுரைமணிமுதல் எட்டுமணிக்குள்ளே சிறிது பீரங்கிகள் சுட்ட சப்தம் கேழ்க்கப்பட்டது. அது யென்ன சாடை யென்ருல் நேற்று அவன் செத்துப்போனது இற்ற நாள் குவர்னதோரிடத்துக்கு பதில் நேமிக்கப்பட்டதற்கு பீரங்கிகள் போட்டதாய் தோற்றுது அப்பால் துரை அண்டைக்கு முந்தானுள் நிசாம் சன்னதும் இமாம்சாயபு காகிதம் முன் சூரத்திலிருந்து இரண்டு மூன்று வருஷமாய் வடத்திலிருக்க பொசுங்கமெல் நிசாம் லசுக்கரையிலே வந்து யிருந்துக்கொண்டு அவன் சம்சாரம் வியாபாரம் கப்பல் காடிகளெல்லாம் பம்பாயிலே வைத்துப்போட்டு இருக்கிற பெரிய வர்த்தகன் மூல்லா பக்கறதீன் ஏசுவார் ஒருத்தன் வந்தான் அவனை நம்முடைய கிடங்கிலே வைத்துப்போட்டு அவன் கையிலிருந்த காகிதத்திலே நபாபு ஆரபுசாவுடைய காகிதத்தை நிறுத்தி அந்த காகிதம் இரண்டு காகிதமும் கொண்டுபோய் துரைக்கு படித்து சொன்னவயணம்: மூல்லா பக்கறதீகான் காகிதத்திலே யெழுதி இந்த வயணம் பதருலுமருகம் என்கிற கப்பல் தங்களது முன் ஒலாந்தாக்காரருக்கு பத்தாவி பயணத்துக் குத்தகையாய் கொடுத்திருந்தோம். அந்த பயணத்தை தொட்டு சுகமாய் வந்து பம்பாய் சேர்ந்தது அதற்கும் பிற்பாடு நபாபுநிசாம் அவர்கள் அந்தகப்பலை கும்மாதுஷா சாகுந்தகாரு எலிசி சூரத்தலே வந்திருந்தபடியினாலே அவர் சத்தாவுக்குபோகிறநிமித்தியமாய் அப்போ பம்பாயிலேயிருந்து சூரத்துக்கொண்டுவரச் சொல்லி உத்தாரம் கொடுத்தானுனபடியினாலே சூரத்து காரியக்காரனுக்கும் நமக்கும் மனஸ்தாபமாயிருக்கையிலே பம்பாய் சருதாருக்குநிசாம் அவர்களிடத்திலே மெத்தவும் பக்தி விசுவாசம் உண்டாயிருக்கிறுனபடியினாலே அந்த கப்பல்மேலே சிறிதுபேரை சாக்கிறதை சொல்லி இங்கிலீஷ்காரரை ஏற்றி சூரத்துக்குபோகிற மார்க்கத்திலே உங்கள் பிரான்சுக்காரர் கப்பல்காரர் அந்தக்கப்பலை பிடித்துக்கொண்டார்கள். இந்த சேதி நபாபுநிசாம் அவர்கள் கேட்டு தங்கள் பெருக்கிறவாறு பண்ணினுர்கள் தங்களுக்கும் இங்கிலீஷ்காரருக்கும் கலாபமேதவிரயெங்களுக்கும் உங்களுக்கும் கலாபமில்லையே நாங்கள் சினேகிதர்களிருக்கிறேம் எங்களிடத்திலே தயவுபண்ணி சூறத்திலிருக்கிற உங்கள் கொட்

டடிக்காரருக்கும் கப்பல்காரருக்கும் தாக்கீது எழுதி அனுப்பி எங்கள் கப்பல் எங்களுக்கு வாங்கிக்கொடுத்து இனி மேலுக்கும் எங்கள் கப்பல்கள் வழிக்கு வராமல் திட்டம் பண்ணி நடப்பிக்கவேணும் மற்ற சமாசாரங்கள் இமாம் சாயபு அவர்கள் கடுதாசியினாலே தெரியவருமே.

இமாம்சாயபு அவர்கள் காகிதத்திலே யெழுதியிருந்த வயணம்: முல்லாபக்குன்தீன் அவர்களுக்கும் சூரத்து பந்தர் காரியக்காரனுக்கும் இரண்டு மூன்று வருஷமாய் அசமாதான மாயிருந்தபடியினாலே முல்லா அவர்கள் நபாபு அசபுசா அவர் கள் சமஸ்தத்துக்கு வந்து அவர் தயவுக்கு பாத்திரனாயிருக்கி றார். அந்த முல்லா அவர்கள் கப்பல் ஒன்று பகருல்லி ருகபுயென்கிற கப்பலை ருமாதூஷா அவர்கள் ஷத்தானுதிபதி சத்தாயிரகத்திரைக்கு போகிற நிமித்தியமாய் அந்த கப்பலிலே சிறுதுபேர் இங்கிலீஷ்காரரை சேவகன் வைத்து கப்பல்மேலே ஏற்றி அந்த கப்பல் பம்பாயிலிருந்து சூரத்துக்கு பயணம் பண்ணினார்கள். மார்க்கத்திலே உங்கள் கப்பல்காரர் அந்த கப் பலை பிடித்துக்கொண்டார்களாம் இந்த சமாசாரம் நவாபு அவர்கள் கேட்டு தங்கள் பேரிலே இனாயிதுநாமா எழுதினார் கள். முல்லா அவர்களும் தங்கள் பேரிலே காகிதம் எழுதி மகம் மது அசுமுத்தீன் என்கிறவனை இனாயிது நாமாவுடனே கூட தாங்களண்டைக்கு அனுப்பிவித்தார்கள் தாங்கள் தயவு பண்ணி இனாயிது நாமாபடிக்கு நடப்பித்துக்கொள்ளவேணும். நபாபு நிசாம் அவர்கள் இனாயிதுநாமா விபரம் ராம்பாதுஷா அவர்களுடைய ஷத்தானுபதி சத்தாயிரத்திரை போகிற நிமித் தியமாய் முல்லா பக்கத்தீன் அவர்கள் கப்பல் பம்பாயிலே யிருந்து சூரத்துக்கு வரயிலே மார்க்கத்திலே தங்களை பிரான் சுக்காரர் அந்த கப்பலை பிடித்தார்களாம். அந்த முல்லா அவர்கள் பாதுஷா சிபந்தாலு பாதுஷாீக சீமையிலேயிருக் கிறவர் ஆனபடியினாலே அந்த கப்பல்வழி போகாமல் கப்பல் மறுபடி அவர்களுக்கு கொடுத்து ஷத்தானுபதிப்படிக் காணு சேருகிறதாய் பண்ணவும் வெகு தாக்கிது அறியவும்.

இந்தப்பிரகாரம் பிரான்சினாலே முசியே தீலாரிஷி கையிலே யெழுதிவைத்து வைத்தியிருக்கிறோம். நாளையதினம் துரை அவர்களுக்கு கொடுக்கிறோம்.

*1748* ஆ ஏப்ரல் மீ 5 உக்கு பிறபவ ஸு பங்குனி மீ 27உ சுக்கிரவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரை அவர்களண்டைக்குப் போனவிடத்திலே நேற்றைக்கு பிரான்சுயெழுத்திலே எழுதிவித்து நிசாம் காகிதமும் முல்லா பக்கற்தீன் காகிதமும் இமாம் சாயபு காகிதமும் கொண்டுபோய் துரை கையிலே கொடுத்தோம். அதைப் பார்த்துக்கொண்டு அசல் பரிசு காகிதமும் பிரான்செழுத்திலே யெழுதின காகிதத்தையும் முசியே போலோ செக்கிரத்தேர் வசம் கொடுக்கச்சொன்னபடிக்கு பத்துநாயக்கன் வசம் முசியே போலோ அண்டைக்கு கொடுத்து அனுப்பிவித்தேன். அப்பால் நிசாம் காகிதத்துக்கு முல்லாபக்கற்தீன் இமாம் சாயபு காகிதத்துக்கும் பதிலுத்தரவு எழுதச் சொன்னார். அந்தப்படி இதன் பிறகாலே எழுதியிருக்கிறது பார்த்துக்கொள்ளவேண்டியது.

அப்பால் சாவடி கபூறு சொல்லிப்போட்டு பாக்கு கிடங்குக்கு வந்துவிட்டேன். மறுபடி பதினொருமணி வேளைக்கு துரை அழைக்கிருரென்று வந்து அழைத்தார்கள் போனவிடத்திலே முசியே பொருஷே பெண்சாதியும், முசியே தெமரோயும் இரண்டு பேரும் லாலாபேட்டையிலே வெங்கட்டரெட்டி சரக்கு தளைஞ்சு இருக்கிறதை விட்டுவிடச்சொல்லி கேட்டவிடத்திலே மதாம் பொருஷே இருந்துகொண்டு நாங்கள் அந்த சரக்கு தளைஞ்சதில்லை மகராசனுய் யெடுத்துக்கொள்ளலாம். அந்த சரக்கை தீவாணத்தார் பரமானந்தன் சம்மதிக்காக தளைஞ்சுயிருக்கிருர்கள் என்று சொல்லி சொன்னதின் பேரிலே துரை அவர்கள் என்னை அழைத்து முசியே பொருஷேக்தும் வெங்கட்ட ரெட்டிக்கும் இருந்த வியாச்சியம் இவ்விடத்திலே கொம்சேலிலே முசியே பொருஷே பாக்கி வெங்கட்ட ரெட்டி சரக்கைத் தளைக்க தேவையில்லை என்று தீர்த்துப் போட்டோமே மறுபடி வியாச்சியம் என்னயிருக்கிறது. ஆனபடியினுலே பரமானந்தன் முசியே பொஷே சம்மதிக்காக அந்த சரக்கைத் தளைஞ்சதுண்டாஞல் நீ அவ்விடத்து கொத்தவாலுக்கும் உங்கள் மனுஷருக்கும் எழுதி அனுப்பிவித்து அதற்கேத்த தாக்கிது சரக்கைத் தளைக்க தேவையில்லையென்று எழுதி அனுப்பிவையென்று சொன்னுர். நல்லதென்று புறப்பட்டுவந்தேன்.

இற்றைநாள் சாயங்காலம் இமாம்சாயபு அண்டையிலே இருந்து வந்த காகிதப்பையைத் தான் தானே அவிழ்த்துப் பார்த்து மதருந்த பண்டிதரையும் என்னையும் அழைத்துவரச் சொல்லி மனுஷரை அனுப்பினவிடத்திலே மதருந்த பண்டிதன் மாத்திரம் அவர் சுவாரிபோகிற வேளை போய் காண்பித்துக்கொண்டபடி அந்தப் பையையும் காகிதத்தையும் மதருந்த பண்டிதன் கையிலே கொடுத்து ரங்கப்பனும் நீயும் நான் சுவாரிப்போய்வருகிற வேளையிலே நீங்கள் இங்கேயிருங்கள் யென்று சொல்லிப்போனாரப்பால் அந்த காகிதத்தை வாங்கிக் கொண்டு நான் வீட்டிலே இருக்கச்சே வந்து மேலே எழுதியிருக்கிறபடிக்கு சேதியைச் சொன்னார். அதன்பேரிலே பாக்குக்கிடங்கிலே வந்து அந்த காகிதத்தை படித்துப் பார்த்தவிடத்திலே அதிலே எழுதியிருந்த வயணம்: ஒரு புட்டேதார் காகிதத்தில் எழுதியிருந்தது. நாசற்சங்கு தாம் அனுப்பின சரீரங்களையெல்லாம் அந்தந்த அவை அவைத்துதை எல்லாம் சுருபமாம்படியே எழுதி அப்பால் நரம்பு, எலும்பு, குடல்கள் இதுகளுக்கு பிரமானமெல்லாம் எழுதி அது இன்ன இன்ன இடங்களிலே இப்படி இப்படியானால் இன்னயின்ன ரோகம் உற்பத்தியாம் என்கிறதும் எழுதின புஸ்தகம் ஒன்றும் அதற்கு சாஸ்திரங்கள் பண்ணுகிற ஆயுதங்கள் எழுதி அதற்கு ஔஷதம் எழுதியிருக்கிற புஸ்தகம் ஒன்றும் துற்பினங்களும் வந்துசேர்ந்தது. அதிலே ஒரு துற்பினம் மெத்த நேர்த்தியாய் இருந்ததை அவர் தகப்பனுருக்கு நிசாமுக்குக் கொண்டுபோய் நசர வைத்தாரென்றும் புதுச்சேரி குவர்னதோர் தாரீபு இரண்டு நாழிகை நேரம் கச்சேரியிலே பெரிய பெரிய மனுஷ ராயிருக்கிற கச்சேரியிலே சவுரியல் பராக்கிறமங்களையும் அதிர்ஷ்டசாலி என்றும் ரொம்பவும் தாரீபு பண்ணினதாகவும், அதன்பேரிலே நாசற்சங்கு அவர்கள் ஒரு குதிரையும் சிரோப் பாவும் அனுப்பி காகிதமும் அனுப்பினார். அது பார்த்துக் கொண்டால் தெரிய வருமேயென்று மற்ற சேதியெல்லாம் பின்னொரு காகிதம் பார்த்துக்கொண்டால் தெரிய வருமென்று எழுதியிருந்தது பின்னொரு காகிதத்தில் :—

1748 ஆ ஏப்ரல் மீ 6 உக்கு பிரபவ ஸு பங்குனி மீ 28உ சனிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரை அண்டைக்குப் போன விடத்திலே மருட்டியார் வருகிற சேதி ஊர்ச்சிதமாயிருக்கிற

மட்டுக்கும் சந்தாசாயபு வருகிற சேதியும் மெய்தானுயென்று கேட்டார். சந்தாசாயபு வருகிற சேதி என்னமோ சொல்லப் போகாது. மருட்டியர் வருகிற சேதி மெய்தானென்று சொன்னேன். மருட்டியர் வருகிற சேதி ஊர்ச்சிதமில்லா விட்டால் இமாம்சாயபு தன்னுடைய தட்டுமுட்டெல்லாம் யெடுத்துக்கொண்டு தன்னுடைய மகனை புதுச்சேரி போய்ச்சேரச் சொல்லி யெழுதுவானு அதுவே ஒரு திருஷ்டாந்தரமென்று சொன்னேன்; மெய்தானென்று ஒத்துக்கொண்டார். இமாம் சாயபு கடுதாசியும் மத்தலப்பு யென்ன நேத்து ஸாயங்காலம் கேழ்க்கிறதற்கு கூடாமல் போனதே அதற்குள்ளே எழுதி யிருந்த வயணமென்னவென்று கேட்டார். இங்கேயிருந்து அனுப்பிவித்த நச்சுக்குழல்களும் சரீரக்கூடு எழுதியிருக் கிறது. ரூபம் ரூபமாய் அவயவங்களெல்லாம் நிதானித்து எழுதியிருக்கிற புஸ்தகம் ஒன்றும் அதற்கு சாஸ்திரங்கள் பண்ணுகிற கத்தியும் ஒளஷத வகை எழுதியிருக்கிற புஸ்தகம் ஒன்றும் இதுகள் வந்து சேர்ந்ததென்றும் அதுநாசற் சங்கு அவர்கள் பார்த்து அதிலே நேர்த்தியாயிருக்கிறது கைப்பிருகிய நச்சுக்கொழல் ஒன்று எடுத்துக்கொண்டு போய் அவருடைய தகப்பனுர் நிசாம் அவர்களுக்கு நசரவைத் தாகவும் அதை அவர் பார்த்து வெகு சந்தோஷப்பட்டு இது யார் அனுப்பிவித்தாரென்று கேட்டதாகவும், அது புதுச்சேரி குவர்னதோர் அனுப்பிவித்தாரென்று சொன்னதாகவும், அதின் பேரிலே அவருடைய கச்சேரியிலே பெரிய பெரிய மனுஷ ரெல்லாம் வெகு பேர் நிறைந்திருக்கப்பட்ட கச்சேரியிலே உம் முடைய கீர்த்தியும், தைரியமும், உம்முடைய பராக்கிரமமும் சௌரியமும் உம்முடைய குணுதிசயமும் நிறைந்த கச்சேரி யிலே அவருடைய வாக்கிலே இரண்டு நாழிகை மட்டுக்கும் ஷத்தஉத்தியம் பண்ணினுரென்று அதன்பேரிலே நாசற்சங்கு உம்முடைய தாரிப்பு ரொம்பவும் சொல்லி அவர் யெழுதினு ரது. தம்முடைய கச்சேரிக்கு வந்து அதன்பேரிலே ஒரு குதிரையும் சிருப்பாவும் வெமானம் கொடுத்து கடுதாசி யும் எழுதி கடுதாசி வந்து பார்த்துக்கொள்ளச்சே சகலமும் தெரியவருமேயென்று எழுதி இதல்லாமல் குதிரைச் சுவார் களை சறுவாத்துமனுயினீர் சேகரித்து வைக்கத் தேவையில்லை யென்றும், இன்னும் கால சேவுகராய் வைக்கலாமென்றும்,

தம்முடைய பிள்ளை அசவல்லிகானென்கிறவன் உமக்குத் தமயனர் பிள்ளையானபடியினுலே அவனை தங்களுடைய சமஷத்த மத்திலே போயிருக்கச்சொல்லி எழுதி அனுப்பினே மென்று எழுதினுரென்றும் இது முதலாகிய சேதிகளெல்லாம் எழுதி இருந்தபடிக்குச் சொன்னேம். அதை எல்லாம் பிராஞ்சு எழுத்திலே எழுதிவைத்துக்கொண்டு வரச்சொல்லி சொன்னேம். அந்தபடிக்கு வயணமாய் எழுதியிருக்கிறது பார்த்துக்கொள்ள வேண்டியது.

சாவடி கபுறு சொல்லிவிட்டு பாக்கு கிடங்குக்கு வந்தேன். அதன் பிறகு வீராநாயக்கன் வந்து சொன்ன கபுறு என்னவென்ருல்: வேகுகாரர் சாவடியிலேயிருக்கிற பேர் எத்தனை பேர் அவர்களையெல்லாம் எழுதிக்கொண்டுவரச் சொல்லி துரையவர்கள் சொன்ருரென்று கும்பினீர் சேவகன் மணியன் வந்து சொன்னுனென்று சொன்னுர். அந்தபடிக்கு எழுதிக்கொண்டுபோய் சொல்லி என்ன நடக்கிறது சமாச்சாரம் அதுவந்து சொல்லென்று சொல்லி, அனுப்புவித்தோம். அப்பால் அது நடந்த சேதி வீராநாய்க்கன் வந்து சொன்னது: இருந்த சூத்திராள் பதினைந்து பேர் சூத்திராளை கழுத்துக்கும், கைக்கும் கோடி விளங்காய் சங்கிலிப்போட்டு மண் சுமக்கச் சொல்லிவிட்டதாகவும், ஒரு டாப்பு எழுதிக்கொண்டுவந்து கொடுத்தான். அந்த டாப்பு வயணம் இது பிறகாலே எழுதியிருக்கிறது பார்த்துக்கொள்ளவும்.

இற்றைநாள் ராத்திரி ஏழரை மணிக்குத் துரையவர்களென்னை அழைத்து தேவனும்பட்டணத்துக்கு மேற்கே திருவந்திபுரமென்றிருக்குதாம். அதிலே திருநாள் இருக்கிறதாம். மெய்தானுவென்று கேட்டார். மெய்தான் எப்போதும் வைகாசி மாதத்திலே திருநாள் நடக்கிறது இப்போ திருப்பதியிலேயிருந்து ஒரு சன்னியாசி ஒரு பெரியவர், அவர் இருநூறு முன்னூறு வராகன் கொண்டுவந்து வைத்துக்கொண்டு இப்பொழுது திருநாள் நடப்பிக்கிராரென்று சொன்னேன். ஆனுல் தேரிரமுக்கிறது என்றைக்கு, வெகு ஜனங்கள் வந்து கூடுகிற தென்றைக்கி என்றுகேட்டார். புதனன்று கொடியேரி ஐந்தாம் நாள் நாயறன்று ராத்திரிக்கு கருட சேர்வை அன்றையதினம் ராத்திரிக்கும் தேர் ஓடுகிற அண்டைக்கும், தமிழர் எண்ணாய்

பட்டவர்கள் சகலமான பேரும் வருகிறவாடிக்கை எப்போதும். ஆனால், இந்தவிசை என்னமோ வெகு ஜனங்கள் வருவார்களோ, கொஞ்சமாய் வருவார்களோ தெரியாதென்று சொன்னேன். அதை நன்றாய் விசாரித்துக்கொண்டு சொல்லென்று சொன்னார்.

இற்றைநாள் கோவையிலேயிருந்து வந்தவர்கள் எப்போதும் மாயேயிக்குப் போக்குவரத்தாயிருக்கிற பிறமணர் மூன்று பேரும் சிப்பாய்கள் இரண்டுபேரும் இவர்கள் ஐந்துபேரையும் பத்து பதினொரு மாதத்துக்கு முன்னே இவ்விடத்திலேயிருந்து அனுப்பியிருந்தவர்கள். இற்றைநாள் பதினொருமணிக்கு முசியே மோர்சேன் கடுதாசிக்கொண்டு வந்து கோவைவிட்ட யிருபத்தெட்டானாள் இவ்விடம் வந்து சேர்ந்தார்கள். அவர்கள் சொன்னசேதி: மூன்று மாதத்துக்குமுன்னேதானே முசியே தோர்ந்தெலேன் கப்பல் நாலும் முசியே லமெந்திரி பொதுருமுடைய கப்பல் இரண்டும் அவன்பிடித்த இரண்டு கப்பலில் ஒன்றும், ஆக ஏழு உருபடியும் எக்கிப்போய் அப்படி வருகிறோமென்றுச்சொல்லி பயணம் புறப்பட்டு வந்துவிட்டார்கள். அந்த ஏழுகப்பலும் எங்களுக்குமுன்னே இவ்விடத்துக்கு வந்து சேர்ந்திருக்குதென்றல்லவோ வந்தோம். இன்னும் வரவில்லையாயென்றும், இந்தசேதிமாத்திரம் நாங்கள் அறிவோம் பின்னொரு சேதியும் நாங்களறியோமென்று சொன்னார்கள். பின்னொரு விசேஷச்சேதிகள் ஒன்றுமில்லை பிடித்த இங்கிலீஷ் கப்பலிலேயிருந்த சரக்கு தோல்சரக்கு இன்னும் வில்லாமல் இருக்கிறபடியினாலே அது நிமித்தியம் முசியே-மோர்சேன் கோவையிலேதானேயிருக்கிறோமென்று சொன்னார்கள்.

1748 ஆ ஏப்ரல் மீ 7 உ-க்கு பிரபவ ஞு பங்குனி மீ 29 உ ஆதிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போய் பரங்கிப்பேட்டை அமுல்தாரன் செக்கமீது உம்முடைய பேருக்கு எழுதி அனுப்பின காகிதத்தில் புவனகிரிபட்டணம் நாட்டான் விஸ்வனாத ரெட்டி என்கிறவர் புவனகிரிபட்டணம் சீர்மையெல்லாம் கொள்ளையிட்டதின்பேரிலே அவனைப் பிடிக்கச்சொல்லி நவாபு சன்னது வந்து அதன்பேரிலே அவனைப்

பிடிக்கப்போன விடத்திலே அவன் தஞ்சாவூர் சீர்மைக்கு புறப்பட்டு ஓடிப்போனதின்பேரிலே நபாபு அவர்கள் சாவு ர்ராசாவுக்கு எழுதி அனுப்பினார்கள். அங்கே இருந்து பயணம் புறப்பட்டு காரைக்காலிலே வந்து இருக்கிறானென்றும், அவனைப் பிடித்து ஒப்புவித்துப்போடச்சொல்லி காகிதம் காரைக்காலுக்கு எழுதி அனுப்பச்சொல்லியும் எழுதி அனுப்புவிக்கிறாரென்று சொன்னோம். அதற்கு துரை அவர்களிருந்துக் கொண்டு நம்முடைய கிருமத்திலே அவனை வைத்துக் காத்துக் கொண்டிருக்கிறோம். அவர்கள் மனுஷரை அனுப்புவித்துக் கண்டவிடத்திலே பிடித்துக்கொள்ளச்சொல்லி எழுதியனுப்பியவன் இனிமேல் நம்முடைய கிருமத்திலே இரான். அப்படி இருந்ததுண்டானால் அவனை நம்முடைய கிருமத்துக்கு வெளியே கொண்டுபோய் விட்டுவிடச்சொல்லி துரத்திவிடுகிறோம் அந்தப்படிக்கு நீங்கள் அவனை என்ன சம்மதியோ அவ்விடத்திலே பிடித்துக்கொள்ளுங்களென்று எழுதி அனுப்பிவிடவேணுமென்று சொன்னார். அந்தப்படிக்கு பதில் காகிதமும் எழுதி அனுப்பிவிட்டோம். அப்பால் சாவடி கபுறு சொல்லிவிட்டுப் பாக்கு கிடங்குக்கு வந்தேன். அதன் பிற்பாடு 11½ மணிக்குத் துரையவர்கள் என்னை அழைப்பித்து மூசியே கோற்னேத்து முன்பாக கும்பினீர் வர்த்தகர் இருபதினாயிரம் ரூபாய் செலுத்துகிறதை மூசியே கோற்னேத்து கையிலே செலுத்தத் தேவையில்லை, மூசியே லிநு கையிலே செலுத்தச்சொல்லி சொன்னார். நல்லதென்று சொல்லிவிட்டு வரச்சே மூசியே கோற்னேத்து முன்பாக என்னைப் பார்த்து ரங்கப்பா இனிமேல் கிராமத்து நெல்லாவது கடையிலே பிடிக்கிற நெல்லாவது இதிலேயாகிலும் மாதம் 1-க்கு நாற்பது கரிசை விழுக்காடு எந்தவிதமாகிலும் இரண்டு மூன்று மாதத்துக்குமாத்திரம் எனப்படுத்தி மூசியே கோற்னே கையிலே கொடுத்துவிடு என்று சொல்லி கொற்னேத்தைப் பார்த்து இனிமேல், அடிக்கடி வந்து என்னுடைய தலையை ஒடச்சுப் போடாதே. அவனைக்கேட்டு வாங்கிக்கொள்ளென்று சொல்லி தீர்த்துப்போட்டார். அந்த வேளை அம்மாத்திரம் அகப்படும் அகப்படாதென்று சொன்னால் கோபித்துக்கொள்ளப்போகிறார். எந்தவிதமாகிலும் சாமளித்து நடத்திப் போடுவோமென்று சம்மதித்துக்கொண்டு வந்துவிட்டேன். மூசியே கோற்னேத்தும்

வீட்டுக்குப் போய்விட்டார். பனிரெண்டு மணி அடித்த படியினாலே நானும் வீட்டுக்குப் போனேன்.

இற்றைநாள் சாயங்காலம் நடந்தசேதி என்னவென்றால்: நேற்றைய தினம் இமாம்சாயபு கடுதாசியை பிரான்சு படுத்தச் சொல்லி முசியே திலார்சு கையிலே கொடுத்திருந்த கடுதாசி பிரான்சு படுத்தி வந்ததை கையிலே பிடித்துக்கொண்டு துரை அவர்கள் கூடலூர் வாசப்படி கட்டுகிற விடத்திலே போய் இருந்தபடியினாலே அவ்விடத்துக்கு நான் போய் இந்தக் கடுதாசியைக் கொடுத்த விடத்திலே வாங்கிப் பார்த்து துலுக்கருடைய சாடையைப் பார்த்தாயா? அவர்களுக்கு இங்கிலீஷ்காரரால் வெகு பணங்கள் சாயும், அதையெல்லாம் வாங்கிக்கொண்டு மறுபடியும் அவர்களை கையாலாகாதவர்களென்று தீர்த்துப் போட்டார்கள் பார்த்தாயாவென்று சொன்னார். அதற்கு நானிருந்துகொண்டு உம்முடைய யோகமெனப்பட்டது. உமக்குகீர்த்தி வரும் பொருட்டாய் அவர்களுக்கு வெகு பண விஷயமும் அபகீர்த்தியும் அவர்களைச் சேர்ந்தது. கீர்த்தியும் செயமும் உம்மைச் சேர்ந்ததுயென்று சொன்னேம். அதன்பேரிலே நகைத்துக்கொண்டிருந்து திருவேந்திபுரத்திலே கெருடசேர்வை என்று சொன்னியே அது என்றைக்கு என்று கேட்டார். இன்றைய தினந்தானென்று சொன்னேன். அதன்பேரிலே அவ்விடத்திலிருந்தபடியே அரியாங்குப்பத்திலிருக்கிற கப்பித்தான் தொத்தேலுக்கு கடுதாசி எழுதி அனுப்பினார். அந்தமட்டிலே புறப்பட்டு பாக்கு கிடங்குக்கு வந்துவிட்டேன்; இன்றைய தினம் கெருடசேருவையான படியினாலே வெகு ஜனங்கள் அவ்விடத்துக்குப் போய்விடுவார்கள் ஆனபடியினாலே அவ்விடத்திலே இறங்கியிருக்கிற குதிரைகளைப் பிடித்துக்கொண்டு வரலாமென்று சொன்னார். ஆனால் இது நல்ல சமயந்தானென்று சொன்னேன். அதன்பேரிலே எழுதியனுப்பிவிட்டார் நானும் பாக்குக்கிடங்குக்கு வந்துவிட்டேன்.

இற்றைநாள் ராத்திரி ஒன்பது மணிக்குள்ளே எட்டரை மணிக்கு சாவடி மணியம் முருகப்பிள்ளை வந்து நான் இருக்கிற பாக்குகிடங்கிலே மணக்குளத்துபிள்ளையார்கோயில்

அண்டையிலே இருக்கிற கத்வண்டையிலே வந்து என்னை அழைத்து இரண்டு மூன்று நாளாய் ஊரிலே நடக்கிற சேதி நீங்கள் கேட்டுயிருக்கிறீர்களோ என்னமோ தெரியாது என்று கேட்டார். அதற்கு நான் ஒன்றும் அறியேன் நடந்த சேதி என்னவென்று கேட்டேன். அதன்பேரிலே அவன் சொன்னது அப்பு தம்பி மாரியப்பனும் லபுனங்தேன் வீட்டிலிருக்கிற பெயன்றனும் தரகு குழப்பையனும் சேருவைக்கார பன்னிமுத்தனும் சாவடி மணியம் அழகப்பிள்ளையும் வறலாமும் இவர்களெல்லாரும் கூடி சிறிது ராசகாரியங்கள் நடத்துகிருர்கள். அந்த பூருவோத்திர வயணமாம்படியே சொல்லுகிறேன் கேளுங்களென்று சொன்னான்.

*1748* ஆ ஏப்ரல் மீ *8* உ௩்து பிரபவ ஷு பங்குனி மீ *30* உ சோமவாரம்.

இற்றைநாள் நடந்த சேதி என்னவென்ருல்: நேத்திய தினம் ராத்திரி முத்திரிசட்பிள்ளை சாவடியில் இறங்கியிருக்கிற முசியே தோத்தேல் முதலாகிய வெள்ளைக்காரர் குதிரை சுவார்களும் சிப்பாய்கள் குதிரை சுவார்களுமாக ஏகத்துக்கு நூற்றி ஐம்பது குதிரைக்காரர் மாத்திரம் புறப்பட்டு முத்தாலு நாய்க்கன் பிறகே நாசற்சங்கு தண்டிலேயிருந்து கூடவந்த ரசபுத்திரர் மருட்டியார் இவர்கள் குதிரைக்காரர் பாளையம் பாதிரிகுப்பத்துச் சாவடியிலே இறங்கியிருந்தவர்கள் நேற்று ராத்திரி திருவந்திபுரத்திலே கெருடசேர்வையானபடியினுலே வெகு ஜனங்கள் கெருட சேர்வைக்குப் போனபடியினுலேயும், பாதிரிகுப்பத்து சாவடியிலே இறங்கியிருந்த நாசற்சங்கு தண்டுக்காரர் முத்தாலுநாய்க்கன் பிறகே வந்த குதிரைக்காரர் சிறிதுபேர் குதிரைகளெல்லாம் கட்டிவைத்துவிட்டு தமாஷாய் கெருடசேர்வை பார்க்கப் போனபடியினுலேயும் அந்த சமயத்திலே நம்முடைய குதிரை சுவார்கள் முசியே தோத்தேல் முதலானவர்கள் அந்தபாளையத்திலேபோய் விழுந்து நாற்பத்து மூன்று குதிரைகளையும் பிடித்துக்கொண்டு ஐம்பது, அறுபது குதிரைகளை குத்தியும் சுட்டும் தள்ளிவிட்டு நாற்பது, ஐம்பது மனுஷரையும் சுட்டும், குத்தியும் சேதப்படுத்திவிட்டு அப்பால் அந்த பாளையத்துக்குள்ளே புகுந்து கூடாரங்களிலேயிருந்த தட்டுமுட்டுகள், கத்தி கட்டாரி சிறுவ சொத்தும் முகவணைந்து

சுருட்டிக்கொண்டு சிறிது மாடுகளும் ஒரு ஒட்டகமும் பிடித்துக் கொண்டு நிசானையும் பிடுங்கிக்கொண்டு பிறகாலே வருகிறார் களென்று சொல்லி இன்றையதினம் காலமே எட்டு மணிக்கு ஒரு குதிரைக்காரன் வந்து கபுறு சொன்னான். அந்தப்படிக்குத் தானே மத்தியானம் பனிரெண்டு மணியடித்து மூன்று மணிக்கு அந்தக் குதிரை நாற்பத்துமூன்றும், ஒட்டகம் ஒன்றும் பொதிமாடுகள் சிறிதும், நிசானும்பரித்துக் கொண்டு வந்து துரையவர்கள் முன்னே கொண்டுவந்து நிறுத்தி கபுறு சொன்னார்கள். அதுகளெல்லாம் துரை அவர் கள் பார்த்து மெத்தவும் சந்தோஷப்பட்டு அதன்பேரிலே சிப்பாய்களுக்கு பதினெட்டு குதிரைகளை கொடுத்து மற்ற 25 குதிரைகளையும் லாயத்திலே கொண்டுபோய் கட்டச்சொல்லி உத்தரவு கொடுத்தார்கள். அந்தபடியே அவரவர் சாகைக்கு அவரவர் போய்விட்டார்கள். இந்த சேதிவந்த உடனே இந்தக் குதிரைகளைப் பார்த்தவுடனே துரையவர்கள் என்னை அழைப் பித்து நீ மீன்சாரபொட்டியே அதிலே மீன் விஸ்தாரமாய் அகப்படாமல் போச்சுதே நான் குதிரை சவார்போட்டு நாற் பத்துமூணு குதிரைபிடித்தேன் பார்த்தியா யென்று சொன்னார். அதற்கு நானிருந்துக்கொண்டு இந்த குதிரை அகப்பட்டது ஒரு ஆச்சரியமா சித்திரை வையாசிமாசத்திலே தேவனாம்பட்ட ணத்து கோட்டையும் நம்முடைய வசமாயிருக்கச்சே இதென்ன ஆச்சரியமா யென்று சொன்னேன். அந்தமட்டிலே நகைத்துக் கொண்டிருந்தார். இதல்லாமல் சிப்பாய்கள் யாராகிலும் இப் படி பிடித்த குதிரைகளை வெளியே கொண்டுபோகாதப்படிக்கு வெளியிலே மனுஷரை வைத்து பத்திரப்படுத்தச்சொல்லி உத் தாரம் கொடுத்தார்கள். அந்தப்படிக்கு மலையப்பன் சேவுகர் இருபதுபேரையும் மலையப்பனையும்கூட கூட்டி வில்லிவநல்லூர் அமுல்தாரனுக்குக் கடுதாசி எழுதி வெளியிலே சிப்பாய்கள் மற்றப்பேர் ஒருத்தரும் குதிரைகளை கொண்டுபோவார்களே பிடித்துக்கொண்டு வரச்சொல்லி துரை அவர்கள் உத்தாரம் பண்ணினபடிக்கு சேவகரையும், மலையப்பனையும் கூட்டி அனுப்பிவிட்டோம். நான் பாக்குகிடங்குக்கு வந்தவுடனே அப்துலாய்மான் சமேதாரன் வந்து சொன்னதென்ன வென் றால், எல்லாரும் தூங்கி கிடந்தவர்கள்பேரிலே தான் பண் ணினசாடையும் சண்டையும் தன்னுடைய சவுரியமும் விஸ்த

ரித்து வெகு சந்தோஷமாய்ச் சொன்னான். இவனுடைய சவுரியமெல்லாம் தூங்கிக் கிடந்தவர்கள்பேரிலே பண்ணின சவுரியமென்று மனதிலே வைத்துக்கொண்டு நானும் அதற்குத் தக்கதாய் உபசாரமாய்ச் சொன்னேன். அந்தமட்டிலே அனுப்புவித்துக்கொண்டு அவனுடைய விடுதிக்குப் போய்விட்டான். நானும் சாப்பாட்டுக்கு வீட்டுக்குப் போனேன்.

இற்றைநாள் பகலைக்கு மேலாய் மூன்று மணிக்கு கும்பினீர் வர்த்தகர் சேகரம்பண்ணியிருந்தது அவர்கள் செலுத்தவேண்டிய ரூபாய் இருபதினாயிரத்துக்கு இந்நேரத்திற்கு கேதிக்கையாய் கொண்டுவந்த பதினேழாயிரம் ரூபாயைக்கொண்டு செவ்வையாய்க் கோட்டையிலே சின்ன துரை அவர்கள் கையிலே செலுத்திவிட்டு மற்ற மூவாயிரம் ரூபாயும் நாளைய தினம் கொண்டுவந்து செலுத்தி ரசீது வாங்கிக்கொண்டு போரோம். ஒருவேளை துரையவர் எத்தனை ரூபாய் வந்ததென்று கேட்டால் இருபதுனாயிரம் சரியாய் வந்ததென்று சொல்லவேணுமென்று சொன்னேன். நல்லது அப்படித்தானே சொல்லுகிறோமென்று சொன்னார். அதன்பேரிலே அருணாசல செட்டி வந்து சின்ன துரையுடனே சொல்லிக்கொண்டதென்னவென்றால்: முன்னாலே தாங்கள் வீட்டிலே உடமைபண்ணுகிறதற்கு ஐந்நூறு வராகனிடை பொன் உருக்கின கட்டிலே ஒரு தட்டான் முப்பது வராகனிடை பொன்னைத் திருடிக்கொண்டு பதிலுக்கு வெள்ளியைப்போட்டு உருக்கிக் கொடுத்தான். அப்போது எனக்குத் தெரியாமலிருந்தது; அதை இப்போது ஆலம்பாவைக்கு அனுப்பிவிட்டு டங்காசாலையிலே வெட்டுப் போடப்போன விடத்திலே அந்தப் பொன் மாற்றுக் கட்டையாயிருந்தது. அதன்பேரிலே அந்த தட்டானைப் பிடித்துக் கேட்டவிடத்திலே காலிலே விழுந்து தப்பிதம் வந்துபோச்சுதென்று சொல்லி மனுபண்ணிக்கொண்டு இருபது வராகன் கொடுத்து விட்டான். மற்ற பத்து விராகனும் கொடுத்து விடுகிறோமென்று சொன்னான். இது பெரிய பேச்சாச்சுதே ஒரு வேளையைப்போலே இராதே, வெளிக்கு வந்தால் என்னமாயிருப்போமோ தெரியாதே ஒருவேளை கும்பினீர் சிறையாக்கிப் போடப்போனார்களென்று அவன் பயப்படுகிறான். அது நீங்கள் அறிந்திருக்கவேணுமென்று சொன்னான். அதற்கு சின்னதுரையிருந்துக்கொண்டு எங்களுடனே

சொல்லாதே போனால் போச்சுது. சொன்னமட்டுக்கும் நாங்கள் விசாரிக்கவேணுமென்று சொன்னார், உங்களை விசாரிக்கச் சொல்லி நான் வந்து சொல்லிக்கொள்ளவில்லையே நீங்கள் அறிந்திருக்கிறமாத்திரந்தானென்று சொன்னார். ஆனால் நல்லது தானென்று சொன்னார்.

இதல்லாமல் குதிரைகளை பிடித்துக்கொண்டு வந்தார்களே இதுகளெல்லாம் அவருக்கு சம்மதிபடாமல் சின்ன துரை இதென்ன பூருவோத்திரமென்று கேட்டார். அதன்பேரிலே இவர்கள் போனதும் குதிரைகளைப் பிடித்துக்கொண்டு வந்ததும் சொன்னோம். அதுகளொன்றும் அவருக்குச் சம்மதிபடாத உத்திரவாய் சொன்னார். அதற்கு நானிருந்துக்கொண்டு இப்பவிருக்கிற வேளைக்கு இப்படிச் செய்யாவிட்டால் அவர்களுக்கு அதிருயிருதென்று சொல்லி சம்றப்படச் சொல்லிபோட்டு வந்துவிட்டேன் அப்பால் பாக்கு கிடங்குக்கு வந்தவிடத்திலே இருக்கச்சே துரையவர்கள் அழைத்தனுப்பிவித்தார். போன விடத்திலே லோகா பிரம்மாய் இனிமேல் தேவனும் பட்டணத்திற்கு பொல்லாதகாலம் ஏற்பட்டதென்று நமக்கு நல்லகாலமென்றும் பின்னையும் அவர்களுடைய புத்தி கொறச்சலாய் நடத்துகிற கிரக காரியங்களும் அனேக உபசாரமாய் பேசியிருக்கச்சே சுவாமி தயவினால் இந்த கொற்சாவிர். கப்பல் மாத்திரம் வந்து சேர்ந்ததென்றால் நான் இந்த தேவனும்பட்டணம் வாங்காமல் விடுகிறதில்லை. ஆனால் கப்பல் வந்திருந்துண்டானால் இற்றைநாள் வைக்கத்தக்கதில்லை. அல்லது இரண்டு கப்பல் இருந்தாலும் நடக்கிற காரியம் வேறே ஆகட்டும் சுவாமி இருக்கிறாரென்று சொன்னார். அதற்கு நான் சொன்னது இன்று முதற்கொண்டு உமக்கு ஜெயகாலம் யென்கிறதற்கு நேற்று ராத்திரி நடத்திக்கொண்டுவந்த காரியமே திருஷ்டாந்திரமென்று சொல்லி வேடிக்கையாய் பேசிக்கொண்டிருந்து அப்பால் நான் பாக்குக்கிடங்குக்கு வந்தேன். அவர் கடுதாசி ஆடப்போனார்.

*1748* ஆ௵ ஏப்ரல் மீ *15* உ ௲ விபவ ௵ சித்திரை மீ *7* உ சோமவாரம்.

இற்றைநாள் காலத்தாலே கோட்டைக்குப் போய் சொக்கப்பமுதலி கை ரசீது நூறுபாரம் ஈயத்துக்கும் பாரம் 1-க்கு

ரூபாய் ஐம்பதாக ஐயாயிரம் ரூபாய்க்கு ரசீதெழுதிக் கொடுப்பித்து இப்போதைக்கு ஈயத்தை யெடுத்துவந்தால் இப்பால் இமாம்சாயபு குமாரன் அசனல்லிகான் மொகர்பட்டா ரசீது அழைப்பித்துக்கொடுத்து இந்த ரசீதை வாங்கிக்கொள்ளச் சொல்லி முசியே கோர்னேத்துக்கு சொல்லி ஈயத்தை யெடுத்துப் போகிறதற்கு உத்தாரம் வாங்கிக்கொடுப்போமென்று இமாம் சாயபு குமாஸ்தா சொக்கப்பமுதலியை அழைப்பித்துக் கொண்டு கோட்டைக்கு போனவிடத்தில் முசியே கோர்னேத் கோவிலிலேயிருந்து புறப்படச்சே பெரிய துரையவர்களழைக்கிறூர்களென்று அழைத்துக்கொண்டு போனதினாலே மாரியப்ப முதலியை அழைத்து சொக்கப்பமுதலி ரசீதை முசியே கோர்னேத்துக்கு வாங்கிக்கொடுத்து அந்த நூறுபாரம் ஈயமும் எடுத்துப் போகிறதற்கு உத்தாரம் வாங்கிக்கொடுமென்று சொல்லிப்போட்டு நான் குவர்னதோர் வீட்டுக்கு வந்தேன். அவ்விடத்தில்பண்டிகையானபடியினாலே பூசைகேட்டு சமஸ்தமான சினயோர்களுடனே கூட வீட்டுக்கு வந்து கப்பே குடித்தானவுடனே ஒருத்தருடனேயும் விசேஷத்து பேசாமல் உள்ளே போய் சீர்மையிலிருந்து கரைவழியாய் சூரத்து காகிதுகள் கொண்டுவந்த சீமைக்காகிதங்களுடனே கூட வந்த கசேத்தும் படித்துத்துக்கொண்டிருந்தார். இதல்லாமல் கையெழுத்தாயெழுதினது அவ்விடத்து காகிதம் பதினைந்துக்காகிதம் சேர்த்த சின்ன லிவுறு கரைய அஞ்சாறுயிருந்தது. அதுவும் பார்த்துக் கொண்டிருந்தார் அது பார்த்தால் கும்பினியாரெழுதின காகிதம்போலே யிருந்தது அதுவும் படித்துக்கொண்டேயிருந்தார். அப்போதுநான்போய் சலாம்பண்ணினேன் என்னைப்பார்த்து தேவனுபட்டணம் செதியென்னவென்று கேட்டார் இனிமேல் விசிதமாய் வருமென்றும் குண்டுத்தாழை அண்டையிலே போட்டிருந்த கூடாரம் இதுகளை வாங்கி உள்ளே கொண்டு போனூர்களென்கிறதாகவும் கப்பலின்பேரிலே சொல்தாதுகளையும் லிசுகார்களையும், தினி தட்டுமுட்டும் ஏற்றுகிறூர்களென்றும் சேதி வந்தது என்றும் கருடசேர்வையினன்று கலாபம் பட்டதோடு திருவந்திபுரம் திருநாளுக்கு தேவனும் பட்டணம் கூடஊர் ஒருத்தர் போகவில்லை. வெளி கிராமத்தாரும் ஒருத்தரும் வரவில்லை. அவர்களும் ஆறுப்போலே விக்கிறகமெழுந்தருளப்பண்ணி திருநாள் ஆறுப்போலே நடத்திப்போட்டார்களென்றும் சொன்னேன். மற்றபடி சீர்மையிலேயிருந்து வந்த

கசேத்துச் சேதி. ஆனால், ஒலாந்தக்காரர் எப்போதும் இங்கிலீஷ்காரருக்கு மற்றது பண்ணிக்கொண்டு வருகிறபடியினாலே ஒலாந்தராஜ்யத்தில் மூன்று நான்கு பட்டணம் பிராஞ்சு ராசா பிடித்தார்களென்றும், இதல்லாமல் ஒலாந்தா இஸ்தாதுக்கு எழுதி அனுப்பினாரும். உங்களுடைய மேன்பாட்டுக்கு அடுத்த காரியத்தை நன்றாக யோசனைபண்ணி நடந்துக்கொண்டால் உங்கள் மகிமை நிற்கும் அல்லவென்றால், நடக்கப்போகிற காரியம் உங்களுக்குத் தெரியுமென்று எழுதினதாகவும், பின்னையும் ரெணுதெவுங்கிரியுடைய ராஜ்யமெல்லாம் கட்டிக்கொண்டு வருகிறாரென்றும், சீர்மையிலே பிரான்சு ராசாவைப்போலே உச்சிரயமாய் அத்தியந்தம் சந்தோஷத்தை அடைந்து விசுரும்பித்து இருக்கிறாரென்றும், முசியே லபூர்தோனே சென்னப்பட்டணம் பிடித்த சேதிக்கு வற்னேமே என்கிற கப்பலை பயணம்பண்ணி முசியே லக்தினேயை சீர்மைக்கு அனுப்பினானே அவன் சீர்மைக்குப் போய்ச் சேர்ந்து சென்னப்பட்டணம் பிடித்த சேதிக்குச் சொல்லி முசியே லபூர்தோனேயிக்குத் தக்க காகிதங்கள் கொடுத்தவிடத்தில் இந்த காகிதங்களெல்லாம் கொந்து-தெ-மொர்பா என்கிற வாருசாவினுடைய ஐந்தாலோசனைகாரனாயிருக்கிறவர்கள் சவங்கி சத்தன மாளினுருவாயிருக்கப்பட்டவர் அவர் முசியே லபூர்தோனே அனுப்பின காகிதங்களையெல்லாம் பார்த்து ராசாவுக்கு அறிக்கைபண்ணின மாத்திரத்திலே ராசா மிகுதியும் சந்தோஷப்பட்டாராம். அப்போது கோந்து-தெ-மொர்பாவையும், ஷான் செவியேரையும் புசேம்மொா என்கிற கொந்தற்லொனு தெ சொன்னுலுதே பிருன்சு புசெனுவியே என்கிறவர் இந்தக் கும்பினீர் காரியத்திற்கு கர்த்தனாயிருந்து விசாரிக்கப்பட்டவர். இதல்லாமல் மெத்தறத்தெகேத்து என்கிற உத்தியோகத்தை உடையவர்களை சென்னப்பட்டணத்துக் காரியங்களை விசாரித்து தீர்க்கச் சொல்லியும், இந்த காரியங்களுடனே கடானத்துக்கு கப்பல்கள் அனுப்பி வைக்கிறதற்கும் திரவியங்கள் அனுப்பி வைக்கிறதற்கும், எந்தெந்த காரியம் எப்படி யெப்படி நடக்கச் சொல்லியும், இவர்கள் நான்கு பேருக்கும் நிறு உத்திரவாயி கொடுத்து இந்த நான்கு பேரையும் நியமித்தாரென்று புசெல் பொக்குதுனேயினுடைய காகிதத்தின் பேரிலேயும், புசெல் கத்தினே போய் அங்கே சொன்னதினாலேயும் கும்பினீருக்கு

மாத்திரம் முப்பத்தேழு லக்ஷம் வராகன் தினுசுகள் ரத்தினங்களுள்பட கப்பலின்பேரிலே ஏத்தியனுப்பி வைத்தோமென்று எழுதினதுமல்லாமல் சென்னப்பட்டணத்திலே நவர்திகளும் அநேகமா யிருக்கிறதாய் எழுதினதின்படியினாலே முசியே லபூர்தோனேயினுடைய கீர்த்தி சீர்மையெல்லாம் ஓங்கினதாகவும் லபூர்தொனே எப்போது வருவான் எப்போது வருவானென்றும், அவனை எப்போது பார்போமென்றும் ராசா வழி பார்த்துக்கொண்டிருக்கிறாரென்றும், சென்னப்பட்டணம் பிடித்ததைத்தொட்டு ராசாவும், மினிஸ்தர்களும்; கும்பினியாரும் வெகு ஆதாயம் வந்ததாயி சகதயிலே வெகு கீர்த்தி உண்டாச்சுதென்றும், இதற்குள்ளாக தேவனாம்பட்டணம் ஐந்தாம் தலைச்சேரி விசாகப்பட்டணம் இதுகளெல்லாம் பிரான்சு கொடி பறக்கிறதாய் எண்ணி யிருக்கிறதாயும், முசியே லபூர்தோனேயின் பேரிலே முசியே துய்ப்ளேக்ஸ் எழுதியிருக்கிற பிராது இன்னும் சீர்மைக்குப் போய் சேரவில்லையென்று சொன்னார்.

1748 ஆ எப்ரல் மீ 29 உக்கு விபவ ஞு சித்திரை மீ 21உ சோமவாரம்.

இற்றைநாள் மருட்டியர் புன்னிவடத்தில் துக்கு சேனகத்துக்கு வந்து இருந்தவர்களுக்குள்ளே அனந்தாசி கொறப்படேயும் பின்னையும் இரண்டொருத்தர் கூட ஒன்பது குதிரைக்காரர் பேர்றேமென்று துரையண்டைக்கு வந்து அனுப்பிவைத்துக்கொண்டு ஊருக்குப் போகிறதற்கு ஒத்துவர சலுக்கு சீட்டும் வாங்கிக்கொண்டு போனார்கள். இவர்களுடனே கூடவந்த ஜெனகாக்கன் சமேத்து குதிரை பதினேழு தவிர பத்தொன்பது குதிரைக்காரர் மாத்திரம் புறப்பட சாடையென்று விசாரித்தால் தங்களை துப்பாக்கி யெடுக்க சொல்லுகிறார்களென்றாப்போலேயும், அப்துலாய்மான் கீழே யிருந்து அவனுக்கு கையண்டைக்குப் போமாயென்றாப்போலே மனதிலே ஒரு வேசடை, அதை வெளிக்குக் காண்பித்தால் என்றாப்போலேயும் இதல்லாமல் ஆரணியாரண்டையிலிருந்து வெளியிலே புறப்பட்ட சாமாராயன் கொஞ்ச கஞ்சம் குதிரை வைக்கிறேமென்று வரச்சொன்னார்களென்றாப் போலேயும் புறப்பட்டுப் போனதாய்ச் சொல்லிக்கொண்டார்கள் மற்றபடி வேறே அதிசயமான சமாசாரம் யெழுதத் தக்கதில்லை.

*1748 ஆ மே மீ 7 உ.க்கு விபவ ஸு சித்திரை மீ 29 உ மங்களவாரம்.*

இற்றைநாள் காலமே துரையவர்களண்டைக்குப் போய் சாவடி கபுறு சொன்னேன் பின்னை யொன்றும் விந்தையான சேதிகள் எழுதவேண்டியது ஒன்றுமில்லை.

இற்றைநாள் திருநெல்வேலியிலிருந்து அம்மன்னபண்டிதன் நமக்கு எழுதியனுப்பின காகித விவரமென்னவென்றால்:|செயித்திர பெகுனதசமி சோமவாரம் நாள் மத்தியானத்திற்கு சித்திரை மீ 14 உ மிர்குலாமுசேன் செத்துப்போனான் யென்கிற கபுறு மனப்பாரமையிலே இருக்கிற மபூதல்லிகான் கேட்டு உடாவுடியாய் திருநல்வேலிக்கு சமீபத்திலே வந்து இறங்கினானென்கிறதாய் யெழுதி வந்தது.

அந்த காகிதத்தைப் பார்த்துக்கொண்ட உடனே மகா-ா-ா-ஸ்ரீ துரையவர்களுடனே போய் கபுறு சொன்னதற்கு ரங்கப்பிள்ளை இந்த சமியாமலே பத்து பணம் சம்பாதித்தால் ரங்காட்டு புண்டு நாலுவருஷமாய் தொழில் துரையில்லாமல் சண்டை சண்டையென்று ஒருகாசு பிரயோசனமில்லாமல் போனதுமல்லாமல் சிலவு விஸ்தாரமாய்ப் பணம் சிலவழிந்தது சென்னப்பட்டணம் நான் பிரயாசைப்பட்டு வாங்கினதும் வர வர பிரயோசனம் கொண்டுபோய் எனக்கு ஒருகாசளவிலே பிரயோசனமில்லாமல் போனதுதான் உமக்கு தெரியுமே இப்பவும் இது காரியத்திற்கு நீ எப்படி நடத்தவேண்டுமோ அப்படி நடத்தி பத்துபணம் விசேஷித்து யெனக்கு பிரயோசனம் பண்ணிவைக்கவேண்டுமோ அப்படி பண்ணிவைத்தால் இந்த ரொக்கோஞ்சிமெந்து நான் ஒருக்காலும் மறக்கத்தக்கதில்லை யென்று சொன்னார், அய்யா நான் உம்முடைய அடுமை உம்முடைய காரியத்திலே ஆரேழுவருஷமாய் நான் பிரயாசைப்பட்டு பிரையோசனம் வருத்திவைத்து உங்கள் சித்தத்திற்கு தெரிந்திருக்குமே நீங்கள் ஏன் யென்பேரிலே இருக்கிற பரிபூரண தயவுக்கு நான் சரீரத்தையே உங்களாதீனம் பண்ணிப் போட்டு யிருக்கச்சே, மற்றபடி உங்களுக்கு யெந்த சமையத்திலே பத்து பணம் வருத்திவைத்து கொடுக்கவேணுமோ அந்

தந்த சமையங்கள் தேடி வருத்திவைத்த சம்மதிகளெல்லாம் உங்கள் மனதிற்கு தெரிந்திருக்கிறபடியினலே நான் விசாரித்து சொல்லத்தேவையில்லை. இப்பவும் இந்த கசியாமிலே பத்து பணம் விசேஷித்து சம்பாதிக்கிறதற்கு நல்ல அடி இருக்கிறது நான் நடத்தச் சொன்னபடிக்கு நடத்தும் உமக்கு வருஷாந்திரம் அகப்பட பண்ணி வைக்கிறேனென்று யெப்படிச் சொல்ல வேணுமோ அப்படி சொன்னதற்கு நீ எப்படி நடத்தச்சொன்னலப்படி நாளது வரைக்கும் நடக்தேனு? வித்தியாசமாய் நடந்தேனு? இப்பவும் அப்படிதான் இனிமேலும் அப்படித்தானென்று சொன்னுர். நல்லது இது காரியத்திலே தேவர் மனது வந்து பாருமென்று உபசாரமாய்ச்சொன்னேன். அந்தப்படிக்கு நீ நாளது வரைக்கும் நடத்தினுய். இன்றும் நடத்துவாய் என்கிறதுமல்லாமல் நீ ஒரு பிரயோசனம் பெருமல் என் பேரை யோசனமே பெரியதாய் எண்ணிப்பார்க்கிறவனென்று என் மனதிற்கு நன்ருய் தெரியுமென்று சொன்னுர். அதற்கு நான் உபசாரமாய் சொல்லிவிட்டுப் போனேன்.

1748 ஆ மே மீ 10 உக்கு விபவ ஸு வைகாசி மீ 1உ சுக்கிரவாரம்[

]அவன் வருகிறதற்குள்ளே வலங்கையார் கூட்டங்கூட்டிக் கொண்டுவந்து துரை முன்னே நின்ருர்கள். இவர்களாரென்று கேழ்கச்சே முசியே கோற்னேதும் கூடவந்து நின்ருர். அப்போது துரையுடனே வலங்கையாரென்று சொன்னேன். ஏன் வந்தார்களென்று கேட்டார். கும்பினீர் வர்த்தகரிலே கூடலூர் குமரப்பசெட்டி பேரன் பூத்து உலகப்பசெட்டி என்கிறவன் நேற்று புத்துப்பேட்டை திருநாளுக்குப் போனவன் வெள்ளைக் குதிரை ஏறிப்போனுன். மறுபடி வரச்சே சிறிது தூரம் தான் ஏறிவந்து அப்பால் தன் மகனை ஏற்றிவந்தானென்றும், இப்படி வெள்ளைக் குதிரை, வெள்ளைக் குடை, வெள்ளைப் பாவாடை பின்னையும், வெள்ளை பிருதுகளுடனே சேர்ந்தது, வலங்கையுடயதேயல்லாமல் இடங்கையாருக்கு அக்கரையில்லை என்று ராஜ்யமெல்லாம் வழக்கம். அப்படியிருக்க இவன் செய்யாத காரியம் செய்தானென்றும், இதற்கு நீங்கள் நன்ருய் விசாரிக்க வேணுமென்றும் பின்னே தேவனும்பட்டணம் சென்னப்பட்டணத்திலே நடந்த சேதிகளும் சொன்னேன். அதன்

பேரிலே புத்து உலகப்பசெட்டியும் அழைக்கச் சொன்னார். அப்பால் மற்றதெல்லாம் நாளை விசாரிப்போம் கொண்டுபோய் காவலிலே வைக்கச்சொன்னார். அதன்பேரிலே காவலிலே புத்து உலகப்பசெட்டியை காவலில் வைத்தார்கள் அப்பால் வலங்கையார் அனுப்பிவித்துக்கொண்டு போனார்கள்.

1748 ஆ மே மீ 22 உக்கு விபவ ஸ்ரீ வைகாசி மீ 13 உ புதவாரம்

இற்றைநாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போனவிடத்திலே துரையவர்களுக்கு சாவடி கபுறு டாப்பு சொல்லி அப்பால் பறங்கிப்பேட்டைக்கு ஷேக் அமீதுசாயபு அனுப்பினகாகிதத்தில் எழுதியிருந்தது. உங்கள் பிராஞ்சுக் காரர் சோருவரியாய் ஒலாந்தக்காரருச்சியம் சிறிது பிடித்துக் கொண்டார்களென்றும் முப்பது கப்பல் பத்தாவிய அந்தப் புறத்துக்கு வந்ததாய் சேதி கேழ்க்கப்பட்டதென்றும், அதுக்கு அல்மாஞ் கப்பல்களும் பிரிட்டிஷ் கப்பல்களும் பிருஞ்சு கப்பல் களுக்கு மத்தாய் வருகிறதென்றும் இவ்விடத்தில் மற்ற சாதிக ளுடனேயும் கப்பல்கள்வந்து சேர்ந்து சத்துருகாளெல்லாம் அம ஜோய் பட்டுப்போகவேணுமென்று எப்போதும் நாம் நினைத்து சுவாமியைத்தோத்திரம் பண்ணுகிறபடிக்கு அனுகூலமாய் வந் தபடியினாலே இதைவிடச்சந்தோஷம் வேறென்ன விருக்கிற தென்று இப்படியனேகம் மென்மேலாகிய சந்தோஷம் மெப் போதும் வரத்தக்கதாக சுவாமி அனுக்கிரகம் பண்ணுவாரென் றும் இப்படியாக எழுதியனுப்பின காகிதச்சேதி சொன்னவுட னே துரையிருந்துக்கொண்டு ஒலாந்தக்காரர் தங்கள் பெல னைத்தை தாங்கள் தானே காண்பிக்கிறார்கள் சீமையிலேநடந்த காரியத்தைத்தொட்டு இத்தனை பயப்பட்டு வெளிக்கு மெத்த பஞ்சயாய் காண்பித்தார்களென்று சொன்னாரதற்கு நான் சொன்னது சென்னபட்டணம் பிடித்த பயமல்லவோ ராச்சியமெல்லாம் ஏகமாய் தட்டுகெட்டு கடந்து அலை யுது அத்தோடே இந்த ராச்சியத்திற்கு கர்த்தராயிருக்கப் பட்ட நபர் அன்வர்த்திகான் மாபுசுகானை துரத்தி ஆற்க்காடு சேர்த்தது யெப்படி யென்றால் பொன்பூவுக்கு வாசனை உண்டா னால் யெப்படியோ அப்படி ஆச்சுதென்று சொல்லி நாகப்பட் டணமெல்லாம் வெளிப்பாளையம் இடித்துச் சுத்த சூனியமாக்கி நாகப்பட்டணம் கோட்டையை நெருக்கமாயிருந்த வீடுகளெல்

லாம் இடித்துச் சமானமாக்கி வெளிப் பாளையத்திலிருந்த கொத்தளங்களிலே யிருந்த பீரங்கிகளெல்லாம் கொண்டு போய் கோட்டையிலே சேர்த்துக்கொண்டு பட்டணத்திலுண்டான வர்த்தகர்கள், பின்னையும், திருச்சினாப்பள்ளி தஞ்சாவூர் சமஸ்தானங்களிலேயிருந்த பெரிய பெரிய மனுஷர்கள் வெகு திரவியங்கள் சம்பாதித்துக்கொண்டு அங்கே வந்து சேர்ந்திருந்தவர்களெல்லோருந் தட்டுக்கெட்டு யாழ்பாணமுண்டோ உடையார்பாளையமுண்டோ அரியலூருண்டோவென்றும், போனார்களென்று புதுச்சேரி, காரைக்கால் மனுஷர் என்று காக்கைகூட போனாலும் கொண்டுபோய் அப்பாலே விடுகிறார்களென்று புதுவெளி கோபுரத்தின்பேரிலே மனுஷரை வைத்துக் கடலை பார்த்த கெதியாயிருக்கிறார்களென்றும், நாம் நாகப்பட்டணத்திலே கோடி தாட்டியாய் இருக்கப்பட்ட திரவியமுள்ள பட்டணத்திலே இப்போது நூறு வராகனளவிலே அகப்பட்டதாம் அப்படி திரவியமெல்லாம் வெளிப்பட்டு போனதாய்ச் சொல்லிக்கொள்ளுகிறார்களென்றும், கெவிளி வாசலடைத்து திட்டிவாசல்விட்டு யிருக்கிறதாய் பார்த்து வந்தவர்கள் இந்தக் கபுறுகள் சொன்னதுமல்லால் நம்முடைய கப்பல்கள் இதோ வந்தது என்று இதே வதந்தியாயிருக்கிறதாம் யென்று கபுறு சொல்லிக்கொள்ளுகிறார்கள். அதற்குக்காரைக்காலிலே முசியே பாரதிமுக்துப் போடுவித்துக்கவில் கொடுக்கிறோம் எவர்கள் நாகபட்டணத்திலிருந்து அப்பால் போறோமென்று அவர்களுக்கு இவ்விடத்தில் வீடுகட்டிக்கொள்ளுகிறதற்கு நிலம் விடுகிறோம் பின்னையொன்று கரும் 'பயப்படக்கவையில்லை என்று திலார்சு சொல்லி தமுக்கு போடுவித்தாரென்று சொல்லிக்கொள்ளுகிறார்களென்று சொல்லி உங்களுக்கும் காரைக்காலிலிருந்து கபுறுகள் வந்து யிருக்குமே யென்று சொன்னதிற்கு மெய்தானென்று சொல்லி எத்தனை பயமிருந்தாலும் வெளிக்கு காண்பிப்பார்களா மார்க்கமாய் நடத்தப் போகாதாவென்று சொன்னார். நம்முடைய ஊமுல் வெளிக்குத் தெரியாத யோகமிருந்து அடித்துக் கீர்த்தி கொண்டுவந்து விடுகிறதைத் தொட்டு வெளிக்கு வராமல் மறைந்துபோகிற தேயல்லாமல் இல்லாவிட்டால் மெத்தனமுல யென்கிறது வெளிப்படாதாவென்றும் மனதிலே எண்ணிக்கொண்டு அந்த தைரியமும், க்ஷாத்திரியமும், யோசனையும், பராக்கிரமமும்'

சௌகரியமும், கீர்த்தியும் உமக்கு வருத்திவிக்கும் பொருட்டு சுவாமா அவர்களுக்கு அப்படி அதைரியமும், அபகீர்த்தியும் நாமறதித்தனமும் கொடுத்தாரென்று சொல்லிப்பாரென் கிறது ஒரு வஸ்து இல்லாவிட்டால் புண்ணியமென்கிறது சிலாக்கியப்படமாட்டாது. அபகீர்த்தி அதைரியமென்கிறது ஒரு வஸ்து ஏற்படாவிட்டால் தைரியத்துக்கும் கீர்த்திக்கும் பிறகாசமில்லை; ஆனபடியினாலே அவர்களுக்கு அப்படிப்பட்ட சொல் எருகிறது உங்களுக்கு மகத்தாகிய கீர்த்தி வந்து சேரு மென்று சொல்லி பறங்கிப்பேட்டையிலே வர்த்தகருக்கு கொந் திராந்து கொடுத்ததை கெமிராரிட்டு இந்தமட்டுக்கும் வந்த சரக்கும் போதும் இனிமேல் சரக்குக்கவையில்லை. பணத்தைக் கொண்டுவந்து முதலிங்கோளென்று சொல்லுகின்றாரிப்படி பல பல விதமாய் ஒலாந்தக்காரர் பதரி நடத்துவதும் சதுரங் கப்பட்டண மெல்லாம் வலசை வாங்கிமெதரி சின்னதுரை பெண்சாதி பிள்ளைகள்கூட உய்யால்வராக காட்டுக்கும் போய் மறுபடி சதுரங்கபட்டணம் போய் சேர்ந்தார்களென்றும், ஓடிப்போன குடிகள் மறுபடி போய்ச் சேர்ந்தார்களென்றும், கபுறு வந்தது என்று சொன்னேன். இப்படி பேசியிருந்த பிற்பாடு நான் கிடங்குக்கு வந்தேன்.

1748 ஆ மே மீ 28 உக்கு விபவ ஸ்ரீ வைகாசி மீ 19 உ மங்களவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்களண்டையில் போனவிடத்திலே மாருதியான்தவ்வா அல்லிநக்கிம்சாயபு பேச்சு யென்னமாய் நடக்குதென்று கேட்டார் விசேஷித்து பின்னையென்றும் விஸ்தாரமாய் நடக்கவில்லை பொருத்துக் கொள்ளவேணுமென்கிற, பேச்சாய் சொல்லி அனுப்புகிற சாடையுமேதாகிலும் வெகுமானம் ரூபாய்செய்து சந்தோஷம் பண்ணவேணுவென்று யோசனை பண்ணிக்கொண்டு யிருக்கிற சாடையாய்க்காணுதென்று சொன்னதற்கு நீ ஒப்பினையா யென்று கேட்டார். நானென்ன பைத்தியக்காரனா? அவர்கள் முசத்திபேச்சோடு பேச்சாயப்போட்டால் இதில் கவிஞ்சி பேசி னால் அதன்பேரிலே பேச்சு நடத்துவோமென்று பேசினேன். நானந்தபேச்சிலே கவிந்து உத்தரம் சொல்லாமல் சொன்ன படி பேசினபடி பணத்தைக்கொடுக்கிறது இரண்டு நாழிகை

ஆகிலும் வைத்திருந்து மறுபடி கொடுத்துவிடுவார்களென்று யெப்படி சொல்லவேணுமோ அப்படியெல்லாஞ் சொல்லி அனுப்பிவிட்டேனென்று சொல்லி அனுப்பிவித்தேன், மற்றப்படி பின்னை வேறே எழுதத்தக்க அதிசயமில்லை. அப்பால் பனிரெண்டுமணி அடித்த உடனே வீட்டுக்குப்போனேன். மறுபடி மூணுமணிக்கு அழைத்தனுப்பிவித்து ரென்ன சொன்னு னென்றும் யென்ன நடந்ததென்றும் காலத்தாலே நடந்த பேச்சுதானு யென்னவென்று கேட்டார். அவர்கள் மனுஷர் ஒருத்தரும் வரவில்லை யென்று சொன்னேனிப்படி யிருக்கச்சே சின்னதுரை உந்தலாயிந்த மாதம் இரண்டு மூணு நாளிருக்கிறதே சம்மளத்துக்கு பணம் மூஸ்தீதாகவேணுமென்று யெச்சரிக்க வந்த சாடைபோலே கண்டுது அதன்பேரிலிவருமிவரும் பேசிள பிற்பாடு துரையிலே யிருக்கிற இங்கிலீஷ்காரன் கப்பவிலே கொடியை முறுக்கி ஒரு பீரங்கிப்போட்டான் அப்பால் மேலே ஒரு கப்பலும் ஒரு காவியாயிரயின் கப்பலும் பாயெடுத்து ஒடுகிறதைப் பார்த்து சுட்டான். அவன் பதில் உத்தாரமே சொல்லாமல் சும்மா போனுன். மறுபடியும் ஒரு பீரங்கி சுட்டான், மெத்தைமேலே ஏறிப் பார்த்து இருக்கச்சே சாயங்காலத்துக்குள்ளே உடம்படிக்கை பண்ணலாச்சுது. இல்லாவிட்டால் மீரதியானைத் துல்லாவை ராத்திரிக்குக் கோட்டையின்பேரிலே மணிக்கூண்டிலே கொண்டுபோய் வைக்கிறேனென்று சொன்னுர். உங்கள் சித்தமென்று சொன்னேன். அப்பால் சுவாரிபோய் ஆறு மணி வேளைக்கு வந்து திரும்பியுமழைப்பித்து ஏதாகிலும் நடந்ததாவென்று கேட்டார். அவர்கள் மனுஷர் இன்னும் வந்ததில்லையென்று சொன்னேன். ஆனுல், எட்டு மணிக்குக் கோட்டையிலே கொண்டு போய் வைத்துபோடுகிறேனென்று சொன்னுர்.பாக்குக் கிடங்குக்கு வந்தேன். எட்டு மணிக்கு மறுபடி அழைத்தனுப்புவித்து இப்போது கோட்டையின்பேரிலே மணிக்கூண்டிலே வைக்கிறேனென்று சொல்ல மகம்மது சௌசொபுதாருடனே சொல்லி அனுப்பி கோட்டையிலே கொண்டுபோய் முசியே புரி கையிலே ஒப்பிவித்து வரப்போனுன். பின்னை அரை நாழிகைக்கு வந்து மிருதியான துல்லாவைக் கோட்டையிலே கொண்டுபோய் முசியே புரி கையிலே ஒப்புவித்துவிட்டு வந்தேனென்று சொன்னுன். அவன் வீட்டிலே இரண்டு சிப்பாய்களையும் ஒரு கப்பிராலேயும் இருக்கச் சொன்னேன். அப்பால் துரை யிருந்து

கொண்டு யாரோ ஒருத்தர் விவாதம் பண்ணினார்கள். அவ களைப் பிடிக்காமல் போனாயென்றும், அவனண்டையிலே அப் போது தானே வரப் போக இருக்கிற பேரை பார்த்துப் பிடித் துக்கொண்டு வரவேணுமென்றால், உனக்கு மெத்த பெரிய காரியமல்ல, உனக்கும் அவன் நிஷ்டூரமேன இவனிஷ்டூரமேன் வரவேணுமென்று யோசனைபண்ணுகிறபடியினாலே தாமசமா யிருக்கிறது. இல்லாவிட்டால் இன்னாெனன்று ஏற்பட்டுப் போமென்று கோபமாய்ச் சொன்னார். நான் இரண்டு பேர் இருக்கிறவர்களை சொல்லுவோமென்று பார்த்தேன். ஆனால் செய்திருக்கிற தீவினைக்கு அற்றதாயனுபவிக்கிறான். நாம் இன்ன மார்க்கமாய்த்தானே செல்லுவோமென்று யோசனை பண்ணிச் சாதகமிருந்தாலல்லவோ ஒருத்தன் பேரிலே சொல்ல வேணும். இல்லாவிட்டால் சும்மாய் சொன்னாலப்பால் நீங்கள் தானே இல்லாத பேச்சு எப்படி சொன்னாயென்று கேட்டால் என்ன உத்தாரம் சொல்லுவேனென்று மார்க்காய்ப் பின்னையும் எப்படிச் சொல்லவேணுமோ அப்படியெல்லாம் சொன்னேன். அதன்பேரிலே அல்லிநக்கீம் கோட்டையில் காவல் வைப்பே னென்று சொன்னார். அப்படிச் செய்கிறது பெரிதல்ல, தேவரீ ருக்கும்; நவாயத்தருக்கும் வெகு சகாயம்பண்ணி நீங்கள் என்கிற கீர்த்திமிகுந்த விசுவாசனதியா யிருக்கச்சே அப்பால் தேவரீர் சித்தமென்று சொல்லிவிட்டு நிற்கச்சே கைக்குத் தண்ணீர் கொண்டுவந்து கொடுத்தான். அவரப்படி நடந்தார் சாப்பாட்டுக்கு நானிப்படி பாக்குக்கிடங்குக்கு வந்தேன்.

1948 ஆ மே மீ 20 உக்கு விபவ ஞூ வைகாசி மீ 20உ புதவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரை ஏழு மணிக்கெல்லாம் அழைத்தனுப்புவித்து நேற்று ராத்திரி மிருதியான துல்லாவை கோட்டையிலே கொண்டுபோய் வைத்த பிற்பாடு அவர்கள் மனுஷர் வந்து ஏதாகிலும் பேசினார்களாவென்று கேட்டார். அதற்கு இப்போதான் சந்தாசாயபுபெண்சாதியண்டையிலிருந்து வருகிறார்கள். ராசோபாயென்கிற பிருமணன் வந்து அல்லி சாயபு அறியாதுபோலேயும் கோட்டையிலே காவல் வைத்து இருக்கிறதே அவன் சொன்னாப்போலேயும் வழைப்பிச்சாப் போலேயும் அவன் தன்பேரிலே அபாண்டமாய்ச் சொன்னாப்

போலேயும், சந்தாசாயபு பெண்சாதி முதலானபேருடனே சொன்னப்போலேயும், இந்த சாடையிலே அவன் தப்பு க்ஷமிக்கத் தெரிய உங்களுக்குச் சொல்லச் சொல்லி வந்து என்னுடனே சொல்ல வந்தார். அதற்கு நான் அல்ல நக்கிம் சாயபு வருகிறதற்கு முன்னமே மிருதியானதுல்லா நடப்பித்து அதற்கு பிற்பாடு அல்லிநக்கின் வந்து நடப்பித்தும் நான் சொன்ன உத்திரமும் எல்லாம் பேச்சுப் பேச்சாய் விஸ்தாரமாய் ஒரு பேச்சாகிலும் விடாமல் சொன்ன பிற்பாடு இப்படியாவென்று அவனுச்சிரியப்பட்டு தங்களெசமான்கள் அறிந்தால் மெத்ததாபந்தப்படுவார்கள் யென்ன செய்யப்போகிறோமென்று மறு உத்திரவு சொல்லுகிறதற்கு இடமில்லாமல் புறப்பட்டு போய்விட்டான் இனிமேல் என்னவருமோ கபுறு தெரியாதென்றுசொன்னபிற்பாடுநல்லதுகும்பினீர்வர்த்தகருக்குபணம் எப்போ வருமென்றுகேட்டார். நாளை நாளைனன்றைக்குள்ளாக வருமென்று சொன்னதற்கு ரூபாயாகவருமோ வருகனாக வருமோவென்று கேட்டதற்கு நான் ரூபாயாகத்தான் வருமென்று சொன்னேன் அப்பால் கப்பே குடித்து கபினேத்திலே எழுதப்போனார் நான் பாக்கு கிடங்குக்குவந்தேன்.

அப்பால் பதினொருமணி வேளைக்கு திரும்பியுந்துரையழைத்தனுப்பிவித்து சந்தா சாயபு பாப்பான் வந்தால், நீ கூட வந்து பேசவேணுமிங்கே தானே இருவென்று சொன்னார். இங்கே தானே இருக்கிறதற்கு கூடவில்லையே ஆனபடியினாலே தானங்கேதானே அடிக்கடி போயிருக்கிறதென்று சொன்னதற்கு நல்லது அப்படிதானே செய்யென்று சொல்லி அரும்பாத்தை முகும்பிரி ஆசாரப்பன் செத்துபோன யிடத்துக்கு மறுபடி ஒருத்தரைனட்ட யில்லையா வென்று கேட்டார் தானப்பமுதலியனுலாச்சு அதுயின்னம் சம்மதித்திரக்கவில்லையே யென்ன சொன்னதற்கு அந்த பணத்துக்கு பிணையார் கொடுக்கிறார்களோ அவர்களை வைத்துப்போடென்று உத்தாரங் கொடுத்தார். அந்தபணத்துக்கு மார்க்கம் பண்ணிக்கொண்டு யெனக்கு சரிபோனவனை வைத்துப்போடுகிறனென்று சொன்னதற்கு இனிமேல் பணமாத்திரம் கொண்டுவந்து ஒப்பித்துப்போடு மற்றபடிக்கு உனக்கு சம்மதியானபேரை வைத்துக் கொள்ளென்று உத்தாரங்கொடுத்தார். நானும் நல்லதய்யா

வென்று சொல்லிபோட்டு பாக்குக் கிடங்குக்கு வந்து பனி ரெண்டுமணிக்கு வீட்டுக்குவந்தேன்.

1748 ஆ ரூன் மீ 4 உ சுக்ர விபவ வூ வைகாசி மீ 26உ மங்களவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரை வீட்டுக்குப் போனேம். அவரும் கோயிலுக்குப் போய் வந்தார். சாவடி கபுறு சொல்லி விட்டு அப்பால் சந்தாசாயபு பிராமணன் ஏதாகிலும் வந்து சொன்னனோவென்று கேட்டார். சொன்னவர்கள் அபிப்பிராயம் மனம் பொருக்க வேணுமென்கிற சாடையே யல்லாமல் வேறே சாடையைக் காணேம். ஆனபடியினாலே உங்கள் சித்தமெப்படி இருக்கிறதோ அந்தப்படிக்கு நடத்துகிறதுதானென்று சொன்னதற்கு எனக்குச் சந்தாசாயபு வீட்டின்பேரிலே பணம் காசு வரவேண்டியிருக்கிறது. இந்தப் பணத்தை கொடுத்து விட்டு இவர்களை கூட அவர்களைக் கூடப்போகச் சொல்லென்று சொன்னர். அப்படி சொல்லி அனுப்புகிறேனென்று சொன்ன தற்கு அந்த ராசோப் பண்டிதனை இங்கே அழைத்தால் நான் ரூபு ரூபாச் சொல்லுகிறேனென்று சொன்னர். அதுதான் செயகாரியமழைப்பிக்கிறேனென்று சொல்லி ராசோ பண்டி தனை அழைப்பித்தேன். அவர் வந்து துரையை சலாம்பண்ணி நின்ற மாத்திரத்தில் துரையவர்கள் சொன்னது: விஸ்தார மானாலும் சுருக்கு காரியத்தைத மாத்திரம் எழுதுகிறேன். அல்லிநக்கிம் சாயபு சொன்னபடிக்கு லக்ஷம் ரூபாய் கொடுக் கிறது. இல்லாவிட்டால் நீங்கள் எங்களுக்குக்கொடுக்கவேண்டிய தைக்கொடுத்துவிட்டு நீங்கள் கூட அவர்கள் கூட ஊரைவிட்டு போங்களென்று கண்டிப்பாய் சொன்னர். அந்தப்படிக்கு ராசோ பண்டிதனுடனே சொல்லிப் போகச் சொன்னேன். மறுபடி துரையவர்கள் சொன்னது: இதற்குத் தாரம் இரண்டு காலையிலே சொல்லச் சொன்னர். அந்த சேதியும் சொல்லி அனுப்புவித்தேன். அதைக் கேட்டுக்கொண்டு ராசோ பண்டிதர் தம்முடைய பாக்கு கிடங்கிலே நான் வரந்தனிலும் இருந்துநான் போனற்போலெ வரும். எங்கள் பேரிலே கோபம் பண்ணத்தினலே என்னப் பிரயோசனமென்று தாபந்தப் பட்டார். அதற்கு நான் உம்முடைய யோசனைக்கு இந்தப் படிக்கு நடத்தினது செவ்வையாய்க்காணுதா வாங்கினேம்

கொடுத்தோமென்று நடப்பித்துப் போடச்சொல்லி என்று சொல்லத்தக்கன ஜாடை என்னமோ அந்த சாடையெல்லாம் சொன்னேன். அவனும் முகம் வெளுத்து வாயிலே பல்லிலே தண்ணியில்லாமல் படிக்கும் போனான். மற்றபடிக்கு பனி ரெண்டுமணிக்கு வீட்டுக்குப்போனேன். சாயங்காலம் இரண்டு மணிக்குத் துரையழைத்தனுப்பிவித்து அவர்கள் மனுஷர் யாராகிலும் வந்தார்களாவென்று கேட்டார். ஒருத்தரும் வர வில்லையென்று சொன்ன விடத்தில் எப்போதும் கேழ்கிற பொருள் வருமா எப்போ வரும்? வர்த்தகருக்கு என்று கேட்ட தற்கு அல்லிகக்கீம் எழுதியனுப்பி யிருக்கிறார்கள். வந்தால் அரை நாழிகை அளவிலே வைத்திருக்கிறார்களென்று சொன்ன தின் பேரிலே சென்னபட்டணம் வாசற்படி எத்தனை நேர்த்தி யாய் கட்டிவித்தேனென்று சொன்னார். உம்முடைய புத்திக்கு லோகத்துக்குள்ளே ஈடு ஜோடு உண்டா? உமக்கு உம்மையே சாக்ஷி சொல்லவேணுமேயல்லாமல் வேறே யில்லை என்று ஸந் வுத்தியமாய் எப்படிச் சொல்லவேணுமோ அப்படி சொல்லிப் போட்டு பாக்குகிடங்குக்கு வந்து அப்பால் ஒன்பது மணி வேளைக்கு வீட்டுக்குப் போனேன்.

1748 ஆ ஜூன் மீ 5 உக்கு விபவ ஞு வைகாசி மீ 27 உ புதவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் வீட்டுக்குப் போன மாத்திரத்தில் துரையவர்கள் சென்னப்பட்டணத்தி லிருந்து முத்தய்யனென்கிறவன் வந்திருக்கிறானும். சென்னப் பட்டணம் குத்தகை கொடாதத்திற்கு முன்னே முசியே பறேனு விசாரித்தபோது நடந்த சம்மதி அவனருவாளனைக் கேட்டு தெரிந்துக்கொள்ளச் சொல்லி முசியே பெருந்தல்மே எழுதினான். அவன் யார் எங்கே யிருக்கிறது முன்னமே அழைக்கச் சொன்னேன் இன்னும் வரயில்லை. சீக்கிரமத்துக்கு அழைத்துவரச் சொல்லென்று சொன்னார். அரும்பாத்தைஉரவு முன் சென்னப்பட்டணத்தில் அரும்பாத்தை காரியமாயிருந்து ஒன்றுக்கொன்று ஒவ்வாமலிவ்விடத்திற்கு வந்திருக்கிறே னென்று மறுபடி அனுப்பவேணுமென்று உங்களுடனே சொல்லி யிருந்தேனே அவன்தானென்று சொன்னதற்கு ஏன் இன்னும் அனுப்பவில்லையென்று கேட்டார். அரும்பாத்தைக்குக் கவியா

ணத்திற்கு சென்னப்பட்டணத்திலிருக்கிறவன் வருகிறான் வந்த உடனே இவ்விடத்திலேயும் அரும்பாத்தைக் கலியாணம் முடியுமே முடிந்தவுடனே அனுப்புகிறோமென்று பரசுராமன் சொன்னானென்று சொன்னதற்கு அப்படியே அனுப்பி விடென்று சொன்னார். அதிலே முத்தய்யனும் வந்தான் வந்த உடனே செவ்வையாய் துரையவர்களைக் காண்பித்துக் கொள்ளச்சொல்லிச் சொன்னேன். காண்பித்துக்கொண்ட உடனே அவனை அழைத்துக்கொண்டு என்னண்டைக்கு வந்து என்னை யழைத்துக்கொண்டு உள்ளே எழுதுகிற கபினேத்துக் குள்ளே போய் முசியே பேதுத்தல்மி தோட்டம் சம்மதி உனக்குத் தெரியுமே முசியே பனோ நாளையிலே நடந்ததுவென்று எழுதி னான். அதென்ன சேதியென்று கேட்டாரதற்கு, முத்தய்யன் சொன்னது: முசியே பிறியேல் விசாரித்தார். அப்பால் முசியே பனோ விசாரித்தாரப்போ புதுச்சேரியிலே குத்தகையாய் எழுதி வந்ததென்று என்றும்போலே முசியே பனோ அப்போது தோட்டம் விசாரிப்பின்பேரிலே யிருக்கிற கணக்கப்பிள்ளையை இனிமேல் பணங்கள் வாங்கவேண்டாமென்று முசியே துலோராம் முசியே பனோ உத்தாரம் கொடுத்தார்கள். அந்த சம்மதி பணம் குத்தகைக்காரர் சிறிது பேரங்கே யிருந்தவர்களாகை யாலே வாங்கினார்களே வெளியிலே போயிருந்தவர்களைக் கேட்டுக்கொண்டு திரிந்தார்களிது நானறிவேனென்று சொன் னான். அந்தப்படிக்குத் துரையவர்களுக்குச் சொன்னதற்கு முசியே பேதுத்தல்மிக்கு எழுதுகிற காகிதத்தில் எழுதிக்கொண்டு முத்தய்யனைப் போகச்சொல்லி அப்பால் தேவனாம்பட்டணத் துச்சேதி ஏதாகிலும் உண்டாவென்று கேட்டார். நான் ஆள் அனுப்பவுமில்லை சேதியும் வரவில்லை போக்குவரத்தாயிருக் கிறவர்கள் பாசார்க் கபுறாய் சொன்ன பேச்சு மெய்யா யிருக்குமோ பொய்யாயிருக்குமோ தெரியாதென்று சொன்ன தற்கு துரை யிருந்துக்கொண்டு நான் சொல்லுகிறேன் கேள் என்று சொன்னார். ஐயா அப்படி சொல்லுகிறதானென்று சொன்னதற்கு அவர் சொன்னது: ஒரு மாதம் நாற்பது நாளைக்கு முன்பாக நமது சீர்மையிலிருந்து சேதி கொண்டுவந்த பிறகாத்து கொழும்பு காலிக்கிப்புறம் இங்கிலீஷ்காரர் பிடித் துக்கொண்டுவந்து அதிலே யிருந்த வெள்ளைக்காரரை கரை யிலே ஏற்காமல் கப்பலின்பேரிலே தானே வைத்திருக்கிறதாய் நீயும் சேதி சொன்னாய் நானும் பாஷப்புறமாயும் கேழ்விப்பட்

டிருந்தேன். அதிலே மூன்று பேர் ஒப்பிசியேல்மார்களைக் கோட்டையிலே கொண்டுவந்து காவல் வைத்திருந்ததில் இப்போது எட்டு நாளைக்கு முன்பாக அந்த மூன்று வெள்ளைக் காரரையும் சீர்மைச் சேதி கொண்டுவந்த காகித சேதியும் அதற்கு முன் எத்தனை தரம் சொன்னாலும் சொல்லமாட்டோ மென்று அன்றையதினம் விருந்துபண்ணி இவர்களுக்குச் சாருயத்தை விஸ்தாரமாய் வார்த்து பேச்சுப்பேச்சாய் கேட்ட விடத்தில் இரண்டு பேர் சாருயம் ரொம்ப குடியாமல் மார்க்கமாயிருந்து சொல்லமாட்டார்கள். அதிலொருத்தன் மாத்திரம் விஸ்தாரமாய் குடித்துப்போட்டு சீர்மை சமாசார மும், பிரான்சுக்காரருக்குக் கப்பல் வருகிற சேதியும் காகிதமும் அந்தப் பிறகாத்திலே ஒளித்துயிருக்கிற இடமும் சொன்னு னென்று அதின்பேரிலே அந்த பிறகாத்தை போய் சோதித்து அந்த சொன்ன குரிப்பின்படிக்குப் பார்த்த விடத்தில் அந்தக் காகிதங்களிருந்ததாகவும் அந்தக் காகிதங்களை கொண்டுவந்து படித்துப் பார்த்ததாகவும், அதிலே சென்னபட்டணம் பிடித்ததற்கினிமேல் நடக்கவேண்டிய சேதிக்கும் கப்பல் பெல னுக வருகிற ஜாடை முதலானதெல்லாம் அதிலே எழுதி யிருக்குமே அது பார்த்த பிற்பாடுதான் நாகப்பட்டணத்தான் வீடு வாசல்களையெல்லாம் இடிக்கத் துவக்கினதும் சண்டை முஸ்தீதுகள்பண்ணுகிறதும் இங்கிலீஷ்காரர் ஒப்பந்தத்துக்குக் கொடுத்த பணத்தை மறுபடி கேழ்கிறதும் அந்த சாடை யும் தோற்றுதென்று சொன்னர். அந்தப் பிறகாத்து அகப் பட்டது மெய்தானது பிசகில்லை. காகிதங்களை ஒளித்து தண்ணி யிலே போட்டுவிடாமல் ஒளித்து வைத்திருந்து அகப்பட்டது மெய்யே ஆகவேணும்; அப்படியானுல் இதுயெல்லாம் மெய்தா னென்று சொன்னேன்.

சீர்மையிலிருந்து மசுகலரைக்கு வந்து மசுகரை கபுறுகூட வாங்கிக்கொண்டு வந்த பிரகாத்து அவர்கள் கையிலகப் பட்டுப்போன படியினுலே மசுகரை சேதியும் தெரியவில்லை. சீர்மை சேதியும் தெரியவில்லை. இதல்லாமல் மசுகரையிலிருக் கிற கப்பல்களையும்; கொற்சாயிரு கப்பல்களையும் நான் வரச் சொல்லி யெழுதியிருக்க அந்த கப்பல்கள்கூடவருமல் நின் றிருக்கிற சாடை பார்த்தால் சீமையிலிருந்து வந்த சேதியிலே வருகிறயிஸ்காதுகளுடனே கூட நீங்களும் புதுச்சேரிக்குப்

போகிறதல்லாமதற்கு முன்போகத் தேவையில்லையென்றெழுதிவந்த சாடையைத் தொட்டு அந்த மசுகரையிலேயிருக்கிற கப்பல்கள்கூட வருமலிருந்ததாக வேணுமென்று சொன்னரப்படி ஒரு ஒடுதிசேர்மை ஒடுதிவருமல் நீங்களெழுதின மட்டுக்கும் வருமலிருக்கத் தகாததில்லை யென்று சொன்னேன். யெனக்குமப்படிதான் தோற்றுது. சேர்மையிலே கும்பினீரிலே பணமில்லாமல் ராசா ஒன்பது மில்லியோமும் திரவியமும் கொடுத்து ஆறுசண்டைக்கப்பலும் கொடுத்து மற்றது கும்பினிக் கப்பல்களும் கும்பினீரில் முஸ்திதாயிருந்த திரவியமும் கூடப்போட்டு ஏகத்துக் கப்பல்களை முஸ்தீது பண்ணி ஒயித்தேம் புறபடத்தையிலே ரவாறுபண்ணி அனுப்பச்சொல்லி ராசா உத்தாரமும் மினிஸ்தர்களும் கும்பினியாருக்கு கட்டளையிட்டபடியினுலே கப்பல்கள் புறப்படாமல் அட்டியாயிருக்க தகாதில்லை கும்பினியாரும் சென்னைப்பட்டணம் பிடித்த சேதி போனமட்டுக்கும் அப்பால் நடக்க வேண்டிய சங்கதிகளும் எழுதியனுப்பாமலிருஈர்கள். இதல்லாமல் ஒலாந்தக்காரருக்கும் நமக்கும் சேர்மையிலே சண்டைதிக்கிருரிடவில்லை அப்படியிருக்கச்சேயும் இங்கிலீஷ்காரருக்கும் அந்தரங்கத்திலே வெகுதிரவியம் வெகுமனுஷர் கப்பல்கள் யிதுகளெல்லாம் கொடுத்து மத்தத்துப்பண்ணுகிருர்களென்று ஒலாந்தருச்சியத்தில் எட்டுபட்டணம் பெரு எண்ணப்பட்ட பட்டணம் அவர்களுக்கு ஆட்கி ஆவசீகமாயிருக்கிற இங்கிலீஷ்கார கப்பல்கள் வந்து யிறங்குகிற துரைமுகமாகிய பெரிய பட்டணம் ஒன்று கூட பிடித்துக்கொண்ட படியினுலே இவ்விடத்துக்கும் ஒலாந்தக்காரருடைய பட்டணங்களிலே மெத்தரவிய முதலாகினது கொழுப்பு யிதுகள் பெகு திரவியங்களெடுக்கிறதென்று சேதி அறிந்திருக்கிறதாமே அதன்பேரிலே இந்த சந்துகட்டுகளிலே அதுகளை பிடிக்கச்சொல்லி யெழுதிவந்து அந்த சேதி இங்கிலீஷ் காரருக்கு வெளியாமே அவர்கள் ஒலாந்தக்காரருக்குச் சொல்லி அதின்பேரிலே அவர்கள் இத்தனை சண்டை முஸ்தீது பண்ணுகிருர்களே தெரியாதென்று சொன்னர். ஆனல் மசுகரையிலிருந்த கப்பல்கள் பெத்தரவியண்டைக்குப் போகக்காரியமென்ன வென்று கேட்டதற்கு இங்கிலீஷ்காரரது நாலு கப்பல்கள் சீனத்திலிருந்து வருகிறதென்றும் கபுறின்படியினுலே அதற்குப் பெத்தரவியமார்க்கமானபடியினுலே அந்த கப்பல்களங்கே போய் வழிகாட்டியிருந்த சேதியை பெத்தாவி

யின் பேரிலே சண்டைக்கும் போனதாய்ச் சொல்லவேணு மென்று சொல்லியதல்லாமல் கொறசாயிரு கப்பல்கள் மதகஸ் காரிலே யிருந்து புறப்பட்டு இங்கிலீஷ் கப்பல்களைப் பிடித்த கபுறு சொல்லுகிறார்கள். இதுகளெல்லாமிப்போது இங்கிலீஷ் காரர் கையிலே ஒரு மாதம் ஐம்பது நாளைக்குமுன் அகப் பட்டப் பிறகாத்து சுகமாய் வந்து சேர்ந்ததால் சீர்மைக் கபுறு மசுகரை கபுறுகளும் மேல்லாந்திட்டமாயகப்படும் அது அகப் பட்டுப்போனபடியினாலே கபுறு யில்லாமல் போய் இத்தனை யோசனைக்கு இடமாயிருக்குதென்று உண்மையாய் மனதிலே இருந்ததையெல்லாம் சொல்லி அப்பால் சந்தா சாயபு மனுஷன் ராசோபண்டிதன் வந்தானாவென்று கேட்டார். வரவில்லை யென்று சொன்னேன் அழைத்துவரச்சொல்லென்று சொன்னார் சேவகர்களை அனுப்பினேன். அவன் வருகிறதிலே டில்லியிலே பாறசா செத்துப்போனதும் அவர் குமாரன் அகம்மது சாவை பாற்சாயிடத்துக்கு வைத்த முதலான சேதி கேற்றையதினம் தினசரியிலே எழுதினபடிக்குச் சொன்னேன். ஆனால் ஒரு கலாபமுண்டாயிருக்கும் மறுபடியார் பெலத்துப் போவார்கள். இப்போது பெங்காளத்து நபா செத்துப்போனான். அவன் தம்பியைப் பிடித்துக்கொண்டு பெங்காளமெல்லாம் மருட்டிய ருச்சியபாரம் பண்ணுகிறார்கள். அப்படி யிருந்த ராச்சியமும் மருட்டியார் கட்டிக்கொள்ளுவார்களென்று சொன்னாரதற்கு நான் நக்ஷத்திரம் வால் முளைத்தது கண்டதற்கு பார்சாவா கிலும் விழுந்துபோகவேணும். நிசாமாகிலும் விழுந்துபோய் ராச்சியத்தில் க்ஷாமம் காணுமென்று சமஸ்தமான பேரும் சொன்னபடிக்கு பார்சா செத்ததும் டில்லியிலே தானே சாமத் துக்குள்ளே வெகுபேர் வெட்டுப்பட்டதும், சரிப்பட்டதும் இன்னும் என்ன நடக்க யிருக்கிறதோ அறியப்போகாதென்று சொன்னதற்கு மெய்தான் வால்முளைத்தநட்சத்திரம் வடக்கே காண்பித்ததென்று ஒத்துக்கொண்டார். இப்படி யிருக்கச்சே நிசாமுக்கும் பெரிய வயது அவனும் விழுந்துபோனான். ஒரு ஷீம் மேலுண்டாக போகிறதுயென்று மருட்டியர் நிசாம் விழு கிறது தாமசம் இங்கே வந்து துலுக்கரைத் துரத்தி அவர்களிந்த ராச்சியமெல்லாம் கட்டிக்கொள்ளப் போகிறார்கள் இருங்கள் என்று சொன்னதற்கு அப்படி விபரீதம் நடக்கிற ஏஷிய மாகச்சேதான் டில்லி பாற்சா செத்துமங்கேதானே ஒருத்தருக் கொருத்தர் நிஷ்காரணமாய் வெட்டுண்டு செத்ததும் விபரீதம்

கண்டதுமதற்கு அடுத்தாப்போலே இங்கேயும் காணப்போகா தென்று சொன்னர். நேரப்படிக்குதாவென்று சொன்னேன் அப்படி பேசியிருக்கச்சே ராசோபண்டிதர் வந்தவரை அழைத்துக்கொண்டு எழுதுகிற கபுநேத்தை மூன்று பேரும் போனேம். அப்பால் ராசோ பண்டிதனை அழைத்து உள்ளே போனமாத்திரத்திலே முந்தாம்நாள் பேசின அல்லி நக்கீம் சாயபு பேச்சுக்கு உத்தாரம் இரண்டு நாளையிலே சொல்லச்சொல்லி சொன்னதற்கு இப்போது உத்தாரம் என்ன சொல்லுகிருயென்று கேட்டாரதற்கு அவர் சொன்னது : எங்க ளம்மாள் சொல்லச் சொன்னது : அல்லிநக்கீம் சாயபு தகப்பன் தக்காசாயபு சபித்திறல்லி பெண்சாதி எங்கள் மூத்தரும் மமூதல்லிகான் முதலான பேர் என் புருஷனிக் காட்டுக்கு லக்ஷம் ரூபாய் கொடுக்கச் சொல்லி கேட்டதற்கு ஒருத்தரும் ஒரு காசுக்குகூட அவகாசமில்லாமலிருக்கச்சே நாங்களெங்கே இருந்து கொடுக்கப்போகிறேம் என்று சொல்லி கை விட்டார்கள். உங்களை கேட்டதற்கு நீங்கள் தாறேமென்று சொன்னீர்களதற்கு முன்னும் அவ்விடத்து சிலவுக்கு அனுப்புகிறதற்கு கேட்டதுக்கு அப்பவும் கொடுத்தீர்கள் கலியாணத்திற்கு இவர்கள் நபாபுகிரி பண்ணச்சேகூட அதனை சம்பிரமும் நடவாதது. அதற்கு ரெட்டிப்பு மூன்றத்தனை அதனம் அப்படியெல்லாம் நடப்பித்து திரவியஞ் சிலவுக்குக் கொடுத்துமிடல்லி பாரியந்திரம் பேராய் கீர்த்தி வகித்துக் குடும்ப பிறதிஷ்டைபண்ணி நடப்பித்தார்களென்கிறது அறிந்தவிசுருந்தியாயிருக்கச்சே உங்களுக்கு ஒரு சமயம் வந்தபோது எங்களுடமை தட்டுமுட்டுகூட வைத்து உங்கள் சமுத்துக்கு உதவ தக்கதாக செய்யவேணுமென்று போனர். வந்தவாசிக்குஞ் சொல்லி அனுப்பி யிருக்கிறது. பொன் நகை வெள்ளி நகை இருக்கிறதை டங்காசாலையிலே போட்டு முஸ்தீதுபண்ணி ஆனமட்டுக்கும் கொடுப்போமென்றால் அப்படியா யிருக்கிறது டங்காசாலையார் முன் முசியே மீற பார்க்கச்சே அவனுத்தாரம் இப்போது துரை உத்தாரம் வேணுமென்று சொல்லுகிறர்களென்று சொன்ன மாத்திரத்தில் நல்லது டங்காசாலையாருக்கு உத்தாரம் கொடு என்று சொல்லி முசியே தீலார்சுயை அழைக்கச்சொல்லி அனுப்பி போட்டு ராசோ பண்டிதனைப் பார்த்து அல்லிநக்கீம் சாயபு அண்டைக்கு நம்மைப் பார்த்து ஏகதாளி பண்ணக் காரியமென்னவென்று வெள்ளைக்காரரைக்கொண்டு கேட்டு

அனுப்பிவிக்கிறேன். நீ போமென்று சொல்லிஅனுப்பிப் போட்டு சந்தாசாயபு பெண்சாதி சொல்லியனுப்பின பேச்செல்லாம் மெய்தானிவர்கள் முன்பணம் கேட்டதுமவர்களில்லையென்றதும் நாம் கொடுத்தும் உண்டானதுதான். நாம் சொன்ன கண்டிப்பு உத்தாரத்தின் பேரிலே பயந்துபோனூர்களென்று சொல்லி முசியே திலார்சை அனுப்பினுல் தன் பேரிலே பயந்து என்ன சொல்லுகிறூர்களோ அறிவோமென்று சொன்னுரப்படித்தான் செய்யவேண்டியதென்று சொன்னேன். அதன்பேரிலே முசியே திலார்சையும் வந்தவனுடனே லக்ஷரூபாய் பரிபத்தியம் விபித்தியமிரெண்டரை மாசமாய் மிரதியானதுல்லா மாரிபத்திலே பேசினதுமப்பால் அல்லிநக்கிம் சாயபு வந்த பிற்பாடு சந்தாவுலே வராகன் வந்திருக்கிறதும் அது சராயரபுமார்களுடனேயிருக்கிறது சாரபுவரவேணுமென்றும் அவன் வர நாளைநாளையன்று இரண்டு மூன்று நாள் செல்லும். மூன்று நாள் தாரோம் என்றுமப்பால் நாளையதினம் காசுகாரரை அழைத்துவந்து பற்காவாணி பண்ணியெடுத்துப் போங்களென்று சொன்னதுமல்லால் அல்லிநக்கிம் சாயபு ரூபு ரூபாய் சுவரமிலோகத்துக்குள்ளே யிருக்கச்சே அல்லிநக்கிம் சாயிலே பிறந்ததும் தப்பிதம் தப்பிதம்வருமாவென்றும் நான் சத்தியமாய் சொல்லுகிறேனென்றும் மூன்றும் சாமத்துக்கும் பாதியும் மத்தமாதிகாலாம்நாள் தாரோமென்று சொல்லி அனுப்பிவித்ததும் ரூபாயழைப்பிக்க வேணுமென்றுல் அனவர்த்திகானுக்கு நாங்களென்றுமில்லை யென்று சொல்லிக் கொண்டு வேஷம் போட்டுக்கொண்டிருக்கிறதற்கு ரூபாய் வந்தால் சேதி வெளியாய் மோசம் வரும் வராகனுகத்தானே அழைப்பித்துக்கொள்ளுகிறூமென்று அல்லிநக்கிம் சாயபு ரூபு ரூபாய்ச் சொன்னச் சேதியும் முன் தக்கா சாயபு மிரதியானதுல்லா வந்தவாசிக்குப் போனபோது நானெழுதின காகிதத்திற்கு பதில் காகிதமெழுதி அனுப்பினதில் துரையவர்கள் காரியம் என் காரியம் அந்தப்படிக்கு இனம்பண்ணி மிரதியானதுல்லா மிறகேசற்றுத்தாமதமாயனுப்புகிறேனென்றெழுதின காகித முதலான சேதியெல்லாம் துரையும் நானுமாய் முசியே திலார்சுக்குச் சொல்லி அப்பால் முசியே திலார்சை போகச் சொல்ல அதற்கு றங்கப்பிள்ளை கூட வரவேணுமென்று சொல்ல துரையவர்கள் நீயும் கூடப்போவென்று சொல்ல அப்பால் நானும் முசியே திலார்சும் புறப்பட்டுப்

போகச்சே மதனுந்த பண்டிதனும் இதற்கு அனுபவதையா யிருந்தபடியினாலே அவரையும் கூட அழைத்துக்கொண்டு அல்லிநக்கீம் சாயபு அண்டைக்குப்போய் உட்கார்ந்த மாத்திரத்தில் அவனுக்கு வாய் பல்லெல்லாமுலந்துப் போய் கை காலெல்லாம் நடுக்கமெடுத்து பேய்போலெ முழிச்சு முன்னடந்தப் பேச்சைக்கேட்டாலில்லே யென்று சொல்லுகிறது அப்பால் நான் மதனுந்த பண்டிதரைக் கூட வைத்து நீ இப்படி யிப்படி சொல்லவில்லையாவென்று கேட்டால் மெய்யென்றொத்துக் கொள்ளுகிறதும் செய்தது தப்பிதம் மனம் பொருத்துக்கொள்ள வேணுமென்றும் இப்படி வாயிலே பல்லிலே தண்ணீரில்லாமல் முகம் சாவுமுகம்பட்டு முசியே தில்லார்சை வேண்டிக்கொண்டு மாபுசுகான், மமுதல்லிகான் மெகத்து மீகான் யெப்படிப் பட்டதை அரைநாழிகையிலே தீர்த்துப் போட்ட உமக்கு இது யெவ்வளவு காயம் இதையும் தீர்த்து போடவேணுமென்று சொன்னாலவன் பிந்திக் கூந்தல் போடப் போட்ட துரை யிந்த பட்டணத்திற்கு ஆக்கிமுடனேயா யெகத்தாளி பண்ணுகிறது. சொன்னபடிக்கு லக்ஷம் ரூபாயும் பரிபத்தியங்கொடுத்துத் தீரவேணுமில்லா விட்டாலிதைத் தொட்டு யெத்தனைப் போருட்டம் வரும் விளையாட்டாக வென்று பெகு கண்டிப்பிலே சொல்லுர அவர் இவன் கண்டிப்பிலே சொன்னமாத்திரத்தில் அவன் பேபோலே முழித்துமனம் பொருத்துக்கொள்ளவேணும் அடா மூடா அப்பா அய்யா நான் சிருப்பிள்ளை பண்ண தப்பிதம் துரைக்கி பொருந்துக்கொள்ளுகிறது கடன்தானென்று இஞ்சிதிண்ண குறங்காட்டமாய் பல்லை பல்லைத் திறக்கிறதும் இனிமேல் என்துகப்பல்யென்னை ஏதுசெய்கிறதுமுன்னே தானே புதுச்சேரிக்கு போரேனென்று சொன்னால் போகவேண்டாமென்று சொல்லி போனால்செத்தவனுடனே கூட்டிக்கொண்டுமாத்தாம் கொடுக்கிறேனென்று சொன்னானிப்படி யெல்லாமிருக்க இந்த சங்கதி கேட்டால் நான் பிழைக்கிறதேது; செத்துப்போகிறேனென்று கண்ணிலே தண்ணீர் விட்டு அழுகிறதும் அவளங்கலாயப்பு மவன் துக்க கமுகமுங் காகிதத்திலின்னதென்று எழுதி முடியாது. அப்படி அவனங்காலாய்த்துப் பயந்து பயந்து சொல்லி இவன் பின்னையும் பின்னையும் மோசம் வந்ததென்று சொல்லசொல்ல இந்தப் படிக்கு நாலு நாழிகை நேரமவள்பட்ட கிலேசத்தைக் காகித

முகாந்திரத்தில் யெழுதிமுடியாது கட்சியிலே பென்னே வந்து வாசிக்கு அனுப்பினலப்படியாகிலும் தெரியச் சொல்லி மிகாம் பண்ணி பணங்காசு எவ்வளவாகிலும் கொண்டுவாரேன் என் கிற சாடை சொல்ல, அதைப் பிடித்துக்கொண்டு எழுந்திருந்து வரச்சே இவனுக்கு ஒரு சேரேப்பா நூற்றைம்பது ரூபாய் பொரும் கொடுத்தார்களதையும் சுத்திக்கொண்டு இந்த சடையைப் பிடித்துக்கொண்டு பிரபு அண்டைக்கும் போவோ மென்று அல்லிகக்கேம் சாயபுக்கு வாய் தடுமாறி சந்தாசாயபு மகனேப் பார்த்து நீ சொல்லு எனக்கொன்றும் தோணவில்லே. ராசோபா நீ சொல்லு மதனுந்த பண்டிதனுக்கு நீ சொல்லு என்று பிறலாபிக்கச்சே அப்பாலுத்தரவெல்லாம் சந்தாசாயபு மகன் சொல்ல இப்படி நடந்தது. இவர்களண்டைக்குப் போனல் இவர்கள் புகுனபிவர்கள் பேசுகிற எகத்தாளியும் மனுஷரை துக்குனி நேரத்தில் காபிருவசக்கிப் போகச் சொல்லுகிற சாமர்த்தியமெல்லாம் எங்கே போச்சோ ? நான் அறியேன் அப்பாலதை விஸ்தாரித்து எழுதவேண்டுமானல் எந்தமட்டுக்குமாகிலும் எழுதலாம். ஆனல் பெரிய மனுஷ ருடைய சரித்திரத்தை என்னவென்றெழுதப் போகிறேன். அப்பாலவ்விடத்திலே அவர்கள் கையாலனுப்பிவித்துக்கொண்டு நானும் முசியே தீலார்சும் இரண்டு பேரும் போய் துரைக்குச் சொன்னதற்கு இவன் போயல்லோ தகப்பனுக்குத் தெரியப் படச் சொல்லி பணம் கொண்டுவாரேனென்று சொல்லு கிறேன். ஒரு காகிதமெழுதி அனுப்பச்சொல் அந்தப்படிக்கு நல்லது நீ வந்தால் தாரேனென்று எழுதுகிறனே பணமேது அனுப்புகிறது யென்று யெழுதுகிறனே அல்லவென்று பணம் அனுப்புகிறேன் ஒப்பித்தும்போட்டுவரயென்கிறனே, அறுமோ மென்று சொல்லி நீங்கள் நாலுமணிக்குப் போய் காகித மொன்று வாங்கியனுப்பிவியுங்களென்று சொன்னர். நல்ல தென்று சொல்லி முசியே தீலார்சு என்னே பார்த்து பனிரெண் டடிச்சுதே நீர் வீட்டுக்குப்போய் சாப்பிட்டு நாலுமணிக்கு வர வேணுமென்று சொல்லச்சே துரை முசியே தீலார்சைப்பார்த்து நடந்த சங்கதி உண்டென்று ஒத்துக்கொண்டானுவென்று கேட்டார். முன்னே இல்லே யென்று அப்பால் ஒத்துக்கொண் டானப்பாலவன் கண்ணீர் விட்டழுதானென்றுமவனுக்கு கை காலர்டாமல்போன சாடையுமிதெல்லாம் சொன்னன் நம் முடைய பேரிலே ஒரு சொல்லில்லாமல் அவனெத்துக்கொண்டு

துரைக்கும் அறிக்கையாய்ப் போனதினலே சுவாமி என்னைக் காப்பாற்றினரென்று எண்ணிக்கொண்டு வீட்டுக்குப் போனேன்.

அப்பால் பகலைக்கு மேலாக நாலுமணிக்கு முசியே தீலார்சு யென்னை அழைத்தனுப்பினனப்பால் அல்லிநக்கிம் வீட்டுக்குப் போய் அவர் தகப்பனருக்கு ஒரு காகிதமெழுதி கொடுக்கச் சொல்லி கேட்டதுக்கு. கண்ணிலே தண்ணீர்விட்டு அழுது எழுதிக்கொடுக்கச்சே என் சிவன் யித்துடனே சரி நம்பத் தேவையில்லை யென்று சொல்லி திராத பக்ஷமாய் மதனந்த பண்டிதனை மசுதா பண்ணச் சொல்லி அந்தப்படிக்கு ராசோ பண்டிதனை யெழுதச் சொல்லி மோகர்பண்ணிக்கொடுத்தான். அப்பால் பகலைய சாடயைத்தான் மத்தபித்தி கூந்தல் கைதரல், காலுதரல்பேச்சு தடுமாடியுமிருந்த சாடைசமஸ்தமும் பக கலைய சாடை அப்பாலந்த காகித்தை வாங்கிக்கொண்டு துரையண்டைக்கு வந்து முசியே தீலார்சு நடந்த சேதியும் சொல்லி துரைகையில் காகிதத்தையுங்கொடுத்தானதை என் கையிலே கொடுத்து தக்கா சாயபு அண்டைக்கு வந்தவாசிக்கு அனுப்பச் சொன்னரந்த சினம் கும்பனீர் சேவகன் அருளப்பன், பெருமாளிரெண்டு பேர்லும் கொடுத்து அனுப்பிப் போட்டு பாக்குகிடங்குக்கு வந்து ராத்திரி ஒன்பது மணிக்குப் போனேன்.

1748 ஆ, ஜூன் மீ 7 உ க்கு விபவ ஸூ வைகாசி மீ 29உ சுக்கிரவாரம்.

இற்றைநாள் காலத்தாலே கோட்டைக்குப் போய் அங்கே சின்ன துரையுடனே கண்டு பேசி துரையவர்களண்டைக்கு வந்து கண்டவுடனே என்னைப் பார்த்து சென்னப்பட்டணத்திலிருந்து முசியே பெடுதல்மி காகிதம் வந்தது. அந்தக் காகிதத்தில் சென்னப்பட்டணத்திற்கு பறத்தல் ராசா என்கிறவன் பாளையக்காரனும் அவனுக்கு அறுபதெழுபது கிராமம் உம்பிளிக்கையாய் நடக்குதென்றும், அவன் நபாபுக்கு காவெட்டி ராசா மற்ற பேர்கள் எப்படி வருஷத்திற்குப் பெஷக்கத்துக் கொடுக்கிறபடிக்கு இவனும் கொடுக்கிறது தானும் அவன் சென்னப்பட்டணம் காவலுக்கு எசமானனாக இருந்தவனுமப்பால் இங்கிலீஷ்காரருக்குச் சம்மதி யில்லாமல்

பெத்துநாய்க்கனை வைத்துக்கொண்டுதள்ளிப்போட்டார்களும் அவனிப்போது வந்து பெத்தி நாய்க்கனுக்கும், தனக்கும் வையிர்மென்ருப்போலேயும் அந்தக் கவலிப்போதுதான் வசம் பண்ணினல் உங்களுக்குக் கவைய்யானபோது மூவாயிரம், நாலாயிரம் ராணுவ மத்தத்துபண்ணுகிறேமென்றும் பின்னை யும் ஆடுகள், கோழிகள் வேணுமென்கிறது சமயா சமயம் பார்த்து மத்தத்துபண்ணி அழைப்பித்துக்கொடுக்கிறேமென்று மிந்தப்படிக்கு வந்த சண்டு பேசினுனம். அசற்கு என்ன வயணமாய் எழுதலாமவனுரென்று கேட்டார். மல்ராசா உரவும் மல்ராசாவை இவன் தலை வெட்டவேணுமென்று திரி கிறதுமல்லாமல் அரண்மனை அஜருபண்ணிக்கொண்டு இருக் கிருன். ஆனபடியினலே எப்போது வெளி மனுஷரை நம்பப் போகாது உனக்கும் இங்கிலீஷ்காரருக்கும், நமக்கும் சமாதான மான பிற்பாடு பார்த்துக்கொள்ளலாம்; அப்படி நடத்தவும் நடத்தலாம். இன்னேக்கத்தை சிறுத்திப் பார்க்கிற குணம் போலே காணுது. அப்பாலுங்களுக்குச் சம்மதியானபடிக்கு நடப்பிக்கிறதுதான் என்று சொன்னதற்கு நீ சொல்லுகிறது மெய்தான் முன்னுக்குப் பார்த்துக்கொள்ளலாம். இன்னேரத் திற்கு இப்போதிருக்கிறபடிக்கு இருக்கட்டுமென்று எழுதிப் போகிறேனென்று சொன்னுர். அப்பால் லோகபிரமா பேசி யிருந்து அப்பால் வீட்டுக்குப் போனேம் பின்னையொன்றும் எழுத தக்கன சமாசாரம் இல்லை.

*1948* ஆ ஜூன் மீ 10 உக்கு விபவ ஹூ வைகாசி மீ 30உ சோமவாரம்.

இற்றைநாள் காலத்தாலே மகா-ா-ா-ஸ்ரீ துரையவர்கள் முசியே கல்லியேர் தய்ப்ளேக்சு குவர்னதோர்சனருல் அவர்கள் ஏழுமணிக்கு நாசர் சங்கு வெகுமானம் வாங்கிவரத்தக்கதாக வழுதாவூர் வாசற்படி முதல் துரை வீட்டுமட்டுக்கும் சொல் தாதுகளும், சிப்பாய்களும், துப்பாக்கிக்காரரும் நின்ருர்கள். மத்தியே ஈட்டிக் கழிக்காரரும், 'மலையப்ப சேருவைக்காரன், சேவுகர், துப்பாக்கிகாரர், சங்கீதமேளம், நட்ட் நாடகசாலை, நவபத்துக் காரர் குதிரைமேலே ஆனையில்பேரிலே ங்காறு ரிசான்'முதலான சகல சம்பிரமத்துடனே புரப்பட்டு வழுதா வூர் வாசற்படிக்கு அப்புறத்தியிலே போட்டிருக்கிற கூடாரத்

தில் இறங்கி அங்கேயிருந்து எங்கள் தோட்டத்திலே யிரங்கி யிருக்கிற அவாய்சாயபு அண்டை நவபத்து வெள்ளைக்காரர் சுவான்கள் அப்துலாயிமான் சிப்பாய்கள் சுவாருயிருக்கிறவர் கள் மற்ற சங்கதி மௌமுதலாய் சகல சம்ரமத்துடனேயும் புறப்பட்டு முசியே இல்லியார் மேர் நான் கூடப்போய் தோட் டத்திலிறங்கியிருக்கிற அவாயிசாயபுடனே மிலாக்கது பண் ணிக்கொண்டு அங்கேயிருந்த சிரேப்பாவை துரைபல்லக்கின் பேரிலே வைத்து குதிரையை பல்லக்குமுன்னே கொண்டு போகச்சொல்லி அவரையும் கூட அழைத்துக்கொண்டு அங்கேயிருந்து புறப்பட்டு துரையிருக்கிற வழுதாவூர் வாசற் படிக்கு வந்து அவருக்கு நடுகட்டு காட்டிவித்து அங்கே யிருந்து புறப்பட்டு வீட்டுக்குச் செவ்வையாய் முன் செல்லப் பட்ட வெள்ளைக்காரர் சிப்பாய்கள் வரிசையில் புறப்பட்டு வீடுவந்து சேர்ந்து அவாசாயபுடனே நாசாசங்கு க்ஷேமமும், இமாம்சாயபு க்ஷேமமும் கேட்டு ஒருத்தருக்கொருத்தர் குசலப் பிறசின்னைபண்ணி ஆனபிறகு அவாய்சாயபுக்கு பன்னீர், பாக்கு வெத்திலைக்கொடுத்து விடுதியிலேபோய் யிறங்க சொல்லி உத்தாரங்கொடுத்து அனுப்பிப் போட்டு அப்பால் கோன்சேல்காரரை அனுப்பிவித்துப்போட்டு வந்த நாசர்சங்கு வெகுமானம் சிரேப்பாவை வீட்டிலே வைத்துப்போட்டு குதிரையை பாகாவிலே கொண்டுபோய் கட்டச்சொல்லி நாசர் சங்கு காகிதம் இமாம் சாயபு காகிதங்களை யென் கையிலே கொடுத்து உள்ளே போனூர். வழுதாவூர் வாசற் படியிலேயிருந்து துரை வெகுமானம் வாங்கிக்கொண்டு புறப் படச்சே இருபத்தொரு பீறங்கியும் வீட்டிலே சேர்ந்தாப் போலே யிருபத்தொரு பீறங்கியும் போட்டார்கள். போன விசை வெகுமானம் வந்தபோது மூன்றுகரம் பீறங்கிபோட் டார்கள் அப்போ கோட்டையைச் சுத்தினப்போலே வந்தபடி யினாலே கோட்டையண்டை வரச்சே ஒருதரம் அதனமாய் போட்டார்களிந்த விசை செவ்வையாய்தானே நின்றது. அப் பால் நாசருசங்கு காகிதத்தில் நீ அனுப்பிவைத்த தூற்பிணங் கள் லீவுருகள் முதலானதுகள் வந்து சேர்ந்ததற்கு மிகுதியும் சந்தோஷமாச்சுது உம்முடைய பேரிலே பக்ஷமிருக்கிறதற்கு அடையாளம் தேவனும்பட்டணம் வைக்கிலாய் வந்த முத் தாலு நாய்க்கனை பங்கம்பண்ணி காரியங்கூடாமல் அனுப்பி வித்தது உங்களுக்கு திருஷ்டாந்திரம் மற்றபடி உம்முடைய

சவுரிய தயிரியத்துக்கு மெத்தவும் சந்தோஷமாயிருக்கிறோம் உம்முடையபேரிலேயிருக்கிற பிரீதியெல்லாம் இமாம் உசேன் கான் சாயபு யெழுதின காகிதம் பார்த்துக்கொண்டால் தெரிய வருமே குதிரையும் சிரோப்பாவும் அனுப்பிவித்தோம். பக்தி விஸ்வாசத்துடனே அங்கீகரிக்கவும் யென்று யெழுதியிருந்தது அப்பால் இமாம் சாயபு காகிதத்தில் யெழுதியிருந்தது நாசருசங்கு சிரோப்பாவும் குதிரையும் அனுப்பி வித்தாரமிக மரியாதைபண்ணி வாங்கிக்கொள்ளவும் மற்றப்படி நானுங்கள் காரியத்து நிமித்தியம் சேவன்கூட ஒப்புவித்து போடுகிறதாய் அப்படி மனபூர்வமாய் உங்கள் காரியத்திலே அப்படி எண்ணி யிருர்கிறேன். மற்றபடி பின்னையும் உபசாரம் யெழுதி லாக்கூர் கோட்டையைப் பட்டாணிகள் பிடித்துக்கொண்டதின் பேரிலே பாற்சா குமாரன் போய் சண்டை பண்ணவந்த பட்டாணிகள் எஜமான்கள் மூன்று பேரையும் வெட்டிப்போட்டு பின்னையும் முப்பதுனாயிரம் குதிரைக்காரரை வெட்டினுப்போலே மற்றபேரெல்லாம் சின்னுபின்னமாக ஓடிப்போனதாசவும் மறுபடி லாகூர் கோட்டையை வாங்கிக்கொண்டு எப்போதையும்போலே தங்கள் மனிதரை வைத்து பாற்சாதாக்கள் டில்லி வந்து சேர்ந்தாரென்றும், அந்த சண்டையிலே கமறத்திகானென்கிற வசீர் விழுந்து போனுரென்றும், இது முதலாகிய சேதியெழுதி அப்பால் தம்முடைய குமாரத்திகதிகூரசானுக்கு ஆற்காட்டிலே கலியாணம் பண்ணச்சொல்லி எழுதினேம். அந்தக் கலியாணம் யெத்த னிசம்பிரமாய்ப் பண்ணவேணுமோ அந்தப்படி கசிசம்பிரமாய் முடிக்கவேணுமென்று அவாய்சாயபு சொல்படிக்கு சறஞ்சாம்பண்ணிக் கொடுக்கவேணுமென்றும் வழுதாவூர் சீர்மை, வில்லியனூர் சீர்மைக்குப் பிறெத்தினம்பண்ணி யிருக்கிறது நீங்களுமறிவீர்களே இப்பவும் காசற்சங்குக்கு எழுதுகிற காகிதத்தில் அந்தக் காரியத்துடனே சேர்ந்தது இமாம்சாயபு அவர்களரிஞ்சிபண்ணியிருப்பார்களே அந்தக் காரியம் நிசாமவர்களுக்குத் தெரியச் சொல்லி எனம்பண்ணி அனுப்பச் சொல்லி எழுதச்சொல்லியும், ஐம்பது மூக்குக் கண்ணுடியும் ஐம்பது ரூபாயிடை பொன் இருந்தாலும், அதிலே வருகிற பிரங்கி வசளும் குண்டு வசளும் எழுதின பறதும் நிசாமவர்கள் பார்த்தபடியினுலே அந்த பீரங்கியிலே பெரிய பீரங்கி இரண்டு பீரங்கியும் அதனுடைய குண்டுகள் இவ்வளவு என்றும் அழைப்

பிக்கச்சொல்லி நிசாம் பரமாயிச்சார் அந்தப்படிக்கு இரண்டு பீரங்கிமாத்திரம் கொடுத்து அனுப்புகிறோமென்று எழுதின பிற்பாடு அதை அழைப்பித்துக்கொள்ளுகிற யோசனைபண்ணி அழைப்பித்துக்கொள்ளுகிறோமென்று அனுப்பிவித்தால் நிசாமவர்களுக்குவெகு திரவியம் கொடுத்தாலும் அத்தனை சந்தோஷம் வராது இதிலே அதைப் பார்க்கிலும் வெகு சந்தோஷம் வருமென்றும் எப்போதும் களையும்போகாமலும் வருஷா வருஷம் கொடுக்கிற தஸ்தா துப்படிக்கு கொடுத்து அனுப்பவேணுமென்று இது முதலாதிய சேதியெழுதிவந்தது எல்லாம் படித்துப் பார்த்துக்கொண்டு துரையவர்களுக்கு சொல்லிப்போட்டு அப்பால் பாக்குகிடங்குக்கு வந்து வீட்டுக்குப் பனிரெண்டுமணிக்கு வரச்சே துரை அம்புடனே ஆறுமணி வேளைக்கு அரும்மாத்த கல்யாணத்திற்கு வரேனென்று சொல்ல சொன்னாரென்று வந்து சொன்னான். நல்லது நானுமங்கே போயிருக்கிறேனென்று சொல்லுமென்று சொல்லி அனுப்பிவிட்டு வீட்டுக்கு வந்தேன்.

1748 ஆ ஜூன் மீ 18 உ க்ஷய விபவ ஹ ஆனி மீ 1 உ மங்களவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் க்ஷவரம் பண்ணிவித்துக்கொண்டு வர உடுத்திக்கொண்டு ஆறு நாளாய் குடியிருக்கிற கதவை திறந்துவிடச் சொல்லி யார் வந்தாலும் உள்ளே விடச் சொல்லி யெப்போதையும் போலே வரப் போகிறபேர் போக யிந்தபடிக்கு சந்திரேருக்கும் வாசர் சேவுகருக்கும் உத்தரங்கொடுத்து தாமும் நடுசாலையிலே வந்து கப்பே குடிக்கிற ஞாயமட்டுக்கு குடித்தார். இந்த சேதிக் கேட்டு வெள்ளைக்காரர்கள் எல்லாரும் வரவர வந்து மெனவிப் போட்டு காரியம் பேசுவார்கள். காரியம் பேசிக்கொண்டு போனார்கள் நானும் சந்தித்து சரீர ஆரோக்கியம் கேட்டு அப்பால் ஆற்காட்டுச் சேதி கேட்டார் மாபுசுகானுக்கும் அனவர்திகானுக்கும் ஒருத்தருக்கொருத்தர் சமாதானம் படவில்லையென்றும் அதன்பேரில் அனவர்த்திகான் கோபித்துக் கொண்டு லாலாபேட்டைக்குப் போனதாகவும் இப்படியாகச் சேதி ஆற்காட்டிலேயிருந்து சந்தாசாயபு வீட்டுக்கு எழுதி அவர்கள் முசத்தி ராசாபண்டிதன் வந்து சொன்னானென்று கபுறு சொல்லி அப்பால் சாத்தூருவிலேயிருந்து வந்த

ஆர்காரு சொன்னது சத்தாராவுக்கு யிப்பால் அகிலகோட்டை என்று ஒரு ஸ்தலம் அந்த யிடத்துக்கும் சத்தாரானக்கும் பதினெண் காதவழி யென்றும் பத்தேசிங்கு குனுகோசி பூசலாவும், அவர்கள் ஸ்தலமும், அங்கே வந்து சேர்ந்து இப்பால் சாகிவாருர்களென்றும் பரபோசி நாய்க்கன் பத்சேசிங்கு ரகேபுசுலா கர்னுடகத்துக்குப் பயணம் புறப்பட்ட சேதி கேட்டவுடனே தனக்கு ஐம்பது லக்ஷம் ரூபாய் முழுகிப் போயிருக்கத் தன்னைத்தானே அனுப்பாமல் அவர்களை அனுப்பலாமாவென்று தன் கூடாரம் தட்டுமுட்டுகளைக் கொளுத்திப்போட்டுத் தானும் தன் பெண்சாதி இரண்டு பேரும் பிள்ளை ஒருத்தனும் ஏகந்துக்கு நான்கு பேரும் சந்நியாசி வேஷம் போட்டுக்கொண்டு விஷத்தை வாங்கிக்கொண்டு சாகுறேமென்று சாவு ராசா வாசற்படியிலே இருபது நாளாய் தறனு கிடக்கிருனென்றும், சந்தாசாயபு அனுப்பிவித்துக் கொண்டு திருச்சினுப்பள்ளியை வாங்கிக் கொடுக்கத்தக்கதாக அவரும் சம்மதி பண்ணிக்கொண்டு வருவதாய் கபுறு சொன்னு னென்று சொன்னதற்கு நல்லது பத்தேசிங்கு உன் பேருக்கு அனுப்பின காகிதமும் பிரான்சு பண்ணிக்கொண்டுவர சீர்மைக்கு அனுப்புகிறதற்குக் கவை வருமென்று சொன்னர். நல்லதென்று முசியே லேபோமண்டைக்குப் போய் பிரான்சு பண்ணிக்கொண்டு பனிரெண்டு மணிக்கு வீட்டுக்குப் போனேன். மற்றபடி எழுதத்தக்க சங்கதிகள் ஒன்றுமில்லை. ஆனல், தெய்வ சகாயம் என்கிற தாகன சேதிமாத்திரம் எழுத வேணும்.

1748 ஆ ஜுலை மீ 22 உ க்கு விபவ ஞு ஆனி மீ 12 உ சனிவாரம்.

இற்றைநாள் சூரிய உதயத்திற்கு ஆற்காட்டிலே யிருந்து இந்த மாதம் 10உ வியாழக்கிழமை நான் எழுதின காகிதம் வந்து பார்த்துக்கொண்டு அந்த மதலம்பு துரையவர்களுக்கு எச்சரித்த வயணமென்னவென்ருல்: துலுக்க மாதம் சமாதிசாகர் என்கிற பேருடைய மாதம் இந்த மாதம் 5உ நிசாமவர்களுக்கு டில்லியிலே யிருந்து போன மாதம் 5உ ஆகிய ஜமாதிலவல் என்கிற பேருடையது.

அவுப்பாக்கு ஆற்காட்டிலிருந்து வந்த சமாசாரம் விபவ ஹு ஆனி மீ 12உ அல்லிநக்கிம் சாயபு அரண்மனைக்கு வந்த சமாசாரம் மகம்மது சபாது சாயிச்சே 1761 ஆ மசல்சன 1157 மகம்மது சாயிச்சன 31 ரபிஸானி மீ 29 உ தாரிக்கு விபவ ஹு சித்திரை மீ 27 வைகாசி மீ சுத்த பாட்டியமை ஆதி வாரம் $36\frac{1}{4}$ பரணி $16\frac{3}{4}$ சவுபாக்கியம் $52\frac{1}{2}$-க்கு மேஷ லக்கினம் $5\frac{3}{4}$ ராத்திரி $17\frac{3}{4}$. இற்றைநாள் மகம்மது சாயதுஸா பரமபதம் சேர்ந்தார். பிற்பாடு அவர் குமாரன் லாகூரிலே பட்டாணியனை செயித்துவந்து டில்லியிலே பிறகு ஆரும்நாள் விபவ ஹு சித்திரை மீ 26 உக்கு கான். அகம்மதுசாயி முதல் வருஷம் சாமாதில்வல் ருதாரிக்கு ௯வசாக சுத்த சுபாத மீ சனிவாரம் 60 புஷ்யம் $50\frac{3}{4}$ கொண்ட நாம யோகம் $59\frac{1}{4}$ கொர்சவாக றணம் $29\frac{1}{2}$ திவி $6\frac{3}{4}$ இந்த சுபதினத்தில் மகம்மது அகம்மது சாமபாதர் பாத்ஷா சித்தகாஜி உட்கார்ந்து தன் பேருக்கு குதுப்பா படிக்கிறது. சிஙாசனுப் நடப்பிக்கிற திட்டம் ஆக்யாபித்து நிசாம் பேருக்கு பறமானு எழுதியனுப்பின விவரம் குதுப்பாவிலே படிக்கிறது. அபுன்னருமுசாகிதத்தின்மகம்மது அகம்மதசாபா அதர்பாபுத சாகாசி இந்த பிரகாரம் அவர்களை சிகாசனுப்பி நடப்பிக்கிறதற்கு காசியிலே எழுதியனுபிவித்தார்கள். இந்த சமாசாரம் நிசாம் ஆசபிச்சா புராணபுரிக்கு மூன்றும் சிலுக்கு இப்புரம் அவரங்கபாதுக்கு வந்து வழியிலே பறந்தாபுடாக்குக்கு அப்புரம் ஆற்ரோரத்தில் இறங்கியிருக்கிறபோது அந்த நாள் வந்தது. அன்று தினசன் அகது சமாதிசானி மீ 5உக்கு விபவ ஹு வைகாசி மீ 24 உக்கு ஜேஷ்ட சுத்த சஷ்டி ஆதிவாரம் நாள் நிசாம் பரமபதம் சேர்ந்தாரென்று சமாசார்ம் பதினேராம் நாள் ஆற்காட்டுக்கு எழுதிவந்தது.

பாதுஷா குதுபாமு துரை பேர் எழுதினதற்கு அறதம் அபுன்னசுரு என்றால் செபத்துக்கெல்லாம் பிதாவாகி உண்டாக்குகிறவன் முஜாகிதத்தின் என்றால் எல்லா மதமும் நிராகரித்துத் தன் மதத்தை சிரேஷ்டமாய் ஸ்தாபிக்கிறவன் மகம்மது அகம்மதுசா என்றால் தகப்பனுக பேரும் தன் பேரும் சேர்த்து எழுதினது கெணப்பட்ட பட்டாணியனை ஜெயித்ததற்கு உட்கார்ந்தாரானபடியினலே பக்தா பாதுசா

க்காசியென்று அர்த்தம். சொச்ருப்பிலே எழுதுகிறது மகம்மது அகம்மது சாயிதர் பாரிசா காசி குதுபா பண்டிகையிலே படிக்கிறது அப்புன் சுருமு காகிதத்தின் மகம்மது அகம்மது சாபர் அதற்பாதுசா காசியென்று படிக்கிறது.

இந்த சேதிகளெல்லாம் பாதுசா அரகரூன் கோசி பண்டிதர் காசிதாசு புக்கன்சு என்கிற சாவுகாரர்களுக்கும் இரண்டு பேருக்கும் எழுதிவந்ததாகவும், அந்தக் காகிதம் பனசு தோனே கொண்டுபோய் நபாபு அன்வர்திகான் மாபுசுகானுக்கும் கொண்டுபோய் படித்துக்காண்பித்தாப்போலேயும் அதன் நிசாமவர்கள் சாகச்சே அவர் இளைய குமாரன் நாசறசங்குக் கூடாயிருந்தாரென்றும், படித்துச் சொன்னவுடனே நிசாம் சாவுக்குப் பெகுசாய் தகப்பனும். பிள்ளையும் ஒரு சாமநேரம் அழுது துக்கப்பட்டு அப்பால் மகம்மது சாதகத்துக்கு ஏறினனென்கிறதற்கு சந்தோஷ நவபத்து அடிக்கச்சொல்லி, இந்த படிக்கு நடந்ததாய் எழுதி வந்தது. இந்த மதல்புப்படிக்குத் தானே ஆற்காட்டிலே யிருந்து வக்கீல் சுப்பய்யன் காகிதத்திலேயும் எழுதி வந்தது. இந்தச் சேதிகளெல்லாம் ராசாஸ்ரீ துரையவர்களுக்கு சொன்னேன். அதற்கு அவர் மனதிலே என்ன விசார சாடையோ என்ன யோசனையோ அல்லது இங்கிலீஷ் கப்பல் நம்முடைய ரேவுக்குச் சரியாய் பத்து கப்பலை சூரிய உதயத்திற்கெல்லாம் வரிசையாய்க் கொண்டுவந்து வைத்துப் பிடித்தான். அந்த விசாரமோ காசு பொறுத பேச்சுக்கெல்லாம் நான்கு நாழிகை இரண்டு நாழிகை விஸ்தரித்துக் கேழ்கிறவர் இப்படிக்கெல்லாம் செத்துப்போன கபுறும் மகம்மது சாபாதுசர் செத்துப்போய் அவர் குமாரன் அகம்மது சாபாதுசாதக்குத் தெரிமுக்கா மதத்து ஆணை ஆக்கினை சமஸ்தமும் அகம்மது சாபாதசா பேர்பட நடக்கிறதும் பத்தேசிங்கு பூசலார் கோசி பூசலா முதலான படைத்தலைவர் மருட்டியதனம் விஸ்தாரமாய்க் கூட்டிக்கொண்டு கற்னுடகத்திற்கு வாரதும் இப்படிப்பட்ட பலுவிடியான கபுறுகளெல்லாம் கேழ்க்கவும், இதை விசாரணைபண்ணவும் யிருக்க, இதையெல்லாம் விட்டுவிட்டு கூடலூர் சேதி ஏதாகிலும் வந்துதாவென்று கேட்டார். எனக்கொரு சேதியும் வரவில்லையென்று சொன்சேன். இந்த கப்பல் இருந்தாப்போலே யிருந்து இங்கிலீஷ் கப்பல்காரர் இங்கே கொண்டுவந்து வைத்துப் பிடிக்கக் காரணமென்ன






வென்று கேட்டார் என் புத்திக் கேற்க தோற்றுகிறது. நம்முடைய கப்பல்கள் வருகிற சேதி இவர்களறிந்து சுமையும் பிடித்துவந்து துறைமுகத்தில் வைத்துப் பிடித்து வெள்ளிப் பொட்டியமைத்த சரக்குகளிருக்கிறதை இறக்கிப்போட்டு அப்பால் வெறுங் கப்பலாகியல்லோ சண்டை கொடுப்பான். கோட்டையானும் ஆஜருபண்ணுவானந்த துறைமுகத்திலே போயிருந்து வெள்ளி முதலாகிய தினுசுகள் இறங்காதபடி பண்ணி சண்டை கொடுத்தால் அப்புறம் உள்ளபடி ஆகுதென்று யோசனைபண்ணி இங்கே வந்தாப்போலே தோற்றுதென்று சொன்னேன். அது மெய்தான் எனக்குமப்படிதான் தோற்றுதென்று சொல்லிப்போட்டு நம்முடைய கப்பல் காரைக்கால் அந்த வட்டங்களுக்கு வந்த கபுறு நாகப்பட்டணத்திலிருந்து அவர்களுக்கு கபுறு எழுதி வந்ததாயும், அதன்பேரிலே மேஷத்தர் கெரெமென் கமாண்டோர் நோயாளிகிடங்குக்குப் போய் நடக்கத்தக்கனவர்களையெல்லாம் பிடித்து ஏத்தித் தினி தட்டுமுட்டுகளெல்லாம் அபஷத்த வந்தவர்களையும் காலைக் கட்டாமல் ஆதாபரதயாய் நடக்குமே, அப்படி ஓட்டம்பாட்டமாய் அழுதப் பிள்ளையை எடுக்க நேரமில்லாமல் தடுமாற்றமாயிருந்ததென்று வழக்கச் சொல்லுச் சொல்லுவார்கள். அந்த சாடையிலே நடந்ததாயும், அதன்பேரிலே ஊரெல்லாம் தலைவாலு கேட்டு நின்றது நின்ற வாக்கிலே புறப்பட்டு போட்டுவிட்டு ஓடிப்போனதாயும், இப்படி அங்கே கலிபிலியாயிருந்ததென்றும், அப்போது கப்கல்களுக்கு ஏத்த வேண்டிய சாமான்களை ஏத்தி ராத்திரி கைபாயெடுத்து இங்கே இரண்டு வந்து வைத்தே பிடித்தேமட்டுக்கும் நம்முடைய கப்பல்களிலே வந்ததற்கு பின்னை ஒன்றும் சங்கையில்லை ஆனபடியனாலே கப்பல்கள் நாளைய தினமோ நாளைன்றைக்கோ இங்கே வந்து சேருமென்று திட்டமாய்ச் சொன்னார். அப்படித்தானிருக்குமென்று சொல்லிப்போட்டு அப்பால் கனகராய முதலி உடம்பிறந்தான் மகன் ஆசாரப்பன் செத்துப் போனானே அவன் பெண்சாதிக்கும் வாசுருக்கும் ஆசாரப்பன் தம்பி தயாரியத்துக்கும் வியாச்சியமுண்டாகி உம்மண்டைவாறதாயிருக்குதென்று சொன்னேன். அதெப்படியென்றால், கனகராய முதலி மச்சினிச்சி மகன் கனகராய முதலி பெண்சாதி வளர்த்துக்கொண்டாள். அந்தப் பெண்ணை ஆசாரப்பனுக்குக் கலியாணம்பண்ண பிற்பாடு அந்தப் பெண்ணுக்கு ஆதரவாய்

பதினையாயிரம் வராகனும், சிறிது தட்டுமுட்டும் கொடுத்த தாகவும், அப்பாலந்த ஆசாரப்பன் தன் தம்பியாருக்கு ஒருத்த ருக்கும் கவையில்லையென்று தான் கன்னிகாதானமாய் உடன் மருவுக்கு கனகராய முதலி பெண்சாதிக்கு ஏற்பட்டாப்போலே யும் இதுவல்லாமல் ஆசாரப்பன் தம்பியை கனகராய முதலிக்கு புத்திரஸ்வீகாரமாய்ப் போகிறதாய் பேச்சு வார்த்தை நடந் திருந்தபடியினாலேயும், தாயாருக்கும் பிள்ளைக்கும் சண்டை யாய் தாய் ஆசாரப்பனைப் பார்த்து உன் தகப்பன் சம்பாதித்த பணத்துக்கு உனக்கு கவையென்ன நீ ஒருத்தர் வீட்டுக்கு உடன் மருவாய் போய்விட்டேனென்று அடித்துவிட்டு தன் புரு ஷர் சம்பாதித்த புடவை சீலை தட்டுமுட்டும் பணங்காசு உடமை ரொக்கம் உள்பட முள் துணிகூட எடுத்துக்கொண்டு போன தாகவும், அப்படிபோனாளிவர்களுக்கு என் புருஷனுடைய உடமைக்கு ஒரு சுதந்திரமுமில்லையே அப்படியெல்லாமிருக்க என் புருஷன் எனக்குச் சரீர லகுவு தப்பி யிருக்கிற வேளை யிலே காலம்பண்ணிப்போனால், என் புருஷன் சாவு எனக்கு எச்சரியாமலிருக்கச்சே என்னுடமையை ஒருத்தருமெடுத் துக்கொண்டு போக அக்கரை என்னவென்று வியாச்சியம் பேசுகிறான். அதற்கு உனக்குக் கவையென்ன சோரும் புடவை யும் போடுகிறோம். சாப்பிட்டுக்கொண்டிருமென்று சின்ன முதலி சொல்லுகிறானென்று, அது நிமித்தியம் உங்களுக்குப் பித்திசாம் எழுதிக்கொடுக்க வேணுமென்று இருக்கிறார்கள். அந்த பித்திசாமை வாங்கிக்கொண்டு நியாயமாய் மனம் பொருத்து விசாரிக்கவேணுமென்று சொன்னதற்கு நல்லது அப்படியே விசாரிக்கிறேனென்று சொன்னார். அப்பால் மேல் பேச்சுகளென்ன சொல்லவேணுமோ அந்தப் பேச்சு சொன்ன தற்கு துரை லாசரு கையிலே ரொக்கம் அறுபதினாயிரம் எழுபதினாயிரம் வராகனிருக்கும், இந்த கும்பினீரைத்தொட்டு சம்பாதித்ததே யல்லாமல் மற்றபடி அல்லவே இந்த வேளைக்கு கொடுத்து, உண்டான வட்டியும் முதலும் வாங்கிக்கொள்ளப் போகாதாவென்று சொல்லி மகா பொல்லாத மனதுடையவ னென்று சொல்லிப்போட்டு ஊருக்குள்ளே பணமெல்லாமிப்படி தான் தெளித்துப்போட்டு வைத்துக்கொண்டிருந்தால், வராகன் எப்படி வெளியாகுமென்றாப்போலேயும், சொல்லிப்போட்டு மேல் மேலே கப்பல் பார்க்கப் போனார். நானும் பாக்கு கிடங் குக்கு வந்து தம்பிச்சா முதலி பேரன் சூரப்ப முதலியை

அழைத்து உங்கள் காரியத்திற்கு நீங்களும் முசியே மிறவும் நம்முடனே சொன்னதற்கு பிறபுவுடனே எச்சரித்தேன். உங்கள் பித்திசாலைமக் கொண்டுபோய் கொடென்று சொன்னேன். அவனும் நல்லதென்று சொல்லிப்போட்டுப் போனேன். அப்பால் வீட்டுக்குப் பனிரெண்டு மணிக்கு வந்தேன்.

*1748* ஆ சூன் மூ *23* உக்கு விபவ ஸு ஆனி மூ 13 உ ஆதிவாரம்.

மைத்தனுள் காலத்தாலே கடற்கரையிலிருக்கிற கும்பினீர் சேவகர் வந்து இங்கிலீஷ்காரர் கப்பல் நேற்று காலத்தாலே துறைக்கு ராத்திரி பனிரெண்டு மணிமட்டுக்கும் பார்த்தோம். நம்முடைய துறையிலே பத்து கப்பலும் வரிசையாய் இருந்ததே அதை யின்று பொழுது வெடிந்து பார்த்தால் எல்லாம் வடக்கே பாயெடுத்து ஓடிப்போனதினுலே ஒரு சுலுப்பு மாத்திரம் தேவனும்பட்டணத்துக்குப் போகிறது. மற்ற ஒரு கப்பல் மாத்திரம் எப்போதும் நம்முடைய துறையிலே எப்போதுமிருக்கிறபடிக்கு ஒரு கப்பல் மாத்திரமிருக்குதென்று வந்து கபுறு சொன்னதின்பேரிலே எப்போதையும்போலே பாக்கு கிடங்குக்குப் போய் அப்பால் துரை வீட்டுக்குப் போகிற சட்டப்படியே பாக்கு கிடங்குக்கு வந்த உடனே ஏழு மணிக்கு வெள்ளைக்காரர் குதிரை சுவார்கள் துலுக்கர் குதிரை சிப்பாய்கள் எல்லாரும் பயணமாய் முஸ்தித்தார்கள். ஏனென்று கேட்டால் துரை பிறகே கோவிலுக்குப் போகவேணுமென்று வந்த சுவர்களைக்கூட தம்முடைய பிறகே வரவேண்டாமென்று நிறுத்திப்போட்டு நச்சுரபாணம் வருகிறதையும் வேண்டாமென்றும், காலி ஜனத்துடனே கோட்டைக்குப் போனதாய் சேதி வந்து சொன்னுர்கள். துலுக்க சுவர்களும், வெள்ளைக்கார சுவர்களும் ஏகத்துக்கு எண்பது தொண்ணூறு குதிரைக்காரரும் முசியே தோத்தேல் புரி முதலானபேரும் அப்துலாயிமான் சிப்பாயிலே நூறு சிப்பாய்களும் கூட சென்னப்பட்டணத்திற்குப் போகத்தக்கதாக பயணமாயிருக்கிற சேதியும் வந்து இதிலே துரையும் கோவிலுக்குப் போய் பூசைக் கேட்டுப்போட்டு மறுபடி வீட்டுக்கு வந்தார். அரையிலே யிருந்து முசியே மிற வருகிறபோது மனுஷக் குரங்கு என்று அச்சைமலாக்காவிலேயிருந்து வருமே அது

ஒன்று கொண்டுவந்து காரைக்காலிலே வைத்துப் போட்டுத் தமயன் செத்த சேதி கேட்டுத் துக்கத்தின்பேரிலே வந்துவிட்ட படியினாலே அதை மூசியே ரீஷந்து இவ்விடத்திற்கு அனுப்பத் தக்கதாக சிதம்பரம் வந்து சேர அனுப்பினான். சிதம்பரம் முதாமியார் தன் மனுஷர் கையிலே கொடுத்து பத்து பனி ரெண்டு பேர் சேவகரையும் கூடக்கூட்டி அனுப்பித்தானது வந்து சேர்ந்தது அதை துரை கேட்டுத் தமக்கு கொடுக்கச் சொன்னார். அந்தப்படிக்கு கொடுத்து விட்டானது மனுஷர் சாப்பிடுகிறாப்போலே கையினாலே சாப்பிடுகிறதும், படுத்துக் கொள்ளுகிற சாடையும் பீங்காணையெடுத்து மனுஷர் குடிக் கிறாப்போலே குடிக்கிறதும் புடவையிலே தண்ணீர் விழுந்தால் கையினாலே பிழிந்துப் போடுகிறது. இதுகளெல்லாம் பார்த்துக் கொண்டு தமாஷாய் அவரவரை அழைப்பித்து இந்த வேடிக்கைக் காண்பித்துக்கொண்டே யிருந்தார். என்னைப் பார்த்து இந்த கப்பல்கள்ளிவ்விடத்திலே வந்ததென்ன மறுபடி போகிற தென்னவென்றுக் கேட்டார், யெனக் கேற்க முன் ஞுன் மீ 20 உ ஆனி மீ 10 உ வியாழக் கிழமை நான் ராத்திரி ஒன்பதரைமணி முதல்கொண்டு பதி னொன்னரைமணி இரண்டுமணிக்குள்ளே யிருபத்திரெண்டு பீரங்கிக் கேட்டதென்று மறுநாள் இருபத்தோரும் தேதி பதினோராந்தேதி வெள்ளிக்கிழமை காலமே உங்களுடனே சொன்னபோது அதென்னமாய் யோசனை பண்ணினாயென்று கேட்டார். நம்முடைய கப்பல்களாக வேணும் ஒன்று அவர்களு தாகிலும் ஆகவேணும் ஒருத்தர் கப்பலாகிலும் ஆகாமல் போகத்தக்கதில்லையே அப்போ அவர்களுதே ஆனால் தேவனும் பட்டணம் கூடலூர் யேகத்துக்கு அவரவர் டாணம் காசிக ளெல்லாம் பறங்கிப்பேட்டை முதலான இடத்துக்கு அனுப்பக் காரியமில்லை ஒருக்கால் அனுப்பினது மல்லாமல் விழுந்தப் பிள்ளையை யெடுக்க நேரமில்லாமல் தட்டுகட்டு அலைஞ்சு திரு வீதி பண்ருட்டி பறங்கிப்பேட்டை வெங்கிடம்மாள் பேட்டை அதுகளுக்கு ஜனங்கள் ஓடினால் நம்முடைய கப்பலென்று எண்ணுகிறதா? வேறே யெண்ணுகிறதா? ஆனபடியினாலே நம்முடைய கப்பல் வந்தது இங்கே வெள்ளி மற்றது ஏறுகிற துக்கு யிடம்பாடில்லாததினாலே சென்னப்பட்டணத்திலே வெள்ளி மற்ற தினுசை இறக்கிப்போட்டு அப்பாலவர் களுக்கு புத்தி சொல்லுவோமென்று சென்னப்பட்டணம்

போனதாய் கர்ணுதென்று சொன்னதற்கு உன் புத்தியை யென்ன வென்றுக் கொண்டாடபோகிறேன். போவென்று சொல்லி தெற்கே காரைக்காலிருகச்சே வடக்கே சென்னப் பட்டணம் போனுனென்று கோபித்துக்கொண்டார். அப்பால் இங்கே இருந்த கப்பல்களிவன் சென்னப்பட்டணம் போவா னேஎன்றுதான் இங்கிலீஷ் கப்பல்களெல்லாம் வடக்கே பாயெடுத்து போனதாய் தோத்துதென்று சொன்னதற்கு காரைக்கால் பாரிசமாய் நின்ருலோ என்று திரும்பியும் கேட் டார். காரைக்கால் பாரிசமந்தானலோ கப்பல்கள் காண்பித்துக் கொண்டது அங்கேயிருந்தது அல்லாமல் அவன் கப்பல் மய்யபட்டுக்கும் போய் திரிந்து வராமபடியினுலே சமாசாரம் ஏதாகிலும் வந்துதான் வடக்கே காலமே பாயெடுத்து ஓடினதாய் காணுதென்று சொன்னதற்கு அப்படியல்ல பின்னே ஏதாகிலும் ஒருவித மிருக்கவேணுமென்று சொன்னர். இதை விட என்புத்திக்கு வேறேதோற்றவில்லை என்று சொன்னத் திற்கு கோபித்துக்கொண்டு போனுர். அப்பால் அப்துலாயி மான் சிப்பாய்கள் நூறுபேரும் குதிரை சுவர்களிலே வெள்ளைக் காரர் துலுக்கர் குதிரை சுவார்களிலே எண்பது தொண் ணூறு குதிரை சுவார்களும் மூசியே தோந்தேல்புசி முதலான பேர் பயணம் சாகி சென்னப்பட்டணத்துக்குப் போனுர்கள். அப்பால் பாக்குக் கிடங்குக்கு வந்தேன். இதில் மறுபடி துரை அழைக்கிருரென்று வந்தழைக்கிருர்கள். போனவிடத்தில் மறுப்டி லிங்கிசெட்டி முதலானவர்கள் தட்டுமுட்டு போனது மெய்யாவென்று வயணம் கேட்டதற்கு மறுபடி முன்சொன்ன படிக்கே சொல்லி கப்பல் நம்முடைய கப்பல் சென்னப்பட்ட ணம் சேர்ந்ததாய் வெள்ளிபெட்டி முதலான சரக்குகள் கூட யிருக்கிறதாய் சேதி என்று நாளையிலே வரப்போகுதென்று சொன்னதற்கு அவர் உதட்டை பிதுக்கிக் கப்பலை கண்டதே பொய்யென்று சொல்லித் தீர்த்தார். இப்படிச்சொல்லிக் கொண் டிருக்கச்சே ஆசாரப்பன் பெண்சாதி பித்திசாம் வருமென்று சொன்னியே யென்று கேட்டார். ஞாயிற்றுக்கிழமை காலமே பூசைகேட்ட பிற்பாடு பித்திசமெழுந்தி சாயங்காலம் கொடுப் பார்கள் போலேகாணுதென்று சொன்னேன். அப்படி வரப்பண் ணென்று சொன்னுர் நல்லதென்று சொல்லப்போட்டு மறுபடி பாக்குக் கிடங்குக்கு வந்தேன். மறுபடி அழைத்தனுப்பிவித்து உன் புத்திகேர்க்க கப்பல் நமதென்றுதானே தோத்தரவென்று

பின்னையும் அந்தப் பேச்சைத்தானே கேட்டார். கேட்டுப் போட்டு யோசனையாய் காம்பிருவுக்குள்ளே போனார். அவர் புத்தியிலே யென்னவென்றால்: இங்கிலீஷ்காரர் கப்பல் தானே அப்படி ஒசந்துபோனதாயும் துறையிலே கிடந்த கப்பல் இப்படி துரை நெறுங்கி போகிறதாயும் சொல்லவந்தார். அதற்கு நான் சொன்னது என் புத்திக்கு யோசனை அப்படிக் காணவில்லை யெழுதினாலே யென்றால் நாகப்பட்டணத்துக்கு நம்முடைய கப்பல்சேதி ஊர்சிதமாய் வராமல் அவன் தோட்டங்கள் துரவுகளெல்லாம் இடித்து நிறவப்போறதில்லை அப்படியிருக்க இப்போ தேவனாம்பட்டணத்திலே லிங்கிச் செட்டியைப்போலே கொத்தவன் தட்டுமுட்டெல்லாம் அப்புறப்பட்டு கூடலூரெல்லாம் தட்டுகெட்டு தடுமார காரியமென்ன ஆனபோதே நம்முடைய கப்பலென்று தோணுது அப்பாலென்னமோ சுவாமிக்குத்தெரியும் ஆகிலும் அதைமெய் யென்றுதானே சொல்லவேணும் அதென்னத்தினாலே யென்றால் உமக்கு மகத்தாகிய யோககாலம் வரப்போகிறதென்றும் சூன், சூலை மீ ஆரம்பியதினத்தின் அபிவிருத்தியாய் ஸ்ரேயஸ்கரம் நடக்கப்போகிறதென்றும், அவரவர் சொன்னபடி நடக்குமென்கிற படியினாலே இந்த கப்பல் நம்முடையதே ஆகவேணுமென்றும் இதுக்கடுத்த ஞாயங்களாகி முன்னேயெழுதியிருக்கிறபடிக்கெல்லாம் சொன்னேன் அந்த மட்டிலே காம்பிராவுக்குள்ளே போனார் நானும் வீட்டுக்கு வந்துவிட்டேன்.

நான் வீட்டுக்கு வந்து ஸ்நானம் பண்ணி சாப்பிட்டு கைக் கழுவிக்கொள்ளச்சே துரையவர்கள் ஒருரோக்கா ஒண்ணு யெழுதி ஒரு கும்பினீர் சேகவன்கையிலே கொடுத்து அனுப்பினார்கள் அவன்கொண்டுவந்து இரண்டு மணியடிக்க அரை நாழிகைக்கு என்கையிலே கொடுத்தான் அதிலே யெழுதியிருக்கிறதென்னவென்றால்: நம்முடைய கப்பல் சீர்மையிலேயிருந்து எட்டுகப்பலும் இரண்டு சுலுப்பும் வந்து சென்னப்பட்டணத்து துரைபிடித்தது யென்கிற சேதி வந்தது நீ வந்து பேசிக்கொண்டு போகவும் என்று யெழுதியிருந்தது, அந்த மட்டிலேயிந்த சந்தோஷ கபுறு கொண்டுவந்த கும்பினீர் சேவுகனுக்கு ஒருவிருகன்பெற ஒருபாகை ஒண்ணுகட்டி வாய் நிறைய சக்கரையும் போட்டு அவனை அனுப்பிவிட்டு நான் கால்நடையாய் நடந்து துரையவர்களண்டைக்குப் போகிறதிற்

குள்ளே இன்றைய தினங்காலமே இவ்விடத்திலேயிருந்து சென்னப்பட்டணத்துக் கனுப்பின துவாருது குதிரைக்காரர் வெள்ளைக்காரர் சிப்பாய்கள் முசியே தோத்தேல் முதலாகிய பேரை மறுபடியும் வந்து விடச்சொல்லி சீட்டெழுதி அனுப்பி விட்டார்கள். அவர்களையும் அழைக்க சேவகன் ஓடினான். இந்த கப்பல் சென்னப்பட்டணம் வந்தசேதிக்கு இன்றையதினம் மத்தியானம் பனிரெண்டுமணி அடித்து ஒண்ணரைமணிக்கு கடுதாசி வந்து துரையவர்கள் கையிலே சேர்ந்தவுடனே கோட்டைக்கோவில் சம்மா உலுக்கோயில் கப்புச்சுக்கோயிலிலே யிருக்கப்பட்ட மணிகளெல்லாம் ஓய்விடாமலடிக்கச்சொல்லி உத்தாரங் கட்டளையிட்டார்கள். அந்தபடிக்கு மணியும் அடித்துக்கொண்டிருக்கிறார்கள். அப்படியிருக்கச்சே நான் துரையவர்களண்டைக்கு போய் சலாம் பண்ணினேன் என்னைப் பார்த்து நீ சொன்ன யோசனை சரியாயிருந்தது நம்முடைய கப்பல் எட்டு கப்பலும் இரண்டு சுலுப்பும் நேற்றையதினம் மத்தியானம் பனிரெண்டு மணியடித்தது ஒரு மணிக்கு சென்னப்பட்டணம் வந்து துறைபிடித்தது அந்த கப்பல்களுக்கு எசமானாக வந்த கப்பித்தான் முசியே புவேந்து யென்கிறவன் கட்டுமரக்காரர் கையிலே எழுதியனுப்பின கடுதாசியிலே எல்லாம் நான் வந்து கண்டுபேசிக்கொள்ளுகிறேன் யிருக்கிற படகுகளெல்லாம் ஒருமிக்க தள்ளுமென்று எழுதிவந்த கடுதாசியை அந்த க்ஷணம முசியே பர்தேலம்ம ஒருகடுதாசியெழுதி அந்த இரண்டு கடுதாசியும் நேற்று மூன்று மணிக்கு தபாலிலே போட்டு இன்றையதினம் சூரிய உதயத்திற்கு வந்து சேர்ந்தால் தபால்காரருக்கு முப்பது ரூபாய் கொடுக்கச்சொல்லி எழுதி மற்ற சமாசாரங்களெல்லாம் பிறகாலே வயணமாய் எழுதி அனுப்பி வைக்கிறோமென்று, எழுதிவந்ததென்று சொன்னார். இதல்லாமல் பின்னையும நடந்தசேதி என்னவென்றால்: அல்லிநக்கீம் இப்போது என்ன சொல்லுகிறான். முன்னே கொடுக்கமாட்டோமென்றவர்கள் எல்லாரும் இப்போ பலவந்தமாய்க் கொடுக்கிறதற்கு வந்ததோ யில்லையோ ஆகிலும் துலுக்கர் மெத்த சின்ன மனுஷர் அவர்களுக்கு நாம் எத்தனை ஒத்தாசை பண்ணியும், நமக்கொரு சமயம வந்த வேளையிலே எட்டு நாளையப் பேச்சுக்காகிலும் கொடுத்து வாங்குவோமென்கிறதற்கில்லாமல் பணத்தையே பார்த்தார்களல்லாமல் கெட்ட மனுஷரை பாராமல்

போனார்களே எத்தனையாகிலும் வெள்ளைக்காரரைத் தமிழரை நம்பவாம். துலுக்கரை பரிச்சேதம் நம்பபோகாதென்று சொன்னார்களதற்கு நான் சொன்னது: அவர்கள் செய்த காரியத்திற்கு நாலு பேரும் அவர்களைத்தாலோசி என்றார்கள். நீங்களவர்களை ஆதரித்தும் ஒத்தாசை உதவிபண்ணினதும், இராச்சியமெல்லாம் அறியாதா உங்களுக்குக் கீர்த்திக் கிடைத்தது. அவர்களைத் தொட்டா? உங்களுக்கு சிறிது காரியம் ஆகப் போகிறது. அவர்கள் செய்த காரியம் அவர்களுக்கே லகுத்துவமல்லாமல் நமக்கொருக்காலும் தாஷியில்லை என்று சொல்லி அல்லிநக்கீம் உங்கள் பேட்டிக்கு வரவேணுமென்று, இருக்கிறாரென்று சொன்னேன். அவன் என்னண்டைக்கு ஏன் வருகிறான்? அந்த நாய் என் முகத்து முன்னே வரத் தேவையில்லை. ஊருக்குப் போகிறதானால் அப்படித்தானே போகச் சொல்லென்று சொன்னார் அப்படியல்ல, நீங்கள் தயவுபண்ணவேணுமென்று சொன்னேன் அந்த நாயுடன் பேச்சுமாத்திரம் என்னுடனே பேசாதயென்று சொல்லிப்போட்டு பணம் இந்த நாயிக்குக் கொடுக்கவேணுமோ இனிமேலவன் தனக்குத்தானே கொண்டுவந்து கொடுக்கிறான் போவென்று சொன்னார். அதற்கு நான் சொன்னது, முன்னே சந்துஷ்டமானபடியினாலே நாம் பிறேத்தினம் பண்ணாமல் சும்மாயிருந்தாலும் பலவந்தமாய் வந்து சேருமென்று சொன்னேன். மெய்தானென்று சொல்லி உலாத்திக்கொண்டே யிருந்து பிறகு கிட்ட வந்து தேவனாம் பட்டணம் காமண்டோ யிருக்கிறானே அவன் மெத்த திருடன் அவன் ஒருக்காலும் சண்டைக்குப் போகிறவனல்ல, அதெப்படியென்றால்; தேவனாம்பட்டணத்திற்கு அந்தப் பக்கத்திலே நம்முடைய கப்பல்களைக் கண்டமட்டுக்கும் எத்தனை தூரம் போனாலும் அதன்பேரிலே தொடர்ந்து ஓடி சண்டைபண்ணவேணுமேயல்லாமல் அது ஓடிப்போகட்டுமென்று பார்த்துக் கொண்டிருந்துப்போட்டு அது மேலாக போனது கண்டு இவன் கரையோரமே வந்து நம்முடைய துரைக்கி பாயெடுத்து மெதுவிலே அசைந்து அசைந்துக்கொண்டு போனான். பார்த்தாயா இனி நம்முடைய கப்பல் திரும்புகிறதே இவன் ஓடிப்போகப் போகிறான் பார். இவன் ஒருக்காலும் சண்டைபண்ணுகிறதே யில்லை. அவன் சூரத்து முண்டானல்ல இப்பவும் இவ்விடத்திலே யிருந்து முஷ்தரித்துப் பண்ணியிருக்கிற சுவர்களையாகிலும்

அனுப்பி அல்லது நானுகிலும் சுவாரி புறப்பட்டு ஐந்தாறு நாளைக்குள்ளே தேவனும்பட்டணத்து மேலே போய் விழுந்து ஒருதரம் அலங்கோலப் படுத்திப்போட்டு வருகிறேன் பார். இஃது வெளியிலே சொல்லாதே உன் மனதிலே தானே யிருக்கட்டுமென்று இதுவல்லாமல் துரையவர்கள் சொன்னது: கூடலூர், தேவனும்பட்டணம் வர்த்தகர்கள் அக்கினநாய்க்கன் காடு முதலான இடங்களிலே வைத்துக்கொண்டிருப்பார்கள். அந்தயிடம் எசமான்களுக்கு உடமையைப் பத்திரமாய் விசாரித்தால் நாங்கள் வந்து எடுத்துக்கொண்டு உங்களுக்குப் பாதி கொடுக்கிறோமென்று பேசி அந்த இடங்களெல்லாம் என்னுடனே சொன்னார்கள். அந்தமட்டிலே பின்னையும் சற்று நேரம் இருந்துப்போட்டு பாக்குக் கிடங்குக்கு வந்து சற்று படுத்துக்கொண்டிருந்து சாயங்காலமான உடனே எழுந்திருந்து இன்றைக்கு சஞ்சுவாம் விறகு கொளுத்துகிற பெருநாளான படியிலே கோட்டைக்குத் தென்னண்டையிலே கட்டி வைக்கிற சொக்கப்பிள்ளை விறகு கட்டு சாத்தியிருக்கிற விடத்திற்கு துரையவர்களும் போனார்கள். யாரும் வைத்துக்கொண்டு அவ்விடத்திலே போய் விறகை கொளுத்திப் போட்டு பீரங்கி கட்டு பண்டிகைக் கொண்டாடினதெல்லாம் ஆறு மணிக்கு நான் போய் பார்த்துப்போட்டு மறுபடியும் பாக்குக் கிடங்குக்கு வந்து ஏழரை மணி மட்டுக்குமிருந்து கும்பினீர் வர்த்தகர்கள் வந்தவர்களுடனே பேசிக்கொண்டிருந்து குண்டு போடுகிற வேளைக்கு வீட்டுக்குப் போனேன்.

*1748* ஆ. ஜுன் மீ 24 உ க்கு விபவ ஹு ஆனி மீ 14 உ சோமவாரம்.

மைத்தனுள் மதாம் துய்ப்ளேக்ஸ் பேர் பண்டிகையான படியினாலே தென்னண்டை வாசற்படியாலே துரையவர்கள் மற்றுமுள்ள கோன்சேய்காரர் வெள்ளைக்கார பெண்டுகள் முதலாகியபேரெல்லாம் கோயில்பூசைக்குப்போக தக்கதாக இருக்கும்போது நானும் மதாம் துப்ளேசுக்கு பண்டிகை உபசாரஞ்சொல்லி எலுமிச்சம்பழம் கொடுத்தேன் அப்போது துரையவர்கள் கிட்டயிருந்தபடியினாலே மகா மரியாதையுடனே வாங்கிக்கொண்டு நான்சொன்ன உபசாரத்துக்குப் பதிலுபசாரஞ்சொன்னான் அப்பால் துரையவர்கள் முதலான சமஸ்த

மான பேர் வெள்ளைக்காரர் வெள்ளைக்காரிச்சிகள் எல்லோரும் கோயிலுக்குப்போனார்கள். போனபிற்பாடு அங்கே முசியே புசி உட்கார்ந்துக்கொண்டிருந்தான், அவனை சீர்மை கப்பல் சேதி என்னவென்று கேட்டதற்கு. சீர்மை காகிதத்தினாலே சமாசாரம் இன்னம் நன்றாய் தெரியவில்லை முசியே ஷேவாலியே தலபேர் என்கிறவன் இப்போது வருகிற இவ்வூர் துருப்புக்கு பெரியவனாக வருகிறான் முசியே தேலடூர்நோனே காவலென்று சொல்லுகிறார்கள். அவன் தர்பி தான் காவலாய் வந்து சென்னப்பட்டணத்திலே வந்து இறங்கினாப்போலே ஆனதே இந்த இஸ்காதுருவரச்சே ஒலாந்துக்காரர் ஒரு பத்தோ ரெம்ப மருந்தும் குண்டும் யேத்தி இங்கிலீஷ்காரருக்கு அனுப்பினார்கள் அதை இவர்கள் பிடித்துக்கொண்டு வந்து சென்னப்பட்டணம் சேர்ந்தார்கள், வெள்ளியை யிறக்கிப்போட்டு அப்பாலே அந்த இஸ்காதுருகள் மறுபடி போகும்போலே யிருக்கிறதென்று சொன்னாள் அப்போ நான் சொன்னது சீர்மை சேதிகள் நன்றாயிருந்து எனக்கு விஸ்தாரமாய்ச் சொல்லவேணுமென்று சொன்னதற்கு உனக்கு அகப்படாத கபுறு எனக்கு அகப்படுமாவென்று சொன்னான். என்னவாகிலும் நீங்கள் வெள்ளைக்காரர் நாங்கள் தமிழர் உங்களுக்கு மெங்களுக்கும் வித்தியாசமுண்டு. ஆனபடியினாலே தயவுபண்ணி உமக்கு அகப்பட்ட கபுறு சொல்லவேணுமென்று சொன்னதற்கு அவசியம் அப்படியே சொல்லுகிறேனென்று சொன்னான். அப்பால் மதாம் துய்ப்ளேக்ஸ் அப்போ இருபது நாளாய் உன்பேரிலே ராஜியக் காரியம் நடத்தமாட்டான் மகாமரியாதையாய் வருவான் போலே காணுதென்று சொன்னாள். அதெப்படி சொல்லுகிறது; எப்போவாகிலும் என்பேரிலே கோபம் பண்ணியிருந்தல்லவோ இப்போது கோபம் தணிந்து தயவாய் நடத்தவேணும். எப்போதும் தயவாயிருக்கிறாப் போலே ஆனதே அப்படியிருக்க நீ சொன்ன வார்த்தை எனக்கு மெத்த ஆச்சரியமாயிருக்குதென்று சொன்னதற்கு அவன் மெத்த நகைத்து இந்த வார்த்தை மனப்பூர்விகமாகச் சொன்னாயாவென்று கேட்டான். அதற்கு நான் சொன்னது: இதிலே மனப்பூர்விகமென்ன? மனப்பூர்விகமில்லாமலென்ன? என்று சொன்னேன். உன் மனதிற்கேற்க ஒளித்து வைத்துபேசுகிறாய். சென்னப்பட்டணம் முதல் நாகப்பட்டணம் மட்டுக்கும் உன்பேரிலே மதாம் துய்ப்ளேக்ஸ் பொல்லாப்பு பண்ணவேணுமென்று திரியுறா

ளென்று இந்த ஊரிலே இன்று பிறந்த குழந்தைகள்கூட அறியுமே அப்படி யிருக்க நீ சொல்லுகிறது ரொம்பவும் ஆச்சரியமாய் இருக்கிறது. ஆனாலும் நீ சொல்லவேண்டியது அப்படிதான் ஆனாலும் உனக்கு நானொரு சந்தோஷ கபுறு சொல்லுகிறேனென்று சொல்லி மதாம் துய்ப்ளேக்ஸ் உன்னைத் திட்டுகிறது நீ அறியாமல் தப்பிதமாய் பேசுகிறது உன் மனுஷனைப் பிடிப்பித்தது முதலான சமாசாரங்களெல்லாம் முசியே துய்ப்ளேக்சுக்கு ஒரு மனுஷர் நன்றாயறிவித்தார்கள். அதின்பேரிலே அவரும் பெண்சாதியை ரொம்ப கோபித்துக்கொண்டார். இனிமேலவசரி பிரசங்கம் நீயெடுத்தால் யெனக்கு பொல்லாதவனென்று வெகு கறமான வார்த்தைகளாக அனேக விதத்திலே கண்டிப்பாய் சொல்லியிருக்கிறபடியினாலே இனிமேல் உன் பேச்சுக்கு வராத மார்க்கமாய்தானே வருவாளென்று சொல்லி முசியே பாதி ஒரு தரம் மதாம் துய்ப்ளேக்ஸ் விடத்திலே நானும் கூடயிருக்கச்சே ரங்கப்பன்பேரிலே நீ எப்படி. எல்லாம் சின்ன மனுஷர் பேச்சைக் கேட்டுக்கொண்டுவந்து நடத்துகிறதினாலே கும்பினி காரியம் தாவு வருமென்று சொல்லி பின்னையும் அகற்த அடுத்த சங்கதிகளையும் மதாம் துய்ப்ளேக்சுக்கு ஒறக்கச்சொன்னதுண்டு குவர்னதோருக்கும் சுருக்கமாய்ப் பேச்சு பேச்சாய் பேசுகிறயிடத்திலே சொன்னதுண்டு அவரும் ரங்கப்பிள்ளைபோலே காரியத்திலே சுருசுருப்பாய் பார்க்கத்தக்கனவர்களில்லை அவன்பேரிலே பரதிகள் பொறாமையினாலே சரி போனபடி எல்லாம் வந்து மதாமுடனே சொன்னதினாலே மதாமவர்களை விசுவாசித்து அவர்கள் சொல்லுகிறப்பேச்சை நம்புகிறாள். அதுகளெல்லாம் யெனக்குத்தெரியும் அப்படி இனிமேல் கேளாமல் பண்ணிபோடுகிறேனென்று சொன்னதுண்டு இப்போ ஒரு மனுஷர் பூர்வோத்திரபடியே நடந்தது யெல்லாம் இருபத்தைந்து நாளைக்கு முன் பாகத்தால் இவனாய் நடத்துகிறானென்று நன்றாய் சொன்னார்கள். அதின்பேரிலேதான் பெண்சாதியின்பேரிலே அவரும் கோபப்பண்ணதென்று சொல்லி துரை ரொம்ப தயவாக யிருக்கிறபடியினாலே ஒருத்தராலேயும் ஒன்றும் செய்யப்போகாதென்று சொல்லிக்கொண்டு கோயிலுக்குப் போனவர்களெல்லாம் வந்து சேர்ந்தார்கள். அப்பால் உச்சாகம் கூடவானபடியினாலே சகல ஜனங்களுக்கும் பண்டிகையைத்தானே யிருந்தது எப்போதும் சட்டமாய் போய் பூசை கேழ்க்கும்போது மூன்றுதரம் துப்பாக்கிச்சுட்டு

மூன்றுதரம் பீரங்கி சுட்டார்கள். அப்பால் வீட்டே வந்தார்கள் மறுபடி சமஸ்தமானபேரும் பண்டிகை, மதாமுக்கு உபசாரம் சொன்னார்கள். அவர்களையும் விருந்து சாப்பிடச் செய்தார்கள் அப்போ துரை அவர்களும் மகாச் சாகமாய் கப்பல் வந்த சந்தோஷம் அவரை சந்தோஷமாய்தானே அலங்கரிக்கத்தக்கதாக நானந்த கும்பலிலே நிற்க என்னைப் பார்த்து முசியே ஷேவாலியே தலைபேரை அறிவபாவென்று கேட்டார் இருபதுவருஷத்துக்கு முன்னே ஒருதரம் வந்தார் அவர் போட்டுக்கொண்டிருக்கிறது செம்மாவத்து என்கிற முத்திரை இரண்டு விறற்கடை அகலம் கருப்பு படையிலே போட்டுக்கொண்டிருந்தார். அசானபாகு அப்போ நாற்பது நாற்பத்தைந்து உண்டென்றுசொல்லி இப்போ அறுபது அறுபத்தஞ்சி வயது உண்டென்று சொன்னேன். அது மெய்தானென்று துரையவர்கள் மற்றுமுள்ள பேர்கள் கூட ஒத்துக்கொண்டு விஸ்தாரமாய் மவுன்சு வருது தென்றும் துரையவர்கள்சொல்லி அப்படி லோகாபிரமமாய் பேசிக்கொண்டும் காகிதம் வந்து இருந்ததினாலே சீர்மைசேதி என்னயிருக்குமோவென்று அதிலே தசுபுசாயிருந்துக்கொண்டு அப்படியுமிப்படியாக யிருந்தார் அப்படியிருக்க சந்தாசாயபு மகன் வந்தான்.

1748 ஆ ஜூன் மீ 25 உ ச்ரு விபவ ௵ ஆனி மீ 15 உ மங்களவாரம்.

இற்றனாள் காலத்தாலே துரையவர்கள் வீட்டுக்கு போனவிடத்திலே சாயங்காலம் ஆரைமணி யேழுமணிவேலைக்கு சென்னப்பட்டணத்திலே யிருந்துவந்த சீர்மைகாகிதங்களெல்லாம் படித்துப்பார்க்கிறதிலே இருக்கிறாரென்றும் இன்னும் உடுத்திக்கொள்ளவில்லையென்றும் சொன்னார்கள். அதின்பேரிலே வெகு வெள்ளைக்காரர் கும்பலாயிருந்தார்கள் அங்கே போனஉடனே அவனவனுக்கு வந்த காகிதங்களை படித்துப் பார்க்கிறதும் ஒருத்தருக்கொருத்தர் பேசிக்கொள்ளுகிறதும் சீர்மை சமாசாரங்கள் வந்த அதிசயமும் கேட்டாயா என்கிறவர்களும் இப்படியாக வெகு சந்தோஷத்தின்பேரிலே களரியாயிருக்கிற சாடைகளெல்லாம் பார்த்து என் மனதுக்கு வந்த சந்தோஷம் ஒரு மிதத்திலேயில்லை. அப்போது சுவாமியைப் பார்த்து மனதிலே வந்தனம்பண்ணி, யோசனைபண்ணினேன்

என்னவென்றால்: எப்போதும் ஆண்டவன் இந்த சந்தோஷ மாகும்படியே நடக்கத்தக்க தயவுபண்ணவேணும். இந்த பிரபுவுக்கு மேன்மேலும் கீர்த்திப் பிரதாபங்களெல்லாம் வந்து இவர்தானே யிருக்கவேணுமென்று பிரார்த்தித்தேன். அப்பால் முசியே லியார், முசியே தறசி, முசியே ரோபேர் முதலான வெள்ளைக்காரர் எத்தனை பேர் அங்கே யிருந்தார்களோ அத்தனை பேரும் எனக்கு வந்து ஆசாரம் பண்ணுகிறதும், பிரான்சுக்காரருக்கும் உமக்கும் நல்லகாலம் வந்தது என் கிறதும் கட்டி முத்தமிட்டுக்கொள்ள வருவதும் வந்து ஆசாரம் பண்ணுகிறவர்களுமாக யிருந்தது. அப்பால் முசியே கில்லியார் என்னைப் பார்த்து சொன்னது: முசியே ஷெவாலியே தல்பேர் என்கிறவர் மூப்பது கப்பலுக்கும் எசமானென்றும், முசியே மர்துசேக் பத்து கப்பலுக்கும், முசியே புளுவேந்த யென்கிறவன் சென்னப்பட்டணத்துக்கு இசாகதுக்குக் கொண்டுவந்து வெள் ளிப பெட்டியையும், நானூறு சொல்தாதுகளையும், இறக்கிப் போட்டு ஒரு கப்பலையும் வைத்துப்போட்டு மறுபடியும் ஒசந்து போனவர்கள் மற்ற கப்பல்களையும், சுலுப்பையும் வைத்துப் போட்டு கப்பல்காரர்கள் எங்கே யிருக்கிறார்களோ அங்கே போயிருக்கிறார்கள். அவர்களும் ஐந்தாறு நாளையிலே வருவார் கள் என்றும், எப்பவோ எந்த நேரமோ எந்த நாழிகையோ பத்து நாளோ பதினைந்து நாளோ தெரியாது. அந்த சயிக்கினை துரையவர்களுக்கு மாத்திரம் தெரியுமென்றும், மற்ற பேர் ஒருத்தருக்கும் தெரியாதென்றும், முசியே லபூர்தோனே ஓட்டி போனானென்றும் இருசாவுடைய உத்தாரம் லபூர்தோனேயித்த ஆரார் அனுகூலமாய் இருந்தார்களோ அவர்களையெல்லாம் பிடித்துக் காவல்பண்ணி அவர்களாஸ்தியெல்லாம் எடுத்துக் கும்பினீரை சேர்க்கச்சொல்லி எழுதி வந்ததென்றும், அதனாலே முசியே லவில்பாத முதலான பேர்களை அங்கே யிருந்தவர்களைக் காவல்பண்ணி அவர்களாஸ்தி பாஸ்தியெடுத்து எழுதி கும்பி னீர் சேர்த்தார்களென்றும், முசியே வில்பாதவை காவல்பண்ணி இவ்விடத்திற்கு அனுப்பினாரென்றும், இவ்விடத்திலேயும் முசியே லபூர்தோனேவுக்கு அனுகூலமாயிருந்தார்களாரோ அவர் களையும் காவல் வைத்து அவர்களாஸ்தி பாஸ்திகளையும் முத் திரிப்பார்களென்றும், ஒலாந்த கப்பல்களை எங்கே யிருந்தாலும் எத்தனைக் கண்டாலும் பிடிக்கச் சொல்லியும் இப்படியாக எழுதிவந்ததென்று சென்னப்பட்டணத்துக்கு ஐந்நூறு சொல்

த்தாதுகள் பெறம்பே வந்தார்களென்றும். அவர்களைத்தான் சென்னப்பட்டணத்திலே இறக்கிபோட்டு போனானென்றும், முசியே பாராதித்த ஷெவாலியே தெலேர்தர் தெமிலித்தேர் சேன்லூய் என்று பேருடைய முத்திரை வந்ததென்றும். இன்னும் என்ன என்ன அந்தரங்கம் எழுதி வைத்திருக்கிறதோ தெரியாது. இன்னமட்டுக்கும் அறிந்த சேதி இதுயென்று சொன்னார்கள். அதிலே ஒரு வெள்ளைக்காரன் வந்து முசியே துக்கேனை துரை யழைக்கிறாரென்று அழைத்தார்கள். அவன் போய் துரையைக் கண்டு பேசி வெளியே வந்த உடனே ஐந்தாறு பேர் வெள்ளைக்காரர் குதிரைக்கார சுவார்களை கூட அழைத்துக்கொண்டு வழுதாவூர் வாசற்படியே போனார்களென்று சொன்னார்கள் தனாலே ஒரு வெள்ளைக்காரனை இந்த ஓட்டம்பாட்டமேனவென்று கேட்டேன். முசியே தேசார்த்தேன் தன் தோட்டம் கவினியப்பிள்ளை தோட்டத்தண்டையிலே இருக்கிறது. அந்த தோட்டத்திற்குப் போயிருக்கிறானவன். அவனைக் கொண்டுபோய் காவல் வைத்து அவன் வீடு வாசலெல்லாம் முத்திரக்க முசியே மேரும், தெப்ரேயும் போனார்களென்று சொன்னான். பிறகு அரை நாழிகைக்கெல்லாம் அப்படி நடந்ததென்று கபுறு வந்தது. அந்தமட்டுக்கும் துரையண்டையிலே போய் கண்டு பேசுகிறதற்கு கூடாமல் போனபடியினாலே பனிரெண்டு மணி மட்டுக்கும் பாக்கு கிடங்கிலேயிருந்து அமாவாசை ஆனபடியினாலே வீட்டுக்குப்போய் ஸ்நானம்பண்ணி சாப்பிட்டு பாக்குப் போட்டுக்கொண்டு படுத்துக்கொண்டு அரைநாழிகை மட்டுக்கும் நித்திரைப்போனேன். அதிலே துரை அழைக்கிறாரென்று வந்து அழைத்தார்களென்று வந்துள்முப்பி கபுறுசொன்னமாத்திரத்திலே அங்கேயிருந்து துரைவீட்டுக்கு வந்த உடனே சென்னப்பட்டணத்துப் பணம் இங்கே வந்து ரூபா வெட்டு விழுந்து வர பனிரெண்டு நாள் பதிமூன்று நாள் செல்லும். சம்பளம் ஆறுநாள் இருக்கிறது ஆனபடியினாலே வர்த்தகரை சுருக்குபண்ணி அருணாசலத்துக்கு யெழுதியனுப்பி பணம் சம்பளத்துக்கு உதவதக்கதாக அழைப்பிக்க வேணுமென்று கப்பல் வந்ததென்று அலசியமாய் இருக்கப்போறார்கள் என்றும் குண்டூரிபாலிசெட்டி சென்னப்பட்டணத்துக்கு போயிருக்கிறவனுக்கும் யெழுதியனுப்பென்றும் முசியே லடுர்நோனே போவிளங்கள் துரையிலே யிறங்கி இருக்கிறான். அவனை யடித்துவர மனுஷரை

அனுப்பியிருக்கிறதென்றும் அவனுக்கும் ஒத்தாசையா யிருந்தவர்களெல்லாரையும் பிடித்துக் காவல் பண்ணி அவர் களாஸ்திபாஸ்திகளெல்லாம் யெடுத்து கும்பினீரிலே போட்டுக் கொள்ளச் சொல்லி மினிஸ்தர்கள் யெழுதினார்களென்று துலுக்கருக்கும் நமக்கும் யின்னம் சண்டையாயிருக்கிறதாய் யோசனைப் பண்ணிக்கொண்டு அவர்களுடைய சிநேகம் வைக்க வேணுமே யல்லாமல் அவர்கள் விருத்துவம் ஆகாது. இரண்டு லக்ஷம் வராகனுகிலும் கொடுத்து சமாதானம் பண்ணிக்கொள்ளச் சொல்லி எழுதிவந்தது. நாம் கிடங்கிலே விற்காமல் அடவாய் கிடந்த திறுசுகளை பதினையாயிரம் பதினு யிரம் வராகனுக்கு உண்டு கொடுத்ததென்று சொன்னார். அதற்கு நான் விற்கவேணுமென்றால்: இந்த ராச்சியத்திலே ஐயாயிரம் ஆராயிரம் வராகனுக்கும் கொள்ளார்கள். அப்படிபட்டது ரெட்டிப்பு விலை போட்டு யெழுதியும் சகல சிலவுள்பட எண்பதினாயிரம் ரூபாய் மட்டுக்கும் உண்டென்று சொன்னதற்கு மெய்தானென்று சொல்லி இன்னும் சிறிது விசேஷமுண்டு சாவகாசமாய் சொல்லுகிறேனென்று சொல்லி நெல் ஐந்நூறு கரிசைமட்டுக்கும் வாங்கவேணும். வெகு ஜனங் கள் வருகிறமட்டுக்கும் இதுகளுக்குயெல்லாம் சரணசாமி பண்ணி தீரவேணும் கோதும்மை ஆயிரம்பல்லா மட்டுக்கும் வாங்கவேணும். துலுக்கக்காராமணி பெரும்பயறு கப்பல்கார ருக்கு கொடுக்கிறது உண்டே அதுவும் விசேஷித்து வாங்க வேணுமென்று சொன்னார். நல்லதய்யா கோதும்மை விலை மெத்த ஒசந்தியாச்சுதே அந்த விலைக்கு வாங்கினால் வெகு பணம் செல்லுமேயென்று சொன்னதற்கு மூன் விலைக்கு சவுக் கையாக இருக்கவில்லையா என்று கேட்டார். இல்லையென்று சொன்னேன்; இப்போது இருக்கிற விலை யெழுது அமைப்பியு மென்று சொன்னார் நல்லதென்று சொன்னேன். நீங்கள் முசியே லபூர்தோனே அந்த துறையிலே இறங்கினதாய் மினிஸ்தர்களுத் தாரும்படிக்கு பிடிக்கப்போனதாய் சொன்னீர்கள் ஓடிப் போனதாய் நான் கேழ்விப்பட்டேன் என்று சொன்னதுக்கு மினிஸ்தர்களெழுதின காகிதத்திலேயும் கும்பினியார் எழுதிய காயிதத்திலேயும் அப்படித்தானே எழுதியிருக்கிறது. பர்தி குமிலராய் எனக்கவர்கள் யெழுதின காகிதத்திலே அந்த துறையிலே பொர்த்துகல் கப்பல்களிலிருந்ததாகவும் அந்த கப்

ப்பின்பேரிலே ஏர். விசுபோனுகிய பொர்துகல் ராஜாவுக்கு ராசதானிய பட்டணமாகிய லிசுபோவுக்கு போய்விட்டார் யென்று யெழுதிவந்தது யென்றுச்சொன்னுர். அப்போ உடுப்புக் கொண்டுவரச் சொன்னவர் மறுபடி காம்பிருவிலே போறவர் சென்னப்பட்டணத்துக்கு பணம் அய்யாயிரம் வராகன் விழுக் காடுஇந்தமாதமுதல் அனுப்பச்சொல்லியிருந்தேனே இப்போது அங்கே திரண்ட பணம் இருக்கிறது; அவ்விடத்துக்கு பணம் அனுப்பதேவையில்லை யென்று சொன்னுர். நல்லதென்று ரும்பி னீர் வர்த்தகருக்கு சொல்லுகிறேனென்று சொல்லிவிட்டு புரப் படும்போது இப்போ முசியே துப்புவா முசியே லவில்பாது உடைய பொறக்குராத்தேர் ஆனபடியினலே முசியே துப்புவா வண்டைக்கு நானும், முசியே மேரும், தெம்ரேயும் போய் பணம் காசு உண்டானதுயெல்லாம் காகித பத்திரங்கள் சமஸ்தமும் ராசாவுடைய பொறக்குராத்தேராகவும், பண்ணப்போரோ மென்று சொன்னதுக்கு அவர்கள் செய்ததெல்லாம் புக்கு துக்கனுப்போலே சுவாமி ஆக்கினையிட்டாரென்று சொன் னேன் அதற்கு மெய்தானென்று சொனனுர். அப்பால் நால் பாக்கு கிடங்குக்கு வந்து லாலாபேட்டைக்கு அருணுசல செட்டிக்கு ஒரு காகிதமும், சென்னப்பட்டணத்துக்கு ஒரு காகிதமும் குண்டூர் பாவி செட்டிக்கும் எழுதி சென்னப்பட்டணத்துக் காகிதம் தபாலுக்கனுப்பி லாலா பேட்டைக்கு இரண்டுபேரை பயணம் பண்ணி சுருக்கிலே போகதக்கதாக அனுப்பிவிட்டுப் போட்டு வெளியே வந்து நிற்கும்போது முசியே துப்புவா வீட்டுக்குப் போய் அவ்விடத் திலே முசியே வில்போகவை சேர்ந்த சாகிதங்களையெல்லாம் வாங்கி முசியே மேர், தேம்பிதுரயும் பண்ணி அனுப்பிவிட்டு தாம் சுவாரிப்போய் நம்முடைய கிடங்கின் வழியாய் வீட்டுக்குப் போரவர் என்னையழைத்து வீட்டுக்கு வரச் சொன்னுர், நல்ல தென்று போனவிடத்திலே என் நல்ல அதிர்ஷ்டத்தைப் பார்த் தாயாவென்று அழைத்துக்கொண்டுபோய் தாமிருந்து எழுது கிற அறையிலே மேலே சுண்ணும்பு பூசியிருக்கிறது படயாய் நாலுமுழ அகலம் நீளம் சவுககமாய்ப் பெந்து இவர்கள் உட் கார்ந்துயிருந்த நாற்காலி, மேசை, பலகை மேலே விழுந்து யிருககுறதை காண்பித்து சொன்னது: நீ என்னுடனே பேசி யிருந்துபோனதும் நான் மறுபடி போய் உட்கார்ந்து எழுதிக் கொண்டிருந்து எழுந்திருந்து நாலடியப்பாலே போய் உடுத்திக்

கொள்ள கபாயாக் கொண்டுவரச் சொன்னேன். கபாயாக் வந்துகொண்டுகொடுத்தான் போட்டுக்கொண்டவுடனே அந்த சுண்ணாம்புடாடை விழுந்தது இது என் தலைமேலேவிழுந்தால் செத்துப்போவேன் ஆனால் சுவாமி காத்தாரென்று சொன்னார். அது பொய்யா நீர் இந்த ஜனங்களைக் காப்பாத்தி ரக்ஷிக்கிறது பரம புண்ணியமானது இந்த சண்டைக் காலத்திலே இந்துஸ்தானவிலே பிரான்சு ராசாவுக்கு வருகிற கீர்த்தி பிறதாபம் உம்மை தொட்டுதான் வந்தது போக இன்னம் வரவேண்டியது அனேக மாருக்கிறது ஆகையினாலே தப்பினாயே யல்லாமல் மற்றபடி யென்னயிருக்கிறது என்று உபசாரமாய் சொன்னேன். இதிலே முசியே புராத்து வந்தவனுடனே பேசிக்கொண்டு அப்பாலே போனப்போலே நான் புறப்பட்டு பாக்கு கிடங்குக்கு வந்தேன் மறுபடி அழைத்தனுப்பிவிட்டு ஆசாரப்பன் பித்திசாம் வருதென்று சொன்னையே எங்கே யென்று கேட்டார். சீர்மை காகிதங்கள் வந்து அந்த அலுவலிலே இருக்கிறீரென்று யிருந்தேன் இப்போ வேணுமென்றால் அழைப்பிக்கிறேன் யென்று சொல்ல சூரப்பமுதலியை அழைத்துவரச்சொல்லி பித்திசாமை கொண்டுபோய் கொடுக்கச்சொன்னேன். அந்தபடிக்கு ஏழு மணிக்கு கொண்டுபோய் கொடுத்தவுடனே என்னையும் லஜாரையும் அழையுமென்று சொன்னார். அந்தபடிக்கு நாங்கள் இரண்டு பேரும் போனோம் மலையப்பமுதலி சூரப்பமுதலியும் வந்திருந்தார்கள் துரை அவர்களைக்கேட்டு தயிரியநாதனைக் கொண்டுபோய் சாவடியிலே காவல்வைத்து அப்பால் என்னை யழைத்து ஆசாரப்பன் பெண்சாதி என்ன சொல்லுகிறாளது கேட்டுவந்து சொல்லென்றார். நல்லதென்று நானும்போய் அந்தப் பெண்ணைக் கேட்டு நடந்ததுக்கு ஒரு காகிதத்திலே யெழுதி என்னோடே கூட வந்தவர்கள் கையெழுத்தெல்லாம் போட்டு வைத்து கட்டிவிட்டேன்.

1748 ஆ ஜூன் மீ 26 உக்கு விபவ ௵ ஆனி மீ 16 உ புதவாரம்.

மைற்றனுள் காலத்தாலே துரையவர்கள் வீட்டிற்குப் போனவிடத்திலே துரையவர்கள் காகிதம் பார்த்துக்கொண்டு அலுவலின்பேரிலே இருந்தபடியினாலே நேற்று இராத்திரி ஆசாரப்பமுதலி பெண்சாதியண்டைக்குப் போய் அவர்கள்

வாய்மொழிகேட்டதும் நடந்ததும் சவிஸ்தாரமாய் சொன்னேன். அவர் காகிதம் படிக்கிற சுறுக்கிலே பின்னை விசாரிப்போமென்று சொல்லி அப்துலயிமானையும் சேக்கு அசேனையும் அழைத்துவரச்சொல்லியும் குண்டுதாழையிலே இருக்கிற சிப்பாய்களையெல்லாரையும் வரச்சொல்லியும் அப்துலாயிமான் தயானுத்து சிப்பாய்களையெல்லாம் வரச்சொல்லியும் குதிரைகவர்கள் வெள்ளைக்காரர் துலுக்கர் யெல்லாரையும் முஸ்தீது பண்ணச்சொல்லியும் ஊரிலே யிருக்கிற குதிரைகள் அகப்பட்டதெல்லாம் பிடித்து வரச்சொல்லியும் சொன்னர். இந்த சாடைப் பார்த்தால் கப்பல் வந்ததென்று தேவனும்பட்டணம் சவாரிபோக பண்ணவேணுமென்றும் சொன்னபடிக்கு யெத்தனம் பண்ணுகிறரென்றும் யோசனைபண்ணிக்கொண்டு பாக்குக்கிடங்குக்குவந்து அவாயசாயப்பைக் கண்டுபேசிக்கொண்டிருக்கும்போது அவர் தங்களுக்கு நிசாமல் முலக்குலே யிருந்து யெழுதிவந்ததாய் சொன்னவயணம்: நிசாவமர்கள் செத்துப்போனது பலவந்தமாய் விஷம் வாங்கிக்கொண்டு செத்ததாகவும் அப்படி பலவந்தமாய் சாவானேன் என்றல் டில்லியிலே காசுத்திகான் என்று நிசாமுடைய மூத்த குமாரன் பாற்சாவண்டையிலே இருக்கிறவனை இப்போ அகம்மது பாதுஷா டில்லியிலே தகத்திலே உட்கார்ந்தார்போலே காசத்தின்கானை அழைப்பித்து நீ பட்டாணியாருக்கு உளவாயிருந்தாயென்று அவர் புத்திர மாத்திரர்களுடனே வாளாலே அருப்பித்துப் போட்டாரென்றும், பின்னையும் மூன்று நாலு அமீர்களையும் பட்டாணியருக்கு உளவாயிருந்தாரென்று வாளாலே அருப்பித்துப் போட்டு நிசாமுடைய உத்தியோகம் கமர்த்திக்கான் லாகூர் சண்டையிலே விழுந்து போனவனை அவன் மகனுக்குக் கொடுத்ததாகவும், அந்த சேதி நிசாமுக்கு எழுதிவந்ததே தன் மகனுக்குப் புத்திரர்களுடனே இத்தனை ஆக்கினை வருமா இப்படிப்பட்ட சொல் கேட்டுக்கொண்டு இனிமேல் எத்தனை நாள் பூமியிலே யிருக்கப் போகிறோம். நாம் இருந்தோமென யாருக்கு இந்தச் சொல் கேட்டுக்கொண்டிருக்கிறது தப்பிதமென்றும், நமக்கு பெரிய வயதாச்சுது இப்பவோ இரண்டு நாழிகையோ ஜீவன் போகப்போகிறதென்று விஷபானம்பண்ணி கச்சேரியிலே யிருந்து நாசற்சங்கு புத்திமதி சொல்லிப்போட்டு, திரவிய மிருக்கிறதே எல்லாமவன் வசம் ஒப்புவித்து விட்டுப்போய் படுத்துக்கொண்டதே செத்துப்

போன பிற்பாடு எல்லாமிருந்ததாகவும், அப்பாலே எல்லாரும் வந்துக்கொண்டுபோயடைக்கிப் போட்டார்களென்று நாசற் சங்கு மெத்த காபிறுபட்டு யிருக்கிறார்களென்றும், எப்படி பார்சாவைக் கூட வைக்கவும், தள்ளிப்போடவும் இராஜாவுக்கு எதிரியாயிருந்து இருபது சுபாவை முழுக்கப் பிடித்தவன் சுவாமி சித்தம் தப்பின வேளையிலே மகனையும், மகன் சம்சாரத்தையும் வாளாலே அருப்பித்தான். பார்சா இப்படிப் பட்ட அபகீர்த்தி வரலாமாயென்று யோசனைபண்ணினானே யல்லாமல் நல்லது ஆர் போனாலென்ன ஆர் இருந்தாலென்ன, நாம் சீவனுடனிருக்கும்போது பதிலுக்குப் பதில் செய்யவேணுமென்று நினையாமல் வியாதி விசேஷங் கேட்டு லோகத்திலே இருப்பார்களாவென்றே மனதுக்கு தோன்றி பலவந்தமாய் விஷத்தைச் சாப்பிட்டு சீவனை விட வந்தது சுவாமி சித்தம். அப்படி யிருக்கும்போது எப்படிப்பட்ட பேர் ஆனாலும் விதிக்குத் தப்பித்துக்கொள்ள கூடுமா, விதிவிகிதம் புத்தியனுசாரி என்கிற நியாயம் தப்புமாவென்று லோகத்துக்குள்ளே திருஷ்டாந்திரமாய் இருக்கிறதை ஒருத்தராலே தள்ளப்போமா அந்தப்படிக்கு நடந்தேரிப் போனதென்று மிருத்திசல்விக்கான் வேலூரிலே சிறிது குதிரை ராணுவம் சேர்த்து நபாபு அன்வர்த்திகான் முதலானவர்கள் சரிக்கட்டிதான் ஆற்காடுசுபா கட்டிக்கொள்ள வேணுமென்று முஸ்தீப்பு பண்ணுகிறதாயும், அந்தச்சேதி அன்வர்த்திகான் கேட்டு குதிரை ராணுவங்கள் வைக்கிறதாக ஐயாயிரம் குதிரை வைக்கச் சொன்னதாகவும், செஞ்சியிலே வந்திருக்கிறதாகவும் யோசனைபண்ணினதின் பேரிலே ஆற்காடுயெல்லாம் அதல செதலப்பட்டு வலசை வாங்குகிறதாயிருக்கிறதென்று கபுறு எழுதி வந்தது. மற்றபடி பகலுக்கு மேலாய் உடம்பு பளுவாயிருந்தபடியினாலே வெளியே புறப்படவில்லை. துரையும் சின்னதுரையும் இருந்து அழைத்தனுப்பினார்கள். சரீரம் லகுவில்லையென்று சொல்லி அனுப்பினதின் பேரிலே கங்கிப்பாட்டி விருசெட்டியை சின்ன துரை அழைத்தனுப்பி சேலத்து லாங்குலாத்து முழம் 25ம் கொடியும் சென்னப்பநாய்க்கன் பாளையம் ஒன்பது கால இருபத்தைந்து கோடியும், அழைப்பிக்கச்சொல்லி எனக்குச் சொன்னதாய் சொன்னதாகவும், அந்தச் சேதி வீருசெட்டி வந்து சொல்லி இதுக்கும் பணம் கும்பினீர் வர்த்தகர் கையில் வாங்கிக்கொள்கிறதும், கோட்டைக் கும்பினீர் வர்த்தகர் மை யெழுதிச்

கொள்ளுகிறதுமாய் சின்ன துரை சொன்னதாய்ச் சொன்னான். நல்லது அப்படித்தானே ஆகுதென்று சொல்லிப் போகச் சொன்னதற்கு மறுபடியும், சின்ன துரை நாளைக் காலத்தாலே என்னைக் கோட்டைக்கு வரச்சொன்னாரென்று சொன்னான். நல்லது போய் கண்டு பேசுகிறேனென்றுச் சொன்னேன். மற்றபடி இராத்திரி அரைசேவி மழை மட்டுக்கும் பேய்ந்தது வேறே விந்தைகளில்லை.

1748 ஆ ஜுன் மீ 27 உக்கு விபவ ஹூ ஆனி மீ 17 உ குருவாரம்.

அப்பால் ஐந்தரை மணி வேளைக்கு வெள்ளைக்காரர் குதிரை சுவார்கள் துலுக்கர் குதிரை சுவார்கள் (அப்துலாயிமான் துலுக்கு) சென்னப்பட்டணத்து வசற்படியிலே புறப்பட்டு முத்திரிசைபிள்ளை சாவடியிலே இறங்கியிருக்கிற தண்டை போய் சேர்ந்தார்கள். அங்கேயிருந்து ராத்திரியே தேவனும் பட்டணத்தின்பேரிலே மூன்று பிரிவாய் போய் இறங்கினால், சென்னப்பட்டணத்தண்டையிலே இருக்கிற கப்பல்காரரை அழைப்பிக்கிற சாடை ஒன்றும், எப்படி லதவானால் பட்டாலே பர்போமென்கிற சாடையாய்ப் போனதாய் தோற்றுது பின்னை ஒரு சாடை முசியே பாரதியையும் இவ்விடத்திற்கு அழைக்கவேணுமே அதற்கு இவர்கள் ஊரின்பேரிலே கவிஞ்சால் உள்ளேயிருக்கிறவர்களுக்கு வெளியே புறப்பட கூடாதே அந்த சந்துகட்டிலே முசியே பாரதி ஒரு யோக்கியமுமில்லாமல் வருவானென்றும்போலேயும் எடுத்து அனுப்பினதாய்த் தோணுது மற்றபடிக்கு வேறே ஒரு அதிசயமும் காணோம். எழுகத்தக்கினது இராத்திரி எட்டு மணிக்கு அழைத்தனுப்பி பணம் எப்போ வருமென்று கேட்டார். நாளைநன்றைக்கு லாலாபேட்டையிலிருந்து வந்து சேருமென்று சொன்னேன். அப்பால் கூடலூரிலே பீரங்கி சப்தம் கேட்டது. யாரோ செத்துப்போனதாய் யோசனைபண்ணினேன்; துரைகளுமப்படி தான் யோசனைபண்ணினார்கள். மற்றபடி மதாம் துய்ப்ளேக்ஸ் தேவனும்பட்டணம் பாளையக்காரன் என்று பேரிட்டுப் பரங்கிப்பேட்டையிலிருந்து வந்த ஒரு பள்ளியை வைத்துக் கொண்டிருந்தவனுக்கு ஒரு குதிரை கொடுத்து ஆன்முழு அங்கிப்போட்டு சேவகரையும், நொண்டி சவரிமுத்து சேருவைச்

காரனையும், முத்து சேருவைக்காரனையும் கூடக்கூட்டி சமஸ்த மர்மத்துக்கும் பள்ளி அப்பு எழுத்துக்காரர் பயலே அழைப்பித்து அவன் மார்பத்தில் அஞ்சல் வைத்து கபுறு திட்டம் பண்ணி சாக அனுப்பினார்கள். இது என்னமாய் நடக்கிறதோ இனிமேல் அறிந்து எழுதுகிறேன்.

*1748* ஆ ஜூன் மீ 28 உ க்ஷ விபவ ஸு ஆனி மீ 18 உ சுக்கிரவாரம்.

மைற்றனுள் காலத்தாலே துரையவர்கள் வீட்டுக்குபோன விடத்திலே நேத்துபோன தாஷ்மான்சேதி ஒன்றும் வரவில்லையென்று துரையவர்கள்கேட்டார்கள். இனிமேல் வருமென்று சொன்னேன் அப்பால் அந்த ஞாபகத்திலே யிருந்தார். நான் பாக்கு கிடங்குக்குவந்து அவ்விடத்திலிருந்து பணிரெண்டு மணி வேளைக்கு வீட்டுக்கு வந்தேன். பரசாராமன் சபத்தாராயிருந்த பங்காருயாச்சனுய்க்கர் ஜேஷ்ட சுத்த பஞ்சமி சனிவாரம் நான் காலம் பண்ணிப்போனுரென்று ஆர்க்காட்டிலேயிருந்து யெழுதிவந்த பிருந்தியங்களுக்கு சற்றுட்டதுரையெண்பித்துக்கொண்டு முகிலாவிலே வெகு மேன்பாடு எண்ணத்துடனே ராய மன்னவா னென்பித்துக்கொண்டு கற்றுட்டக பிறபு நல்ல வித்துவானென்று சொல்லத்தக்கதாக நாலு சாஸ்திரமும் படித்து விவேகி என தக்கதாகவும் சவுரிய பராக்கிரமங்களுண்டானவனென்றும் சகல ஜனங்களும் சொல்லவும் பயப்படவும் துலுக்கர் நடுங்கும் நிசாம்பாத்ஷா பக்கத்திலே கூட மகா எண்ணத்துடனே யிருந்து முன் வெகு பணம் கடன்களையும். தீர்த்தவன் மாஷத்துடனே இருந்து நபர்புக்கு தாவெத்தார் யென்றுகூட எண்ணத்தக்கதாக யெண்பித்துக்கொண்டு நபாபுக்குகூட யிவர் பயமிருக்கத்தக்கதாக நடபித்துக்கொண்டு வந்து அவர் காலத்தை தள்ளிப்போட்டு பரமபதத்தை யெழுந்தருளினார். அப்பால் அவருக்கு இரண்டுபிள்ளைகள் மூத்தவன் சாது இளையவன் துஷ்டன் எப்போதும் இளையவனுக்கும் மூத்தவனுக்கும் திச்சாட்டமாத்திரமுமில்லாமல் யிளையவனுக்கு தகப்பன்கூட பயப்படவும் தகப்பனுக்கு விரோதமாய் நடந்துக்கொண்டான் அதின்பேரிலே தகப்பனுருக்கு யிளையப்பிள்ளையாண்டானை தொட்டு சமஸ்தானத்துக்கும் போராட்டமெங்கே

வருதோ வென்று யிருந்தான் அப்படி அவர் காலமிருந்து ஒரு விதமாய் தாண்டிப்போனது இனிமேல் இளையவனுக்கும் மூத்தவனுக்கும் யென்னமாய் நடக்குதோ சமஸ்தானத்துக்கு இரண்டுபேர் போட்டியினாலே என்ன விபரீதம் நடக்குதோ அல்லது இவர்கள் யோகம் நன்றாயிருந்து ஒன்றாயிருந்து பிள்ளையும் பிரபலமாய் இருக்க யிருக்குதோ அறிய வேண்டியது யானால் லட்சுமண நாய்க்கன சுங்குவாருக்கு சென்னப்பட்டணம் ஷத்தனக்கு கடு அருபதினாயிரம் வராகன் மட்டுக்கும் கடன்வரவேணும் அந்த வராகனை முன் கேட்டபோது வராகனுக்கு ஒரு ரூபாய் கொடுக்கிறேனென்று சொன்னான். மத்தியஸ்தம் பேசின சுமபுதாசு முதலான பேர்கள் அனைவரும் அரைவிராகன் தரவேணுமென்று சொன்னார்கள். அதற்கு இவர்கள் சம்மதியில்லையென்று சொன்னார் அப்படியிருந்தது அவர்காலமாய் போனார் பிள்ளைகளதுவும் கொடுக்கிறதில்லை என்கிறார்களே றிண மென்ன வைக்க வேணும் எவ்வளவர்கிலும் கொடுத்தோ மெண்பிச்சு தீர்த்து போடுவோமென்று யோசனை பண்ணுகிறார்களே அறிய வேண்டியது மற்றப்படி விசேஷ சேதிகளாய் யெழுதத்தக்கது காணோம்.

1948 ஆ ஜுன் மீ 29 உக்கு விபவ ஹு ஆனி மீ 19உ சனிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரைவீட்டுக்குப் போன விடத்திலே துரையவர்கள் வியாழக்கிழமை இராத்திரி போய் விழுகிறதற்குல குவில்லாமல் வெள்ளிக்கிழமை இராத்திரி விழுகிறோமென்று எழுதியனுப்பிவிட்டார்கள நேற்று இராத்திரி போய் விழுவார்கள் என்று சொல்லிக்கொண்டிருக்கும் போது மதாம் துப்ளேக்கு உள்ளே யிருந்து அழைக்கிறானென்று வெள்ளாட்டி வந்து அழைத்தால் அதனபேரிலே உள்ளே போய் பெண்சாதியுடனே சேசியிருந்து மறுபடி வெளியிலே சாலையிலே வந்து நம்முடையவர்கள் நேற்று ராத்திரிபோனவர்கள் கூடலூர் பிடிச்சுகொண்டார்களாம். செவுரோடு விழுந்தார்கள். தனபேரிலே உள்ளே சிறுது ராணுவுகள் கறுனட்டகஸ்தானிருந்தார்கள் அவர்களையெல்லாம வெட்டினாகளாம் கொஞ்ச நஞ்சம் பேரிருந்தவர்கள் கதவை திறந்து ஓடச்சே

வெளியிலே நம்முடையவர்கள் பிடித்துக்கொண்டு சரி கட்டிபபோட்டதாகவும் சிறிதுபேர் தப்பி ஓடிப்போனதாகவும் இப்படியாக ஒருத்தன் வந்து இப்போதான் மதாமுடனே சொன்னான் ஆனால் வெகுபேர்கள் செத்துப்போயிருப்பார்கள் வெகு சனங்களிருக்குமென்று சொலவனர் அதிலே மதாம் துப்ளேக்சு இந்த காரியத்தின்பேரிலே யிருந்தபடியினாலே சேம்வெத்துரு பண்டிகையாயிருந்து மதாமுக்கு தண்டுக்குச்சேவகு காரரை அனுப்புகிறதும் சமாசார மழைப்பிக்கிறதும் இந்த அலுவலிலே இருந்தானேயல்லாமல் கோவிலுக்கு போறதற்கு கூடயிலலே அந்த சமயத்தில் நடுசாலையில்வந்தாப்போலே முசியே துப்ளேக்சு அவளிடமாய்போய் என்னவென்றுகேட்டார். இன்னுசியை சீக்கிரமத்துக்குப் போகச் சொல்லவேணும் அந்த பவுன்சு கூடலூர்போய் சேர்ந்தபடியினாலே முசியே தேலாதூர் அவர்களுக்குப்பின் பெலனாக போகச்சொல்லவேணுமென்று வந்துச்சொன்னான் அந்தக்ஷணமே இவனுசியும் ரெண்டொரு சட்டைக்காரர் குதிரை விசாரிப்பின்பேரிலே யிருக்கிறவன் அவனையழைத்து மதாம் துப்ளேக்சு வயணமெல்லாம் சொல்லி குதிரை ஆயாசப்படுமென்று பாராமல் ஓட்டமாய் போய் முசேல்தெலா தூருக்குச்சொல்லி அவன் மரிதி கிவ்னுபுறம் பாரிசமாயிருக்கிறவனை திருவந்திபுரம் மார்க்கமாய் மேயவர்களுக்குமத்தசுத்தாய்கூடலூரிலேபோய் சேரச்சொல்லுமென்று சொல்லிப்போகச்சொல்லுமபோது காலிலே முள்ளுகட்டு துண்டு அந்த முள்ளு கூடலூரிலே கூட்டினால் குதிரை சுருக்காய் போமென்று வயணம்சொல்லும்போது துரையவர்களுக்கு பெண்சாதி யித்தனை நிர்வாகம் பண்ணிக்கொண்டு தமக்கு அலுவலில்லாமல் பண்ணி நடப்பித்துக்கொண்டு போறானே யென்கிற உச்சாகம் ஒரு பாரிசம்தோற்ற மற்றொருபாரிசம் தன் பெண்சாதியைத் தொட்டு கூடலூர்தேவனும் பட்டணம் பிடச்சேமெனகிறது சீர்மையிலே பிராஞ்சுராசா முதலான ராசாக்கள் யெல்லாம் கொண்டாடலும் இந்தியாவிலே இருக்கப்பட்ட துலுக்கர் முதலாவ நபாபுகள் அமீர்கள் ராசாமுதலா கியபேர்கள் முன் செய்னப்பட்டணப் முசியே லபுர்தோன்னே பிடித்துப்போட்டுப்போக யிவரைக்கொண்டாட கிடைச்சாப் போலே இப்போதன் பெண்சாதியைக் கொண்டாடுவார்கள் என்கிற உசசாகம் சரீரம் பூரிக்கப்பண்ண யிந்தமட்டிலே இவன்

யோசனையின்பேரிலே யல்லோ கூடலூர் சுருயசமாய் கைவச மாச்சுதென்று சந்தோஷம் தன்னண்டைக்கு வருகிற வெள்ளைக்காரருடனே யெல்லாம் கூடலூர் நம்முடையவர்கள் பிடித்ததும் நடந்ததும் என்னுடனே சொன்னபடிக்கே சொல்லிக் கொண்டு உச்சாகமாயிருக்கும்போது இன்னூர் குதிரை ஏரிக் கொண்டு சீக்கிறமாய்ப் போகச்சொல்லிபோட்டு தானும் பத்து மணி வேளைக்கு கோயிலுக்குப் போனுள் கோயிலுக்குள் போய் வந்ததற்குள்ளே துரையவர்கள் என்னண்டை வந்து கூடரிலே வந்தார்கள். பணமெல்லாமப்பாலே தாண்டி வைத்து யிருப்பார்களே சரக்குகளிருக்குமோ அதுவும் தாண்டி வைத்துயிருக்கிறுர்களோ தெரியாதென்றும் வந்த கபுறு சொன்னவன் அம்மாள் காம்பிருவிலே இருக்கிறுனே அவனை அழைக்கப்போகாவென்று அவனண்டைக்கு தாம் போனதும் அவனை நடந்த பூர்வோத்திரங் கேட்டு சந்தோஷமாய் வாருகிறது. இப்படியிருந்தார் என்னை வந்து கேழ்க்கும் போது அவர் சொல்லுகிறவார்த்தை சாடையைத்தானே பிடித்து இப்படி நடக்கும் அப்படி நடக்கும். அவர் மனேகானுசாரம் சொல்லிப்போட்டு அம்மாளிடத்திலே போன சமயப் பார்த்து நான்பாக்குகிடங்கு வந்தபிற்பாடு இன்னுசு என்கிற சட்டைக்காரபிள்ளையாண்டானை மூசே தேலாதூரண்டைக்கநுப்பினுர்களே அவன் பாதிவழி போரதுக்குள்ளே எதிரேசேதி யென்ன வந்ததென்னவென்றுல்: நேற்று சுக்கிரவாரம் இராத்திரி எட்டு மணி வேளைக்கு அவ்விடத்திலிருந்து வந்த வேகுக்காரன் கொண்டுபோய் கூடலூர் பரங்கிப்பேட்டை வழியாய் கொண்டு போய்விட்டதாகவும் அங்கே ஏணிகளை சாத்திரினுப்போலேயும் அவர்கள் யிவர்கள் வருகிறசேதி அதற்கு முன்னே அறிந்திருந்து ஒத்து யிருந்து வெளிக்கு மனுஷரேயில்லே யென்றும் யெண்பித்து வரிசையாய் நெரித்துவிட்டாரப்போலேயும் எல்லாரும் படுகிடயாய் படுத்துக்கொண்டாற்போலே சிறுபெருக்கு காயங்கள் பட்டமாத்திரத்திலே யெல்லாரும் நின்றது நின்ற வாக்கிலே போட்டுவிட்டு ஆயுதங்களை அவனவனெரிந்துப் போட்டு ஓடிப்போனுர்கள். ஒருத்தன் போன வழி ஒருத்தனுக்கு தெரியாது இந்தப்படிக்கு சின்னுபின்னமாய்த் தெரிச்சிதிருவீதி, பண்ணுருட்டி, திருவேந்திபுரம் இந்த பிராந்தியங்களுக்கு ஓடிப் போய் விட்டார்கள். உள்ளே யிருக்குறவர்கள் இப்படி ஓடிப் போறசாடையறிந்தால் கதவைத்திறந்து வெளியே புறப்பட்டு

னேரிச்சால் ஒருத்தர் தப்புகிறதில்லை. சறுவசங்காரமரணமாம். அப்படி நடக்கிறதற்கு சுவாமிக்கு சித்தமில்லாதபடியினாலே முன்னுக்கு இவர்களுக்கு நல்ல காலமிருக்கிறபடியினாலேயும் அவர்களுக்கு வெளியே புறப்பட்டால்மோசமென்று உள்ளேத் தானேயிருந்து அலங்கத்தின் பேரிலே ஏறி பின்னையும் சுட்டார்கள். வழி விவரம் தெரியாமல் அங்கேத்தானே நாலைந்து நாழிகை சுத்தி சுத்தி அப்பாலே புறப்பட்டுபோன விடம் வந்தவிடம் தெரியாமல்போய்விட்டார்களென்றும் சிறுதுபேர் முத்திரிசைபிள்ளை சாவடி அண்டையிலே இறங்கியிருக்கிற தண்டை வந்து சேர்ந்தார்களென்றும் சேதிக்கேட்டு இன்னறியும் வந்து துரைக்குக் கபுறு சொன்னான், எனக்கும் அவரவர் தண்டிலே கூடப்போயிருந்து அவஸ்தைப்பட்டவர்கள் வந்து சொன்னார்கள். அப்பால் பாக்கு கிடங்கிலேயிருந்து வீட்டுக்கு வந்தேன். அப்பால் சாயங்காலம் காரைக்கால் தபாலுக்குப் போன கும்பினீர் சேவகர் செல்லப்பன், மயிலப்பன் ரெண்டு பேரும் வந்து பழைய சென்னப்பட்டணத்து வாசற்படி அண்டையிலே பூவரசமரத்தின் கீழே மல்லாக்கு வைத்து உட்கார்ந்து கொண்டிருக்கும்போது வீருநாய்க்கன், கிஷ்ணுருயர் கூடயிருக்கும்போது சொன்ன சேதி நாங்கள் சிதம்பரத்து தபாலுக்கு காகிதம் கொடுத்துப்போட்டு வரச்சே வெங்கிட்டாம் பேட்டை வழியாய் செல்லஞ்சேரிக்கு அண்டையிலே மாட்டுக்காரன் சாவடியிலே பத்துபேர் நம்முடைய சிப்பாய்கள் காயத்தடனே விழுந்து கிடக்கிறதாகவும், அங்கே மணியனென்று கும்பினீர் சேவகனும் கூட யிருந்ததாகவும், அங்கே அவர்கள் சொன்னதாய்ச் செல்லப்பன் மயிலப்பன் சொன்னது: இங்கே யிருந்து உளவு சொல்லி அவ்விடத்து மர்மமெல்லாம் சொல்லி இரண்டாம் பேரறியாமல் கூடலூர் பட்டணத்துக்குள்ளே போட்டு விடுகிறோமென்று சொல்லி அழைத்துப்போன தேவனும் பட்டணம் கூத்தன் மருமகன் அவர்களுக்கும் உளவாயிருந்து, இன்ன வேளையிலே அழைத்து வருகிறோமென்று கொண்டு போய் அங்கே கிட்ட விட்டு. இவனப்பாலே எங்கேயும் காண்பித்துக் கொள்ளாமல் போனதாயும், அதன்பேரிலே அவர்களுள்ளே யிருந்து வரிசையாய்க் காட்டிவிட்டதாகவும், அதன் பேரிலே நின்றவன் நின்ற வாக்கிலே புறப்பட்டு ஓடினவர்கள் திருவிதி, பண்ருட்டி, மேட்டுப்பாளையம், புவனகிரிபட்டணம் இப்படி நாலாவிதமாய்ப் புறப்பட்டு ஆயுதங்களைப் போட்டு

ஓடிப்போய்விட்டார்களென்றார். குளக்கே அக்குள்நாய்க்கன் மனுஷர் புகுந்து புடவை சீலை ஆயுதங்கள் அகப்பட்ட சாமான்களெல்லாம் பிடுங்கிக்கொண்டு நீசிலையுடனே விட்டுவிட்டதாகச் சொல்லி பின்னையும் குடியானவர்கள் பறையர்களகப்பட்டவர்களை அகப்பட்ட வாக்கிலே சகலமும் வாங்கிக்கொண்டு நீசலையுடனே விட்டுவிட்டார்களென்று அல்லிகான் முதலானவர்கள் இருநூற்றைம்பது முன்னூறு சிப்பாய்களுடனே திருவிதி, பண்ருட்டி போய்ச் சேர்ந்ததாக சொல்லுகிறார்களென்றும், அங்கங்கே பத்து பேரும் ஐந்து பேருமாய்க் காயக்காரரை ஐந்தாறு விடத்திலே கண்டதாய்ச் சொல்லி நெல்லிக்குப்பத்தண்டையிலே ஒரு குதிரைச்சிப்பாய் ஒருத்தன் போய் இருந்ததாகவும், அவனை தேவனாம்பட்டணத்துக்கு வாவென்று இழுத்ததாகவும், அங்கேவந்து உங்கள் கையிலே அயிரான்படவேணுமாயென்று இரண்டு பிஸ்தோலிலே கழு கெட்டிச்சிருந்ததாகவும், ஒருபிஸ்தோலை எடுத்துக் குதிரையைப் பார்த்து சுட்டதாகவும், பின்னையொரு பிஸ்தோலை யெடுத்து தன் கழுத்துக்கு நேரில் பிடித்ததாகவும், அந்த குண்டு குரிவைக்கையிலே பட்டு உருவிகிட்ட ஒரு வெற்றிலை தோட்டம் சோனகப் பயலைக்கூட உருவிப் போனாப்போலேயும், அந்த சிப்பாயும் சோனகப்பயலும், குதிரையும் மூன்று பேரும் செத்ததாகவும் இப்படி அவந்திரையாய்ச் சொல்லிக்கொள்ளுகிறார்களென்று இற்றை நாள் சாயங்காலம் ஆறு மணி வேளைக்கு வந்து சொன்னான். அப்பாலவ்விடம் விட்டு பாக்கு கிடங்குக்குப் போகவேணுமென்று புறப்பட்டவுடனே பூனை குறுக்கிட்டது. அதன் பேரிலே மன்னத்தெருவே திரும்பி போவோமென்று போனால் வாணியன் எதிராக வந்தான். எல்லாத்துக்கும் பன்னத்தெரு வீதியிலே ஒரு நாழிகை நேரமிருந்து பாக்குப் போட்டுக்கொண்டு போவோமென்று விருநாய்க்கன் சொல்ல, அங்கே சக்கிலி கொத்தளத்துச் சமீபத்திலே பல்லக்கை வைத்து அங்கே ஒரு நாழிகை நேரமிருந்து பாக்குப் போட்டுக்கொண்டு அப்பால் எழு மணி அடித்ததென்று பாக்கு கிடங்குக்குப் போவோமென்று புறப்பட்டதற்கு துரை அழைக்கிறாரென்று இரண்டு பேர் சேவகர் வந்தார்கள். சோமவாரத்துக்குச் சம்பளமானதே; பணம் காசுகள் முள்ளீந்து ஆனதா என கேழ்க்க அழைக்கிறாரென்று யோசனைபண்ணிக்கொண்டு போனேன். துரையவர்கள் என்னைப் பார்த்தாப்போலே எழுந்து வந்தார்,

லாலாப்பேட்டை பணம் காசு வந்ததாவென்று கேட்டார் கொஞ்சநஞ்சம் வந்தது மற்றது நாளையதினம் வருமென்று சொல்லி சர்பளத்துக்கு மூப்பது முப்பத்தையாயிரம் ரூபாய் நான் கொடுக்கிறேனென்று சொன்னதற்கு நல்லது வரட்டும் வராமல் போகட்டும், அந்தமட்டுக்கு நீ கொடுக்கிறியாவென்று கேட்டார். உங்களுக்கேன் அந்த பணம் வந்தாலும் வராமல் போனாலும் நான் சமாளித்துக் கொடுக்கிறேனென்று முசியே லலியாரைப் பார்த்து நாளையன்றைக்கு ரங்கப்பிள்ளை முப்பதாயிரம் ரூபாய் உனக்குக் கொடுப்பாரென்று சொன்னார். நல்லதென்று சொல்லி அவருமப்புறம் போனார். நானும் அனுப்பிவித்துக்கொண்டு நடந்த என்னை ரங்கப்பிள்ளை ஒரு சேதி கேழ்வி படவில்லையா இப்போதான் மதராசண்டைக்கு ஒரு ஆள் வந்து கபுறு சொன்னான். நம்முடையவர்கள் நேத்து ராத்திரி மரிந்தவர்கள் போறது விடிந்து எட்டுமணி ஒன்பது மணி வேளைக்கு ரோஷத்தின் பேரிலே கூடலூர் செவுமாரிக்குமிருந்து உள்ளே வெகுபேரிருந்தவர்களை வெட்டி ஒரு செட்டி வீடு இருக்கிறதாம். அந்த மொக்கை வீட்டின்பேரிலே வெள்ளைக்கொடி போட்டு இருக்குதென்று வந்து சொன்னான். இதில்லாமல் துறையிலே யிருந்த உருட்டிகளெல்லாம் பாயெடுத்து ஒசந்து போனார்களென்று கடற்கரையிலிருக்கிறவர்கள் வந்து கபுறு சொன்ன சாடைப் பார்த்தால் மெய்யாய் காண்கிறது. முசியே தெலாசேல்லியெஸ் தப்பி சப்பிக்கால் மேலே இருந்த தனது தெலெஸ்கோப்பை வைத்துப் பார்த்தாராம். அங்கே புகைச்சல் கண்டதாம் அது ரோசித்தால் நம்முடையவர்கள் எதாகிலும் மருந்துக்கிடங்கு அல்லது பெரிய வீடுகளை தாகிலும் அல்லது நெல்லு அம்பாரம் எதாகிலும் கொளுத்திவிட்டார்களோ என்னமோ தெரியாதென்று சொல்லி நீ எதாகிலும் கேழ்வி படவில்லையா என்று கேட்டார் பகல் பிறந்த சேதி அங்கே நம்முடையவர்கள் புறப்பட்டு இப்பால் வந்து விட்டதாய் கேழ்க்கப்பட்டது. சாயங்காலம் நான் வாழுதாவூர் வாசற்படிக்கு நேரே போனேன் போனதும் ஒன்பதுமணி நேரம் மராடி நம்முடையவர்கள் ரோஷத்தின் பேரிலே போய் விழுந்து கூடலூர் பிடித்துக்கொண்டதாய் சேதி கேழ்க்கப்பட்டதென்று இரண்டொருத்தர் வெளியே போக்குவரத்து மனுஷர் வந்து என்னைக் கேட்டார்கள். எங்களுக்கானாலின்னம் சேதி வந்ததில்லை உங்களுக்கு யார் சொன்னார்களென்று கேட்டதற்கு வில்லியநல்லூர்

அரும்பாத்தபிள்ளைசாவடி அந்த வட்டங்களிலே இரண்டு ஒருத்தர் சொல்லகேழ்விபட்டு உங்களுக்கு சேந்து வந்திருக்குமே மெய்யாயென்று கேழ்க்க வந்தோமென்று சொன்னார்கள். அப்படிப்பட்டப்பேச்சுகளை மெய்யென்று சொல்லப்போகாதே ஒரு நாழிகைக்கு நூறு விதமாய் கபுறு பிறக்கும். நமக்கு நம்முடைய மனுஷர் உற்ற கபுறாய் சொல்லுந்தனிலும் மெய்யென்று நம்பப்போகாதே அதனாலே உங்களுடனே சொல்லப்போகாதென்று இருக்கிறேனென்று சொன்னதற்கு துரையிருந்துக்கொண்டு மெய்தான் ஆனால் நம்முடையவர்கள் ஓடிப்போனார்களென்று கபுறு வந்தது. மெய்தான் இப்போ ஒரு ஆள் வந்து மதாமுடனே சொன்ன கபுறு மெய்தான் ஏனென்றால் அவன் பார்த்தானென்று சொன்னபடியினாலே நம்முடையவர்கள் கூடலூர் பிடித்துக்கொண்டு கொடி போட்டது மெய்தானென்று சொல்லும்போது முப்பதுபேர் வெள்ளைக்காரர் ஒப்பிசியார்மார்கள் கணக்கார்கள் சுமரசான்சலி கோன்செல்பேர் முதலானவர்கள் போயிருந்தார் சேதிமதாம் துப்ளேக்சு காதிலே கேட்டு என்னை ஒரு வருஷமாய் என் முகத்தைப் பார்த்து நன்றாயழைத்து பேசாதவன் ரங்கப்பிள்ளை நீ கேட்டாயாவென்று வாய் நிறம்ப முகமலர்ந்து பேசினான். அப்போ நான் கேட்டப்பேச்சை சொல்லாததற்கு முன்னே துரையவர்கள் தன் பெண்சாதி ஆறுமாசமே யெடுபாடுயெடுத்து அதுக்கேத்த மனுஷரை சேர்ப்பித்து உபாயமாய் நடத்தினபடியினாலே சுளுவசமாய் கூடலூர் கோட்டை கைவசமாச்சுதேயென்று பின்னையும் உச்சாகமாயதுக்கருத்த சஸ்திகளெல்லாம் பேசிக்கொண்டிருக்கும்போது குதிரை மேஸ்திரியாயிருக்கிற அந்தோனியும், வெள்ளைக்கார குதிரை சுவர்களண்டையிலே தம்பூரு அடிக்கிற வெள்ளைக்காரனொருத்தனும் ஆக இரண்டுபேரும் நடுசாலையே வந்தார்கள் யென்று சோபுதார் வந்து சொன்ன மாத்திரத்தில் துரையவர்கள் மதாமவர்கள் யெல்லாரும் போவதற்கு நடுசாலையே வந்த உடனே எங்கே யிருக்கிறார்கள் நம்முடையவர்கள் யென்று கேட்டார். அதற்கு சிறிதுபேர் நேற்று இராத்திரி முரிஞ்சவர்களிலே பத்து பேரும் எட்டுபேருமாக வந்ததென்று சொன்னார்கள் சிப்பாய் ஆனால் அன்னூருபேர் மட்டுக்கும் காணோம். வெள்ளைக்காரரிலே அன்பது பேர் மட்டுக்கும் காணோம். குதிரையிலே பத்து குதிரைகள் காணோம். அப்துல்லாயிமான் மாத்திரம் இப்போதான் வந்து சேர்ந்தான்

ஷேக்சேன் முதலானபேரைக்காணோம் யென்று சொன்ன மாத்திரத்திலே கூடலூரிலே நம்முடையவர்களில்லையாவென்று கேட்டார். கூடலூரிலே இல்லை. எல்லாரும் நேற்று ராத்திரி மூரிஞ்சவர்கள் இன்னவிடம் போனார்களென்று தெரியவில்லை. ஒருத்தரை யொருத்தர் அதன் பிற்பாடு கண்டதில்லையே மறுபடி கூடலூருக்கு எங்கே போரதென்று சொல்லி சுவாமி ஒரு தயவுபண்ணினார். என்னவென்றால்: உள்ளே யிருந்து கட்ட உடனே ஓடின சாடையறிந்து வெளியே ஐம்பதுபேர் மாத்திரம் கத்தியெடுத்துக்கொண்டு புறப்பட்டால் நம்முடையவர்கள் போனவர்களிலே ஒருத்தர் தப்பி இப்புரம் வரதக்கதில்லை எல்லாருமங்கேதானே செத்து தீர்ந்துப்போம். சுவாமி அந்த வேளையிலே அவர்களுக்கு வெளியே புறப்பட்டால் கொன்று போடுவார்களென்று ஒரு பயம் தோற்றி கதவைத் திறந்து வெளியே புறப்படாமல் இருந்தபடியினாலே நாங்களனைவரும் தப்பிவந்தோமென்று சொல்லிப்போட்டு நின்ற உடனே துரை பெண்சாதி அந்தோணியைப் பார்த்து தமிழிலே தாயோழி யென்னபேச்சு சொன்னாயடாவென்று உள்ளேதான் இருக்கிற காம்பிராவைக் கடந்தாள். துரை இதென்ன கபுறுயென்று கை முரித்துக்கொண்டு மல்தித்து நோவசுயென்று கோபமாய் தெற்கே நடந்தார் நானியப்படி வடக்கே பார்த்தாப்போலே நடந்து பாக்கு கிடங்குக்குவந்தேன். அப்பால் துரை மறுபடி வந்து வேகுகாரன் என்னமாயினானென்று கேட்டாரும் அந்த வேகுக்காரன் பண்ண மோசம்தான் இப்படி சம்பவித்தது எங்களைக் கொண்டுபோய் இருட்டு வேளையிலே இராத்திரியிலே உள்ளே கொண்டுபோய் விட்டவன் அப்பாலே எங்கே யென்று விசாரித்தாலவனை யின்னவிடமென்று காணோம். நாங்களு யூகித்து எந்த விடமென்று கையினாலே தடவிப்பார்த்து கூடலூரென்று நியமகரம் பண்ணினோம். இல்லாவிட்டால் அந்த இருட்டு வேளையிலே சொலுதாதுகள் மூன்று நாளாய் சோரில்லாமல் மயக்கமாய் அங்கே யிருந்தவர்கள் படுத்துக் கொண்டு மூறிஞ்சதுமல்லாமல் ஆயுதங்களை அங்கே போட்டு விட்டு இரண்டு மணிநேரம் பத்து பேரும் இருபது பேருமாய் வழிதெரியாமல் ஒருத்தனை இவன் இன்னானென்று அறியக்கூடாமல் தடுமாரின வேளையிலே சுவாமி உமக்கு இன்னம் மேன் மேலும் தயவுபண்ணி யிருக்கிறபடியினாலேயும் நாங்கள் ஆயிசுடனேயும் இப்புரம் புறப்பட்டு வரவும் யிருந்தபடி

யினாலே நாங்கள் மூன்றாலே நாலுமுனுசண்டை பண்ணினது அவர்களுக்கு அந்த பயம் தோற்றியிருந்த படியினாலே யெல்லாமிப்புறம் வந்தோம். நல்ல அதிர்ஷ்டம் இதைவிட வேறேயில்லை தப்பினதினாலே பே யகப்பட்டு சாடையைப் பார்த்தால் அதைவிட சொல்லாத அதிர்ஷ்டமும் வேறேயில்லை. வேவுகாரன் அவ்விடத்தியனானபடியினாலே அவர்களுடனே நாளதுவரைக்கும் நடந்த சேதியை நன்றாய் சொல்லி யின்ன வேளையிலே அவர்களை அழைத்துக்கொண்டு வந்துவிடுகிறேன். நன்றாய்ப் படையுங்கோளென்று சொல்லி வைத்துக்கொண்டு போய் மோசத்திலே விட்டு விட்டான் என்று நன்றாய் துரையவர்கள் முதலாயிருந்த வெள்ளைக்காரருடனே யெல்லாம் நன்றாய் சொல்லிப் போட்டு அவர்கள் வீட்டுக்குப்போனார்கள். அப்பால் நான பாக்கு கிடங்குக்கு வந்த பிறகு யோசனை பண்ணினதென்னவென்றால்: சாயங்காலம் கும்பினி சேவக செலவப்பன் முதலானவர்கள் பார்த்து வந்து சொல்லியிருக்கும் போது துரை சொன்னபடிக்குத்தானே நான் சொன்னதென்ன வென்றால்: இப்போதான் நம்முடைய பெண்சாதிக்கு கபுறு வந்ததுயென்று பிரத்தியக்ஷமாய் சொல்லும்போது நாம் அதற்கு அட்டி சொல்லுகிறதற்கு நமக்கு என்ன கவை அல்லது அட்டிச் சொன்னோம். ஒருவேளை பொய்யானால் அதினாலே பொல்லாப்பு ரொம்ப செய்யானால் அதனாலே நமக்கென்ன ஆதாயம் வரப்போகுது மதாம் துப்ளெக்சு பொல்லாப்பு முன்னமேயிருக்கிறதுக்கு பின்னையும் சற்று சாதகமாயிருக்கிறதுமல்லாமல் சொன்னாப்போலே பிறபுவுக்கு கூட கோபம் சொல்லாமலிருப்போமானால் நேத்து இராத்திரிதானே உனக்கு தெரியாத தசமாசாரம் ஒன்றுமில்லை மறைக்குராயென்றும் கானரிவேனென்றும் இப்படியெல்லாம் சொன்னதினாலே யிப்போ சொல்லாமலிருந்தால் அதைத்தொட்டு அவருக்குக் கோபம் வரப்போகுதுயென்று பரஸ்பரமாய் லாடபாஷையாய் சொல்லிகொண்டிருக்கும்போது தானே உண்மையான சமாசாரம் வந்து விசிதமாய் போனது நேற்று இராத்திரி நடந்த சேதிக்கு இந்த இராத்திரி ஐந்து நாழிகை வரைக்கும் கபுறு இல்லாமலிருந்ததற்கு மதாம் துய்ப்ளேக்ஸ் விசாரிப்பு அல்லாமல் மற்றொருத்தர் விசாரிப்பு ஆனால் நடக்கிற ஆக்கினைகள் வேறே இப்படி வேவுக்காரன் மோசம்பண்ணி, அபசெயப்பட்டு சின்னாபின்னமாய் ஓடினது ஐங்காத வழிக்கு ஐங்காத வழி ஓடின ஓட்டம்

நாளது வரைக்கும் சம்பாதித்து யிருந்த கீர்த்தியைக் கெடுக்க வந்த அபகீர்த்திக்கும் மற்றொருத்தர் மார்பத்திலே நடந்தால் தூக்கிப் போடுகிறதேயல்லாமல் வேறே அடமான மில்லை. அப்படிப்பட்ட காரியமென்று எழுதினால் விவேகிகளா யிருக்கப்பட்டவர்கள் யோசனை பண்ணிக் கொள்ளுவார்க ளென்று விஸ்தரித்து எழுதவில்லை. அப்பால் பாக்கு கிடங் கிலே யிருந்து ஒன்பது மணிக்கு வீட்டுக்கு வந்தேன்.

*1748* ஆ௵ ஜூன் ௴ *30* உ க்ஷய விபவ ௵ ஆனி ௴ *20* உ ஆதிவாரம்.

இற்றைநாள் காவத்தாலே துரையவர்களண்டைக்குப் போன விடத்திலே மூசியே மென்வீல் முதலானவர்கள் வந்து கண்டு பேசிப்போன பிற்பாடு என்னை அழைத்து நடந்த காரியம் விசாரிக்கப்போனால் இங்கேயிருந்துபோன வேதக்கார னைத்தொட்டு மோசம் வந்ததென்று சொல்லி திருவதி, பண்ருட் டிக்கும், கூடலூருக்கும் எத்தனை தூரமென்று கேட்டார். இரண்டு காதவழி உண்டென்று சொன்னேன். பணம் இன்றைக்கு வருமாவென்று கேட்டார். இன்று சாயங்காலம் வருமென்று சொல்லி முப்பதுனாயிரம் ரூபாயுக்குக் குறையாமல் நான் கொண்டுபோய் கொடுக்கிறேனென்று சொன்னேன். நல்லதென்று சொல்லி நேற்று நடந்த காரியத்தைத்தொட்டு மனதிலே மிகுந்த விசனமானபடியினாலே ஒருத்தருடனேயும் விசேஷித்து பேசாமலிருந்தார். நானும் தானப்ப முதலியாரும் இருந்தப்பார்த்து இனிமேல் பிறகு உடனே பேசுவதற்கு சமயமல்லவென்று சொல்லிப்போட்டு, கணக்கு ரங்கப்பிள்ளை யிருக்கிற கிடங்கிலே போய் உட்கார்ந்தோம். இதிலே துரை யவர்கள் அழைக்கிறார் என்று சேபுகாரன் வந்து அழைத்தான். போன விடத்தில் அரைச்சேர் உளி ஒன்று எனக்கு காண்பித்து இதென்னவென்று கேட்டார் கல்லுளியென்று சொனனேன். இது என்ன விலையென்று கேட்டார். ஆயிரம் எட்டு வராகன் விலை முன்னே. இப்போ என்ன விலையாயிருக்கிறதோ தெரியா தென்று சொன்னேன். நல்லது உள்ள விலைப்படி ஆகுது, எனக்கு முப்பது நாற்பது பாரம் மாத்திரம் எந்த ரூபத்திலேயும் அழைப்பித்துக் கொடுக்கவேணுமென்று சொன்னார்; நல்ல

தென்று சொன்னேன். அந்தப்படி கெட்டியாய் அழைப்பி யென்று நாலாறு தரம் சொன்னார். நல்லதய்யா, அந்தபடிக்கே அழைப்பித்துத் தாரேனென்று சொல்லிவிட்டுப் பாக்குக்கிடங் குக்கு வந்தேன். திரும்பியும் முசியே கோர்னேத் வந்தவுடனே அழைக்கச் சொன்னாரென்று வந்து சோபுதாரன் அழைத் தான். நல்லதென்று போனவிடத்திலே எத்தனைக் கரிசை நெல் இருக்குதென்று கேட்டார். அறுபது கரிசையிருக்கிறதென்று சொன்னேன். அதன்பேரிலே முசியே கோர்னேத்தைப் பார்த்து அறுபது கரிசை இருக்கிறது நீ விரியனுக்கு வீட்டரிசி பார்க்க வேணுமென்று சொன்னாயே ரங்கப்பிள்ளை இனிமேல் வாங்கு கிற நெல்லை மஷியனுக்கு விட்டு அரிசியாக்கிக் கோட்டைக்கு அனுப்பிவிட்டு அரிசிகள் வந்தால் சூர்பினிருக்கு அளந்துக் கொள்ளென்று சொன்னார். நல்லது இப்போயிருக்கிற அறுபது கரிசை நெல்லுக்கு மாரியப்ப முதலி வசம் நாற்பது கரிசை நெல் அளந்துவிடு; அப்புரம் இருபது கரிசை அல்லவாயிருக்கிறது அத்துடனே கூட இரண்டரைக்கரிசை கூடப்போட்டு இரு பத்திரெண்டரைக் கரிசையையும் இந்த மாதக்கணக்கிலே உம்முடைய வரவு வைத்துக்கொள்ளுகிறோமென்று சொன்னா ரதுக்கு நான் நெல்விலைக்கு கொடுத்த பணம் சரியாய் விட்ட தென்று சொன்னதற்கு உமக்கு வேணுமென்ற பணம் தரு கிறேனென்று சொன்னான் அப்பால் முசியே கோர்னேத் அனுப் பிவித்துக்கொண்டு போனார். அப்பால் என்னைப் பார்த்து வெள்ளைக்காரர் திரண்டபேர் வருகிறார்கள். அன்னூருக் கரிசைக்கு குறையாமல் முஸ்திப்பு பண்ணிவைக்கவேணும். அந்த அன்னூருக்கரிசையும் அரிசியாக்கிவைக்கவேணும் என்று சொன்னார். நல்லது அப்படித்தானே செய்கிறேனென்றுச் சொன்னேன். அதிற்கு வருகிற வெள்ளைக்காரருக்கு அரிசி யாய் கொடுக்கவேணுமே யல்லாமல் நெல்லாய் கொடுக் கப்போகாதே அந்த யெத்தனத்தின்பேரிலே யிருந்து முஸ் திப்பு பண்ணிவையென்று சொன்னார் நல்லதென்றுச் சொன் னேன் அப்பால் நானும் பாக்குக்கிடங்குக்கு வந்தேன்.

மதாம் துப்ளேக்சு இத்தனைநாளும் புருஷனுடனே கூட கோயிலுக்குப்போவாளே இன்றயதினம் போகாமல் பத்துமணி வேளைக்கு ஒண்டியாய் முகத்தை தொங்கப்போட்டுக்கொண்டு வெளியே புறப்பட்டு கோயிலுக்குப்போய் மறுபடி வீட்டுக்கு

போனான். மகா துக்கத்துடனேயிருக்கிறான் நேத்து இராத்திரி யென் வழியிலே நடக்கிலாதற்கு யெனக்குமகத்தான அப கீர்த்திவந்தது பெண்சாதிவழியிலே நடந்தி அப கீர்த்தியை சமஸ்தானத்துக்கு சவை யெறக்கமாய் கொண்டுவிட்டார் களென்று பிரஞ்சு இராச்சியமெல்லாம் ஒங்கிப்போனதென்று பின்னையும் என்ன யென்ன கோபத்தின்பேரிலே இவள் நாளது வரைக்கும் பட்டணத்திலே பண்ண அனியாயமெல்லாம் கூடச் சொல்லி எந்த யெந்த விதமாய் கூப்பிட்டாளோ தெரியாது அதின்பேரிலே படுத்துக்கொண்டிருக்கிற அரையை விட்டு வெளியேபுறப்படாமல் உள்ளே அடங்கி துக்கத்திலே அழுந்தியிருக்கிறான் இவள் சண்டிதானபடியினாலே பின்னும் ஒரு காரியத்தை ஒரு வேளை பார்ப்பாளென்று தோத்துதே அல்லாமல் ஷமத்தவனானவள் படிப்பட்ட இராஜாக்காரிய ஜோலிக்குப்போகப்போறதேயில்லை இவள் நீலி. காளி. யென்றும் முன்யுகத்துக்கு, ஒருத்தியை நிமித்தம் ஒருத்தி பேசினால் சுவருமென்று ஒருத்திபேசினால் நட்சத்திரம் விழுமென்று பின்னை ஒருத்தி பேசினால் பூமி அதிருமென்று இப்படி பாட்டிலே பாடியல்லோயிருக்கிறது அதுகள் யெல்லாம் இவளொருரூபமாய்த்திரட்டி வுருட்டி வாரத்தானபடியினாலே புருஷன் கோபித்துக்கொண்டதெல்லாம் சஷ்பம்கூட பரவா பண்ணியிராளென்று தோற்றியிருக்கிறது. ஆனால் விசாரமாய் இருப்பானென்றால் ஷானடத்தியக்காரியம் கெட்டுப்போனதை தொட்டு இராச்சியமெல்லாம் அபகீர்த்தி சொல்லுவார்களென்று புருஷன் எங்கேயொருபடி அந்தகாரியமெல்லாம் தன்வழியிலே விடாதே போராரோயென்கிற துக்கம் தவிற மற்றபடியிலே வேரே துக்கமில்லை எந்த வீட்டிலே ஸ்திரீ அதிகாரம் நடக்குதோ அந்த வீடாகிலும் அந்த சமஸ்தானமாகிலும் அழிந்துபோமென்று சாஸ்திரமாய்சொன்னது. முசியே தப்ளேக்குக்கு பிரதியக்ஷமாச்சுது யென்று பட்டணத்துக்குள்ளே உள்ள சனங்கள் சமஸ்தமானபேரும் வெளிகளிலே கூடச்சொல்லிக் கொள்ளுகிறார்கள். ஆனால் ஸ்வாமி இந்தமட்டுக்கும் இவளுடைய ஆங்காரத்தை அடக்கிறான் பட்டணத்திலே உள்ள சனங்களும் வெளியிலே போக்குவரத்து சனங்களும் சுகப்படுவார்கள் யில்லாவிட்டால் வெகு ஜனங்களுக்கு யின்னம் கஷ்டகாலம் போகவில்லையென்று எண்ணவேண்டியது,

இற்றைநாள் மத்தியானம்கூட இருபது நாழிகைக்கு வர்த்தகருக்கு ஆர்க்காட்டிலிருந்து நாளை சம்பளத்துக்கு உதவ தக்கதாக பதினாயிரம் ரூபாய் வந்தது. மறுபடி சாயங்காலம் துரை அழைப்பித்து வர்த்தகருக்கு பணம் வந்ததாவென்று கேட்டார். நேற்று உங்களுடனே சொன்னபடிக்கு செலுத்திப் போடுகிறேனென்று சொல்லிவிட்டு பாக்குமண்டிக்கு வந்தேன். அப்பால் முசியே கிரியார் போய் துரையைக் கேட்டதற்கு ரெங்கப்பிள்ளை அண்டைக்குப் போய்க் கேள் நாளைக்கு கொடுப்பாரென்று சொன்னாரும் கேட்டு முசியே கிரியார் பாக்குமண்டிக்குக்கு வந்து நாளை சம்பளத்துக்கு உம்மைக் கேட்டு வாங்கிக் கொள்ளச்சொல்லி உத்தாரம் கொடுத்தார் நீர் தாரீராவென்று கேட்டார் நாளைக்காலத்தாலே கல்தாறேனென்று சொல்லி அனுப்பிவிட்டேன்.

*1748* ஆ. ஜுலை மீ *1* உக்கு விபவ ஹு ஆனி மீ *21* உ சோமவாரம்.

இற்றைநாள் காலத்தாலே நேத்து இராத்திரி முஸ்திப்பு பண்ணி நட்சேத்திரம் நாலாயிரம் விராகனும் இருபதுனாயிரம் ரூபாயும் கொண்டுபோய் முசியே லெதுவசம் செலுத்தி அவர் இரசீது வாங்கிக்கொண்டு வந்தேன் அப்பால் துரையவர்கள் வீட்டுக்குப்போய் அவர்களுடனே சபுறு சொன்னேன். அதிலே முசியே லெது வந்து அவரும் துரையுடனே இருபதுனாயிரம் ரூபாயும் நட்சேத்திரம் நாலாயிரம் விராகனும் கொண்டுவந்து செலுத்தினனென்று சபுறு சொன்னார். துரையவர்கள் நெலவுடனே சேர்ந்தது இனிமேல் உனக்கு நான் சொல்லத்தக்கதொன்று மில்லை அன்னாருக்கிசைமட்டுக்கும் கும்பினீருக்கு கொடுத்து விடுயென்றுசொன்னார் நல்லதென்று சொன்னேன். அப்பால் அப்துலாயிமான் வந்து அல்லிகான் திருவிதி பண்ருட்டிக்கு அப்பாலே போயிருந்தவர்களை மல்ராசா மனுஷர்போய் சுத்திக் கொண்டிருக்கிறார்களென்று அல்லிகானும் மூன்னூறு பேருடனே இருக்கிறான் அவர்களை வெலித்துப்போட்டு அப்பாலே தூரத்திப்போட்டு மறுபடி வருவாரென்று சொன்னார் ஆனால் நீங்கள் கூடலூருக்குப்போனீர்களே எந்த அடுக்கிலே போனீர்கள் எந்த வழியாய் போனீர்கள் என்று துரையவர்கள் கேட்டதற்கு அப்துலாயிமான் சொன்னது நாங்கள் போனவழி இந்த

வழியென்றும் அந்தவிடம் இன்னவிடமென்றும் அறியோம். முன்னே வேவுக்காரன் அழைத்துக்கொண்டு போனவழியே போனோமப்பாலே வேவுக்காரன் எங்கேயென்று கேட்டாலவனை எங்களுக்குக் காணோமென்று சொன்னார்கள் அப்பாலிவ்விடம் இன்னவிடமென்று யாருக்குந் தெரியாததை முன்னிட்டு அப்புறம் நடந்துபார்த்தால் வீட்டிலில்லை சுவராயிருக்கிறபடியினாலே போய் முட்டிக்கொண்டவனும் விழுந்தவனு மெழுந்தவனும் மொழிந்தவனுமாய் இதுகண்டோ கூடலூர் செவுரென்று ஏணியை வைத்து ஏறினாப்போலே சந்தினேர் சுட்டான். சுட்டாப்போலே உள்ளே யிருந்து இரண்டு பாரிசமும் வெடிகள் கிளர்ப்பினாப் போலே நாங்களும் சுட்டோம். அப்பாலே எல்லாரையும் மண்டிப்போட்டுச் சொல்லச்சொல்லி சொன்னப்படிக்கு மண்டிப்போட்டுக்கொண்டு இதிலே வெள்ளைக்காரரிலே சிறிதுபேர் தூக்கமாய் விழுந்தார்கள். சாராய மயக்கத்தினாலே பாதிபேர் இருட்டினாலே ஒருத்தர் முகம் ஒருத்தருக்குத் தெரியாமல் நம்முடைய மனுஷரையும் எதிரிகள் வந்தார்கள் என்றும், இரண்டுந் தெரியாது. எல்லார் மனதிலேயும் எதிரிகள் வந்து முன்னே நின்றாப்போலேயும், சுத்திக்கொண்டாப்போலேயும் எண்ணி துப்பாக்கிகளை சுட்டார்கள். அப்பால் ஒருத்தன் போனயிடம் ஒருத்தனுக்குத் தெரியாது. ஆனால் இந்த விசை மோசம்போய் விட்டதில் அகப்பட்டுக்கொண்டதற்கு சுவாமியுடைய கடாக்ஷம் உமக்கும், உம்முடைய தயவு எங்களுக்கும் இருந்தபடியினாலே கதவைத் திறந்து ஐம்பது பேர் மட்டுக்கும் வந்தால் இங்கே யிருந்த லக்ஷணத்திற்கு ஒருத்தர் பிழைத்து வருவாரென்று எண்ணத் தேவையில்லை. அப்படி நடக்கிறதற்கு ஏஷியமில்லாததைத்தொட்டும், முன்னுக்கு வெகு கீர்த்தி வரத்தக்கதாக இருக்கிறதைத்தொட்டும், அவர்களுக்கு ஒரு பயம் தோற்றி வெளியே புறப்படாமலிருக்தார்களென்று நன்றாய்ச் சொன்னான். அதை துரையவர்கள் கேட்டுப்போவ வேவுகாரனைத்தொட்டு வந்த மோசமென்று சொல்லி பின்னை ஒன்றும் சொல்லாமல் எத்தனை பேர் குறைச்சல் என்று கேட்டார். அவ்விகான் வந்த பிற்பாடு தெரியுமேயல்லாமல் அதற்கு முன்னமே தெரியாதென்று சொன்னான். அந்தப்படியே எழுந்திருந்து காம்பிறுவைப் போகிறவர் செத்தவர்களுக்கெல்லாம் அவர்களுடைய சம்பளம் அவர்கள் சம்சாரத்திற்கு கொடுக்கிறோம். துப்பாக்கிகள் போனதுபில்

தோங்கள் போனதுமாய் நாமமாய்த் தெரிந்து எழுதி வையுங்கள் என்று சொல்லி செத்துப்போனவர்களுக்கு உறவுகள் ஒருத்தரு மில்லாவிட்டால் அவர்களுக்குக் கொடுக்கக் கவையில்லையென்று சொன்னர். அப்போ குதிரையிலே ஐந்நாறு குதிரை சேதப் பட்டது. மற்றதெல்லாம் அவ்விடத்தான் வராமல் தெரியா தென்று சொல்லிப்போட்டு அனுப்பிவித்துக்கொண்டார். அப் பாலும் நானுமவரும் இரண்டு பேரும் பாக்குக் கிடங்குக்கு வந் தோம். அங்கே வந்தபிற்பாடு மறுபடி துரைக்கு துரையண்டை யிலே சொன்னதைப் பார்க்க பத்து பங்கதிகமாய் தாங்கள் இதிலே மோசம் போனதுர் தளத்தை நடத்தினவனைத்தொட்டு ஒரு பொல்லாப்புமில்லை. மூன்று நாளைய் சாப்பாடில்லாமலிருக் கிற வேளையிலே சாராயத்தைக் கொஞ்சம் குடிக்குங்காட்டிலும் சத்துருவுடைய பட்டணத்தில் அவன் காலின்மாட்டிலே போய்ப்படுத்துக்கொண்டு ஆயுதம் போனவழி தெரியாமல் சரீரஸ் மரணை தப்பிக் கிடக்கிறதைப் பார்க்க அவரோடு வேறே சொல்லத்தக்கதவையில்லை. ஏன் அவர்கள் சற்று ஏறக்குறைய வெகு பேர் எல்லாரும் கிடந்தாலும், சத்துருவு வந்து தலை வெட்டிப்போடுகிறதற்கு கேழ்க்கக் கவையில்லையே, அப்படிப் பட்ட அவதி வந்து சத்துரு வந்து வெட்டாமல் போனபடியி னாலே முன்னுக்கு நல்ல காலம் இருக்குதப்போது இப்படிப்பட்ட அவதி வந்தும் கப்பி வந்தோமதிலே பார்த்துக்கொள்ளுங்கள் என்று சொல்லி நானும் வெகு சண்டைகள் கேழ்விப்பட்ட துண்டு; பார்த்ததுமுண்டு நானு சண்டைக் கொடுத்ததுமுண்டு. இப்படி சத்துரு இடத்தில் போய் சரீரஸ்மரணையில்லாமல் ஆயுதங்களை நாங்கள் தானே போட்டுவிட்டு மறுபடி நாங்கள் தானே ஐங்காதவழி ஐங்காத வழிக்கு ஓடின சாடையும் எங்கும் கண்டதில்லை சத்துருக்களும் இப்படி நடந்ததும் அவர்கள் என்னவாச்சுதென்று நாலு நாழிகைக்கு ஆகிலும் கதவைத் திறந்து ஆகிலும் பின்னை ஒருவழியாகிலும் போய் சுற்றிக்கொண்டு மாட்டுவோமென்று தேடாமலவர்களும் எங்களுக்கு பயந்து உள்ளேத்தானே யிருந்துவிட்டதும எங்கும் கண்டதில்லையென்று சொல்லி, பெண்டுகள் காருபிரானுல் அந்த சமஸ்தானமழிந்து போகாமல் எங்கே நின்றது. சுவாமியி னுடைய சித்தமுனனுக்கு நன்மை யிருக்கச்சே இவ்வளவு தப்பி யிருக்குதென்று சமஸ்தமான பேரும் கேட்டிருக்கச் சொல்லிவிட்டுப் பிக்கையும் லோகாபிரமமாய் எஜமான்

பெண்சாதி வழியிலே காறு யிரு கடக்கிற சங்கதியும் இத ஒப்பிசியேமார்கள் சொல்தாதுகள் கூட துரையவர்களைச் சொன்ன யிவழ்ச்சி காகிதத்திலே யெழுதப்போகாது யென்ற வாயினலேயும் நினைக்கவும் கூட போகாதென்று சொல்லிப் போட்டு அனுப்பிவித்துக்கொண்டுபோனர் முசியே மேன்வில் முதலான ஒப்பிசியால்மார்கள் சண்டைக்குப்போனவர்களெல லாம் முசியே துப்ளெக்சு தன் பெண்சாதியை காறுபிறுபண்ணச் சொல்லி யெங்களை யெல்லாம் கொண்டுபோய் அனியாயத்திலே கொல்லத்தெரிஞ்ச னென்று சொல்லுகிறவார்த்தைகளை காகி தத்திலே யெழுதி முடியாது நாம் எழுதவும் போகாது விவேகி களாயிருக்கிறவர்கள் சூக்ஷமமா யெழுதினல் தெரிந்துக்கொள் வார்களென்று விஸ்தரித்து யெழுதவில்லை வெள்ளைக்கார தெருவிலே யிருக்கிற ஆண், பெண் அடங்கிலும் நிந்தியாதவர்க ளில்லை இதிலே அக்குள்நாய்க்கன் மனுஷா ளுக்குள்ளேயிருந்து வெகுபேர் கையில் துப்பாக்கி சட்டைகள் பிஸ்தோல்கள் அகப் பட்டதெல்லாம் வாங்கிக்கொண்டதாய் பறிகொடுத்தவர்க ளனேகம்பேர் வந்து என்னுடனே சொன்னர்கள். பணங்காசு களுடனே சேர்ந்ததுகளில்லை உடுத்திக்கொள்ள புடவைகள் கொஞ்சம் ஆயுதங்கள்தான் விஸ்தாரமொன்று கபுறு கேழ்வி பட்டது, அக்குள் நாய்க்கரவர்களும் திருவேந்திபுரத்தாரும் நம்முடைய பேரிலே பழிவருமென்றும் வந்து சினுக்காதே போகார்களென்று ரொம்ப பயந்து யிருக்கிறதாய சேதிக் கேழ்விப்பட்டது.

1748 ஆ ஜுலை மீ 2 உக்கு விபவ ஹு ஆனி மீ 22 உ மங்களவாரம்.

மைற்றானள் துரையவர்கள் வளவுக்குபோனவிடத்திலே அங்கே அவர் நேத்து இராத்திரி முன் கூடலூர் பிடித்து கொடுக்கிறேமென்று இங்கேயிருந்து தனத்தை அழைத்துக் கொண்டுபோனனே அவனுக்கு நம்பிக்கை பரவசம் கொடுத்து உன்னை ஒன்றும் செய்கிறதில்லை நீ வேகுகொண்டு போனதிலே குறையென்ன இவர்கள் பந்துபஸ்துயில்லாமல் ஒடிப்போனல் நீ செய்யவேண்டிய தென்னவென்று நானிருக்கிறேன் நீ வராமல் போனல் நீ மோசம்பண்ணுகிறது மெய்யென்று யெண்ணுவார் கள். நானென்ன அவர்கள் கோட்டையை திறந்து கொடுப்

பார்கள். நீங்கள் உள்ளேபோய் சுகமாய் கொடியைப்போட்டுக் கொள்ள சொல்லுமென்று சொல்லியா அழைத்துப்போனேன் அவர்கள் ஏமரியிருப்பார்கள் அல்லவென்று உசாருனால் கொஞ்சம் பேர்யிருந்து மற்றபேர் வந்து சேருகிறதற்குள்ளே கொஞ்சம் பேர் சாவுடனே போய் கோட்டையைபிடித்து கொள்ளலாமென்று சொல்லி யோசனைபண்ணி தான் அழைத்துப்போனது போய் சேர்ந்தவுடனே இருபது முப்பதுபேர் யிருந்தவர் துப்பாக்கியைதிறந்தவுடனே நீங்களெல்லாமல் ஓடிப் போய்விட்டால் நான் செய்யலாவது யென்னவென்று கெட்டியாய்ப் பேசச்சொல்லி அவனுக்கு சொல்லிவைத்து நம்பிக்கை பண்ணிக் கொடுத்து அவனை நொண்டிசவரிமுத்து சேருவைக்காரன் இற்றனால் காலத்தாலே அழைத்துவந்து சேர்த்து மதாம் துப்ளேக்குக்கு கபுறசொல்லி அதுக்கடுத்த சாடையாய் துரைக்கும் பெண்சாதி சொன்னனவரும் இதை வேகுகாரன் பேரிலே போட்டால் தம்முடைய பெண்சாதி மார்பத்தினாலே நடந்தபடியினாலே அபகீர்த்தி தன்னை சேருதேயென்று வேகுக்காரனை தொட்டு நேரமில்லை போன முசியே மென்வில் மேலே நேரமென்று வெள்ளைக்காரருடனே சொல்லிக்கொண்டு வந்தார் இதைநான் ஒரு சட்டைக்காரன் வேதக்காரன் சொன்ன பேச்சுப்படியே முசியே மென்விலுடனே சொல்லாமல் மோசம் வந்ததென்றுப்போலேயும் அதென்னப்பேச்சென்றால் இப்போ போறது சமயமல்லவென்று வேகுக்காரன் சொன்னதை சட்டைக்காரன் வெள்ளைக்காரனுக்கு யிப்போவதற்கு சமயமென்று சொன்னது: சொன்னதிலே போய் விழுந்ததினாலே மோசம் வந்ததென்று அந்த சட்டைக்காரன் கொண்டுபோய் நயினார் வீட்டிலே காவல் வைத்து அப்பாலே ரூபு ரூபாய் முசியே லம்சல் என்கிற கணக்கனை கூட வைத்துக் கேட்ட விடத்திலே சட்டைக்காரன் இவன் சமயம் போகலாமென்று சொல்லி அழைத்துப் போனதற்கு சாக்ஷிகூட சொன்னதின்பேரிலே அந்தப் பேச்சு வெளுத்துப்போய் சட்டைக்காரனை வீட்டுக்குப் போகச் சொல்லி அனுப்பிவிட்டார்கள். மற்றபடி எழுதத் தக்கன சமாசாரம் வேறே ஒன்றுமில்லை.

*1748* ஆ, ஜூலை மீ 3 உ க்கு விபவ ஞு ஆனி மீ 23 உ புதவாரம்.

அதன்பேரிலே என்னைப்பார்த்து ஆர்க்காட்டு சேதி ஏதாகிலும் வந்ததாவென்று கேட்டார். நாசற்சங்கு காயிருப்பட்டு

தன் பேரிலே தன் தகப்பன் இருக்கிற இடத்திற்கு கமறநிகான் என்கிறவர் மகன் வருகிறபடியினாலே வெகு காபிருபட்டு இருக்கிறாரென்று அந்த சாடையைப் பார்த்து முறநிசல்லிக்கான் ஆற்காடு தன் கைவசப்படுத்திக்கொள்ள யோசனைபண்ணின தளம் சேர்க்கிறது தான் அறிந்திருக்கிறப்போலே ஆச்சுதே அதனால் ஆற்காடெல்லாம் காபிருபட்டு அதலகுதலமா யிருக்கிறது. இதன்பேரிலே மருட்டியார் இந்தமட்டுக்கும் கிருஷ்ணை பரியந்திரம் வந்ததாய் சொல்லுகிறார்கள். அன்வர்த்திகான் முறநிசல்விகானுக்கு நீயும் நானுமா தகப்பனும் பிள்ளையுமா யிருப்போம் மறுபடி பின்னையும் சில்லாக்களுக்கு உண்டான சிலவும் முடசில்லாவுக்கு மாயுபண்ணி நீரும் நாமும் ஒருமயாய் நடந்துக்கொள்ளுவோமென்று எழுதியனுப்பிப்போட்டு குதிரைகள் ரூணும் தயார் பண்ணுகிறதினாலே முன்னைக்கிப்போ அதனமாய் எத்தனம்பண்ணுகிருப்போலேயும் மிருசத்தும் தக்கேசல்லி முதலான பேர் இந்த ஆலோசனைக்கு உளவாயிருந்து நடத்துகிறார்களென்று ஆற்காட்டிலே பிரசித்தமாயிருக்குதென்று நபாபு அவர்கள் கச்சேரியிலே கூட இந்த பிரசங்கம் நடக்கிறதாய் எழுதிவந்தது. இதல்லாமல் அந்தரங்கமான சமாசாரம் மிறித்துசல்லிகான் வேலூரிலிருந்து மிரீசநிதன்டைக்கு சேத்துப்பட்டுக்குப் போகுகிற நிமித்தியப் மகாராச்சியமாய் இரண்டாம்பேர் அறியாமல் வந்து இருக்கிறதாகச் சந்தாசாயபு வீட்டுக்குச் சேதி வந்ததாய் ராசோபண்டிதன் மெத்த அந்தரங்கமாய்ச் சொன்னான். அதெல்லாம் இன்று நாற்பதாம் நாள் சந்தாசாயபு சாவு ராசா பெண்சாதி மார்பத்தில் ராகோசி புசேலா மொத்தமாக இரண்டு லக்ஷத்து பதினாயிரம் ரூபாய் தீர்த்துக்கொண்டு அதற்கு முன் இங்கேயிருந்துபோன ரத்தின நகைகள் விலை கட்டிக்கொடுத்து பாரிக்கத்து வாங்கிக்கொண்டு திருச்சினாப்பள்ளிக்கு அச்சலாக உடம்படிக்கைப் பண்ணி தீர்த்துக்கொண்டு ஒண்ணரைக் காதவழிக்கு அப்புறம் சிறிது தளத்துடனே இவ்விடத்திற்கு வருகிறதற்கு அனுப்பிவித்துககொண்டு வந்து இறங்கி சமான மாதம் வந்து சேருகிறாரென்று சமாதிலவல் மாதம் இருபதாம் தேதி எழுதின காகிதம் நேற்றையதினமவர்கள் வளவுக்கு ஆற்காட்டு ராகோசி நாய்க்கல் மாரிபத்திலே வந்து சேர்ந்த காகிதம் வந்து படித்துப் பார்த்துக்கொண்டு வெகு சந்தோஷமாய் வரவர நசர் வைத்ததுக்

கொண்டுபோய் வைக்க வாங்கிக்கொண்டு சந்தோஷமாயிருக்கிற சேதிக்கு உமக்கு முபார்க்குப் பாதி சொல்லச் சொல்லியும், அங்கே யிருந்துவந்த மராஷடகத்தில் எழுதி அவாதஸ்து பண்ணின பசினிசு காகிதம் உமக்குப் படித்துக் காண்பிக்கச் சொல்லி அனுப்பினார்கள். அதை ராசோ பண்டிதர் கொண்டு வந்து இருக்கிறாரென்று சொன்னதற்கு அழைக்கச் சொன்னார். அவரும் வந்து சலாம்பண்ணி முன்னாள் துரை அவர்களுடனே சொன்னபடிக்கு அவரும் சொல்லிக் காகிதமும் படித்துக் காண்பித்தவிடத்திலேயும், சொன்னபடிக்கு தானே எழுதியிருந்தது. அந்தக் காகிதம் படித்துச் சமாசாரம் சொல்லி முபார்க்குபாதி அம்மாளவர்களும், ராசா சாயபு அவர்களும் சொல்லி உங்கள் தயவினாலே எங்களுக்கு நல்லகாலம் வந்தது. இந்தமட்டுக்கும் நீங்கள் ரக்ஷித்தாப்போலே யார் ரக்ஷிக்கப்போகிறார்கள். அண்ணன் தம்பிமட்டுக்கும் முதலான பந்து ஜனங்கள் ஒருத்தரும் உதவாமல் போனார்கள். அப்படிப்பட்ட வேளையிலே சரீர அர்த்தவாக்குக்காயங்கள் மூன்று லோகத்துக்குள்ளே யிந்த மூன்று வலுவும் உங்களாலே எங்களுக்கு உபகாரமாய் நடந்தது. அந்த மேலிமினங்கள் பார்க்கத்தக்கதில்லை இனிமேல் நாங்கள் மனுஷரானால் மெலிமி அறிந்து நடந்துக்கொள்ளுகிறோமென்று உற்சாகமாய் எப்படிச் சொல்லவேணுமோ அப்படிச் சொன்னார். அதற்கு துரை அவர்களும் சந்தாசாயபு அவர்கள் வருகிறதற்கு எங்கள் பிராஞ்சுக்காரர் சிவனெல்லாம் வேணுமென்றாலும் கொடுப்போம். அப்படியாங்காட்டும் எங்கள் மனது இருக்கிறது. ஆனால் எங்கள் அபிப்ராயப்படிக்கு சுவாமி தயவுபண்ணி அவரும் விடுதலையாகி ஆவணி மாதம் வந்து சேருகிறோமென்று எழுதின சந்தோஷம் கேட்டாப்போலே சுவாமி அவரைப் பார்க்கிற சந்தோஷமும் தயவும் பண்ணவேணுமென்று பிரார்த்தித்துக்கொண்டே இருக்கிறோமென்று இவரும் உபசாரம் சொல்லித் தம்முடைய சலாம் சொல்லச்சொல்லி என்னையும் முபார்க்குபாதி பேர்ய் சொல்லி வரச்சொன்னார். நல்லதென்று சொல்லி பிறகு வாரேனென்று சொல்லி ராசோ பண்டிதரை அனுப்பிவித்துப்போட்டு இப்பாலே வந்தேன்.

மறுபடி துரை அழைத்து செல்லுபேச்சிலேயே மாறியிருக்கப் பொருய் முசியே கோர்னேத்தைக் கேட்டு உனக்கு வேணுமென்ற

பணம் வாங்கிக்கோ முன்னேயைப்போலே பணத்துக்குத்தான் தடையில்லையே, உமக்குச் சம்மதியான பணம் கேட்டபோதெல்லாம் கொடுக்கச்சொல்லி சொல்லியிருக்கிறேன். நெல் தூஷியில்லாமல் முஸ்தீதுபண்ணி வையென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன் இதிலே தானப்பமுதலி வந்து அறிசிப் பாக்கம் கொள்ளப்போன சம்மதிக்கு மத்தியஸ்தர் முன் தீர்ந்த ஆயிரத்து முன்னூறு வராகன் தள்ளி மற்ற வராகன்களை சம்மதிபண்ணச்சொல்லி ரசீது எழுதிக்கொடுத்து மூசியே மூசேத் ரோலாம் எனக்குக்கவையில்லையென்று சொல்லுகிறார் என்று வர விசேஷத்தை ஏற்றி தாக்ஷியாய் சொல்லுகிறார் என்றும், வுந்து சொன்னார். மெய்தான் மத்தியஸ்தம் தீர்த்த நியாயபடிக்கானால் ஒத்துக்கொள்ளவேண்டியது. இருபத்து மூன்று கரிசை நெல்லும் காய தானியமும் கொள்ளைப் போனதாய் எழுதினார்களே எப்படி ஒத்துக்கொள்ளலாம்; இது எடுக்க எத்தனை மாடு வேணும். அப்போ தானியம் பிறிய வேளையாயிருக்க அலாம் வேளையாயிருக்க அவர்கள் தானியம் வைக்கப் பாத்தியம் பிடித்ததா அது ஒத்துக்கொள்ளப் போகாதென்று முகங்கொடாமல் உத்திரவு சொன்னதின்பேரிலே தானப்ப முதலியார் என்னை இப்புரம் அழைத்து முன்னே துரைக்கு அன்னூறு வராகன் கொடுக்கிறோமென்று சொல்லி அப்பாலது நின்றுபோனது ஏனென்றால்: மூசியே துலோராம் அறிந்தால் போராட்டமென்று இப்பவும் அவர்கள் கவையில்லையென்று வாங்கினால் பத்து பேருடனே சேர்ந்தப்பேச்சு வெளிக்கு வரும். மூசியே துலோராமுக்கும் அறிக்கையாமவர்களை கேழ்க்கக் கவையில்லை. எனக்கு மாத்தம் இருநூறு வராகன் விழுக்காடு கொடுக்கிறார்களே அதனால் எப்படி பார்த்துக்கொண்டு அதுகூட தாய் பார்த்துக்கொள்ளுகிறேனென்று சொல்லி ஆயிரம் ரூபா மாத்திரம் கொடுக்கிறேன். அந்தபடிக்குப் பேசி இனம்பண்ணி போடுங்களென்று சொல்லிப்போட்டு வீட்டுக்குப் போனாரந்த சாடையும் துரையும் பார்த்தார். இதிலே கோன்சேலியிலே போனார்கள் நானும் பின்னையும் அரை நாழிகை யிருந்து பாக்கு கிடங்குக்கு வந்து அப்பால் பனிரெண்டு மணி வேளைக்கு சந்தாசாயபு வீட்டுக்குப் போய் ராசா சாயபுக்குப் பதினொரு ரூபாய் நதிர் வைத்து சந்தாசாயபு விடுதலையாய் அனுப்பிவித்துக்கொண்டு இப்புறம் சாகி வந்ததற்கு மெர்பார்க்குபாதி துரையவர்கள் சொல்லிவரச் சொன்னார்களென்று பின்னையும் உபசாரமாய்

என்ன சொல்லவேணுமோ அதுகளெல்லாம் சொல்லி அப்பால் சந்தாசாயபு பெண்சாதிக்குப் பதினெரு ரூபாய் நகிர் கொடுத்து முபார்க்குபாதி சொல்லி அனுப்பினதற்கு அந்தம்மாளும் நசா வாங்கிக்கொண்டு பதிலுக்கு மொபார்க்கபாதியும் சொல்லியும் அனுப்பி உச்சாகமாய்ச் சொல்லி அனுப்பிவித்தார்கள் நானும் அநேகமாய் உபசாரமாய்ச் சொல்லி அனுப்பிவித்தேன். அப்பால் ராசா சாயபும் மெத்த உபசாரமாய்ச் சொன்னர் நானும் உபசாரமாய்ச் சொன்னேன். அந்த உபசாரமெல்லாம் அங்கே எழுதியிருக்கிறபடியினலே ரெட்டித்து எழுதவேண் டியதென்னவென்று எழுதவில்லை. அப்பால் எனக்கொரு ஓரோப்பா முப்பது ரூபாய் பொறும் மதனுந்தபண்டிதனுக்கு அதற்கு முக்கால் திட்டம் பொறும்; கொண்டுவந்து கொடுத்தார்கள் வாங்கிக்கொண்டு வீட்டுக்குப் போனேம். நான கொண்டுபோன நகிர் இருபத்துரெண்டு ரூபாய் அவர்கள் எனக்குக் கொடுத்த ஓரோப்பா கிறயம் முப்பது ரூபாயும், அப்பால் சாயங்காலம் ஆறு மணி வேளைக்கு இங்கிலீஷ் கப்பல் முன் பிரான்சு கப்பலைத் தேடிப்போனது சென்னப்பட்டணத்து மட்டுக்கும் போய் வெழ்க்கி மறுபடி இற்றைநாள் சாயங்காலம் ஆறு மணி வேளைக்குப் புதுச்சேரி துறைக்குக் கொண்டுவந்து பிடித்து நாளைக்கு கூடலூர் போய்ச் சேருகிறதாய் தீர்த் துக்கொண்டுவந்து சினிபோப் போட்ட கப்பல் சேதி வந்தது. அதை வெளியே போன நான் பார்த்துப்போட்டு வரும்போது துரை அழைக்கிருரென்று வந்து அழைத்தார்கள் நானும் ஏழு மணி வேளைக்கு வந்து துரையைக்கண்டேன். அவர் என்னைக்கண்டதும் எழுந்திருந்து வர அப்புறம் நடு சாலையிலே வந்து கும்பினீர் வர்த்தகன் சென்னப்பட்டணத் துக்கு இன்னும் ஆயிரம் ரூபாய் மட்டுக்கும் செல்லவேணு மென்று முசியே பர்தலமி எழுதியனுப்பினுனென்று சொல்லி பஞ்சுமுட்டைகளை யெடுத்து கிடங்கை காலிபண்ணிக் கொடுக்கச் சொல்லி கேட்டால் வர்த்தக மனுஷர் அட்டிச் சொன்னர்களாம் அதென்னவென்ருல் நயநஷ்டம் எனதென்று இருக்கிறபடியினுலே இவர்களத்தனை பறவயர் அந்த சரக்கை வில்லாமல் போட்டுக்கொண்டு யிருந்தார்கள் இந்த மட்டுக் கும் எத்தனைபாரம் வித்தார்களென்று என்ன விலைபாய் வித்தார்களென்று கேட்டார். இருநூறு மூட்டைக்குண்டு வித்தது மற்றது விலையாகாமலிருக்கிறது யென்று சொன்ன

துக்கு யென்ன விலையாய் வித்தார்களென்று கேட்டார். இருபத்தி ஆரரை, இருபத்தாறு, இருபத்தைந்து, இருபத்தினலு மட்டுக்கும் வித்தார்களென்று சொன்னதுக்கு முன்னே பஞ்சு இரம்யமாயிருந்தது. அப்போ விற்றுப் போடலாம். ஆனல் அவர்களுடைய உடமையில்லாதபடியினுலே சும்மா போட்டு வைத்தார்கள். இனிமேலதை தெருவிலே போட்டுவிடச் சொல்லென்று அவர் பண்ண கோபம் மித்ததிலேயில்லை. அதற்கு நான் ஒன்றும் சொல்லாமல் சும்மாயிருந்தேன் அப்பால் செப்பு என்ன விலையாய் வித்தார்களென்றுக்கேட்டார். செப்பு ரொக்கத்துக்கு பாரம் எண்பத்தொரு வராகன் பூவராகன் வித்தார்களென்று சொன்னதற்கு பாரம் நூறு வராகன், தொண்ணூறு வராகன் விக்கிறது. எண்பத்தொன்ருய் வித்தென்னவென்ருல் சரிபோனபடிக்கு அதிலே ஆதாயம் எடுக்கலாயென்று யோசனைபண்ணுனர்கள்.

இந்த வர்த்தகர் பெரிய மனுஷர் விற்றபடிக்கு எழுதி வைத்து உள்ள கொம்மிசியம் எடுத்துக்கொள்ளுவார்களென்று நம்பியிருக்த வர்த்தசர் கையிலே சரக்கு கொடுத்தால் நன்ருய் திருட ஆலோசனை பண்ணினுர்களென்று அந்த செப்பையும், சகலாத்தையும் யெங்களுடமயை கொண்டு வந்து கொடுத்து விடுங்கள் என்ன செலவு செல்லுகிறதோ அதை கையிலே கொடுத்து விடுகிருேமென்று கறகண்டு அப்போ தானே நிறையா பிடித்து எடுத்துக்கொண்டு போகிருேமென்று சொன்னது இன்னம் யெடுத்துப் போகவில்லை கும்பினீர் வர்த்தகர் இந்த மட்டுக்கும் கொடுத்ததுகளும் பற்றிக்கொண்டதும் கணக்குந் தீர்த்தது நிலுவையிட்டுக்கொள்ள சொல்லென்று சொன்னுர் பைத்து வரவு பார்த்து பஞ்சு சம்மதிக்கூட நிலுவையிட்டு தீர்த்துப்போட்டு சுமைதலை பண்ணிவிட யோசனை பண்ணுகிருரென்று வர்த்தகர் பனாத்து நிமித்தியம் யென்னமுஞ்சுயிருக்கிருர்களே அவர்களாலுல் எழுதியனுப்பி பத்து நாளையிலே அழைப்பித்து கணக்கு தீர்த்துப்போடுகிறேனென்று சொன்னதற்கு பஞ்சு சம்மதிக்கு இவர்கள் தானே சீட்டெழுதி கொடுக்கிருர்களென்று கேட்டார். ஆம் அவர்களை கக்ஷியிலே நயம் வந்தாலும் நஷ்டம் வந்தாலும் துரையவர்களுடனே சொன்னுலந்த நஷ்டம் கூடி வர யெங்க மார்க்கமாகிலும் பண்ணுவார்களென்று சொல்லிக்கொண்டு இருக்கிருர்களென்று சொன்ன

தின் பேரிலேயெனக்கு பார்த்தால் அவர்கள் ஒருக்காலுமிந்தப் பேச்சு பேசினதேயில்லை, உன்னை தொட்டு ஆககூடும் இந்த கஷ்டம் நான் கொடுக்கிறாப்போலே காணுது. ஆனால் பதி னெட்டு வராசனுக்கு விலை கட்டி தீர்த்துக்கொள்ளென்று சொல்லென்று அவர் யென்பேரிலே பண்ணினகோபம் மித மில்லை அப்பாலே வர்த்தகருக்குச் சொல்லி பொங்களுக்கு கொடுக்க வேண்டிய பணத்தை சம்மதிபண்ணிப் போடச் சொல்லென்று சொல்லி அப்பால் அந்த பஞ்சு மூட்டையை தெருவிலே போட்டுவிடச்சொல்லும் அவர்களுடமையானால் அவர்களுக்கு வருத்தமாயிருக்கும் நம்முடைய உடமையல்லவா சரிபோனபடிக்குப் போட்டுவிடச்செல் என்று போட்டு விட்டு அழித்து போடுவார்களென்றும் இப்படியெல்லாம் சொல்லி அப்பாலே சற்று நேரமிருந்து மறுபடிவந்து வர்த்த கரை நாளை அழைத்துவா யென்று சொல்லிவிட்டுப்போனார். நானும் பாக்குகிடங்குக்கு வந்து ராத்திரி ஒம்பதுமணிக்கு வீட்டை வந்தேன்.

1748 ஆ ஜுலை மீ 6 உக்கு விபவ ஞு ஆனி மீ 26 உ சனிவாரம்.

துரையவர்கள் சென்னப்பட்டணத்துக்கு முன் எட்டுக் கப்பல்காரர்கள் கொண்டுவந்து யிறக்கின பொன் ஒரு பொட்டி உன்பட பத்து லக்ஷம் பத்தாக்கிலே அவ்விடத்திலே யிருந்து இப்போ நாற்பது பொட்டி அருபத்தனுபிரம் பத்தாக்கு வருகிற தாம் அதற்கு வெள்ளைக்காரர் குதிரை அவர்களும், துலுக்கர் குதிரை அவர்களும், நூறு சிப்பாய்களும் சதுரங்கப்பட்ட ணத்து மட்டுக்கும், போய் அதை கொம்பஞ்சரிட்டுக்கொண்டு வரச்சொல்லி மூசியே நெந்தேல் முதலானபேர்களுக்கு உத் தாரம்பண்ணி அவர்களும் பகலைக்கு மேலாகப் போகிறதாய் வந்து அனுப்பிவித்துக்கொண்டு இவர்களுக்கு திண்பண்டங் கள் சாருயம் உள்பட ரவானாபண்ணி அனுப்பினார்கள். அப் பால் ஆற்காட்டிலிருந்து வந்தசேதி ஆனால் நபாபு முறசல்லி கான் ஆற்காட்டுக்கு நபாபு கிறிதான பண்ண நினைத்து நடத்து கிறயோசனையும் குதிரைகள் சேவகர்கள் வைக்கிறதும் மறுபடி யார் யார் ராச்சியம் நரசிங்கராவும் மூவாயிரம் குதிரையும், பதினாயிரம் ஷத்தோமமும், வரச்சொல்லி எழுதி தானும் மீர்

சத்தும் இவ்விடத்திலே இரண்டாயிரம் குதிரையும் ஆருயிரம் ஷத்தோமும், முஸ்திப்பு பண்ணினர்கள் என்றும்; அதன் பேரிலே அன்வர்த்திகான் காபிருபட்டு மீறத்துசல்லிகானிடத்தில் சயந்தல்லிகானை அனுப்பிவிக்கிறதாய் யோசனைபண்ணி தீர்த்து இருக்கிருர்களென்றும், ஐயாயிரம் குதிரைகள் வைக்கச்சொல்லி உத்தாரம் கொடுத்து சிறிது குதிரைகள் வைத்தார்களென்றும், மராட்டியார் அறுபதினுயிரம் குதிரைகளுடனேகூட பத்தேசிங்கு பூசலாரிகோசி பூசலாவைக்கூட அழைத்துக்கொண்டு சந்தாசாயபும் கிருஷ்ணா நதிக்கு அக்கரையிலே வந்து சேர்ந்தார்களென்று சேதி வந்ததாகவும், நாசற்சங்கு அண்டைக்கு இப்போ பட்டத்திற்கு வந்த பார்சா மனுஷர் வந்து பேசிக்கொண்டிருக்கிறுப்போலே யிருந்து சூத்திப் போட்டதாகவும், இப்படிப்பட்ட சேதிகளினுலே ஆற்காடெல்லாம் வலசை வாங்குகிறதாய் யோசனைபண்ணி அதல குதலப்பட்டிருக்கிற சாடையும் இது முதலாகிய சேதியெல்லாம் அல்லிநக்கிம் சாயபு; வக்கீல் ஆற்காட்டிலிருந்து எழுதியனுப்பின காகிதம்பார்த்து இந்த சேதியெல்லாம் மகா-ா-ா-ஸ்ரீ துரையவர்களுக்கு சொன்னதின்பேரிலே அவர் மனதிலே ஆற்காடு எல்லாம்பிரண்டு உருண்டு போவதற்கு புதுச்சேரி வருமென்றும், பத்து பணம் விசேஷித்து பிரயோசனம் வருமென்றும், ஆசை உண்டாகி அவர் சந்தோஷம் காகிதத்திலே எழுதி முடியாது. அதன்பேரிலே இப்போ உன் தாலுக்கு சிப்பாய்கள் எத்தனையென்று கேட்டார்: முன்னூத்தொன்பது பேர் என்று சொன்னேன். நானூறு பேராய் சரியாய் வைக்கச்சொல்லி உத்தாரம் கொடுத்தார். ஆற்காட்டிலே நம்முடைய கும்பினீர் சரக்கும் போயிருக்கிறது கும்பினீர் வர்த்தகர் சரக்கும் தெறண்ட சரக்கும் போயிருக்கிறதே, அங்கேயிருந்து முறுது சல்லிகான் பேருக்கும் காகிதமும் சிறிது சேவகரும் அனுப்பச் சொல்லி ஆற்காட்டிலிருந்து யெழுதி வந்திருக்கிறது என்று சொன்னதற்குதஸ்தக்கு ஒன்றும் முப்பது துப்பாக்கிக்காரரையும் அனுப்பச்சொல்லி சொன்னர். அப்பால் அல்லிநக்கிம் சாய்பு ஊருக்குப்போகவில்லையா யென்று கேட்டார் உங்களை வழிக்கு சீட்டுக்கேட்டு வாங்கி அனுப்பச்சொல்லி சொல்லி அனுப்பினர். உங்களுக்கும் தான் ஊருக்குப்போய் வாரேனென்று சொல்லி உங்களுக்கும் மதாம் அவர்களுக்கும் சலாம் சொல்லி நீங்கள் உத்திரவு கொடுத்தபடிக்கு பயணம் போரோ

மென்று சேழ்க்கச்செல்லி சொல்லி அனுப்பினுர் என்று சொன்னதற்கும் கருசனுக்கப் போகலாமென்றுர் சொல்லி சீட்டு எழுதிவரச்சொன்னுர்; அப்படிக்கு சீட்டெழுதிகொண்டு போய்கொடுத்தேன் அதிலே கையெழுத்துப்போட்டு என்னே அவருக்குச்சொல்லி அனுப்பச்சொன்னது எட்டு நாளேய காரியம் மனதுபொருக்கமாட்டாமல் சிநேகத்தை விருத்துவம்பண்ணிகொண்டாயென்று சொல்லி அனுப்பச்சொல்லி சொன்னுர். அந்தபடிக்கு இராசோபண்டிதனுடனே சொல்லி தெத்துவாசற்சீட்டும் கொடுத்து அனுப்பினேன். அப்பால் அச்சிக்கு பரங்கிப்பேட்டை நாகூர் நாகப்பட்டணத்திலிருந்து அச்சிராசா முதலானவர்களுடைய கப்பல்கள் ஆரேழுவுருபடி போகிறது கிட்ட ராசாக்கப்பல் முதலானது கிட்டாவுக்கு போகிறது; அஞ்சாறு உருபடி போகிறதென்று சொன்னேன் நல்லது நம்முடைய தொக்காதோர் பரங்கிப்பேட்டையிலிருக்கிறவனே அழைப்பியென்று சொன்னுர் நல்லது யெழுதி அனுப்பிவிக்கிறேனென்று சொன்னேன். கூடலூர்சேதி யேதாகிலும் வந்ததாயென்று கேட்டார் ஒன்றும் வரவில்லையென்று சொன்னேன். மற்றப்படி வீட்டிற்கு பணிரெண்டுமணி அடிச்சபடியினுலே வீட்டுக்குவந்து கடப்பை நாகோராவ் வீட்டுக்கு விருந்துக்குப்போனேன். சாயங்காலம் வெள்ளிக்கொண்டு வரப்போற தாசுமான் சதுரங்கப்பட்டணத்துக்கு சாகிப் போனது ராத்திரி ஆறரைமணிக்கு ஏழுமணிக்கு பங்காளா காகிதம்வந்தது அந்த காகிதத்திலே மதாம் தெப்ரேமெனி செத்த சேதிக்கு மதாம் துய்ப்ளேக்சுக்கு சேதி வந்து அங்காளச்சிக்கொண்டிருந்தான். எட்டு மணிக்கு துரையவர்கள் அழைப்பித்துச் சொன்னது.

செஞ்சிக்கும் சிதம்பரத்துக்கும் எத்தனே மைல் தூரம் உண்டென்று கேட்டார். ஆறுகாத வழி ஏழு காத வழி உண்டென்று சொன்னேன். செஞ்சிக்கும் புதுச்சேரிக்கும் எத்தனே மைல் தூரம் உண்டென்று கேட்டார். அயிங்காத வழி உண்டென்று சொன்னேன். ஆனுல் எத்தனே பாட்டை செஞ்சிக்கு மிதுக்குமென்று கேட்டார். இரண்டு பாட்டையென்று சொன்னேன். அப்பால் கண்டால் குருவப்ப செட்டியை காவல் வைத்து ஒரு வருஷமாச்சுதே ஒரு வருஷமாய் ஒன்றும் தீராமல் போட்டு வைத்ததாய் ஒன்று அவன் மார்க்கமாய் வந்தால் விட்டுவிடு

என்றும் இல்லாவிட்டால் ஒரு ஆக்கினை அவன் எப்போதும் நினைத்துக்கொண்டிருக்கத்தக்கதாக செய்து ஊரைக் கடக்கத் தொரத்தி விடுவோமென்று சொல்லச் சொன்னார். நல்லது அப்படி மார்க்கமாய் வந்தால்தானே நல்லது இல்லாவிட்டால் இரண்டு காதும் போமென்று முன்னேதானே சொல்லியிருக்கிறேனென்று சொன்னேன். ஆனால் இரண்டிலே ஒரு தரம் சொல் அந்தப்படிக்கு நடப்பித்துப் போடுவோமென்று சொல்லி இதுகளெல்லாம் அலட்சியமாய் வைக்கத் தேவையில்லையென்று சொன்னார். நல்லதென்று சொன்ன பிற்பாடு ஆசாரப்பன் சம்மதி லாசருபேசி தீர்த்துக்கொண்டாலாச்சு இல்லாவிட்டால் உன்னுடனே சொன்னபடிக்கு வேறே ஒருத்தரை வைத்துப்போட்டு அந்த துகையை வரபற்றிப் போடென்று சொன்னார். அப்பாலே ஆச்சுதேயென்று சொல்லி இனிமேல் அரை நாழிகையாகிலும் ஆவசியமாய் வைக்கத் தேவையில்லை என்று சொன்னார். நீங்களித்தனை சுருக்கிலே சொல்லச்சே நான் வைப்பேனா சீக்கிரமத்துக்கு அதற்கு மனுஷரை நியமித்து உங்களுக்கு உத்தாரம் சொல்லுகிறேனென்று சொன்னேன். பங்காளத்திலேயிருந்து காகிதம் வந்தது. அங்கே மராட்டியர் கலாபம் ஒரு மிதத்திலேயில்லை புதுசாய் வந்த பார்சாவினுடைய பேர் எழுதி வந்தது. அந்தப்படிக்குப் போகரிலே செதுக்கி வைக்கவேணுமென்று சொன்னார். எட்டு நாளைக்கு முன்பாகத்தானே யிப்போ புதுசாய் பட்டத்துக்கு வந்த பார்சாவினுடைய பேர் வெழுதிவந்தது உம்முடைய பேர்படமோகரு வேறே செதுக்கி வைக்கிறேனென்று சொன்னதுக்கு அப்படி செய் என்று சொன்னீர்களே ஆலம்புரவிலிருந்து மோகர் செதுக்கிறவன் வந்திருக்கிறான், அவன் கையிலே எழுதி கொடுத்து அவனும் மோகர் செதுக்கிறானென்று சொன்னேன். இப்போ கையிலே நீ போட்டுக்கொண்டிருக்கிறது அவன செதுக்கினதாவென்று கேட்டார். ஆமென்று சொன்னேன், அதன்பேரிலே மருட்டியார்ாச்சியம் பண்ணுகிறதாய் காணுது.

1748 ஆ. ஜூலை மீ 7 உந்த விபவ ஸ்ரீ ஆனி மீ 27உ ஆதிவாரம்.

துரையவர்கள் கோயிலிலேயிருந்து வந்தப் பிற்பாடு சமஸ்தமான பேர்களும் துரை பெண்சாதி மகள் மூசியே நேப்பெரெ

மேனியின் பெண்சாதி காலம் பண்ணிப்போன சேதிக்கு மெனவினர்கள் நானும் மதாம் துப்ளேக்சைப் போய் மெனவிப் போட்டு பாக்கு கிடங்குக்கு வந்தேன். அப்பால் பனிரெண்டு மணி மட்டுக்கும் யிருந்து வீட்டுக்குப்பேரனேன். அப்பால் மூணரை மணிக்கு அபரங்கபாது அண்டையிலே இறங்கி யிருக்கிருர். நாசற்சங்கு லசுக்கரிலே யிருக்கிற இமாம்சாயபு அண்டையிலிருந்து ஆற்காட்டிலே யிருக்கிற இமாம் சாயபு மகன் அசனல்லிக்கானண்டைக்கு வந்து துரையவர்கள் காகிதத்தை அங்கேயிருந்துக்கொடுத்து அனுப்பிவிக்க அது துரையவர்கள் கையில் வந்து சேர்ந்தது; துரையவர்கள் அழைத் தனுப்பி நானும் நாலு மணிக்குப் போனேன். மதனுந்தபண்டி தன் வரயில்லையென்று சற்றே கோபம்பண்ணி அப்பால் காகி தத்தை என் கையில் கொடுத்து படித்துப்பார்த்து நான் வந்த உடனே சொல்லென்று சொல்லிவிட்டு வெளியே சுவாரிபோனர். மதனுந்தபண்டிதன் வந்தவாசிக்கு பயணமனுப்பிவிட்டுக் கொண்டு நம்முடைய தோட்டத்திலே யிறங்கி யிருக்கிறவ னண்டைக்கு யேதாகிலும் சுத்தலாமென்று போயிருந்தான் அதிலே துரையவர்கள் அழைக்கிருரென்று சேவகன்போய் அழைத்தபடியினலே அல்லிநக்கேம் சாயபு நாளைமத்தியானம் ஊருக்கு பயணம் போறதாயிருக்கிறபடியினலே நாளை காலத் தாலே வாரேனென்று சொல்லிவிட்டு இவ்விடத்துக்கு வந்தான் அப்பால் என்னருகில் வந்த அல்லீநக்கீம்சாயபுடனே சந்தா சாயபு பெண்சாதி பெண்களெல்லாரும் வந்து அங்கே நம்முடைய தோட்டத்திலே யிறங்கியிருக்கிறபடியினலே யென்னை வரச் சொன்னனேதாகிலும் தாரேசமென்று அவனவன் பெண்கள் சந்தடியிலே யிருக்கிறேன். ஒரு நாழிகை பொறு; ஏதாகிலும் தாரேனென்று சொன்னேன். இதிலே துரை மனுஷர் வந்து அழைத்தபடியினலே செவ்வையாய் புறப்பட்டுவந்துவிட்டேன் என்று சொன்னன் அதன்பேரிலே இமாம்சாயபு கடுதாசிக் கொடுத்து அதிலே யென்ன எழுதியிருக்கிறது பார்த்துச் சொல் லென்று சொன்னதுக்கு அந்த காகிதத்திலே யெழுதியிருந்த வயணம்: முன் உங்கள் பேருக்கு அனுப்பின காகிதங்கள் பார்த்துக்கொண்டு அதிலே யெழுதியிருந்த சங்கதிகளெல்லாம் அறிந்திருப்பார்களே இப்போது இந்த வருஷம் சமாதிலாக்கர் என்கிற மாதம் 4-ந்தேதி ஆதிவாரம் நான் சாயங்காலம் அசாத்துநிசாமுவர்தன் பாளயமும் சேர்ந்தார்கள். அந்த ஸ்தான

மும் அந்த அயிஸ்வரியமும் சமஸ்தமும் அவர் குமாரன் நாசருசங்கை அடஞ்சுதென்று வெளிக்கு பத்திரிகையிலே யெழுதப்பட்டது ரெண்டுகோடி ரூபாயும் ரத்தினபெட்டி நகைகளும் ரத்தினங்களும் அருபத்தினாலு யானைகளும் 1200 குதிரைகளும் இலவசமாச்சுதென்று இதனுலேதான் முன்னமே தானே இவருடைய சினேகம் உங்களுக்கு இருக்கத்தக்கதாக பண்ணிவைத்தது யென்றும் இப்பவும் அவருக்கு மோபாரக்குபாதி காகிதமும் யெழுதி திநுசாகிலும் நகத்தாகிலும் உங்களுக்கு சம்மதியானது கொடுத்து சிக்கிறமத்துக்கு அனுப்பிவிக்கசொல்லியும், இனிமே உங்கள் மனதிலே நினைத்திருக்கிறபடிக்கு யெல்லாம் அனுகூலமாகிற காலமென்றும் இது அவசரமா யெழுதின காகிதம் சாவகாசமாய் வயணமாய் யெழுதி பிறகாலே அனுப்புகிறோமென்றும் எழுதியிருந்தது. அப்பால் என்பேருக்கு யெழுதின காகிதத்திலும் நிசாமவர்கள் காலம் பண்ணிப்போனதும் துரையவர்களுக்கு காகிதம் யெழுதிவைத்த வயணமாய் படித்துச் சொல்லச் சொல்லியும், உம்முடைய மனுசுபார்க்கிற யிப்போ கெட்டியாய் ஆச்சுது அது நமக்கு மூவர்க்குயிருக்குதென்றும் பதினஞ்சு இருபது நாளையிலே நாசருசங்கு பறமானும் நவாபு அன்வர்த்திகானுக்கு தாக்கீது பறமானுகண்ட உம்முடைய காரேக்கிறுமங்கள பரமானுக்கண்ட உடனே விட்டுவிடச் சொல்லியெழுதி வாங்கி யனுப்பிவிக்கிறேனென்று பரவசமாயெழுதியிருந்த காகிதம் படித்துப்பார்த்துக்கொண்டேன். யிதில் துரையவர்கள் வந்தார்கள். துரையவர்களுக்கு இமாம்சாயபு எழுதின காகித வயணம் முன்னேயெழுதியிருக்கிறதே அந்தப்படிக்கு துரையவர்களுக்குச் சொன்னேன். அதற்கு துரையவர்கள் ஒன்றும் உத்தாரம் சொல்லவில்லை யென்ருல் அவர்வேறே விசனத்தின்பேரிலே இருந்தாப்போலே கண்டு அப்பாலே எட்டு மணி வேளைக்கு அழைத்தனுப்பிவிட்டு ஒரு டோலியிலே செஞ்சிமார்க்கமாயிவ்விடத்துக்கு ஒரு வெள்ளைக்காரன் துலுக்கவேஷம் போட்டுக்கொண்டு வருகிருன். செஞ்சி வழி இரண்டு வழிபாட்டைசாரிகள் நடக்கிறதென்று சொன்னியே வழிக்கு இருபது சிப்பாய் விழுக்காடு நாற்பது சிப்பாய்களை படிக்கொடுத்து அந்த டோலியைக்கண்ட உடனே கூட்டிக்கொண்டு வரச்சொல்லிச் சொன்னுர். நல்லதென்று சொல்லி நாற்பது சிப்பாய்களை செஞ்சி வழியாய் நாளை சூரிய

உத்தியத்துக்கு அனுப்பச் சொல்லி ஷேக் இப்ராமுக்கு சொல்லி தாக்கீது பண்ணி அனுப்பிவைத்தேன். மற்றபடி யெழுதத்தக்க விசேஷயைக்காணோம்.

1748 ஆ ஜூலை ௴ 8 ௳ க்ஷ்ரு விபவ ௵ ஆனி ௴ 28 ௳ சோமவாரம்.

மைற்றனுன் காலத்தாலே துவரயண்டைக்கு போனவிடத்திலே இமாம்சாயபு அவர்களுக்குப் பதினாலு தரம் யெழுதச் சொல்லி சொன்னரது நாசற்சங்குக்கு மேர்பார்க்கு பாதி காகிதம் ரெழுதி அனுப்பச்சொன்னபடிக்கு யெழுதினேம், அவருக்கு நசார் ரேக்கமாய்த்தானே அவ்விடத்து நோக்கமும் காரியபாகமு யுக்தமும் உங்களுக்கு தெரிஞ்சிருக்கிறபடியினாலே உங்களுக்கு எம்மாத்திரம் சம்மதியோ அம்மாத்திரம் நசார் வைத்து யெழுதியனுப்பிவித்தால் அந்தபணமுமிங்கே உங்கள் குமாரன்வசம் ஒப்புவித்துப்போரேம் வழுதாவூர் தாலுக்கு வில்லியநல்லூர் தாலுக்குரெண்டு பறகனுவும் சாகிராய் கொடுக்கத்தக்கதாக பேசி யெனம் பண்ணச்சொல்லி யெழுதி இருந்ததற்கு அப்படியே நாசற்சங்கு முன்னிலைபாய் பேசி யெனம் பண்ணின பிறகாலே யெழுதி அனுப்பி வைக்கிறோமென்று யெழுதியிருந்தீரே யிப்போ சோமவர்கள் விழுந்துப்போய் அந்த ஸ்தானத்துக்கு நாசற்சங்குதானே எசமானுகயிருக்கிற பாட்டுக்கும் நாசற்சங்கு தன் தகப்பனுருக்குச் சொல்லி அப்படியே ஆகப்பண்ணி கொடுக்கிறேனென்று சொன்னவருக்கு இப்போ அவர்தானே சுவாந்திரியமாக யெழுதிக் கொடுக்க சுவாமி கடாக்ஷமுண்டாச்சுதே இப்போ தடையில்லையே ஆனபடியினாலே சீக்கிறமத்துக்கு யெனம் பண்ணி அனுப்பச் சொல்லியே எப்படி யெழுதவேணுமோ அப்படியெழுதச் சொன்னார் நல்லது என்று நான் பின்னையும் அத்துடனே கூட வேறே சிறிது உம்மையா யெழுதச்சொல்லி. மதனாந்தபண்டிதருக்கு சொன்னேன். அந்தபடிக்கு சவாது யெழுதி காகிதம் தீர்த்து யெழுதி அனுப்புகிறபோது சென்னபட்டணத்து திலுசு விட்டு விட்டோமென்று எழுதினுமே அவரதற்கு இன்னம் யெனக்கு வந்து சேரவில்லை அவாய்சாயபுக்கு தாக்கீது யெழுதி அனுப்புவித்தேன் நீங்களும் தாக்கீது பண்ணி சீக்கிறமத்துக்கு அனுப்பச்சொல்ல வேண்டியது யென்று எழுதினீரே

அதற்கு உத்தாரம் என்னவென்று எழுதவேணுமென்று கேட்டதற்கு நீங்கள் துலுக்கர்களுக்கு மத்தது பண்ணுகிறதே யல்லாமல் கும்பினீருக்குக் கூடிவர பண்ணுகிற யோசனை பண்ணுகிறதில்லையென்று கோபமாய்ச் சொல்லவந்தார். வுங்களுக்கு கோபமில்லாவிட்டால் சொல்லுகிறேன். நீங்கள் பண்ண யோசனையினாலே கும்பினீருக்கு ஐந்தாறு லக்ஷம் வராகன் நயமாச்சுதே இல்லாமற்போனால் சென்னப்பட்டணத்து சாடையாய் மாபுசுகான் வந்ததற்கு என்னயென்ன நடவாதென்று சொல்லி யிதுவென்ன ஆயிரம் வராகன் இரண்டாயிரம் வராகன் தினுசு இது நிமித்தியம் நாசர்சங்கு அண்டையிலே இமாம்சாயபு பிரயாசைப் பட்டதும் நிசாமண்டையிலே பிரயாசைப் பட்டதற்கு அவருக்கும் மனது சந்தோஷமாக அவர் தினுசு தடையாய் சொல்லுகிறதினாலே காலே கற்னாடகம் புதுச்சேரியார் நாமென்று சொல்லு சொல்லுகிறதற்கு நம்முடைய சாமானைத்தானே விடாமற்போனார்களென்று குறையாய் உங்களுக்கு முன்னே ஒரு தரம் எழுதினார். அது எம்மாத்திரம் காரியம் விட்டுவிட்டோமென்று எழுதச் சொன்னீர்களே என்று ஒரு லாட பாஷையாய்ச் சொன்னதற்கு அவா சாயபுக்கு சொல்லு, வெளியே யிருக்கிற லாபத்தினாலே ஆற்காட்டார் மற்றுமுள்ள வெளி ஜனங்கள் சமஸ்தமான பேரும் பந்தரத் தேடி சரக்குகளைக் கொண்டுவந்து வைக்கிற விடத்திலே இப்போ பந்தரிலே யிருக்கிற தட்டுமுட்டை வெளியே கொண்டு போகிறதல்லவென்று சொல்லுயென்று சொன்னார். அந்தப் படிக்கே சொல்லுகிறேனென்று சொன்னேன். மற்றபடி வேறே அதிசயமில்லை பனிரெண்டு மணி மட்டுக்கும் பாக்கு கிடங்கிலே யிருந்து வீட்டுக்குப் போனேன்.

1948 ஆ. ஜூலை மீ 9 உ ந்த விபவ ஹு ஆனி மீ 29 உ. மங்களவாரம்.

அப்பால் துரை அழைத்தனுப்பி வைத்து முசியே லபூர்தோனே ரேவிலேயிருந்து தான் ஒரு உலாந்து கப்பலிலே யேறி தன் பெண்சாதியையும் தட்டு முட்டையும் ஒரு கப்பலிலே போட்டு பொர்துகல்ராச்சியத்துக்கு அனுப்பிவிட்டு தான் புறப்பட்ட கப்பல் ஒரு பெருங்காத்துமழையும் அடித்து இங்கிலீஷ்காரர் ரேவிலே கொண்டுபோய் போட்டு அங்கே லபூர்

தோனே யென்று வெளியாகி அவனை பிடித்து இங்கிலித்தேர் ராசாவுக்கு ராசதானிய பட்டணமாகிய லோந்திருவுக்கு முசா அண்டைக்கு அனுப்பிவிட்டார்கள். இவன் சீமையிலே சின்ன மனுஷன் கள்ளமயிர் விற்றுக்கொண்டு திரிய னானும் கண் டேன் இந்த வூரிலே யிவன் வந்த வரலாரும் மேலே போட்டுக் கொள்ளுகிறதற்கும் சட்டைக்கு அவகாசமில்லாமலிருந்தும் அப்பால் முசியே லெனுவார் தயவினாலே மொக்கா சபரிலே பத்து பணம் திருடி சம்பாதித்தான் ஒருக்காலும் யாத்திரை யிலே உள்ளபடிக்கு கணக்குகொண்டுவந்து கொடுத்து அரியா னென்று சங்குராமனுடைய வசத்திலே இருந்த ரேபுத்து சரக் குகளையெல்லாம் இவன் கையிலே அன்பதனாயிரம் அருபதனா யிரம் வருகன் சரக்கு சுமை சட்டகொடுத்திலே கோவைக்கு கொண்டுபோய் நல்ல விலைக்கு விற்று இவனுக்கு யெழுதிவித் ததுக்கு ஒன்று பாதியா யெழுதிவித்தபடி விலைக்கு யெழுதி விக்கபோமா வென்றால் தள்ளுபடிக்கு அது கப்பல்கள் மேலே போகும்போது நனைந்து கிழிந்து தென்றும் போக்குச்சொல்லி அவனண்டையில் இருந்த ராயபுரம் நாராயணசெட்டிக்கு பத்து பணம்கொடுக்க அவன் தள்ளுபடி சரக்கு முடக்கமில் லாமல் வித்ததே அதை பெரியதென்று அவனுக்குச் சொல்ல யிப்படி லபுர்தொனே சம்பாதிச்சதுயென்று முசியே பிறியே லுடனே கூட இரண்டு, மூன்று நாழிகை பேசியிருந்து அப்பால் முசியே லவில்பார்கிதும் அப்படித்தான் திருடன் ஒருக்காலும் உன்னபடிக்கு எழுதி வைக்கிறதில்லை யென்று அந்த சாடையி லேதான் சொல்லி இப்போ ராசாவினுடைய உத்தாரம் அவன் ஆஸ்தியெல்லாம் எங்கே கண்டாலங்கே விசாரித்து எடுத்துக் கொள்ளச் சொல்லி உத்தாரமானபடியினாலே உனக்கும் முசியே வில்பாக்கு மணிலா சம்மதியிலே பங்கு அல்லவாயென்று கேட்டார். நான் மாத்திரமா முசியே கில்லியார், பிளவுவான், ரெரபோ, லெபோம், பெத்ரோ சங்கிராமன், கொர்னேத்து யென்று சொன்னேன். உன் வராகன் எத்தனையென்று கேட் டார்யென்ன வராகன் நாலாயிரத்து அருபத்தஞ்சு விராகன் யென்று சொன்னதற்கு நீங்களிப்போதானே போய் முசியே தெப்பிரோ அண்டைக்குபோய் திக்கிலேராஷியோம் பண்ணுங் கோளென்று சொல்லி அப்பால் முசியே கில்லியாரை அழைக்கச் சொன்னார். அப்பால் முசியே பிரியேல் இருந்து சொன்னது உங்கள் பொது சரக்கு மணிலாவில் இருக்கிறதின் பேரிலே

பதினாலாயிரம் பத்தாக்கு இவன்வாங்கிவந்தான். உங்களுக்கு சொல்லவில்லை எனக்கு மணிலாவிலே யிருந்து எழுதி வந்த தென்று சொன்னான். அதின்பேரிலே துரையிருந்துக்கொண்டு பெரிய திருடன் அப்படியென்று இவர்கள் பொல்லாப்பு தானே நாலு நாழிகை நேரம் பேசியிருக்கச்சே முசியே கில்லி யார் வந்தார் அவருடனே முசியே லவில்பார்கீரு மணிலாவுக்கு சொந்தமாய் கொண்டுபோன சரக்கிலே உங்களுக்கெல்லாம் பங்கு அல்லவா அந்த சம்மதிமுன் என்னுடனே சொன்ன படிக்கு சொல்லி கிரேபிலே போய் தெக்கிலாராசியம்பண்ணச் சொன்னார் அப்பாலே முசியே கில்லியார் என்னையழைத்து நாளைக்காலத்தாலே தானப்பமுதலி சங்குராமன் முதலான பேரை கோட்டைக்கு வரச்சொல்லுகிறேன், அங்கே கூடிப் பேசி அப்பால் கிரேப்பிலே முசியே தெம்போ அண்டைக்குப் போய்யெழுதிவைத்து கையெழுத்துப்போட்டு வருவோமென்று சொன்னான். நல்லது கனகராய முதலிக்கும் பிலாசருக்கும் சங்குராமனுக்கும் சொல்லுகிறேனென்று சொன்னேன். அப்பால் இமாம்சாயபுக்கும் நாசர் சங்குக்கும் காகிதமெழுதி அனுப்பச்சொன்னார் நல்லதுயென்று சொல்லி பாக்குக் கிடங்குக்குவந்தேன் பத்துமணி நேரத்துக்கு மாயேயிலேயிருந்து புறப்பட்ட பனிரெண்டாம் நாள் வந்தோமென்று இரண்டு பிராமணர்காகிதம் கொண்டுவந்தார்கள் அவர்கள் சொன்ன சேதி மாயேயிலே மழைகாலமானபடியினாலே கடல் மகா உரமாயிருக்கும் அதினாலே கப்பல் கரையிலே சேரமாட்டாது யென்று மேலே சிறிதுகப்பல் வந்திருக்கிறதாகவும் ஒரு சுலுப்பு வந்து பீரங்கிப்போட்டு தோணியிலே கடுதாசி அனுப்பினாப் போலே அந்த காகிதம் வந்து சேர்ந்த உடனே காகிதமெழுதிக் கொடுத்து எங்களை பனிரெண்டாம் நாள் போய் சேர்ந்தால் அருபது ரூபாய் கொடுக்கிறோமென்று சொல்லிப்போகச்சொன்னார்கள். நாங்கள் புறப்பட்ட பனிரெண்டாம் நாள்வந்துசேர்ந்தோமென்று சொன்னார்கள் துரைஅவர்கள் காகிதம் வாசித்து பார்த்துக்கொண்டு மறுபடி காகிதம் அப்போதானே யெழுதி கொடுத்து பனிரெண்டு மணிககு பத்து சேவகரையும் பயணம் பண்ணி ஆத்தூர்கடி மட்டுக்கும் வாடிக்கைப்படி கொண்டு போய் விட்டுவரச்சொல்லி அனுப்பினார் அந்தபடிக்கு பிருமணர் பிறகே சேவகரைக்கூட்டி அனுப்பினேன்.

பகலேக்குமேலாக நாலுமணிக்கு துரையழைத்தனுப்பினார். போகிறதற்குள்ளே சுவாரிபோரதற்கு புறப்பட்டு சென்னப் பட்டணம் வாசற்படியே போயிருந்த படியாலே அங்கே போய் கண்டு பேசினவிடத்திலே அரியாங்குப்பத்திலே யிருந்த சிப்பாய்களெல்லாம் படிகொடுக்க வில்லையென்று புறப்பட்டு வந்து விட்டார்களுமப்படி எனக்கு கொடுக்கவில்லை யென்று கேட்டார்கள் ஊர்பயணம் போகவில்லையே இங்கே யிருக்கிறவர்கள் அரியாங்குப்பத்திலே யிருக்கிறார்களவர் வளுக்கு படிகொடுக்கவேணுமா வென்று சொல்ல போரீர்க ளென்று துரையவர்களுக்கு யெச்சரித்து அவர் பார்த்து கொடுக்கச்சொன்னால் கொடுக்கிறேனென்று சொன்னேன். என்று சொன்னதற்கு துரையவர்கள் சொன்னது நம்முடைய விமித்துக்கு அப்புறம் அடிவைத்தாலும் படி கொடுக்கச் சொல்லி முன்னே தானே உனக்கு சொல்லியிருக்கும்போது அடிக்கடி சொல்லவேணுமா இந்த க்ஷணம் கொடுத்து அனுப்பு இப்படிப்பட்ட பிராது இனிமேல் வராமல்படிக்கு நடந்துக் கொள்ளென்று கோபமாய் சொல்லி இந்தக்ஷணம் நீ போய் கொடுத்தனுப்புயென்று சொன்னார் நல்லது யென்று அந்த க்ஷணம் சேக்குஇபிருமை அழைப்பித்து சொல்லி அனுப்பிவிட் டேன் அப்படிக்கு பணம் நாளைக்கு பரசுராமபிள்ளை கையிலே வாங்கித்தாரேன் யென்று சொல்லி அனுப்பிவிட்டேன் மற்ற படி சாயங்காலம் வேரே அதிசயமில்லை.

1748 ஆ௵ ஜூலை மீ 10 உ க்கு விபவ ஸூ ஆனி மீ 30 உ புதவாரம்.

இற்றைநாள் காலத்தாலே நடந்த சேதியென்ன வென்றால் ரூசியே பாரதி காரைக்காலிலேயிருந்து சின்ன சிலங்குபேரிலே யேரி பரங்கிப்பேட்டை துரை கேருயிறங்கி அங்கேயிருந்து மாறுவேஷம்போட்டுக்கொண்டு ஒரு கூலிக்காரனை கூட அழைத்துக்கொண்டு கால் நடையாய் திருவேந்திபுறத்தின் பேரிலே புறப்பட்டு இராத்திரி அரிச்சப்பாக்கத் தண்டை யிலேயிருக்கிற தண்டிலேவந்து சேர்ந்தார். இப்போ யிவ்வி டத்துக்கு வந்து துரையைக்காணுவாரென்று அரிசம்பாக்கத் தண்டையிலே யிறங்கி யிருக்கிறதண்டிலே இருக்கிற சேவகர் வந்து சுபுறுசொன்னார்கள். அப்பால் நேற்று ரூசியே லவுலயாக்

சேர்ந்த சம்மதி மணிலாவுக்கு அனுப்பியிருக்கிற சரக்குக்கு தெக்ளாசுருசியோசம் பண்ணிவைக்கிறதற்கு மூசியே கில்லியார் எல்லாரையும் கோட்டையை வந்து சேரச்சொன்னார் என்று மூசியே கில்லியார் வீட்டுக்குப்போய்க்கண்டு பேசினவிடத்தில் அவர் நீர் முன்னே கோட்டைக்கு போம் நாமும் உடுத்திக் கொண்டுவாரோமென்று சொன்னார். இதிலே மூசியே தெப்பிறன் அழைத்தனுப்பினனே அவன் வீட்டுக்குபோய் வருவோமென்று அங்கே போவோமென்று போனதுக்கு அவன் மசுக்கரைக்கு நீரும் நாமும் கூடி சரக்கு அனுப்பினோமே உமக்கு நூத்துக்கு இருப்பத்தஞ்சி ஆதாயமும் எனக்கு நஷ்டம் வந்தது யென்று கும்பினீர் ஒருதிபடித்திக்குலார்விக்க தேவையில்லை கும்பினி யாரே யல்லாமல் யென்று யெழுதியிருந்து அதின் பிற்பாடு இந்த சரக்குபோனபடியினாலே கும்பினீரிலே யெடுத்துக் கொண்டு சீர்மை உண்டிகைக்காகிதம் கொடுத்தபடியினாலே அந்த லேத்தூர் தெஷயான்சு வந்திருக்கிறது. ஆன படியினாலே அதை விற்றால் நஷ்டம் வரும் இந்த நஷ்டங்கூடி வரத்தக்கதாக இப்போ உமக்கு கொடுக்கவேண்டிய பணத்துக்கு ஒரு வருஷ தவணை கொடுத்தால் உண்டான கரைவட்டி கொடுக்கிறேன். இதிலே ஒரு யாத்திரை மசுக் கரைக்கு அனுப்பி அந்த நஷ்டம் கூடிவர பண்ணுகிறேன் யென்று யிப்போ மசுக்கரையிலே பெரிய துரைத்தனம் பண்ணுகிற மூசியே தாவித்து எனக்கு ரொம்ப பள்ளிக் கூடத்து சினேகம் உன் காரியங் கவைகளிலே என்றாலே ஆனமட்டுக்கும் கூட வரச்செய்கிரேனென்று இப்போ வந்த சரக்குக்கும் கும்பினீர் கிடங்கிலே போய் சேர்ந்து குவர்ன தோரது மகாசேன் கையில் ஒப்புவித்த பிற்பாடு உம்முடைய காகிதம் பார்த்தபடியினாலே அதனளவிலே யாதொரு சகாயம் பண்ணக்கூடாமல் போனதென்றும் இப்படியாக யெழுதியனுப் பினபடியினாலே இனிமேல் அவரைத்தொட்டு யெனக்கு வெகு சகாயம் உண்டாயிருக்கும் அதைத்தொட்டு யென் நஷ்டபணம் கூடிவருமென்றும் மூசியே லக்கிரீனே உமக்கு கொடுக்கவேண்டி யதுக்கு நான் சொல்விக்கொண்டேன். அந்த பணம் யெனக்கு ஒருகாசு அவனனுப்பவில்லை- ஆனால் உமக்கு நான் கொடுத்துத் தீரவேணுமென்று யிப்படியாகச்சொன்னான். நல்லது நம்மு டைய பிடவைக்கணக்கு யெழுதி காண்பித்த பிற்பாடு

சொல்லுகிறேனென்று சொல்லி பின்னையும் கப்பல்சேதியும் முசியே லபுர்தோனே வந்த சேதியும் பேசியிருக்கும்போது இது களுக்கெல்லாம் அவன் பெண்சாதியும் கூட யிருந்து மத்திய மத்தியே அவளும் அந்த அனுசாரமாய் உத்திரம் கொடுத்து கொண்டுவந்தான் அப்பால் அங்கே அனுப்பிவித்துக்கொண்டு கோட்டைக்கு முசியே கில்லியார் சேர்ந்த ஊருக்குப் போனவிடத் திலே முசியே பிளவுவான் கோர்னேந் முதலானபேரிருந்தார்க ளங்கே முசியே லவில்பாக்த பங்குக்காகிதத்தை காண்பித்த வுடனே அவரவர் அந்தப்படி பங்கு காகிதமெல்லாம் காண் பித்து முசியே பிளவுவான் கையில் கொடுத்து கிறேப்பிலேபோய் யெழுதிவைத்தால் நாங்களும் வந்து கையெழுத்து போடுகிறோ மென்று சொல்லி முசியே பிலவுவானே கிறேம்புக்கு அனுப்பி வித்துப்போட்டு அப்பால் குவர்னதோர் வீட்டுக்குப்போய் அவருக்கு நபாபு அன்வர்த்திகான் யெழுதின மோர்பார்க்கு காகிதம் படித்து சொன்னவயணமென்னவென்றால்: நிசாமவர் கள் காலம் பண்ணிப்போன பிற்பாடு நாசற்சங்கு அந்த படிக்கி வந்த பிற்பாடு ஆற்காட்டு சுபாகிர உங்களுக்கு மோர்பார்க்கு யிருக்குதுயென்று யெழுதின காகிதத்துக்கு நக்கலு அந்த சந் தோஷம் உங்களுக்கு சந்தோஷமான படியினாலே பேதமில்லா மல்; கீர்த்தியாயிருக்கிற இடமானபடியினாலே யெழுதினோம் என்று யெழுதின மோர்பார்க்குபாதி காகிதச்சேதி துரையவர் களுக்கு சொன்னதற்கு மறுகாகிதம் உபசாரமாயெழுதி அனுப் பச்சொன்னார் அந்தபடிக்கு மசூதாபண்ணி ஆனது நாளையதி னம் யெழுதியனுப்புகிறோம் அப்பால் பிளவுவான் கிறேப்புக் குப்போய் முசியே தேப்பிரோ கையிலே எழுதி வித்து எங்களை வரச்சொல்ல சொல்லி அனுப்பினார் அந்தபடிக்குப்போய் நாங்களனைவரும் கையெழுத்துப் போட்டு புறப்பட்டஉடனே முசியே பாரிதியும் பிறியேலும் முசியே ஓசேயும் வாந்தார்கள் நானும் தானப்பமுதலியும் சலாம்பண்ணி உபசாரம் சொன் னோம் அவரும் உபசாரம் சொன்னார் அப்பால் துரை வீட்டே போனேன் துரைபெண்சாதியை மகள் செத்துப்போனதற்கு மெனவினேன் அப்பால் துரையுமவனும் பேசியிருந்து முசியே ஓசே வீட்டிலே போயிறங்கினாரங்கே துரை போய் விசா ரித்து விட்டுவந்தார் அப்பால் யென்னை அழைத்தனுப்பி முசியே பறதி எத்தனம் பண்ணினான் தேவனாம்பட்டணத்து கூண்டோராக கால் நடையாய் வேஷம்மாரி கூலிக்காரனை

கூட அழைத்துக்கொண்டு வந்து சேர்ந்தான். வந்தானே யென்கிற சந்தோஷப்படுகிறவர்கள் புத்தியில்லாதவர்கள் அகப்பட்டுக்கொண்டாலதைவிட கிலேசம் வேறேவுண்டா இரண்டுக்குத்தமாம்படியே நடந்து அதின்பேரிலே பொல்லாப்பு வந்தால் சகஜமா என்னுவார்கள் இப்படி துடுக்காய் வந்து ஒரு பொல்லாப்பு வந்தாலதை தொட்டு ஜனங்களுமே நிந்தமாய் சொல்லுவார்கள் கும்பினியாருமதைதொட்டு ஒரு நேரம் சுமத்துவார்கள் அது அவன் மெத்த சமத்தாய் யெண்ணினான். அதைப் போலே ஊழமிவ்லே விவேகிகளென்னுவார்கள் யென்று சொல்லி அப்பால் செஞ்சிவழியாய் வாராரென்று நாற்பது சிப்பாய்களை அனுப்பினது அந்த சிப்பாய்களை அழைப்பியென்று சொல்லி தானியம் விஸ்தாரமாய் சேர்க்க அதுவேளையிலே யிருபச்சரிசிகூட இனிமேல் வாங்கச்சொல்லி சொன்னார் அவாசாயபு உங்களுக்கு ஒரு காகிதமெழுதி அனுப்பினது தன்னை சீக்கிறமத்துக்கு பயணம்பண்ணி அனுப்பசொல்லியும் தான்வந்த கல்யாண காரிய சரஞ்சாமி சீக்கிறமத்துக்கு முஸ்தீது பண்ணிக்கொடுக்கச்சொல்லியும் யெழுதி யிருக்குதென்று சொன்னதுக்கு அவரை யின்னது யின்னது யென்று கேட்டு வந்துச்சொல்லென்று சொன்னார் நல்லது யென்றுச் சொன்னேன். அப்பால் வீட்டுக்குப்போனேன். சாயங்காலமானபிற்பாடு துரை அழைத்தனுப்பித்து ஆர்க்காட்டு சேதியேதாகிலும் வந்ததா யென்று கேட்டார். மிருதுசல்லிகான் ஆர்காட்டுமேலே போய் விழுந்து நபாபுதானுகிறதாயும் அதுநிமித்தியம் ராணுவுசேர்க்கிறதாயும் சேதியல்லாமல் அவரவர் தங்கள் தங்கள் உடமை உப்பந்திகள் பத்திரமான யிடம்தேடி அனுப்புகிறார்களென்றும் கபுறு இருக்குதென்று சொல்லி வந்தேன்.

1748 ஆ சூலை மூ 11 உ க்கு விபவ ஞ ஆனி மூ 31 உ குருவாரம்

அப்பால் காலத்தாலே துரையவர்கள் வீட்டுக்குவந்தவிடத்திலே யிற்றையநாள் காலத்தாலே எட்டுமணிக்கு கோன்சேய் கூடி மூசியே லேக்கு சின்னதுரைவசமாய் தெறெசோரியேயென்கிற வெள்ளிக்கிடங்கு உத்தியோகம் மூசியே கில்லியாருக்கும் மூசியே லேகு வசமாயிருந்த கொம்முசேர் தே துருப்பு

என்கிற உத்தியோகம் பரதிக்குக்கொடுத்தார்கள். அப்பால் முசியே பீ.ரீ.பேலுக்த கோன்சேலியேர் உத்தியோகம் முசியே கில்லியர் வசமாயிருந்த கசேர்ன் உத்தியோகமும் கொடுத்தார்கள் முசியே கோற்னேத்துக்கு கோன்செலியேர்தொனேர் யென்று பேர்கொடுத்தார்கள் ஆனல் கோன்சேல்பேருக்கு நடக்கிறுப்போலே ஒருதி மேன்பாடு யெல்லாமுண்டு இனிமேல் கோன்சேலுக்கு குறைச்சலானல் லப்போ இவரைக்கூட சேர்த்து கொள்ளுகிறது யென்றுப்போலேயும் மற்றப்படி விசேஷமான காரியங்களுக்கு கோன்சேல்கள் கூடுகிறதுண்டே அதுக்கு அழைத்துவைத்துக் கொள்ளுகிறுப்போலேயும் இப்படியாக நடத்துகிற மரியாதை கோன்சேல்பேர் தெ அதோரேசு யென்கிறபேருக்கு நடக்கிற மரியாதை அந்த கோன்சேலியேர் தெ அத்ஞான ரேசு என்கிற உத்தியோகம் முசியே கோற்னேத்துக்கு கொடுத்தார்கள். இந்தபடிக்கு கோன்சேல் தீர்த்து கையெழுத்துப்போட்டு அவரவர் வீட்டுக்குப்போனர்கள் சின்னதுரை முசியேலெரு தனக்கு எண்பதுவயது ஆச்சுது இனிமேல் தன்னலே உத்தியோகம் பண்ண தள்ளாதென்றும் சீர்மைக்கு யெழுதிக் கொண்டு இவ்விடத்து கோன்சேலுக்குச் சொல்லிக்கொண்டபடியினலே முசியே லேநு உத்தியோகத்தை வாங்கி முசியே கில்லியாருக்கும் முசியே பாரதிக்கும் கொடுத்தார்கள் முசியே பாரதிக்கு கொடுத்த உத்தியோகம்படிக்கு யெல்லா எஜமானத்துவம் ஆனல் சின்னதுரைக்கியிருக்கிற அதிகாரத்தைப்போலே மற்றபேருக்கு ஒருத்தருக்கும் அந்த அதிகாரமில்லை முதலாவது இந்த புதுச்சேரிக்கு யிருக்கப்பட்ட ராணுவத்துக்கு எசமானப் படையெல்லாம் இவர் சொன்னபடி கேழ்க்கிறது இரண்டாவது கும்பினீர் வியாபாரத்துக்கு யெல்லாம் எஜமான் மூணுவது ரூாயத்துக்கு கறத்தன்நாலாவது பணத்தோடே சேர்ந்ததெல்லாம் யிவர் வசம் ஐந்தாவது சாவடி கடக்கரை தீர்வைகளிவர் உத்தாரம்படிக்கு நடக்க வேண்டியது ஆறுவது பீறங்கிகளை மேஸ்திரிகள் பீறங்கிகள் யெடுக்கிறது யிவருடைய உத்தாரமில்லாமல் சுடப்போகாது இப்படி சமஸ்த அமுலும் சின்னதுரையினது ஆனபடியினலே இவருக்கு இருக்கிற அதிகாரம் பிள்ளை ஒருத்தருக்கும் கொவறன்றுக்கும் பெரியதனம் தவிர பின்னை ஒன்றுமில்லை அப்படிப்பட்ட மேன்பாடான அதிகாரத்துக்கு முசியே லேநு சின்னதுரையாயிருந்தபடியினலே பரிளிமக்கவில்லை நபோளசகன் கையிலக்கப்பட்ட ரம்பைப்போலே

காரியமில்லாமலிருக்கிறது. இந்த உத்தியோகத்தை பின்னை எத்தனைக்கையிலே ஆகாதவனிருந்தாலும் அதினுடைய சோபிதமும் காரியம் வேறே ஆனால் வர வர தீரமானிக்கத்தக்கதாய் நடக்கும் இந்தப்படி யின்றையதினம் கோன்சேலிலே தீர்ந்தது மற்றபடி அதின் பிற்பாடு மூசியே கில்லியார். மூசியே பாாதி மூசியே கோர்னேந்துறுரை அவர்களுக்கு உபசாரமாய் சொல்லிப் போட்டு போனார்கள்.

பகலுக்கு மேலாக நாசர்சங்குக்கும் இமாம்சாயபுக்கும் காகிதமெழுதி அனுப்பினோம் நாசர்சங்குக்கு மோபார்க்கு பாதி யெழுதுகிற ஞாயப்படிக்கு யெழுதின காகிதமொன்றும் அவருக்குத்தானே மாத்தம் புரிசிக்கு ஒரு காகிதம் நிசாமவர்கள் காலம் பண்ணிப்போனதற்கு மாத்தம்புரிக்காகிதமென்றும் இமாம்சாயபு அவர்களுக்கு மாத்தபுரிசி காகிகம் கொடுத்து அப்பால் மொபார்க்கு பாதி காகிதம் கொடுக்கிறதற்கு உமக்குத் தமானுலப்படி கொடுக்கச் சொல்லியும், இல்லையென்று மாத்தம்புரசி காகிதத்தை மொகக்துபுபண்ணி மோபார்க்குப் பாதி காகிதம் மாத்திரம் கொடுக்கிறதானால் கொடுக்கச் சொல்லியும் முபார்க்குபாதி நதிரானபடியினாலே அவ்விடத்துக்கும் சிவிசிலாயக்கு என்னமோ அந்தபடிக்கு உங்களுக்குச் சம்மதியான நசரைவைத்து எழுதியனுப்பினால் உம்முடைய குமாரன் வசம் கொடுத்துவிடுகிறோமென்று வழுகாவூர், வில்லியநல்லூர் பறகணைக்கு முன் பிறேத்தினம் பண்ணுகிறதற்குச் சமுகியமிதென்று எப்படி எழுதவேணுமோ அந்தப்படி யெழுதி மற்ற சமாசாரத்துக்கெல்லாம் வயணமாய்ப் பிறகாலே அனுப்பிவிக்கிறோமென்று எழுதி மோகர்பண்ணி பையிலே போட்டு இமாம் சாயபு அண்டையிலிருந்து வந்த காசிதி கையில் கொடுத்து முன் சொகர்பந்த சித்தி அப்துல்கபூர் என்கிற கில்லேதார் இமாம் சாயபுக்குக் காகிதமனுப்பி யிருந்தான். அந்தக் காகிதமும் கொடுத்து அனுப்பி வைத்தோம் என காகிதமும், நாசற் சங்குக்கும் இமாம்சாயபுக்கும் என் மனசு பாசாகிற காரியத்திற்குகூட எழுதி அனுப்பி வைத்தேன். மற்றபடி மீர்குலா முசேன் சாயபு புத்திரோபகாரம் பண்ணிக்கொண்ட பேர் விளங்கன் சாயபுக்கு வேலூரிலிருந்து பிள்ளை பிறந்ததென்று சேதி சொன்னபடியினாலே நான் போய் ஐந்து வராகன் நதிரும் வைத்து முபார்க்குபாதிச் சொல்லி அனுப்பச்சொல்லி வந்தேன்.

1748 ஆ௳ ஜூலை மீ 12 உ௳ விபவ ஹு ஆடி மீ 1 உ சுக்கிரவாரம்.

இற்றைநாள் காலத்தாலே நானும் தானப்ப முதலியும், முசியே பராதி அண்டைக்குப் போய் என் வசத்திலே பதினாலு மோகரா யிருந்தது அந்த மோகருவிலே தானப்ப முதலி ஐந்து மோகருக் கேட்டார் கொடுத்தேன். அவர் ஐந்து மோகருவும் நான் ஐந்து மோகருவும் கொண்டுபோய் நசர்வைத்தோம் அவரும் உபசாரம் சொன்னார் நானும் உபசாரம் சொன்னேன். நாற்காலி போட்டு உட்காரச்சொன்னார்கள் உட்கார்ந்தோம் இதிலே ரெண்டு மூனு வெள்ளைக்காரர் வந்தபடியினாலே உங்களுடனே பேசக் கவயும் யிருக்குது பேசுரத்துக்கில்லை நானும் துரைவீட்டுக்கு போகவேணுமென இருக்கிறோம் யென்று சொன்னான் நல்லது நாலுமணிக்கு வருகிறோமென்று சொல்லிப்போட்டுவந்தோம் இப்போ கொடுத்த மோகரு காரைக்காலிலே எங்கள் கையில் அனியாயம் பண்ணி வாங்கினதுக்கு வட்டி யெண்ணிக்கொண்டதே அல்லாமல் இந்த சண்டாளனை தொட்டு வேறே அக்கரையில்லை அப்பால் துரை வீட்டுக்குப்போனோம் அங்கே கோன்சேல் கூடியிருந்தார்கள். அப்பால் கோன்சேல் கலைந்து அவரவர் வீட்டுக்குபோன பிற்பாடு துரையவர்கள் மதாம் தோந்தேல் வீட்டுக்கு பெண்சாதியுடனே கூடப்போனார் நானும் பாக்குக்கிடங்குக்கு வந்தேன் மற்றபடியண்டை இத்தினம் கோன்சேலுக்கு முசியே கோர்னேத் வரவில்லை முசியே பிரியேல் மாத்திரம் வந்தான் மற்றபடி யன்றையதினம் கோன்சேல் காரியமின்னதென்று தெரியவில்லை.

இற்றைநாள் பகலைக்குமேலாக முசியே கோர்னேந்து என்னை அழைத்தனுப்பித்து முன்னாலே ஒரு மனுஷனுக்கு உன்னுடனே சொல்லியிருந்தேன் யிப்போ சீர் கொவர்னதோர் எனக்கு உத்தாரம் கொடுத்தார். உனக்கு சம்மதியானபேரை வைத்துக்கொள்ளச்சொல்லி உமக்கு சொன்ன மனுஷன் தயாராயிருக்கிறானா வென்று கேட்டதற்கு இருக்கிறானதுக்கு வயணம் காலத்தாலே வந்து சொல்லுகிறேனென்று சொன்ன பிற்பாடு ரெங்கப்பிள்ளை நேத்து கோன்சேலிலே சிறுபேருக்கெல்லாம் உத்தியோகம் நியமித்தார்களே அந்த வயணம்

சொல்லுகிறேன் கேளென்று சொன்னான் முசியே பீரியேல் முசியே போலேவையும் கோன்சேலியேர் சூர்னெம்மெறோர் என்று எனக்கு முன்னதாய் வைத்தார்கள். என்னைக் கோன்சேலியேர் தெ அத்லெனே ரெசு என்று அதற்குப் பின்னதாய் என்னை வைத்தார்கள். ஆனபடியினாலே நான் பெரிய வரிசை வைத்து அவர்கள் முன்பாக கோன்சேலியேர் என்று சமஸ்தமான பேருக்கும் அறிவிக்கப் போகிறார்கள். ஆனபடியினாலே இப்போ சீர் குவர்னதோருக்குப் பித்திசம் எழுதினேன். நாளது வரைக்கும் இருக்கிற சுமாஷாம் தருதரமாய்க் கொப்பிகள்கூட எழுதி மூசியே பேரியேனக்குப் பிறகே வந்த கொம்மி அப்படியிருக்க அவனுக்குக் கோன்சேலியேர் உத்தியோகம் கொடுத்து கோன்சேலியரு யிருக்கிறான். நான் கும்பினீரைச் சேவித்து என்னைப்போலே காரியம் பார்க்கிறவனில்லே. அப்படியிருக்க எனக்குப் பிந்தினவர்களை எனக்கு முன்னதாய் வைக்கிற ஞாயமல்ல; இத்தனை நாளும் இருந்தபடிக்குத்தானே தயவு வருகிற மட்டுக்கும் சுமாஷ்மாய்த்தானே இருக்கிறேன். இல்லையென்று உமக்கு தயவு இருந்தால் அவர்களுக்கு முன்னே என்னை இருக்கத்தக்கதாக தயவு செய்யென்று எழுதிக்கொண்டு இப்போதான் அனுப்புகிறேன். இதல்லாமல் எனக்கும் பிறகே வந்தவர்கள் பங்காளத்திலிருக்கிறவர்களுக்குக் கூட கோன்சேலியேர் சூர்னிம்றோர் என்று எழுதினார்கள். இதுகளுக்கு குவர்னதோர் என்ன உத்தாரம் கொடுக்கிறாரோ அறியவேணுமென்று சொல்லி துரை மனதிலேதான் தீர்த்து எழுதி வைத்ததற்கு இவன் தகரார் எழுதிப்போமோவென்று கூற கோபத்தினாலே உத்தியோகத்திலேயே இருக்கக் கவையில்லையென்று உத்தாரம் சொல்லுவாரோ, கும்பினியாருக்கு எழுதிக்கோவென்று எழுதுவாரோ தெரியாது. என்னமாய் உத்தாரம் சொல்லுகிறாரோ தெரியாதென்று சொல்லி தான் துரைக்கு எழுதிக்கொண்ட பித்திசாமை மன்னாரு நாய்க்கன் கையிலே கொடுத்து சீர் குவர்னதோர் கையிலே கொடுத்து நீ வந்துவிடு என்று சொல்லி அனுப்பினான். அதன்பேரிலே சூரனேமேறார் என்கிறது கோன்சேலியேர் ஒருத்தன் குறைச்சலானால் இவர்கள் போய் அந்த இடத்திற்கு தடையில்லாமல் போய் இருக்கிறது. அத்லெனேசெசு என்கிறது மரியாதை மாத்திரம் கோன்சேலியருக்கு நடக்கிறபடிக்கு நடக்கிறது யாதொரு பெரிய காரியம் வந்தாலன்றைக்கு கோன்சேலிலே

கூட அழைப்பார்கள். அதுவே அல்லாமல் எப்போதும் கூடுகிற கோன்சேலுக்குப் போகக்கூடாதென்று வயணம் சொன்னதை கேட்டுப்போட்டு நாளையதினம் வந்து கண்டுபேசுகிறேனென்று சொல்லிப்போட்டு பாக்குகிடங்குக்கு வந்து தினசரி எழுதிக்கொண்டிருக்கும்போது மாயேயிலிருந்து பிராமணத்தபால் காகிதம் கொண்டு துரைக்குக்கொடுத்தார் எனக்கு வந்து பிராமணர் கபுறு சொன்னவயணம் தங்களுடனே மாயே கப்பித்தான் சொன்னது யிப்போ மேலாகப் போகப்பட்ட கப்பல் சீர்மையிலே யிருந்து புறப்பட்டு வருகிற கப்பல் இராசாகப்பல்கள் இதிலே பெரிய மனுஷன் போனான் வெகு பலனாக போற கப்பல்கள் இதிலே வெகு சொல்தாதுகள் போகிறார்கள் இந்த கப்பல்கள் நீங்கள் பனிரெண்டாம் நாள் புதுச்சேரிபோய் சேருகிறதற்கு முன்னமே கப்பல்கள்போய் சேர்ந்திருக்குமென்று சொன்னான் என்று சொல்லி இப்போ வருகிற கப்பல்கள் பெலத்தைத்தானே ரொம்ப கொண்டாடிச் சொன்னார்கள் அப்பால் தெத்துவாசற் மூடிப்போடுவார்களென்று துரைக்குச்சொன்னோம் வாசல் திறந்து அனுப்பச் சொல்லி காகிதமெழுதிகொடுத்தார் துரையும் சந்தோஷமாகத் தானே யிருக்கிறாரென்று சொல்லிப்போட்டு போனார்கள் அப்பால் ஒன்பதுமணி வேளையானபடியினாலே பாக்குகிடங்குக்கு வந்தேன்.

1748 ஆ ஜூலை மீ 13 உ க்கு விபவ ஞ ஆடி மீ 2 உ சனிவாரம்

இற்றை நாள் காலத்தாலே பெரியவரிசை வைத்து கொமுசாயிரு கோன்சேல் வுத்தியோகம் சுமாஷாம் யிவர்களையெல்லாம் பெரிய வரிசையிலே வைத்து காகிதம் படித்தார்கள். முசியே பாராதி கொமுசாயிருந்த திருப்பு முசியேபிரியேல் போலே முசியே கோர்னேத்து இவர்கள் கோன்சேலுக்கு பாத்திரவான்கள். நேத்திக்கு எழுதின வயணப்படிக்கு முசியே திலோர்ஷ் முசியே லெத்துாஷ் கிருமேசொப்பின்னையும் ஒருத்தன் பேர் வினங்கன்சமர்ஷா மகன் அப்புறம் சிறுகனாகள், கும்பிகள் இந்தப்படிக்கி படித்து சகலமான பேரும் அரிவித்தார்கள். கேத்து முசியே கோர்னேத்து யெழுதின பித்திசமுக்கு வென்ன வுத்திரம் துரையவர்கள் சொன்னாரோ நடந்தவயணம் தெரிந்

துக்கொண்டு இன்னமொருநாள் தினசரியிலே யெழுதி யோட்டு கிறேன். அப்பால் நபாபு கிரி ஆனதுக்கு மாபூசுகானுக்கும் திரும்ப கொடுத்து காகிதமெழுதி அனுப்பினதற்கு நதீர் வந்து சேர்ந்ததென்றும் துரைக்கு மேரபார்க்கு இருக்குதென்றும் எழுதின காகிதம் பதில் சமாசாரம் சொன்னேன். அப்பால் எனக்கு யெழுதுகிற காகித வக்கணை இத்தனை நாளும் வர்த்தக ருக்கு யெழுதுகிற வக்கணை திசாரது பனூர்களென்று எழுதுகிற வாடிக்கையை விட்டு சவுரிய பராக்கிரமங்களுக்கு யெல்லாம் ஸ்ரேஷ்டத்துவம் பொருந்திய ஆனந்த ரங்கப்பனுக்கு யென்று யெழுதினார். இதற்கு மதராந்தபண்டிதர் நூதனமாய் இந்த வக்கணை யெழுதினபடியினாலே பிரபுவுக்கு யெச்சரிக்கை பண்ணவேணுமென்று சொன்னார். அதின்பேரிலே துரை யவர்களுடனே எச்சரித்ததற்கு அவர் மாபூசுகான் ஞாயம் யெழுதினான் சகல விடியமும் பொருந்தியிருக்கப்பட்ட என் உத்திரவின்பேரிலே நீ சமஸ்தமும் உத்திரவு கொடுத்து நடத்தினபடியினாலே சவுரிய பராக்கிரமத்துக்கு யெல்லாம் ஸ்ரேஷ்டத்துவம் பொருந்திய ஆனந்த ரங்கப்பிள்ளை யென்று யெழுதினது ஞாயம்தான் என்று நகைத்துக்கொண்டு சொல்லி அப்பால் முசியே பாராதீ வந்த உடனே அவருடனேயும் பின்னை யும் வந்த வெள்ளைக்காரருடனேயும் முசியே மேர் டைரேபூர்க் முசியே ரொபேர் இவர்களுடனே சொல்லிக்கொண்டு அந்த சவுரிய பராக்ரமம் வந்து மாபுசுகானுக்குத்தானே அனுபவம் காண்பித்தபடியினாலே அவனப்போ தானே யெழுதவேண்டிய துங்கு இப்போ யெழுதினானென்று நகைத்துக்கொண்டிருந் தார்கள். அப்பால் துரையவர்களென்னை தனியே அழைத் துக்கொண்டு போய் சொன்னது சண்டைக்கப்பல்கள் இவ் விடத்துக்கு வந்து சேருகிறதற்கு முன்னமே சீர்மையிலே சமாசாரமான சேதிக்கு ஒரு சுலுப்புமுன்னே கபுறு கொண்டு வரும் அந்த கடுதாசி இந்த சண்டைக்கப்பல்கள் வந்து சேரு கிறதற்கு முன்னமே வந்து சேரப்போகிறது அது நீ பார்க்கப் போறாயென்று சொல்லி அப்பாலிந்த சண்டைக்கப்பல் வந்த பிற்பாடு சீர்மையிலே இங்கிலிஷ்காரருக்குள்ளேயும், பிரஞ்சுக் காரருக்குள்ளேயும், ஒலாந்துக்காரருக்குள்ளேயும் வெகு பேர் வர்த்தகர்கள், குடியானவர்கள் கெட்டுப்போனதுமல்லாமல் ஈரோப்பு இராஜ்யம் மெத்த ஆதுருட்சியம்பட்டு போச்சு

தென்று சொல்லி சொன்னார்கள். அதற்கு நான் 1743 வருஷம் கலகம் தீர்ந்து சமாதானமாய் போமென்று முன் இவ்விடத்திலே ஒரு வெள்ளைக்காரன் ஜோசியஞ் சொன்னானென்று ரெண்டு மூணு வருஷத்துக்கு முன்னமே சொல்லியிருந்தேனே அப்படியிவ்விடத்திலும் சுவாமி கடாக்ஷத்தினாலே நடக்கும் யென்று சொன்னேன். அதற்கு துரையவர்களும் அப்படியே நடக்கும், சுவாமி ரக்ஷிப்பார் என்று சொன்னார்கள். அப்பால் வெள்ளிக் கொண்டுவரப்போன தாசுமானுக்கு யெதிரே திரும்பியும், இற்றைநாள் காலத்தாலே நூறு சொல்தாதுகளும் நூறு சிப்பாய்களும் போனார்கள். மற்றபடி வேறே யெழுதத்தக்க அதிசயமில்லை.

1748 ஆ ஜுலை மூ 14 உக்கு விபவ ஆடி மீ 3 உ ஆதிவாரம்

இற்றைநாள் காலத்தாலே பழைய செஞ்சி கில்லேதாரன் வசுதினகான் முந்நாள் சாயங்காலம் இவ்விடத்துக்கு வந்தவனண்டைக்கு இன்றைக்காலத்தாலேபோய் கண்டு பேசினவிடத்தில் அவர் பக்கிரிவேஷமாயிருக்கிறார். அவரைப் பார்த்தது மகாதா வந்தமாச்சுது. இவர்கள் தகப்பனார் காலம் பண்ணிப்போகச்சே மூத்த மகன் முந்தினதாரத்துக்கு பிறந்தவன் சீர்மையிலேயிருந்தவந்தான் அவனுக்கு கொஞ்சம் கொடுத்து இவ்விடத்திலேயிருந்தாலிவனை துடரபோரானென்று அவனை சீர்மையை அனுப்பிவிட்டு அருபதுனாயிரம் வராகன் ரொக்கம் இதல்லாமல் ரத்தின நகைகள் சிறிது தானியங்கள் சரீமுதலான புடவைகளின் தினுசுகள் குதிரைகள் பல்லாக்குகள் ஒட்டகங்கள் பின்னையும் தவுலத்துக்கு அடுத்தது யென்ன யென்ன உண்டோ அந்தந்த தினுசுகள் வாகனங்களெல்லாம் யிருந்தது. இதல்லாமல் செஞ்சி கில்லேதாரர் தனம் கூடயிருந்தது. இவன் மாபுசாதுல்லாகானுக்கு மச்சினச்சி பிள்ளை கான்பாதுருக்கு நல்லத்தை பிள்ளை இப்படியெல்லாம் பலனிருந்தாலும் சுவாமியுடைய கடாக்ஷம் ஒன்றுயில்லாததினாலே இத்தனையும் விருதாவாய் போச்சுது ஆக்கிருக்கு பக்கிரிவேஷம் வந்து பிராப்தமானது. ஆனால், விதியை வெல்ல ஒருத்தராலேயும் கூடாது. அப்பால் அவருக்கும் யெனக்கும் பாக்கு வெத்திலை கொடுக்கிறதற்குக்கூட

சங்கடமாயிருந்தது. அவர் கையில் பாக்கு வெத்திலே வாங்கிக் கொண்டு அனுப்பிவித்துக்கொண்டு துரையவர்கள் வீட்டுக்கு வந்தேன்.

அல்லிநக்கிம் சாயபு சந்தா சாயபு வீட்டுக்கு யெழுதி யனுப்பின பசினிசு காகிதம் ராசோ பண்டிதன் அனுப்பு வித்தானென்று கொண்டுவந்து படித்து சொன்னவயணம்: சந்தா சாயபு எழுபதினாயிரம் குதிரைகளுடனே வந்து கிஷ்ணை அக்கரையிலேயிறங்கி யிப்பால் வருகிறதாய் யெழுதிவந்ததாய் அதன் பேரிலே சந்தா சாயபுக்கு முத்திரைசாலிகான் நடக்க வேண்டிய பாரதஸ்து யெழுதியனுப்பினதுமல்லாமல் யோசனைப்பண்ணி தீர்த்து அப்புரம் நடத்துகிறதாயிருக்கிற மன தென்றும் யெழுதினபடி அதிலேயிருந்தபடிக்கு சந்தா சாயபுக்கு திருச்சினாப்பள்ளியும், அவர் குமாரன் அபிது சாயபுக்கு செஞ்சிக் கோட்டையும், செஞ்சி சீர்மை முன் கர்னுடகத்துக்கு நடந்த படிக்குச் சீர்மையும் நபாபு கிரியும் பவுஞ்ச தருகிறீயும் வேலூர் முறுத்து சலிகானுக்கும், இந்தப்படி யோசனைபண்ணி தீர்த்து சந்தாசாயபுக்கு எழுதியனுப்பின தாகவும், சந்தாசாயபு தம்யன் மமுதல்லிகானுடைய எண்ணம் என்னவென்றால்: ஆரணி கோட்டையும், காஞ்சிபுரத்துச் சீர்மைகளையும் வாங்கிக்கொண்டு பெருமாள் கோயில், ஈசுவரன் கோயில் இரண்டையும் இடித்து மசூதி கட்டவும், இப்படி யெல்லாம் நினைத்துக்கொண்டிருக்கிறதாகவும், இப்படிக்கு பெருமாள் தொண்டிக்காரன் கதையாய் நினைத்திருக்கிறார்கள். சுவாமி என்னமாய் நினைக்கிறாரோ என்னமாய் நடத்த இருக்கிறாரோ நான் அறியேன் இந்தச் சேதி எழுதியிருந்தமட்டுக்கும் துரையுடனே சொல்லாமலிருக்கப் போகாது என்று அவருடனே எச்சரித்ததற்கு அவரவர் பங்குபோட்டுக்கொண்டால் எனக்கு ஒரு பங்கு ஏன் போடவில்லை. இந்த சந்தாசாயபு கூட்டத் திற்கு எல்லாம்நான் வினைக வர பிரயாசைப்பட்டது எனக்கும் ஒரு பங்கு போடச்சொல்லி சொல்லவில்லையா? சந்தாசாயபு பெண்சாதி பிள்ளைகள் முதலான பேர் எழுதியனுப்பவில்லையா வென்று அவர் சொன்ன படபடப்பும், கோபமும் இதிலே மிஞ்சிப் போனதாய் வருகிறது. முழுகிப் போனதாய் வரபட வேசாடை காகிதத்திலே எழுத முடியாது; சொன்னாலேயும் இன்னவிதமென்று அதைப் பிரித்துச் சொல்லவும் தெரியாது.

ஆனால் அவர் சாடை அறிந்தமட்டுக்கும் நாம் பின்னை ஒரு சாடையாய் இப்போ பேசினால் இவருக்கு கோபம் வருமென்று இவருக்கு அடுத்ததாய் யோசனை சொன்னேன். சந்தாசாயபு நினைப்புபடி அல்லவே இவர்களெழுதின முருத்துசல்லிகானுடைய நினைப்பு இப்படியென்று எழுதினதேயல்லாமல் மற்றபடி அல்லவே சந்தாசாயபு நேமித்து அவரிவருக்குப் பிரிவு எழுதச்சே உமக்கும் பங்கு பிரிவு எழுதி தீரும். அந்தபடிக்குத் தான் சந்தாசாயபு மகன் என்னுடனே சொல்லியிருக்கிறானென்று அதற்கடுத்த தாயவருக்கு சம்மதிபட்டு சொன்னதின் பேரிலேயும் சற்று அனுமானமாய் சொல்லிவந்தார். சந்தாசாயபு முதல் முறுதிசல்லிகான் யெழுதின பங்கு பிரிவுக்கு சம்மதிப்பானு? தான் ஆற்காட்டு திருச்சினாபள்ளி யேகத்துக்கு கட்டிக்கொள்ளவேணுமென்று எழுதிபதினாயிரம் குதிரைக்கூட கூட்டிக்கொண்டு வருகிறவன் யிவனுக்கு நபாபுகிரியை கொடுத்துப்போட்டு தான் திருச்சினாப்பள்ளியை போய்விடுவானு இந்த இராச்சியம் நபாபுகிரி பண்ணவேணுமென்று தானே இத்தனை பிரயாசைப்பட்டு பாறசர் நிசாம் செத்துப்போன சந்துக்கட்டு பார்த்துக்கொண்டு வெகுதனதுடனே வருகிறவன் இவன் கையிலே ஒப்பித்துப்போட மனதுவருமா இவன் தன் அபிப்ராயத்தை யெழுதினா லப்பாலவனும் இவ்விடத்துக்கு வந்த பிற்பாடு தன் அபிப்ராயத்தைச்சொல்லி உன் கில்லாயும் நீயுமாயிருமென்று சொல்லிப்போரான் யென்று அப்பால் உங்களுட பங்கு முன்னே கொடுத்து அப்பால் தன் காரியத்தை நடத்தப் போரானென்று பின்னையும் சற்று விசிதப்பட யெப்படி, ஆகையிலே நிற்கச் சொல்லவேணுமோ அப்படிச்சொன்னேன். மெய் தான் இவன் பண்ணுகிற மத்தத்தில்லாவிட்டால் தானே பேசச்சுது நாம் பண்ணுவோம். அல்லாமலும் ஒருதரம் மத்ததும் அவருக்குக் கவையென்ன எழுபதினாயிரம் குதிரைகள் வரும்போது நாலஞ்சு பக்கமாய் புறப்பட்டால் சின்னாபின்னமாய் ஓடிப்போவார்கள் ஆனபடியினாலே ஆரும் மத்தத்து பண்ண கவையில்லை யென்று மிப்படியென்று சொல்லி சந்தாசாயபு மகளுக்கு சொல்லி நம்முடைய பங்கு மறந்துபோகாமல் யெனம் பண்ணி வைக்கவும் யென்று சொன்னாரிதிலே முசியே பராதி வந்தபடியினாலே நான் இப்புரம் வந்தேன் அப்புரம் வர பேசிக்கொண்டிருக்கும்போது நயனாரும் நானுமாய்ப்போய் ஒரு வேகுகாரன் திருப்பாதிருப்புலியூர் வாணியனிடத்துக்கு

உறம்மறையான வீட்டுக்கு வந்தவிடத்திலே அவனுக்குப் பகையாளியாயிருக்கிறவனொருத்தன் முத்துசேருவைக்காரனுக்கு நாலு பணத்தை கையில் காட்டி இவனைப்பிடித்து காவல் வைத்துப் போடவேணுமென்று சொன்னதற்கு மநாம் துய்ப்ளேக்சுடனே வேகுகாரனென்று சொல்லுகிற வாடிக்கைப்படிக்கு சொல்லிக் கொண்டுபோய் காலுக்கும் கழுத்துக்கும் விலங்கைப் போட்டு மண் சுமக்கச் சொல்லி விட்டதின்பேரிலே அவன் இத்தனை நாள் செத்தானென்று வந்து சொன்ன கபுறு துரைக்குச் சொன்னதின்பேரிலே சுட்டுப்போடச் சொல்லி உத்தாரம் கொடுத்தார். அந்தப்படிக்கு நயனுருக்கும் உத்தாரம் கொடுத்துப்போட்டு பாக்கு கிடங்குக்கு வந்து அவ்விடத்திலிருந்து அருணாசல செட்டி முத்தயசெட்டி முதலான கும்பினீர் வர்த்தகர் லாலாப்பேட்டைக்குப் போயிருக்கிறவர்களுக்குக் கோட்டைக்கும்பினீர் அமானத்து சகலாத்துசரக்கு விற்கத் தேவையில்லை; எடுத்து அனுப்பிவிற்கச் சொல்லியும், செம்பை மாத்திரம் நிறுத்துவிடச் சொல்லியும், காகிதமெழுதி வர்த்தகர் கையிலே கொடுத்து அவர்களையும், சரக்கு அனுப்பிவைக்கச் சொல்லி எழுதி சீக்கிரமத்துக்கு அனுப்பிவிக்கச் சொல்லிப் போட்டு பனிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்தேன்.

முன் அஷ்டசுத்த அஷ்டமி குருவாரம் காரைக்காலிலே யிருந்து சின்னப்பய்யர் அவர் தமயன் இராமசந்திரய்யருக்கு எழுதின காகிதத்திலே எழுதியிருந்த வயணம்:

'சகல தீர்த்தசுவரு, பரசமானியரு சாஸ்திரபாபு படிலாசேசர்ணரவிந்தாப் பிரதிவினந்தி திபர்யிஸ்ரூமனி வஃசநிரி சந்தியா காலத்திலேயும், சாஷ்டாங்க நமஸ்காரம் விந்தேவிபரி அஷ்டசுத்த அஷ்டமி குருவாரம் வரைக்கும் சுகமாய் இருக்கிறோம். தங்களுடைய வைபவா திசைகளுக்கு எழுதி அனுப்பிவிக்கும்படி செய்யவும், தாங்கள் சுப்புருயக்கன் காகிதத்திலே நம்முடைய காரியம் எழுதியிருந்த வயணம்: (ஸ்ரீ) ரங்கப்பிள்ளை அவர்களுடனே தாங்கள் சொன்னதற்கு அவர்கள் சொன்ன சமாசாரம் பத்திரிகை மூலமாய் யெழுதிமுடியாது. இப்பவும் அந்தப்பணம் ஒன்றும் இவர்கள் பேரிலே விழாமல் திருவேங்கடம் கையிலே வாங்க வேணுமென்று இந்த பிரகாரமாய் ஸவிஸ்தாரமாய் யெழுதி

அனுப்பிவைத்தீர்களே அதினாலே நமக்கு மெத்த ஆச்சரியமா தோணினது (ஸ்ரீ) பிள்ளையவர்கள் மனதிலே யிந்த காரிய மெல்லாம் நாம் செய்யுறோமென்று தோணிருக்குதென்று யெழுதினார்களல்லலோ நாம் இவ்விடத்திலே பிள்ளையவர்கள் காரியமென்றால் மனப்பூர்வமாய் நம்முடைய காரியத்தைக் காட்டிலும் அதிகமாய் எண்ணி நடந்துக்கொண்டு வரையிலே யும் அவர்களிந்த பிரகாரம் சொல்லலாமா நாம் கணக்கு பண்ண வேணுமானால் ரொம்ப செய்யலாம் அதெல்லாம் அவர்களுக்கு தெரிஞ்சிருக்கும் நீங்களவர்களுடைய அறயக் குக் காரியம்யெழுதி அனுப்பிவைத்துக்கொண்டு வருகிறீர்கள் அந்தப் பிரகாரமே நான் உங்களுக்கு பயப்பட்டு நடந்துக் கொண்டு வருகிறேன். அதற்கு அவர்கள், அவர்கள் அக்கரை நிமித்தியம் முச்சூடும் நிஷ்டூரமாய்ச் சொல்லிக்கொண்டு வரு வார்கள் நிசம்தான் அதுக்கெல்லாம் நாம் செய்யவேண்டிய தென்னயிருக்குது இவ்விடத்திலே ஆனால் திருவேங்கிடமும் கந்தப்பனும் ஒன்றாய் கூடிக்கொண்டு யிருக்கிறார்கள் இந்த காரியத்துக்கெல்லாம் அந்தரங்கமாய் ரங்கப்பன் கூடியிருக் கிறான் கையெழுத்து போடுகிற மொதலாள் முசியே பாரதி அண்டையிலே திருவேங்கிடம் கணக்கெழுதிவைக்கிறபோது கந்தப்பனும் கூடயிருந்தான் இவன் இவ்விடத்திலே வர வேண்டிய கவையென்னயிருக்குது திருவேங்கிடம் முசியே பாரதி அண்டையிலே சொன்னது பிள்ளையவர்கள் கும்பினி ரிலே என்ன தள்ளிக்கொண்டார்களோ அது எனக்குத்தெரி யாது யென்று சொன்னாலல்லலா இந்த பிரகாரம் அவன் சொல்லலாமா இது வெல்லாம் நீங்களவர்களுடனே சொன் னீர்களோ யில்லையோ முசியே பாரதியுடனே திருவேங்கிடம் சொன்னதானால் வெகு அந்தரங்கமாய் சொன்னாப்போலே காணுது. இற்றநாள் இராத்திரி திருவேங்கிடத்தை நாம் வீட் டுக்கு அழைத்துச் சொன்னது. இந்த பணம்காசுக் கணக்கு வழக்கெல்லாம் உன்வசமா யிருக்கயிலே இந்த கணக்கு சம்மதி பிள்ளையவர்கள் அவ்விடத்திலே விசாரிக்கையிலே அதிலே யேதாகிலும் தபாவத்து யில்லையென்று சொல்லிருந்தும் அவ்வி டத்திலே வியாச்சிய விவரங்கள் நடந்திருந்தும் நீ பிள்ளை அவர்களுக்கு யெழுதிஅனுப்பிவைத்தேனென்று துரையுடனே சொல்லுகிறதற்குக் கவையென்ன இருக்கிறது அது நல்லதல்ல வென்று இந்த பிறகாரமாய் மெத்தவும் சொன்னோம். அதற்கு

அவன் சொன்னது கணக்கிலே யிதுவெல்லாம் அகப்பட்டு இருக்கிறது அது எஜமான்கள் விசாரித்தால் நானும் சொல்லுவேன் பின்னை ஆருடனேயும் சொன்னால் எசமானன்களுக்கும் தனக்கும் நிஷ்டூரம் வந்துவிடுமென்று சொன்னான். முசியே பாரதியுடனே பிள்ளை அவர்களுக்கு காகிதம் யெழுதி அனுப்பியிருக்கிறேன் யென்று சொன்னான். அது யெங்களுக்கு நாளது வரைக்கும் தெரியாது, இப்பவும் பிள்ளை அவர்கள் முசியே பாரதி பேருக்கு காகிதம் யெழுதி அனுப்பிவைத்தாலும் அவ்விடத்திலே (ஸ்ரீ) துரை அவர்களுடனே ஒருப்பேச்சு தெரியப்படுமோ வென்றால் சொல்லி அந்த பணத்திலே தங்களுக்கு ஒரு காசளவிலே சொல்லயில்லை. அவன் பேரிலேதான் இருக்குது அவன் கையினாலேதானே வசூல் பண்ணிக்கொள்ள வேணுமென்று யெந்த பிரகாரமெழுதிக்கொள்ள வேணுமோ அந்த பிறகாரம் யெழுதுகிறது முசியே பாரதி அவர்களுக்கு காகிதம் யெழுதி அந்தக்கடுதாசி எங்களண்டைக்கு அனுப்பிவைத்தால் நாமவருக்கு தெரியப்படச்சொல்லி சேஷய்யங்காரையும் கூட அழைத்துக்கொண்டுபோய் சொல்லத்தக்க விபரமாய் சொல்லி அந்த வர்த்தமானம் பிறகாலே யெழுதி அனுப்பி வைக்கிறோம் இந்த பிறகாரம் பிள்ளை அவர்களுக்கு சொல்லுகிறது.

நவமி சுக்கிரவாரம் காலத்தாலே யெழுதின கடுதாசி முசியே பாரதி அவர்கள் யெல்லாரையும் அழைப்பித்தார் அதுக்கு நாங்கள் மூன்று பேரும் புறப்பட்டோம் யிதிலே சின்ன துரை வீட்டண்டையில் போகையிலே சின்ன துரை என்னை அழைப்பித்தார். நான் அவ்விடத்திற்குப் போனேன் பிரகாச முதலியாரும், திருவேங்கிடமும் இரண்டு பேரும் முசியே பாரதி அவர்களண்டைக்குப் போனார்கள். அப்போ திருவேங்கிடம் பேரிலே முசியே பாரதி அவர்கள் மெத்த கோபம் பண்ணி தீர்ந்து போனகணக்கு சம்மதிப் பணம் நாளதுவரைக்கும் செலுத்தாமல் போனாய். இவனைக் கொண்டுபோய் காவல் பண்ணச்சொல்லி பிரகாச முதலியாருடனே சொன்னாராம். அதற்கு திருவேங்கடம் சொன்னது எனக்கிட்ட பணமிருக்கிறதா, குத்தகை என் வசமில்லை. குத்தகையும், பணமும், சகலமும் கந்தப்பன் வசம் இருக்கிறது என்னை காவல்பண்ணி என்ன காரியம். தானியம் விற்ற பணமெல்லாம் கந்தப்பன் கையிலிருக்கிறது. அவன் கையிலேதான் வாங்கவேணுமென்று மெத்

தவும் சொன்னான். அந்தப் பிரகாரமே கந்தப்பனை காவலிலே வைக்கச்சொல்லி பிரகாச முதலியாருடனே சொல்லி, இன்றைக்குள்ளாக பணம் கொண்டுவந்து கொடுத்தால் நல்லது, இல்லாவிட்டால் [ ] பகலுக்கு மேலாக கூடலூரிலே பீரங்கிகள் முழக்கம் விஸ்தாரமாய்க் கேழ்க்கப்பட்டது. அப்துலாயிமான் தாலுக்கு ஒரு சநசந்து அவன் மச்சான் கூடலூரிலேயும், சேவகமாமனவன் கூடலூருக்கு வேது சொல்லுகிறானென்று மதாம் துய்ப்ளேக்குத் தகபுறு வந்து அதை துரையுடனே சொல்லி அப்பாலவன் தன் கக்ஷியிலே யிருக்கிறபடியினாலே சாந்தப்ப சேருவைக்காரனையும், பனிரெண்டு சேவகரையும், பகலிலனுப்பினார்கள். அவர்கள் சாயங்காலம் அந்த சாறசந்தையும் அவன் தாலுக்கு ஒரு பெண் சாதியும் கூட பிடித்துவந்தான். மற்றபடி முசியே பாராதி துக்கேனதற்கு துரையுடனே கூடயிருந்து அப்துல்ரயிமானையும் கூட அழைப்பித்தார்கள். ஏழு மணி வேளைக்கு இந்த சாடை நாளை வெளிப்படும்.

இற்றைநாள் இராத்திரி பதினொரு மணி வேளைக்குமேல் நல்ல மழையாய் ஒரு சேர் ஒண்ணரை சேர் மட்டுக்கும் பேய்ந்தது பின்னை ஒன்றும் அதிசயமில்லை.

1748 ஆ ஜூலை மீ 16 உ க்ஷய விபவ ஹூ ஆனி மீ 5 உ மங்களவாரம்.

இற்றைநாள் காலத்தாலே முசியே பாராதி அழைத்தனுப்பிவித்து காரைக்காலிலே கொள்ளையிட்ட நாளை கணக்கு உங்கள் கிராமத்துக் கணக்கிலே எங்களுக்கு கும்பினீரை மோசம் பண்ணின கனகராயமுதலியார் ஆயிரத்தி எழுனூத்தி சில்லுவான் விராகனும் நீங்கள் ஆயிரத்தி யெழுநூத்தி அருபது விராகனும் திருடினதுக்கு அவர்கள் கொடுத்து விட்டார்கள். நீங்கள் கொடுக்கமாட்டோமென்று சொல்லுகிறது யென்ன நியாயமென்று கேட்டார் அதற்கு நான் சொன்னது சும்மா யெங்கள் பெட்டி பணத்தை நீரெடுத்துக்கொண்டுபோக வேணுமானால் இப்போதானே யெடுத்துக்கொள்ளலாம் மற்றபடி நியாயத்துடனே நானெடுத்தேனென்று நீர் சொல்லமாட்டீர் என்று சொன்னதற்கு நீர் திருடினதற்கு அத்தாக்ஷி கூட உங்கள் மனுஷர் சேஷய்யங்கார் கந்தப்பன் பின்னையும்

திருவேங்கிடம் கூட மெய்யென்று கையெழுத்துப் போட்டார் களென்று சொன்னூர். அதற்கு நான் துரைத்தனம் பண்ணுகிற வர்கள் எப்படிபோடச்சொன்னல் அப்படிப்போட்டார்களது களெல்லாம் விளங்குகிறபடிக்கு விளங்கினல் மெய்யென்று வெளியாமென்று சொன்னேன். அதற்கு கோபமாய் காலினல் உதைத்துக் கொள்ளுகிறதும் கையினலடித்துக் கொள்ளுகிற துமாக அதிலே நான் சாய்ந்து உத்தாரம் சொல்லுவேனென்று மிரட்டவந்தார். அதற்கு நான் நீர் கோபமாய்பேசினுப்போலெ நான் பயப்படுவேனென்று யோசனை பண்ணவேண்டாம் நானதிலே ஒரு காசளவிலே அனுபவித்ததுண்டானல் நான் பயப்பட்டு உத்திரம் சொல்லுவேன். நானென்று மரியேன். அவனெழுதிக்கொடுத்த கணக்கு இருக்குது அவனை வெகு ஜனங்கள் கும்பினீர் வர்த்தகர் இருக்கும்போது அவர்கள் முன் பாக நாங்கள் மத்தியஸ்தமும் சின்னதுரையுடனே சொல்லிக் கொண்டு கும்பினீர் வர்த்தகர் தானப்பமுதலி முன்பாக சொல் லின சங்கதி கும்பினீருக்கு எழுதிவைத்தபடிக்கே அல்லாமல் மற்றப்படி வேறே ஒரு காசனவிலே நானரியேன் யென்று சொன்னதற்கு எங்கள் மனுஷர்களை அவன் மத்திஸ் தர் முன்பாக கேட்டது. நான் கும்பினீர் மனுஷன் அந்த வருஷம் சந்தாயத்தம் பண்ணினூர்கள். அந்த சந்தாயித்த கணக்கு கும்பினீருக்கு நான் ஒப்பித்துப்போட்டேன். நீங்கள் கேழ்க்க கவையென்ன குத்தகையாயிருந்தால்தான் நீங்கள் கேழ்க்க ஞியாயம் சந்தாயித்தமாயிருந்த பேச்சுக்கு உங்களுக்கு கவை என்ன? கவையென்று கேட்டானதற்கு மத்தியஸ்தரும் ஞியாயந்தானென்று சொல்லியிருக்கிறூர்கள். இவர்களிந்த வூரிலே இருபத்துநாலுபேர் இருக்கிறூர்கள். தானப்பமுதலி யிருக்கிறன் இதுகளெல்லாம் நன்றுய் விசாரியும், அதிலே அரு பத்துநாலு காசியிலே ஒரு காசாகிலும் நான் கட்டியிருந்து பிரயோஜனப்பட்டிருந்தால் தான் நான் தோஷத்தனம் நான் கொடுக்கவேண்டியது; நானதிலே யேந்திருடியவனல்லாதபடி யினலே யெனக்கென்ன பயமிருக்குது யென்று நான் சொன்ன தற்கு உன் பேர் கோந்திருத்திலே யிருக்குதேயல்லாமல் அவன் பேர் இருக்குதா அவனை கேழ்க்க காரியமென்னவென்று சொல்லி நீ இருப்பத்தினலு மணிக்குள்ளாக ரெப்போன்சு தெரிவித்தாலாச்சுது இல்லாவிட்டால் நான் மூசியே துய்ப்ளேக்

சுக்குச் சொல்லி கோன்சேலுக்கு பித்திசாம் யெழுதி நீர் கும்பி னீரை திருடின சாடையெழுதிப்போட்டு ரெட்டிப்பா வாங்கப் பண்ணுவேனென்று சொன்னார். அப்ப கோன்சேலிலென்றுப் போலே நியாயம் கேழ்ப்பார்களா அன்னியாயம் பண்ணுவார் களா நல்லது நானும் கோன்சேலுக்கு நியாயம் சொல்லிக் கொள்ளுகிறேன். அவர்கள் பார்த்து கொடுக்கச்சொன்னது நான் கொடுத்துவிடுகிறேனென்று சொன்னதுக்கு கனகராய முதலிக் குத்தகைகாரர் யென்னை வெளிப்பண்ணவேண்டா மென்று மனுவாய் கேட்டுக்கொண்டார்கள். அவர்களுக்கு வார்த்தைப்பாடுக் கொடுத்தேன். இனிமேல் அவர்களுக்கு வெளிப்பண்ணார்யென்று அவர்கள் சொல்லுவார்கள். ஆனால் நான் செய்யவேண்டியதென்ன யென்றுப்போலேயும் இந்தப் பணம் முசியே துப்ளேக்சுக்கு நான் சொல்லயில்லை. சுத்து கோட்டை வேலைக்கு விழுகிறதென்றும், அதனாலே அவருக்குச் சொல்லவேண்டியது என்னவென்றுப்போலேயும், சற்றே கோபமும் சற்றே மோசியே ரங்கப்பர் நீ பெரிய மனுஷன் அறிந்துவராததில்லை. அவன் உம்முடைய மனுஷனு யிருந்து அப்படி செய்தானென்றுப்போலேயும், இதை வாங்குகிறதற்கு மூன்று நாளை தவணை தாரேன். நீ விளங்குயென்று நீ சொன் னுப்போலேயும், இதிலே நாலைந்து வருஷமாய் இந்த ஆயிரத்து எழுநூறு வராகனுக்கும் ஆதாயம் நூற்றுக்கு இருபத்தைந்து ஆதாயம் கொண்டுபோனார்க ளென்றுப்போலேயும், கிருமத் திலே கண்ட ஆதாயமெல்லாம் நீ எடுத்துக்கொண்டாயாம். அவர்களுக்குக் கொடுக்கவில்லையாம். சேஷய்யங்கார் மறுபடி தான் சொல்லுகிறான்; அவனுமப்படித்தான் சொல்லுகிறான் என்றுப்போலேயும், இந்த சாடையிலே காரைக்காலிலே அங்கே யிருக்கிறவர்களை மேற்படி பணத்தை வாங்கிப்போட்ட சாடையாய் என்னையும் மெரட்டினார். அதற்கெல்லாம் பயப் படுகிறுனு? அவர் சொன்னதற்கெல்லாம் அதற்கு தக்கதாய் உத்தாரம் சொல்லிக்கொண்டே வந்தேன். அப்பா லுனக்கு நான் காகிதமிந்த வயணத்துக் காகிதம் எழுதினேனென்பது நீ பார்த்துக்கொள்ளவில்லையாவென்று சொன்னார். அந்த காகிதம் நான் பார்த்ததில்லை; இந்தச் சேதி அங்கேயுமிருந்து எழுதி வந்தது. நீர் இங்கே வந்த பிற்பாடு சொன்னதாய் இராமசந்தி ரய்யன் சொன்னான்: 'அது நன்றாய் விசாரித்துச் சொல்லுகிறே னென்று சொன்னதற்கு பொய் என்று சொன்னானும். பொய்

சொல்விக் காரியமென்ன? அந்தக் காகிதம் வந்து பார்த்துக் கொண்டேனென்றுப்போலே என்னை ரோஷத்தனுக போய் விட்டேனே நீர் அப்படியெல்லாம் எண்ணத் தேவையில்லை. நானந்தப் பணத்திலே திருடியிருந்தாலே ப்யமே அல்லாமல் மற்றபடி பயமென்னவென்று சொன்னதற்கு நல்லது அந்த கணக்கு நீ விசாரித்துத் திருட்டு மெய்யானுல் உன் பேர்கோந் திராக்கத்திலே எழுதியிருக்கிறபடியினுலே நீ உத்திரவாதம் பண்ணவேணுமென்று கேட்டான் நானும் பார்த்தேன் நீயாகி லும் ஒரு போக்கிலே விட விட்டால் காரியமல்லவென்ற அவன் சொன்னப் பேச்சைத்தானே நல்லது அந்த கணக்கு நான் விளங்குகிறதற்கு சேஷய்யங்கார் வரவேணும் திருவேங் கடம் வரவேணும். அப்பால் மற்றபடி வேறேசேதி கேழ்க்கப் படவில்லை.

*1748* ஆ ஜூலை மீ *17* உக்கு விபவ ஞூ ஆடி மீ 6 உ குருவாரம்.

இற்றையநாள் காலத்தாலே துரையவர்கள் வீட்டுக்கு போனவிடத்திலே கடைத்தானியம் மேன்மையா வருதா வென்று கேட்டார் எப்போதும் ஆடி மாதம் பிறந்தாலும் தானியம் வருத்து மட்டாயிருக்கிறது மல்லாமல் விலையுங்ற குறையுறதுதானென்று சொன்னதுக்கு மழை பேஞ்சு வருகி படியினுலே தானியம் விழக்காரியமில்லை யென்று சொன்னுர். என்னமழைபெய்தாலும் ஆடி மீ எப்போதும் குறைந்து புரட் டாசி மீ உச்ருகிற துண்டென்றும் கம்பு விரை விழுகிறதும் பயிரு யிருக்கிறதும் விரை விழப்போகிறதுமாயிருக்கிற சாடை யும் இதி முதலானதுகள் பேசியிருந்த பிற்பாடு கிடங்குக்கு வந்து வீட்டுக்கு வந்தேன். மற்றபடி யெழுதத்தக்க விந்தை சமாசாரங்கள் யில்லை அப்பால் பகலுக்குமேலாக கோட்டை குப்பத்து வெளியிலே நயினுர் பனமரம் வெட்டுகிறவிடம் பார்த்துவிட்டு சாயங்காலம் பாக்கு கிடங்குக்கு வந்து அங்கே யிருந்து இராத்திரி ஒன்பது மணிக்கு வீட்டுக்கு வந்தேன்; இன்றைநாள் கேழ்க்கப்பட்டசேதி யென்னவென்ருல் வேட்ட வலம் பண்டாரத்தார் பழம் செஞ்சி வாங்கிக்கொண்டசேதி அசாத்துநபாபு மாபுசுகான் கேட்டு அத்தியந்தம் ஆத்திறபட்டு சண்டா வெளியிலே போட்டதாகவும் மழையும் காத்தும் சுருக்

காயடித்து சண்டாவிலிருந்து மறுபடியெடுத்து காட்டினதாகவும் சேதி கேழ்க்கப்பட்டது. அப்பால் நாசர்சங்கு அபரங்காபா தக்கு முன் தகப்பனார் மனுஷர்களிருந்தவர்களுடனே கூட தன் மனுஷரையும் வைத்து போட்டு யிப்பாலே அப்பாலேயிருக்கிற கடிஷத்தலங்களுக்கு யெல்லாம் தன் மனுஷரையும்கூட வைத்து தான் கோலகொண்டாவுக்கு வருகிறதாகவும் பின்னையும் பதி னாயிரம் குதிரைகள் அதிகமாய் வைத்ததாகவும் இந்தப்படி சேதி கேழ்க்கப்பட்டது இதுவுமல்லாமல் யிப்போ தவத்திலே உட்கார்ந்த அகமது சாபகதற் பாத்ஷா காஜி அவர்கள் அப ரங்கா பாதாவுக்கு வந்து அபரங்க செயுய்யிராசாவை வைத்து இருக்கிற மசிதையும் பார்த்து நிசாமவர்கள் சம்மதித்த தணக்குவழக்கிலே அகப்படாத வெகு திரவியங்களையும் யெடு பித்துக்கொண்டு போகவேணுமென்று யோசனைபண்ணி கோல் கொண்டாமட்டுக்கும் வருகிறதாய் பயணம் புறப்பட வேணு மென்று இருக்கிறதாய் சேதிவந்ததாய் ஆர்க்காட்டிலேயிருந்து யெழுதிவந்தது மற்றப்படி கூடலூருக்கு சீர்மையிலிருந்து ஒரு கப்பல் சேதிக்கொண்டுவந்ததாய் அவர்களுக்கு இராசாவினு டைய கப்பல் பத்தும் கும்பினிர்கப்பல் பதினாலும் ஆக இருபத்தி னாலு கப்பல் வருகிறதாய் சேதி கேழ்க்கப்பட்டது மற்றப்படி கூடலூரிலிருக்கிற மட்டிலே இருக்கிறார்கள். மற்றபடி வேறே ஒன்றும் கேழ்க்கபடவில்லை இன்றைநாள் ஏழுமணிக்கு கபுறு கேட்டதென்னவென்றால்: தம்பி நயினார் பெண்சாதிக்கு தம்பி நயினார் தனக்கு முன் கோன்சேலிலே தீர்த்துக்கொடுத்து வர சொன்னபடிக்கு முத்தியபிள்ளையும் கொடுத்து வந்தார் இவனும் சிறிது நாள் கொடுத்து வந்து யிப்போ கேழ்க்கப் போனால் இந்த உத்தியோகம் வாங்கினால் நாலாயிரம் வராகன் செல்லுது இரண்டாயிரம் வராகன் உன்பாதிக்கு கொண்டு வந்து கொடுத்து உனக்குண்டான சம்பளம் வாங்கிப் போ வென்று சொல்லுகிறான் என்று தேவரீர் தயவுபண்ணி முன் பின் கொடுத்து வந்தபடிக்கு இப்போதும் கொடுக்கச் சொல்லவு மென்று பித்திசமெழுதிக் கொடுத்தான். அதை படித்துப் பார்த்து சாக்கிலே போட்டுக்கொண்டு வீட்டுக்குப் போனா ரென்று கபுறு வந்தது.

மற்றபடி வேறே சேதி கேழ்க்கப்படவில்லை.

1748 ஆ ஜூலை மீ 18 உக்கு விபவ ஞு ஆடி மீ 9 உ குருவாரம்.

இற்றைநாள் காலத்தாலே ஆரரை மணிக்கு வந்தவாசியி லிருந்து மிருதுயானதுல்லா நம்முடைய குழந்தைக்கு ஒரு சீரோப்பாவும் ஒரு வெள்ளைப் பாகையும் பொன் காப்பு பொன் கரரையும் 50 வராகனிடையிலே கொடுத்தனுப்பி வைத்ததை மதனுந்தபண்டிதர் கொண்டுவந்து கொடுத்தார்.

அப்பால் வெளியே புறப்பட்டு மூசியே லநூல் வீட்டுக்குப் போய் அவனைக் கண்டு பேசின விடத்திலே அவன் கோபால கிஷ்ணய்யன் பேச்சுக்கு சிறிது விசேஷங்கள் நாமும் அவரும் பேசிக்கொண்டு மூசியே கோந்னேந்துக்குச் சொல்லி யிருக்கிற பேச்சுக்கு பேசிப்போட்டு அப்பால் மூசியே திலார்சு வீட்டுக்கு வந்த விடத்திலே மூசியே திலார்சுடனே பேசி யிருக்கச்சே அவர் தங்க சாலையிலே பந்தர் தட்டான் ஒரு பிடி கும்பினீர் முத்திரை போட்டது குவர்னதோர் பண்ணச்சொல்லி சொன்னார். அங்கே பண்ணுகிறது உமக்கென்று யோசனைபண்ணி யிருக்கிறேன் என்று சொன்னார். அப்படியுண்டானால் எனக்குத் தெரியாதா வென்று சொன்னேன். அதற்கு அவர் துரை உமக்குத் தெரி யாமல் செய்கிறார்களாங்காட்டுமென்று சொன்னார் [ ] விளங்க உத்திரம் சொல்லுகிறேனென்று சொல்லிப்போட்டு நான் உத்தாரம் கொடுத்தால் அவர்களையும் அந்தக் கணக்கும் அழைப்பித்துத் தெரிந்துக்கொண்டு உத்தாரம் சொல்லுகிறேன் என்று சொல்லி அய்யங்காரை. அனுப்பச்சொல்லி மூசியே லேரிஷிக்கு எழுதியனுப்புமென்று நானும் வரச் சொல்லி யெழுதி அனுப்புகிறேனென்று சொன்னதற்கு யிங்கே ரச்சையாம் நான் கனகராயமுதலி மனுஷருக்கு வார்த்தைப் பாடு கொடுத்தேனென்று சொன்னான் ஆனால் அய்யங்காரை மாத்திரம் வரச்சொல்லும் திருவேங்கடம் கவையில்லை யென்று சொல்லிப்போட்டு அனுப்பிவித்து கொண்டுவந்தோம் அதற்கு முன்னே மூசியே கைபூர் வந்தான் அந்தப்பேச்சை நிறுத்திப் போட்டால் நான் சங்கையாயென்று போனேன்றுமவனுக்கும் சங்கயா தோத்தப்பட போகுதென்றும் திராவோ வேலைக்கு மாசா மாசம் பணம் அனுப்பித்திரவேணும் அது நிறுத்தப் போகாது மாசம் ஆயிரம் விருகன் விழ்க்காடு செலுத்தி பணம்

கொடாவிட்டாலெப்படி யென்றுப்போலேயும் இப்படி லாடை பாஷைபேசினுன் நானுமந்த சாடையரிந்து அதையேன் விஸ் தரிக்கவேணுமென்று ஒரு வுத்திரமும் சொல்லாமல் சும்மா யிருந்தேன். இவன் ஆத்துமாரேகணேபுண்ண நினேச்சி இருந்த தடுக்கிலே உன்னடியிலே, மெறட்டிக்கொண்டு போவோ மென்றும் யோசனே பண்ணியிருக்கிருன் அல்லது வென்று யென் கைவிட்டு கொடுக்கச்சே கோன்சேலரியாமல் கொடுக்கப் போறேனு சுவாமியிருக்கிருர் அப்பாலங்கேயிருந்து துரை வீட் டுக்கு வந்தபிற்பாடு துரையவர்களும் சின்னதுரையவர்களும் நடு சாலேக்கு வடவண்டை வராந்தாவிலே பேசியிருக்கச்சே யென்னேகண்டதும் இப்போ வெள்ளி வருகிறதே பட்டணத்து ஜனங்களெல்லாம் சந்தோஷபடுகிருர்களா இல்லேயாவென்று கேட்டார் சந்தோஷப்படுகிறது மாத்திரமா ஆச்சரியடுகிருர் கள் யென்றுச்சொன்னேன் என்ன ஆச்சரியமாய் சொல்லிக் கொள்ளுகிறது யென்று கேட்டார். கப்பல் வந்து வெள்ளி வரு கிறது அல்லோ நியாயம் கப்பல் வராமல் வெள்ளிவந்தால் ஆச் சரியபடமாட்டார்களா இப்படி கப்பல் வராமல் வெள்ளிவந்த ஆச்சரியம் கண்டதில்லே முசியே துய்ப்ளேக்சுனுடைய அதிரிஷ் டத்திஞலே பாராத ஆச்சரியமெல்லாம் பார்த்தோமென்று சொல்லிக்கொள்ளுகிறது மல்லாமல் நம்முடைய குவர்னமா மதுவைக்கி எங்கள் சாவடி மட்டுக்கும் பிறசைகளிருந்து வேடிக்கைப் பார்க்கிற சமபிரமம் நான் சொன்னுல் மெய்யா காணுது. நீங்கள் மனுஷரை அனுப்பிப் பார்க்கச்சொன்னுலும் சரி அல்லது நீங்கள்தானே சுவாரி புறப்படுகிருப்போலே புறப் பட்டாலும் தெரிய வருமென்று சொன்னதற்கு நகைத்துக் கொண்டு சின்ன துரையைப் பார்த்து ரங்கப்பிள்ளே சொல்லு கிறது நியாயந்தான்; கப்பல் சனியன்று வந்து இராத்திரி வெள் ளிப் பொட்டியையும், ]திதினுசையும் இறக்கிப்போட்டு ஒரு கப்ப லும் ஒலாந்தர் சுலுப்பு பிடித்து வந்ததையும் வைத்துப்போட்டு போய்விட்டபடியினுலே அந்தந்த சென்னப்பட்டணத்திலே இருக்கிற பேர் சிறிது பேர் பார்த்த பேர்களுமுண்டு, பாராத பேர்களுமுண்டு. அந்தப்பட்டணத்திலே இருக்கிறவர்களுக்குத் தானே அப்படி யிருந்தால் இந்தப்பட்டணத்திலே யிருக்கிறபேர் சொல்லிக்கொள்ளுகிறதிலே ஆச்சரியப் படவேண்டியதென்ன வென்று சொன்தற்கு சின்ன துரை முசியே லேதெ மெய்தா னென்று பின்னேயும், சந்தோஷமாய்ப் பேசிக்கொண்டிருந்தார்

கன். அந்த உத்திரக்ஷணம் சேருவைக்காரனை அழைத்து வெள்ளிப் பொட்டி கொண்டுவருபவர்களை மகா திட்டமாய் வரச் சொல்லியும் கோட்டைக்கு அப்படித்தானே போகாமல் இப்படி வந்து இந்த தெருவாலே கோட்டைக்குப் போகச் சொல்லியும், குண்டுக்குள்ளே வந்த தாஷ்மானுக்கு எஜமானனாக வந்த முசியே துந்தேலுக்கு சொல்லச்சொல்லி அனுப்பினார். அந்தப் படிக்கு அவர்களும் பத்து மணி வேளைக்குச் சென்னப்பட்டணத்து வாசற்படியிலே புறப்பட்டு கனகராய முதலி தெருவாலே வந்து நம்முடைய சாராயக் கிடங்குக்கு ஓரமாய்ப் புறப்பட்டு குவர்னதோர் வாசற்படி ஓரமாய்ப் புறப்பட்டு முசியே தெழார்தேன் வீட்டு வாசற்படி ஓரமாய் கோட்டைக்குப் போனார்கள் முன்னே வெள்ளைக்காரர் சுவர்கள் கையிலே கத்தி உருவினவாக்கிலே அப்பாலே வெள்ளைக்காரர் பாரு அப்பவே வெள்ளிப்பொட்டிகள் எருதின்பேரிலே அப்பாலே மாயே சிப்பாய்கள், அப்பவே வெள்ளைக்காரர் பாரு அப்பாலே துலுக்கர் சுவர்கள் இந்தப்பக்கமும் அந்தப்பக்கமும் காப்பிரிகள் ஒரு வரிசையும் அதுக்கப்பாலே சிப்பாய்களும் இந்தப்படியாக ஆயுத சவரணையுடனே பார்க்கிற சத்துருக்களுக்கு கற்ப நிறப்பேதமாய் போகதக்கதாக வந்த வேடிக்கையை பார்க்கிறதற்கு இரண்டு கண்கள் போதாது அநேகங் கண்கள் வேணும் ஆனவிந்த வேடிக்கையும் சந்தோஷமும் முசியே துப்ளேக்சுடைய அதிர்ஷ்டத்தினாலேயும் அவர் யோகாதிய சத்துனாலேயும் பென்று ஜனங்கள் யென்றதுமல்லாமல் நேத்தியவரைக்கும் இந்த பட்டணத்துக்கு கஷ்டகாலமிருந்துபோய்விட்டது. இன்று முதலாய் பட்டணத்துக்கும் பட்டணத்து பிரபுக்களுக்கும் சுபகாலமென்று சகல ஜனங்களும் சொல்லிக்கொண்டார்கள். அப்பால் இந்த பாருபோகிற வரிசயை துரையவர்களும் வேடிக்கையாய் வெளியே வந்து கண்குளிர பார்த்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள் போரவர்கள் ஆசாரம் பண்ணிக் கொண்டுபோகிறதும் தாமும் ஆசாரம் பண்ணுகிறதும் நகை முகமுடனே ஜனங்களைப் பார்த்துக்கொண்டிருந்தார், அப்பால் முசியே தெழார்தேன் வீட்டுவீதியே திரும்பினபிறகு உள்ளே போனார்.

நூத்தன்பத்தஞ்சி மாட்டின்பேரிலே வெள்ளிவந்தது. மூனு மாட்டின்பேரிலே பொன் வந்தது. சீர்மையிலே யிருந்துவந்து

சென்னபட்டணத்திலே இறக்கின சொல்தாதுகள் நானூ
ரிலே முன்னூறு பேர் வந்தார்கள். சேர்மையிலேயிருந்து மூசியே
சேன்ழோர்ஜ் இசுக்காதுரு பதினைந்து கப்பல் புறப்பட்டதினாலே
இங்கிலீஷ்காரர் கையில் அகப்பட்டதினாலே இங்கிலீஷ்காரர்
கையில் அகப்பட்ட கப்பல்போக தப்பின கப்பல் சிதரினது
மசுக்கரை வந்து சேர்ந்ததிலே அவ்விடத்திலே சிலவுக்கு எடுத்த
வெள்ளிபோக நின்ற வெள்ளியை வைத்துப்போட்டு எட்டு கப்பல்
சண்டை முஸ்தீதுபண்ணி போக நின்ற வெள்ளியை வைத்துப்
போட்டு இங்கிலீஷ் கப்பல் பதினைஞ்சு இருபது கப்பல்கள்
எதிர்த்தாலும் சண்டை பண்ணி நிருவாகமாய் வெள்ளியை
கொண்டுபோய் புதுச்சேரி துறையிலே இறக்குவதற்கு தேவனும்
பட்டணம் துறை சமீபம் கப்பல்கள் இருக்குமென்கிற நியா
யத்தைத்தொட்டு சென்னபட்டணத்திலே யிறக்கிப்போட்டு
வரச்சொல்லி சொன்னபடிக்கு சென்னப்பட்டணத்திலே யிறங்
கினது பொன் கிறயமல்லாமல் வெள்ளிமாத்திரம் பதிமூன்று
லக்ஷத்து அன்பதுனாயிரம் ரூபாய் இது பொன் துகை இவ்வள
வென்று தெரியாது அது கூட இருபது லக்ஷம் ரூபாயிக்கு உண்
டென்று சொன்னார்கள். ஆனால் பொன் துகை இவ்வளவு
என்று தெரிந்துக்கொண்டு அப்பால் துகை திட்டமா யிவ்வளவு
என்று எழுதுகிறேன். வெள்ளித் துகை திட்டமாய் [ ]
தூக்கபட்டபடியினாலே நிஷ்கர்ஷ்யா யெழுதினேன். இந்த
துரைக்கு சென்னப்பட்டணத்து சிலவுக்கு வைத்துக்கொண்
டதுபோக மற்றது வந்து சேர்ந்தது ; அப்போ நான் பாக்கு
கிடங்குக்கு தெருவிலே மூசியே தெமர்ரே மூசியே கோக்கேத்கப்பல்
மாத்திரமா பின்னேயும் இரண்டொரு ஒப்பிசியேலும் கூடயிருந்து
போகிற வேடிக்கைப் பார்த்தோம். இராத்திரி ஏழு மணிக்கு
காரைக்காலி லிருந்து கந்தப்பன், திருவேங்கடம் யெழுதின
காகிதம் வந்தது. கந்தப்பன் எழுதின காகிதத்திலே சேஷய்யங்
காரையும் வக்தவாசி திருவேங்கிடபிள்ளையையும் நாளது மாதம்
முதல் தேதி காவல் வைத்ததாய் தன்னுடனே கூட எழுதினான்.
ஆனால் மூசியே பாரதீ பண்ணுகிற அநியாயத்துக்கு சுவாமி
அவனுக்கு என்ன ஆக்கினை கொடுப்பாரோ நானறியேன்.

இராத்திரி எட்டு மணி வேளைக்கு துரை அழைப்பித்து
அகுளத்த வேலை செய்யும் இடத்துக்கு கூலியான் வரவில்லை
யென்று குறவர் ஒரு நாள் வேலை செய்கிறதும் இரண்டு நாள்

சும்மா சாராயத்தைக் குடித்துப்போட்டு ஆடுகிறுர்களென்றும் கோட்டைக்கு பக்கத்திலேயிருக்கிற நயினுர் பனந்தோப்பை வெட்டுகிறதற்கு உத்தாரம் கொடுக்காதே போனேனென்றும் சொன்னுர். நேற்றுதான் உத்தாரம் வந்தது. வெட்டிக்கொள் ளச்சொல்லி, முசியே மோர்மோல் இன்று சாயங்காலம் சொல்லி அனுப்பினேன். நாளை முதற்கொண்டு பனந்தோப்பு யிளந்தோப்பானுலும் முன்னூறு நானூறு அகப்பட்டதை வெட்டச் சொல்லுகிறேனென்று சொன்னேன். ஒட்டரை அனுப்பி வைத்து இனிமேல் அப்படி காலம்பண்ணுமல் ஜாக்கிற தையாய் வேலை செய்யச் சொல்லுகிறேனென்று சொன்னேன். கூலி ஆள் இப்போ நூறு ஐம்பதாய் வந்து சேருகிறுர்கள். நாய ஞருக்குத் தாக்கீது பண்ணிவைத்து நாளை முதற்கொண்டு விஸ் தாரமாய் வரத்தக்கதாக செய்விக்கச் சொல்லி சொல்லுகிறே னென்று சொன்னேன். அப்பால் எருதுமாடுகள் ஏருக்குப் போதாது. சென்னப்பட்டணத்திலேயிருந்து வந்த மாட்டை வாங்கச் சொன்னுர். அது இந்த மண்ணுக்கு நிற்காது செத்துப்போகுமென்று சொன்னதற்கு எனக்கு அதெல்லாம் [ ] இன்னும் நூறு மாடு மாத்திரம் கல்லெடுக்க அழைப் பிக்க வேணுமென்று சொன்னதற்கு இப்போ நான் ஐம்பது மாட்டுக்கு நூறு வராகன் கொடுத்து வந்து இருக்கிறேன். அதுவும் கூடவா அதுவுமல்லாமலா என்றுகேட்டதற்கு அது அல்லாம்ல் நூறு மாடு வேணுமென்று சொல்லி இதெல்லாம் வேண்டுமானுல் அரை நாழிகையிலேயும் நீ இந்த வேலைப் பார்க்கிறதில்லை என்று சொல்லிவிட்டு உள்ளே போனுர். நான் பாக்கு கிடங்குக்கு வந்து எங்கெந்த வேலைக்கு யாராரை அழைத்துச் சொல்லவேணுமோ அவரவர்களை அழைப்பித்து தாக்கீது பண்ணினேன். அப்பால் மழை வந்து இரண்டு சேர் மழை மட்டுக்கும் பேய்ந்தது. மழை சற்று மட்டா யிருக்கச்சே வீட்டுக்கு ஒன்பதரை மணிக்கு வந்தேன் [ ] சொன்னுர்கள். ஆனுல் கும்பினீர் உத்தியோகஸ்தர் பிடிக்கிற பிரம்புக்கு யெப்போவாகிலும் அப்படி கும்பினீர் ஆறமு போட்டிருந்தால் இது மெய்தானென்று யெண்ணலாம் ஆன படியினுலே இது யெனக்கு மெய்யாய் காணவில்லை யென்று சொல்லி என் மனதிலே எண்ணிக்கொண்டது. நாம் பாளயத்து

வெங்கடபதி நாய்க்கன் கடற்கரையோரத்திலே இருக்கிறதற்குப் பட்டணவர்கள் மேஸ்திரி பிடிக்கிறபடிக்கு ஒரு பிரம்பிலே வெள்ளிப்பிடியிலே முத்திரைபண்ணச்சொல்லி இருந்த சம்மதியை ஆரோ ஒரு பிரம்புபிடி கும்பினீர் முத்திரைப் போட்டது பண்ணுகிறார்களென்று சொன்னமாத்திரத்திலே குருத்தியே உத்தியோகத்துக்கு பிரம்பு கொடுக்கிறதாச்சே அதைக்கொண்டு யோசனைபண்ணிக்கொண்டார்கள் என்று மனதிலே நினைத்துக்கொண்டு சீர்மையிலேயிருந்து உத்திரவு வந்ததாயென்று கேட்டேன் சீர்மையிலிருந்து உத்திரவு வந்ததென்று சொன்னார். ஆனால் குவர்னதோர் முப்பதுமாசமாச்சுது பெருந்து செத்துப்போய் நானிந்த உத்தியோகம்பார்க்க துவக்கி ஒரு நாளாகிலும் உனக்கு இந்தயிடம் கொடுக்கிறேனென்று அவர் சொன்னதுமில்லை, நான் வேணுமென்று கேட்டதுமில்லை, இந்தபடிக்கே நடந்துவருகிறது, வெள்ளைக்காரர்கள் முதலாய் நீகூட கோன்சேல் காகிதத்திலே யெழுதி சீர்மைக்கு போச்சுதென்று சொன்னார்கள். அனேகமந்திரமாய் கோன்சேலியார்கள் கூட அப்படியே சொல்லி அழைக்கிறார்கள். துரையும் ஒவ்வொருவேளை அப்படி வெள்ளைக்காரருடனே சொல்லுகிறதாய் சிறுபேர்கள் வந்து சொல்லுவார்களென்று இப்படி சொன்னதற்கு அவர் சொன்னது சீர்மைக்கு கும்பினியாரவர்களுக்கு யெழுதுகிற காகிதத்திலே ரெங்கப்பிள்ளையைப்போலே திறமையுடையார் இந்த கரைதுரையிலே இல்லை. ஆனாலிந்த உத்தியோகத்திலே அவனிருக்கத் தக்கதாக சுவாமி தயவுபண்ணினாரே ஆனால் கும்பினீயார் காரியங்களெல்லாம் மெத்தநன்றாய் நடக்குமென்று யோசனை பண்ணி சுவாமியை பிரார்த்திக்கின்றோமென்று யெழுதினார்களே யல்லாமல் உம்மை நாட்டினோமென்று யெழுதவில்லை அந்த காகிதம் சீர்மைக்கு யெழுதினது நான்தானே யெழுதினேன் அதற்கு கும்பினீயார் தெரியப்படச்சொல்லி ரங்கப்பிள்ளையை தானே அந்த இடத்துக்கு ஸ்தாபிக்கவேணுமென்று யெழுதினார்கள். இந்த இரண்டு காகிதமும் நான் யெழுதின தினாலேயும் பிரம்பு பிடி டங்காசாலையிலே குவெர்னதோர் பண்ணச்சொல்லி கொடுத்தாரென்றாப்போலே உமக்கு யென்று யோசனைபண்ணி தீர்த்து நமக்கு ஒரு மனுவு இருக்குதென்று சொன்னார். சொல்லுமென்று சொன்னேன் நீர் செய்துக் கொடுக்கிறோமென்று சொன்னால் சொல்லுகிறேனென்று

சொன்னர் என்னுலே ஆகிறகாரியமானுல் வஞ்சனை பண்ணத் தக்கதில்லையென்று சொல்லிதாராளமாய் சொல்லுங்களென்று சொன்னேன். அப்பால்இரண்டு காணிநிலம் குண்டு கிருமத் திலே குமரப்பனைக்கேட்டு வாங்கி கொடுக்கவேண்டு மென்று சொன்னர். நான் முன்னே தானே சொன்னேனென்று சொல்லி என்னுல் வஞ்சனை இல்லாமல் கண்டுபேசி வாங்கித்தாரே னென்று சொல்லிவிட்டு, பின்னையும் சற்றுநேரம் லோகாபிரம மாய் பேசியிருந்து அனுப்பிவிட்டு துரைவீட்டுக்கு வந்தேன்.

நேற்று தம்பி நயினர் பெண்சாதி கருத்தம்பி நயினர் பேரிலே கொடுத்த பித்திசாமை விளங்குகிறதற்கு கருத்தம்பி நயினரை அழைக்கச் சொன்னர். அவரும் வந்து துரைக்கு சலாம் பண்ணின உடனே பித்திசாமை யெடுத்துக்கொண்டு தம்பி நாயினர் பெண்சாதிக்கு உள்ளே நர்ன்கு விருகன் கொடுக்கச்சொல்லி முன் அவர்கள் உத்தியோகம் வாங்கி உனக்குக் கொடுக்கச் சொல்லி கட்டளையிட்டது மெய்யோ பொய்யோ வென்று கேட்டார். மெய்தானென்று சொன்னன். அப்பால் உனக்குப் பிறகு முத்தியப்பிள்ளை அந்த உத்தியோகத் திலே இருந்தாரே அவர் கொடுத்தாரா வென்று அவருக்குப் பிறகு நீ வந்த பிற்பாடு கொடுத்தாயா வென்று கேட்டார். கொடுத்தேனென்று சொல்ல இப்போ கூடாமலிருக்கக் கவை என்னவென்று கேட்டார். வீடு விற்ருன். தோட்டம் விற்ருன், ஒரு கிராமம் நடக்கிறது. அவர்களுக்கு சாப்பாட்டிற்கு ஆக அல்லோ கோன்சேவிலே நாலு வராகன் கொடுக்கத் தீர்த்தது யென்று ஞாயம் சொல்லி அந்தப்படி கொடுத்துவிடு என்று சொல்லிக் கேட்டால், எனக்கு இந்த உத்தியோகம் வாங்குவ தற்கு நாலாயிரம் வராகன் பிடித்தது. இரண்டாயிரம் வராகன் உன் பாதிக்குக் கொடுத்து நீ பாதி அனுப்புவித்துகொள்கிறதே யல்லாமல் எனக்கு உனக்கு மாதாமாதம் கொடுக்கிறதில்லை என்று சொன்னீரே அந்தப்படிக்கு நாலாயிரம் வராகன் உனக்கு பிடித்ததா நீ சிலவழித்தாயா? யாருக்குக் கொடுத் தாய் சொல்லென்று கேட்டார். நானப்படிச் சொல்லுவேனு என் தலையை வெட்டிவைக்க வேண்டுமென்று யோசனைபண்ணி இப்படி என் வாயிலே பிறவாத பேச்சை எழுதிப் போடச் சொல்லி அவருக்கு கோன்சேய் கொடுத்தார்களென்று சொன்ன தற்கு துரை அந்த பெண்பிள்ளையை அழைத்து வரச் சொல்லு

ஆகிலும் பேச்சாய்ச் சொல்லாமல் வெள்ளைக்காரன் கையிலே எழுதிவிக்கலாமா அந்தப் பெண் பெண்ஜாதி ஆனபடியினாலே இந்த மடையன் சொன்னபடிக்குச் சொன்னாலெழுதுகிறனவன் எப்படி எழுதிவிப்பான் என்று சொன்னார். அதற்கு நான் மெய்தானய்யா உங்கள் குற்றமன்று இதிலே யெல்லாரும் மடையராய்க் கூடினார்கள். இதனாலே இப்படி எழுதப்பட்டதும் சொல்லப்பட்டதும், இதிலே ஒருத்தனாகிலும் விவேகியாயிருந்தால் இப்படிச் சொல்லும் சொல்லப்படாது, எழுதவும் படாதுஎன்று சொன்னேன். அது மெய்தானென்று சொன்னார். அதன்பேரில் தம்பி நயினார் பெண்சாதியை அழைத்து வர சேவகன் போனவன் அழைத்து வருவதற்குள்ளே துரை படுத்துக்கொண்டார். அவர் எழுந்திருக்கும் வேளைக்கு மேசை மேலே சமஸ்த பதார்த்தமும் கொண்டுபோய் வைத்து வெள்ளைக்காரர்கள் எல்லோரும் கைக்குத் தண்ணீர் வாங்கிக் கொண்டு இவருக்கும் கைக்குத் தண்ணீர் கொண்டுவந்த சமயத்திலே இவர்களைக் கொண்டுபோய் விட்டவுடனே கல்லது சாப்பிட்டு வருகிறேனிருக்கச் சொல்லென்று சொன்னார். இதென்ன காரியம் எண்ணச்சே இதை விளக்கிக் கேட்கவேண்டியது. இனிமேல் அப்படிப்பட்ட சொல் சொல்லவேண்டாம் என்று கூப்பிட்டு அவர்களுக்கு உண்டானது கொடுத்துவிடச் சொல்கிறதுதானென்று சொன்னதற்கு அவனைக் கேள்; இவனென்ன சொன்னானென்று சொன்னார். அவர் காகிதத்திலே எழுதினபடிக்கு முன் எழுதியிருக்கிறபடிக்குச் சொன்னான். கல்லது அவளுக்கு நாலு வராகன் விழுக்காடு பங்கிடச் சொல் என்று கோபமாய்ச் சொல்லிப்போட்டு சாப்பாட்டுக்குப் போனார். அந்தபடிக்குக் கருத்தம்பி நாயனாருக்குச் சொல்லிப் போகச் சொல்லி உபயத் திருவரையும் அனுப்பிவிட்டேன். நானும் வீட்டுக்குப் போனேன் பகலைக்கு மேலாக எழுதத்தக்கன அதிசயமான சேதி வேறேயில்லை எதாப்பிரகாரந்தான்.

1748 ஆ ஜூலை மீ 8 உக்கு விபவ ஞு ஆடி மீ 18 உ சுக்கிரவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் கோயிலுக்கு கருப்பு உடுத்திக்கொண்டு பூசைக்கேட்டு படைத் தலைவர்மாரெல்லாம் கூட ஒரு சொல்தாது ஒருத்தன் கூடலூருக்கு ஓடின

வனைப் பிடித்து வந்தார்கள். அவனைத் தூக்கத்தக்கதாக கோன்சேல் கூடி தீர்த்து ஒன்பதரை மணிக்கு கோன்சேல் கலைந்து கோன்சேல் வீட்டிலேயிருந்து வீட்டுக்குப் போனார். இந்த வெள்ளைக்காரன் செய்த நேரமென்னவென்றால்: இவன் கையிலே நூறு வராகன் மட்டுக்கும் ஆஸ்தியுண்டு. இதல்லாமல் குதிரை மேஸ்திரியாயிருக்கிற வெள்ளைக்காரனொருத்தன் அவனுக்கு நூற்றைம்பது இரு நூறு வராகன் மட்டுக்கும் உண்டு. ஆஸ்தி, அவனுக்கும் இவனுக்கும் சிநேகமான படியினாலே அவன் நேற்று பொட்டி கொண்டுவரப்போன தாஷ்மானுடனேகூட சென்னப்பட்டணத்திற்குப் போகச்சே தன் பெட்டி சாவியை இவன் கையிலே கொடுத்துவிட்டுப் போனான். அப்படி இருக்கும்போது இவனிடத்திலே சூதாடினான். சூதாடின விடத்திலே தன் கையிலேயிருந்ததெல்லாம் தோத்துப்போட்டு அப்பால் தன் சிநேகிதன் பெட்டி சாவி தன் கையிலேயிருக்கிறபடியினாலே அந்தப் பெட்டியிலிருந்த வராகனையும் பொன் பொத்தோம் பூக்குலு முதலானதையும் எடுத்துச் சூதாடி தோத்துப்போட்டு இனிமேல் சென்னப்பட்டணத்திலிருந்து சிநேகிதன் வந்தவுடனே சாவியைக் கேட்டால் என்ன உத்தாரம் சொல்லப் போகிறோமென்று கூடலூரிலே ஓடிப்போவோமென்று அழிச்சப்பாக்கத்திற்கு மேலண்டையாய்ப் போகும்போது சிப்பாய்கள் கண்டுபிடித்து அழைக்கதால் அவர்களை பிஸ்தோலினாலே குண்டுபோட்டுச் சுட்டான். அதை அவர்கள் தப்பித்துக்கொண்டு இவனைப் பிடித்துக்கொண்டு வந்து ஒப்புவித்தார்கள். அதன்பேரிலே ஓடிப்போனத்துக்கே தூக்குப்போடுகிறது. அத்துடன் பிடிக்க வந்தவனை சுட்டது இரண்டு நேரத்தினாலே இவனைத் தூக்க ஆக்கினையிட்டார்கள். இவனுக்கு வயது இருபத்தொன்று உண்டென்று சொன்னார்கள். சாயங்காலம் கோட்டைக்குத் தென்னண்டையிலே கப்பிசு கோயிலுக்கெதிரே முசியே காடிவேர் வீட்டுக்கு வடக்கு எப்போதும் நேரம் செய்தவர்களைத் தூக்கும் இடத்தில் தூக்கு மரம் நடச்சொல்லி இவனைக் கோயிலுக்குப் போய் சர்வப் பிராயச் சித்தமெல்லாம் முடித்துக்கொள்ளச் சொல்லியும், தேவையான வஸ்துக்களுமெல்லாம் கொடுக்கச் சொல்லியும், கட்டளையிட்டுக் கோட்டை கோயிலிலே கொண்டுபோய் விட்டார்களென்று வீராநாய்க்கன் வந்து கபுறு சொன்னான். அப்பால் துரையவர்கள் வீட்டுக்கு நான் போனவிடத்திலே துரையவர்கள்

லுவின் பேரிலே யிருந்து வெளியே நடு சாலையிலே வந்த உடனே நான் போய் சலாம்பண்ணினேன். ஆற்காட்டிலிருந்து சேதி வந்தது, மிறுநசல்லிகான் ஆயிரம் குதிரையும் இரண்டாயிரம் மனுஷருடனேயும், விரிஞ்சிபுரத்தின்பேரிலே சுவாரி வந்ததாகவும், அந்தச் சேதி கேட்டு ஆற்காட்டிலே யிருக்கிறவர்களெல்லாம் தட்டுக்கெட்டு தடுமாறி இடம் கழிந்துப் போனதாகவும், மருட்டியார் வருகிற அவசர சுருக்காயிருக்கிறபடியினாலே நவாபு அன்வர்த்திகான் மகன் மமுதல்லிகான் திருச்சினாப்பள்ளிக் கோட்டையை விட்டுத் திருநெல்வேலிக்குப் போயிருக்கிறானே அவனை சுருக்கிலே வந்து திருச்சினாப்பள்ளிக் கோட்டையைச் சேரச்சொல்லியும், கோட்டைக்கு ரஸ்து விஸ்தாரமாய்ச் சேர்க்கச் சொல்லியும், துரை கோட்டையும் பத்திரப்படுத்தி ரஸ்து மற்றதெல்லாம் சேர்த்து வைக்கச் சொல்லியும் பின்னையும், ஆயிரம் ஐந்நூறு குதிரை வைக்கச்சொல்லியும் இருக்கிறதாவிலே பத்திரமா யிருக்கச்சொல்லியும், பின்னையும் என்ன யெழுதினார்களோ எழுதி வந்ததென்று சொன்ன மாத்திரத்திலே துரை யிருந்துக்கொண்டு அல்லிசுக்கிம் சாயபை பரபத்தியம் கேட்டதற்கு அவன் கொடுக்கிறோமென்றவன் அப்பால் ஒருத்தன் விகாதம் பண்ணினதிலே யல்லோ அவன் கொடாதே போனான். அந்த விகாதம்பண்ணின மனுஷனை இன்னானென்று இந்த மட்டுக்குஞ் சொல்லாமல் போனியே வென்று கேட்டார். எப்படி ஒருத்தனை சும்மா இன்னானென்று சொல்லுகிறது. ஒருத்தன் பேரிலே சுசுஸ்பெத்தாய் தோணி சொன்னால் ஒருவேளை சாதகம் கேட்டால் சாதகம் சொல்லாமல் ஒருத்தன் பேரைச் சொல்லப்போமாவென்று சொல்லி எத்தனை விதமாய் விசாரித்தாலும் சாதகமில்லாமல் போனபடியினாலே முன்னேதானே உங்களுடனே சொல்லும்போது துரை அவர்களுடனே சொல்லுகிற மட்டுக்கும் என் மனதுக்கேற்க விசமாயிருக்கவேணும் அவனுக்குஞ் சாதகத்தைச் சொல்லி அவன் பேரிலே நேரத்தை சுமக்கப் பண்ணத்தக்கதாக இருக்கவேணுமே யல்லாமல் ஒரு காரியஞ் சொல்லி அப்பால் சாதகமென்று வந்த விடத்திலே யில்லையென்றால் அதைவிட பிசகு வேறே யில்லை. அப்போ உங்களுக்கும் பொய் சொன்னானென்று தோத்துமே யென்று முன்னமேதானே சாதகத்தைச் சொன்ன மனுஷனை அறிய போகாதென்று சொன்னேனே யென்று சொன்னதற்கு நான் நன்றாயறிவேன். அந்த விகாதம்பண்ணின

மனுஷனின்னுனென்று நம்மைத்தொட்டுப் பொல்லாப்பு என் வரவேணுமென்று நினைத்து இருக்கிறதேயல்லாமல் உனக்குத் தெரியாமலிருக்கவில்லையென்று நான் கெட்டியாய் சத்தியம் பண்ணுவேன். உன்னுடைய சாடையும் உன் காரியமும் உன் நடத்தையும் இன்றைக்குப் பழகிறேனு எனக்குத் தெரியாதா ஒருத்தன் சும்மா தெருவிலே போறவனைப் பார்த்து இவ னின்ன ஆலோசனையாய்ப் போகிறுனென்று சொல்லுவியே இனிமேலிப்படி நடக்குமென்று சொன்னுல் அப்படி நடக்குமே. சத்துருவினுடைய ஊரிலேயில்லாத போட்டி விட்டு ஒருத்தருக் கொருத்தர் ஆகாமல்பண்ணி அவர்களுக்குள்ளே தானே மித்திர பேதமாக ஓடிப்போகத்தக்கதாக பண்ணுகிற சாமார்த்திய மில்லாமல் ஆற்காட்டு டில்லி அபரங்கபாது முதலான சேதி களெல்லாமதுக்குத் தக்கதாக ஆருரைக்கொண்டு விசாரிக்க வேணுமோ அவரவர்களைக்கொண்டு விசாரிக்கிற உனக்கு நீ எடுத்து நடத்தின காரியம் நீ நடப்பித்த காரியத்திற்கு விகா தம் பண்ணியிருக்க அவனை அறியாமலிருப்பாயென்று சொன்னுல் அப்போ சூரிய உதயம் பொய்யென்று சொல்லவேணும். உனக் கெதிரே நானிருக்கிறேன் நானில்லையென்று சொல்லி சொன் னுல் நீ தெரியாதென்று சொன்னது மெய்யென்று எண்ணலாம். ஆனுல் நீ மெத்த எனக்கு ஒளித்தாய். அவனை ஆக்கினை பண்ணினுலதைத்தொட்டு தோஷமுண்டா? அப்படிப்பட்டவுன் பேரிலே தயவு பண்ணுகிறதற்கு உனக்கு மனம் வந்துதா? அப்படிப்பட்டவனை ஒருத்தனை ஆக்கினை பண்ணினுல் நாளை மற்றுநாள் மற்ற பேர் பின்னையொரு காரியஞ் செய்ய பயப்படு வார்கள். பெரிய ஆக்கினை செய்கிறதை சின்னதாய் நீ நடத்தச் சொன்னுல் நான் நடந்தேனு யென்றுமிப்படி நீ ஒளித்தால் எனக்கு எந்த விதத்திலே கபுறு அகப்படுமென்று இப்படி நீ மிறட்டுகிற வார்த்தையாய்ச் சொல்ல வந்தார். அதற்கு அவனுடைய தாக்ஷண்யமென்ன? நானறிந்து சொல்லாமலிருக்கத் தக்கதில்லையென்று எத்தனை விதத்திலே சொன்னுலும் மெய் யென்று எண்ணுமல் அப்பால் முன்னையைப்போலே கூடிவர வேண்டுமென்று நீ யோசனை பண்ணுகிறதையும் விட்டுவிட் டாய். அந்த சாடை உன் மனதிலே என்னமோ இருக்கிறுப் போலே இருக்குதென்று இனிமேலப்படி யிருக்கிறதினுல் எனக்கு ஒரு காசு ஆதாயம் வரமாட்டாது என்று இப்படி நிஷ்டூரமாய்ச் சொன்னுர். நானப்படி ஒருக்காலுமிருக்கத்

தக்கதில்லையென்று அதற்கு தக்கதாய் உத்தாரம் சொன்னாலும் லகுவும் பிகுவுமாய் சொல்லிப்போட்டு கருத்தம்பி நாயனார் நாலாயிரம் வராகன் கொடுத்ததேயென்று சொன்னானே இந்தக் கச்சோருக்கு எத்தனை தண்டனை தண்டிக்கத் தேவையில்லையாவென்று சொன்னார். அவனொரு மடையன், மிருகம், விவேகமில்லாதவன், மற்ற காரியத்திலேயெல்லாம் கை மாத்திரமெத்த கடிசு. நீங்கள் ஒரு விசை இந்த உத்தியோகத்திலே ஸ்தாபித்த மட்டுக்கும் நீங்கள்தானே அவனுக்கு ஒரு ஆக்கினை பண்ணுகிறதுமல்ல, தள்ளுகிறதுமல்ல; ஆனாலதற்கேற்றபடி நடத்திக்கொண்டு போக வேண்டியதென்று மார்க்கமாய்ச் சொன்னதற்கு ஆயிரத்தருநூறு ரூபாய் கொடுத்தானே மற்ற நானூறு ரூபாயும் சீக்கிறமத்திற்கு சுருக்குபண்ணி வாங்கிப் போடென்று சொல்லி எனக்குக் கூடிவருகிற காரியத்தின் பேரிலே ஒரு நாழிகை நேரம் உன் புத்தியை வைத்தால் காரியங்கள் நடந்தேருமென்று சொன்னார். ஐயா எனக்கு அதைவிட வேறென்ன வேலையிருக்குதென்று சொல்லிப் போட்டு பாக்கு கிடங்குக்கு வந்தேன்.

இற்றைநாள் மத்தியானத்திற்கு மேலாக சாயங்காலம் ஐந்து மணிக்கு காலத்தாலே நியமித்த வெள்ளைக்காரனை தூக்குப் போட்டார்கள். ஓடிப்போனவன் ஓடுகிறதற்கு அவமரியாதையாய் துப்பாக்கிப் பிடுங்காமலே முதுகிலே பிடித்துப் பிறகே பத்திரத்தைக் கட்டி தூக்கினதாய்ச் சொன்னார்கள். சேவகனானபடியினாலே ஓடினதற்கு இருக்கிறவனுக்குக் கேழ்க்கவரத்தக்கதாக அப்படிச் செய்ததென்று சொன்னார்கள். தேவனாம்பட்டணத்திலேயிருக்கிற குவர்னதோர் மெஸ்தாபெனேய்தாக்கும் கொம்மாந்தோர் மேஸ்தர் கிறபேனுக்கும் ரொம்ப பேச்சுகள் நடந்ததாய் கேழ்விப்பட்டதென்னவென்றால்: நீங்கள் பதினைந்து கப்பல்களுடனே இங்கே திரிகிறப் போலே ஆனதே இத்தனை பிலனாக நீங்களிருக்கும்போது அவர்கள் எட்டு கப்பல்களுடனே உனக்கெதிரே வந்து நின்று போட்டு அப்பாலே சென்னப்பட்டணத்திலே கொண்டுபோய் வெள்ளிப் பெட்டியை இறக்கிப்போட்டு அப்புறமவன் போகத் தக்கின யிடத்துக்குப் போய்விட்டது. நீ மெய்யாய் கப்பல் பிடிக்கிறவனைப்போலே இங்கே யிருந்து கொவலத்தண்டை போய் இருந்துப்போட்டு மறுபடி வந்து அவன் ஓடிப்போய்

விட்டான் காணேமென்று சொன்னுய். நீ அவனைப் பிடிக்கிறது மெய்யானுல் அவன் கப்பல் காடி நடக்கச்சே அவனைப் போய் துடர தேவையில்லையா? அவன் போன மூன்று நாள் இவ் விடத்திலே யிருந்து புறப்பட்டாய். அப்பால் புதுச்சேரி துறை யிலே ஒரு நாளிருந்து அப்பால் ஆலம்புறவையிலிருந்து, சது ரங்கப்பட்டணத்திலிருந்து கோவினம் திருவாமியூர் மட்டுக்கும் போகிறதற்கு எட்டு நாள் சென்றது. இதிலே அவன் சென்னப் பட்டணத்துக்கு கப்பல் கொண்டுபோய் வைத்துப் பிடித்து வெள்ளிப் பெட்டிகள் முதலான தினுசுகளும் நானூறு சொல் தாதுகளும், நூறு காப்பிரிகளும் இறக்கிப்போட்டு தண்ணீர் மற்றுமுண்டான தினி ரஸ்துகளும் ஏத்திக்கொண்டு புறப் பட்டுப் போகவேண்டிய இடத்துக்குப் போறமட்டுக்கு மிருந்து அவன் போன பிற்பாடு நீரங்கே போய்ச் சேர்ந்தீர். இதற்கு இராசாவும், கும்பினியாரும் உங்களை இருக்கச்சொல்லி வைத்த கட்டை குச்சி படகுகள் மீன் பிடிக்கிற படகுகளும், கட்டு மரங்களுமகப்பட்டால் ஓடி ஓடி பிடிக்கிறதும், சண்டை முஸ் திப்பான கப்பல் வந்தால் போக்குக் காட்டிப்போட்டு ஓடிப் போகிறதுமா முன்னையும் மேஸ்தர் பெத்ரோமும் இப்படித்தான் சமயத்தில் ஓடிப்போய் இவனை நம்பியிருந்து சென்னப்பட் டணம் போனது, இப்பவும் உங்களை நம்பியிருந்த நாங்களும் அப்படித்தான் மோசம் போவோம் என்கிறதாய் சொன்னதின் பேரிலே நாங்களப்படி கையாலாகாமல் ஓடிப்போகிறவர்களைக் கொண்டு நீ என்ன பரவசமாயிருக்கப்போறீர் நாங்கள் பேரரோ மென்று ஒருத்தருக்கொருத்தர் பேச்சு நடந்ததின்பேரிலே துரையிருந்துகொண்டு எதிரிகளுக்கு பலம் வராமலிருந்தால் உங் கள் பரவசம் எங்களுக்கு உண்டு. எதிரிகளுக்கு பலம் வந்தால் பங்காளமாகிலும், பெத்தாவிய முதலாகிய ஸ்தலம் சேருகிற வர்களே யல்லாமல் இங்கே யிருக்கத்தக்கதில்லை. எங்களுக்கு நன்றாய் தெரிந்துப் போச்சுதென்று இப்படி சீர்மைக்கு எழுது கிறோம். நீங்கள் போங்களென்று சொன்னதின்பேரிலே ஒருத்தருக்கொருத்தர் இட்டோடுபட்டு அதன்பேரிலே மேஸ் தர் கெரெமென் கப்பலின்பேரிலே ஏறி கப்பல்களெல்லாம் பாயெடுக்கச் சொன்னதின்பேரிலே மறுபடி சிறிது பெரிய மனுஷருக்குள்ளே உபயத்திரவருக்கும் சமாதானங்கள் பண்ண தாய்ச் சேதி கேழ்க்கப்பட்டது. சித்தவட்டம் நபாபு அப்துல்

ஷபிகான்குமாரன் அப்துல் அமீதுகானுக்கு, ஆறுகெஜம் இரண்டு வர்ண சகலாத்தும், ஆறு மொகமல், ஆறு சூரிகத்தி, ஆறு கத்திரி, இரண்டு வராகன் சட்டம் கண்ணாடி, இரண்டு பசுரு புகையிலை, பதினைந்து ரூபாய், இரண்டு தடிப்பிரம்பு, இரண்டு சீர்மைக் காடி போட்டலு இது முதலானதுகள் கொடுத்து வந்தவர்களுக்கு பத்து ரூபாய் வெகுமதியும் கொடுத்து, காகித மெழுதிக்கொடுத்து அனுப்பிவிட்டோம். சித்தவடத்துக்குப் போகிறவர்களுக்கும், சிதம்பரத்துக்குப் போயப்படி போகிற தாய்ச் சொல்லிப் போனார்கள். மற்றபடி வேறே அதிசயம் கேழ்க்கப்படவில்லை.

*1748* ஆ. சூலை மூ *20* உ க்கு விபவ ஸு ஆடி மூ *9* உ சனிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் வீட்டுக்குப் போனவிடத்திலே துரையவர்கள் மசுக்கரை காகிதமெழுது கிறது அலுவலிலே யிருந்தார்கள். நானும் பதினொரு மணி மட்டுக்கும் துரையவர்கள் வளவிலே யிருந்து அப்பால் பாக்கு கிடங்குக்கு வந்து பங்காளத்துக்கு முசியே கோலாநுக்கு இரண்டு காகிதமெழுதி ஒன்று கேசவப்ரசாது என்று பங்காளத்திலே யிருந்து சேத்துபதி யாத்திரைக்கு வந்திருந்து இவ்விடத்திலே (ஸ்ரீ) துரையவர்களுடனே பழக்கமானபடியினாலே துரையவர் களண்டைக்கு வந்து பெட்டி வாங்கிக்கொண்டு ஒருமாசமிருந்து துரையவர்கள் கையிலனுப்பிவித்துக்கொண்டு முசியே லேற் போநுக்கு ஒரு சிபார்சு காகிதமொன்று வாங்கிக்கொண்டு போகிறவன் கையிலே முசியே கோலாநுக்கு ஆயிரம் வராகனும் நீரெழுதினபடிக்கு இந்த வருஷத்துக்குள்ளே சம்மதிபண்ணி போடும் ராஜரீகம் தெய்வீகமில்லாமல் அவ்விடத்திலே யிருந்து உண்டிகைக் காகிதம் வாங்கி அனுப்பச்சொல்லி எழுதின காகிதத்தில் கேசவப்ரசாது சிபார்சு யெழுதி இவர் கையிலே ஒரு காகிதமும் கொடுத்து மற்றதொரு காகிதம் முசியே பேர் சேத்து கையில் கொடுக்கச்சொல்லி, மாரியப்ப முதலி கையில் அனுப்பி வைத்தேன். மற்றபடி வேறே அதிசயமான சேதி யில்லை.

**1748 ஆ ஜுலை மூ 21 உக்கு விபவ ஞு ஆடி மீ 10 உ ஆதிவாரம்.**

இற்றைநாள் காலத்தாலே கேழ்விப்பட்ட சேதி என்னவென்றால்: அகமுடையான் கக்கிளத் தெருவிலே அலமேலு என்கிற தேவடியாள் வீட்டுக்கு அடுத்த வீட்டிலே குடி யிருக்கிறவன் எழுத்து வேலை செய்கிறவனுமவன் பெண்சாதி நேத்து இராத்திரி பொழுது விடியர்காலத்திலே நாலு ஆம்பிளை பெற்றாள். அதிலே இரண்டு பிள்ளைகள் செத்துப்போய் இரண்டு பிள்ளைகள் சீவனுடனே ஒரு மாச மட்டுக்குமிருந்து செத்துப் போனது. இந்தப் பட்டணத்திலே உண்டான ஜனங்களிலே வெகு ஜனங்கள் வெள்ளைக்காரர் தமிழர் வெகு பேர் பார்த்தார்கள். இந்த சேதி துரையவர்களுக்கும் சொன்னேன். துரையும் ஆச்சரியமாய்த்தானே பிழையாது சீர்மையிலேயும் அனேக விடத்திலே பிறக்கிறதுண்டு. ஆனால் பிழைத்திராதென்று சொல்லி இது எத்தனை மாசத்திலே பிறந்ததென்று கேட்டார். ஏழு மாசம் பிறந்ததென்று சொன்னேன். அதை புதைத்துப் போட்டார்கள் என்கிற சேதியுஞ் சொன்னேன். மற்றபடி மத்தியானம் வரைக்கும் எழுதத்தக்க சேதி ஒன்றுமில்லை. சாயங்காலம் ஆறு மணி வேளைக்கு நபாபு மாபுசுகான் அவர்கள் என் பேருக்கு ஒரு காகிதமெழுதினார்கள். அந்த காகிதத்துடனே முகம்மது மூர்திஜா யென்கிறவன் இன்னானென்று ஒருத்தரும் அரியானந்தக் காகிதத்திலே யெழுதியிருந்த சேதி. உம்மைக் காரைக்காலிலே பார்த்து சிநேகம் பண்ணினது முதல் உம்மை அண்ணன் தம்பியா யெண்ணி யிருக்கிறேன். அதன் பிற்பாடு நான் அபரங்கபாதுக்குப் போயிருந்தேன். அதனாலே எழுதவில்லை. இப்போ அபரங்கபாதுலிருந்து வந்து சேர்ந்தேன் இனிமேல் எப்போதும் சிநேகம் உத்திரோத்திரமாய் நடக்கத் தக்கதாக காகித முகாந்திரங்களிலே விசாரிக்கவுமென்று எழுதியிருந்தது. இந்த சேதியை துரைக்குச் சொல்லி அப்பால் முசியே பாரதிக்கு சொல்லுவோமென்று இருக்கும்போது துரை அழைத் தனுப்பிவந்த அரக்காரர்கள் மாபுசுகான் காகிதம் நமக்கு வந்ததென்று சொன்னானேயென்று கேட்டார். என் பேருக்கு மாபுசுகான் காகிதம் முசியே பாரதி பேருக்கு ஒரு காகித வயணம்: முன் எழுதினபடிக்கு வந்ததென்று சொல்லி முசியே பாரதி குவர்னதோர் காரைக்காலுக்கு யென்று மேல் விலாசம் எழுதி

யிருந்தது. அந்த சாடையை உங்களுக்கென்று அறுகாருகான் சொன்னார்களென்று சொன்னதற்கு மெய்தானென்று ஒத்துக் கொண்டு மாபுசுகான் என்ன காரிய நிமித்தியமாய் உனக்கு எழுதினானென்று கேட்டார். ஒட்டகத்தினுடைய பால் உலர்ந்தது ஒளஷதத்துக்கு வேணுமாம் அதுவும் அம்பரும் வாங்கி அனுப்பச்சொல்லியும் இது கொஞ்ச காரிய நிமித்தம். துரை அவர்களுக்கு எழுதுகிறதல்லவென்று சொல்லி எழுதினானென்று சொன்னதற்கு அந்தபடிக்கு வாங்கி சீக்கிரமத்துக்கு அனுப்புயென்று சொன்னாரதிலே அவர் பெண்சாதி வந்து அழைத்தாள் அங்கே போனார். சற்று நேரம் பேசியிருந்து என்னண்டைக்கு வந்து நம்முடையவர்கள் இங்கிலீஷ்காரர்களுக்கு வெளியிலேயிருந்து இருநூறு பசுக்களும் எருதுகளும் விலைக்கு வாங்கிக் கொண்டு போகிறதைபோட்டிவைத்துப் பிடித்து வந்தார்களாம் என்று மெத்த சந்தோஷமாய் வந்து சொன்னார். அப்படியா முன்னே ஒருதரம் போய் குதிரைகளைக் கொண்டுவந்தார்கள். இப்போ பசுக்களை கொண்டுவந்தார்களென்று அவர் சந்தோஷப்பட்டு சாமார்த்திய வார்த்தையாய்ச் சொல்லிப்போட்டு வந்தேன். இதற்கு முன்னே சாமத்துக்கு முன்னேதானே இந்த மாடுகளை அழகனுடனே கூடப்போய் ஓட்டிவந்த டிலேயப்பன் சேவகன் வந்து தேவனும்பட்டணம் ரெட்டியிது பசு பாகூரண்டையிலே மேய்ந்தது. அந்தப் பசுவும் அத்துடனே கூட அந்த பாகூர் ரெட்டிகளுடைய் பசுக்களும் கூட ஓட்டிக் கொண்டு வந்ததென்று சற்று இப்புரம் ஓடி வரார்களென்று சொன்னான். அழகன் சொன்னது: இங்கிலீஷ்காரருக்கு வெளியிலே கொண்டு ஓட்டின பசுக்களென்று சொல்லுங்கோளென்று அம்மாளுடைய உத்தாரம். ஆருடனே யாகிலும் சொன்னால் இரண்டு காதையும் அருத்துப் போடுவோமென்று சொன்னார்களென்று சொன்னனய்யா இந்தப் பேச்சை நீங்கள் நாங்கள் சொன்னதாய்ச் சொல்லவேண்டாமென்று சொல்லிப்போட்டு போனானிப்படி யிருக்கிறது நடக்கிற காரியம். ஆனால் செய்யலாவதென்ன?

முன் ஆனி மீ 31 உ சென்னப்பட்டணத்திலிருந்து பங்காரு எழுதியனுப்பின காகிதம் நாளது மாதம் 9 உ வந்து சேர்ந்து அந்தக் காகிதத்திலே எழுதியிருந்த வயணம்:

இப்பவும் நயனாருடைய சங்கதியானால் அவர் பண்ணுகிற அனியாயமானால் எழுதி முடியாது. என்னவென்றால்: வீடுகள்

பிடித்த விடத்திலே அவனவன் கொம்பு கோருகளை எடுத்துக் கொண்டுபோய் ஒரு வீட்டிலே வைத்து இரண்டு குடித்தனம் பண்ணிக்கொண்டு இருக்கிறார்கள். அப்படி யிருக்கும்போது நயினார் குடுத்தனமில்லையென்று எண்பித்து அந்த கொம்பு குடிகளை எடுத்து வருவது தனக்கு சரியானபடிக்கு விக்கிற கிரயம் பண்ணிக்கொண்டு வருகிறான். இதுவுமல்லாமல் தானியம் கொண்டு வருகிறதை சின்ன துரை முசியே முறே அவர்கள் முப்பது கரிசை நெல்லுமாத்திரம் வாங்கிப்போட்டுக்கொண்டான். ஆகையினாலே ஊரிலே தானியம் கொள்ள கிடைக்கவில்லை. இதுவுமல்லாமல் நெல் கொண்டுவருகிறவர்கள் கையிலே பொதிக்கு உழக்கு நெல் விழுக்காடு, சின்ன துரைக்கு மிராசும் நயினாருக்கு ஆழாக்கு நெல்லு மிராசும் இந்தபடிக்கு நெல்க்காரரை அகாமியம்பண்ணி மிராசு உண்டாக்கிக்கொண்டான். இதுவுமல்லாமல் நயினார் குதிரை ஏறிக்கொண்டு கடைத்தெருவிலே சுவாரி வந்தான். அவரவர் செமின் விக்கிற சோனகன் எழுந்திருக்கவில்லை. சும்மாவானாலும் ஒரு அபாண்டம் உண்டாக்கி அவனைக் கடைக்குக் கடைக்கும் பதினைந்து அடி அடித்து ஓட்டிவிட்டார்கள். இந்தபடிக்குப் பண்ணது ஏனென்றால்: எல்லாரும் தன் ஆக்கினைக்கு உள்ளாகவேணுமென்று பண்ணி செமின்காரர் கையிலேயும் மிராசு பண்ணிக்கொண்டான். பழைய கடன்காரரை அடிக்கிறது அவர்களை அயிரான் பண்ணுகிறது இப்படியாய்ப் பண்ணிக்கொண்டு வந்தான். ஆகையினாலே போன மாதத்திலேதானே எல்லாரும் புறப்பட்டுப் போய்விட்டார்கள். லிங்கிசெட்டி வீடு மூவாயிரம் வராகன் பொறத்தக்கின வீட்டை ஆறு வராகனுய் பலவந்தம்பண்ணி விற்பித்தான். இந்த சம்மதி குண்டூர் பாலுசெட்டி அறிவார். இந்த ஞயாம் நடந்தாப்போலே எல்லா ஞாயமும் நடந்திருக்குமென்று அறிந்துக்கொள்ளவும். இந்த சம்மதியெல்லாம் நானென்ன எழுதிக்கொண்டேனென்றால்: ஏழை சாதிகளுக்கு சகல கறணையாகி அவர்களை அயிரானிபண்ணாமல் நடைப்பித்தால் குடி வெகுபேர்கள் வந்துசேரும். ஊரும் குதிர்பாடாயிருந்தால் வெற்றிலை, புகையிலை அதனமாய் விற்கும். எனக்கு நஷ்டம் வராமற்படிக்கு நடந்துக்கொள்ளுவேன், ஆகையினாலே உங்களுக்கு இந்த விண்ணப்பம் பண்ணிக்கொண்டேன். இந்த விண்ணப்பத்தை அங்கீகரித்து தாக்கீதுபண்ணி வைத்தார்களேயானால் ஊர் குதிர்ப்பட்டு போய்விடும். நானும் உங்கள் தருமத்

திலே கடைத்தேறுவேன். இப்போவானல் வெற்றிலே, புகையிலே மாதம் ஒன்றுக்கு அறுபது வராகன்மட்டுக்கும் நஷ்டம் வருகிறது. அது தாங்கள் சித்தமறிய கட்டளையிடவும் சாராய குத்தகையுடனே கூடினது கள்ளுக்கடை சரிபோனவிடத்திலே எல்லாம் போட்டு விற்கிருர்கள். அதற்கு ஆக்கினை அத்து ஒன்றுமில்லை. அது தங்கள் சித்தமறிய கட்டளையிடவும் இவ் விடங்களிலே நடந்துக்கொள்ளவேண்டியதற்கு இன்னபடி புத்தியென்று நீரும் தயவுபண்ணி கட்டளையிடவும், இதுவுமல்லாமல் இந்த தடவை வந்த கப்பலிலே இருநூறு வராகன் புகையிலை கொண்டுவந்தார்கள். அந்த இருநூறு வராகன் புகையிலையும், கோட்டையிலே வெள்ளைக்காரர் வாங்கிக் கொண்டு விற்றுக்கொண்டு வருகிருர்கள். இத்தனை நாளும் மேட்டுகளிலே கும்பினிக் காரியக்காரரும் பாளையக்காரருடைய காரியக்காரரும் இருந்து இருவருடைய சிலவில்லாமல்படிக்கு வெளியே கொம்பு கொடிகள் போகிறதற்கு இரண்டுபேர் சிலவின்பேரிலே நடந்துக்கொண்டு வந்தது. இந்த மாதம் முதற்கொண்டு கும்பினி மனுஷன் இருந்தால் தனக்குத் தொந்தரவுயென்று கும்பினி மனுஷனை தள்ளிப்போட்டுவிட்டு தன் சொந்த மனுஷனைமாத்திரம் வைத்துக்கொண்டு தனக்கு சரிபோனபடிக்குக் கொம்பு கொடிகளை வெளியே அனுப்பிவிக்கிருன். பாளையக்கார நயினுர் இவ்விடத்திற்கு வந்த பிறகு இந்த அனியாயமெல்லாம்பண்ணி அவருக்கு நடக்கிறது. பல்லக்கு குதிரை இதுகள் ஆச்சுது. இரண்டாயிரம் வராகன்மட்டுக்கும் ஆஸ்தி ஆச்சுது. இவன் பண்ணுகிற அநியாயம் எழுதி முடியாது. இவனைத்தொட்டு ஊரிலே குடிபடைகள் யாரும் நிர்வாகம் பண்ணமாட்டாமல் ஏல்லோரும் புறப்பட்டு நாடுகளிலே போய்விட்டார்கள். இந்த விபரமெல்லாம் மனதிலே அங்கீகரித்து என் பேச்சை வெளியே போடாமல்படிக்கு நீங்கள் விசாரிக்கிறமட்டிலே விசாரித்துக் கொள்ளவும். என்பேரிலேயானல் நயினுரென்னை கொல்லத் தக்கின பகையாயிருக்கிருன். எந்த அபாண்டம் போட்டு என்னை பங்கம்பண்ணி வைக்கப்போகிருனே தெரியாது. என்னை மொக்கை கொடுக்கவேணுமென்று மெத்ததானே போர் பண்ணுகிருர். அது தாங்கள் சித்தமறிய கட்டளை யிடவும் வேணும் விண்ணப்பம்.

இந்தக் காகிதம் தலபு எழுதிவந்தது.

1748 ஆ ஜூலை மீ 22 உக்கு விபவ ஹு ஆடி மீ 11 உ சோமவாரம்.

இற்றைநாள் காலத்தாலே நேற்று முசியே பாராதிக்கு வந்த காகிதத்தை என்னண்டைக்கு அனுப்பிவைத்து அதிலே எழுதியிருந்த வயணம்: சொல்லியனுப்ப சொன்னதற்கு நான்தானே போய் சொல்லுவோமென்று முசியே பாராதி வீட்டுக்குப் போய் நேற்றையதினம் அந்தக் காகிதம் தலபு எழுதினபடிக்குச் சொன்னவிடத்திலே அவர் பதிலுத்தாரம்பண்ண கவையில்லை. பின்னையொன்றும் காரியமில்லையென்று சொல்லி நான் சொல்ல வேண்டியதென்ன உபசாரமாய் எப்படி எழுதவேணுமோ அந்தபடிக்கு எழுதியனுப்புமென்று சொன்னுனிதிலே துரையவர்களழைக்கிருரென்று வந்து சேவகனை அழைத்தான் நல்லதென்று சொல்லி முசியே பாராதி கையிலனுப்பிவித்துக்கொண்டு துரை வீட்டுக்கு வந்தேன். துரையவர்களுக்கு ஒழுகரைக் குடிகள் காமியப்பமுதலி, குமரப்பமுதலி, முத்து குமரப்ப முதலி, ரங்காதமுதலி, தம்பி பேர்விளங்கமுதலி நம்மண்டையிலே கணக்கு எழுதுகிற சிதம்பரமுதலி பேரிலே குமரப்ப முதலி பங்கிலே பாதியானபடியினுலே முன் ருத்ரோத்காரி வருஷமுதல் ஐந்து வருஷத்துக்கு ஒரு வருஷம்போக ரக்தாக்ஷி வருஷமுதல் சிதம்பரமுதலிக்குப் பங்குபாதியானபடியினுலே வருஷம் ஒன்றுக்கு எட்டு சேர் மரக்காலாலே முப்பத்தாறு கல நெல் விழுக்காடு நாலு வருஷத்திற்குக் கொடுக்கவும். அப்புறம் அவர் காணி காணியாக்ஷி மானியத்துடனே சேர்ந்து நாலு வருஷமானுப்போலே சிதம்பரமுதலி அனுபவித்துக்கொள்ளவும் அவர் வீடு குடியிருக்கிற மனைமாத்திரம் அவரனுப்பிவிக்கவும் இப்படியாக சீட்டெழுதியிருக்கிறபடிக்கு நாலு வருஷமும் நடந்ததுயென்று அந்த பங்கு முதல் குத்தகை ஐந்து வருஷமான படியினுலே அவர் இப்போதம்முடைய பங்கை அன்னியனுகிய ஒருகிருஸ்தவன் கையில் விடத்தக்கதாக உடன்படிக்கை பண்ணிக்கொண்டிருக்கிருர். அப்படி அன்னியனுகிய கிருஸ்தவனைக் கொண்டுவந்து வைக்கிறது ஞாயமல்ல. ஒன்று சிதம்பரமுதலி தானே வந்திருந்து குடுத்தனம் பண்ணிக்கொண்டிருக்கிறது அல்லவென்ருல்: அவனுடைய உறமுறையிலே ஒருத்தரை வைத்துக் காரியம் நடப்பித்துக்கொண்டு போகவேண்டியது என்று பிரசித்தமாய் எழுதிக்கொண்டு வந்து (ஸ்ரீ) துரையவர்கள்

க்கையிலே கொடுத்தார்கள். அதைப் பார்த்துக்கொண்டு சிதம்பர முதலி என்கிறவன் யாரென்று கேட்டார். அதிலே சிதம்பர முதலியும் வந்தான்; துரையவர்களிருந்துக்கொண்டு சிதம்பர முதலி யாரென்று கேட்டார். இவர்தானென்று முன்னேவிட்டுச் சொன்னோம். அதன்பேரிலே துரையவர்களிருந்துக்கொண்டு சிதம்பரமுதலியைப் பார்த்து நீ உன்னுடைய பங்கை நீ போய் இருந்து பயிர் பச்சை பண்ணிக்கொள்ளவேணும். அல்லவென்றால்: உன்னுடைய உரவின் முறையாரை வைத்து நடப்பித்துக்கொள்ளவேணும். இல்லாவிட்டால் மூன் இருக்கிற படிக்கு உன் எதிரி பங்காளி கையிலே விட்டு நடப்பித்துக் கொள்ளவேணுமே யல்லாமல் அன்னியனு யிருக்கப்பட்ட கிருஸ்தவன்பேரிலே உனக்கு இத்தனை தயவுவந்து அவன் வசத்திலே விடத்தக்கதாக உனக்கவனப்படி என்ன உபகாரம் செய்திருக்கிறானென்று கேட்டார். அதற்கு சிதம்பரமுதலி சொன்னது: அவனைத்தொட்டெனக்கு உதவி ஒத்தாசை உண்டாயிருக்கிறபடியினாலே அவன் வசத்திலே விட்டே னென்று சொன்னான். அப்படி கவையில்லை நீ கிருஸ்தவன் வசத்திலே விடத்தேவையில்லை. உன் உறமுறையார்களை வைத்து நடப்பித்துக்கொள்ளென்று தீர்த்துச் சொல்லிப் போட்டு உன்னுடைய காணியாக்ஷி மானியத்தை நீ அனுபவித்துக்கொள்ளென்று சொன்னார்கள். அதற்கு சிதம்பரமுதலி இருந்துக்கொண்டு அவர்களுக்கு அந்தபடி கம்பத்தம் நிலம் நீர், மனை மற்றதெல்லாம் நானனுபவித்துக்கொள்ள வேணுமென்று சொன்னான். அதற்கு ஏதாகிலுமுனக்கு சாதகமுண்டாவென்று கேட்டார். அதன்பேரிலே முத்து குமரப்பமுதலி கை எழுத்தா யெழுதிக்கொடுத்து இருந்த சீட்டொன்று யிருந்தது எடுத்துக் காண்பித்தார். அந்த சீட்டிலே இப்படியெல்லாம் மனை, நிலம், கம்பத்தம் சகலமும் பேர்பாதியா யனுபவித்துக் கொள்ளுகிறது என்று எழுதியிருந்த சீட்டை படித்துப்பார்த்து சொன்னவுடனே அந்த சீட்டு யாருடைய கையெழுத்துயென்று கேட்டார். முத்து குமரப்பமுதலி கையெழுத்துயென்று சொன்னோம். அப்படி அவன் கையெழுத்தா யிருக்கும்போது அதற்கு அவன் தகராறு சொல்ல காரியமென்னவென்று கேட்டார். அதற்கு முத்து குமரப்பமுதலி சொன்னது: எனக்கொரு ஆதங்கம் வந்தபடியினாலேயும், என்னுடைய உள் பங்காளிக்கு பயந்து நானாய்தானே எழுதிக்கொடுத்தேன். ஆனபடியினாலே

அது பொய் சீட்டு எனக்குக் கவையில்லை. இப்பவும் அவன் வந்து நான் கேட்டவிடத்திலே இந்த சீட்டு நான் முன்னே தானே எழுதிக்கொடுத்தானென்கிறதாய் சத்தியம் பண்ணின துண்டானால் அந்த சீட்டிலே எழுதியிருக்கிறபடிக்கு நான் நடப்பித்துப் போடுகிறேனென்று சொன்னான். அதன்பேரிலே துரையவர்களிருந்துக்கொண்டு இதை நீ நாலுபேரை வைத்துக் கொண்டு தீர்த்துப்போடச்சொல்லி சொன்னார்கள். அந்த மட்டிலே அவர்களெல்லாரும் அநுபவித்துக்கொண்டு வெளியே வந்துவிட்டார்கள். அதன்பேரிலே சின்ன முதலியார் வந்து அழிச்சப்பாக்கத்திலே முன்னே கொள்ளைபோன சம்மதிக்குச் சடையப்பமுதலியும், வந்தவாசி திருவேங்கடப்பிள்ளையும், மல்லா ரெட்டியும் இந்த மூன்று பேரையும், மத்தியஸ்தமாய் வைத்துக் கேட்டு தீர்த்துப்போடச்சொல்லி உத்தாரம் கொடுத்தபடிக்கு அவர்கள் தீர்த்து குத்தகை வருஷம் ஒன்றுக்கு வராகன் 1400-க்கு கொள்ளைபோன வருஷத்துக்குத் தள்ளு வராகன் 1000 மறு வருஷத்திற்குப் பயிர் சாகுபடி ஆகவேண்டியபடியினாலே வராகன் 200 தள்ளிக்கொடுத்து மற்ற மூன்று வருஷம் எப்போதுமப்படிக்கு வராகன் 1400-ம் சரியாய் முதலிட்டுக் கொண்டுவருகிறதென்று தீர்ந்த சம்மதியை இப்போது மூசியே துலோராம் சம்மதியல்லவென்று சொல்லுகிறானென்கிற நிமித்தியமாய்க் கண்டு பேசச்சொல்லிச் சொன்னார். அந்த சம்மதிக்குத் துரையவர்களண்டைக்கு உள்ளே காம்பிராவிலே யிருக்கிறவரண்டைக்குப் போய் மேலே எழுதியிருக்கிற சம்மதி அழிச்சப்பாக்கம் கொள்ளைப்போன சம்மதி முன் தீர்ந்தது. எனக்கு சம்மதியல்லவென்று மூசியே துலோராம் சொல்லுகிறதாய் தானியப்பமுதலியார் கண்டு பேசவேணுமென்று வந்திருக்கிறாரென்று சொன்னேன், அதற்கு துரையவர்களிருந்துக் கொண்டு அந்த நாய் இங்கே ஏன் வருகிறான். அவனுடைய ஆஸ்தியெல்லாம் எடுபட்டுப் போகிறதை நான் நிலைநிறுத்தி அவனும் ஒரு மனுஷனென்கிறதாய்ப் பண்ணினோம். நம்பினதற்கு நமக்கு தன்னுடைய பணத்திலே வெகுசாய்க் கொடுத்தோமென்கிறதாய்க் கண்டவன் நின்றவனுடனே ஊரெல்லாம் சொல்லிக்கொண்டு திரிகிறான். அப்படிப்பட்ட நாயை நாமெப்படி நம்புகிறதென்று கோபித்துக்கொண்டார்கள்.

இற்றைநாள் நடந்தசேதி என்னவென்றால்: (ஸ்ரீ) துரையவர்கள் வீட்டுக்குப் போனவிடத்திலே இமாம்சாயபு மனுஷன் சொக்கப்பமுதலி அவ்விடத்திலே இருந்தவரைப் பார்த்து இவர்களேன் போகாமலிருக்கிறார்கள் என்று கேட்டார். அதற்கு நானிருந்துக்கொண்டு அவர்கள் கலியாண நிமித்தியம் ஜாப்தா யெழுதிக்கொண்டு வந்து வைத்திருக்கிறார்களென்கிறதாய்ச் சொன்னோம். அது எம்மாத்திரத்திற்கு உண்டென்று கேட்டார். இருபத்தேழாயிரம் வராகனுக்கு எழுதிக்கொண்டு வந்திருக்கிறார்களென்று சொன்னேன். அதற்கிப்போ பணம் எங்கே யிருக்கிறது; உனக்குத் தெரியாதா? நீ என்ன யோசனை பண்ணியிருக்கிறாயென்று கேட்டார். இப்போ இவ்விடத்திலே என்ன இருக்கிறதென்று நான் சொன்னேன். அதற்கவர்கள் குமஸ்தா வந்திருக்கிற பேர் சொல்லுகிறது; பதினாயிரம் வராகனாவது இருபதினாயிரம் ரூபாயாவது கொடுத்தீர்களேயானால் மற்றதற்கு நாங்களெப்படியாகிலும் சமுதாயித்துக்கொள்ளுகிறோமென்கிறதாய்ச் சொல்லுகிறார்களென்கிறதாய்ச் சொன்னார். அதற்கு துரையவர்கள் சொன்னது: 20,000 ரூபாயல்லோ கேழ்க்கிறீர்கள்; 20,000 காசு கேட்டாலும் நான் கொடுக்கிறதில்லை. அவர்களது சென்னப்பட்டணத்திலே இருக்கிற சரக்கு கூட நாம் விடுகிறதில்லை. அதேதென்றால்: சென்னப்பட்டணத்திலே வந்த கும்பினிக்காரருடைய சரக்கை லக்ஷந்தரம் தங்களுதென்று தாண்டவைத்து அனுப்பி இருக்கிறார்கள். அதுகளெல்லாம் நாம் விடத்தக்கதில்லையென்று இவ்விடத்திலே யிருக்கிற பணம் கொடுக்கிறதில்லையென்று கோபமாய்ச் சொன்னார்கள். அதற்கு சொக்கப்பமுதலியார் சொன்னது: உங்கள் மனுஷரவ்விடத்திலே இருந்த பேர் அவரவர் கையிலே வாங்கிக்கொண்டு விட்டார்களென்று சொன்னார். அதை அவர் சொன்னபடிக்குச் சொன்னால் கோபித்துக்கொள்ளப்போகிறாரென்கிறதாய் அதை மார்க்கமாய்ச் சொல்லுகிற சாடையிலே தானே அவளுக்கு: அறிவாகிருப்போலேயும், சொக்கப்ப முதலியை கண்டிக்கிருப்போலேயும், சாடையாய்ச் சொன்னோம். அதை அவரும் சாடை தெரிந்துக்கொண்டு சாடையாய்த்தானே இருந்தார். அந்தபடியிலே சொக்கப்பமுதலியாரும் வீட்டுக்குப் போனார்; நானும் பாக்கு கிடங்குக்கு வந்தேன்.

**1748 ஆ ஜுலை மீ 23 உ** க்கு விபவ ஸு ஆடி மீ 12 உ மங்களவாரம்.

இற்றைநாள் காலத்தாலே மோரீசுக்கு அனுப்பவேண்டிய-காகிதமெல்லாம் யெழுதி முஸ்தீதாயி முத்திரைப்போடச் சொல்லி உத்தாரம் கொடுத்தார் முசியே ரொத்திபேரை அழைக்கச்சொன்னார். முசியே ரொத்திபேர் வந்த உடனே அவன் கையிலே கொடுத்து அவனை சென்னப்பட்டணத்துக்குப்போய் சென்னப்பட்டணத்திலே யிருக்கிற பிரின் செசுமேரி என்கிற கப்பலின்பேரிலே ஏறி அங்கேயிருந்து கப்பல் பாயெடுத்து மசுக்கரைக்குப் போகத்தக்கதாக திட்டம்பண்ணி யிருக்கிற படிக்கு மசுக்கரைக்குப் போகத்தக்கதாகச் சொல்லி சிபார்சு கொடுத்து அனுப்பினதாய்க் கண்டது. அப்பாலே முந்தாநாள் இங்கிலீஷ்காரரது என்று பாகூர் நாட்டாருடைய பசுக்களைக் கூட ஓட்டிவந்த இடையரைக்கூட அழைத்துக்கொண்டுவந்து நடு சாலையிலே வைத்திருந்து துரைவந்து மேஜண்டை காம்பிராவிலே இருந்து அவர் பெண்சாதி கூட வந்திருந்து அழகனென்கிற திருட்டுப் பையனொருத்தன் அவன் தம்பி ஒருத்தன் இரிச்சன் ஒருத்தன் இப்படி நாலு சேவகர் கூடயிருந்து இரண்டு இடையரையும் வைத்துக்கொண்டு என்னை அழைத்து இந்த இடையரைக் கேள். இப்போது ஓடிவந்த பசு யாருதென்று கேளென்றார் அந்தப்படிக்கு இடையரைக் கேட்டால் அவர்கள் சொன்னது .தேவனாம்பட்டணம் சாம்பசிவரெட்டி இது ஐம்பது அறுபது மாடென்று சொன்னார்கள். அப்பால் முத்து இருசப்பமுதலியாருடையது பதினைந்து இருபது மாடு மற்றது பரிக்கல்பட்டு வெங்கடபதியினுடையது இந்தபடிக்கென்று சொன்னபடிக்கு துரைக்கு சொன்னதற்கு, அவர்கள் ஆரென்று கேட்டார். தேவனாம்பட்டணம் சீர்மை நாட்டான் சாம்பசிவரெட்டி யென்று அவனுக்கு ஒரு தாலுக்கு மில்லை குடியிருக்கிறது மாத்திரம் முத்திரிசப்பமுதலி இங்கிலீஷ்காரரிடமாய்ச் சேவித்தவன் இப்போது பெரிய வயதாய்ப் போய் பிள்ளைக்கூட செத்துப்போய் நிர் உத்தியோகமாயிருக்கிறான். பின்னை யொருத்தன் பாகூர் நாட்டான் வெங்கடபதியென்று சொன்னாப்போலே அழிச்சப் பாக்கத்திலே போனார்களே மறுபடியவர்கள் கொடுத்தார்களாவென்று மதாம் துய்ப்ளேக்ஸ் என்னைக் கேட்டான்.

அவர் கேட்டனுப்பினதமில்லை; கேட்டனுப்பினாலும் அவர்கள் ஓட்டியனுப்பப்போகிறதில்லை. ஆனால் பாகூரானது வேறே யல்லவா யென்றாப்போலே அதற்குத் தம்முடைய தாஷ்மான் போய் ஓடிவந்தார்களே அப்போது அந்த வெங்கடபதி ரெட்டி நாலு வெள்ளைக்காரர் சொல்தாதுகளைப் பிடித்துக்கொண்டு போய் இங்கிலீஷ்காரர்களுக்கு ஒப்புவித்தபடியினாலே அவன் மாட்டை விடப்போகாதென்று அபாண்டமாய்ச் சொன்னாப் போலே துரை என்னைப் பார்த்து இந்த இடையனுக்குச் சொல்லுமுன்னே பரிக்கல்பட்டு வெங்கடபதி ரெட்டியிது என் றாப்போலே விட்டுவிடவேணுமென்று மனதுயிருந்து எப்போ எங்கள் மனுஷரைப் பிடித்துக்கொண்டுபோய் இங்கிலீஷ் காரருக்கு ஒப்புவித்தாப்போலே இனிமேல் மாடு விடுகிறதில்லை யென்று சொல்ல அக்குள்நாய்க்கன் வெகுபேர் எங்கள் மனுஷர் கையிலே துப்பாக்கிகளையும், புடவை சீலைகளையும், பிடுங்கினா னென்றாப்போலே எனக்கு மெத்த கோபம் வந்திருக்கிறது. அவன் காட்டைச் சுட்டு அவன் தலையை வெட்டிப்போடுவே னென்று சொல்லென்று இடையருடனே சொல்லென்று சொன்னபடிக்குச் சொன்னேன். அந்த இடையரைப் பார்த் தால் அவர்களை உளவுபண்ணிக்கொண்டு இருந்த மாட்டை ஓட்டிவந்தாப்போலே காணுது. எப்படியென்றால்: அவர்களைத் தானே இந்த சேவகர் சாக்ஷி சொல்லுகிறபடியினாலேயும், அந்த இடையர்களில் இரண்டு பேர் ஒத்துக்கொள்ளுகிறபடியினாலே யும் இவர்கள் நிச்சிந்தையாய் மாப்பிள்ளைப்போலே பேசுகிற படியினாலேயும், இவர்கள் நகை முகமாய் பேசுகிற ஜாடையும், அப்போதே தெரியுமே. அந்த ஜாடையிலே பார்த்தால் அந்த இடையர்களுக்கு ஏதாகிலும் பாதி பேசி உளவாய்க் கொண்டு வந்த ஜாடையாய்த் தோன்றியது. அப்போது நானதை விஸ் தரிக்காமல் எஜமானுக்கு இங்கிலீஷ்கார மனுஷரதுதான் ஓடி வருகிறது சகஜம். அசல் துலுக்கன் கிராமத்து குடிகள்தும் கூட ஓடிவந்தால் அதை விசிதமாய்க் கேட்டாப்போலே அதை என் ஓட்டி வந்தீர்கள். மறுபடி ஓட்டிவிடுயென்று சொல்லா மல் தான் சொன்ன பேச்சுக்குப் பங்கம் வராமல் வெள்ளைக் காரரைக் கொண்டுபோய் இங்கிலீஷ்காரருக்கு ஒப்புவித்தார் களென்று அபாண்டமாய் இப்போது நினைத்துக்கொண்டு சொல்லுகிறார்களென்று சொல்லாமல் இதல்லாமல் முதல் இங்கிலீஷ்காரருக்கு ஆற்காட்டிலேயிருந்து ஓடிப்போகிற

மாடென்று சொன்னீர்களப்பால் தேவனும்பட்டணம் குடிகளுதென்று சொன்னீர்கள். இப்போது பாகூர் துலுக்கன் சீர்மைக் குடியானவது என்று நாலு விதமாய்ச் சொன்னீர்கள் என்று கேட்டாலுமல்லது யிது எங்கே மேயச்சே ஓடிவந்ததென்றும் கேளாமல் போகச்சொல்லுகிற சாடைக்கு அடுத்த உத்தாரமெப்போது பிறந்ததோ அப்போதானே நம்முடைய துரை யாருதாகிலும் கடன் வாங்கினல் மறுபடி கொடாமல் எடுத்துக்கொள்ளுகிற சாடை நினைக்கிற பிறக்ருதி தெரிந்திருக்கச்சே துலுக்கரது தற்பாரைவிட பெண்டாட்டி தற்பாராய்க் கெட்டுப்போய் தாது பிராது யில்லாமலிருக்கிற ஜாடை அறிந்திருக்கிறுப்போலே ஆச்சுதே. ஆனபடியால் அநியாயம் வந்தாலும் வந்தமட்டுக்கும் விட மனதில்லாமல் ஆசையின் பேரிலே சொல்லுகிறதாவென்று அறிந்துக்கொண்டு அப்பாலே கழுதை குதிரை ஆமா எனக்கேட்டால் குதிரைமாத்திரமா யானையும்கூட ஆகுமென்கிற ஞாயமாய்ச் சொல்லிப்போட்டு, இப்புரம் வந்துவிட்டேன். இதிலே மதாம் துய்ப்ளேக்ஸ் இரண்டு தரம் நீ என்ன விஸ்தரித்து இடையரைக் கேளாதே, கேளாதே என்றும் கேழ்க்கிறதென்னவென்றுப்போலேயும் கேட்டான். எனக்கென்ன துரை கேழ்க்கச்சொன்ன பேச்சாம்படியே கேட்டேனென்று சொன்னேன். இப்படி யிப்படி பிரபுவுக்குப் பெண்சாதி பைத்தியத்தினலே பின்னடிக்கு இதைத்தொட்டு பொல்லாப்பு என்கிறது செய் காரியம் தவிழ் காரியமென்கிறதும் தெரியாமல் வாய் மூடிக்கொண்டு யிருக்கச் சக்தி சொன்னபடிக்குத் தலையாட்டிப்போட்டுப் பாடினபடி பாடிப்போட்டுப் போனன். இதல்லாமல் இங்கிலீஷ்காரரது இருநூறு சடை கோதும்பை போன வருஷம் ஆற்காட்டிலே யிருந்து தேவனும்பட்டணத்துக்கு விழுப்புரம் மார்க்கமாய்ப் போகச்சே நம்முடைய மனுஷர் கண்டு இருநூறு எருது மாட்டையும் குண்டுக்குள்ளே ஓட்டிவந்து தெத்துவ சற்படியே வந்ததென்று கபுறு சொன்னதற்கு அந்த மாட்டுக்காரனை அழைத்துக் கேட்டதற்கு எருது என்னுடைய சத்ததத்துக்கு எடுத்து வந்தேன். கோதுமை இங்கிலீஷ்காரரது ஆற்காட்டிலே கொண்டாட பசுகூட அங்கே யிருந்துக்கொண்டனுப்பின மனுஷன் இன்னன். அவன் கையெழுத்தும் டாப்பும் ரங்கப்ப நாய்க்கன் பேருக்கு ஓலையுங் காண்பித்து சொன்னதற்கு துலுக்கன் சீர்மையிலே கொண்டு அவன் சீர்மை வழியாய்ப்

போகிறதை நாம் கொண்டுவந்து போட்டுக்கொண்டால் நமக்கு வருகிற சரக்குகளும் துலுக்கன் சீர்மை வழியாய் வருவதல்லோ அப்போது அவர்களுக்கெல்லாம் போராட்டமாயிருக்கும். இந்த க்ஷணம் பத்து பேர் சேவகரைக்கூட்டி விழுப்புரத்திலே இருந்தல்லோ ஓட்டி வந்தார்கள். அவ்விடத்திலே மறுபடி கொண்டு போய் சேர்த்து மகா ராசனுய் தேவனும்பட்டணத்திற்கு கொண்டுபோங்களென்று வந்த மனுஷனுக்குக்கூட சொல்லி அனுப்பிவிடச் சொன்ன துரை இப்போது முப்பத்தெட்டு ரூபாய் மார்க்கமாய்த் துலுக்கன் சீர்மை பசுவை ஓட்டிவந்ததுக்கும் மறுபடி விட்டுவிடச் சொல்லி துலுக்கன் சீர்மை பசுவை ஏன் ஓட்டி வந்தீர்கள் என்று கேழ்க்கிறதற்குக்கூட இல்லாதபோன ஆச்சரியத்தைவிட வேறே ஆச்சரியம் தோத்த வில்லை. ஆனல் பெண்சாதி மயக்கத்திலே இவர் சிக்கிக் கொண்டு மோசம் போருப்போலே பின்னை யாரொருத்தரையும் கண்டதில்லை. இதைத்தொட்டு என்னமாகிலும் விபரீதம் நடக்கும்; அது கெட்டியாய் எண்ணவேண்டியது. பின்னையும் நாலு காழிகைக்கெல்லாம் கணக்கு ரங்கப்பிள்ளை கையிலே இருநூறு ரூபாய் மதாம் துய்ப்ளேக்ஸ் வாங்கி இடையருக்குக் கொடுத்து போகச்சொன்னனதிலே அந்த அமுகன் முதலான சேவகர் இப்பாலே வந்த பிற்பாடு அதிலே பாதி நூறு ரூபாய் வாங்கிக்கொண்டார்கள். அதிலே ஒருத்தருக்கொருத்தர் பங்கிடுவராமல் ஏத்தி தாஷியாயடித்துவிட்டு வெளிக்கு வந்து திரும்பியும் ரெண்டொருத்தர் வெளிக்கு வந்தால் எல்லாருக்கும் பேச்சு வரும் இப்படிப்போனதாய்ச் சேதி. அதற்குள்ளே ஒருத்தன் வந்து என்னுடனே சொல்லி இடையர்களுக்கு இருநூறு ரூபாய் கொடுத்தார்கள். [ ] பண்ணிக்கொண்டு வந்தோமென்றும் வந்து சொல்லிப் போட்டுப் போனன். பசு இருனூத்தி ஆறும், எருது மாடு பத்து ஆக கால்நடை இருனூத்தி பதினலு எண்ணிக்கை பிடித்துப் பரசுராமப்பிள்ளை வசம் பண்ணினர்கள்.

1748 ஆ ஜூலை மீ 30 உ க்கு விபவ ஹு ஆடி மீ 19 உ மங்களவாரம்.

திருக்கோயிலூர் கோவிலிலே செஞ்சி அகம் முகத்தின் மனுஷன் அமுலதார் நூறு சுவார்களும் இருநூறு முன்னூறு

சேவகருடனே இருந்து அமுல் பண்ணிக்கொண்டு அந்த சீர்மை நாட்டாரையெல்லாம் பிடித்து காவல்வைத்துக் கொண்டிருக்கச்சே நாட்டாரானவரும் வேட்டவலம் பண்டாரிக்கு காகிதமெழுதி எங்களை விடுவித்து விட்டால் அதற்கு சிறிது திரவியம் கொடுக்கிறோமென்று சொல்லியனுப்பினதின்பேரிலே வேட்டவலம் பண்டாரி ஆயிரம்பேர் ராணுவமுடனே வந்து கோயிலை சுத்திக்கொண்ட மாத்திரத்தில் கோவிலிலே யிருந்த துலுக்கன் கதவை சாத்திக்கொண்டு தானும் ராணுவமுஸ்தீதாயிருந்தான். அதன்பேரிலே கோயில் கதவை சுடுங்காட்டிலும் உள்ளே யிருந்த துலுக்கரும் ராணுவம் கவிலமேகி ஆயுதங்களை ஒப்புக்கொடுத்துப்போட்டு வெளியே வந்த உடனே ராணுவையும் குதிரைக்காரரையும் விட்டு விட்டு அமுலாயிருந்த துலுக்கனையும் பிடித்துக்கொண்டு அரண்மனைக்கு தஷதாயிருந்த பணம் சிறிதாயிருந்ததாம். அந்த பணத்தையுமெடுத்துக்கொண்டு மூவாயிர, கல தானியமட்டுக்கும் இருந்ததாம் அதையும் எடுப்பித்துக்கொண்டு அமுல் துலுக்கனைக்கூட அழைத்துக்கொண்டு காவலில் பண்ணியிருந்த் நாட்டாரையும் விட்டு அனுப்பிப்போட்டு தானுமிப்போது சதுரகர்காரத்தை போய்விட்டதாகவும் அதன்பேரிலே விழுப்புரத்திலிருந்த அப்துசலீல் அன்றையதினம் பின்னை யொருகிராமத்திலே ஒரு குடிசையிலே கிடந்து மறுநாள் செஞ்சியிலிருந்து சிறிது ராணுவம் அழைப்பித்துக்கொண்டு செஞ்சியே போய்விடுகிறதாய் யிருக்கிறானென்றும் பயந்து இருக்கிறானென்றும் எழுதி வந்தது. அந்த சேதியும் துரைக்குச்சொல்லி வேட்டவலம் பண்டாரியும் உமக்கும் காகிதமெழுதி மனுஷரையும் அனுப்பிவைத்தான். அந்தக் காகிதத்தில் எழுதியிருந்த வயணம்: முன்னே காரைக்காலுக்கு தன் சம்சாரத்தைக் கொண்டுபோய் வைக்கிறதற்கு உங்களுக்கு யெழுதியிருந்ததற்கு நீங்களப்படியே தயவு முசியே பாதிக்க காகிதமெழுதி யிருந்தீர்களே அப்போது போகிறதற்குச் சமயமில்லாமல் போனது இப்போது அனுப்பிவிக்கத்தக்கதாக யோசனைபண்ணி அனுப்புகிறதாயிருக்கச்சே முசியே பாதீயவர்களிங்கே வந்து இருக்கிறபடியினாலே அங்கே இருக்கிறவர்களெங்களை அறியார்களேயானபடியினாலே 'உங்களை மறுபடி அவ்விடத்திலேயிருக்கிற பேருக்கு ஒரு காகிதமெழுதி அனுப்ப வேணுமென்றும், மற்றபடி உங்களில் யாதொரு பீரங்கி, மருந்து, குண்டு, ராணுவம் பணம் காசுகள் முத

லான் மற்றது நான் என்றும் கேழ்க்கத்தக்கதில்லை. உங்கள் தயவுமாத்திரம் எப்போதுமிருக்கத் தக்கதாக மனுபண்ணிக் கொள்ளுகிறேனென்றும் எழுதியிருக்கிறதென்றும், பின்னையும் சொல்லத்தக்க உபசாரமாய் பதினாலுதரமும் எழுதியனுப்பி விடச் சொல்லியும், அங்கே இருந்துவந்த மனுஷர் நம்மண்டைக்கு வந்தால் நவாப் அற்கார் மற்றபேர் வருகிற போகிற பேர் பார்ப்பார்கள். உள்ளே எத்தனை அனுக்கிக்கை யிருந்தாலும் வெளிக்கு காண்பிக்கிறதல்ல; ஒருத்தருமறிகிறதுமல்லவென்று சொல்லி இவன் சோருவா ஸியாயம் நடத்துகிறதற்கு நபாப் அன்வர்திகான் ராமரது தனத்தை தானே இரண்டு நாழிகை விஸ்தாரமாய் பேசியிருந்தார். நானும் பனிரெண்டடித்தபடியினாலே அனுப்பிவைத்துக்கொண்டு வீட்டுக்குப் போகும்போது வேட்டவலத்திலிருந்துவந்த குதிரை சவாரியும் நாரணப்பய்யரையும் நாளை காலத்தாலே வரச்சொல்லி மேலே யெழுதியிருக்கிற வயணபடிக்கு சொல்லி அனுப்பி வீட்டுக்கு வந்தேன்.

1748 ஆ ஜுலை மீ 31 உ க்கு விபவ ஆடி மீ உ 20 உ புதவாரம்.

இற்றைநாள் நடந்த அதிசயம் என்னவென்றால்: காலமே ஒன்பது மணிக்குக் காரைக்காலிலே யிருந்து வந்தவாசி திருவேங்கடப்பிள்ளை அனுப்பின கடுதாசியும் கிராமத்திலே முன்னாலே கொள்ளைப்போன சம்மதிக்குத் தள்ளிக் கொடுத்ததில் 1741 ஆ சில்லரை வராகனப்போது முசியே பாதி கொடுக்கச்சொல்லி கேழ்க்கிறார். சம்மதிக்கு வித்தியாசம் எழுதின கணக்கும் வந்து சேர்ந்தது. அந்தக் கடுதாசியும் கணக்கும் நான் பார்த்துக்கொண்டவுடனே அந்தக் கணக்கை கையிலே பிடித்துக்கொண்டு சேஷய்யங்காரையும் கூட அழைத்துக்கொண்டு முசியே பாதி வீட்டுக்குப் போனோம். அப்போது முசியே பாதி அவர்கள் அருணாசலசெட்டி வீட்டுக்கெதிரே யிருக்கிற முசியே கபிர்பூர்க் என்கிற வெள்ளைக்காரன் வீட்டிலே குடியிருந்தபடியான படியினாலேயும், இன்றைய தினம் கோட்டையினாலே மதாம்சோசியுடைய தட்டு முட்டு சேர்மையிலிருந்து வந்த தட்டு முட்டெல்லாம் போட்டபடியினாலே துரையவர்களும் கோட்டையினாலே நமக்கு மிரண்டு

நாழிகைபோய் பேசிக்கொண்டிருக்கிறதற்குச் சாவகாசம் கிடைத்திருந்தபடினுயிலே பேசுவோமென்கிறதாய் சேஷய்யங்காரும் நாமும் முசியே பாரதி அவர்களண்டைக்குப் போனேம். நாங்கள் போகிறபோது முசியே பாரதியவர்களும் உடுத்திக்கொண்டு அவர்களும் வெளியே புறப்படபோகிறதற்கு பயணமாயிருந்தார். நாங்கள் போய் சலாம் பண்ணின உடனே அவருமுபசாரம் பண்ணி உட்காரச்சொல்லி தாமும் உட்கார்ந்து நீங்கள் வந்த காரியமென்னவென்று கேட்டார். அதற்கு நான் சொன்னது காரைக்காலிலே யிருந்து கணக்கு வந்த உடனே வருகிறேமென்று சொல்லியிருந்தேனே இப்பவும் இன்றையதினந்தான் கணக்கு வந்தது. சேஷய்யங்கார் வந்து நாலைந்து நாளாயும் நானும் உமண்டைக்கு வராமலிருந்தது எதனலேயென்றல்: இந்த கணக்கு வருகிறமட்டுக்கும்தான பார்த்துக்கொண்டிருந்தோம் என்கிறதாய்ச் சொல்லி, அந்த கணக்கைக் கொண்டுவந்தோமென்று சொன்னமாத்திரத்திலே அவன் கொண்டுவந்த கணக்கும் கிராமங்களிலே அந்த வருஷம் கண்டு முதல் கணக்கும் பொய்யா? அதன்பேரிலே சிறிதுகளைத் தள்ளி மற்றதைக்கூட்டி கணக்கெழுதி அது மெய் யென்றும், அவனுமொத்துக்கொண்டு கையெழுத்துப்போட்டு அப்பாலவன பங்காளிகள் கையெழுத்தும் போடவைத்து இந்தக் கணக்கு மெய் என்று சொன்னல் இந்த கணக்கு அவ்விடத்திலே பேசுகிறபோது எங்கே போனது. இந்த கணக்குத்தானே அதிலே யிருக்கிறது; எப்படித் திருப்பிப் பார்த்தாலும் திருட்டு கண்டு திருட்டுக் கணக்கே இதை பிடித்து அங்கே விளங்கினல் இன்னமாயிர மன்னூறு சுமக்கிறது. இந்த நியாயத்தைச் சொல்லி கல்லது, இந்தக் கணக்கு மெய்யென்று நீங்களிரண்டு பேரும் கோன்சேலுக்கு அபராதமும் எழுதி ஆக்கினை யெழுதி அங்கே நான் போனபிற்பாடு அந்த கிராமத்தார் உள்ளூர் சமஸ்தமான பேரையும் வைத்துக்கொண்டு தீர்க்கும்போது நீங்கள் கொண்டுவந்த கணக்கு மெய்யானல்தான் கவலையில்லையே. பொய்யாய்ப்போனல் பதினயிரம் வராகன் கும்பினிருக்கு அபராதம் கொடுக்கிறேமென்று எழுதிக்கொடுங்கள். அப்படியே நானங்கே போனபிற்பாடு விளங்குகிறேனென்று சொன்னதின்பேரிலே நாங்களெந்தப்பேச்சை மெய் என்று நம்பினேம். இவருக்கு அபராதத்திற்கும், ஆக்கினைக்கும் சீட்

டெழுதிக்கொடுத்து பேசுகிறது. முன் அனுபவமும் தெரியாது பின் அனுபவமும் தெரியாது. இதல்லாமல் திருவேங்கடப் பிள்ளையை முழுக்க நம்புகிறதற்கும் அவர் நாளது வரைக்கும் நடப்பித்த காரியங்களைத்தொட்டு நம்பக்கூடாமல் இதற்குமே லென்ன சொல்லப்போகிறேமென்று பசபசவென்று சொல்லிப் போட்டு வந்துவிட்டோம். அவன் கேழ்க்கிற கண்டிப்பு உத் தாரத்திற்கு உத்தாரம் சொல்லுகிறதற்குக் கூடாதபடியினாலே பணம் கொடுக்கிறதாய் யோசனையாய் வந்துவிட்டோம்; அல்ல வென்று பேசுகிற விடத்திலே சுமதலைப்பினால் இப்போது எழுதப்பட்ட வராகனுக்கும் கொடுக்கிறதுமல்லாமல் அபராதம் வருகிறதும் ஆக்கினை வருகிறதும் நாலு பேருக்குள்ளே அப் பிரதிஷ்டையா யினம் வருகிறதேயல்லாமல் கூடி வருகிற பேச் சாய்க் காணவில்லை. ஆனபடியினாலே பணம் கொடுக்கிறதாய் ஏத்துக்கொண்டு வந்தேன்.

*1748* ஆ. ஆகஸ்ட் மீ *1* உக்கு விபவ ௵ ஆடி மீ *21* உ குருவாரம்.

நான் பாக்கு கிடங்குக்கு வந்து அப்பாலே முசியே பாரதி வீட்டுக்குப் போய் அவருடனே வேட்டவலம் பண்டாரி பெண் சாதி பிள்ளை போய் காரைக்காவிலிருக்கிறதற்கு வீடு விடச் சொல்லியும், போனவுடனே ஐந்து பீரங்கிப் போட்டு அப்பால் முசியே ரீஷ் பேட்டிக்குப் போனால் ஐந்து பீரங்கிப் போடச் சொல்லியும், இரண்டு டமாசு, பட்டு, சுருட்டு கொடுக்கச் சொல்லியும், பிரகாசமுதலி முதலான பேரை எதிரே போய் அழைத்துவரச் சொல்லியும் மிகுந்த மரியாதைபண்ணி அரிசி, காய் கறி, சாமக் கிரிகள் முதலானதும் கொடுத்து அனுப்பச் சொல்லி எழுதிக்கொடுக்க வேணுமென்று கேட்டதற்கு இவ் வளவு மரியாதை பண்ணவேணுமா? சற்றே தகராறுபண்ணி அப்பால் சகலாத்துமில்லை. வேறே ஒரு தினுசாகிலுமில்லை யென்று சொல்லிக்கொண்டு இரண்டு சுருட்டியும் தலங்கம் பாடியிலே வாங்கிக் கொடுக்கவேணுமென்று சொல்லி, அந்தப் படிக்கு மேலே எழுதியிருக்கிறபடிக்கு முசியே ரீஷ் துரை பேருக்கு எழுதிக்கொடுத்தான். தனக்குஎழுதின காகிதத்திற்கு உபசாரமாய் பதிலும் கண்ணடத்திலே எழுதிவரச் சொன்ன படிக்கு எழுதிக்கொண்டு போனதை முத்திரைப்போட்டுக்

கொடுக்கச்சொல்லி கேட்டதற்கு அந்தப்படிக்கு முத்திரைப் போட்டுக்கொடுத்தான். வாங்கிக்கொண்டு பாக்கு கிடங்குக்கு வந்தேன். அப்பால் கோட்டைக்கு முசியே கோற்னேத் அண்டைக் குப் போனவிடத்திலே அவன் வீட்டுக்குப் போனபடியினலே நானும் வீட்டுக்கு வந்தேன்.

அப்பால் காவல் கூடத்து நயனர் சேவக வெள்ளையான் வந்து சொன்ன கபுறு. காவலிலே யிருந்த லோகாபிராமமுதலி, மதுரை நாய்க்கன், அய்யாகண்ணு நரசிம்மன்கோவில் பாப் பான் அகசியம் பண்ணுகிற பாப்பான். கருவாரெட்டி தம்பி முதலான பேர் காவலிலே யிருந்தவர்களையெல்லாம் முன் வேகுக்காரரென்று அகப்பட்டவர்களை நாய்க்குக் கழுத்துக்குச் சங்கிலி மாட்டுகிறாப்போலே மாட்டி காடு சோடாய் மண் எடுக்கச்சொல்லி, அகிழ்தை வேலை செய்யவிட்டிருக்கிறதே அப்படிக்கு இப்பவும் பனிரெண்டு பேர் ஆறு சோடு மேலே எழுதப்பட்டவர்களை அந்தப்படிக்கு நாய் சங்கிலி கழுத்துக்குப் போட்டு அகிழ்தையிலே மண் எடுக்கச்சொல்லி உத்தாரம் கொடுத்தபடிக்குச் சங்கிலி போடப்போனல் எல்லாரும் மெத்த தாபந்தப்பட்டார்களாம். லோகாபிராமமுதலி மாத்திரம் சுவாமியுடைய சித்தமிப்படியும் வரத்தக்க ஏஷியமிருக்கிறதாம் காட்டும். ஆனல் இத்து உடனே விடுதலையாக ஏஷியமில்லா விட்டால் இத்தனை கொடூர ஆக்கினை வரத்தக்கதில்லையென்று சொன்னனதை மாறுபாடர்ய் சாகுறேம் கெடுகிறேம் சீவனை விடுகிறேம் என்று துரையவர்களுக்கு சொன்னதற்கு துரை யவர்கள் அவர்கள் சாகட்டும் பிழைக்கட்டும் போடுங்கோ ளென்று மதாமும் கூடச்சொல்லி அனுப்பினதாய் வந்து சொல்லி அந்தப்படி சங்கிலிப்போட்டு வடக்கு வாசற்படி அகிலண்டையிலே அழைத்துப்போய் மண்ணெடுக்கச்சொன் ஞர்கள் அந்தப்படிக்கு மண்ணும் சாயங்கால மட்டுக்கும் எடுத்தார்கள்.

1748 ஆ ஆகஸ்டு மீ 3 உக்கு விபவ ஸு ஆடி மீ 22 உ சனிவாரம்.

[ ] பதினெருமணிக்கு மறுபடி அழைத் தனுப்பி சப்தார் அலிகான் முசியே தும்மாவுக்கு இரண்டு கட்டாரி

ரெத்தினங்கள் செதுக்கினதும், ரெண்டு கத்தி, ஒரு கலிகத் துராய், அம்பிராத்தூணி, வில்லு, சாங்கு, இரோப்பா, முதலானதுகளெல்லாம் அனுப்பினதைக்கொண்டு சீர்மையில் அவருக்கு மெத்தமேன்பாடு நடந்தது ஆனபடியினாலே இப்பவும் இமாம் சாயபுக்கு யெழுதி நாசற்சங்கு அவர் அனுப்புகிறாப்போலேயும் அப்பால் அவர் எழுதிற காகிதத்திலே அந்த பிராந்தியங்களிலே சென்னப்பட்டணம் முதலானபட்டணங்கள் பின்னையும் வெகுவாய் சத்துருக்களையெல்லாம் ஜெயித்து ஜெயம்கொண்டபடியினாலே அவ்விடத்திலே ஒருத்தர் எதிராளியில்லாமல் ஏக வீரனாயிருக்கிறபடியினாலேயும் அவ்விடத்துக்கு இராஜாவாய் விளங்கப்பட்ட உம்முடைய கீர்த்தி, பராக்கிரமம் தைரியம், சூரியனைப்போலே பிறகாசிக்கிறபடியினாலே அந்த விடங்களிலே யிருக்கிற நபாபு அன்வர்திகான் பகுதூர் முதலானவர்களுக்கு யாதொரு இக்கட்டுகள், சத்துருக்கள் மராட்டியார் முதலானவர்களுடைய இக்கட்டுகளுண்டாயிருந்தால் நீரந்த சுபாக்களுக்கு மத்து பண்ணி நடப்பித்துக்கொள்ள வேணுமென்று பிரார்த்திக்கின்றோம். இதல்லாமல் ஆற்காட்டு சுபா அன்வர்த்திகான் முதலான நபாபுகளுக்கும் நாம் எழுதினோம்; யாதொரு ராஜக்காரியங்களுண்டா யிருந்தால் நம்முடைய ஆலோசனையின் பேரிலே நடந்துக்கொள்ளச்சொல்லி, கட்டளையிட்டோம். அவர்களும்முடைய ஆலோசனையின் பேரிலே நடந்துக்கொள்ளுவார்கள். உமக்கு இந்த இராச்சியத்திலே இருக்கப்பட்டபாறசாகூட நீர் செய்யப்பட்ட துரைத்தனம் தைரியமாய் நடத்தி ஜெயம் பெறமாட்டார்களென்று இதற்கு அடையாளமாக எங்கள் பாற்சா அமீர் உம்மவர்களுக்குக் கொடுத்து அனுப்புகிறபடிக்கு உமக்குச் சீரோப்பாவும் மேலே எழுதப்பட்ட நகைகளும், ஆயுதங்களும் அனுப்பினோம். நீரிதை அங்கீகரித்து நமது சிநேகம் உத்திரோத்திரமாய் நடப்பித்து வரவுமென்று காகிதமெழுதி அனுப்பிவைத்தால். இந்தக் காரியம் செய்து அனுப்புகிறதற்கு எவ்வளவு சிலவு சென்றாலும் நாம் கொடுக்கிறோமென்று இதல்லாமல் தாம் நாளது வரைக்கும் எங்கள் பிரான்சு வம்சத்திற்கும் எனக்கும் நடப்பித்த மரியாதைகளும் சகாயங்களும் லீவுருகளிலே எழுதி ஐரோப்பா இராச்சியமெல்லாம் படிக்கிறார்கள். இந்தக் காரியம் செய்தால் அதனாலே நாங்கள் இந்த பூலோகம் உள்ளமட்டுக்கும் செய்த உபகாரம் மறக்கத்தக்கினதில்லை.

உம்முடைய கீர்த்தி புஸ்தகத்திலே எழுதப்பட்டு தொப்பிப் போட்ட வெள்ளைக்காரர், துருக்கி ராச்சியம் இஸ்பகான் முதலான தேசங்களெல்லாம் சூரியனுடைய பிரகாசத்தைப்போலே பிரகாசிக்குமென்று எழுதி உங்கள்கப்பல் மணிலாவுக்குப் போனது இங்கிலீஷ்காரர் பிடித்து ஒலாந்தேகாரருக்கு விற்றதைச் சீர்மையிலே அந்தப்பணம் கும்பினியார் ஒலாந்தக்காரர் கையிலே அருவிட்டுப் போட்டார்கள். அந்தப் பணம் கும்பினியார் கொடுத்துவிடச்சொல்லி எழுதியிருக்கிறார்கள். இந்தக் கணக்கெல்லாம் வயணமாய் முன் இங்கிலீஷ்காரருடனே சென்னப்பட்டணத்திலே பேசச்சொல்லி அவாயிசாயபு அன்டைக்கு எழுதியனுப்பி யிருந்தேன். அந்தக் கணக்குபடிக்கு ஒலாந்துக்காரரைக் கண்டித்து அந்தபணத்தை அனுப்பிவிட்டு அனுப்பச்சொல்லி எனக்குக் காகிதத்திலே விசாரிக்கிறப் போலே எழுதினால் கும்பினியார் கொடுத்துவிடச்சொல்லி எழுதியிருக்கிறபடியினாலே இமாம்சாயபு எழுதுகிற காகிதத்தைக் கோன்சேலுக்குக் காண்பித்து அந்தப் பணம் கொடுத்துவிடுகிறேனென்று காகிதத்திலே எழுதச் சொன்னார். அந்தப்படிக்கு எழுதிவிடுகிறேனென்று சொல்லிப்போட்டு வரும்போது அந்தக் காகிதம் போய் வருவது யாருக்கும் தெரியப்போகாது. நம்முடைய மனுஷராய்ப் பயணம்பண்ணி அனுப்புயென்று சொல்லி அவாசாயபு அரியப்போகாதென்று சொன்னார். நான் வந்து மதனாந்தபண்டிதனுடனே மேலே எழுதியிருக்கப்பட்ட வயணமெல்லாம் சொல்லி தெலுங்கிலே சவ்வாது எழுதி அப்புறம் பார்சலிலே மசூதாபண்ணச் சொன்னேன். அப்பால் மதனாந்தபண்டிதனை ஒசியே துய்மா நாளையிலே வந்த காகிதமாகிலும், ஜாப்தாவாகிலுமில்லையா வென்று கேட்டதற்கு அது என் வசத்திலே யில்லை என்றார். அப்பால் என் தஸ்த்திரத்திலே இருந்தபடியினாலே அப்போது வந்த நகைகளெல்லாம் எழுதி வைத்தேன்.

இற்றைநாள் காரைக்காலிலே யிருந்து இரண்டு குதிரையும், அந்தக் குதிரைகளைக் கொண்டுவந்துவிட முகமதியர் மனுஷர் சிதம்பரத்திலே யிருந்து பதினேழு பேர்களும் வந்தார்கள். அந்தக் குதிரைகளிலே ஒரு குதிரை மணிலாக் குதிரை மற்றொரு குதிரை கௌடாலக் குதிரையைப்போல இருக்கிறது. இதுமுன் இங்கிலீஷ்காரரது ஆறு குதிரை தஞ்சா

ஊரிலே யிருந்து நாகப்பட்டணத்திற்கு கொண்டுவரும்போது ஆறு குதிரைகளும் பூசியே பாரதி பிடித்துவந்த குதிரையிலே ஒன்றுயென்று சொன்னார்கள். அது குவர்னதோர் வீட்டுக்கு வந்தவுடனே குவர்னதோர் பார்த்து லாயத்திலே கட்டச் சொன்னார்கள். இந்தக் குதிரைகளை அனுப்பி வைத்ததற்கு என் பேருக்கு முதாமியா காகிதமெழுதினபடியினாலே அந்தக் காகிதச் சேதியை துரைக்குச் சொன்னதற்கு உபசாரமாய் பதில் காகிதமெழுதிக்கொடுத்து வந்த சேவகர் பேருக்குப் படிகொடுக்கும் படிக்கும், கொடுத்து ஐந்து ரூபாயும் இனம் கொடுக்கச் சொன்னார். அந்தப்படிக்குக் காகிதமும் எழுதிக்கொடுத்து சேவகருக்குப் படியும் கொடுத்துவிடச் சொல்லி பரசுராமப்பிள்ளை அண்டைக்கு அனுப்பிவிட்டேன். அதை வாங்கிக்கொண்டு நாளைக்குப் போகிறோமென்று சொன்னார்கள்.

1748 ஆ ஆகஸ்ட் மூ 4 உக்கு விபவ ளு ஆடி மீ 24 உ ஆதிவாரம்.

இற்றைநாள் கேழ்விப்பட்ட சேதி என்னவென்றால் தேவனாம்பட்டணத்திற்கு கோந்திரு அமிரால் மிஸ்டர் மொசு கார்வேன் என்று ஒருத்தன் ராசாவுடைய கப்பல்களும் ஏஷக் கார்த்துருக்கு எஜமானில் ஒருத்தன் பத்து கப்பல்களுடனே கூடவந்து தேவனாம்பட்டணத்து துரை வைத்துப் பிடித்து இறக்கிப்போட்டானென்றும் சொல்லிக்கொண்டார்கள். அந்த பத்து கப்பல்களிலே ஐந்தாறு கப்பல் வந்துதென்றும், மற்ற கப்பல்கள் இன்று நாளையிலே வருமென்று சொல்லிக்கொண்டதாய்ச் சேதி வந்தது. இப்போது வந்த கோந்திரு அமிரால் என்கிறது மூன்றாவது பட்டம். முதலாவது அமிரால், இரண்டாவது வீஸ் அமிரால், மூன்றாவது கோந்திரமிரால் என்கிறது. கம்மேண்டர் என்கிறது கொம்மாந்தேர் என்று பிரஞ்சு வார்த்தையிலே சொல்லுகிறது ஒன்று. ஆனால் கோந்திரலேர் அமிராலுக்கும் கீழே அதுகளெல்லாம் இப்போது வந்த கோந்திரலேர் அமிராலப்போது எனக்கு விசிதமாய் தெரியவில்லை. இனிமேல் அதை விளங்கி எழுதுகிறேன்; இன்னும் சிறிது கப்பல்கள் பிறகே வருகிறதென்று சொல்லுகிறார்கள். இந்தக் கப்பல் சென்னப்பட்டணம் பிரான்சுக்காரர் பிடித்துக்

கொண்ட சேதி தெரிந்து புறப்பட்ட கப்பல்களானபடியினுலே இதுகளும் வந்து சேர்ந்தபடியினுலே இனிமேல் நடக்கவேண்டிய தெல்லாம் இதிலே யெழுதி வந்திருக்குமென்கிற யோசனையி னுலே இனிமேல் நடக்கிற காரியத்திலே அரியவேண்டியது முன்னே காமண்டோர் மெஷதர் கொறே பேருக்கும் இவன் பெரியவனுனபடியினுலேயும், முன் வந்திருந்த காமண்டோர் மேஷதர் கெறேபேன் நாமரது என்று துலுக்கர் சொல்லு கிறது. கைம் பெண்டாட்டி என்று தமிழ் சொல்லுகிறது அந்த சாடைபடிக்கியானபடியினுலே இத்தனை கப்பல்கள் வந்திருந்தும் காரியமில்லாமல் போனது இப்போது இவன் வந்தவன் சாடை இனிமேலல்லோ அறியவேண்டியது, என் புத்திக்கு ஏற்க அரிந்தாப்போலேதான். அதுஎப்படியென்ருல்: அதிர்ஷ்டப்படிக்கெல்லாம் நடக்கப் போகிறது. நல்ல அதிர்ஷ்ட மாயிருந்துதானுல் அவன் பேல் கிழித்தாலும் கோமணத்துக்கு உதவும் துற் துஷ்டன் என்ன சத்துரத்தையாய்ப் பார்க்கப் போனுலும் அது விபரீதமாய் வருமானபடியினுலே இப்போது இங்கிலீஷ்காரருக்குக் காலம் பொல்லாததானபடியினுலே எத்தனைக் கெட்டிக்காரன் வந்தாலும் அவனைக் கையாலாகா தவனுகப் போகுமென்று கெட்டியாய் எண்ணியிருக்கிறேன். மற்றபடி இனிமேல் நடக்கிற காரியத்திலே தெரியவருகிறது. அப்பால் துரை கோவிலுக்குப் போய் வந்தவுடனே நேற்று இமாம்சாயபுக்கு எழுதின காகிதத்தைக் காண்பித்து இது செல்லாது என்று சொல்லி இதிலே எழுதியிருக்கிறபடிக்கில்லா மல் வேறே ஏதாகிலும் எழுதவேணுமானுல் சொன்னுல் எழுதிப்போடுகிறேனென்று எழுதின காகிதத்தைப் படித்துக் காண்பித்து அந்த வயணம் கேட்டு மிகுந்த சந்தோஷத்தை அடைந்து இந்திய சரித்திரம் எழுதி அச்சுப்போட்டு வந்திருக் கிற புஸ்தகத்திலே சபிதாரல்லிகான் மீர்குலான் உசேன் மார் பத்திலே முசியே தும்மாவுக்கு அனுப்பின நகைகளெல்லாம் எழுதியிருக்கிறது. இதல்லாமல் இந்த புதுச்சேரி பட்டணம் தோன்றிய நாள் முதற்கொண்டு நடந்த பூர்வோத்திரம் சூட்ச மமாயெழுதி மராட்டியன் கலாபமும் பேர் தோஸ்டு அலிகான் வெட்டுப்பட்ட முதலான சேதியும் சுபா முறிந்து வந்தபோது முசியே தும்மா முறிந்துவந்து சுபாவை ஆதரித்துச் சத்துருகளா கிய மராட்டியர்களை சோரம் அடித்த பிரதாபமும் அதனுலே சபுதல்லிகான் ஆயுத சவறணைகளும், கலிக்குத் துரா, சிற்

போஷத்து, சட்டி, மூன்று யானைகள், அழிச்சப்பாக்கமும் முதலானது கொடுத்ததுகளை ரொம்ப விஸ்தரித்து எழுதியிருக்கிற புஸ்தகமிதல்லாமல் ரூபாய் முத்திரை இமாம்சாயபு வாங்கிக் கொடுத்ததற்கு இமாம்சாயபு தாரிக்கு மெத்த எழுதியிருக்கிறதுமல்லாமல் இதற்கு எல்லாம் ஏஷியம் முசியே துய்மா தன்னுளிலே கும்பினியாருக்கு இப்படிப்பட்ட ஆதாயம் பிரான்சு வமுசத்திற்கு தன் துரைத்தனத்திலே தன்னைத் தொட்டு வந்த கீர்த்தியும் விஸ்தாரமா யிருக்கத்தக்கதாக எழுதிவைத்து அச்சுப்போட்டு இது ராசா முதலானவர்கள் ஐரோப்பா ராச்சியம் முடிய படித்து இதனாலே அடைந்த பிரதிஷ்டை மிதமில்லை. அப்படிப்பட்ட புஸ்தகத்தை என் கையில் கொடுத்து இந்தப்படிக்கு நகை வயணம் எழுதி அனுப்பிவிக்கச் சொன்னார். அந்த புஸ்தகத்தை வாங்கிக்கொண்டு பாக்கு கிடங்குக்குக் கொண்டுவந்து இமாம்சாயபு எழுதுகிற காகிதத்திலே இந்த தினுசு வயணம் சரிபார்த்து அப்பால் சால்துவைப் பார்த்து எடுத்து எழுதச்சொல்லிப்போட்டு பனி ரெண்டு மணி ஆனபடியினாலே பாக்கு கிடங்கிலே யிருந்து வீட்டுக்குப் போனேன்.

அப்பால் சாயங்கலம் ஏழு மணி வேளைக்கு துரை அழைத்தனுப்பி இமாம்சாயபுக்கு எழுதுகிற காகிதத்திலே இன்னும் ஒரு சேதி எழுதவேணும், அந்தப்படிக்கு எழுதச்சொனனா. மகம்மது சபால் விழுந்துப்போனபடியினாலேயும் நிஜாம் விழுந்துப்போனபடியினாலேயும், அராச்சயக்கப்பட்டு அவனவன் சரிபோனபடிக்கு ராச்சியத்தைக் கட்டிக்கொண்டு போகிறான். நாங்களுமப்படி கட்டவேணுமென்றால் வெகு இராச்சியம் கட்டுவோம். அப்படி செய்கிறதல்லவென்று உமக்கு எழுதியிருக்கிற வில்லியனூர் பறகனாவும், வழுதாவூர் பறகனாவும் நாசற்சங்குவினுடைய பறவனா வாங்கி அனுப்பினால் மெத்த உத்தாரமாச்சுது. இல்லாவிட்டால் நாங்களும் கட்டிக்கொள்ளுகிறோம். உமக்கு ஒரு வேளைக்கு உதவுமென்று எழுதச் சொன்னார். அந்தப்படிக்கு இமாம்சாயபு காகிதத்திலே எழுதிவைத்தேன்; அப்பால் ஒன்பது மணிக்கு வீட்டுக்கு வந்தேன்.

1748 ஆ ஆகஸ்ட் மீ 5 உக்கு விபவ ஹ ஆடி மீ 25 உ சோமவாரம்.

இற்றைநாள் சாயங்காலம் துரையவர்களண்டைக்குப் போனவிடத்திலே ஒழுகரை குடிகள்பேரிலேயும், குண்டு

கிராமத்தின் குடிகள்பேரிலேயும் முப்பதினுயிரம் ரூபாய் ஆதாயம் கண்டு இருக்கிறதென்று பித்திசம் எழுதிப் போட் டார்கள். அதைப் பார்த்துக்கொண்டு இத்தனை பணம் ஆதாயம் கண்டு இருக்கிறதாம். இதை நன்ருய் விசாரி யென்று அந்தப் பித்திசாமை என் கையிலே கொடுத்தார். அதை வாங்கிக்கொண்டு பாக்கு கிடங்குக்கு வந்தேன். மறுபடி அழைத்தனுப்பி வைத்தார். போனவிடத்திலே உள்ளுளி வர வில்லையாவென்று கேட்டார். ஐந்தாறு நாளையிலே வருமென்று சொன்னேன். அப்பால் ஆற்காடு சேதி என்னவென்று மராட்டியர் பதினுயிரம் குதிரை மைசூர் மார்க்கமாய் வருகிற தாக சேதி பிறக்கிறது. தஞ்சாவூராரும், மைசூரார் தொண்ட மான மறவன் இவர்களெல்லாம் யோசனைபண்ணி திருச்சினுப் பள்ளியை கற்னுட்டகம்பண்ணி காட்டு ராஜா மகனுக்குப் பட்டங்கட்டி இந்த வருஷம் ஸ்ரீமுஷ்ணம், விருத்தாஜலம் முதலான சீர்மைகள் தஞ்சாவூர் கட்டிக்கொள்ளவும், பின்னை யும் அவரவர் சீர்மைகளை துலுக்கர் கட்டிக்கொண்டதெல்லாம் மறுபடி அவரவர் கட்டிக்கொள்ளுகிறதற்காக யோசனை பண்ணி அவரவர் பவுன்சுகள் முஸ்திப்புப் பண்ணிக்கொண்டு திருச்சினுப்பள்ளியின்பேரிலே போய் இறங்குகிறதாயும், திரு நெல்வேலியிலிருந்து அன்வர்திகான் குமாரன் திருச்சினுப் பள்ளிக்குப் போக புறப்பட்டுப் போகிறபோது வழியிலே பாளையக்கார சேனை அலங்கோலம்பண்ண அதற்கு ஒருவித மாய்த் தப்பித்துக்கொண்டு திருச்சினுப்பள்ளி கோட்டையை போய்ச் சேர்ந்தாரென்றும், உடனே அன்வர்திகான் மராட் டியப்பேட்டையிலே வந்திறங்கி வேலூருக்கு ஜெயந்தி காளை யும், அவ்விசவீசையும் அனுப்பினுர்களென்றும், அவர்கள் மிருதுசல்லிகானண்டைக்குப் போய் சமாதானம் பேசி வருந் தனிலும் இருப்பார்களோ அல்லவென்று திருச்சினுப்பள்ளிக்கு சாகிப்போவார்களோ தெரியாதென்றும், லாலாப்பேட்டை யெல்லாம் காலுமேலா யிருக்கிறதென்றும் இது முதலான சேதி எழுதிவந்ததென்று சொன்னதற்கு உற்சாகமாய்க் கலகம் வந்தால் பிரயோசனமுண்டென்று நமபி சந்தோஷமாயிருந்தது மல்லாமல் அங்கே யிருந்தவர்களுடனே எச்சரித்ததிலே ஒரு சம்பாகோவில் பாதிரியார் துரையண்டைக்குப் பேசவந்தார். பேசவந்தபடியினுலே நானிப்பாலே யிருக்கிற சாக்திநோர்காரர்

இருக்கிற வராந்தாவிலே யிருந்து இருக்கச்சே துரையுடனே பேசிப்போட்டுப் போகிற பாதிரி என்கிட்டே வந்து சுகமா யிருக்கிருயாவென்ருர். உம்முடைய ஆசிர்வாதத்தினுலே என் றேன். ஒரு ஙிலம் ஒன்றுண்டு அது கிறிஸ்தவ பறையர்களைச் சேருகிறது. அதற்கு ஙீர் விகாதம் பண்ணுவீரோவென்று கேட்டார். முதலது இன்னதென்று அரிந்தல்லோ நான் உமக்கு உத்தாரம் சொல்லவேணுமென்று சொன்னதற்கு அதற்கு பாதிரி சொன்னது: துரையவர்களைக் கேழ்ப்பேன் அவரும் தடையில்லாமல் உத்தாரங்கொடுப்பார். ஆனல் கொஞ்ச காரியமென்று அவரைக் கேழ்க்கவில்லையென்று சொல்லும் போது, துரை அழைக்கிருரென்று தியாகு அழைத்தான். அதன் பேரிலே துரை நான் சம்பாகோவில் பாதிரியாருடனே பேசு கிறதை அங்கே யிருந்து முசியே கில்லியார், முசியே புசி, முசியே ரோபேர், முசியே புரி, முசியே துக்கேஸ்த இவர்களுடனே நகைத்து நகைத்துச் சொல்லிக்கொண்டிருந்தார். அந்த சாடையைப் பார்த்தால் சம்பாகோவில் பாதிரிகள் நம்முடையபேரிலே ராத்திரியும் பகலும் மதாமுடனே யோசனைபண்ணிக்கொண்டு நடத்துகிற காரியமெல்லாம் அறிந்திருக்கிறபடியினுலே தன் பெண்டாட்டி என்பேரிலே அபாண்டமாய்ச் சொல்லுகிற தெல்லாம் இவர் மனதிலே சம்பாகோவில் பாதிரிகள் சொல்லு கிறதாயல்லோ நினைத்துக்கொண்டிருக்கிற சாடையானபடியி னுலே ரங்கப்பனுடனே மெத்த ஒப்பரவாய்ப் பேசுகிருர்கள். உள்ளே நடத்துகிற விசேஷம் வேறே என்று சொன்னுப் போலே தோற்றுது. அப்பால் நான் துரையண்டையிலே போய் நிற்கும்போது முசியே புரி, கில்லியார், முதலானபேரெல்லாம் நகைத்துக்கொண்டிருந்தார்கள். அப்புறம் துரையவர்கள் ஒரு பக்கமாய் வந்து உட்கார்ந்து ஆற்காட்டு சேதியாய்ச் சற்று நேரம் பேசியிருந்து அப்பால் முசியே லபூர்தோனே மைலாப்பூர் துறையிலே யிருந்த ஒலாந்தக்காரன் சுலுப்பிலேயோ கப்பலி லேயே சிறிது ஏற்றியிருந்தது அது உடைந்துபோக வில்லையோவென கேட்டார். மெய்தான் உடைந்துப்போனது அப்போது கேழ்விபட்டதுண்டென்று சொன்னதற்கு துரை யிருந்துக்கொண்டு அப்போது அந்த ஒலாந்தக்காரன் சுலுப்பின் பேரிலே முசியே லபூர்தோனே சரக்கு முதலாகிய வெள்ளிப் போன், ரத்தினங்கள், நகைகள் ஏற்றினதற்கு ஒருத்தராகிலும் அரிந்தவர்களிரார்களா? ஒருத்தரையாகிலும் சம்பாதித்து

அழைப்பிக்கவேணுமென்று, சென்னப்பட்டணம் ஆற்காடு அல்லது மைலாப்பூர் ஆகட்டும் எப்படியாகிலும், ஒருத்தன் அறிந்தவனுகச் சம்பாதிக்கவேணுமென்று சொன்னுர். நல்லது அந்தப்படிக்கு விசாரித்துச் சொல்லுகிறேனென்று சொன்னேன். அப்பால் உடனே உன் தம்பி அப்போ யிருந்தானே அவனிதுகளெல்லாம் அறிந்து இருப்பானே அவனைச் சொல்லச் சொல்லு. லபூர்தோனே அவ்விடத்திலே திருடினதெல்லாம் மென்று சொன்னதற்கு நான் சொன்ன உத்தாரம்: என் தம்பி முசியே தேஸ்பிரேமெனேல் முதலான பேர் இவ்விடத்திலே யிருந்து போனவர்களுடனே போய் கூட இருந்தவனுக்கு என்ன தெரியும். முசியே லபூர்தோனே அண்டையிலே இருந்தவர் களுக்குப் பரஸ்பரமாய் இருந்தவர்களுக்குத் தெரியும். இதல்லா மல் எங்கள் தம்பியை முசியே தேஸ்பிரேமெனேல் முசியே லபூர் தோனே அண்டைக்குப் போகவேண்டாமென்று சொன்னது மல்லாமல் உங்களுக்குப் பிராது எழுதினவுடனே நீங்கள் கோபித்துக்கொண்டு புறப்பட்டு வந்துவிடச்சொன்னபடியி னுலே முசியே துலோராம் இவ்விடத்திற்கு வரும்போது முசியே தேஸ்பிரேமெனேல் மாத்திரம் மறுபடி சென்னப்பட்டணத் திற்குப் போனுன். முசியே துலோராம் எங்கள் தம்பி முதலான பேர் செவ்வையாய் இவ்விடத்துக்கு வந்துவிட்ட பிற்பாடு மறுபடி இவன் போகாதபடியினுலே இவனுக்கு என்ன தெரியப் போகிறது. நான் கேழ்விப்பட்டமாதிரி அவனுக்குத் தெரி யாது.

அப்பாலவ்விடம் விட்டு இவ்விடத்திற்கு வந்ததுமுதல் வியாதியாய்வெளியே புறப்பட்டதில்லையென்று சொன்னதற்கு கண் தெரியாமல்போனதா? காது கேட்காமலிருந்தானு? அவன் வேணுமானுல்சொல்லலாமென்று சற்று குறையாய் வெசனடை யாய் உத்தாரம் சொன்னுர். அது நான் பார்த்தேன்; தம்பி யுடைய சுபாவம் ஒன்றும் அறியேனென்று சொல்லுகிற புத்தி தானே என்று இதல்லாமல் ஊருக்குக் காத வழியிலே ஒரு பனைமரம் விழுந்தால் இங்கே எனக்கொருத்தது சொல்லுவா னுச்சே யென்று எண்ணிக்கொண்டு பரிகரித்துச் சொன்னேன். இந்த சாடையைப் பார்த்தால் முசியே லபூர்தோனே பேரிலே இவர் சீர்மைக்கு அவன் வெகு திரவியம் கோடிக் கணக்காய்த் திருடினுனென்றும், வில்பார்க்கு, தெமார்தேன் திருடினுர்கள்

என்றும் எழுதியிருந்தபடிக்கு அவர்களைக் காவல்பண்ணி இதுகளெல்லாம் விளங்கி உண்டாகச்சொல்லி எழுதியிருந்த படியினாலே இவர் சாதகம் தேடுகிறாரென்று எண்ணிக் கொண்டதுமல்லாமல் முசியே லவில்பாது காகிதங்கள் முசியே தெழார்தேனுடைய காகிதங்கள் இதுகளெல்லாம் சோதித்துப் பார்த்தவிடத்திலே அறுபத்துநாலு காசிலே ஒரு காசினள விலே அகப்படாமல் போனபடியினாலேயும் முசியே தெழார்தேன் முசியே லபூர்தோனே இருக்கிறமட்டுக்கும் கார்து மகாஜெனாக யிருந்து அப்பால் தான் எழுதின கார்து மகாஜேன் விவரை அப்போது முசியே பார்ந்தேல்மி முதல் பெரிய கொம்மாந்தானா யிருக்கவில்லையா அப்போது அவர் வசத்திலே ஒப்புவித்ததற்கு அவன் ரசீது வாங்கிக்கொண்டு வந்தானே அந்த ரசீது முசியே தெழார்தேன் கையிலேயிருக்கிறது. அந்த விவரை சொன்னப் பட்டணத்திலே தானேயென்று கபுறு கேழ்விப்பட்டிருந்தேன். அப்படி பின்னையும், அநேக காரியங்களுக்கு இன்னது இன்ன தென்று தெரியவில்லையென்று கேழ்விப்பட்டிருக்கிறதுண்டு. அதுகளெல்லாம் சாதகத்துடனே விசாரிக்கிறதினாலே இப்போ விபகாரமாய் எதிராளியின்பேரிலே நேரம் சுமத்துகிறதற்கு சாதகத்தைச் சொல்லியல்லோ எதிராளியின்பேரிலே சுமத்த வேணும். அது நிமித்தியம் துரையவர்கள் இப்போ யோசனை பண்ணியிருக்கிறாரென்று கேழ்விப்பட்டதற்கு சரியாயிருந்தது. இப்போது அவர் கேட்ட சேதி அப்பால் நான் அந்த தந்திரம் சொன்னமாத்திரத்திலே எழுந்திருந்து மதாமிருக்கிற காம்பி ராவைப் போய்விட்டார். நான் சரேலென்று பாக்குகிடங் குக்கு வந்தேன். அப்பால் மறுபடி எட்டரை மணி வேளைக்கு அழைக்கிறாரென்று சேவகன் வந்து அழைத்தான். போன விடத்திலே முசியே பராதீ முதலானபேர்கள்கூட சாப்பிடு கிறார்கள். நான் போய் நின்றவுடனே எழுந்திருந்து இப்புறம் வந்து கல்லானால் பரிச்சேதம் வந்துசேரவில்லை. ஊரிலே அவரவர் வசத்திலே இருக்கிற மாட்டையெல்லாம் பிடித்துக் கல்லெடுக்கச் சொல்லப்போகாதாவென்றும் இதல்லாமல் கூலிக் காரர் இந்தப் பட்டணத்திலே அகப்படவில்லையென்றால் இது ஒரு வெட்கமல்லவா என்றார். பட்டணத்திலே வியாபாரம், நெசவுகளில்லாததினாலே சமஸ்தமான பேரும் கூலி வேலை செய்துதான் பிழைக்கிறார்களென்று சொல்லி அதனால் அவர் களுக்குத் தக்கதாய் எல்லாரும் கும்பினியார் வேலையிலேதான்

செய்கிறார்கள். ஆனால் பயிரிடுகிறவர்கள் தவிர வென்று சொன்னதற்கு இந்த அவசரத்துக்குக் கும்பினீர் வேலை செய்ய தேவையில்லையா? பட்டணத்திலே யிருக்கிற ஜனங்கள் கும்பினீருக்கு மத்தது பண்ணவேணுமென்று நினைக்கிறதில்லை. ஊரிலே அவரவர் வீட்டுக்கு வீட்டுக்கு ஒரு ஆள் விழுக்காடு கும்பினீருக்கு நித்தியம் போய் வேலை செய்ய திட்டம் பண்ணுகிறேன். அந்தப்படிக்கு செய்யாதவர்களுக்கு ஒரு அபராதம் கட்டளை யிடுகிறேன் என்று சொல்லிப்போட்டு மேசையின் பேரிலே உட்கார்ந்தார். நானும் பாக்கு கிடங்குக்குப் போய் கூலிக்காரர் பேச்சுக்கு நயனார் தளவாய் வீராநாய்க்கன் முதலானபேரை வெகு கடூரமாய்த்தாளே தாக்கீது பண்ணி குண்டு கிராமத்து குத்தகை குமரப்பிள்ளைக்கு கூட தாக்கீது பண்ணி அப்பால் சத்தக்கார கணக்கப்பிள்ளையை அழைப்பித்து முன் கல்லடிச்சவரிப்போ நெல்லு சத்தம் வைத்து போரவர்களுடைய மாடுகளையும் பின்னையும் இந்த வூரிலே பலசரக்கு பொதியெடுக்கிறவர்கள் மாடுகளையும், பத்து நாள் காரியத்திற்கு கல்லெடுக்கச்சொல்லி அவரவர்களுக்கு தாக்கீதுபண்ணி கல்லெடுக்கச்சொல்லி திட்டப்படுத்தி அதற்கு இரண்டு சேவகரையும் நேமித்து அப்பால் பத்து மணிரர்த்திருக்கு வீட்டுக்குப் போனேன். ஆனால் வீட்டு முறை சொல்தாதுகள் மஹோர்மார்கள் முதலானபேர்கள் யெத்தனை பேருண்டோ அவர்களையெல்லாம் வில்லியநல்லூர் வாசற்படியிலே மண் எடுக்க தக்க திட்டம்பண்ணி மண்ணும் எடுக்கிறார்கள் கோட்டை வேலை இத்தனை சுருக்காய் நடக்கிறதென்னவென்றால்: இங்கிலீஷ்காரருக்கு சீர்மை கப்பல்களும் வந்து சொல்தாதுகளும் விஸ்தாரமாயிறங்கினார்களென்கிற சேதியானபடியினாலே இவ்விடத்து வேலையும் துவரையிலே நடக்கிறது.

*1748* ஆ. ஆகஸ்ட் மீ 8 உ க்கு விபவ ஸூ ஆடி மீ 28 உ குருவாரம்.

நேற்றையதினம் தேன் கொட்டி வீட்டிலே யிருந்து துரை வீட்டுக்குப்போகாதபடியினாலே இற்றைநாள் காலத்தாலே துரை வீட்டுக்குப் போகாதபடியினாலே தருவாடி மஜ்லிபந்தருக்கு கொடுத்த பதினாயிரம் ரூபாய் உண்டிகைக்கு ஆர்க்காட்டு ரூபா ஆனபடியினாலே புதுச்சேரி ரூபாவுக்கும் அந்த

ரூபாவுக்கும் வட்டம் தீர்த்து வாங்கி கொடுத்து விடு என்று சொன்னார், அவரைக் கேட்டதற்கு நீங்கள் வாங்கி கொடுங்கள். நான் வட்டம் ஒத்துக்கொடுக்கிறதில்லை என்று சொன்னார். நல்லது அப்படியே விசாரித்து பேசுவோமென்று சொல்லி அனுப்பிவிட்டேன். அப்பால் நாகப்பட்டணத்திலே யிருந்து தறுவாடி அண்டைக்குப் பங்களாவிலிருக்கிற முசியே புத்தேத்து என்கிறவன் பதினாயிரம் சிலுவானத்துக்கு ரூபாய் நாகப்பட்டணம் பிஸ்கால், மனேஜர் கவர்ன்மெண்ட்டு அண்டைக்கு வந்ததை அவர் துரை பேருக்கு ஒரு காகிதமும் எழுதி அங்கே யிருந்து முசியே புத்தேத்து அனுப்பின காகிதமும் உண்டிகைக் காகிதமும், கொடுத்து தறுவாடியை அந்தப் பணத்தை வாங்கிக்கொண்டு அனுப்பச்சொல்லி காளிதாஸ் புக்கான்றி காகிதம் அவர் பேருக்கும் வந்து துரைக்கு வந்த காகிதமும் உண்டிகைக் காகிதமும் தறுவாடி கொண்டுவந்து கொடுத்து ரூபாய் கேட்டதற்கு உண்டிகையிலே பதினைந்து நாள் வாய்தா எழுதியிருந்தபடியினாலே சயின்பண்ணி மறுபடி உண்டிகையை தறுவாடி கையிலே கொடுத்துப் பதினைந்தாம் நாள் உண்டிகையைக் கொண்டுவந்தால் பணம் தருகிறேனென்று போகச்சொன்னார். அந்தப்படிக்கு அவர் உண்டிகையை வாங்கிக்கொண்டு போய்விட்டார். அப்பால் காலமே எட்டு மணிக்குப் போனாப்போலே மஜல்விபந்தருக்கு காகிதமும் யாணத்திற்கு காகிதமும் எழுதினீர்களே வல்லூர் அந்தணன் என்கிறவன் யாணத்திலே பெத்திரியிலே நம்முடைய கும்பினீர் காரியமாயிருக்கிறவனவனை வரச்சொல்லி முசியே சபிரோ பேருக்குக் காகிதமும் எழுதுகிறோமென்று சொன்னீர்களா, எழுதினீர்களாவென்று கேட்டதற்கு மறந்து போனேனென்று உள்ளே எழுதுகிற கபினேத்திலே போய் என்னை அழைத்துப் பேர் சொல்லச் சொன்னதற்கு மேலே எழுதியிருக்கிறபடிக்கு வல்லூர் அந்தணன் என்று எழுதிக் கொண்டார். உனக்குப் பிர் மகம்மது கஞ்சாமிலே யிருக்கிறவன்பேரிலே என்ன வரவேணுமென்று கேட்டார். இரண்டாயிரம் வராகன் வரவேணுமென்று சொன்னதற்கு அதற்கு எந்த பிரயத்தினம் பண்ணச்சொல்ல வேணுமோ அந்தப் பிரயத்தினம் பண்ணச்சொல்லி சாபிறெக்கு எழுதுகிற காகிதத்திலே எழுதிக்கொண்டார். அப்பால் துரை அவர்கள் யென்னை அழைத்து நேத்தியதினம் இங்கிலீஷ் கப்

பல்கள் வந்து நின்று போனது பட்டணத்திலுண்டான ஜனங்கள் என்ன சொல்லுகிருர்கள் யென்று கேட்டார், அதற்கு நான் சொன்னது பட்டணத்திலுண்டான ஜனங்களெல்லாம் படாயி காட்டுகிருன் குலேக்கிற நாய்க்கடிக்க அரியாதென்று ஜனங்கள் வழக்கச்சொல் சொல்லுகிறபடிக்கு இப்படி படாய் காட்டுகிறவனே தொட்டு ஒரு வேலேயும் ஆகாதென்று சொல்லிக்கொண்டார்களென்று சொன்னுப்போலே முசியே புசி கில்யார் பின்னேயும் காலத்து ரெண்டுபேர்கள் இருந்தார்கள் சமஸ்தமானபேரும் மெய்தானென்று ஒத்துக்கொண்டு துரையும் மெய்தானென்று சொல்லி பின்னேயும் சற்றுநேரம் பேசியிருந்து அப்பால் கூடலூர்சேதி யென்னவென்று கேட்டார் நான் அறியேனென்று சொன்னதற்கு நீ மனுஷர்களே யெப்போதும் போலே வைத்து தேவனும்பட்டணம் கபுறு அழைப்புயென்று சொன்னுரதுக்கு நான் சொன்னது முன்னே யென்னண்டையிலே யிருந்த மனுஷர் நாலேந்து மாசமாய் வேணுமென்று சொல்லி போட்டது மல்லாமல் அவ்விடத்திலே இரண்டொரு பிராமணரும் வர்த்தகரும் இருந்தார்கள் அவர்கள் பேச்செல்லாம் வெளியாய் கிடக்க திருத்தி விட்டும் நானுவித அபந்தரையாய் போனபடியினுலே தற்காலம் மனுஷர் திட்டமாய் சொல்ல வல்லோவேணு மதுக்கேற்ற பேராய் காணுேமென்று சொன்னுப்போலே அவருக்கு வந்த கோபத்தை காகிதத்திலே யெழுதி முடியாது அப்பால் சின்யோள மேலும் மேலும்என்கிற கதையாய் இனி ஒரு வேளேப்பார்ப்போமென்று மார்க்கமா என்னுலே ஆனமட்டுக்கும் பார்க்கிறேனென்று சொல்லிப் போட்ட சாடையாய் பாக்குகிடங்குக்கு வந்தேன் வந்த மாத்திரத்திலே மறுபடி அழைத்தனுப்பிவைத்து வூரிலே வெகுபேரிருந்து காகித பத்திறங்கள் சேதி யெழுதுகிருர்கள் என்று சொன்னுர். அதற்கு நான் சொன்னது அப்படி யில்லேயென்றும் உண்டென்றும் இந்த பட்டணத்திலே பத்து லக்ஷம் பிறஜைகள் இருக்கிறபடியினுலே எந்த விதமாய்ச் சொல்லுகிறது இதற்கு நீங்களெப்படி உத்திரவு கட்டளேயிடவேணுமென்று சொன்னதற்கு பிரஞ்சுக்காகிதங்களெல்லாம் எனக்குக்காண்பித்து சீட்டு கொடுவென்று சொன்னுர்; அப்படியல்ல உங்கள் முத்திரைபோட்ட பிலியேத்துக்கொண்டுபோய் காண்பித்தால் விட்டு விடுகிறது மற்றப்படி கவையில்லே என்று சேக்கு இப்ரும் இங்கேதானிருக்கிருன் அவனுடனே சொல்லுகிறேன்

அந்தப்படிக்கு வழிக்குவழி தாக்கீது பண்ணச்சொல்லுகிறே னென்று சொன்னதற்கு சேக்கு இப்ராமை அழைத்துவரச் சொல்லென்றார் அங்கேதானே யிருக்கிறானென்று சொன்ன தற்கு அழையென்றார்; அவன் வந்த உடனே அவனுடனே துரை சொன்னது தவலை சொம்புகள் பின்னையும் போக்கு வருத்துகள் போகிறதெல்லாம் றங்கப்பிள்ளை சீட்டின்பேரிலே விட்டுவிடுங்கள் காகிதம் ஓலை இதுகள் மாத்திரம்யென் முத் திரைபோட்ட பிலியேத்தைப் பார்த்துக்கொண்டு விட்டு விட வும் பிலியேத்து இல்லாமல் விட்டுவிட வேண்டா மென்று சொல்லி என்னைப் பார்த்து வருகிற ஓலைக்காகிதம் யென்ன உண்டோ அதெல்லாம் உன் அண்டையிலே வருகிறது அது கள் சேர்த்து நீ கொண்டுவந்து ஒரு மிக்க யெனக்குக் காண் பித்து ஒரு பில்லியேத்து கொடுத்து அனுப்பிவிட்டால் அப்பால் வெளியே போனலப்பால் வர வர ஓலைக்காகிதங்களை வாங்கிக் கொண்டு போகிறதென்று சொன்னார். நல்லதென்று சேக்கு இப்ருமுடனே வழிகளுக்கெல்லாம் சொல்லச்சொல்லி அனுப்பி விட்டு நம்முடைய கையெழுத்துச் சீட்டுகொடுக்கிறவனையும் ஓலை காகிதத்துக்கு சீட்டுகொடுக்க வேண்டாமென்று தாக் கீதுபண்ணிப்போட்டு அப்பால் முசியே பிளவுவரன் அழைத் தனுப்பினபடியினாலே அவனைப்போய் கண்டுபேசி அவன் கொடுத்தருபாயை யெடுப்பித்துக்கொண்டு பனிரெண்டு மணிக்கு வீட்டுக்குப்போனேன். அப்பால் பகலைக்குமேலே சுவாரிபோய் பாக்குகிடங்குக்கு வந்து இராத்திரி ஒன்பது மணிக்கு வீட்டுக்குப்போனேன்.

*1748* ஆ ஆகஸ்ட் மூ *11* உக்கு விபவ ஞ ஆடி மீ *31* உ ஆதிவாரம்.

அப்பால் மறுபடி அழைத்து மாபுசுகானுக்கு ஒரு காகித மும் யெழுதவேணும் யென்னவென்றால்: இங்கிலீஷ்காரர்கள் உமக்கு சிறிது வெகுமானம் கொடுத்து உம்மை மத்தது கேழ்க்கிறார்களென்று சேதிகேட்டோம் ஆனால் நீர் மத்தத்து வறப்போகிறதில்லை அல்லவென்று மத்தத்துவந்தால் அதைத் தொட்டு யென்ன வரப்போகுதென்று பின்னையும் சற்று உப சாரம்வைத்து ஒரு காகிதமெழுதவேணுமென்று சொல்லி அவன் மத்தத்துவந்தால் புதுச்சேரியின்பேரிலே வந்தால்

சென்னப்பட்டணத்திலே யிருக்கிற தாசுமான் புறப்பட்டு அந்த விடங்களெல்லாம் சுட்டு அதம்பண்ணி போடுவோ மென்று அல்லவென்று சென்னப்பட்டணத்தின் பேரிலே போனால் புதுச்சேரியிலேயிருந்து ஆற்காட்டு மட்டுக்கும் சுட்டுப்போடுவோமென்று இதுவுமல்லாமல் இங்கிலீஷ்காரர் நிருவாகி அல்ல அவர்கள் கப்பல் எங்கள் கையில் ராசகப்பல் மூனும் கும்பினியார் கப்பல் இரண்டும் அகப்பட்டது அதிலே ராசகப்பல் முழுகிப்போச்சுதென்றும் நீங்களவர்களுக்கு மத்தத்து பண்ணாமலிருந்தாலுங்களுக்கு நல்ல வெகுமானமும் உம்முடைய மனது சந்தோஷம் வரத்தக்கதாக அனுப்புகிறோமென்று இப்படியாக பேய் பிடுங்கலாய் யெழுதச்சொன்னார். இதுவுமல்லாமல் பின்னேயும் அங்கேயிருக்கிறவர்கள் இரண்டொருத்தருக்கு நீங்கள் நபாசாயபு அவர்களுக்குச் சொல்லுகிறது யென்னவென்றால்: நாசற்சங்கு காரியமப்படியிருக்கிறது பாறசாவானால் விழுந்துப்போனான் ஒரு பாளையக்காரன் யிப்படியெல்லாம் தாம் தாம் பண்ணும்போது நாம் இங்கிலீஷ்க்காரருக்கு மத்தத்து பண்ணினால் முன்னே யென்ன ஆனது இப்போது ஆகிறதற்கு அப்புறம் மோசம்வருமென்று யெழுதலாமாவென்றுகேட்டார். துரை ரொம்பபயந்து புத்திசஞ்சலத்திலே யிப்படி யெல்லாம் சொல்லுகிறார் ஆனாலென்ன நாளதுவரைக்கும் தூரத்து சேவகனும் கிட்டபிரிக்கி யென்கிறது எனக்கு தெரிந்திருக்கிறதுதான் என்னபரிக்கி ஆகிலும் அதிர்ஷ்டம் பெரியதல்லவா? பேயாய்க்கிழிச்சாலும் கோமணத்துக்குதவாதா யென்கிறகதையாய் அதிர்ஷ்டவசமாய்காரியமனுகூலமாய் சாரலாவாய் நடந்துபோகுது யென்கிறது எனக்கு நன்றாய் தெரிந்திருக்கிறபடியினாலே நான் துரைக்குச்சொன்னது: இப்போ நாம் பத்திரியெழுதக் கவையில்லே, வக்கீலுக்கு மாத்திரம் நம்முடையவர்கள் கப்பல்கள் வரும்போது இங்கிலீஷ் கப்பல்காரர்கள் இப்போ வந்து சேர்ந்தவர்கள் யெதிர்ப்பட்டு இருவருக்கும் சண்டையான மாத்திரத்திலே நம்முடையவர்கள் இங்கிலீஷ் ராசா கப்பல்களிலே மூன்றுக்கப்பல்களும் வர்க்கமாய் கும்பினீர் கப்பல்களிலே இரண்டுக்கப்பல்களும் பிடித்துக்கொண்டு இதிலே சிறிது கப்பலே முழுகி அடித்து மற்ற கப்பல்களை பிடித்துக்கொண்டு நம்முடையவர்கள் வருகிறார்கள். அப்பாலும் மற்றக்கப்பல்

ஏழெட்டு யெசமானும் தலைவிரிகோலமாய் ஓடிப்போய் தேவனும்பட்டணம் வந்து சேர்ந்தார்களானாலும் அந்தக்கப்பல்களெல்லாம் முழுக்க பீறங்கி குண்டுகளாலே உடம்பெல்லாம் காயப்பட்டு கப்பல்களெல்லாம் காயம்படுகிறதுமல்லாமல் மனுஷர்கள் வெகுபேர் காயம்பட்டுவருகிறார்கள். அசத்தியவாதிகள் நாமறதுகன் யிப்படியே கும்பிலே பாதிபலம் போச்சுது. மற்றப் பாதிபலனும் இந்த தடுக்கிலே இருக்குது. எங்கள் கப்பல்களும் கடியின்பேரிலே யிருக்கிறது அதுகள் வந்து நடக்கிற காரியம் உங்களுக்குத்தானே அப்போதைக்கப்போது கப்பல்கள் வருகிறதிலே அறிவீர்களென்று யெப்படி சொல்லவேணுமோ அப்படி சொல்லச் சொல்லியும் உங்களுடனே நாளதுவரைக்கும் இங்கிலீஷ்காரரும் சொன்ன பேச்சுகளும் தெருஞ்சிருக்கிறது. நாங்கள் சொல்லுகிற பேச்சுகளும் தெருஞ்சிருக்கிறது காரியம் நடத்துகிறவனுக்கு யெல்லாருடனேயும் சொல்ல வேண்டியதில்லை யென்று காரியத்தின்பேரிலே தனிச்சயா யறியுறார்களென்றும் காரியத்துக்கு முன்னிலையாய் யறிவிக்கிற பேர்கள் பிராஞ்சுக்காரர் இங்கிலீஷ்காரர் வாயால் விசேஷம் மாத்திரம்சொல்லி காரியத்திலே காண்பிக்காமல் போனதும் உங்களுக்கு தெரிஞ்சிருக்குதென்று சமயத்துக்குத் தக்கதாய் சொல்லச் சொல்லியும் இங்கிஷ்காரர் என்னபயிகம் நடத்துகிறார்கள். ஆதி ஆசியென்கிறவன் அவன் நபாபு இடத்திலே என்ன யென்ன சொல்லுகிறானோ அது அறிந்து அப்போதைக்கப்போ எழுதி அனுப்பச்சொல்லியும் மாபுசுகான் கெடியாரமொன்று சின்னது வந்துயிருக்கிறதே அது முஸ்தீது பண்ணி யென் வசத்திலே யிருக்கிறது அதையும் கொடுத்தனுப்பி பெரியதுக்கு பதில் அனுப்புகிறதற்கு யெங்கள் கப்பல் முப்பது, ராசா உடையசண்டைகப்பலும், பன்னீராயிரம்சொல்தாதுகளும் வருகிறகப்பல்கள் நாழிகைகெடுவின்பேரிலேயிருக்கிறது. அதிலே முன்னே தானே சிறிதொப்பா தினுசுகளுக்கு யெழுதியிருக்கிறது அதுவும் வரும், அத்துடனே கூட நீங்கள் கொடுத்தனுப்பின பெரிய கெடியாரத்துக்கு பதில் வெகு உச்சிதமாயிருக்கப்பட்ட கெடியாரமும் கூடவருமென்று சொல்லச் சொல்லி வக்கிலுக்கு காகிதமெழுதி மாபுசுகானுக்கும் ஒரு காகிதமெழுதி அதிலே நீரனுப்பின சின்ன கடியாரம் முஸ்திதானதென்று அது அனுப்பிவைத்திருக்கிறோமென்றும் நீரனுப்பிய பெரிய கெடியாரத்துக்கு பதிலனுப்பச்சொல்லி யெழுதி யனுப்பின

படியினாலே யெங்கள் சீர்மை ராசாவினுடைய சண்டை கப்பல் கள் முப்பது பன்னீராயிரம் சொல்தாதுகளும் அந்த கப்பல் களிலே உங்களுக்கு சிறிது தொப்பாதினுசுகளனுப்பச் சொல்லி முன்னாலே யெழுதியிருந்தோம் அந்த கப்பல் களிலே தொப்பாதினுசுகளும், வருகிறது அதவும் அத்துடனே கூட கெடியாரத்துக்கு அவ்வேசு வெகு நேர்த்தியான அவ் வேசு கெடியாரம் ஒன்று உங்களுக்கென்றே வருகிறது அதை யும் கூட அனுப்புகிறோமென்றும் நீர் என் தம்பியானபடி யினாலே நம்முடைய சந்தோஷம், உம்முடைய சந்தோஷமான படியினாலே கப்பல்கள் வருகிற சந்தோஷம் உமக்கு யெழுதி னோமென்று மாத்திரம் பின்னையும் சற்று உபசாரமாய் யெழுதி யனுப்பவேணும் அதன்பேரிலே நடக்கிற சேதிக்கு தக்கதாய் உத்திரமும் யெழுதலாமென்று யெனக்குத்தோணுகிறது. அப் பால் தேவரீர் எப்படி யெழுதச்சொன்னால் அப்படி யெழுது கிறேனென்று சொன்னதற்கு நீ சொன்னதுவே நன்றாயிருக் கிறது அப்படித்தானே யெழுதி அனுப்புயென்று சொன்னா ரந்தப்படிக்கி காகிதங்களும் யெழுதி அதற்கு சல்லாதும் கட்டிக்கொண்டு கெடியாரமும் கொடுத்து வக்கீல் சுப்பய்யர் காகிதமும் மாபுசுகான் காகிதமும் சிதம்பரம் வகையிரா சேவகர் வசத்தில் கொடுத்து திருச்சிறுப்பள்ளிக்குப் போகிற தாய் செஞ்சியிலே வந்து இறங்கியிருக்கிற அன்வர்த்திகான் மாபுசுகானண்டைக்கு அனுப்பிவைத்தேன். அப்பால் நானும் அப்பாசி பண்டிதன் தம்பி விஷ்ணுஜி பண்டிதனுக்கு சேர்பன கலியாணத்துக்குப் போயங்கேயிருந்து ஒருமணி அடிக்கிற வேளைக்கு வீட்டுக்குப்போனேன்.

*1748* ஆ ஆகஸ்ட் மீ 12 உக்கு விபவ ஹு ஆடி மீ 32 உ சோமவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரை வீட்டுக்குப் போன விடத்திலே துரையவர்கள் சண்டைசாமிக்கு அவரவரை அழைப்பித்து அந்தந்த வஸ்துக்களெல்லாம் முஸ்தீது பண்ணச்சொல்லுகிறபடி யிருந்தது. நேற்றியதினம் சம்பா வுலுக்கோயில் பாதிரிகள் ஒழுகரை அரியாங்குப்பத்து கோயில்களுடைய கதவுகள் சன்னல்கள் கூடக் கழட்டிக் கொண்டு வந்தார்களென்றால், அப்பாலதிலேயிருந்த சுருபு

முதலானது யெடுத்துக்கொண்டு வந்தார்களென்று எழுத கவையில்லையே அந்த சேதி கேழ்க்கிற நிமித்தியம் சம்பாவுலு கோயில் சுப்பெரியேர் கடுதுவை துரையை வரழைத்து நீங்க ளொதினாலே அரியாங்குப்பத்து கோயிலிலே இருந்த சுரூபம் தட்டுமுட்டு கதவுகள் ஜன்னல்கள் கூட ஒழுகரை கோயிலு தும் அப்படி கொண்டுவந்தது யென்னவென்று கேட்டார். அதுக்கு அவர் சொன்னது: ஆனந்தரங்கப்பிள்ளை வீட்டிலே இருந்த அவர் பெண்சாதிபிள்ளைகள் சமுஸ்தமும் போய்விட் டார்களென்றும் அரும்பாத்தை விட்டுக் குழந்தைகள், பெண் டுகள் ஆண்பிள்ளைகள் போய்விட்டார்களென்றும் இப்படி சமஸ்தமானபேர்க்கள் போய்விட்டார்களென்று சேதி கேட்ட படியினாலே நாங்களுமதை யெடுத்துவரச் சொன்னோமென்று சொன்னார். அதற்கு துரையவர்கள் என்னை யழைத்து பட்டணத்திலுண்டானவர்கள் சமஸ்தமான பேரும் போய் விட்டார்களாவென்றுகேட்டராதற்குநான் சொன்னது: ஏழை ஜனங்கள் பிருமணால் போனதுண்டு. இதல்லாமல் இந்த வூரிலே பிறந்தப்பெண் அசலூரிலே வாழ்க்கப்பட்டிருக்கும் அதுகள் மறுபடி இப்போ போயிருப்பார்கள். மற்றப்படி யென்னேரமும் போக்குவரத்தாயிருக்கிறதே ஒழிய மற்றப் படியல்லவே; அந்தபடிக்கு போனதே அல்லாமல் மற்றப்படி போனதில்லையென்று சொன்னேன். அப்பால் உங்கள் வீட் டிலே யிருக்கிற பெண்டுகள் போனார்களாவென்று கேட்டார் கள். எங்கள் வீட்டிலேயிருக்கிற பெண்டு பிள்ளைகளிலே ஒருத்தராகிலும் போனதில்லை. இப்போதானே மனுஷரை அனுப்பி போய் பார்த்துவரச் சொல்லுங்களென்று சொன் னேனதற்கு பாதிரிக்கு துரைபார்த்து நீ சொன்ன பேச்சு எப்படியிருக்கிறதென்று கேட்டதற்கு எங்களுடனே அப்படிவந்து சொன்னார்களென்றார். அப்பால் அருமாத்தை வீட்டு பெண்டுகள் போனார்களாவென கேட்டார் அவர் வீட்டு பெண்டுகளிலே விநயகம்பிள்ளை பெண்சாதி வில்வநல்லூர் கோயிலுக்கு நேற்றிய நாயிற்றுக்கிழமையன்று போனார்கள் அவர்கள் சாவடி ஒன்று இருக்கிறபடியினாலே பெண்டுகள் ஆண்பிள்ளைகள் எப்போதும் போக்குவருத்துவுண்டாயிருக்கு மென்று சொன்னதற்கு துரை நீங்கள் ஒரு தப்பிதம் பண்ணு கிறது ஏன் பண்ணினீர்கள்? யென்றுகேட்டால் ஒருத்தர் மேலே எரிகிறது உங்களுக்கு வாடிக்கை நீங்கள் தானே

இங்கிலீஷ்காரர்கள் வருகிருர்களென்று சன்னல்கூட பிடிங்கி வந்தால் ஒன்றுமறியாதிருக்கிற தமிழர் ஓடிப்போரது ஞாயம் தானே நீங்கள்தானே பட்டணத்தை காபிருபண்ணுகிறீர்களென்று பின்னேயும் என்னமோ பேசியிருந்து அவரைப் போகச்சொல்லி பரசுராமப்பிள்ளையை அழைக்கச்சொன்னுர். அப்பால் பரசுராமபிள்ளை வந்தவுடனே என்னேயும் அழைத்து உன் பெண்டாட்டி பிள்ளைகளெல்லாம் உன் வீட்டிலேயிருந்தவர்களையெல்லாம் அனுப்பிவிட்டாயாவென்று கேட்டார் ஒருத்தரையும் அனுப்பினதில்லை மனுஷரை அனுப்பிப்பார்க்கச் சொல்லுங்களென்று சொன்னுர் அந்தபடிக்கு துரை உடனே சொன்னதற்கு நீ அப்படி அனுப்பியிருந்தால் உன் தாடியை கொளுத்திப்போடுவேனென்று சொன்னுர் அந்தபடிக்கு பரசுராமபிள்ளைக்கு சொன்னதற்கு அப்படி செய்ததுண்டானல் தலையை வெட்டிபோடுங்கோளென்று சொன்னுனதற்கு துரை சொன்னது. அது நான் நன்ருயறிவேன் உங்கள் வீட்டு பெண்டுகள் பிள்ளைகள் போனதில்லையென்று சம்பா கோவில் பாதிரிகள் ஒழுகரை அரியாங்குப்பம் கோயிலிலேயிருந்த சிலுவைமரங்கூட கதவுகள் ஜன்னல்கள் கூடயெடுத்து வந்தார்களென்று கபுறு கேட்டு நான் அழைப்பித்து தாக்கீது பண்ணி ரொம்ப கோபித்துக்கொண்டதற்கு அவர்களிப்படி போக்குச் சொன்னுர்கள். துரையவர்கள் அவர்கள் சுபாவம் அபத்தம் எப்போதும் சொல்லுகிறவர்களென்று யெல்லாரும் அறிந்திருக்கிறதுதானே யென்று சொன்னுரதற்குநானிதுவரையிலே யென்பேரிலே சொன்ன அபாண்டம் மிதமில்லையென்று சாடையாய் சொன்னதற்கு அவர்கள் என்பேரிலே யெத்தனை அபாண்டம் சொன்னுர்கள். அவர்கள் ஆர்பேரிலே சொல்லாமலிருந்தார்கள் பொய் சொல்லுகிறதற்கெல்லாம் குருஸ்தானம் எவ்விடமென்று கேட்டால் சம்பாவுலுகோயிலு பாதிரி யென்று சொல்லுகிறது. சீர்மையிலே குழந்தைபிள்ளைகளுக்குக் கூட வாடிக்கையென்று சொன்னுர். இதுதான் சந்துகட்டென்று சொல்லி பிருமணனைத்தொட்டு ஒரு வேலையும், ஒரு உபசாரமும் பட்டணத்திலேயிருக்கிறவர்களுக்குமில்லை. ஆனுலிவர்களேதாகிலும் கொடுக்கச்சொல்லி போராடி வாங்கிக் கொள்ளுகிறதுமல்லாமல் இவர்களைத்தொட்டு கூக்குறல் ரொம்பவென்று சொன்னதற்கு மெய்தான் நீ சொல்லுகிறது இந்த பாப்பாரை மாத்திரம் யென்ன உபாயமாகிலும் பண்ணி

லூருக்கப்புறம் துரத்திவிடு் எனக்கு அது மெத்த சந்தோஷ மென்று சொன்னார். அதுதான் உங்களை கேழ்க்கவேணுமென்று வந்தேனென்று சொன்னதற்கு நீயெந்த உபாயமாகிலும் பண்ணி துரத்திவிடுயென்று சொல்லிப்போட்டு அப்பால் மதாம் காம்பிராவுக்குப் போனார். நானும் பரசுராமப்பிள்ளை யும் இப்புறம் வந்தோம். அப்பால் பரசுராமப்பிள்ளையைப் பார்த்து நேத்துதானே சொன்னேனே உங்கள் வீட்டிலே யிருந்து வெளியிலே பெண்டுகள் வெளியே புறப்பட்டால் சொல் உங்களைத்தொட்டு பட்டணம் முரிஞ்சுதென்று சொல்லுவார்கள் சொன்னால் தோத்தாமல்போனதே இப்போ அது ஒரு சொல்லுக்கிடமாய் பிறபு அழைத்துக் கேழ்க்க லாச்சுதே இனிமேலாகிலும் காரியமாய் நடப்பித்துக்கொள்ளு மென்று சொன்னதற்கு நான் சொன்னால் வீட்டிலே இருக்கிற பிள்ளையாண்டான்கள் கேழ்க்கிறதில்லை. கிஷ்ணராயர் இங்கே நடந்தசேதியை அவராய்ப்போய் முத்தையப்பிள்ளையுடனே சொல்லச் சொல்லவேணுமென்று சொன்னதற்கு அப்போது கிருஷ்ணராயரும் வராந்தாவிலே கூட இருந்துக்கொண்டிருந் தவர்தான் நாம் சொல்லச் சவையில்லை; அவராய்ப் போய்ச் சொல்லுவாரென்று சொன்னேன். அவரும் நானிப்போ போய் சொல்லுகிறேனென்று பரசுராமப்பிள்ளையுடனே சொல்லிப் போட்டுபோனார். பரசுராமப்பிள்ளையும் அனுப்பிவைத்துக் கொண்டுபோனபிற்பாடு துரை மறுபடி வந்து தறுவாடியைக் கேட்டு சென்னப்பட்டணத்துக்கு முப்பதுனயிரம் ரூபாயிக்கு உண்டிகை எழுதிவித்துக்கொண்டு வாவென்று சொன்னார். நல்லது கேட்டுவந்து சொல்லுகிறேனென்று சொன்னதற்கு எப்படியாகிலும் வாங்கிவாவென்று சொல்லிப்போட்டு நெல் கடையிலே நெல் வந்துதாவென்று கேட்டார். நேற்று ஞாயிற்றுக்கிழமை அல்லவாவென்று சொன்னேன். அப்பால் முப்பத்திரெண்டு போயிண்டரை (dhooly-bearers) அஞ்சல் வைத்தாயாவென்று கேட்டார். இன்றையக்காலமே எட்டு மணிக்குப் போனார்களென்று சொன்னேன். எங்கேயென்று கேட்டார்; ஆலம்புரிவை பொட்டிபத்தன்சாவடி ஒரு அஞ்சல் எட்டுபேரும் மலையப்பன் சேவகன் ஒருத்தனும், அப்பால் பாலாத் திற்கு அக்கரை கிச்சிநாய்க்கன் சாவடி ஒரு அஞ்சல் எட்டுபேர் பொய்னடரும் ஒரு சேவகரும் அப்பால் திருப்போரூருக்கப்பால் ஒரு அஞ்சல் எட்டுபேரும் பொய்னடரும் ஒரு சேவகரும்,

சென்னப்பட்டணத்திற்கும், திருப்போரூருக்கும் மத்தில் ஒரு அஞ்சல் எட்டுபேர் பொய்ன்டரும் ஒரு சேவகரும், இந்தப் படிக்கு யார் எந்நேரத்திலே வந்து அழைக்கிறார்களோ அப்போ ஆஜராயிருந்து டோலியை எடுத்துக்கொண்டு வாருங்கோளென்று சொல்லி அனுப்பிவித்தேனென்றும் உங்களை யார் கேட்டாலும் இன்னார் மனுஷரென்று சொல்லவேண்டாம், நாங்கள் வழிப்போக்கரென்றும் சொல்லுங்கள். கூலிக்காரர் வேலை செய்து பிழைக்கிற நாங்கள் என்று சொல்லுங்களென்றும் சொல்லி அனுப்பிவைத்தேனென்று சொன்னதற்கு இவ்விடத்திலே ஒரு டோலி முஸ்தீது பண்ணச்சொல்லி சொன்னபடிக்கு முஸ்தீதாயிருக்கிறதாவென்று கேட்டார். முஸ்தீதாயிருக்கிறதென்று சொன்னேன். அப்பால் கற்னுட்டகத் துப்பாக்கி ஐம்பது ஐந்தாறு துப்பாக்கி கொண்டுவந்து காண்பித்ததற்கு அதைப் பார்த்து இதற்கேற்ற ரூண்டு இருக்கிறதாவென்று கேட்டு வரச்சொல்லென்று சொல்லி அப்பால் கர்த்தூஷ் கவைக்கு வராதே ஆனபடியினாலே ஒவ்வொரு துப்பாக்கிக்கு இருபது வேட்டு மருந்தும் குண்டும் கொடுக்கச்சொல்லி சீட்டெழுதிக் கொடுத்தார். அந்தச் சீட்டை ஷேக்கு இப்ராகீம் வசம் கொடுத்து அந்த மருந்து குண்டு வாங்கி வெங்கடநாய்க்கன் வசம் கொடுத்து ஐம்பது கற்னுடக சேவகருக்கும் பங்கிட்டுக் கொடுக்கச் சொல்லச்சொல்லி அனுப்பிவிட்டேன். அப்பால் வேட்டவலத்துக் கார்டியன் பேரிலே நபாபு அன்வர்திகான், மாபூசுகான், கைரப்திகான், அப்துல் ஜாலி முதலானவர்கள் இரண்டாயிரம் குதிரைகளுடனே வந்திறங்கி காடுவெட்டிவிற்கிறார்கள் என்று சேதி எழுதிவந்ததென்று சொல்லி ஒரு நாள் சண்டையும்பண்ணி காட்டிலே யிருந்த பேரிலே இருபது பேரும் வெளியிலே யிறங்கி இருந்து நபாபு மனுஷரிலே ஐம்பது பேரும் செத்ததாய்ச் சேதி வந்ததென்று துரைக்குச் சொன்னேன். திருச்சிறுப்பள்ளி கலாபம் என்னவானதென்று கேட்டார். அங்கே மறவன், தொண்டமான், தஞ்சாவூரார், மைசூரார் முதலான பேரெல்லாம் கூடி தஞ்சாவூரிலே கோணப்பய்யன் மகன் ராமண்ணையனைக் காவலில் வைதது இருந்தவனையும் விட்டுத் திருச்சிறுப்பள்ளி கோட்டையும் வாங்குகிறதாய்த் தானே எத்தனம் பண்ணுகிறார்கள். நபாபு அன்வர்திகான் மாபூசுகானும் சிறிது குதிரைகள் ரா்ணுவம் திருச்சிறுப்பள்ளிக்குப் போகிறதாயும் அப்துல்சல்லி, கயிருதிகான் முதலானபேர்களும்

சிறிது தளமுமிங்கேயிருந்து வேட்டவலம் காட்டையும் வெட்டி அவனுடனே சண்டைபண்ணி அவனை அதம்பண்ணி அப்பால் போகிறது. இல்லாவிட்டால் போகத் தேவையில்லையென்று கயிருதிகானுக்கும் அப்துல் சலீலுக்கும் சொல்லிப்போட்டு அப்பால் திருச்சினுப்பள்ளிக்குப் போகிறதாய்ச் சேதி எழுதி வந்தது. கானுகோயி கிருஷ்ணறி பண்டிதன் மருமகன் சீனுவாச ராயன் வேலூருக்குப் போய் இருந்தவனைச் சயந்தல்லிகானும் உக்குமெத்தராயனும் போய் சமாதானம்பண்ணி லக்ஷ ரூபாய் நதிர் கொடுக்கவும் அவன் தட்டுமுட்டு காசு கொடுத்துவிடவும் இந்தப்படிக்கு உடம்படிக்கைப்பண்ணி முருதுசல்லிகானுக்கும் சமாதானப்படுத்தி அழைத்துவந்து ஆற்காட்டிலே நபாபுடைய காம்பாரியாயிருந்து விசாரிக்கிற நசிபுகான் அண்டையிலே கொண்டுவந்து விட்டதாயும், அதன்பேரிலே அவன் தட்டு முட்டெல்லாம் கொடுக்கும்போது சிறிது தட்டுமுட்டு இல்லை யென்று சொன்னதின்பேரிலே எங்கள் கணக்கிலே எடுத்து வந்ததெல்லாம் எழுதியிருக்கிறதே அந்தப்படிக்கு நாங்கள் ஒப்பித்துப்போடுகிறோம். நீரில்லை என்கிறது நாங்கள் முதலிலே அறியோமென்று நசிபுகான் சொன்னதாகவும், அதன்பேரிலே அறகத்தாய் இருக்கிறதென்றும் இனிமேல் என்னமாய்த் திருமோவென்று ஆற்காட்டிலே யிருந்து எழுதிவந்ததென்று சொல்லி காவேட்டிப்பாளையம் சேஷமராசா முதலான பாளையக்காரரை யெல்லாம் பவுன்கூடனே வரச்சொல்லி அன்வர்திகான் அவரவருக்கு எழுதியனுப்பினபடியினாலே காவேட்டி ராசாபாளையம் சேஷமராசாவும் சிறிது ராணுவம் சொழுங்கி வரம் வந்து சேர்ந்தாரென்றும் ஆற்காட்டிலே யிருந்து சமஸ்த ராயன் தம்பி உக்குமத்தராயன் எதிரே போய் மரியாதை பண்ணி அழைக்குந்தனிலும் அங்கே யிருந்து அவர் போய் அழைத்தவுடனே ஆற்காட்டுக்கு வருவார். அப்பால் வேட்ட வலத்துக் காட்டின்பேரிலே போய் இறங்குவார்களோ அல்ல வென்று நபாபுடனேகூட திருச்சினுப்பள்ளிக்குப் போவாரோ தெரியாதென்று ஆற்காட்டிலே யிருந்து உக்குமத்துருயனும் சொழுங்குவரத்துக்கு எதிர்க்கொண்டு போய் அழைத்துவரப் பார்க்கிறார்களென்றும் இது முதலான சேதியை எழுதிவந்த தென்று சொல்லிப்போட்டு நானும் பாக்கு கிடங்குக்கு வந்து பனிரெண்டு மணிக்கு வீட்டுக்குப் போனேன். [ ]

*1748* ஆ ஆகஸ்டு மீ *13* உக்கு விபவ ஸு ஆவணி மீ 1 உ மங்களவாரம்.

இற்றைநாள் காலத்தாலே நான் துரையவர்கள் வீட்டுக்கு போனபிற்பாடு கடைக்கு நெல்லுவந்ததாவென்று கேட்டார் வரவில்லையென்று சொன்னேன். கும்பினீருக்கு நெல் விழுப்புரத்திலே அப்துல் சல்லிசாயபு அமீர்மகம்மது அகான் மார்பத்திலே நாலரைக்கலம் நெல்தானியத்திற்கு விலைக்கு இரண்டாயிரம் விராகனுக்கு மாத்திரம் வாங்கினேன். நாளையதினம் பணம் அனுப்புகிறேனென்று சொன்னேன். அப்பால் இங்கிலீஷ்காரர்கள் நபாபு அன்வர்திகானுக்கு காகிதமெழுதினுர்களே அதற்கு நபாபு பதிலுத்தரம் இங்கிலீஷ்காரருக்கு யெழுதினதிலே என் ராச்சியமெல்லாம் மெத்த அபந்தரயாய் குடிகளெல்லாம் நொந்து சீர்மையும் நொந்துபோய் கலாபங்களும் அங்கங்கே நடக்கிறபடியினுலே நானுங்கள் ஜோலிக்கு வரக்கூடாது. நீங்களாச்சு பிரான்சுக்காரராச்சு சரிபோனபடிக்கு நடப்பித்துகொள்ளுங்கோள். நமக்கேன் அந்த ஜோலியென்று நபாபு யெழுதினதாக தேவனும்பட்டணமெல்லாம் சொல்லிக்கொள்ளுகிருர்களென்று சொன்னுர். இது பொண்டாட்டி சொன்ன கபுறு, இதைமெய்யென்று எண்ணிக்கொண்டிருக்கிருன். யெத்தனைகையிலே ஆகாத முட்டாளானுலும் இப்படியெழுதுவானு? தன்னை தொட்டு ஒன்றுமாகாமல் போனுலும் ஏதாகிலும் சுற்றுகிறது லாபமென்று பிகுவா யெழுதுவானு? அல்லாமல் இத்தனை பஞ்சையா யெழுதுவானு? அப்படி பஞ்சையா யெழுதுகிறதற்கு என்ன இக்கட்டு வந்தது. என்ன இக்கட்டு வந்தாலும் பிகுவு விடாமல் அவன் என்ன இந்த ராச்சியம் ஆண்டானென்று எண்ணுமல் மெய் என்று பொண்டாட்டி தனக்கு தேவனும்பட்டணத்து வேகுக்காரன் சொன்னுப்போலே கோட்டையிலே அவர்களை எத்தனை அந்தரங்கமாய் எழுதுகிறது; அதற்கு அங்கேயிருந்து உத்தாரம் வந்தால் எத்தனை அந்தரங்கமாயிருக்கும் அப்பாலும் அதற்குள்ளே இருக்கிறவனுக்கும் இப்படி சொல் முதல் வெளிப்படவே படாது அல்லவென்று வெளிப்படுகிறதானுலும் பத்து நாள் ஏறக்குறைய சொல்லுமேயல்லாமல் இத்தனை சுருக்காய் வெளிப்படுமோ? அப்பாலும் இந்த ஊர் காகிதம் எதிராளிக்கு

வெளிப்படுகிறதுதானில்லையே. இந்த ஊர் காகிதம் வெளிபட்டால் என்ன அதுவும் வெளிப்படுமென்று எண்ணவேணும். இதுகளை எவ்வளவும் யோசனைபண்ணுமல் சொன்னுப்போலே மெய்யென்று எண்ணுகிற பேருக்கு இது உலகத்துக்குள்ளே இவரைப்பார்த்தாப்போலே மற்ற பேரை யாரையும் பார்த்ததுமில்லை, கேட்டதுமில்லை. இந்தச் சம்மதியைத்தானே முழுக்க மெய் என்று நம்பி இருக்கிறபடியினுலே மற்ற காரியத்திற்குப் பின்னை ஒன்றும் கேழ்க்கக் கவையில்லை, ஆனபடியினுலே இவருடைய பிர கீர்த்தியைப் பார்த்து எருது ஈன்றது என்ருல் கோட்டையிலே கட்டென்று சொல்லுகிற பிர கீர்த்தியென்று அடிக்கடி நானெழுதி வருகிறது. ஆனபடியினுலே தன் பெண் சாதி பண்ணுகிற அநியாயத்திற்கு பிராதில்லாமல் பட்டணமெல்லாம் கூக்குரலாய், ஏகசக்கிற புறத்திலே குடியிருந்து மனுஷர் மெலி கொடுத்து இராத்திரியும் பகலும் நடு நடுங்கினுப் போலே பட்டணமெல்லாம் நடு நடுங்குகிறது. பிரபுவினுடைய விவேகமப்படியானபடியினுலே காபிரு பண்ணுகிறவன் கையிலேயிருக்கிறது தயா தருமம் ஆனபடியினுலே இந்த நாளை சீக்கிறமத்துக்கு தள்ளி நல்லகாலம் பிறக்கத்தக்கதாக தயவுபண்ணவேணும் ஆண்டவரென்று சமஸ்த ஜனங்களும் பிருர்த்திக்கிருர்களானுல் யேகசக்கிறபுறத்திலே தினமொருத்தன் யென்று ஒரு நிஷ்க்கர்ஷையாயிருந்ததென்று ஜனங்கள் அந்த பட்டணத்திலே குடியிருந்தார்கள். அந்த நிஷ்க்கர்ஷை கூட யிந்த பட்டணத்துக்கு யில்லாதபடியினுலே இந்த பட்டணத்து ஜனங்கள் அன்னுடகம்தான் நடக்கிறது. ஒரு யுகம் தாண்டுகிருப்போலே யிருக்குது சுவாமி ரக்ஷிக்க வேணுமென்று யோசனைபண்ணிக்கொண்டு பிறபுனுடைய சித்தானுசாராமாய் படாவிட்டால் காரியமல்லவென்று அதற்கு தக்கதாய் உத்திரம் சொன்னேன். அப்பால் தேவனும்பட்டணத்தாருக்கு நபாபு ஆசைவிட்டுப்போச்சுதே இதிலே மெத்த அப்பிறதிஷ்டையை அடைந்ததுமல்லாமல் வெழ்க்கிப் போனுர்கள். இனி அந்த பட்டணத்து வர்த்தகர்கள் காலதேச வர்த்தமானம் பார்த்தால் இப்போ சண்டைக்குப் போகிறதல்ல. அல்லவென்று போனுல் வெழ்க்கம் கெட்டுப்போவீர்கள். இப்படி பட்ட உங்களை நம்பி நாங்கள் உங்கள் பட்டணத்திலே இருக்கிறதில்லையென்று சொன்னுல் பின்னையும் வெழ்க்கப்பட்டு போவார்கள் மெத்த அப்றதிஷ்டை அடைகிறதுமல்லாமல்

இந்த ராச்சியத்தார் மெத்த யெகத்தாளி பண்ணத்தக்கயிடம் பண்ணிக்கொண்டார்களென்று சொன்னார். அதென்னப் பொய்யா அந்த பட்டணத்து வர்த்தகருமப்படி சொல்லுவார்கள். இங்கிலீஷ்காரரும் அப்படித்தான் சண்டைபண்ணுகிறதை விட்டுவிட்டு யெகத்தாளிக்கியிடமாய்ப் போவார்களென்று சொல்லிக்கொண்டு அவர் பாடுகிறதற்கு தக்கதாய்ப் பாடிக்கொண்டுவந்தேன். ஆனாலிவர் யெப்படி நடத்தினாலும் இங்கிலீஷ்காரருக்கு பொல்லாத காலமும் பிரான்சுகாரருக்கு நல்லகாலமானபடியினாலே கட்சிக்கு பிரான்சுகாரருக்கு ஜெயம். இங்கிலீஷ்க்காரருக்கு அபஜெயமென்று கெட்டியாய் என் மனதிலே யெண்ணியிருக்கிறபடியினாலே பேசுகிற எஜமானனுடைய விவேக வீக்ஷணத்துக்கும் அந்தோ மாமூலாவுக்கு மாத்திரம் ஆச்சரியப்படுகிறதே அல்லாமல் மற்றப்படி வேறே யெண்ணவேண்டியதென்னயிருக்கிறது. எண்ணிக்கொண்டு அது அதற்குத்தக்க உத்தாரமாமப்படியே சொல்லிக்கொண்டு வந்தபிற்பாடு முப்பதுனாயிரம் ரூபாயிக்கி சென்னப்பட்டணத்துக்கு தறுவாடியைக் கேட்டு உண்டிகை வாங்கச்சொல்லி சொன்னீரே அவனைக் கேட்டால் தங்களுக்கு மனுஷரில்லை. அவ்விடத்திலேயென்று சொன்னானென்று சொன்னதுக்கு இந்த வூரிலே ஆருமில்லையாவென்று கேட்டார். ஆரம்பட்டி உண்டிகைக்கொடுக்கவும் ஒருவேளை ராஜீக தெய்வீகமானால் விர்வாகம் பண்ணத்தக்கினவனுமென்று ஒருத்தனிருக்கிறானாவென்று கேட்டதற்கு மெய்தானென்று சொல்லி தறுவாடியை அழைத்துவரச்சொன்னார். அழைத்துவந்த உடனே 'சென்னப் பட்டணத்துக்கு உண்டிகைக் கொடுக்கப்போகாதாவென்று கேட்டார். மனுஷரில்லையென்று சொன்னான். மைலாப்பூரிலேயும், பவழக்காட்டிலேயுமில்லையென்று சொன்னான். ஆனால் காஞ்சிபுறத்திலே யில்லையாவென்று கேட்டதற்கு அமுல்தாரன் தான் யெங்களுக்கு குமஸ்தாவென்று சொன்னான். ஆனாலவன் பேருக்கு உண்டிகை கொடுத்தால் மூசியே பற்தேலெமி அவ்விடத்துக்கு மனுஷரை அனுப்பின பணம் அழைப்பித்துக் கொள்ளுவாரென்று சொன்னார். அதற்கு நான் தருவாடியை பார்த்து காஞ்சிபுரத்துக்கு சம்மதித்தே சென்னப்பட்டணத்திலே உங்கள் மனுஷரில்லாவிட்டால் யென்ன கட்டி அனுப்பி அங்கே ஒப்பித்துப்போடச்சொல்லு துரை சொல்லுகிறமட்டுக்கும்தட்டிப்போடாதேயென்று சொன்னதற்கு நேத்திய பயு

சாடையை சற்றே சாடையாய்ச்சொல்லி இதற்கு சம்மதியா விட்டால்போராட்டம் வருமென்று சாடையாய் சொன்னுப் பேர்லே நான் ராஜீகம் தெய்வீகத்துக்கு நான் பெற்றுக்கொண்டு சென்னப்பட்டணத்திலே ஒப்புவித்துவிடுகிறேனென்று சம் மதித்துக்கொண்டான் அதின்பேரிலே சம்மதித்துக்கொண்ட சாடையாய் சொல்லி நாலுநாள் ஏறக்குறைய போய் சொல்லு மென்று சொன்னதற்கு வாய்தாவின்பேரிலே எட்டுநாள் போல் சென்றுலும் சம்மதித்தானென்று ஒத்துக்கொண்டு கபினேத்தைப்போய் மூசியே கில்லியார் பேருக்கு ஒரு தினுசு முப்பதுனுயிரம் ரூபாய்க்கும் உண்டாவணி நூத்துக்கு ரூ $\frac{3}{4}$ ஆக ரூபாய் இரனூத்தி இருபத்தஞ்சும் ஆக முப்பதுனுயிரத்து இரனூத்தி இருபத்தஞ்சுக்கும் தாம்தானே யெழுதி கையெழுத்துப்போட்டு கொடுத்தார். அதை வாங்கிக்கொண்டு தாருவாடி மூசியே கில்லியாறண்டைக்குப் போனுன். அப்பால் மூசியே பாராதி வந்தார் மூசியே பாராதியும் துரையும் பேசியிருந் தார்கள் நான் பாக்குகிடங்குக்கு வந்துவிட்டு கும்பினிரெண்டு, மணிக்கு வந்தேன். மற்றப்படி பட்டணத்திலே இருக்கிற ஜனங்களிலே வெகுபேர் கம்பிவாங்கி வெளியே போய்விட்டார் கள். வெள்ளைக்காரத் தெரு, சாடையைப்பார்த்தால் தமிழர் வெகு தைரியஸ்தராய் காணுது அவர்கள் போடுகிற பீதிர் கூக்குரலினுலே அப்படிக்காணுது ஆனுல் யெல்லாத்துக்கும் சீக்கிரமத்துக்கு நம்முடையவர்கள் கப்பல் வந்தால் இங்கிலீஷ் கப்பல்காரர்கள் பட்டணத்தின்பேரிலே சண்டைகொடுக்கப் போகிறதில்லே. ஆனபடியினுலே சுவாமி ரக்ஷிக்கவேணும் என்று சகல ஜனங்களும் சொல்லுகிறுர்கள். அப்படியே சுவாமியும் ரக்ஷிப்பார் அதற்கு சந்தேகமில்லே. அவர்கள் இவ் விடத்திலே பாய்ச்சல்காட்டி சென்னப்பட்டணம்போவார்கள் போலே காணுதே அல்லாமல் இந்த பட்டணத்தின்பேரிலே சண்டைபண்ண வரப்போகிறதில்லேயென்று தெரிந்திருக்கிறது அப்படி கெட்டியாய் நடக்கப்போகிறது.

*1748* ஆ ஆகஸ்ட் மீ *14* உக்ரு விபவ ஷு ஆவணி மீ 2 உ புதவாரம்.

இற்றைநாள் காலத்தாலே என்னே துரையவர்களழைப் பித்து நேற்று தருவாடி சென்னப்பட்டணம் மூசியே பேர்தல்ரி கையில் செலுத்துகிரேமென்று எழுதிக்கொடுத்து முப்பது

ஞயிரம் ரூபாய் உண்டிகைக் காகிதமெங்கேயென்று கேட்டார். மூசியே கில்லியாரை கையில் கொடுத்து இருக்குதென்று சொன்ன தின்பேரிலே மூசியே கில்லியாரை அழைப்பித்து அவர் கையிலே யிருந்த முப்பதனுயிரம் ரூபாய் உண்டிக் காகிதத்தை வாங்கிக்கொண்டு மூசியே போலே கையிலே கொடுத்து அங்கே யார் பேருக்கு எழுதி வருகிறதென்று கேட்டார். மல்லூர் ராமசெட்டி அவன் சென்னப்பட்டணத்திலேயும் இருப்பான் என்று சொல்லி தவணையும் எட்டுநாள் என்று சொன்னபடிக்கு காகிதமெழுதி அந்த உண்டிக் காகிதமும் வைத்துச் சென்னப் பட்டணத்திற்கு மூசியே பெடுத்தல்மீ அண்டைக்கு அனுப்பி ஞர்கள்.

அப்பால் இரிசிராப்பாளையம் கிளிஞ்சிக்குப்பத்து தொல்லை யானபடியினலே அந்தக் குப்பத்திலே யிருந்த குடிசைகளைப் பிடிங்கிப் போடுகிறதற்கும் அதில் பத்து பதினைந்து மரமிருக் கிறதைக் கூட வெட்டிப்போட்டு அந்த மரங்களைக் கும்பி னிருக்கு எடுத்துக்கொண்டு அதற்குள்ள கிரயம் அந்த பத்து பதினைந்து கூரை வீடுகள் அப்புறத்திலே கட்டிக்கொள்ளுகிற தற்கு அவர்களுக்கு மனது சமானமாய்க் கொடுத்து நடப்பித்து போடுயென்று சொன்னீர்களே அந்தப்படிக்கு அந்த குடியான வர்களுடனேயும் போய் பேசினதற்கு அவர்களும் சம்மதித்தார் கள். அந்தப்படிக்குக் குடிசைகளையும் பிடுங்கிப் போட்டார்கள், மரங்களும் நாளைக்கு மனுஷரை அனுப்பி வெட்டச்சொல்லி அரியாங்குப்பத்தைச் சேர்த்துக்கொள்ளச் சொல்லியும் மரங் களுக்குள்ள கிரயமும் வீடுகள் பிரித்து அப்பாலே கட்டுகிறது உள்ளதும் அரும்பாதைக்குச் சொல்லி கொடுத்துவிடுகிறே னென்று சொன்னேன் அந்தபடிக்கிக் கொடுத்துவிடச் சொல் லச்சொன்னர். அப்பால் பாக்குகிடங்குக்கு வந்தேன்.

மறுபடி அழைக்கிருரென்று வந்து அழைத்தார்கள். போனவிடத்திலே இப்போ மூசியே போச்சேத்தான் தோட் டத்தை பிடித்து மரங்களை வெட்டி நெரவினதென்ன மற்றத் தோட்டங்கள் பின்னையும் வெகு சமீபமாயிருக்கிறதெல்லாம் யிருக்க என் தோட்டத்தை முன்னே பாதி சரிகட்டி மற்றப் பாதியும் இப்போ சரிகட்டுகிறது பார்த்தால் தேவரீர் யென் பேரிலே கோபமாயிருக்கிருப்போலே தோத்துதென்று சொல் லிக்கொண்டாப்போலேயும் அதேது அப்படி சொல்லுகிறது.

ஆ தோட்டம் விட்டுவைத்து உம்முடைய தோட்டத்தை மாத்திரம் வெட்டிவிட்டோமென்று கேட்டதற்கு வழுதாவூர் வாசர்படிக்கு யெதிரே ரங்கப்பிள்ளை தோட்டமுதலானதுகள் யிருக்கிறதே அதை யாராகிலும் என்தோட்டம் சமீபமா யென்று கேட்டார். ஆம் என்று சொல்லிப்போட்டோமென்று முசியே தோத்தேல், முசியே ஒசேயை கூட வைத்துக்கொண்டு துரை சொல்லி இப்படி அருமையா சொல்லும்போது நாம் அதை விசாரித்து சமீபத்திலே யிருந்தால் அதுக்கேற்றபடி நடத்தவேணுமென்று சொன்னார். முன்னே முன்னூறு துவசத் துக்கு அதிகமாயிருக்கிறதென்று நிறுத்தினார்கள். இப்பவும் உங்களுக்கு கோட்டைக்கு அதைத்தொட்டு போராட்டமா யிருந்தால் யெப்படி நடத்தவேணுமோ அப்படி நடத்துங்கள் யென்று சொன்னதற்கு முசியே ஒசேயும் முசியே தோத்தேலையும் பார்த்து அடிக்கடி பார்த்தியா மனுஷருடைய அருசயாய் பார்த்தியாவென்று அடிக்கடி அதைச்சொல்லுகிறாப்போலே யும் அதிலே நமக்கு தம்மைத்தொட்டு வந்ததல்லவென்று தோற்றினாப்போலேயும் சொல்லிக்கொண்டுவந்தார். அப்பால் என்னைப்பார்த்து மரத்தைபற்றி ஒன்றும் செய்யதேவையில்லை மேல் கிளைகளை மாத்திரம் தரிச்சி முஸ்தீது பண்ணிவை அப் பால் வாசற்படியும், திண்ணையும் கட்டியிருக்குதே அதை யிடித்துப்போட்டு அப்பால் நீல புடவைகளை கெட்டிபடுத்துகிற கூடம் முதலானதுகள் கட்டியிருக்குது அதையெல்லாம் இடித் துப்போடுமென்று சொல்லி பகலைக்குமேலாக நான் வந்து பார்க்கிறேனென்று சொன்னார். நல்லதென்று சொல்லி பாக்கு கிடங்குக்கு வந்தேன் அப்போ கேட்டிலே யிருக்கிறவன் வந்து பாகூரிலேயிருந்து உங்களுக்கு காகிதம் வந்ததென்று கபுறு சொல்லிப்போனான் அப்போ பதினோருமணி அந்த காகிதத்தை மதாம் துப்ளேக்சு அழைப்பித்துக்கொண்டு வந்தவனை அங்கே இருக்கச்சொன்னானென்று கபுறு கேட்டேன். இனிமேல் என்ன நடக்கிறதா அறியோமென்றுசொல்லி நான் வீட்டுக்கு பனிரெண்டுமணிக்கு வந்தேன்.[ ]

*1748* ஆ ஆகஸ்ட் மூ *15* உ க்கு விபவ ஸ்ரீ ஆவணி மூ 3 உ குருவாரம்.

இற்றைநாள் காலத்தாலே கொவெர்னதோர் கோயி லுக்குப்போய் பூசைகேட்டு வீட்டுக்கு வந்த உடனே நான்

போனேன் என்னசேதியென்று கேட்டார் பின்னை விந்தை யாய் ஒரு சேதியும் கேழ்விபடவில்லையென்று சொன்னேன். செஞ்சி அண்டையிலே யிருக்கிற பெத்தப்பேட்டையிலே அன்வர்திகான் சாயபு பாதர் இறங்கியிருக்கிறாரென்று வேட்டவலத்துக்காட்டை சுத்திக்கொண்டு மாபுசுகான், கயிருதிகான் முதலானவர்கள் இறங்கியிருக்கிறார்களென்றும் உள்ளே யிருக்கிற பெரியய்யர் என்கிறவன் பண்டாரி பிலத்து இருக்கிறானென்றும் துலுக்கருக்கு அசாத்தியமென்று சொல்லிக் கொள்ளுகிறார்களென்றும் பீரங்கி வேட்டு துப்பாக்கி வேட்டு சப்தம் விஸ்தாரமாய் கேழ்க்கப்படுகிறதென்றும் கேழ்விபட்டு காடுகள் வெட்டுகிறார்களென்றும், இது முதலான சேதிகள் அப்பால் இங்கிலீஷ்காரர் மனுஷர் இந்தமட்டுக்கும் இவ்விடத்திலே வந்ததில்லையென்றும் இப்படியாக எழுதி தானும் இற்றை நாள் வந்தேனென்றும் நம்முடைய வக்கில் சுப்பய்யன் நேற்று 2-ந்தேதி புதவாரம் யெழுதின காகிதம் வந்து சேர்ந்து அதிலே யெழுதியிருந்த வயணம்: அப்படியே துரைக்குச் சொன்னவிடத்திலே அவர் சொன்னது தேவனும்பட்டணத்திலிருந்து வந்த கபுறுக்காரர் சொன்னது: இங்கிலீஷ்காரர் எழுதினதற்கு நபாபு அன்வர்திகான் பதிலுத்தரம் எழுதினது ரெண்டு மூனு மாசம் போனால் பார்ப்போமென்றும் எங்கள் இராச்சியமெல்லாம் அவந்தரையாயிருக்குதென்று பந்துபஸ்து பண்ணுகிறதற்குகூட சமயமாயிருக்கவில்லை. ஆனபடியினாலே உங்களுக்கு மற்றது வரக்கூடாதென்று எழுதினதாய் சொல்லி நம்முடைய வக்கீல் அதன்பிற்பாடு அல்லோ வந்தான். அதனாலே முன்னே தானே சால்சாப்பு நடந்திருக்குமென்று சொன்னார் நான் பார்த்தேன் அதை நாமேன் தகரார் பண்ணவேணும் கல்லுமேலே வழுதலைக்காய்க்குமா வென்றால் கொத்தலாயிரம் கொடியாலாயிரம் என்று சொல்லிப்போவதே யுக்தமே அல்லாமல் நமக்கு தகரார் பண்ணவும் அதற்கு வயணம் சொல்லவும் கவையென்ன யென்று யோசனைபண்ணிக்கொண்டு அப்படிதான் ஆகவேணுமென்று சொல்லிப்போட்டு பிற்பாடு பாக்குகிடங்குக்கு வந்து பனிரெண்டு மணிக்கு வீட்டுக்குப்போகும் போது இங்கிஷ்காரர் கப்பல் மூன்று கப்பல்காரரை நெருங்கி ஓடிவருகிறதென்று சேதிச்சொன்னார்கள். ஒரு மணி வேளைக்கு வீராம்பட்டணத்துக்கு நேராய் கொண்டுவந்து வைத்து பிடித்தானென்றும் அந்த சேதி துரை மதாம் தோத்தேல்பேர் பண்

டிகையானபடியினாலே முசியே தோந்தேல் வீட்டிலே சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது வந்து சொன்னமாத்திரத்திலே சாப் பிடுகிறதை விட்டுப்போட்டு தெலெஸ்கோ எடுத்துக்கொண்டு வரச்சொல்லி மெத்தைமேலே ஏறிப்போய் பார்த்து அந்த உசி ணமம் போரமார்களை அழைப்பித்து வெள்ளைக்காரரையெல் லாம் சேர்த்து கடற்கரையிலே பீரங்கிகளையெல்லாம் முஸ் தீதுபண்ணச்சொல்லி அனுப்பி ஷேக் இப்ராமை அழைத்து மேட்டுக்கு மேட்டுக்கும் தாக்கீதுபண்ணி உள்ளூரிலேயிருந்து வெளியேபோகிற மனுஷரை ஒருத்தரையும் விடவேண்டா மென்று உத்தாரம் கொடுத்தார் அதற்கு ஷேக்கு இப்ராம் நல்லது ஒருத்தரையும் உங்களுத்தாரமில்லாமல் யேன் விடு கிறேனென்று சொல்லாமல் ரங்கப்பிள்ளை சீட்டு வருகிறதே அதற்கெப்படியென்று கேட்டான். சீட்டு வந்தாலும் விடத் தேவையில்லையென்று சொன்னதாய் எனக்கு உச்கிருமுடனே சொல்லி அனுப்பிப்போட்டு தானங்கே போய் இனிமேல் பிள்ளை சீட்டு வந்தால் பிடிக்கக் கவையில்லையென்று அந்த அந்த வழிகளில் சொல்லி அனுப்பி தன்னை துரை அழைத்து சாக்கிறதையாய் வழியிலே இருவென்று முதுகை தட்டினு ரென்றும் இந்தமட்டுக்கும் யேன் ஞுதி சொல்லவில்லையே இனிமேல் என் ஞுதி சொல்லுமென்று இப்படியெல்லாம் சொன்னும் இதுவரையிலுந் துரை யென்னை அழைத்து சொல்லினுல் நான் உத்தாரம் கொடுக்கிறதே அல்லாமல் இவனை துரை அழைத்துச்சொல்லுகிற வாடிக்கையில்லாத படியினாலே இன்றைக்கு அவரழைத்து பேசினதே யிவனுக்கு டில்லி தக்தேரினால் எத்தனை சந்தோஷமோ அத்தனை சந்தோ ஷத்தை அடைந்து இதிலே சரீரஸ்மரணை இல்லாமல்போனது. ஆனால் இவர்களையெல்லாம் சொல்ல நியாயமில்லை. இதனாலே பத்துருபாய்க்கு கைக்கட்டிக்கொண்டு தூர நிற்கிறவனை கிட்ட அழைத்து பேசினுல் அவனுக்கு உற்சாகம்வந்து சரீரஸ்மறணை தப்பிபோவது நியாயமே ஆனால் பிறபுவினிடத்திலே அந்த குணமில்லாததினாலே அவனை வெருக்கவேண்டியதென்று தோன்றியது. ஆனாலும் பிரபுவையும் வெறுக்கவேண்டிய தில்லை அவர் சுபாவம் சஞ்சலபுத்தி யென்கிறதும் விசாரணை பண்ணுகிற புத்தி அவரிடத்திலேயே யில்லையென்றும் எவன் யெந்த விசுவாசமாய் நடந்துக்கொண்டாலும் நன்றி பாராட்டு கிற குணமிருக்கிறவனிந்த ஊரிலேயும் குடியிருந்து மறியா

னென்கிறததறிந்திருந்தும் நான் விசனப்படுகிற என் புத்திக்குச் சொல்லவேணுமே யல்லாமல் மற்றபடி பின்னே ஒருத்தரையும் வெறுக்கக் கவையில்லையென்று எண்ணிக்கொண்டது மல்லாமல் நம்முடைய கிரகசாரத்தையும் சற்று நினைத்துப் பார்த்தேன்.

அப்பால் பட்டணத்திலுண்டான ஜனங்கள் விறகு விற்று போட்டுப் போகிறவர்கள், வைக்கோல் விற்று போகிறவர்களை முதலாய் மற்ற போக்கு வருத்துக்காரர் சமஸ்தமானபேரும் தாபந்தப்பட்டதை எழுதி முடியாது. இதைத்தொட்டு பட்டணங் காபிராவாய் அவரவர் சொல்லிக்கொண்டதுகளை விஸ்தரித்து எழுதுகிறதல்ல. ஆகிலும் இங்கிலீஷ்காரன் கப்பலைக் கண்டவுடனே எஜமானாக இருக்கப்பட்டவன் தானே காபிராபட்டு போக்கு வருத்து மனுஷரைக்கூட விடவேண்டாமென்றால் ஒன்றும் தெரியாமலிருக்கிற ஜனங்கள் என்னமாய் காபிராப்படவேணும்; அதுவுமல்லாமல் நம்முடைய வீட்டுக்கு எதிரே இருக்கிற மிசியனுரையும் கோயிலிலே யிருக்கத்தக்கதாக எஜமான் தானே பாதிரி அழைத்து இடம் கேட்டு அமத்திக் கொண்டால் ஒரு பொறுப்பும், ஒரு சண்டையுடா மார்க்கமும் அறியாத தமிழர் என்னமாய் பயப்படவேணும். இந்த நியாயமெல்லாம் சிறிது வெள்ளைக்காரரறிந்து அவரவர் வீடுகள் நம்முடைய வீட்டிலே முத்திரைசாவடிக்கு மேற்கே யிருக்கத்தக்கதாக யோசனைபண்ணி தீர்த்துக்கொண்டார்கள். சிறிது வெள்ளைக்காரர் வெளியே போவோமென்றால் துரை உத்தாரம் கொடாரோ என்றே அங்கலாய்க்கிறவர்களும் இப்படி வெள்ளைக்காரர் பேச்சு இத்தனை பயத்திலே உழைத்துக்கொண்டால் தமிழர்பேச்சு எழுதவேண்டியதில்லையே. நானும் சீட்டுக் கொடுக்கிற லிங்கப்பனை அழைத்து இனிமேல் ஒருத்தருக்கும் சீட்டு கொடுக்கத் தேவையில்லையென்று திட்டம் பண்ணிப் போட்டு இராத்திரி எட்டு மணிக்கு வீட்டுக்குப் போனேன்.

1748 ஆ ஆகஸ்ட் மூ 16 உக்கு விபவ ஞு ஆவணி மீ 4 உ சுக்கிரவாரம்.

இற்றைநாள் காலத்தாலே ஏழுமணிக்கு பாக்குகிடங்குக்கு போனவிடத்திலே இமாம் சாயபு குமஸ்தா அவா சாயபு

வந்தார்; இதென்ன குண்டுக்கு வெளியே போகிற மனுஷரை விடாமல் தடைபண்ணினதென்ன யென்று கேட்டார். நேற்று இங்கிலீஷ் கப்பல்கள் வந்து லங்கர் பண்ணினபடியினாலே அதைரியமாயிருக்கப்பட்ட தமிழர் வெளியே புறப்பட்டுப் போகபோகிறார்களென்று தடைபண்ணினாரென்று சொன்னதற்கு, வைக்கோல், புல், விறகுக்கு போகிறவர்கள் பட்டணத்திலே கொள்ளக்கிடையாமலிருக்கிறமட்டுக்கும் நெல்லுக்கு நாலுக்கு ரெண்டுக்கு வெளியேபோய் வாங்கிவந்த ஏழை ஜனங்களையும் வெளியிலே இருந்து பணம் கொண்டுவந்து ரூபா மாத்தவந்தவர்களையும் பல சில்லரை தினுசுகள் கொண்டு வந்து பட்டணத்திலே விற்றுப்போட்டு போகிறவர்களையும் தடைபண்ணினால் இதுதானே பெரிய காபீருவாய் ஜனங்கள் அவஸ்தை படுகிறதுமல்லாமல் வெளியிலேயிருந்து தானிய முதலான தினுசுகள் பட்டணத்துக்கு அண்ணுடம் கொண்டு வந்து விற்கிறவர்களொருத்தரும் உள்ளே வருகிறவர்களை போனால் வெளியே விடுகிறதில்லையே அப்படியிருக்க நாமேன் போகவேணுமென்று வரப்போகிறதில்லையே அப்படி வராமல் போனால் பட்டணத்துக்குள்ளே கொள்ளக்கிடைக்கப்போகிறதில்லையே அப்போ பட்டணத்துக்குள்ளே உள்ள ஜனங்கள் தனிச்சயாய் பட்டினியாயிருந்து சாகுரார்களென்று யோசனை பண்ணி இங்கிலீஷ்க்காரன் வந்து ஊரைச் சுற்றி முற்றுகைப் போட்டால் ஜனங்களுக்கு வருத்தத்தை கொண்டுவந்துவிட்டு அதின்பேரிலே பட்டணத்திலுள்ள ஜனங்கள் கூக்குறள் போடவேண்டியது. அப்படி யிருக்கிறதற்கு யில்லையே. நாம் மேலே யெழுதினபடிக்கு நடத்தினால் பட்டணத்திலே யிருக்கிற ஜனங்கள் தனிச்சயாய் கூக்குறள் போடுவார்களே அப்போ அவர்களை துரத்திவிட்டு அவரவர் வீட்டுக்குள்ளே யிருக்கிறதை சுத்தலாமென்று யோசனைபண்ணினதாய் அல்லது தெரியாமல் நடத்துகிறதாயிப்படி துரைத்தனம் பண்ணினால் நன்றாய் பட்டணங்களிலே யிருக்கிற ஜனங்கள் சுகப்படுவார்கள் யென்று இப்படிப்பட்ட கலாபவேளையிலே தான் சருதாராயிருக்கிறவனை தைரிய விவேகவிசக்ஷணத்துடனே இருந்து செய்காரியம் தவிழ்காரியம் அறிந்து சகல ஜனங்களும் சுகப்படுகிறாப்போலேயும், சத்துருக்கள் சோருமலும் அவர்களை செய்கிற உபாயங்களும் அதற்குத்தக்க ஓர்பும் நெறிப்பும் விஸ்தாரமான கேழ்வியுமிருக்கத் தேவையில்லையா?

அப்படிப்பட்ட குணங்களில்லாமலிருக்கும்போது யோகபலன் ஒன்று இருக்கிறபடியினுலே முசியே லபுர்தோனே வரவும் சென்னப்பட்டணம் வாங்கிப்போட்டுப் போகவும் இவருக்கு கீர்த்தி வரவும் இருந்ததேயல்லாமல் அவரேயானுல் சென்னப் பட்டணம் வாங்கமாட்டார். அதெப்படியென்றுல்: முள்ளிக்கா யத்தனை தேவனும்பட்டணம் சொலுதாதுகள் முதலான சறஞ் சாமிகள் கூடயில்லாமல் இருக்கும்போதுகூட. இரண்டு வருஷமே பிடித்து அஞ்சாறு ஆவறத்திப்போய் கக்ஷியிலே தான்தானே போய் தேவனும்பட்டணம் குண்டுகூட பாராமல் வந்துவிட்டார். அப்பால் ஒருத்தரம் பெண்டாட்டி வெகுப் பேரிலே போய் உதைப்பட்டு அவமானப்பட்டு இன்னம் பிராஞ்சுக்காரருக்கு கீர்த்தி வருகிறதற்கு உள்ளேயிருந்தவர் கள் பத்துபேராகிலும் புறப்படாமலிருந்தபடியினுலே யெல்லா ரும் தப்பிவந்து சேர்ந்தார்கள். இப்படி பெண்சாதியை துரைத் தனம் பண்ணச்சொல்லி பட்டணம் முழுதும் பதுலாமை போகிறுர்களென்று கடுகடுங்க துரைத்தனம் பண்ணிணுல் நன்ருய் சமயமும் கீர்த்திவரும். யோகம் ஒன்று ஒரு பே யிருக்கிறபடியினுலே யிவன் எத்தனை அந்தோமர முலவாய் நடத்திணுலும் பேயாய்க் கிழித்தாலும் கோமணத்திற்குதவு தென்று அவாசாயபு முதலான சேதியைச் சொல்லி இதிலே யிருந்து நிர்வாகம்பண்ணுகிற உம்மை சுவாமி ரக்ஷிக்கவேணு மென்று சொல்லி இவர்தானே பட்டணத்தை கொள்ளிக் கிடையாமல் போகிருனென்றும் பின்னையும் துரையுடைய அவருணத்தையும் விசாரிக்காமல் கும்பினீர் காரியங்கள் தாக்ஷி யாய் போகிறதையும் சொல்லிக்கொண்டு பேசியிருந்தார்.

அதிலே எட்டரை மணி அடித்தபடியினுலே துரை வீட்டுக்குப் போனவிடத்திலே துரை என்னைப் பார்த்து கடைக்கு நெல் வரவில்லையாவென்று கேட்டார். இன்றுதான் இருபது பொதி மாத்திரம் வந்ததென்று சொன்னேன். என்ன விலைக்கு விற்கிறுர்களென்று கேட்டார். நீங்கள் சரிபோனபடி விற்றுகொள்ளச்சொல்லி உத்தாரம் கொடுத்த ஆறு நாளைக்கு பிற்பாடு இன்றைக்குத்தான் இருபது பொதி வந்தது. இனி மேலவர்கள் கையிலே என்ன விலை விற்கிறுர்களோ அது அறிய வேணுமென்று சொன்னதற்கு என்ன விலை விற்கச்சொல்லலா மென்று கேட்டார். வழுதாவூரிலே ஆறுபடி விற்கிறமட்டுக்கும்

இவ்விடத்திற்கு வர சிலவுமுண்டே அது பார்த்துக்கொண்டு விற்பார்களென்று சொன்னதற்கு முசியே தீலார்ஷை அழைக்கச் சொன்னார். அவன் வருகிறதற்குள்ளே கோவிளத்திலே இருந்தும் மம்ரெஜ்கான் அஜாமத்கான் என்று இரண்டு பேர் பட்டாணிகள் தனுசாரிய துரைக்கு எப்போதும் கப்பலனுப்புகிறவர்கள் போன வருஷத்திற்கு பாஸ்போர்ட் வாங்கினவர்கள் இந்த வருஷத்திற்கும் பாஸ்போர்ட் வேணுமென்று முன் பாஸ்போர்ட்டும் கொடுத்தனுப்பி துரைக்குக் காகிதங்களும் அனுப்பின சம்மதியைச் சொல்லி பாஸ்போர்ட்டையும் காண்பித்துச் சொன்னதற்கு முசியே போலோவை அழைப்பித்து அவன் கையில் கொடுத்து இரண்டு பாஸ்போர்ட்டும் எழுதச்சொல்லி பழைய பாஸ்போர்ட்டையும் கொடுத்து அனுப்பிவிட்டார்.

இதிலே முசியே தீலார்சு வந்தான். அவனைப் பார்த்து நெல் சேதி என்னைக் கேட்டபடிக்குக் கேட்டார். அவனும் நான் சொன்னபடிக்குச் சொல்லி சின்னபடியினாலே ஐந்து படி விற்கச்சொல்லி உத்தாரம் கொடுக்கவேணுமென்று சொன்னார். ஒருக்காலே இரண்டு படி தள்ளிப்போடுகிறதாவென்று சொன்னதற்கு ஆனால், ஐந்தாறு நாளைக் காரியமவரவர் மனதின்படியே வித்தாலப்பால் விஸ்தாரமாய் வருத்து உண்டாயிருக்கும். அதன்பிற்பாடு வேணுமென்றால் ஒருவிலை பார்க்கலாமென்று சொன்னான். நல்லது அப்படி செய்யென்று என்னைப் பார்த்துச் சொல்லி இப்போ வந்த இருபது முப்பது பொதி நெல்லும் கூலிக்காரருக்குக் கொடுக்கச்சொல்லென்று சொன்னார்.

அப்பால் முசியே பிரீயேல் வந்தான். அவனும் இவர்கள் இரண்டு பேரும் சென்னப்பட்டணத்துச் சேதியும் இங்கிலீஷ்காரர்களுக்கு இப்போ வந்த கப்பல்களிலே வந்த மனுஷர் அந்தக் கப்பல்களுக்குத்தானே போதாதென்று கோசார சத்தூர் என்கிறவன் தேவனாம்பட்டணத்திலிருந்து வந்தவன் சொன்னானென்றும், இப்போ வந்த கப்பல்காரர் மோரீசு பார்த்துவந்ததாயும் அங்கே பிரான்சு கப்பல்கள் இருபத்திரெண்டு கப்பல்கள் இருந்ததாகவும் அதைப் பார்த்துப்போட்டு வந்தார்கள் என்று அவர்கள் பேசிக்கொண்டதாயும் சொன்னான். ஆனபடியினாலே இந்தக் கப்பல் மோரீசுக்குப் போனதினாலே மோச

மில்லை; சண்டைபண்ணினதும் மோசமில்லை. இவர்கள் கப்பலை நம்முடையவர்கள் ஐந்து கப்பல் பிடித்துக்கொண்டதும் பிசகில்லையென்று பேசியிருந்தார்கள். நானும் கூடயிருந்து அவரவர் வீட்டுக்கு அனுப்பிவித்துக்கொண்டுபோக நானும் பாக்குகிடங்குக்கு வந்தேன்.

இற்றைநாள் பதினொருமணிக்கு சேருவை பள்ளிப்பயல் முத்தும், இருபது சேவகரும் சென்னப்பட்டணத்துக்கு போனார்கள். அவர்கள் ஒரு சோனகனையும் தமிழர்களையும் பிடித்துக்கொண்டு பாதகி அண்டைக்கு கொண்டுபோனார்களென்று வழிச்சாரிகாரர் சேதி சொன்னார்கள். அவர்களின்னாரென்று யினிமேல் விசாரித்து எழுதுகிறேன்.

இற்றைநாள் பகலைக்கு மேலாக நாலுமணிக்கு துரை அழைத்தனுப்பினார், நான் துரை வீட்டுக்கு வரும்போது அவர் பல்லக்கு மேலே சுவாரியாய்க் கடைக்காரரை கண்காணிக்க இருந்தாப்போலே போனாரென்று சொன்னார்கள். ஆனால் சென்னப்பட்டணம் வாசற்படியே வருவாரென்று அங்கே போனேன். அவ்விடத்திலே அவரும் வந்தார். என்னைப்பார்த்த உடனே எங்கே வந்தாயென்று கேட்டார் நீங்கள் அழைத்தனுப்பி வைத்தீர்களே என்று கேட்டதற்கு அப்படி யோசனை பண்ணி நான் அழைக்கவில்லையென்று சொல்லி நாலடி நடந்து முசியே லாசு அன்னூத்திபத்துபேர் சிப்பாய்களில்லை யென்று சொன்னான். அதென்னவென்று கேட்டார். அப்படி ஒருக்காலும் பிசகிவரத்தக்கதில்லை சிப்பாய்கள் நானூத்திபத்து, வீரானாய்க்கன் தாலுக்கு பியுன் ஐம்பது, கர்னாடகக் கைதொக்கு துப்பாக்கிகாரர் அன்பது, ஆக அன்னூத்திபத்து பேரும் சரியாயிருக்குமென்று சொன்னதற்கு நல்லது அந்தப்படிக்கு போய் சொல்லி போடென்று சொன்னார். நல்லதென்று பாக்குகிடங்குக்கு வந்து ஷேக்கு இப்ராமை அழைக்கச் சொன்னதற்கு சேவகன் போய் கோட்டையிலே வாசலண்டைக்குப்போய் அழைக்கப்போனதற்குள்ளே இவனொரு வழியாய் வந்து கபுறுசொன்ன தென்னவென்றால்: முசியே லாசு அழைத்து 510 சிப்பாய்கள் யென்று சொன்னான், நானூத்திபத்தென்று சொல்லி அப்பால் வீரானாய்க்கன் கர்னாட்டகைதொக்குக்காரர் உள்பட மொத்தத்துக்கு 512 என்று

சொன்னதற்கு நல்லது நாளை பகலைக்குமேலே வந்து கணிதம் பிடிக்கிறேனென்று சொல்லிப் போகச்சொன்னு னென்று சொன்னபடியினுலே இனிமேல் நான் போய் நாளை யவனை கண்டு பேசவேண்டியதென்ன வென்று சொல்லி சேக்கு இப்ராமை போகச்சொல்லி பாக்குகிடங்கிலே ஒன்பது மணி மட்டுக்கும் இருந்து வீட்டுக்குப்போனேன். இற்றைநாள் இங் கிலீஷ்காரருக்கு வந்த கப்பல்களிலே சிறிது கப்பல்கள் பாயெடுத்துப் போனதாயும், சிறிது வெள்ளைக்காரரை இறக் கினவர்களை மறுபடி ஏத்திவிட்டு மறுபடி பின்னையும் 1000 பேரைக்கரையிலே இறக்கினதாய் சேதி சொல்லுகிருர்கள். இருபது கடைக்காரர் பயணம்போனுல் கூடப்போகத் தக்கதாக திட்டம் பண்ணி இருக்கிருர்கள் யென்று நாளை திங்கட்கிழமைக்கு பயணப்பட்டு இப்புரம் வருகிறதாயிருக் கிருர்கள். பாட்டைசாரிக்காரர்கள் சொன்னதாய் கேழ்விப் -ட்டேன்.[ ]

*1748* ஆ ஆகஸ்ட் மீ *18* உக்கு விபவ ஞு ஆவணி மீ *6* உ ஆதிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் கோயிலுக் குப்போய் வந்தபிறகு நடந்த அதிசயமென்னவென்ருல்: இங்கி லீஷ் கப்பலிலிருந்து மூணு வத்தல் புறப்பட்டு வீராம்பட்ட ணத்துக்கு நேராய் ஒரு பலகை இரண்டு பக்கமும் கயிறுகட்டி பெருங்கல்லாய் ரெண்டு கல்லு கட்டிவிட்டு அந்த பலகைக்கு ஒரு துளை அடித்து ஒரு கட்டைக்குச்சி நட்டு அதிலே சிகப்பு துணியை கட்டி அவ்விடத்திலே விட்டுப்போட்டு போனதாயும் அதை கொத்தளக்காரன் வந்து கபுறு சொன்னதின்பேரிலே துரை முசியே பாாதி மற்று முண்டானபேர்கள் சமஸ்த மானபேரும் மெத்தையின்பேரிலே ஏறிப்பார்த்தார்கள். அது ஏதனுலே விட்டதென்னவென்ருல் : இப்போ கப்பல் இருக் கிற யிடம் வந்து பனிரெண்டு பாகம் இந்தக் கொடி நட்டுக் குறிப்பு பார்த்தயிடம் வந்து ஆறு பாகம் கரைக்கும் கப்பலுக் கும் நடுவாய் பார்த்து ஒரு வேளை சுலுப்புக்கப்பல்கள் கொண்டுவந்து வைத்துப் பிடிக்கலாமென்று குறிப்புப் பார்த் துப்போட்டு போனதாய் துரைகள் சொல்லிக்கொண்டது மல் லாமல் துரை அவர்கள் முசியே ஒழேர்க்த உத்தாரங்கொடுத்து

பட்டின வரை அனுப்பி அந்த சின்னகொடியையும் மரத்தை யும் பிடிங்கிப்போடச்சொல்லி உத்தாரம் கொடுத்தார். அதற்கு அவன் சொன்னது இப்போ பட்டினவரும் கட்டுமரக் காரரையும் கூலி ஆள்களையும் அனுப்பிவைத்து அதை பிடிங்கி வருகிறதற்கு இங்கிலீஷ் வத்தக்காரர்கள் சமீபத்திலே திரிகிற படியினாலே கூடாது சாயங்காலம் வேளையிலே பிடிங்கிவர சொல்லுகிறேனென்று சொன்னான். நல்லது அப்படி செய் யென்று சொன்னார். அப்பால் என்னை அழைத்து கடைக்கு நெல் பொதி வந்ததாவென்று கேட்டார். பத்து பொதி நெல் லும் பதினொரு பொதி அரிசியும் வந்தது இது அல்லாமல் நெல் லுக்கு வெளியிலே ஏழை ஜனங்களெல்லாம் போய் நாலு பணத்துக்கும் ஆறு பணத்துக்கும் வாங்கிக்கொண்டு வருகிறார் கள். ஆனால் பட்டணத்திலே அரிசி கூடை விஸ்தாரமாய் வைத்து தாழ்ச்சியில்லாமல் வித்துவருகிறார்களென்று சொன் னேன். [ ]

அப்பால் எப்போதும் வாடிக்கையாய் மராட்டியர் வராதே போனார்கள். சந்தாசாயபு வராதே போனால் என்றும் அன்வர்திகான் மாபுசுகான் திருச்சினாப்பள்ளிக்கு போகவில் லையா, முருதுசல்லிகான் ஆற்காட்டை கட்டிக்கொள்ளவில்லை யாவென்றும் இது அல்லாமல் திருச்சினாப்பள்ளியை தஞ்சா வூரார், மயிசூரார், மரவன், தொண்டமான் ராமணய்யன் முதலானவர்கள் யோசனைபண்ணிக்கொண்டு காட்டு ராசாவைப் பட்டம் கட்டுகிறதாய் யோசனைபண்ணி இருந்தார்களே அது என்ன ஒன்றும் காணோமென்று இது முதலான சங்கதிகள் அவர் கேழ்க்க அவர்களுக்கு நான் பதிலுத்தாரம் கிஷ்ணை ஆர் தண்ணீர் வருகிறதினாலே சந்தாசாயபு அக்கரையிலே வந்து இறங்கினவர் இக்கரையிலே வருகிறதற்கு கூடாமல் நின்றார் களென்றும், வேலூர் மிருத்துசல்லிகானுக்குச் சயிந்தல்லிகான் போய் சமாதானம்பண்ணினபடியினாலே அவன் மெதுவிலே யிருக்கிறான். திருச்சினாப்பள்ளிக் காரியம் அவ்விடத்துக் காரியம் அவர்களுக்குச் சான்சாமிபண்ணிக்கொண்டு லகுவான பிற்பாடு அல்லோ அவனும் கோட்டை வாங்கவேணும். வேட்டவலத்துக் காட்டின்பேரிலே இறங்கியிருக்கிற மாபு சுகான் முதலான பேர் வேட்டவலம் பெரிய ராச காரியம் ஒரு மார்க்கம் பண்ணிக்கொண்டல்லோ அப்பால் இவன் திருச்சினாப்

பள்ளிக்குப் போகவேணுமென்று இது முதலான சேதியெல்லாம் சொல்ல கேட்டுப்போட்டு பெண்சாதியிருக்கிற காம்பிராவைப் போய்விட்டார். நான் அப்பால் பாக்கு கிடங்குக்கு வந்தேன்.

பதினொன்னரை மணி வேளைக்கு என்னை அழைத்தனுப்பி வைத்து மாபுசுகானைப் பிடித்துக்கொண்டார்களாம்; ஊரெல்லாம் பேசிக்கொள்ளுகிறார்களாம் நீ யரியாயாவென்று கேட்டார். நானரியேன், அப்படி மாபுசுகானை வேட்டவலம் பண்டாரி பிடித்துக்கொண்டுபோனால் இந்தமட்டுக்கும் யாருக்கும் சேதி வராதா? அது பொய்யான வார்த்தையென்றாப்போலே நீ நன்றாய் கபுரு விசாரிக்கவில்லையென்று சொல்லிப்போட்டு தாட்டி அண்டைக்குப் போய் சொன்னது:

அவன் மறுபடி திருக்கோயிலூரிலே ஒரு கோயிலிலே யிருந்தானும் அவனைப்போய் பிடித்துக்கொண்டாராம் பண்டாரத்தார் மனுஷர் போய் பிடித்துக்கொண்டு வந்தார்களாம் யென்று மறுபடி வந்து சொன்னார். அதற்கு நான் சொன்னது திருக்கோயிலூரிலே அப்துல்சல்லி உறமுறையானிருந்தவனை பிடித்துக்கொண்டுபோய் அவனைப் பன்றிகறி கூட தின்ன வைத்தாரென்பதின்பேரிலேதான் நபாபு அன்வர்திகான் முதலான பேர்கூட பவுன்சுகூட வந்து இறங்கினதென்று சொல்லி அவனைப் பிடித்து 25 நாளானதென்றும் சொன்னேன். அதன் பேரிலே தாட்டி அண்டைக்குப்போய் மறுபடி சொல்லிப் போட்டு வந்தான்.

இதிலே கோஜா சுல்தான் வந்தான். அரிசி பதினாலு பொதி வந்தது. ஆற்காட்டிலே யிருந்து வந்ததென்று உள்ளே வருவதற்கு உத்தாரம் கேழ்க்க வந்தான். எத்தனை நாளையிலே வந்ததென்று கேட்டார். நாலு நாளையிலே வந்ததென்று சொன்னான். என்னைப் பார்த்து வர்த்தகர், அனுப்புகிற சரக்கு லாலாப்பேட்டையிலிருந்து இவ்விடத்திற்கு வர பனிரெண்டு பதிமூன்று நாள் செல்லுமென்று சொல்லுகிறாயே என்று கேட்டார். எப்போதும் வாடிக்கை சுருக்காய்ப்போனால் பனிரெண்டு நாள் வாடிக்கையாய் மெதுவாய் போகிறதானால் பதினைந்து நாள் என்று சொன்னேன். தெய்வாதீனமாய் கோஜாசுல்தான் துரையைப் பார்த்து என் சரக்கு லாலாப்

பேட்டைக்குப் போனபோது பனிரெண்டு நாளாய் போன தென்று சொன்னதின்பேரிலே சும்மாய்ப் போய்விட்டார். அப்பால் பனிரெண்டு மணி அடித்த பிறகு வீட்டுக்குப் போனேன்.

வெள்ளைக்காரருக்கு புதுசாய் சட்டையும் நாலுகும்பினீருக்கு நாலு வகையாய்க் கொடுத்தபடியினாலே இதையெல்லாம் போட்டுக்கொண்டு போக வரிசையாய் நின்று பாரு திரும்பினால் யெப்படி வேடிக்கையாயிருக்குதோ பார்ப்போமென்று ஸமஸ்தமான வெள்ளைக்காரரையும் சேர்த்து பாருவைத்து வில்லியநல்லூர் வாசப்படியிலே போய் அரியாங்குப்பத்துக்கு போகிற வழியிலே இருக்கிற மூசியே போச்சேத் தோட்டத்தண்டையிலே பாருபோய் அந்த கும்பினீர் வரனும் வெவ்வேறானபடியினாலே மகா விந்தையாய்த்தானே கண்டது குதிரைக்காரர் வெள்ளைக்காரரெல்லாம் பச்சைக்கயியும் பறமாம் செகப்பும் மாற்பிலே பொத்தோம் போடுகிறவிடம் சிகப்புமானபடியினாலே அதுவும் வேடிக்கையாய்க் கண்டது. இந்த வேடிக்கை நானும் அஞ்சுமணிக்குப் போய் பார்த்துவிட்டு ஆறுமணிக்கு பாக்குகிடங்குக்கு வந்தேன். அங்கே கடற்கரை ராமசந்திரய்யன் வந்து சொன்ன சேதி என்னவென்றால், காலத்தாலே துரையவர்கள் இங்கிலீஷ்க்காரர் போட்ட குறிப்புக்கொடியை பிடிங்கி வரச்சொன்னபடிக்கு பிடிங்கிவந்தோம் துரையவர்களுக்கு கொண்டுபோய்க் காண்பித்தவிடத்திலே துரை பிடிங்கிவந்த பட்டினவருக்கு ஒன்பது விராகன் கொடுக்கச்சொன்னார். எத்தனை பாகத்திலே போட்டிருந்தது யென்று கேட்டார்; ஆறு பாகத்திலே போட்டிருந்தது யென்று சொன்னார்கள். கப்பலுக்கும் கரைக்கும் சரி பாதியென்றும் சொல்லிப்போட்டு யிரங்கிவரும்போது அம்மாள் வழியிலே பார்த்தாள். என்னை அழைத்து இதென்ன மரம் கொடி ஏதென்று கேட்டாள்; நடந்த பூர்வோத்திரம் சொன்னேன். அப்பால் அந்த சின்ன ஒரு முழத்துணியை நம்முடைய கொடியின் கீழே கொத்தளத்தின்பேரிலே கட்டி வைக்கச்சொல்லி சொல்லிவிட்டு உங்களை ரொம்ப நிந்தித்து ஊரையெல்லாம் கொள்ளையிட்டு என் ஆம்பிடியானுக்கு கொடுத்து அவனை கண்ணைமூடப்பண்ணிப்போட்டு இவன்

அப்பால் சரிபோனபடிக்கு நடக்கிறுனென்று எப்போதும் பாடு கிற பாட்டு உண்டே அதெல்லாம் பாடி என் புருஷனுக்கு இப்போதான் தெரியபண்ணினேனென்றும், அப்படி செய்யுரே னிப்படி செய்கிறேன் என்று சொன்னதையும், அதற்கு ரங்கப் பன் தப்பிதமாய் நடக்கிறவனல்லவென்று அதற்கெல்லாம் பரிகாரமாய்ச் சொன்னதையும் சொன்னுள். அந்த அம்மாகு தாயுமாயும் துரையும் தகப்பனுமாய் எண்ணியிருக்கிறேன். அவர்கள் எப்படி நடப்பித்தாலும் சந்தோஷந்தானென்று உப சாரமாய்ச் சொல்லி அனுப்பினேன் இது நடந்த சேதி [ ]

1748 ஆ ஆகஸ்ட் மீ 20 உக்த விபவ ஆவணி மீ ௯ உ மங்களவாரம்.

இற்றைநாள் காலத்தாலே முசியே லாசு வீட்டுக்குப் போய் அவனைக் கண்டு பேசின விடத்திலே தெத்திலே யிருக்கிற சிப்பாய்கள் ஆறு பங்கீடாக எழுதிக்கொடுத்தீர்களே அந்தப் படிக்கு ஷேக் இப்ராமுக்கு ஒன்று எழுதிக்கொடுக்கவேணு மென்று சொன்னுன். அப்பால் அதை விஸ்தரிக்கிறதல்ல; இதற்கு வெனே வேறேயென்று யோசனைபண்ணிக்கொண்டு நல்லது அப்படியே ஒன்று எழுதிக்கொடுக்கிறேனென்று சொல்லி லோகாபிரம்மமாய் பேசியிருந்து துரை வீட்டுக்கு வந்தேன். நேற்று நபாபு மாபுசுகான் காகிதம் நூறு மணங்கு மருந்தும், ஐம்பது மணங்கு ஈயமும் சிறிது ரெக்ளுல் (ராயல்) என்கிற பீரங்கியும் அனுப்பச்சொல்லி எழுதினபடிக்கு இன்றைக்கு சரஞ்சாமிபண்ணி அனுப்புகிறேமென்று சொன் னீர்களேயென்று எச்சரித்தேன். அதன்பேரிலே போம்படு தே யிரு பீரங்கிக்காரர் முசியே புரோல் என்கிறவனே அழைப் பித்து மருந்து முஸ்தீது பண்ணினுர். அவன் சித்தை வேணு மென்று சொன்னுன். எவ்வளவு வேணுமென்று கேட்டதற்கு நூறு சித்தைமாத்திரம் அழைப்பித்துக் கொடுமென்று சொன் னுர். நல்லதென்று சொல்லிப்போட்டு பாக்கு கிடங்குக்கு வந்தேன்.

அதிலே மாயேயிலிருந்து காகிதம் வந்ததென்று வழிச் சாரிக்காரனும் வந்து சொன்னுன். வந்த பிராமணர் சொன் னது: அவ்விடத்திலே முழை மாரி மிச்சமானபடியினுலே கப்பல்

துரைக்குக் கொண்டுவந்து வைத்துப் பிடியாமல் தலையிலே யிருந்து ஒரு பீரங்கிப் போட்டான். அந்த பீரங்கி சத்தம் கேட்டவுடனே இங்கேயிருந்து கட்டுமரமனுப்பினார்கள். கட்டு மரத்தின்பேரிலே காகிதம் வந்தது. அந்தக்ஷணம் பயணம் பண்ணி அனுப்பினார்கள். நாங்கள் வந்தோம்; எங்களுக்குக் கண்ணுக்கு எட்டின தலவிலே கண்ட கப்பலொன்றுதான். அப்பால் இரண்டு கப்பல்கள் இருக்கிறதென்று சொல்லிக் கொள்ளுகிறார்கள். மெய்யோ பொய்யோ தெரியாதுயென்று சொன்னார்கள். இப்படி பேசியிருக்கும்போது துரை அழைக் கிறாரென்று சேவகன் வந்தான். துரை அண்டைக்குப் போன உடனே அவர் ரங்கப்பிள்ளை பார்த்தாயா! இந்த இங்கிலீஷ் காரர் கப்பல்கள் வரும்போது நம்முடைய கப்பல்கள் மோரீ ஸுக்கு வந்து அங்கே சண்டைபண்ணினார்கள். அதன்பேரிலே நம்முடையவர்கள் ஐந்து கப்பல்கள் பிடித்துக்கொண்டார்கள். அப்புறம் நிற்கமாட்டாமல் ஓடிவந்துவிட்டார்கள். ஆனபடியி னாலேதான் நம்முடைய கப்பல்கள் யாத்திரை வருகிறது தாம தப்பட்டது. இந்த சமாசாரம் சொல்லத்தக்கதாக ஒரு கப்பல் மாயேயிக்கு வந்தது. முன்னேதானே இங்கேயும், தேவனாம் பட்டணத்திற்கு கப்பல்கள் வந்தவுடனே இவ்விடத்திற்கு வந்த சேதியிலே பிரான்சுக்காரருக்கும், இங்கிலீஷ்காரருக்கும் சண்டை நடந்து இங்கிலீஷ் கப்பலிலே ஐந்து கப்பல் பிடித்துக் கொண்டார்களென்றும், காயக்காரர் இங்கு இறங்கினாரென் றும், சொல்லி வர்த்தகர் மற்றுமுண்டானவர்கள் விஸ்தாரமாய் எப்படி சொல்லவேணுமோ அப்படி செய்யென்று சொன்னார். நல்லதென்று பாக்கு கிடங்குக்கு வந்தேன். அந்தப்படிக்கு வர்த்தகர் மற்றுமுள்ள பேருக்கு நம்முடைய கப்பல்களிதோ வந்தது; எப்படி சொல்லவேணுமோ அந்தப்படிக்கு சந்தா சாயபு, மிருகுலாம் உசேன் அவர்கள் வீட்டுக்குக்கூட அவரவர் கேட்டதாய்ச் சொல்லும்படியாய் அதற்கேற்ற ஆள்களுடனே எல்லாம் சொல்லியனுப்பி வைத்தேன்.

அப்பால் பதினொரு மணிக்கு மறுபடி அழைத்தனுப்பி தெல்லிச்சேரியிலிருந்து இங்கிலீஷ்காரர் தேவனாம்பட்டணத் திலே யிருக்கிற வர்த்தகர்களுக்கு நம்முடைய கப்பல் அங்கே வந்த சேதிக்கு எழுதுவார்கள். அந்தக் காகிதங்கள் அங்கே தேவனாம்பட்டணம் போய்ச் சேராமல் அந்தந்தக் காகிதத்தைக்

கொண்டுவரத் தக்கதாக சேவகரை எப்படி அனுப்பவேணுமோ அப்படி அனுப்பி அந்தக் காகிதம் கொண்டுவரத் தக்கதாக அனுப்பி வையென்று சொன்னார். நல்லதென்று வரும்போது கொண்டுவந்தால் அவர்களுக்கு நூறு வராகன் வெகுமானம் கொடுக்கிறோமென்று எப்படி அவர்களுக்கு உபசாரமாய்ச் சொல்லவேணுமோ அப்படி சொல்லி அனுப்பிவை யென்று சொன்னார். அந்தக்ஷணம் பாக்குகிடங்குக்கு வந்து கர்னாட்டக தாலூக்கு வெங்கடபதி நாய்க்கனையும் இருபது சேவகரையும் ஏற்றி போக்குவரத்துக்கு குருவப்பனென்கிற பிராமணரும், பின்னை ஒரு வைஷ்ணவ ஐயனையும் கூடக்கூட்டி இருபது நாளைக்கு வெங்கடபதி நாய்க்கன்முதல் இருபது சேவகருக்கும் ஒரு பணம் விழுக்காடு தினப்படியும் வெங்கடபதி நாய்க்கனுக்கு இரண்டு பணம் படியும், இந்தப்படிக்கு திட்டம்பண்ணி முடிப்பிறி முத்துக்கொமரப்பிள்ளை அண்ணன் மகன் சரவணன் கையில் நாற்பத்தெட்டு வெள்ளிப்பொன்னு வாங்கிக்கொடுத்து இரண்டு பிராமணருக்கு இருபது ரூபாய் வாங்கிக்கொடுத்து தெல்லிச்சேரியிலிருந்து தேவனும்பட்டணம் போகும் காகிதத்தைப் பிடித்து வந்தால் நூறு வராகன் துரையவர்கள் வெகுமானம் கொடுக்கிறோமென்று சொன்னதை அந்தப்படிக்கு இவர்களுக்கு உற்சாகப் படுத்தச்சொல்லி எந்த ரூபத்திலேயும் காகிதம் கொண்டுவர உபாயமெப்படி சொல்லவேணுமோ அந்தப்படிக்கு ஆத்தூர் தாலூக்கு முதலிப்படி வெளிச் சேலம் பரியந்திரம் உளவிலிருந்து பிடித்துவரச்சொல்லி பின்னையும் சொல்லத்தக்க உபாயமெல்லாம் சொல்லி அனுப்பி வைத்தேன். அப்பால் அந்தச் சேதியை துரைக்குப் போய் கபுறு சொல்லிப் போட்டு வரும்போது கோட்டை கும்பினியார் வர்த்தகர் கொடுத்த அமானி சகலாத்தை மறுபடி கலாபத்தைத்தொட்டு அழைப்பிக்கச் சொன்னபடிக்கு எழுதி அனுப்பினது வந்து சேர்ந்ததென்று துரையவர்களுக்கு கபுறு சொன்னதற்கு கோட்டையிலே மூசியே கோர்னேத்து வசம் ஒப்புவித்து விடச் சொல்லி சொல்லென்று சொன்னாரதற்கு நானிருந்துக்கொண்டு வந்த சரக்கு சரிபார்த்து அப்படியே கொண்டுபோய் ஒப்புவித்துப் போடச்சொல்லுகிறேனென்று சொல்லி பாக்கு கிடங்குக்கு வந்தேன்.

இற்றைநாள் பகலைக்கு மேலாக அழிச்சப்பாக்கத்தண்டையிலேயிருக்கிற தாளையமிருக்கிற சிப்பாய்கள், மலையப்பன்

சேருவைக்காரன் சேவகரும் சொல்லி அனுப்பினதென்ன வென்றால்: இங்கிலீஷ்கார்ரர் பவுன்சு சுமரி கிஷ்ணாபுரத்திற்கு இப்புறமிருக்கிற பறையன்சாவடியிலே வந்திரங்கி அங்கே யிருந்து இருபது முப்பது குதிரைச் சுவார்கள் அழிச்சப் பாக்கத்துமட்டுக்கும் வந்ததாய், அங்கே யிருக்கிற மலையப்பன் சேவகர் அதிர்வேட்டாய் சுட்டதாகவும் அந்த அதிர்வேட்டை கேட்டவுடனே குதிரைச் சுவார்கள் போய்விட்டதாகவும், இந்தப்படியாக தாட்டிக்கு கபுறு வந்து சொல்ல; தாட்டி துரைக்குச் சொல்ல அதன்பேரிலே வெள்ளைக்கார குதிரைச் சுவார்கள் துலுக்கர் குதிரைச் சுவார்கள் எல்லாரையும் பயணம் பண்ணி அனுப்பி முன்னூறு சிப்பாய்கள் அப்துலயிமான் தாலுக்கிலே இருக்கிறவர்களையும் அரியாங்குப்பம் அழிச்சப் பாக்கத்திற்குப் போகச்சொன்னார்கள். அப்பால் மூன்று மணிக்கு துரையவர்கள் சுவாரி அரியாங்குப்பத்திற்குப் போய் ஆறு மணிக்கு வந்தார்கள். மற்றபடி அன்றையதினம் நடந்த சேதி இவ்வளவு.

அப்பால் இராத்திரி எட்டு மணிக்கு அழைப்பித்துச் சென்னப்பட்டணத்திற்கு அஞ்சலின்பேரிலே போவதற்கு லேசு பல்லாக்கிலே வாறைப் போட்டு டோலி சட்டமாய் முஸ்தீது பண்ணச்சொல்லி யிருந்தேனே அது இருக்கிறதாயென்று கேட்டார். முஸ்தீதாயிருக்குதென்று சொன்னேன். அப்பால் வாசற்படியிலே போய் உட்கார்ந்தார். மறுபடி வேறே அதிசய மில்லை. நானும் வீட்டுக்கு வந்தேன்.

இதல்லாமலின்று ஐந்து மணி வேளைக்குக் கோட்டைக்கு அக்கினி மூலையிலே யிருக்கிற கடற்கரை கொத்தளத்திலே முன் கெட்டிச்சு யிருந்த பீரங்கியெல்லாம் குண்டை கழற்றிப் போட்டு பழைய மருந்தை வாங்கிப் போடுகிறதற்கு சுட்ட பாவனையாய் சிறிது குண்டு போட்டிருந்ததைக்கூட சுட்டுப் பார்த்தார்கள். இது எத்தனை தூரம் போகுதென்று அந்த சப்தம் கேட்டவுடனே பட்டணத்திலே உண்டான ஜனங்க ளெல்லாம் புறப்பட்டு கடற்கரையே யோட்டிப் பார்த்து தெளிந்தபிற்பாடு அவரவர் குதிர்ப்பட்டு வீட்டே போனார்கள்.

இற்றையநாள் பாளையக்கார மனுஷன் சென்னப்பட்ட ணத்து வழியிலே யிருக்கிற சுபான் கோவிந்தராமன் தம்பி

ஆனந்தனென்கிறவனும் இரண்டு பேரும் வெகுபேரை கோமுட்டிகள் பெண்கள் செட்டிகள் வீட்டுப்பெண்களை உங்கள் சீட்டு துரையவர்கள் கவையில்லை யென்ற பிற்பாடு அவரவர்கள் கையிலே லஞ்சம் வாங்கிக்கொண்டு வெகுபேரை விட்டுவிட்டார்கள் யென்று இதற்கு தியாகப்பசெட்டி தம்பி முத்து செட்டி யென்கிறவன் மார்பத்திலே லஞ்சம் வாங்கிக்கொண்டு விடுகிறார்கள் யென்று வந்து சொன்னதற்கு இந்த மூணு நாலு நாளும் நடந்ததெல்லாம் வயணமாய் யெழுதிவரச்சொல்லச் சொல்லி அனுப்பினேன்.

*1748* ஆ ஆகஸ்ட் மீ *21* உக்கு விபவ ஞூ ஆவணி மீ *9* உ புதவாரம்.

இற்றைநாள் காலத்தாலே அவாசாயபு வந்து நாங்களுருக்குப் போவதற்கு துரையவர்களுக்குத் தெரியப்படச்சொல்லி நாங்கள் வந்த காரியமனுகூலம் பண்ணிக்கொடுத்து அனுப்ப வேணுமென்று சொல்லி நீரானல் சொல்லுகிறதற்கு துரையவர்கள் முன் அப்படி பணம் காசு கொடுக்க யிப்போ சமயமில்லையென்று அவர் கண்டிப்பாய்ச் சொன்னதின்பேரிலே நீர் முன்னே பின்னே பார்த்துக்கொண்டிருக்கிறீர் என்று துரையவர்களுக்குப் பிராஞ்சு வார்த்தையிலே நாலு வார்த்தை எழுதிக் கொண்டோம். அதைக்கொடுக்கிறோம்; அவர் பார்த்துக்கலியாண காரியத்துக்குச் சகல சாஞ்சாமியும் தாம் சேகரித்துக்கொடுத்து நடப்பிக்கிறோமென்று எழுதினபடி நடப்பித்தாலும் சம்மதி என்று சொல்லி அல்லவென்று சும்மா போகச்சொன்னாலும் சம்மதியென்று சொல்லி இதல்லாமல் சென்னப்பட்டணத்து தினுசு நாங்கள் அப்போதானே சாயபு ஸாநாவும் சென்னப்பட்டணத்திலிருந்து ஆற்காட்டுக்குப் போகும்போதே தானே கூட கொண்டுபோகிறது அதை நீங்கள் உங்கள் தட்டு முட்டுக்கூட யெடுத்துப்போகிறது நியாயமா இங்கிலீஷ்க்காரர் வசத்திலே இருக்கும்போது சென்னப்பட்டணத்திலே யிருந்ததென்னை பிரான்சுக்காரர் வசமானப்போலே தட்டு முட்டு கூட யெடுத்துக்கொண்டு ஆற்காட்டே போனார்களென்றால் பிராஞ்சுக்காரனே இமார்சாயபு அவர்களென்றிருக்கிறபேருக்கு அழகாயிருக்கவில்லை யென்றெழுதினபடியினாலே கண்டா குண்டியாய் 4000-5000 ரூபாய் சரக்குமாத்திரம் யிருந்ததை இதை

யும் யெடுத்துப்போனல் துரையவர்கள் மனதிலே கோபமா யிருக்கப்போகுதென்று அதை மாத்திரம் வைத்துப்போனதை இப்போ கொடுக்கிறதில்லையென்கிறது உங்கள் துரைக்கு அழ கல்லவென்று உங்கள் பேச்சை சமஸ்தமான தட்டு முட்டு களையும் வைத்து சாயபு சாதாவையும் இருந்தாலே யேகத் துக்கு எடுத்துக்கொண்டு சாயபு ஸாதாவையும் வெளியே விடு கிறது பிரயாசம்போல் காணுதென்று சொல்லி நல்லது இப்போ யெழுதின பிரான்சுவார்த்தையிலே யெழுதின காகி தத்தைக் கொடுத்தால் அதை பார்த்துக்கொண்டும் ஊருக்குப் போகச்சொன்னல் இப்போதானே போரோமென்று சொன் னுர்கள்; அதற்கு நாமேன் இவருடனே மிகுதியாய் பேசவேணு மென்று அப்படிதான் சமயம் பார்த்துகொடுங்களென்று சொல்லிப்போட்டு நான் பாக்குக் கிடங்குக்கு வந்து உட்கார்ந்த உடனே துரையவர்கள் அழைக்கிருர்களென்று சேவகன் வந்து அழைத்தான் போனவுடனே சித்தை அகப்பட்டுதாவென்று கேட்டார். இருபது சித்தைமாத்திரம் அகப்பட்டது. மற்றது விசாரிக்கிருர்களென்று சொன்னதற்கு முப்பது சித்தை போதுமென்று சொன்னுர்.

அப்பால் துரையவர்களுக்கு குதிரை. சிப்பாய் ஒருத்தன் நம்முடைய பாளையம் அரியாங்குப்பத்திலே யிரங்கியிருக்கிற வர்களிலிருந்து வந்து சொன்ன கபுறு யென்னவென்றுல்: இங் கிலீஷ்காரர் பவுன்சுவந்ததெல்லாம் கர்னுட்டகத்தார் யென் றும், குதிரைகளின் பேரிலே வந்தவர்கள் இருனூறு வெள்ளைக் காரரும் கால்நடை அவர்களுக்கும் நம்முடையவர்களுக்கும் சற்று சண்டை ஆனதென்றும் அவர்கள் இப்புரம் நெருங்கி வருகிருர்களென்றும் இப்படியாக சேதிவந்து சொன்னுன் அப் பால் துரையவர்கள் என்னை அழைத்து பறையன்சாவடி அண் டையிலே யிரங்கியிருந்த பாளையக்கார சேவகர்கள் நம்முடை யவர்களுடனே சண்டைக்கு வந்தது யென்ன ஆச்சரியமென்று கேட்டார். பாளையக்கார தாலுக்கு, மலருசா தாலுக்கு, கல் யாண ராசாதாலுக்கு மனுஷர்கள் நம்முடைய சிப்பாய்கள் சற்று முறுக்கி அடித்தால் மறுபடி தேவனும் பட்டினம் போய் சேர்ந்துபோவார்களே அல்லவென்று ஒருவேளை துப்பாக்கி யெடுத்துக்கொண்டு மேற்கே கம்பிவாங்கினுலும் வாங்குவார் கள்யென்று சொன்னேன், அதுமெய்தான் வெள்ளைக்காரரே

யானல் யோசனை பண்ணவேண்டியது கர்னுட்டக கும்பல் ஆனபடியினலே நீ சொன்னபடிக்கு துப்பாக்கிகளை யெடுத்துக் கொண்டு ஓடிப்போவார்கள் யென்று சொன்னதற்கு அப்பால் முசியே பாரதி வந்த உடனே பேசிக்கொண்டு தாட்டியிருக் கிற காம்பிருவிலே போனுர் நானும் இப்புறத்திலே சாலையிலே உட்கார்ந்திருந்தேன் அப்போ சட்டைக்காரன் ஒருத்தன் குதிரை விசாரிக்கிறவன் துரைவீட்டுப்பய்யன் அவனை அரியாங் குப்பத்திலேயிருந்து சீட்டுக்கொண்டுவந்து துரை கையிலே கொடுத்தான் அதைப்பார்த்த உடனே துரை என்னை அழைத்து சிங்கிரிக்கோயில் வந்து அவர்கள் பிசாம் போட்டார்களாம் அது யெங்கே யென்றுகேட்டார். அழிச்சப்பாக்கத் தண்டை யிலே நீங்கள் வந்து பார்த்தீர்களேயென்று சொன்னேன் அதிலே தாட்டி வந்து சிங்கிரிக்கோயில் நீயறியீரு என்முன். அப்பால் நான் இப்பாலே முசியே பாரதி யின்முன் அவ்விடத் துக்கு வந்து விட்டேன் அப்பால் என்னை முசியே பாரதி பார்த்து பெண்சாதி காருபாரு இப்படி அலயுதென்று சொன்னுர். எனக் குத் தெரியாதென்றுச் சொன்னேன். அப்பால் பனிரெண்டு மணிக்கு நம்முடையவர்களெல்லாம் பின்விட்டு சுண்ணும்பு ஆற்றுக்கு இப்புரம் வந்ததாய் சேதி வந்தது, அவர்கள் பவுன்சு சற்று பலுத்து நெருங்கி வருகிறதாய் கேழ்விபட்டது அதின் பேரிலே துரையவர்கள் சீக்கிறமத்துக்கு சாப்பாடு கொண்டு வரச்சொல்லி சாப்பிட்டுவிட்டு போகிறதாய் சாப்பாடு கொண்டுவரச்சொல்லி என்னை அழைத்துச் சொன்ன தென்ன வென்முல்: அரியாங்குப்பத்துக்கு அரிசிக்கடை அனுப்பிவிக்கச் சொன்னுர். நான் சொன்னது. இருனூறு ரூபாய் அவர்களுக்கு பண்டவலங்கொடுத்து அனுப்பவேணுமென்று சொன்னதற்கு அந்தபடிக்குக்கொடுத்துக் கடைக்காரரை அனுப்பச்சொன்னுர் அப்போது தானே சாவடி அழகப்பமுதலியாரை அழைத் தனுப்பி துரை சொன்ன உத்திரவுபடிக்கு சொல்லி பரசுராம பிள்ளைகையிலே போகிறக் கடைக்காரருக்கு இருனூறு ரூபா யும் வாங்கிக்கொடுத்து யெல்லாரிடக் கடை அன்னபூரணக் கடை பின்னை ஒருக்கடை ஆக மூணுக்கடை அனுப்பி வைக்கச் சொல்ல சொல்லி அனுப்பினதற்கு இப்போதானே அனுப்பி விக்கிறேனென்று சொல்லி அழகப்ப முதலியார் போனுர்.

கப்பலொன்றும், சுலுப்பொன்றும் தேவனும்பட்டணத் திலே யிருந்து பாயெடுத்து ஓடிவருகிறதென்று கபுறு வந்து



சொன்னார்கள். துரையும் முசியே பாரதியும் மெத்தையின் பேரிலே போய்ப் பார்த்துவந்தார்கள். நானுமிந்தமட்டுக்கும் பாக்கு கிடங்கிலேயிருந்து ஒரு மணி அடிக்கிற வேளையிலே வீட்டுக்குப் போனேன்.

பகலுக்குமேலாக இரண்டு மணிக்கு துரை அழைத்தனுப் பின பிறகு நடந்தது: செஞ்சி, வேட்டவலத்துப் பாளையத்தின் பேரிலே இறங்கி யிருக்கிற மபுசுகான் பாளையத்திலிருந்து வக்கீல் சுப்பய்யன் அனுப்பின காகிதம் வந்தது. அந்தக் காகி தத்திலே எழுதியிருந்த சேதி: இங்கிலீஷ்காரர் வக்கீல் ஷேக்கு என்கிறவன் அன்வர்திகான்பேருக்கு தேவனும்பட்டனம் கொவர்னதோர் அனுப்பின காகிதம் வயணம்: தங்களுக்கு இரு பத்தாறு கப்பல் வந்ததாயும் இன்னம் பனிரெண்டுகப்பல் வருகிறதாயும் நாளது மீ 7-தேதி புதுச்சேரியின்பேரிலே போய் சண்டை பண்ணுகிறதாயும் முன்னே புதுச்சேரியை வாங்கிக்கொண்டு அப்பால் சென்னப்பட்டணம் வாங்குகிறோ மென்றும் தங்களுக்கு பன்னீராயிரம் சொல்தாதுகள் வந்தார் களென்றும் நாசர் சங்கு அவர்கள் உங்களை நாங்கள் சொன்ன படிக்கு எங்களுக்கு யெந்த விதம் மத்தத்துபண்ணவேணுமோ அந்தவிதமெல்லாம் மத்தத்துபண்ணச்சொல்லி யெழுதிக் கொடுத்த பரவானுப்படி இப்போ நடப்பிக்கவேணுமென்று இது முதலாகிய சேதி யெழுதியனுப்பினதற்கு நபாபு அன்வர்தி கான் அசவருச்சியம் தானே பண்ணிப்போட்டானென்றும் அவர்களுக்கு பதில் காகிதம் இப்போ சமயம் அல்லவென்று யெழுதினுரென்று இது முதலாகிய சேதி உசேன்சாயபு மார்பத்திலே நடக்குதென்றும், இது மாபுசுகான் அறியானென் றும் இப்படி பின்னையும் மராட்டியர் வருகிறசேதியும் சந்தா சாயபு வருகிறசேதியும் யெழுதியிருந்த வயணம்: துரையவர் களுடனே சொன்னேன். அதற்கு அவரிந்த சேதி முன்னதாக கேட்டதாய் உத்தாரம் சொன்னார். ஆனபடியினாலே மதனாந்த பண்டிதன் தாட்டிக்குச் சொல்லி தாட்டி நமக்கு முன்னையே எச்சரித்ததாக வேணுமென்று யோசனை பண்ணிக்கொண்ட படிக்கே அவன் சொல்லி இருப்பான். பெற்றதாயையோழித்தவ னூர் லோகத்துக்குள்ளே யென்று விசாரித்தால் மதனாந்த பண்டிதனென்று சொல்லுகிறார்களானபடியினாலே அதற்குத்

த்க்க புத்தியாயிருந்தான். ஆனபடியினலே நம்முடைய மேழ இருக்கிறுப்போலே யிருந்து நமக்குக் குழி வெட்டுகிற சாடை என்னமோ அன்றையதினத்தில் தானப்பமுதலிக்கும் தாட்டிக் கும் அனுகூலமாய் இவ்விடத்திலே நடக்கிற சமாசாரம் அப்போதைக்கப்போது ஒன்றுக்கு நாலாய் சொல்லி அனுப்பிக் கொண்டிருக்கிறவனிவனுக்கு சுவாமி என்னமாய் ரக்ஷிக் கிருரோ நானறியேன்.

அப்பால் துரை என்னைப்பார்த்து ரங்கப்பிள்ளே! கடற் கறையிலே இராமன் வந்து தன் பெண்சாதி பிள்ளையுண்டா யிருக்கிறுள்; பின்னையும் இரண்டொருத்தர்கூட வெளியே போகிறுர்கள். ஒரு தட்டுமுட்டு ஒன்றும் கொண்டுபோகிற தில்லையென்று சொன்னன். பரிச்சேதம்போகப்போகாதென்று சொல்லி இப்போ சமீபத்திற்கு இப்போதானே சொல்லியனுப்பி விடுகிறேன். ஒருத்தரையும் விடவேண்டாமென்று என் னுடனே சொல்லிப்போட்டு ஷேக்கு இப்ருமை அழையென்று சோப்புதாரருடனே சொன்ஞர். அதற்கு நான் உத்தாரமே சொல்லாமலிருந்த மாபுசுகானுக்கு மருந்தும், ஈயமும் அனுப்பத் தேவையில்லையாவென்று கேட்டதற்கு நீரெழுதினபடிக்கு மருந்து குண்டு தயார்பண்ணி அனுப்புகிறுமென்று எழுதி அனுப்பச் சொன்ஞர். அந்தப்படிக்கு காகிதமெழுதி அனுப்பி வைத்தோம். வக்கீலுக்கும்கூட காகிதமெழுதி அனுப்பிவைத் தேன்.

அப்பால் கோவலத்திலிருந்து மபிரேசுகான் என்றும் அச மத்துகானென்றும் இரண்டு பேர் தஞ சரக்குக் கப்பலனுப்பு கிருர்கள். அவர்கள் பாஸ்போர்ட் வேணுமென்று எழுதி யிருந்தபடிக்கு பாஸ்போர்ட் ஆனது அவர்களுக்குக் காகித மானது அனுப்பிவிடுகிறேனென்று சொன்னேன். அந்தப் படிக்கு மாபுசுகான் காகிதமனுப்புகிறதற்கும் கோவளத்தார் காகிதமனுப்புகிறதற்கும் முத்திரை பிரியேத்து வாங்கி அனுப்பி வைக்கிறேனென்று சொன்னேன். அதற்கு தாம்தானே வந்து ஒரு முத்திரை வாங்கிக் கொடுத்தார். சாயங்காலமறவாணு வாய்ப் போச்சுதென்று அறியவேண்டியது.

அப்பால் சற்றுநேரம் பொறுத்து என்னை அழைத்து நீ எங்கும் போகவேண்டாம், அடிக்கடி நானேதாகிலும் கேழ்க்க

வேண்டியிருக்கிறது; போகவேண்டாமென்று சொன்னார். நல்லதென்று உட்கார்ந்தேன். அவ்விடத்திற்கு வந்து சந்தா சாயபு பெண்சாதியைக்கொண்டு இங்கிலீஷ்காரருக்கு ஒரு காகிதமெழுதி அனுப்பப்போகாதாவென்றார். அப்படி செய்யலாமென்று சொல்லி என்னவென்று எழுதுகிறதென்று கேட்டேன். அதற்கு துரை வயணம் சொன்னது: நான் இந்தப் பட்டணத்திலே இருக்கும்போது நீ இந்தப் பட்டணத்தின் பேரிலே சண்டைக்கு எப்படி வருவாய் என் புருஷன் மராட்டியர் பவுன்கூடனே வருகிற சேதி நீ அறியாயா அல்லவென்று வந்தால் என் புருஷன் வந்து உன்னை என்ன செய்வானோ அறிந்திரு என்றும், நீ தூரம் விசாரித்துப் பார். அப்பால் அதனாலென்ன சம்பவிக்குமோ அறிவிராவென்று எழுதினால் பயப்படுவானென்று தோற்றுது: அப்படி எழுதச் சொல்லென்று சொன்னார். இந்த விவேகம் கொண்டுதானே நீர் ஜெயிக்கப்போவதென்று எண்ணிக்கொண்டு ஆனால் இது அப்படிப்பட்ட புத்திகள் காரியத்திற்கு உதவதக்கதாக அதிர்ஷ்டமென்கிற தெய்வானுகூலமென்கிற மேலாகிய தேவாம்ரதமென்கிற சாதகம் ஒன்று இருக்கும்போது விவேகமெப்படி இருந்தாலென்னவென்று யோசனை பண்ணிக்கொண்டு அப்படி இப்போ செய்கிறதற்கு சமயமல்ல. இன்னும் பார்த்துக் கொள்ளவேண்டியதென்று சொன்னதற்கு சும்மாய் கேட்டுக் கொண்டிருந்து உத்தாரம் சொன்னாரல்ல. அதன்பேரிலே நான் யோசனைபண்ணி பிரபு என்னமாய் வித்தியாசமாய்ச் சொன்னாலும் காமதை அப்படி இப்படியென்று விஸ்தரித்து எழுதுகிறதல்ல.

அப்பால் அதை விட்டுவிட்டு திரும்பியும் வந்து இங்கிலீஷ்காரர் இறங்கியிருக்கிற தலுக்கர் கிருமத்திலே ஒருத்தருக்கும் தெரியாமல் கொளுத்திவிடச்சொல்லு பத்துபேர் சேவுகரை வேஷமாறி அனுப்புமென்று சொன்னார் அதற்குநான் சொன்னது அந்தபடிக்கு அனுப்புகிறேன் அவர்கள் யேழை ஜனங்களானதே அவர்களுக்கு சேதங்கொடுக்க வேணுமென்று சொன்னேன். அந்தப்படிக்குக்கொடென்று சொன்னார். அப்பால் மலையப்பன் சேவகரை அழைப்பித்து இங்கிலீஷ்கார மனுஷர் எங்கெந்த வூரிலே காவல்வைத்தானோ அந்தந்த வூரெல்லாம் என்று சொல்லி ஒரு ஏற்பாடும் சொன்னேன், சிங்கர்கோயில்,

கீழெழிஞ்சிப்பேட்டு, மேலழிஞ்சிப்பேட்டு, பாகூர், கர்க்களாம் பாக்கம், கிருமாம்பாக்கம், பின்னையும் அண்டை அசல் கிராமங் களில் பத்து பத்து குடிசை விழுக்காடு கொளுத்திவிடச்சொல்லி இந்தப்படிக்கு கொளுத்திப்போட்டு வந்தவனுக்கு பத்து பத்து ரூபாய் கொடுக்கிறதென்று சொல்லி அனுப்பிவைத்தேன். திரும்பியும் வந்து முசியே பேர்தலமீ அனுப்பிவைத்த இந்த காகிதத்திலே யென்ன யெழுதியிருக்குதென்றுப் பாரென்று சொல்லி இரண்டு மறுஷ்டக்க காகிதம் கொடுத்தார் அந்த காகிதத்திலே யெழுதியிருந்த வயணம்:

தாலுக்கு பத்தேசிங்கு பொஸலா (அண்டையிலிருக்கிற விசாசி ரகுநாதபண்டிதர்) என்கிற பிராமணன் அப்புசுகா னுக்கு எழுதியிருந்ததாய் வயணம்:

சாதுராவுக்கு ஷேக்கு அப்துல்நபி என்கிறவனை பத்தே சிங்குபேருக்கு காகிதம் கொடுத்து அனுப்பிவைத்தீரே அந்த காகிதத்தின்பேரிலே சிறிது காரிய நிமித்தியமாய் ஷேக்கு அப்துல்நபி பிறகே என்னையும் சிறிது காசீதுகளையும் கூட்டி அனுப்பி வைத்தார்கள், நாங்களும் ஷேக்கு அப்துல் நபியும் சாவனூர் மட்டுக்கும் கூடவந்தோம் அங்கே எங்களை விட்டுப் போட்டு மைசூர் வழியாய் அப்துல்நபி என்கிறவனுங்களண் டைக்கு வந்துசேர்ந்தான் நாங்கள் ஆற்காட்டின்பேரிலே வந்து மயிலாப்பூர் சேர்ந்து அஞ்சு நாளங்கேயிருந்து உம்மைப்பற்றி விசாரிக்கிறவிடத்திலே உம்முடைய டிக்கானு அகப்படாமல் போனபடியினாலே அங்கேயிருந்து புறப்பட்டு கும்பகோணம் வந்து சேர்ந்தோம். இந்த காரியத்துக்கு இப்போ உங்க ளண்டைக்கு மனுஷரையனுப்பி வைத்தோம் நீங்களெங்கே யிருக்கிறீர்கள் உங்கள் பேட்டி நமக்கு எப்படி ஆம் அந்தச் சேதி யெழுதி அனுப்பவும் பெரிய மனுஷருடனே சொல்லி நூறு காதவழி அழைப்பித்து விருதாவாய் அவந்திரையாய் விட்டு விட்டீர் ஆனலென்ன மெத்த நல்லதானது இப்பவும் இந்த மனுஷன் பிறகே தங்கள் மனுஷனைக்கூட்டி அனுப்பி வைத்தால் நாம் வந்து தங்கள் பேட்டிக்கொள்ளுகிறோம் பேட் டியானதின்பேரிலே எல்லாசேதியும் தெரியவரும் இவ்விடத் திலே நூறு ரூபாய் கடன்வாங்கி சாப்பிட்டிருக்கிறேன் கடன் காரருக்கு கொடுத்துப்புறப்படவேணும் ஆனல் நீர் எஜமான்

பழய தேசத்திலே சொண்டு கொல்ல நினைத்ததுபோல் இருக்கிறது. எங்களெஜமான் உங்கள் காகிதத்தின்பேரிலே உங்களைத்தாங்கள் மரியாதையாய் எண்ணி நம்மையும் றிக்நார்டுகளையும் கூட்டி அனுப்பிவைத்தார்கள் திரும்பியும் நாங்கள் எங்களெஜமானண்டைக்குப்போய் சேர்ந்து உங்கள் காரியமெப்படியாகவேணுமோ அந்தபடிக்கு நடப்பித்துக்கொள்ளவும் முன்னுக்கு விஸ்தாரமான காரியமாயிருக்கிறது இதற்கு உத்தரம் சீக்கிரமத்துக்கு யெழுதியனுப்பினால் நான் புறப்பட்டு வருகிறேன் விசேஷித்து யெழுதவேண்டியதென்ன இருக்கிறதென்று யெழுதியிருந்தது.

இந்தப்படிக்கு மேலே எழுதின வயணப்படிக்குச் சொன்னேன். அதற்கு துரை உன் வசத்திலேயிருந்த காகிதம் இருக்கட்டும். அந்த பார்ப்பான் வருகிறான் விசாரியுமென்று சொல்லிப்போட்டு திரும்பியும் தாட்டியிருக்கிற காம்பிராவைப் போனார். நான் எப்போதும் உட்காரும் வராந்தாவிலே வந்து உட்கார்ந்தேன்.

இதிலே முசியே கோர்னேத் வந்தான். அவனைக் கண்டுபேசி வெளியே வந்து எத்தனை பாரம் பஞ்சு இவ்விடத்திலிருக்கிறதென்று கேட்டார். அப்பால் வர்த்தகரென்னுடனே இருபத்திமூன்று பாரமிருக்கிறதென்று சொல்லி யிருந்தார்கள். அதன் பேரிலே சற்றேரக்குறைய இருபத்தைந்து பாரமுண்டென்று சொன்னேன். இருக்கிறதை முசியே கோர்னேத் வசத்திலே ஒப்புக்கொடுங்களென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன். கும்பினீர் சரக்கு சகலாத்துகளைக் கொண்டுபோய் முசியே கோர்னேத் வசமாய் ஒப்பித்துப் போடவில்லையாவென்று கேட்டார். அதை அந்தந்த தினுசாம்படியே வெரிபிகையிட்டல்லோ கொண்டுபோய் ஒப்புவிக்க வேணுமென்று சொன்னதற்கு கட்டை பிரித்துப்போட்டீர்களாவென்று கேட்டார். கோட்டையிலே முசியே கோர்னேத் கொடுக்கும்போதே சிப்பம் சிப்பமாய் பிரித்துப் பின்னை கொடுத்தாரென்று சொன்னேன். அதன்பேரிலே நம்முடைய விழுப்புரத்து நெல் வருகிறது வடக்கே ஒத்திக்கொண்டு வரச்சொல்லென்று சொன்னார். அப்படியே வரச்சொல்லுகிறேன் என்று சொல்னேன். முந்தி வந்ததுபோக மற்றது பார்த்துக்கொண்டு அனுப்பச்சொல்லி

அனுப்பச்சொன்னார். பகலின் மேலாய்ச் சொல்லி அனுப்பி வைத்தேனென்று சொன்னேன்.

இதிலே துரையவர்கள் மறுபடி உள்ளே போய்வந்து இங்கிலீஷ்காரர் என்ன மெத்த தொந்திசுபீண்ணுகிறார்கள் என்று கேட்டார். நீங்கள்தானே சொன்னீர்களே சீர்மை ஓடுதி அவர்களுக்குச் சண்டைக் கொடுக்கச்சொல்லி வந்து இருக்கிறமட்டுக்கும் சண்டைக் கொடாமல்போனால் அவர்கள் சீர்மையிலே தூக்கிப்போடுவார்களென்று சொன்னீர்களே இதுவுமல்லாமல் முன்னிருந்த கெறேபென் முதலானபேருக்கு சண்டை பண்ணாமல் சும்மா யிருந்ததினாலேயும் பிரத்தியக்ஷமாய் எட்டு கப்பல்கள் முன்னேவந்து பன்னிரெண்டு மணி நேரமிருந்து அப்பால் போனதைத் துடர்ந்து பிடியாமல் விட்டு விட்டதற்கு கனமான நேரம் வருமென்றும் சொன்னீர்களே அப்படியிருக்க இப்போ வந்தவன் கையிலே ஆனமட்டுக்கும் சண்டை பண்ணினான். அவர்கள் பலத்து இருந்தபடியினாலே கூடாதே போனதென்று சொல்ல ஒரு ஞாயம்வேணுமே அதினாலேயிப்படி அப்படி குதித்துத்தான் ஒருத்தருக்கு உத்தரஞ் சொல்ல உண்டாக்கிக்கொண்டு இதிலே நம்முடைய கப்பல்கள் வந்து தானால் அந்தப்பழியை சொல்லிப்போட்டு பங்காளத்தே போய்விடுகிறானே யென்று சொன்னதற்கு மெய்தான் நீ சொன்னது அப்படித்தான் நடக்குமென்று சொல்லி வர்த்தகர் பட்டணத்திலுண்டான சந்தாசாயபு, மிருகுலாமுசேன் அவர்களுக்கெல்லாம் நீ சொல்லுகிறதென்னவென்றால்: இந்த குண்டு வருகிறதற்கா பயப்படுகிறீர்கள்? அப்படி குண்டு வந்தால் நம்முடைய குண்டுக்குள்ளாக சேனையிடம் விஸ்தாரமாயிருக்கிறது அங்கே போயிருக்கலாமென்று சொல்லென்று சொன்னார் அப்படியே சொல்லுகிறேனென்று சொன்னேன் திரும்பியும் வந்து நபாபு இங்கிலீஷ்காரருக்கு மத்தத்து பண்ணுவானாயென்று கேட்டார். மாபுசுகான் அபிப்ராயம் தெரிந்திருக்கிறது. உங்கள் பர்த்தியிலே இருக்கிறானவர்கள் பர்த்தியிலே இருந்த மமுதல்லிகான் திருச்சினாப்பள்ளியிலே இருக்கிறான் கிழவன் சுபாவம் எவர்களையெப்படிப்போனாலும் நம்மை தப்பித்துக்கொள்ளுவோமென்கிற ப்ரக்ருதி இப்படி சுபா பண்ணுகிறவர்களுடனிப்படி இருந்ததென்ன வென்றால்: உம்முடைய அதிர்ஷ்டம் பலவந்தமாயிருக்கிறபடியினாலே சுபா பண்ணு

கிறவர்களுக்கு பிரிக்கு புத்தியும் சத்துருவாயிருக்கப்பட்டவனுக்கு ராமரதுபட்டமும் வந்தது மற்றபடி நடக்கிற காரியம் யெப்படி, யெத்தனை ஏத்தி தாழ்த்தியாயிருந்தாலும் எதிராளிக்கு அபஜெய காலமும் உமக்கு ஜெயகாலமும் இருக்கும் போது எதிராளி யெத்தனை கெட்டிக்காரராக இருந்தாலும் கையாலாகாதவனாக ஆக்கிப்போடாதா? யெத்தனை கையாலாகாதவனையும் ஜெயகாலமு மிருக்கும்போது எத்தனை கெட்டிக்காரனாக ஆக்கிப்போடாது? அது உங்களுக்கு நன்றாய் தெரியும் இதுவல்லாமல் முசியே லபுர்தோனே யென்ன சண்டை பண்ணி வாங்கினான் இரண்டுபேரவர்களிலே செத்ததுண்டு இவர்களிலே செத்ததுண்டா? அல்லவென்று பதினைந்து இருபதுநாள் சண்டைப்போட்டு ரஸ்துயில்லாமல் விட்டுவிட்டானா? ஒருநாள் பத்து போம்பு போட்டதே பயித்தியம் பிடித்தாள் போல் எல்லாருக்கும் கலங்கி பலவந்தமாய் சொல்லி அனுப்பி கோட்டையை ஒப்புவித்துபோட்ட மேஸ்தர் மாசு இப்போ நோஸ்தனாய் குருக்கும் நெடுக்குமாய் பெண்சாதியை வருகிறவனுடனே ஸ்னேகம் பண்ணச்சொல்லி அவர்களைக் கொண்டு தன்னைதொட்டு நேரமில்லையென்று பரிகாரம் பண்ணிக்கொள்ள தெரிகிறது தேவரீருக்கு தெரிந்திருக்கும்போது நான் சொல்லவேண்டியதென்னவென்று சொன்னதற்கு சென்னப்பட்டணத்துக்காரியம் நீ சொன்னாப்போலே யென்ன சண்டை பண்ணி நிருவாகமில்லாமல்கொடுத்துவிட்டானென்று சொல்லி முசியே லபுர்தோனேயுங் கெவுனர் மாசும் உளவின் பேரிலே திரிகிற நிமித்தியம் பட்டணத்தை கொடுத்துவிட்டார்களே யல்லாமல் இல்லாவிட்டால் சென்னப்பட்டணம் வாங்குகிறதென்ன விளையாட்டிலேஇருக்கிறதா? அதிலே இந்த சண்டைசாமான்கள் தின்பண்டமானதுகள் பத்து வருஷத்திற்கு சண்டைகொடுத்தாலும் உண்டென்று சொன்னார்.

அதிலே முசியே பாதி வந்தானவனுடனே பேசியிருந்து உள்ளே போனார். இதிலே பல்லக்குகொண்டுவந்து வைக்கச் சொல்லி வெளியே புறப்படுகிறதாயிருக்கும்போது என்னைப் பார்த்து வழிகளுக்கெல்லாம் சொல்லியனுப்பி நாளையதினம் மனுஷர் மாடுகள் ஒருத்தரையும் விடத்தேவையில்லை வெளியே நெல் பொதி கொண்டு வருகிற, போகிற மாடுகளை மாத்திரம் விட்டுவிடச் சொல்லுமென்று சொல்லிவிட்டு சாரிபோனார்

அப்பால் பாக்கு கிடங்குக்கு வந்து தெத்துவாசலுக்கெல்லாம் துரை யவர்கள் சொன்னபடிக்கு மேட்டுக்கு, மேட்டுக்கும் சொல்லி அனுப்பிவிட்டு கோவளத்துக்கு அசமதுகான் நமரெசுகான் அவர்களுக்கு யெழுதின பாசுபோர்ட்டை அவர்கள் மனுஷர் கையிலே கொடுத்து அவர்களுக்கு காகிதமும் கொடுத்து மாபுசுகான் வக்கீல் சுப்பய்யனுக்கு கொண்டுபோகிற காகிதத்தின் பிறகே இவர்களையும் கூடப்போகச்சொல்லி அனுப்பி வைத்து தேதண்ணீர் கொண்டுவரச் சொன்னபோது பெத்து நாய்க்கன்வந்து சொன்னது கோவளம் அசமத்துகான் நமரேசுகான் அவரவர்களுடைய பாசுபோர்டு இரண்டுக்கும் முசியே போலே நூறு ரூபாய் கேட்டானே அதின்பேரிலே நீங்கள் சொல்லச் சொன்னீர்களென்று தெரியச் சொன்னதின்பேரிலே தொண்ணூறு ரூபாய் வாங்கிக்கொண்டான் மத்த பத்து ரூபாயுங் கொண்டுவந்தேன் என்று மதானந்தபண்டிதனுடனே சொன்னதற்கு யென்னை யெடுத்துக்கொள்ளச் சொன்னார் என்று சொன்னன் அப்படி செய்யுமென்று சொன்னேன் இந்த இரண்டு பாசுபோர்டுகளுக்கும் மதனாந்தபண்டிதன் அசமத்துகான், நமரோசுகான், மனுஷர் கையிலே பாசுபோர்டு ஒன்றுக்கு நக்ஷத்திர விராகன் இருபது விராகன் விழுக்காடு அறுபது விராகன் வாங்கிக்கொண்டு விராகன் ஒன்றுக்கு ரூபாய் 345 ஆக கூட்டின ரூபாய் 207 முசியே போலேவுக்கு கொடுத்து இரண்டு பாசுபோர்ட்டுக்கும் கொடுத்தது ரூபாய் 90 போக நீக்கு ரூபாய் 117 க்கு பெத்துநாயக்கனுக்கு கொடுத்த ரூபாய் 10 போக நீக்கி மதனாந்தபண்டிதனெடுத்துக்கொண்ட ரூ 107 இதல்லாமல் தானிந்த பாசுபோர்ட் வாங்கி கொடுக்கிறதற்கு மதுரைக்கும் பத்து விராகன் நசர்வுண்டென்று இதல்லாமல் தனக்கு பத்து ரூபாய் உண்டென்று வேறே இந்தப்படிக்கு வாங்கினான்; நான் அறிந்தும் சும்மா யிருந்தேன். அதென்னவென்றால்: இவன்பேரிலே குற்றம் சுமத்தி துரைக்கு யாதொரு சமயத்திற்கு சொல்லத்தக்கதாக நானறியாததுபோலே இந்தப்படிக்கு பாசுபோர்ட் வாங்கிக்கொண்டு போன மனுஷர் கையில் எழுதி வைத்து உபசாரமாய் வாங்கி வைத்தேன். இது மாத்திரமா? இவன் கழுத்துக்குக் கயிர் போடவேணுமானால் கும்பினீருக்குப் பரபத்தியம் அல்லிநக்கிம் சாயபை கேட்ட சம்மதியைக் கொடுத்துப்போட்டதற்கு அவன் வாயினாலே தானே இந்தக்ஷணம் சொல்லவைப்பேன். இந்தக்ஷணம் ஊர்

கடக்க துரத்திவிடுகிறதுமல்லாமல் பெரியவர்களைக்கூடவரும். இதுமாத்திரமா? படேசாயபு தட்டுமுட்டு உளவாயிருந்து அனுப்பிப்போட்டு ஐந்நூறு ரூபாய் வாங்கிக்கொண்டான். இப்படி ஆயிரமாயிரமிப்படியெல்லாம் இவன் செய்ததை மனம் பொருத்துப் பார்த்தாலும் எப்போ இவன் நம்மைக் கெடுக்க நினைத்து நடத்தினுனே இவனுக்கொரு பொல்லாப்பு செய்து ஊரைக் கடக்க தெருத்தவேணுமென்று இன்றையதினம் நினைக்கிறேன். சுவாமி நாளை என்ன புத்தி கொடுக்கிருரோ நானறியேன். அப்பால் ஐந்து மணிக்கு இங்கிலீஷ் வத்த லொன்று வந்து துறை அளவு பார்த்தான். அதைப் பார்த்து ஒரு பீரங்கி சுட்டான்; தப்பிப் போய்விட்டது.

1748 ஆ ஆகஸ்ட் மூ 22 உ க்கு விபவ ஞு ஆவணி மூ 10 உ குருவாரம்.

இற்றைநாள் காலத்தாலே என்னை துரையவர்களழைத் தனுப்பிவைத்து என் பெண்சாதி பிள்ளைகளைக் கொண்டுபோய் உங்கள் வீட்டுக்கு எதிரே பாதிரிகோயிலிருக்கிறதே அந்தக் கோயிலிலே கொண்டுபோய் வைக்கிறேன். இதிலே அந்த வீட்டின்பேரிலே போடுகிறதற்கு நேற்று சொன்ன இருபத் தைந்து பாரமும் (பஞ்சும்) அந்தக் கோயிலிலே சேர்த்துப் போடச்சொல்லி உத்தாரம் கொடுத்தார். அந்தப்படிக்கு முசியே கோர்னேத்தை அழைப்பித்து இருப்பத்தைந்து பாரம் பஞ்சும் கும்பினீருக்கு பாரம் ஒன்றுக்கு இருபத்தாறு விலைக்கு வாங்கினுர்களே அந்த விலைப்படிக்கு வாங்கிகொண்ட தாய் ரசீது யெழுதிக்கொடுக்கச்சொல்லி சொன்னுர். அதற்கு முசியே கோர்னேத்தை பார்த்து ஒரு மனுஷரை அனுப்பி விரை பிடித்துக்கொள்ள சொல்லுமென்று சொன்னேன்; அந்த படிக்கு துரையைபோய் கேட்டான். கவையில்லை ரங்கப்பன் பொய்சொல்லுகிருனு இருபத்தைந்துபாரம் பஞ்சுக்கும் ரசீது கொடுத்துவிடு யென்று சொல்லிப்போட்டு என்னைப்பார்த்து எத்தனை மூட்டைக் காணுமென்று கேட்டார். சூரத்து கட்டல் லவே இவ்விடத்திலே கட்டிவந்ததல்லவா நூத்திமூணு கட்டு யென்று வர்த்தகர்கள் சொன்னுர்களென்று சொன்னேன். அந்த படிக்கு முசியே கோர்னேத்து இருபத்தைந்து பாரம் பஞ்சும்

ம்றுத்தி ஒப்புக்கொண்டதாய் விலேமாத்திரம் முசியே துப்ளேக்சு சொல்லுகிறபடிக்கு யென்று ரசீதிலே யெழுதிக்கொடுத்தான் அந்த ரசீதையும் இராமகிருஷ்ண செட்டி வசத்தில் ஒப்பு வித்துவிட்டு பஞ்சை கொண்டுபோய் மிசியோனேர் கோயி லிலே சேர்த்துப்போடச்சொல்லி இரண்டு கும்பினீர் சேவ கரையும் கூட கூட்டி அனுப்பிவைத்தேன். அந்தபடிக்கு நூத்திமூணு மூட்டையும் பாதிரிகோவிலில் சேர்த்து எண்ணி ஒப்பித்துப்போட்டோம். அவர்களும் வீட்டின்பேரிலே கொண்டு போய் போட்டு தீர்த்தார்களாம் என்று வந்து கபுறு சொன் ஞர்கள். அப்பால் வீட்டுக்கு வீட்டுக்கு முப்பது நாற்பது குடம் தண்ணீர் வைக்காவிட்டால் அவனே ஆக்கினே அபராதம் வரு மென்று தமுக்குப் போடச்சொன்ஞர். அப்பால் நயஞருக்கு தாக்கீதுபண்ணி பட்டணத்தை பத்திரமாய் காக்கச்சொன்ஞர். அந்தபடிக்கு தமுக்குக்காரனே அழைப்பித்து வீட்டுக்கு வீடு (தண்ணீர்) முப்பது குடத்துக்குமேலே எவ்வளவு அதனம் வைத்தாலும் சரி அதற்கு குறையாமல் வைக்காவிட்டால் ஐம்பது அடி அடித்து இரண்டு காது மறுத்து அவர்களாஸ்தி யும் பிச்சைக்காரருக்கு கொடுத்துவிடுவார்கள். இந்தபடிக்கு துரையவர்கள் கட்டளேயென்று தமுக்குப்போடச்சொன்னேன். அந்தபடிக்கு தமுக்குப்போட்டார்கள். அப்பால் பெரியண்ண நயினுரையும் வீராநாய்க்கரையும் அழைத்து நூறு சேவகரை வைத்து பத்திரமாய் பட்டணத்தைக் காக்காவிட்டால் உங் களே தூக்கிப்போடுவோமென்று துரையவர்கள் சொல்லச் சொன்ஞரென்று சொன்னேன். அதற்கு சேவகருக்கு சம்பளம் கூட்டிக்கொடுக்கவேணுமென்று கேட்டார்கள். நல்லது கும்பி னீரிலே முன் கூட்டி கொடுத்திருக்கிறது. இப்பவும் துரையவர் களுக்குச்சொல்லி அப்படியே கூட்டிக்கொடுக்க சொல்லு கிறேன். அல்லாமல் நீங்கள் சமயத்திலே மனுஷருக்குப் பாரா மல் வைத்துக்கொண்டு பட்டணத்தை பத்திரமாய்க்காருங்க ளென்று சொன்னேன். அப்படித்தானே செய்கிருேமென்று சொல்லிப்போஞர்கள். அப்பால் பாக்கு கிடங்குக்கு வரவேணு மென்று இருக்கும்போது துரை வந்து எங்கே யெழுந்திருந்து போகிறீர்? இங்கேயிருந்து அவர்களே அழைத்து உத்தாரம் கொடுக்கிறதெல்லாம் கொடுத்து இங்கேதானே இருவென்று சொல்லிவிட்டு உள்ளே போஞர்.

மறுபடி வந்து நானிங்கேயிருந்து அடிக்கடி அவர்களை அழைப்பித்து உத்தாரம் கொடுக்கிறதற்கு இந்த வேளை பொசுங்காது ஆனபடியினாலே நான் கோட்டையிலே யிருக்கப் போகிறேன் நீயும் இராத்திரி பகலென்னுடனேகூடக் கோட்டையிலே இருக்கவேணுமென்று சொன்னார் நல்லது அப்படியே யிருக்கிறேனென்று சொன்னேன். அப்பால் கப்பல்களெல்லாம் பாயெடுத்து ஓடிவருகுதென்று அடிக்கடி கபுறு வந்தது. அதன்பேரிலே துரையவர்கள் முசியே பாரதியை அழைத்துக்கொண்டு கடற்கரை மூலை கொத்தளத்துக்குப்போய் அங்கே இருந்து கப்பலைப் பார்த்து வந்ததும் தம்முடைய வீட்டு தட்டுமுட்டெல்லாம் அப்புறத்திலே சாக அனுப்பிவைத்தார். தம்முடைய பெண்சாதி பிள்ளைகள் போயிருக்கிறதற்கு பாதிரி கோயிலுக்கு சகல சாமானும் கட்டில் மெத்தை உள்பட அனுப்பிவிட்டார். இதிலே தறுவாடி நாகப்பட்டணம் நெறவேறுமோ நெறவேராத உண்டி காகிதத்துக்கு பதினைந்து நாளுமானதென்று பணம் கேழ்க்க வந்த துரை அவர்களுக்கும் மச்சிலிபந்தருக்கு உண்டிகை கொடுத்த பதினாயிரம் ரூபாயும் உண்டாவணி நானூத்தன்பது ரூபாயும் கொடுத்ததிலேயே அதற்கு வந்ததாய் தோன்றி என்னை அழைத்து அந்த உண்டிகை சம்மதிக்கு வட்டத்தைத் தீர்த்துப்போட்டு முசியே கில்லியார் கையிலே வாங்கி கொடுக்கச்சொன்னேன் ஏன் கொடுக்கவில்லையென்று கேட்டார் நீங்களனுவலின்பேரிலே இருந்தீர்களே அதைத்தொட்டு சொல்லவில்லையென்றுசொல்லி வட்டம் நூத்துக்கு முக்கால் பந்தர் ரூபாயிக்கு புதுச்சேரி ரூபாய்க்கும் ஆகத் தீர்த்துப்போட்டேனென்று சொல்லி அந்த படிக்கு ஒரு தினுசு பண்ணிவைத்துக்கொண்டு வருகிறேனென்று சொன்னதற்கு நூத்துக்கு ஒன்றேகால் வட்டம் பந்தரிலே நடக்குதாம் அப்படி கொடுக்கவேணுமென்று சொன்னாரதற்கு நான் சொன்னது இது தருவாடி சம்மதிக்கவேயில்லை உங்களுக்கு கோபம் வரப்போகுது யென்று அவனுக்கு ரொம்ப தெரியபடச்சொல்லி இனி ஒரு காரியத்திலே ஆகிலும் உனக்கு நான் கூடிவர பண்ணுகிறேனென்று சொன்னதற்கு கும்பினீர்மேல் இப்படி உண்டிகை நான் கொடுத்தால் உங்களெஜமான் ரொம்ப கோபம் பண்ணுவாரென்று சொல்லியிருக்கிறேனென்று சொன்னதின்பேரிலே முசியே கில்லியாலை அழைப்பித்து ஓர் தினுசு யெழுதிவரச்சொல்லி கையெழுத்துப்போட்டு

கொடுத்தார். ஏகத்துக்கு உண்டிகை உள்பட பதினாயிரத்தி முன்னூத்தி எழுபத்தைந்து ரூபாய்க்கு எழுதின ஓர்தினுசிலே தருவாடிசெல்லெழுதிவைத்து நம்முடைய இளைச்சியப்பன் கையில் கொடுத்து முசியே கில்லியாரண்டைக்கு அனுப்பி பதினாயிரத்திமுன்னூத்தைம்பது ரூபாயும் வாங்கிவந்து இந்த உண்டிகை சம்மதிக்குப் பதினாயிரம் ரூபாய் தருவாடி கையில் ரசீது வாங்கிக்கொண்டு நாம் அவருடைய அவசரத்திற்கு கொடுத்திருந்ததற்கு பதினாயிரம் ரூபாயும்யெடுத்துக்கொண்டு முன்னூத்தைம்பது ரூபாயும் தருவாடி கையிலே கொடுத்து தீர்த்துப் போட்டதற்கு தாமெழுதிக்கொடுத்த பதினாயிரம் ரூபாய் ரசீதும் கொடுக்கச்சொல்லி கேட்டார். வீட்டிலே-யிருக்கிறது கொடுத்தனுப்புகிறேனென்று சொன்னதற்கு நான் ஓர்தினுசிலே கையெழுத்துப் போடும்போதே நான் எழுதிக்கொடுத்த ரசீதை வாங்கிக்கொண்டு கையெழுத்து போட்டுகொடுத்து பணத்தை உம்மை வாங்கிக்கொள்ள சொல்லவேணும். அதற்கு பேதகமில்லாதபடியினாலே பின்னை வாங்கிக்கொள்ளுவோமென்று கையெழுத்துப் போட்டால் இப்போ பணம் நீர் பற்றிக் கொண்டும் ; அயன் ரசீதுக்கு அட்டி சொல்லுகிறதல்லவென்று சொன்னார். பந்தர் உண்டிகைக்கு எழுதிக்கொடுத்து கொடுத்த மாத்திரத்திலே பணம் வேணுமென்று சண்டைப் போட்டீரே அப்போ என் கை பணம் கொடுத்து இப்போ கும்பினீரிலே நான் வாங்கிக்கொள்ளுகிறப்போலே ஆனதே உண்டாவணியிலே நீர் பத்து பணம் அனுபவிக்கிறபடியினாலே எனக்கு வரவேணும். ஆனாலும் உம்முடைய சிநேகத்தைக் குறித்து அதுகூட நான் கேட்கவில்லையென்று நியாயம் சொல்லி இராத்திரிக்கு அனுப்பிவைக்கிறேனென்று சொல்லி அனுப்பிவைத்தேன்.

அப்பால் நாகப்பட்டணம் உண்டிகைப் பணம் உன் கைப் பணம் துரையைக் கேட்டு வாங்கிக் கொடுக்கவேணுமென்று சொன்னாரிந்த கவிபியிலே இப்போது கேழ்க்க சமயமல்ல ; நாளைக்கு ஆகட்டுமென்று சொல்லிப்போகச் சொன்னேன். அப்பால் முசியே துலோராம் தமக்கு இருபது முப்பது மூட்டை பஞ்சுமாத்திரம் கொடுக்கவேணுமென்று கொம்மணமுதலி மகனையும், சின்னய்யசெட்டியையும் அனுப்பிவைத்தார். இந்த வேளையிலே அசப்படுமா ? இருந்த பஞ்சு துரை வாங்கிக்

கொண்டு மிசியேனேர் கோவிலின்பேரிலே கொண்டுபோய்க் காப்பிரிகளிருந்து அடிக்கியும் தீர்த்துப்போட்டார்கள். இனி ஏதாகிலும் பஞ்சுக்காரர்கள் வீட்டிலே இருந்தால் இருந்ததே யல்லாமல் கும்பினீர் வர்த்தகர் கையில் இல்லையென்று சொல்லி அனுப்பி வைத்தேன்.

அப்பால் துரை இருந்துக்கொண்டு நேற்று சொன்ன ஜாடை படிக்குச் சந்தாசாயபு மகனைக்கொண்டு தேவனும் பட்டணம் குவர்னதோருக்கு எழுதிவைத்து அனுப்பச்சொன்ன படிக்கு அனுப்பவில்லையாயென்று கேட்டார். நேற்று உங்களுடனே அப்படி சமயம் வந்தால் பார்த்துக்கொள்ளவேண்டியதென்று சொன்னதற்கு நல்லதென்று சொன்னுப்போலே இருந்தது. ஆனபடியினாலே நிருத்திப்போட்டேன். இப்பவும் இன்னும் நடக்கிற காரியத்தைப் பார்த்துக்கொண்டு செய்யலாமென்று சொன்னதற்கு அப்படியல்ல; இப்போதானே செய்யவேண்டியதென்று சுருக்காய்ச் சொன்னார். இதிலே நாமேன் இரட்டிக்கவேணும் அவருக்கு கோபம் வரவேணுமாவென்று மனதிலே எண்ணிக்கொண்டு அப்போ பதினொண்ணரை மணி ஆனபடியினாலே பாக்கு கிடங்குக்கு சந்தாசாயபு வீட்டு முசத்தி ராசோபண்டிதனை அழைப்பித்து உங்கள் எஜமான் சந்தாசாயபு மகன் காகிதமாய் தேவனும்பட்டணம் குவர்னதோர் பேருக்கு காகிதமெழுதி அனுப்பவேணுமென்று சொன்னதற்கு, என்னவென்று எழுதவேணுமென்று கேட்டான். அதற்கு எழுதவேண்டிய வயணம் சொன்னது: நாங்களும் நபாபு அல்விதோஸ்துகான் மற்ற முதலான குடும்பமாய் ஐம்பது குடும்பமாத்திரம் நாங்கள் இந்தப் பட்டணத்திலே இருக்கிறது நீங்கள் அறிவீர்களே அப்படி அறிந்திருந்தும் நீங்களிந்தப் பட்டணத்தின்பேரிலே சண்டைக்கு வருகிறதாய் கேழ்விப்பட்டோம். அப்படி வராமலிருந்தால்தானுச்சுதே அல்லவென்று வந்தால் என் தகப்பனார் சந்தாசாயபு எண்பதினாயிரம் குதிரையுடனே வருகிற சேதி கேழ்விப்பட்டிருக்கிறீர்கள். அப்பால் உங்களுக்கு அதற்கு தக்க பலனை அனுபவிக்கப் போகிறீர்கள். அப்படி வராமல் நடத்திக்கொள்ளும் என்று எழுதியனுப்பவேணுமென்று சொன்னேன். அப்பால் அவன் நகைத்து அதற்கு பதிலுத்தாரம் நபாபு அல்விதோஸ்துகான் மகன் சென்னப்பட்டணத்திலே இருக்கும்போது தானே பிராஞ்

சுக்காரர் பட்டணம் பிடித்தார்களே அதற்கு பிராஞ்சுக் காரரை என்ன செய்து போட்டீர்களோ அது எங்களுக்கு மாகுதென்று எழுதினல் அப்பால் அதற்கு எழுதவேண்டிய தென்ன? அப்படி எழுதாவிட்டால் உங்கள் கையிலே ஆகிறதை நீங்கள் செய்யுங்கோள் நாங்களும் ஆஜராயிருக்கிருேமென்று எழுதினுனல்லவென்று உங்களுக்கு பயமிருந்தால் வெளியே புறப்பட்டுப் போய்விடுகிறதுதானே யென்று எழுதினல் அதற் கென்ன உத்தாரம் சொல்லுகிறது. பயங்தெழுதினதாய் அவனுக்குத் தோணுமேயல்லாமல் மற்றபடி பின்னையொன்று மாய் தோற்ருது. இந்தப் பேச்சுக் கேட்டதும் எனக்குத்தான் பயமாயிருக்கிறது. அப்பாலே எங்களெஜமானிகள் நாங்கள் பெண்டுகளாச்சே பின்னையொரு சாதியார்ப்போலே ஆண் பிள்ளைகள் முன்வே போக்குவரத்தா யிருக்கக்கூடாமல் ராணி வாசமாயிருக்கிற சாதியானதே. அப்போ குண்டுவந்து விழுந் தால் நாங்கள் தெருவிலே எப்படி அந்நேரத்திலே ஓடப் போகிருேமென்று இப்போதானே வெளியே போகிருேமென்று கேழ்ப்பதற்கு அட்டி சொல்லுவானேன். உங்கள் துரைகள் பெண்சாதி இருக்கிறதற்கு பயந்துதானல்லோ உங்கள் வீட்டு அண்டையிலே இருக்கிற கோவிலை முஸ்திதுபண்ணதுமல்லா மல் மேலேகூட இருபத்தைந்து பாரம் பஞ்சுகூடப் போட்டு நனைத்து சேராமல் வைத்திருக்கிறது. எங்களுக்கு எந்த வீடும் எந்த பஞ்சு மூட்டையுமிருக்கிறது. இதிலே ஆயிரம் பங்கிலே ஒரு பங்கு ஜனங்கள்பேரிலே பச்சாதாபமிருந்தால் சகல ஜனங்களும் பிழைத்துப் போவார்கள் என்று சொல்ல அதற்கு ஙியாயமெப்படியோ அப்படியெல்லாம் சொல்லி காகிதமெழுதி வரச்சொன்னேம். அதன்பேரிலே இந்த சேதியையும் எஜமானி களும் எஜமானுக்குச் சொல்லி அப்படியே தேவனும்பட்டணம் குவர்னதோர் பேருக்கு காகிதமெழுதிக்கொண்டு வருகிறே னென்று சொல்லி இராசோபண்டிதனை அனுப்பிவித்துக் கொண்டு போனேன்.

இற்றைநாள் காலத்தாலே சுமார் பனிரெண்டு ஒரு மணி வேளைக்கு இங்கிலீஷ் கப்பல்கள் பதிமூன்று பதினலு உருபடி வீராம்பட்டணத் துறைக்கு நேராக கொண்டுவந்து வைத்துப் பிடித்து லங்கூரம் போட்டவுடனே புதுச்சேரி துறையிலே முன் வந்த கப்பல்காரரிலே பெரியவனுக இருக்கிறவன் வருகிற

அமிரால் கப்பல்காரனுக்கு ஒன்பது பீரங்கிப் போட்டான். இந்தமட்டுக்கும் துரைக்கு வந்தது இருபத்திரெண்டு உருபடி சின்னதும், பெரியதும் அப்பால் நேற்றைய தினம் சிங்கிரிகோவி வில் கொடிபோட்டிருந்த இங்கிலீஷ்காரர் மறுபடி கொடியை வாங்கிப்போட்டு அப்பால் பின் வாங்கி நின்றார்கள். நம் முடையவர்கள் முத்திரிசப்பிள்ளைசாவடியிலே இறங்கியிருந்த நம்முடைய பாளையபட்டிலே இருநூறு சிப்பாய்கள்மாத்திரம் இருந்தார்கள். மற்றபேரெல்லாம் வாங்கிவந்து அரியாங்குப் பத்திலே இருந்தார்களே அந்த இருநூறு சிப்பாய்களிருந்த பாளையபட்டின்பேரிலே காலத்தாலே ஒருநரம் இங்கிலிஷ் காரர் பவுன்சு வந்து இரண்டாயிரம் மூவாயிரம் துப்பாக்கிக் காரர்களும் எட்டு பீரங்கிகளும் கூடவந்து சண்டைபண்ணி பின் வாங்கிவிட்டார்கள். அப்புறம் இரண்டு மணிக்கு துவக் கின்து ஐந்தரை மணி மட்டுக்கும் நல்ல சண்டை கொடுத்தார் கள். அதிலே மூன்று தரம் பாளையப்பட்டை வந்து உள்ளே புகுந்தார்கள். மூன்று தரமிவர்கள் சுடுகிற துப்பாக்கிகளினாலே யும் சாலதுப்பாக்கிகளினாலேயும் வந்த எதிரிகள் முறிந்து பின் வாங்கினார்கள். நம்முடைய சிப்பாய்களுக்கு அரியாங் குப்பத்திலிருந்த வெள்ளைக்காரரும், சிப்பாய்களும் மத்தத்துப் போகிறார்களே. ஆனால் தேவனாம்பட்டணத்தார் பவுன்சை அவர்கள் தேவனாம்பட்டணம் போய் சேர்த்துப் போடுவார் கள். அரியாங்குப்பத்திலிருக்கிறவர்கள் கும்பல் கும்பலாய் அவர்கள் சாப்பாட்டுக்கு அனுப்பாமலிவ்விடத்திற்கு வந்து விடுங்கோளென்று இவர்கள் காண்பிக்கிற அடையாளத்தி னாலேயும், அவர்கள் கொஞ்ச கொஞ்சம் கையிலே யிருக்கிற மருந்து குண்டுகள் சிலவாகிப்போனால் மோசம் வருமென்று முத்திரிசப்பிள்ளைசாவடியிலிருந்ததை விட்டுப்போட்டு அரி யாங்குப்பத்திற்கு வரவேணுமென்று வரும்போது நடு ஆற்றிலே இறங்கி வரும்போது முறிந்து ஓடிப்போன இங்கிலீஷ்காரர் பவுன்சு முழுதும் நாலாயிரம், மூவாயிரம் எவ்வளவு உண்டோ அவ்வளவும் மறுபடி சேகரித்துக்கொண்டு நடு ஆற்றிலே போகிறவர்கள்பேரிலே குண்டு மழையாய்ச் சொரிந்தார்கள். அப்போ பதினைந்து பேருக்கு காயமும் மூன்று பேர் சாவுமானது. அவர்களிலே மூன்று தரம் பவுன்சு வந்து பாளையத்துச் சேவிர ஆணி மறுபடி துப்பாக்கி குண்டோடினபடியினாலே வெகு பேர் காயமென்று சாவென்று சொன்னார்கள். கும்பல் வெகு கும்ப

லானபடியினுலே சாவு நூறு பேரும் காயம் இரு நூறு பேரும் சுமார் எழுதினேன். அவர்கள் ஐந்நூறு அருநூறு சாவு காயமும், ஆயிரமுமாய் சொல்லுகிருர்கள், என் புத்திக்கேற்க நானெழுதினதுகையுஞ் சேர்த்து அதுத்தி என்ருப்போலேயும் பின்னையும் சேர்த்து உயர்ந்திருக்குமென்ருப்போலேயும் தோற்றுது. காலம் வெளியாக்கவேணுமேயல்லாமல் மற்றபடியல்ல. அப்பால் இங்கிலீஷ்காரர் பவுன்சு முத்திரிசப்பிள்ளை சாவடி ஆற்றிலேயும் நம்முடைய பிராஞ்சுக்காரர் பவுன்சு அரியாங்குப்பத்திலிருந்து சாயங்காலம் ஐந்தரை மணிக்கு கருப்பும், வெள்ளையும் கலந்து கொடி போட்டான். அது போட்டால் எல்லாரும் வந்து கில்லா சேரச்சொல்லி அடையாளமானபடியினுலே அப்புறத்திலே இருந்தவர்கள் அரியாங்குப்பம் வந்து சேர்ந்தார்கள். அரியாங்குப்பத்திலே இருந்தவர்களிலே சிறிதுபேர் அரியாங்குப்பம் மேட்டுக்கு வந்து சேர்ந்தார்கள். அப்பால் அந்தக் கோட்டையை வாங்கிப்போட்டார்கள். சாயங்காலம் துரையவர்களும், முசியே பாரதியும் சுவாரி போய் வந்து மேல்மெத்தையின்பேரிலே பேசிக்கொண்டிருக்கும் போது என்னை அழைத்தனுப்பினுர். நானுமவ்விடத்துக்குப் போனேன். அப்போ முசியே தேப்ரேன், முசியே பிரீயேல், முசியே துக்கேன், முசியே பாரதி, முசியே கில்லியார் முதலான பேர்களிருந்தார்கள். அப்போ அப்துலயீமான் வந்தான். அவனிருந்துக் கொண்டு துரையவர்களுடனே முத்திரிசப்பிள்ளைசாவடியிலே இருந்தவர்கள் சண்டைபண்ணினதும், இன்னும் தனக்கும் ஐந்நூறு சிப்பாய்களுக்கும் உத்தாரம் கொடுத்தால் தேவனும் பட்டணத்து பவுன்சை மறுபடி கொண்டுபோய் தேவனும் பட்டணம் சேர்த்துப் போடுகிறேமென்று கேழ்க்க பாளையப் பட்டிலே யிருந்த சிப்பாய்கள்கூட அரியாங்குப்பம் வந்து சேர்ந்தார்களென்று சொல்லி நீ போகக் கவையில்லையென்று சொன்னுர். நான்மாத்திரம்போய் என் தம்பி முதலான பேரை பார்த்துவிட்டு வருகிறேனென்று நாலாறு தரம் கேட்டதற்கு நீ போகவேண்டாம் எல்லாருமிவ்விடத்திற்கு வருகிருர்கள். சும்மாயிருயென்று சொன்னதுமல்லாமல் அங்கே சண்டை பண்ணின சாடையாம்படியே அங்கே யிருந்து அப்துலாயிமான் சோபுதார் எதிரி தளத்தள சுட்ட இரும்பு குண்டு எடுத்துக் கொண்டுவந்து நடந்த சேதியெல்லாம் சொன்னுன். துரைகள் எல்லாம் சவிஸ்தாரமாய்க் கேட்டு நகைத்துக்கொண்டிருந்

தார்கள். ஆனால் துரையவர்களுக்கு உள்ளே வெகு பயம் தோன்றினதற்கு லக்ஷணம் முகத்திலேயும் அவர்கள் பேசுகிற பேச்சிலேயும் காண்கிறது. இவர்கள் சொல்லுகிற உத்தாரம் முசியே பாராதிக்குச் சம்மதியில்லை. அப்படிப் பேச்சு வார்த்தை நடக்கும்போது முசியே பிரியேல் என்னை அழைத்து நீ துரையுடனே சொல்லப்போகாதா இந்தப் பட்டணத்திலே யிருக்கிற ஏழை ஜனங்களும் பெண்டுகள் குழந்தைகளைத் தொட்டு என்ன நிர்வாகமாகப்போகிறது; வெளியே போகச்சொன்னால் அதைத் தொட்டுப் பின்னையும் பட்டணத்துக்கிருக்கிற பளுவு கழிந்து சண்டைக் கொடுக்கிறதற்கு லகுவா யிருக்குமே இது துரைக்கு தோணவில்லை. நீ சொல்லவேணுமென்று சொன்னார். அதற்கு நான் சொன்னது: நீங்கள் கோன்சேலியர்கள், நீங்கள்தானே சொல்லுகிறதற்கு பால்மாறி யிருக்கும்போது நான் ஏன் சொல்லப்போகிறேன்? நீங்களிந்தச் சமயத்திலே சொல்ல வேண்டியது உங்களுக்குக் கடனென்று ரொம்ப தூத்தி எப்படி சொல்லவேணுமோ அப்படியெல்லாம் சொன்னதற்கு அது எங்கள் வேலையல்ல; உன்னுடைய வேலை தமிழருக்கெல்லாம் நீ குவர்னதோராயிருக்கிறபடியினாலே உன்னுடைய ஒபிரிகசம் சொல்லவேண்டியதென்று சொன்னான். அதற்கு என் ஒபிரிகசம் சொல்லவேண்டியது இதற்குமாத்திரமல்ல; பின்னை எது யெதுக்குச் சொல்லவேணுமோ அதெல்லாம் சொன்னேனென்று சொன்னமாத்திரத்தில் அவன்தானே இருந்துக்கொண்டு அதெல்லாம் மதாம் துய்ப்ளேக்ஸ் சொல்லுகிறது இப்போதன்னே, முன்னே நடக்கவில்லையோவென்று சொன்னான். அதற்கு நான் சொன்னது: எனக்கு என்ன வேலை சொல்லுகிறாரோ அது தவிர மற்றதொன்றும் நானறியேனென்று சொல்லுகிறதற்குள்ளே துரை அங்கே வந்தார்; அந்தமட்டிலே இந்தப் பேச்சு. முசியே பாராதியுடனே ஜனங்கள் வெளியே போகிறது நல்லதென்று சொன்னதற்கு அவனுமிவனும் பேசிக்கொண்டார்கள். இதிலே துரையவர்கள் என்னையழைத்து நம்முடைய சிப்பாய்கள் சண்டைபண்ணினதுகளெல்லாம் அவர் சொல்லி இங்கிலீஷ்காரருடைய புத்தி போதாதத்தனமாய் நடத்துகிறதாய் நான் சொல்ல இப்படி நடந்தது. அப்பாலென்னுடனே துலுக்கர் கிராமங்களுக்கு மனுஷரை அனுப்பி குடிசைகளாய்ப் பார்த்து சுட்டுப்போடச் சொல்லென்று சொல்லிப்போட்டு இறங்கி

வீட்டுக்குள்ளே போனர். நானும் பாக்கு கிடங்குக்கு வந்து வர்த்தகருக்குத் தாக்கீதுபண்ணி கும்பினீர் சரக்கு உங்கள் வசமாய் அமானத்து இருக்கிறது. தெய்வாதீனமாய் லாலாப் பேட்டையிலிருந்து இந்த கலாபத்திற்கு முன்னே இரண்டு நாளென்று வந்து சேர்ந்ததை ஏன் வைத்துக்கொண்டிருக் கிறீர்கள். முசியே கோர்னேத்தும் கொண்டுபோய் ஒப்பித்து விட்டு நீங்களெழுதிகொடுத்திருக்கிற ரசீதை வாங்கிக்கொள்ள வேணுமேயல்லாமல் இப்படி சூத்து மறந்திருந்தால் அப்பால் இருபத்தையாயிரம் வராகன் சரக்கு இராசிகம் தெய்விகம் விருதாவாய் நீங்களே ஏத்துக்கொள்ளுகிறீர்களென்று சொன்ன தற்கு போய் நாளைக்கு அப்படியே ஒப்பித்துவிடுகிறோமென்று சொன்னர்கள். ஒரு குண்டுவந்து விழுந்து சரக்கு பற்றிக்கொண் டது; அல்லது ஒருத்தன் வந்து திருடினன். அப்பால் துரைகள் சொல்லுவார்கள் சண்டை வேளையென்று அவரவர் தங்களுடை மையைப் பத்திரமாக பண்ணத்தக்கதாக கோட்டையிலே கொண்டுவந்து வைக்கும்போது எங்கள் சரக்கை நீங்களேன் வைத்திருந்தீர்களென்று துரை சொல்லுவார்கள். அப்படி சொல்வாரானல் சீக்கிரமத்துக்குக் கொண்டுபோய் முசியே கோற்னேத்து வசம் பண்ணிப்போடச்சொல்லி எப்படி தாக்கிதாய்ச் சொல்லவேணுமோ அப்படி சொல்லியனுப்பினேன். அவர்களுமொத்துக்கொண்டு போனர்கள். ஆனல் தங்கள் தங்கள் குஞ்சுக் குழந்தைகளை வெளியே அனுப்பிவிடுகிறதற்கு துரையைக் கேட்டு உத்தாரம் வாங்கிக்கொடுக்கச்சொல்லி அவர்கள் தாபந்தப்பட்டதை எழுதி முடியாது. அவர்களுக்கு துரை அவர்கள் பரிச்சேதமாய் உத்தாரம் கொடுக்காத சாடையை அவர்களுக்கு அறிவித்தேன். அவர்கள் அறிந்திருந் தாலும் இந்தப் பட்டணத்துக்குச் சிந்தையில்லையென்று தோன்றி இருந்தாலும் பயத்தினலே அதையெல்லாம் மறந்து போய் குண்டுவந்து விழுந்தால் குஞ்சுக் குழந்தைகளெல்லாம் பயப்படுவார்களென்றுப்போலேயும், உள்ளபடியிலே சென்னப் பட்டணம் போய்விட்டதே அப்படி இதுவும் போய்விடும். இரண்டு பாரிசமும் வந்து சுவிகிறபடியினலே மோசம வருமென்று தீர்த்தக்கொண்டு அங்கலாயிருக்கிற அங்கலாய்ப்பு எழுதி முடியாது. இவர்கள் வெள்ளைக்காரர்கள் அறிந்தவர்களிப்படியானல் மற்ற பட்டணத்திலுண்டான ஏழை ஜனங்களும் வெள்ளைக்காரர்களறியாதவர்களுடைய பயத்தை நான்

என்னவென்று ஒரு மாதத்தை வைத்து எழுதப்போகாது. இன்றையதினம் பட்டணமிருந்த காபிரா சுவாமிக்குத் தெரியுமேயல்லாமல் மனுஷராலே அளவிட்டுச் சொல்லக்கூடாது.

இன்று இராத்திரி இங்கிலீஷ் கப்பலின்பேரிலே யிருந்து குண்டும் தீக்குடுக்கையும் போடுவானென்று சமஸ்தமான வெள்ளைக்காரர் வீட்டுப் பெண்டுகளெல்லாம் நம்முடைய வீட்டுக்கெதிரே இருக்கிற கோயிலிலேயும், அதுக்கப்புறமிருக்கிற தமிழர் வீட்டிலேயும் இறங்கி யிருந்தார்கள். இன்னாரென்று வயணமேன் எழுதவில்லையென்றால்: பத்துபேரறிந்து போனால்பேர் வயணம் எழுதவேண்டியதேயல்லாமல் ஊரிலே உண்டானவர்கள் அனைவருமானால் என்னமாய் எழுதுகிறதென்று பொதுவிலே சமஸ்தமான பேரென்று எழுதிப்போட்டேன்.

1748 ஆ ஆகஸ்ட் மு 23 உ க்கு விபவ ஹு ஆவணி மீ 11 உ சுக்கிரவாரம்.

இற்றைநாள் காலத்தாலே ஆறு மணி வேளைக்கு துரை அவர்கள் என்னை அழைத்தனுப்பிவைத்து ஒழுகரை குண்டு கிராமங்கள் முதலான விடங்களிலே இருக்கபட்ட நெல், வைக்கல் முதலான வஸ்துக்களெவ்வளவு உண்டோ அதெல்லாம் பட்டணத்துக்குள்ளே கொண்டுவரச் சொல்லியும், அல்லவென்று வைக்கல் முதலானது சரூரிலே வந்து சேராமல் போனதேயானால் நெருப்புப்போட்டு கொளுத்திப்போடச் சொல்லியும் அடுத்தாப்போலிருக்கிற துலுக்கர் கிராமங்களிலே இருக்கிற வைக்கல், நெல் அதையும் எடுத்து கட்டிக்கொண்டு வருகிறதற்கு வாக்கானால் கட்டி எடுத்து வருகிறதுதான்; அல்லவென்றால் அதையும் கொளுத்திப்போடச் சொல்லியும், இப்படியாகச் சொல்லியும் சொன்னார். அந்தபடிக்கு பெரியண்ண நயினாரையும், பதினைந்து சேவகரையும் குண்டு கிராமங்கள் ஒழுகரை முதலான கிராமங்களுக்கெல்லாம் தாக்கீது பண்ணச்சொல்லி சொல்லி அனுப்பிவைத்தேன். அப்பால் வில்லியநல்லூர், பிரம்பை முதலான விடங்களிலே நெல், வைக்கல் இருக்கிறதாவென்று விசாரிக்கிறதற்கு மனுஷரை அனுப்பிவைத்தேன்.

மற்றபடி நேற்றையதினம் இங்கிலீஷ் பவுன்சு வந்து முத்திரிசப்பிள்ளைசாவடி அண்டையிலே யிருந்த பாளையப்பட்டு வாங்கிக்கொண்டார்களே அந்தமட்டுக்கும் தங்கள் தளமும் தாங்களும் தங்கள் சரஞ்சாமிகளையும் அவ்விடத்திற்கு கொண்டுவந்து சேர்த்துக்கொள்ளுகிறது. அதை டிக்காளுக வைத்துக்கொண்டு அப்பால் அரியாங்குப்பம் வாங்கிக்கொண்டு அப்பால் புதுச்சேரியின்பேரிலே சண்டைப்போடவும் யோசனை பண்ணிக்கொண்டு முத்திரிசப்பிள்ளைசாவடியைக் காணுவாய் வைத்துக்கொண்டு வீராம்பட்டணத்தண்டையிலே சிறிது சான்சாமிகள் கப்பலிலே யிருந்து இறக்குகிறதும் முத்திரிசப் பிள்ளைசாவடியிலே இருக்கிற சாமான்களைக் கொண்டுவந்து சேர்க்கிறதாகவும் இந்த 3வளை இருக்கிறதாகவும், நாளைய தினம் அரியாங்குப்பத்தின்பேரிலே சண்டைப்பண்ணுகிற தாகவும் இப்படியாக சேதி கேழ்க்கப்பட்டது.

நம்முடையவர்கள் அரியாங்குப்பத்து ஆற்றுக்கிக்கரை சாரத்துறை முதலாக இவர்களும் சிப்பாய்களையும் சொலு தாதுகளையும் பீரங்கிகளையும் கொண்டுபோய் முஸ்தீது பண்ணுகிறார்கள்.

*1748* ஆ ஆகஸ்ட் மீ *24* உக்கு விபவ ஸு ஆவணி மீ *12* உ சனிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே ஐந்து மணிக்கு இங்கிலீஷ் காரர் பவுன்சு அரியாங்குப்பத்து சமுத்திரக்கரை ஓரமாய்ப் புறப்பட்டு பாதிரிகோவில் வந்து அசார் பிடிக்கிறதற்கு எறும்பு சாரையாய்ப் புறப்பட்டால் எப்படியோ அந்தபடிக்கு இங்கிலீஷ்காரர் பவுன்சு வந்தது. நம்முடையவர்கள் அரியாங் குப்பம் பாதிரியார் கோயிலுக்கு நேராய் அதற்கு இப்புறம் பவுன்சு எல்லாம் ஆற்றோரம் முடிய இருந்துக்கொண்டு ஆற்றோரத்தண்டையிலே போட்டிருக்கிற மணிக்கொத்தளம் இரண்டிலேயும் பீரங்கிகளை ஏத்தி அதற்கு நேராய் தாழவும் சிறிது பீரங்கிகள் அச்சாயல் துப்பாக்கிகள் முதலானதுகளி னாலே இவர்கள் விஸ்தாரமாய் குண்டு மாரியாய் இங்கிலீஷ்காரர் பவுன்சுப்பேரிலே வழங்கினார்கள். அவர்களுக்கு செத்தவன் சாகட்டுமென்று மெரிச்சேரிவந்து பாதிரிகோவிலே அசளப்

பண்ணி பிடித்துக்கொண்டார்கள். இதிலே அவர்கள் செத்தவர்களும் காயப்பட்டவர்களுமாய் நூத்தன்பது பேர் மட்டுக்கும் உண்டேன்று துரையவர்களுக்கு முசியே லத்தூரொழுதி அனுப்பினுன். என் புத்திற்கேற்கவும் சாவுகாயமும் அந்தமட்டுக்குண்டேன்று தோணுது அரியாங்குப்பம் கொத்தளக்காரனுல் யெழுதியனுப்பினது கடக்கரையிலிருந்து கோவில் மட்டுக்கும் வருகிறதற்குள்ளே என் பீரங்கினுல் வெகுபேர்கள் செத்தார்கள். கோவில் ராளவிலேயும் அதன் பிறகே கனகராய முதலிதோட்டத்து ஆசனவிலேயும் வந்து சேர்ந்த பிற்பாடு யென்பீரங்கி அவர்களுக்கு படவுமில்லை அல்லவென்று சுட்டாலும் மரங்களிலேயும் கோயில்களிலேயும் பட்டுப்போகுதென்று யெழுதின காகிதம் வந்தது பின்னையும் சற்றுநேரம் பொருத்து மறுபடியும் முசியே லத்தூர் எழுதின காகிதத்திலே கோயிலை விட்டப்புறம் இங்கிலீஷ்காரர் வாங்கிப்போனுர்கள் அரியாங்குப்பம் கொத்தளத்திலிருந்த அல்லிகான் முதலானவர்கள் சிறுதுபேர் லக்கையேரினவர்களை துரத்தி சண்டைபண்ணினதின்பேரிலே இங்கிலீஷ்காரர்கள் பாதிரிகோவிலிலே இருந்தவர்களும் லக்கை யேரினவர்கள் கூட அப்புரம் அய்யனுர் கோவில் என்றிருக்குது அதை பிடித்துக்கொண்டார்கள் அப்போ ஏழு பீரங்கிகளும் சில இங்கிலீஷ்காரர் அகப்பட்டார்களென்றும் அதிலே ஒருத்தன் காய்ப்பட்டவனும் ஒருத்தன் ஒப்பிசியே காயமில்லாமல் பிடிபட்டவனையும் அனுப்பினுர்கள் அவன் வந்தஉடனே அவர்கள் ரெண்டுபேரையும் தாட்டி அழைத்து தான் மெத்த சம்மதமாய் எதிராளிகள் மர்மம் பெதிக்கிறவர்களென்றுப்போலேயும் ஆம்பிடயானண்டைக்குப்போய் இந்த இங்கிலீஷ்காரரை அப்படியிப்படி கேழ்க்கவேணுமென்றுப்போலே அவர்புத்திமெத்த சிதறி பயம் பிடித்து காபிராபட்டிருக்கிறவருமாம் அப்பாலும் அவா சுவாபமும் தான்மெத்த கெட்டிக்காரி என்றுப்போலேயும் மர்மம் வாங்குவாளென்றுப்போலேயும் எருது ஈன்றதென்றுல் கோட்டையிலே கொண்டுபோய் கட்டேன்று சொல்லுகிற பிறக்ருதியானபடியினுலேயும் தாட்டி போய் சொன்னமாத்திரத்திலே நீதானே அந்த இங்கிலீஷ்காரரை வைத்துக் கொள்ளென்று சொன்னமாத்திரத்திலே ஒருத்தன் இனசிகேன் என்கிறவன் முகம்மெல்லாங் கண்டுகண்டாய்க் கட்டியிருக்கிறது, அவனை வைத்துக்கொண்டு தாட்டிகேட்டதற்கு

அவன் சொன்னது. தாங்களிருபத்கஞ்சு கப்பல்களுடனே வந்தாப்போலேயும் இப்போ கரையிலே ஆருயிரம்பேர்களை இறக்கிருர்களென்றும் கப்பலிலே இப்போ எண்பது எண்பது பேரிருக்கிருர்களென்றும், அரியாங்குப்பம் பிடித்துக்கொண்டு அதின்பேரிலே சிறுதுபேர்களை கப்பலின்பேரிலேத்தி அப்பால் கப்பலின் பேரிலேயும். கறையிலேயும் சண்டை பண்ண வேணுமென்றும் யோசனைபண்ணியிங்காட்டும் இன்றைய தினம் அரியாங்குப்பத்தின்பேரிலே சண்டைபண்ணினதென்றும், தங்கள் கப்பல்கள் வரும்போது மச்சக்கரையண்டையிலே பிராஞ்சுக் கப்பல்களைக் கண்டு சிறிதுநேரம் சண்டைப்போட்டு வந்துவிட்டோமென்றும், அந்த சண்டையிலே தங்கள் கப்பல்களுக்கு ஒரு பொல்லாப்பும் இல்லையென்ருப்போலேயும் தங்களுக்குப் புதுச்சேரியிலிருந்து ஓடிவந்த ஒரு பிரான்சு பீரங்கி மேஸ்திரி அரியாங்குப்பம் இரண்டு மணி நேரத்திலே பிடித்துக் கொடுக்கிறேனென்றும் வந்து இறங்குவதற்கு மார்க்கங்களும் துரையும் அப்பால் புதுச்சேரியைப் பிடிக்கிறதற்கு உபாயமும் சொல்லி அழைத்து வந்தானென்று சொன்னதாய் துரையவர்களங்கே கேட்ட பேச்சை அடிக்கடி நானிருக்கிற இடத்திற்கு வந்து அங்கே முசியே போலே, புரி, கில்லியார் முதலான வெள்ளைக்காரர்கள் பதினைந்துபேர் மட்டுக்கும் இருக்க என்னுடனே சொல்லிக்கொண்டுவந்தார். இதிலே அரியாங்குப்பத்திலே இருந்தும் ஆற்றுக் கரையிலே இறங்கியிருக்கிற தாசுமானிலேயிருந்தும் காகிதங்கள் வந்துக்கொண்டேயிருக்கும் அதிலெழுதி வந்தது: மறுபடி இங்கிலீஷ்காரர்கள் பாதிரி கோயிலைப் பிடித்துக்கொண்டு அங்கேயிருந்து பீரங்கியினுலே போடுவது முருங்கப்பாக்கத்தண்டையிலேயிருக்கிற நயனுர் மண்டபத்தண்டையிலேயும் கேசவராயன்தோட்டத்தண்டையிலே குண்டுசாலை மேட்டு சமீபமாயும் இங்கிலீஷ்காரர் சுடுகிற குண்டுகள் வந்து விழுகிறதென்றும் அது ஒரு சிப்பாய்க் காலை அடித்துக் கொண்டுபோனதென்றும், ஒருத்தனுக்குச் சப்பையை அடித்துக்கொண்டு போய்விட்டதென்றும், ஒரு பிள்ளையாண்டானை மாரை ஒடைத்துப் போட்டதென்றும், ஒரு காபிரிக்கு வயிற்றை பூறிப் போட்டதென்றும் ஒரு சிப்பாய் தலை ஒடித்ததென்றும், அரியாங்குப்பம் கொத்தளத்தண்டையிலே நெருங்கிப் போரார்களென்றும் கொத்தளத்திலேயிருக்கிறவர்கள் பீரங்கி சுடுகிறதை நிறுத்திப் போட்டார்களென்றும் எழுதி

வந்தது. அதற்கு முன்னே சந்தோஷமாயிருந்தவர் இந்தக் காகிதங்கள் வரவர இவர் முகம் வேறேமுகமாய் களைவாங்கின முகம்போலே முகத்திலே மெத்த வேசடையாய்க் காணப்பட்டது. அப்பால் இவர் சொல்லுகிறபேச்சு ரொம்ப காபிராவின் பேரிலேயும் பட்டணத்திற்கு மோசம் வந்ததாய் கெட்டியாய்த் தீர்த்துக்கொண்டு அப்பால் பேயான ஆலோசனையின்பேரில் எவன் எதுவந்து சொன்னாலும் அப்படிச்செய் என்று சொல்லுகிறதேயல்லாமல் யுக்தா யுத்தம் பார்த்துச் சொல்லுகிற விசேஷம் சொல்லாத விசேஷமென்றில்லாமல் பேசுகிற சாடை தெரிய வந்தது. அதன்பேரிலே இங்கிலீஷ்காரனை பெகு உபசரித்துச் சாராயமும் ரொட்டியும் கொடுத்தார்கள். அப்பால் தேத் தண்ணீர் கொடுத்தார்கள், தித்திப்பு கொடுத்தார்கள். பின்னையும் அவனைக் கேழ்க்கவேண்டியது கேட்டுக்கொண்டிருந்தார்கள். அவனென்ன சொன்னானோ தெரிய வரவில்லை. இதற்கு இந்திர பிறத்தாரிட்டவன் முசியே மரியேல் அப்பால் அவனை துரை வீட்டிலே குசினி பாரிசமாயனுப்பி அங்கே சட்டைக்கார இன்னுசி மற்றபேரிருக்கிற விடத்தே கொண்டு போனார்கள். அப்பால் பின்னை ஒரு மத்தலோவா யிருந்தவனையும் அப்படித்தான் உபசரித்து ரொட்டி சாராயங் கொடுத்து அப்பால் தேத் தண்ணீரும் கொடுத்துங் கேட்டார்கள். அவன் என்ன சொன்னானோ தெரியவில்லை. அவனுக்குத் தோள் பட்டையிலே குண்டு காயம்பட்டு ரத்தமோடி வருகிறது. அவனை ஒப்பித்தாலுக்குக் கொண்டுபோனார்கள். இதிலே இங்கிலீஷ்காரர் சுடுகிற குண்டுகள் வந்து விழுகிறது. ஐந்நூறு குண்டுமாத்திரம் எடுத்து வந்தார்கள். குண்டெல்லாம் ஒரு சட்டமாயிருக்கிறது தண்டவாளத்திலே வார்த்த குண்டு நிறுத்துப் பார்க்க ஐந்தேகால் ராத்தலிருந்தது. அந்தச் சேதியும் துரைக்குச் சொன்னார்கள்; இதிலே ஒரு கபுறு வந்தது.

கொத்தளத்தை இங்கிலீஷ்காரர் நெருக்கினார்களென்று நாலுபக்கமும் சுற்றிக்கொண்டார்களென்றும் அரியாங்குப் பத்திலிருக்கிறவர்களை நாலுபக்கமும் பெருதளம் சுத்திக் கொண்டதாய் பெழுதிவந்தது அதன்பேரிலே அங்கங்கே அமுகை உண்டானது துரையவர்களுக்கொன்றும் தோத்தாமல் கண்ணீர் கூடகண்ணிலே தளும்புர மட்டுக்கும் சாடையிலே பேசும்போதுக் கண்டேன் மெத்த பேயாய் குன்றிக்

கொண்டு காபிராபட்டு போனதை நானென்னவென்று காகி தத்திலேஎழுதப்போகிறேன். ஆனாலித்தனை அதைரியஸ்தனாய் பேய்பிடுங்கலாய் பிடிங்கினாலும் நல்ல அதிர்ஷ்டம் யோகம் இருக்கிறபடியினாலே காரியமார்க்கமாய் அனுகூலத்திலே நடந்துக்கொண்டே வருகிறது. இதை யொருக்காலே விஸ்தரித்து எழுதலாகாது சூக்ஷமமா எழுதினது போதும் அப்பால் இவரென்னபேயாய் குளரினாலும் சிரேயசு காலமிருக்கிறபடியினாலே அந்த இங்கிலீஷ்காரருக்கு புத்திசிதறி அங்கே யிருக்கலாகாதென்று பின்னையும் சற்று ஒற்றிப்போய் மருபடி வந்து கொத்தளத்தை ஆணியேருகிறதாய் ஏணிகூட வந்தபோது கொத்தளத்திலே இருக்கிறவர்களும் தாழ அல்லிகான் கோமபஞ்சும் சேக்கு அசேன் இருந்தவர்களும் நல்ல சண்டை கொடுத்தபடியினாலே அந்தப்படையிலே வெகுபேர் விழுங்காட்டிலும் மறுபடி முறிந்து பின்வாங்கி அய்பனார் கோவில் போனார்களென்றும் அவர்கள் சுட்ட தீக்குடுக்கைகள் அரியாங்குப்பம் கொத்தளத்திலே விழுந்ததென்றும் விழுந்து வெடித்து சிதருகிறபடியினாலே இந்தமட்டுக்கும் சிறிதுபேருக்கு காயமானதென்றும் இனிமேல் நாங்கள் கொத்தளத்திலேயிருக்க மாட்டோம். புறப்பட்டு வந்துவிடுகிறோம் என்று முசியே லத்தூர் என்கிற ஒப்பிசியாலு முசியே லாசும் துரைக்குயெழுதி அனுப்பி விட்டார்கள் துரையும் லகுவாய் புறப்பட்டுவரச்சொல்லி எழுதியனுப்பிவிட்டார். இப்படி இங்கிலீஷ் தளத்திலே வெகு ஜனம் செத்தாலுமவர்கள் பின் வாங்காமல்படிக்கு அடிமெரித்து ஏறிவருகிறதும் சிறிதுபேர்களும் விழுந்தும் நடக்கும் போது அதற்கும் முங்காங்கையான பிற்பாடு பின் வாங்கிப் போகிறதுமாய் இந்தப்படி வெகுபேரை சாகக்கொடுத்தும் பின் வாங்காமல் மறுபடியும் முனைந்து வருகிறதாயிருக்கிறதென்றும் அடிக்கடி எழுதிவருகிறதுமல்லாமல் அவர்கள் சுடுகிற பீரங்கிக்குண்டுகள் வந்துவிழுந்து ஒவ்வொருத்தர் சேதப்படுகிறதுமாயிருக்குதென்று எழுதி வந்தது. அந்தக் குண்டிலே நானும் நாலு குண்டு வாங்கிவைத்தேன். இப்படி ரொம்பவும் துரை காபிருபட்டு இருக்கிற வேளையும் துப்பாக்கிகள் துவனி பீரங்கி குண்டு தோவணியினாலேயும் பட்டணமெல்லாம் காபிருபட்டு அவரவர் வீட்டுப் பெண்டுகள் குழந்தைகள் பிள்ளைகள் வெகு பேர் குண்டுசாலை மேட்டண்டையிலே போய் விடமாட்டோமென்றாலும் சாகுறோம், பிழைக்கிறோமென்று

கிடக்கிறவர்களும் ஷேக்கு இப்ராமுக்கும் அந்தந்த வழிகளிலே யிருக்கிறவர்களுக்கும் ஐந்தாறு நாளாய் லஞ்சங்கள் கொடுத்து போகிற சாடையாய் சிறிது பேர்கள் போகிறதும் மற்றபேர்களை விட்டால் என்னமாய் முடியுமோ என்கிற பயத்தினாலேயும் அல்லவென்று விடாமல் விட்டவர்களுடைய சேதியை போய்ச் சொன்னால் மோசம் வருமென்றும் இப்படி பயந்துக்கொண்டு ஒரு போக்காய் வெகு ஜனங்கள் பெண்டுகள் வந்து சாகிறோம் பிழைக்கிறோமென்றும் மேல் விழுகிறார்களென்றும், சொல்லும் போது எப்படியாகுதோ அப்படி பார்ப்போமென்று ஷேக்கு இப்ராம் வந்து துரையுடனே மேலெழுதினபடிக்கு சொன்னதின் பேரிலே அவருக்கு இனிமேல் நிர்வாகமில்லையென்று தோன்றி மனது பெதறியிருக்கிற வேளையிலே இவன் சொன்னபடியி னாலே பெண்டுகள் யார் போனாலும் விட்டுவிடுமென்று ஷேக்கு இப்ராமுக்கு உத்தாரம் கொடுத்தார். அதன்பேரிலே பெரிய பெரிய மனுஷர் வீட்டுப் பெண்டுகளெல்லாம் வந்து போறோ மென்கிறார்களே அவர்களையும் விட்டுவிடுகிறதாவென்று ஷேக்கு இப்ராம் கேட்டதற்கு அதற்கு துரை இருந்துகொண்டு பணம் காசு கொண்டுபோனால் பிடுங்கி என்னண்டையிலே கொண்டுவந்து கொடுத்து வருகிறவர்களை போகிறவர்களை விட்டுவிடென்று சொன்னாரும். பின்னையும் பெரிய மனுஷர் வீட்டுப் பெண்டுகள் போனாலும் தடையில்லாமல் விட்டுவிடச் சொன்னாரென்றும், ஆண் பிள்ளைகளை விடவேண்டாமென்றும் சொன்னாரென்றும் ஷேக்கு இப்ராம் வந்து சொன்னான்.

இதிலே துரை அழைக்கிறாரென்று வந்தென்னை அழைத் தார்கள். நான் போனவுடனே துரை என்னைப் பார்த்து பட்டணத்துப் பெண்டுகளெல்லாம் பயந்தோடி போறார் களாம் மெய்தானாவென்று கேட்டார். மெய்தானென்று சொன் னேன். அதற்கு பெண்டுகளைமாத்திரம் சோதித்துக்கொண்டு விட்டுவிடச் சொன்னேனென்றும், பிராமணாளைமாத்திரம் ஆண் பிள்ளைகளைக்கூட விட்டுவிடச் சொன்னேனென்றும் மறுபடி உள்ளே விடவேண்டாமென்றும் உத்தாரம் கொடுத் தேனென்றுச் சொன்னார், அதற்கு அப்படி செய்தது நல்ல காரியந்தான்; இந்த சூத்திர பெண்டுகளைத்தொட்டும் பாப் பாரைத்தொட்டும் பட்டணத்திற்கு இப்படிபட்ட வேளைக்கு

மெத்த இக்கட்டென்று சொன்னதற்கு மெய்யென்று ஒத்துக் கொண்டார். இந்த உத்தாரம் கொடுக்கத்தக்கதில்லை அவர் ஏற்பாடு வேறே இருந்தபடியினாலே கொடார். ஆனாலும் ஜனங்கள் சுகப்படுகிற வேளையானபடியினாலே ஒன்றும் தோன்றாமல் உத்தாரம் கொடுத்துவிட்டார்.

அப்பால் குண்டுசாலையிலே இருக்கிற துலுக்கர் சிப்பாய்களிலே முந்நூத்தைம்பது பேரை வரச்சொன்னேன். முந்நூறு பேர் மாத்திரம் போதும் வரச்சொல்லென்று சொன்னார். அந்தபடிக்கு முந்நூத்தைம்பது பேர் கவையில்லை முந்நூறு பேரை மாத்திரம் அனுப்பச்சொல்லி ஷேக்கு இப்ராமுக்கு உத்தாரம் சொல்லி அனுப்பிப்போட்டு பாக்குகிடங்குக்கு வந்தேன். திரும்பியும் என்னையழைப்பித்து மலையப்பன் சேவகர் பதினைந்து பேரென்று கேட்டு இவன் தாலுக்கு சேவகர் ஐம்பது பேர் தாஸ்துமானண்டையிலே இருக்கிறார்களே அவர்கள் எல்லாரும் ஓடிப்போராக்களாமவர்களுக்கு தாக்கீது பண்ணச்சொல்லென்று சொன்னார். நல்லதென்று சொல்லி மலையப்ப சேருவைக்காரனை அழைப்பித்து துரையவர்கள் சொன்னபடிக்கு சொன்னதற்கு அவனிருந்துக்கொண்டு அந்த ஐம்பது பேரும் என் பேச்சு வார்த்தையிலே யில்லை. அம்மாள் அவர்கள் தாலுக்கு அழகனென்கிறவன் மார்பத்திலே யிருக்கிற தாச்சே நான் சொல்லப்போமா ஒரு வேளை என் வசமாயிருக்கிற பேருக்கு என் மனுஷனோடு கொடுக்கவேணுமேயல்லாமல் நீ கொடுக்கக் கவையென்னவென்று கேழ்ப்பார்களென்று சொன்னான். மெய்தானிது விருதா பொல்லாப்பு நீயும் சாடையாய்ச் சொல்லி அனுப்பிப்போட்டு இரு. அங்கே யிருந்து பின்னையும் பிருது எழுதிவந்து துரை கண்டிப்பு மேலே கேட்டாரேயானால் அப்போ நீ சொன்ன உத்தாரஞ் சொல்லிப் போடுவோமென்று சொல்லி மற்ற சேவகரை தயார் வைத்து இரு என்று சொல்லி அனுப்பிவிட்டேன்.

அப்பால் துரையவர்கள் என்னையழைப்பித்து விமித்தியிலே எல்லையிலே இருக்கிற சிப்பாய்கள் கூட கற்னாடகத்தார் கூட ஐந்நூற்றைம்பது பேருக்கு நாற்பத்தைந்து பேரில்லையாம் அதேனென்று கேட்டார். இங்கிலீஷ்காரருக்கு தலைச்சேரியிலிருந்து வருகிற காகிதம் பிடிக்கச்சொல்லி இருபது சேவகரும்

ஒரு எஜமானும் அனுப்பினேன். மாயே காகிதம் கொண்டு போகிறபிருமனான் பிறகே பத்துபேர் போனார்கள். செஞ்சிக்கு வக்கீல் சுப்பையரண்டைக்குப் பதினாலுபேர் போயிருக்கிறார்கள் என்று சொன்னதும் மலையப்ப சேவகர் நூற்றிமுப்பது பேருக்கு வயணமெப்படியென்று கேட்டார். மதாம் தாலுக்கிலே ஐம்பது பேர் அழிசப்பாக்கத்திலே இருக்கிறார்கள். அறுபதுபேரிப்போ கையிருப்பா இருக்கிறார்கள். பத்துபேர் காரைக்கால் தபாலுக்கு காகிதம் போக்குவருத்திலே இருக்கிறார்கள். பத்துபேர் தழைக் கட்டிக்கொண்டு வருகிறவர்கள் சென்னப்பட்டணத்து அஞ்சலுக்குப் போயினவர்களுடனே கூட இருக்கிறவர்களுமாயிருக்கிறார்கள் என்று வயணம் சொன்னேன்.

இதிலே சந்தாசாயபு அவர்கள் வீட்டுக்குச் சந்தாசாயபுவை பன்னீராயிரம் குதிரைகளுடனே சாவனூர், பங்காபுறத்திலே விட்டுப்போட்டு வந்தேன். அவர்கள் துரையவர்களுக்கும் சந்தாசாயபு அவர்களுக்கும் காகிதங்கள் கொடுத்தார்களென்றும், சற்றேரக்குறைய ஐம்பது அறுபது காகிதங்கள்மாத்திரம் அத்தர்கூட தடவி வாசனைக் கம கமமாயிருக்கிறது கொண்டு வந்து காண்பித்த சேதியும் சொன்னார்கள். வந்த ஜோடிகள் இரண்டு பேரையும் கேட்டதற்கு சுவாமி தயவினாலே பன்னீராயிரக் குதிரைகளும் இன்று இருபதாம்நாள் இவ்விடம் வந்துசேருகிறார். அந்தபடிக்கு சுவாமி தயவுபண்ணினாரென்று சொன்னார்கள். அப்பால் துரையவர்களண்டைக்குப் போய் இப்படி சந்தாசாயபு மராட்டிக் குதிரை பன்னீராயிரம் குதிரைகளுடனே மங்காபுரம், சாவனூர் வந்துசேர்ந்தார்களென்று அவ்விடத்திலிருந்து அவர் வீட்டுக்காரன் கையிலே தானே அவர்கள் வளவுக்கும் உங்களுக்கும் மற்றுமுண்டான உறவின் முறையாருக்கும் நாற்பது, ஐம்பது காகிதங்களனுப்பினார்களென்று சொன்னமாத்திரத்தில் கண்களிலே தண்ணீர் தளும்ப இப்போதானே கடுதாசி எழுதி எங்கள் பட்டணத்தை இங்கிலீஷ்காரர் பிடித்துக்கொள்ளுகிறதாயிருக்கிறது; நீர் சீக்கிரமத்துக்கு வந்து எங்களை ரக்ஷிக்கவேணுமென்று பின்னையும் எப்படி எழுதவேணுமோ அப்படியெல்லாம் எழுதி அவர்களையும் எழுதச்சொல்லி இப்போதானே பயணம்பண்ணி, ரங்கப்பிள்ளை இது சமயமென்று எழுதென்று அவர் தீன

வார்த்தையாயழுதுக்கொண்டு சொன்னதற்கு அதை காகிதத்திலே என்னவிதமென்றெழுதப் போகிறேன். அப்போ அவர் முகம் பார்த்த எனக்குமாத்திரமல்ல, எப்படிப்பட்ட கடின சித்தனானாலும் துக்கம் வருமானால் என் பிறகுருதிக்கு என்ன கிலேசமும் துக்கமும் தோத்துமோ நான் எழுதவேண்டியதென்ன? விவேகிகளாயிருக்கிறவர்கள் பார்த்துக்கொள்ளுவார்கள்.

அப்பால் என் புத்திக்கேற்க அரியாங்குப்பமும் அவர்கள் இங்கிலீஷ்காரர்கள் அவர்கள் வசமாய் ஆத்தங்கரையிலே இக்கரையிலே இறங்கியிருந்த குதிரை சுவரர்கள் முதலான கால்படை உள்பட வெள்ளைக்காரருக்குக்கூட மோசம் வந்துதாங் காட்டும். இல்லாவிட்டால் இப்படிப்பட்ட சொல் துரை வாக்கினாலே சேவலமெநிருளி கையிலே அகப்பட்டவன் சொல்லுகிற பேச்சுப்போலே புறப்பட்டபடியினாலே என் மனது கலங்கி மோசம் வந்திருக்கவேணுமென்று எண்ணிக்கொண்டு பாக்கு கிடங்குக்கு வந்தேன்.

வந்து நம்முடைய வீட்டில் திருமலையப்பிள்ளை குமாரத்தி மருமகன் பின்னையும் அவர்கள் தாலுக்கு செங்கல்பட்டு சேஷாத்திரிப்பிள்ளை தாலுக்கும் ரமணப்பிள்ளை முதலான பேர் முப்பது நாற்பது பேர் பெண்டுகளும் ஆண்பிள்ளைகளுமாயிருக்கிறவர்களை போகச் சொல்லுவோம் ஊருக்கொத்ததாய். அப்பால் என் பெண்சாதி பிள்ளைகள், என் தம்பி, என் தம்பி பெண்சாதி பிள்ளைகள், மூன்று சிறிக்கிகளிவர்கள் என்க்கு அந்தபடிக்கு இங்கேதானே வைத்துக்கொண்டு மற்ற பேரை அனுப்பிவிடுவோமென்று யோசனைபண்ணி வீராநாய்க்கனுடனேயும் சொல்லியனுப்பி மற்ற பேரையெல்லாம் அனுப்பி விடச் சொன்னேன். துரையவர்களுத்தாரம் கொடுத்தார்கள் கபுறு ஜனங்கள் கேட்டதும் அவரவர் பெண்டு பிள்ளைகள் கிழவர்கள் சமஸ்தமான பேர்களும் புறப்பட்டு வெளியே போய் விட்டார்கள். இந்த சமயத்திலே ஷேக்கு இப்ராமு புதுப்பாளையம் வழி, கருவடிகுப்பம் சென்னப்பட்டணத்து வழி, சாரத்து வழி, பெருமாள்நாய்க்கன் சாவடியிலே இருக்கிறவர்களுக்குப் பத்து பணம் விசேஷித்த பிரயோசனம் அகப்பட்டது.

துரையவர்கள் ரங்கப்பன் சீட்டுக்கொடுக்கிறபடியினாலே பத்து வாங்குவது தன்னைச் சேரப்பண்ணிக் கொள்ளலா

மென்றும் அப்பால் போரவர்கள் தட்டு முட்டை பணம்காசு களை யெடுத்துக்கொண்டு போரவர்களை பணம் காசு தட்டு முட்டு வாங்கிக்கொண்டு அவர்களை விட்டுவிடச்சொன்ன சாடையும் வெகுபணமிதிலே சம்பாதித்து போடலாமென்று யோசனைபண்ணி சீட்டும் கவையில்லையென்றும் யெக்குத்தி யாரும் தாம் ஷேக்கு இப்ராமுக்கு சொல்லுகிறதும், ஷேக்கு இப்ராம் வந்து அந்தரங்கமாய் தனக்குச் சொல்லுகிறதுமாக இருக்கும்போது ஷேக்கு இப்ராம் பத்து பணத்தை அவர்கள் கையிலே வரிசையாய் சுற்றிக்கொண்டு பணம் காசு தட்டுமுட் டுடனே வெகுபேர் வர்த்தகர்களெல்லாம் விட்டுவிட்டுக் கஷி யிலே ஆனமட்டு புலி முட்டென்று இங்கிலீஷ்காரன் வந்து சண்டைபண்ணி மனது பெதருகிறவேளையிலே பெண்டுகளெல் லாம் வந்து குண்டுசாலையிலே நிறைந்து அடியுங்கோள் கொல் லுங்கோள் நாங்கள் வெளியே போகிறதேயல்லாமல் உள்ளே இருக்கிறதில்லை யென்று சொன்ன மாத்திரத்திலே அந்தவேளை யிலே பணத்தையும் காசையும் யோசனை பண்ணுகிற வேளையே அல்லாமல் துக்கசாகரத்திலே முழுகியிருக்கிறபடியினாலே போனவர்களெல்லாம் போகட்டுமென்று உத்தாரம் கொடுத் தார். இது சந்து கட்டென்று முன் போனவர்கள் கூட இதுக் குள்ளே தாக்கிலாவர வாய்ப்போமென்று சந்தோஷத்துடனே கூடி ஆண்பிள்ளைகளைக் கூடவிட்டுவிட்டான். அப்பாலிதுகளிப் படிப்போய் விட்டபடியினாலே துரை நினைத்துக்கொண்டிருந் தது; இதிலே பதினாயிரம் இருபதுனாயிரம் சம்பாதிக்கலாமென் றோசனை பண்ணி ஆசைப்பட்டுக்கொண்டிருந்தது போய் கூப் பிடாமல் உத்தாரம் கொடுக்கிறவேளையாய் வந்தபடியினாலே, கொடுத்துப்போட்டு சும்மாயிருந்தார்.

ஷேக்கு இப்ராம் நமக்கு பதிலாமை கழிந்துபோனதென்று சந்தோஷமாயவனும் அவனிடத்துக்குப் போனான். அப்பால் சந்தாசாயபு குமாரன் ரசாசாயபு அண்டைக்குப்போய் முபார்க்கு பாதி துரை சொன்னாரென்று சொல்லி மூனு சென் னப்பட்டணம் விருகனும் இரண்டு ரூபாயும் சந்தாசாயபு மகன் கிசுமதுதரால் கையில் வாங்கி சந்தாசாயபு பெண்சாதிக்கு நதிர், தாதிகையில் கொடுத்து அனுப்பிவைத்து முபார்க்கு சொல்லி துரையவர்கள் சொன்னதாய் சிறிது உபசாரம் சொல்லி அனுப்பிவைத்தேன். அதற்கு பதில் மோபார்க்கும் சொல்லி

அனுப்பி பாக்கு வெற்றிலையும் கொடுத்து அனுப்பிவைத்தாள் அப்பால் சந்தாசாயபு குமாரன் ரஜாசாயபு நீங்களும் துரையவர்களும் பிரயாசைப் பட்ட தின்பேரிலே சந்தாசாயபு அவர்கள் சாவனூர் பங்காபுரம் பன்னீராயிரம் மாராட்டியர் குதிரைகளுடனே வந்து சேர்ந்தார்; இவ்விடத்துக்கு வருகிறதற்கு உங்கள் துரையவர்கள் தயவுதான் வேண்டியது இவ்விடத்துக் காரியங்களும் உங்கள் துரையை தொட்டுதான் ஆகவேண்டியதென்றுஞ்சொன்னார். மற்ற சேதியெல்லாம் பகலுக்குமேலாய் பேசிக்கொள்ளுவோமென்று சொல்லி துரையவர்களுக்கு வந்த காகிதத்தை என்கையிலே கொடுத்து உங்களுக்கு காகிதம் வந்தது அந்த காகிதமெங்கேயோ மறந்தப்போலே உள்ளே வைத்தேனோ என்னமோ தெரியாது. பிறகு அனுப்பிவிடுகிறேன் என்று சொல்லி மதராந்த பண்டிதனுக்கு வந்த காகிதத்தை அவருக்குக்கொடுத்தான். தானப்ப முதலிக்கும் ஒரு காகிதம் வந்தது முசியே பேசேந்துக்கு மொருகாகிதம் வந்தது பின்னை யாராருக்கு வந்ததோ தெரியாது. அப்பால் நான் அனுப்பி வைத்துக்கொண்டு வீட்டுக்கு வந்தேன் எனக்கேற்கபார்த்தால் எனக்கு காகிதம் அங்கேயிருந்தெழுதி அனுப்ப மறந்துபோனதாய் தானே தோன்றியது. மற்றபடி பகலைக்கு சாப்பிடுவதற்குள்ளே துரையவர்கள் மனுஷர்கள் வந்தார்கள் நான் போனபோது துரையவர்களுக்கு மனசு சமாதானமில்லை, வெளியே மாடுகளை போகவொட்டாமல் தடைபண்ணிவையென்ற சொன்னார் மிஞ்சி அப்பாலே கொண்டுபோய் விட்டார்களென்று சொல்லிவிட்டு பாக்குகிடங்குக்கு வந்தேன்.

அதிலே காரைக்காலுக்கு உண்டிகை அனுப்புகிற காகிதத்தைக் கொடுத்து அனுப்பினார்கள். அந்தக்ஷணமே மலையப்பன் சேவகரை இரண்டுபேரை பயணம் பண்ணி அனுப்பி வைத்தேன். அப்படி இருக்கும்போது மாயேயிலிருந்து ஒரு பிராமணனும் ஒரு பண்டாரம் ஒருத்தனும் வந்து சொன்ன கபுறு நாங்கள் மாயே விட்டு புறப்பட்டு பனிரெண்டு நாள் ஆனது மாயேயிக்கி இருபத்திநாலு கப்பல்கள் வந்ததென்கிற சமாசாரம் அந்த கப்பல்களிலே நாலு கப்பல்கள் வந்ததென்கிறசமாசாரம் அந்த கப்பல்களிலே நாலு கப்பல்களானால் எங்கள் கண்ணாலே பார்த்தோம் மற்ற கப்பல்கள் மேலே இருக்கிறதென்று சொல்லிக்கொள்ளுகிறார்கள், மழையினால் விடா

மழையானபடியினுலே கப்பல்கள் துறைமுகத்துக்கு கொண்டு வந்து வைத்து பிடித்து போகாதென்றும் ஆனபடியினுலே உசக்கம் ஏத்திலே வைத்து பிடித்திருக்கிறுர்களென்றும் அந்த சேதிக்குத்தான் காகிதமெழுதி அனுப்பினதென்றும் வாய் விசேஷம் சொல்லி நாங்கள் காகிதங்கள் கொண்டுவந்து வரதா நெல்லூரிலே வைத்துவிட்டு பட்டணத்து சேதியறிந்து அப்பால் கொண்டு வருவோமென்று வரும்போது இங்கிலீஷ்கார மனுஷர் பத்துபேரும் ஐந்துபேரும் நடமாட்டமாயிருக்கிறுர்களென்றும் தன்னை பிடித்துக்கொண்டு ஒரு சட்டைக்காரனும் அஞ்சாறு சேவகரும் நீ மாயேயிலிருந்து காகிதங்கள் கொண்டுவருகிற பிராமணனல்லவாயென்று என்னைப்பிடித்துக்கொண்டு பத்து குத்துமாத்திரம் போட்டார்கள். முன்னே சிறிது நாட்கள் அந்த உத்தியோகத்திலிருந்தது மெய்யே இப்போ வரதாநெல்லூரிலே பயிரிட்டுக்கொண்டிருக்கிறுமென்று அதற்குத் தக்கதாய் உபசாரமாய் சொல்லிப்போட்டு தெய்வாதீனமாய் காகிதத்தை வைத்துவிட்டு வந்தோம். இல்லாவிட்டால் மோசம் வருமென்று சொல்லி இந்த சேதியை துரையவர்களுக்குச் சொல்லி பத்து துப்பாக்கிக்காரரையும் பத்து ஈட்டிக்காரரையும் கூட்டினுல் நாங்கள் போய் அந்தக் காகிதம் கொண்டுவருகிறுேம்; இல்லாவிட்டால் இங்கிலீஷ்காரர் மனுஷர் இவ்விடத்திலே திரிவதற்கு எப்படியாகிலும் காகிதத்தைப் பிடுங்கிக்கொண்டு போவார்களென்று சொன்னுர்கள். அதன்பேரிலே அவர்களை அழைத்துக்கொண்டு துரை சலோன் கொத்தளத்திலே இருக்கிறுரென்று சொன்னுர்கள். அங்கே யிருந்து ஆஸ்பத்திரிக்குப் (Hôpital) போனுரென்று சொன்னுர்கள்.

இதிலே அரியாங்குப்பத்திலிருந்து வந்த சேதி என்னவென்றுல்: முன் வாங்கிப் போனவர்கள் மறுபடி சேகரித்துக் கொண்டு அரியாங்குப்பம் எப்படியும் வாங்குவானேயல்லாமல் வாங்காமல் திரும்புகிறதில்லையென்று அரியாங்குப்பம் கொத்தளத்தைப் பார்த்தாப்போலே இங்கிலீஷ்காரர் பவுன்சு நடந்து சமிபித்தாப்போலே ஆத்துக்கு இப்புறம் சாரு துரைக்கு அடுத்தாப்போலே போட்டிருக்கிற கொத்தளத்திலிருந்தும் குண்டுகள் புறப்பட்டது. இதற்கு முகனேயாய்ப் புறப்பட்டு எஜமானுக்குப்பட்டு விழுந்தான். விழுந்தாப்போலே அவர்கள்

பவுன்சு மனுவு கொடுத்தது அந்தச் சந்துக்கட்டிலே ஷேக்கு அசேனும் அல்லிகானும் சேர்ந்து கையாடினார்கள். அப்போ அந்த இங்கிலீஷ் பவுன்சிலே எட்டு குதிரை செத்தது; மூன்று குதிரை ஷேக்கு அசேன் சின்ன சமேதார் மனுஷர் போய் பிடித்துக்கொண்டு வந்தார்கள் இதிலே இரண்டு குதிரைகள் இளப்பம். ஒரு குதிரை ஆயிரம் ஆயிரத்திரனூறு ரூபாய் பொறுமென்று சொன்னார்கள். இந்தபடிக்கு நடந்ததாயவர்கள் பாளையம் முறிந்து முத்திரிசப்பிள்ளைசாவடியே சிறிதும் வீராம்பட்டணத்திற்கு நேராயிறங்கி இருக்கிற சமுத்திரக்கரை யோரத்திலே பாதியுமாக போய்விட்டார்களென்று சேதி வந்தது. இந்தச் சேதி துரையவர்களுடனே ஆஸ்பத்திரியிலே சொல்லிக்கொண்டிருக்கும்போது நானும் செலோருகொத்தளம் போய்ப் பார்த்து அங்கேயிருந்து மதில் ஓரமாய் ஆஸ்பத்திரிக்கு வந்தேன். அங்கே துரையுடனே அரியாங்குப்பத்துச் சேதி சொல்லிப் போகிற சேவகன் என்னுடனே இந்தச் சேதி சொல்லிவிட்டு அப்பால் அரியாங்குப்பத்துக்குப் போனான். நானும் ஒப்பித்தாவிலே இருக்கிற துரையைக் கண்டு மாயே பிராமணன் வந்த சேதியும் காகிதத்தை வர்தாநெல்லூரிலே வைத்துப்போட்டு வந்த சேதியும் நடு வழியிலே இங்கிலீஷ்கார மனுஷர் நடமாடுகிற சேதியும் சொல்லி சேவகரை கூட்டச் சொல்லுகிற சேதியும் சொன்னதற்கு சேவகரை இப்போ கூட்டப்போகாது; அவர்களைத்தானே கொண்டுபோய் அந்தக் காகிதத்தை காலை பத்து மணிக்குள்ளே தானே வரச்சொல்லுமென்று சொல்லிவிட்டார்.

நாளையதினம் இராசபண்டிகையானபடியினாலே இன்று சாயங்காலம் இராசாவினுடைய பண்டிகை சுருபம்பண்ணி வரிசைவைத்து துப்பாக்கிகள் சுட்டு அப்பால் கொத்தளங்கள் ஊரைச் சுற்றிலும் பீரங்கிகள் சுடுகிற வாடிக்கையானபடியினாலே துரை சமுத்திர கொத்தளத்தைப் போய் அங்கே இப்ராம் தாலுக்கு சேவகரிலே முந்நூறு பேர் மலையப்பன் சேவகரிலே அறுபது பேர் பின்னையும் கும்பினீர் சேவகரிப்பால் பெரிய மனுஷர் கோன்சேலியர்கள் கணக்கறிவார்கள். எல்லாமல்லோ இப்போ ஆறு நாளை கோட்டைக்கார்க்கிறார்கள். இவர்களையும் வைத்து மூன்று வரிசையும் துப்பாக்கிகள் சுடச்சொல்லி அப்பால் மூன்று வரிசையும் துப்பாக்கிகள் சுட்டான். பிறகு சமுத்திரக்கரையிலே இருக்கிற பீரங்கிகள் இருபத்தினாலு

ராத்தல் குண்டு ஓடுகிற பீரங்கிகளெல்லாம் ஏகவேளையிலே சுடுங்காட்டியும் சத்துருக்கள் வயிறுகளெல்லாம் கிழிந்து முறிந்துபோய்விட்டது. அப்பால் அரியாங்குப்பத்து ஆத்தோரமாயிருக்கிற நம்முடைய லசுக்கரிலேயும் அரியாங்குப்பத்திலேயும் அந்தப்படிதான் சுட்டார்கள். இன்றையதினம் இங்கிலீஷ்காரரிலே மூன்று நான்கு பேர் நல்ல சறுதாதுகள் நல்ல மனதுள்ளவர்கள், அவர்கள்தானிந்த இங்கிலீஷ் படைக்கெல்லாம் நல்லகைகாரர் ஆனபடியினாலே அவர்கள் விழுந்துபோனபடியினாலே இங்கிலீஷ்காரர் படை இனி முன்னுக்கு வரத்தக்கதில்லை என்று எனக்குத் தோன்றிருக்கிறது. அப்படித்தான் நடக்கப்போகிறது என்று இந்த தஸ்திரத்திலே தீர்த்து எழுதினேன். இன்றையதினம் சண்டையிலே அவரவர் வந்து கபுறு சொல்லுகிறபடிக்கு சாவு காயமும் திறளாயெழுதவேணும். ஆனால், என் புத்திக்கேற்க தோத்துகிறது என்னவென்றால்: நூற்றன்பது சாவு இருனூறு முன்னூறு மட்டுக்கும் காயம் வெள்ளைக்காரர் தமிழர்கள் உள்படவென்று தோன்றுகிறது. இந்தபடிக்கேயிருக்கும். சற்றேறக்குறைய அப்பால் நம்முடையவர்கள் டிக்காணுவிலேயிருந்து சண்டை பண்ணினபடியினாலே காயக்காரர் இருபது பேரும், சாவு அஞ்சு பேரும் முண்டானது. இதுகள் நடந்தபிறகு சாயங்காலவேளை இங்கிலீஷ்காரருடைய் கப்பித்தான் மூசியே தேலத்தூநக்கு எழுதியனுப்பி எங்கள் பிணத்தையும் காயக்காரரையும் நாங்கள் பார்த்து எடுத்துப்போகிறதற்கு உத்தாரம் கொடுக்கவேணுமென்றும் எழுதியனுப்பினதற்கு நல்லது அந்தப்படிக்குப் பார்த்து எடுத்துப்போங்களென்று உத்தாரம் கொடுத்து அனுப்பினதற்கு அவர்கள் மனுஷன் வெள்ளைகொடி யொன்று பிடித்துக் கொண்டு வந்து ரெணகளம் சோதித்து காயக்காரரையெல்லாம் எடுத்துக்கொண்டு போனார்கள். சிறிது பிணங்களையும் யெடுத்து அப்பாலே கொண்டுபோய் புதைத்துப்போட்டு போறவர்கள் அரியாங்குப்பம் கொத்தளத்தண்டையிலே சிறுது பிணங்கள் விழுந்திருக்கிறது எங்களிடத்திலே கூலிக்காரரில்லை நீங்கள் புதைத்துப்போடவேணுமென்று மூசியே தேலத்தூநக்குச் சொல்லி அனுப்பினபடிக்குப் போய்ப் பார்க்க இருபத்தாறு பிணங்கள் விழுந்து கிடந்தது அதைப் புதைத்துப்போட்டார்கள் அதிலொரு பெரிய மனுஷன் நானூறு

பேருக்கு எஜமானனும் அவன் கால்போய் ஜீவனுடனே யிருந்தான் அவனே முசியே தேலத்தூர் பல்லக்கிலே போட்டு துரை அண்டைக்கு அனுப்பினூர். அவனே ஒப்பித்தாலுக்கு அனுப்பி விட்டார்கள். இது பார்த்த சேதியும் அடிக்கடி துரையவர்களுக்கு எழுதிவந்த கபுறும், துரையவர்கள் சொன்ன கபுறும் எழுதினேன்.

இன்றையதினம் ஜனங்கள் சறுவ கோபாறமும் யெடுத்துக்கொண்டு ஊரைவிட்டுப் போய்விட்டதற்கு என் முகனேயிலே இல்லாமல் என்னே நம்பாமல் துரை பரஸ்பரமாய் ஷேக்கு இப்ராம் மாரிபத்திலே நடப்பித்துக்கொண்டுபோன படியினூலே நான் பதிலாமை தப்பித்துக்கொண்டேன் அல்லாமல் மற்றபடி என்முகனேயிலே நடந்தால் தாட்டி வெகுபதிலாமையும் போடுவான், வெகுபணம் சம்பாதித்துக்கொண்டேனென்று சொல்லுவான் பட்டணத்தைக் காபிராபண்ணினேனென்றும் சொல்லுவான் துரையும் மெய்யென்று யெண்ணுவார் அப்படிவராமல் சுவாமி காற்கிறூரென்று சங்கல்பித்துக்கொண்டிருக்கிறபடியினூலே (இதற்கு முன்) எட்டாம் நாள் தானே தெத்துவாசலுக்கும் மேட்டுக்கும் நம்முடைய சீட்டுக் கவையில்லே என்றும் நம்முடைய உத்தாரமும் கவையில்லேயென்றும் யெல்லாம் தன்னண்டைக்கு வந்து சொல்லவும் தான் உத்தாரம் கொடுத்து அனுப்புகிறபடிக்கு நடக்கிறதென்றும் தம்முடைய முத்திரைப்போட்ட கடுதாசிவந்தால் விடுகிறதென்றும் அதன்பேரிலே ஷேக்கு இப்ராம் போய் பிராது பண்ணவும் என்னே அழைத்து என் ஒடுதி சொல்லுகிறதே உன் ஒடுதி கவையில்லேயென்று சொல்லி பரஸ்பரமாய் மேட்டுக்கு கபுறு நடப்பித்துக்கொண்டது. இதுகாரியம் இப்போ நடந்து நமக்கு தெரியாதபடியினூலே அப்போ விசனமாய்க் கண்டது. இப்போ நடந்த காரியத்திற்கு இனிமேல் நடக்குமென்று ஸ்வாமிக்கு தெரிந்திருக்கிறபடியினூலே முன்னதாக விளக்கி வைத்தாரென்று எண்ணிக்கொண்டேன். மற்றபடி யோசனைக்காரால் ஆப்தமாயிருக்கிறவர்களும் நான் யெழுதினபடிக்கே சொன்னூர்கள்.

இதல்லாமல் இன்று வந்தசேதி முத்துமல்லாரெட்டி முந்தாநாள் வியாழக்கிழமையன்று புதுச்சேரி இங்கிலீஷ்கார;

வந்து பிடித்துக்கொண்டுபோனதாய் வெளியே சொல் பிறந்திருக்கிறபடியினாலே இவரும் புதுச்சேரி முழுகிப்போச்சென்று தீர்த்துக்கொண்டுதான் தானே சிறிது ராணுவத்துடனே வந்து பெரும்பாக்கத்திலே யிருக்கிற நம்முடைய குமஸ்தா திருமுடையா பிள்ளை முதலானபேரை காயப்படுத்தி பிடித்துக்கொண்டு போனதுமல்லாமல் அங்கேயிருந்த தான்யம் தவசம் சமஸ்தமும் எடுப்பித்துக்கொண்டுபோய் அப்பால் சித்தாமுறி ராமுரெட்டி முதலானபேருது இருந்த நாலாயிரக்கலம் நெல்லும் பின்னையுமிருந்த நவதானியங்களும் யெடுப்பித்துக்கொண்டு போனதுமல்லாமல் மாடு ஆடுகளென்ன உண்டோ அதுகளை ஓட்டிக்கொண்டு போனுனென்று நதிராமுடையாப்பிள்ளை முதலானபேரை வெகு அடி அடிக்கிறுனென்றும் அடித்து உப்பைக் கறைத்து வார்க்கிறுரென்றும் இப்படி சேதி வந்தது. நல்லது சுவாமியிருக்கிறுர் இந்த ராகுபுத்தி அந்திரத்திலே இப்படி கிலேசத்தைக் கொடுத்தவர் பின்னை ஒரு நல்ல சுப கரகச்சித்திரம் வந்து அந்த முத்துமல்லா ரெட்டியை அதுக்கேற்றபடி நடத்தி அந்த சந்தோஷத்தைக் கொடுத்து நடத்த அறியாதாவென்றும் யோசனை பண்ணிக்கொண்டேன்.

நபாபு மாபுசுகான், முகமது தாவாக்கல், ஜாகீர்தான் கோசாசமீர், வக்கீல் சுப்பய்யனுக்கும் காகிதங்களெழுதி இதற்கு பிரயத்தினம் பண்ணச்சொல்லி சேஷாத்ரிபிள்ளையவர்களுக்குக் காகிதமெழுதிக்கொடுத்து அனுப்பிவைத்தேன். இவ்விடத்திலே கலாபவேளையானபடியினாலே அடிக்கடி இங்கேயிருந்து காகிதங்கள் போகவும் வரவும் சமயபேதமாயிருக்கிறபடியினாலேயும் சேஷாத்ரிபிள்ளை அவர்களுக்கு எழுதியனுப்பினது.

*1748* ஆ. ஆகஸ்ட் மீ *25* உக்கு விபவ ஞு ஆவணி மீ 13 உ ஆதிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே ஏழரை மணிக்கு துரையவர்கள் கோட்டை கோவிலுக்குக் கோன்சேலியேர் பின்னையும் கணக்கர் மற்றுமுண்டான பெரிய மனுஷரெல்லாரும் கோவிலுக்குப் போய் பூசைக்கேட்டு அரியாங்குப்பம் ஆத்தங்கரையிலே இருக்கிற தாஷ்மான் சுற்றிலும் கொத்தளத்திலே வெள்ளைக்

கார சொல்தாதுகளிருக்கிறபடியினாலே கணக்கர் மற்றமுள்ள சிப்பாய்களைமாத்திரம் வரிசை வைத்து மூன்று தரம் துப்பாக்கி சுட்டு மூன்று தரமெப்போதும் சுடுகிற பீரங்கி இருபத்தொன்று விழுக்காடு மூன்று தரம் சுட்டார்கள். அப்பால் வீவ்ருவா (Viveroi) கூப்பிட்டு அப்பால் ராசாவினுடையபண்டிகையான படியினாலே எல்லோரும் துரைக்கு உபசாரம் சொல்லி அப்பால் துரையவர்கள் வீட்டுக்கு வந்து கப்பே குடித்தவுடனே இருபத்தொரு பீரங்கி இராசாவினுடைய சலூநிச் சொல்லின பிற்பாடு அவரவர் வீட்டுக்கும் அவரவர் உத்தியோகங்களுக்கும்போனார்கள். நான் துரையவர்களண்டைக்குப் போய் நேற்று சந்தா சாயபு அனுப்பின காகிதம் தலபுபிடித்துச் சொன்ன வயணம்: நாம் சாகு ராஜா வசத்தில் அனுப்பிவைத்துக்கொண்டு எங்கள் பழமையாகிய ஆற்காட்டு சுவாவுக்கு வரத்தக்கதாக எத்தனம் பண்ணிக்கொண்டு சிறிது பவுன்சுங் கூட்டிக்கொண்டு மூன்று நாள் பயணமிப்புறம் வந்துசேர்ந்து அவ்விடத்திற்கு உடனே வருகிற சேதி அறியவேண்டியதென்று நீங்கள் ஜெயராம் பண்டிதருடனே சொல்லியனுப்பினதினாலே இவ்விடத்திலே சமஸ்த காரியமனுகூலமாய் நானுமெங்கள் பழமையாகிய இடத்து அதிகாரத்துக்கும் ஏற்பட்டு புறப்பட்டேனென்றும் முன்னுக்கு சமஸ்தமும் உங்களைத்தொட்டு ஆகவேணுமென்றும், என் குமாரத்தி கல்யாணம் முதலானதுகள் தாங்கள் நடப்பித்த விஷயங்கள் முதலானதுகளுக்கு நான் என்ன உபசாரம் எழுதப்போகிறேன் என் சரீரமே தங்களுடையது. ஆனால் மற்றபடி என் ஆதீனம் தங்களுதென்கிறதற்கு சந்தேகமில்லை. யென்று மற்ற சேதியெல்லாம் தம்முடனே என் குமாரன் வந்து சொல்லத் தெரியவருமென்று எழுதியிருந்த வயணமாம் படியே சொன்னதற்கு துரை நல்லது பதில் உத்தாரம் எழுதச் சொன்னார் அது:

நாம் பிரார்த்தித்தப்டிக்கு சுவாமியினுடைய கடாக்ஷத்தினாலே தாங்கள் சகல தவுலத்துடனே வரவேணுமென்று பிரத்தித்தபடிக்கு சுவாமி தயவுபண்ணி தங்களுக்கும் சகல தவுவத்துடனேயும் பய்ணப்பட்டும் வருகிறவர்கள் சீக்கிரமத்துக்கு வந்து சேர்ந்து ஆற்காடு கை வசம்பண்ணிக்கொண்டால் சகல காரியமுமனுகூலமாம். நாம் தங்கள் மனதுக்கு இவ்விடத்திலிருந்து என்ன சகாயமாகவேணுமோ அதெல்லாம்

கரன்சாமிபண்ணி அனுப்பிவைக்கிறேனென்று உபசாரமாய் எப்படி எழுதவேணுமோ அப்படி எழுதச்சொல்லி சொன்னர்.

அப்பால் மாயே காகிதம் வந்து பார்த்துக்கொண்டார். நேற்று முறிந்துப்போன இங்கிலீஷ்காரர் பவுன்சும் சிறிதுமுத் திரீசப்பிள்ளைசாவடியே போனதுபோக மற்றது சமுத்திரக் கரையிலேதானே நிற்கிறதாய்ச் சேதிவந்தது. அதிர்வேட்டாய் ஐந்நூறு பீரங்கிமாத்திரம் யாராகிலும் வரப்போருர்கள் என்று சுட்டார்கள். நேற்றையதினம் நம்முடையவர்கள் அரியாங்குப்பம் போய்ச் சேருகிறதற்கு இல்லாமலிருந்துதே இன்றையதினம் மண்வெட்டி கோடாலி வெட்டுகத்தி முத லானதுகளெல்லாம் கொடுத்தனுப்பி அரியாங்குப்பத்துப் பாதிரி கோவில் சமீபத்திலே இருக்கிற மரங்களையெல்லாம் வெட்டித் தள்ளிப்போடச் சொல்லியும் கோவில் மதிலே இடிக்கச் சொல்லி யும் கோவிலிலே நானூறு சிப்பாய்களைக் கொண்டுபோய் வைக்கச்சொல்லி உத்தாரம் கொடுத்தனுப்பி ஆற்றங்கரை ஓரத்திலே பின்னையும் இரண்டொரு கொத்தளம் போடத் தக்கதாக மூசியே பாராதி போய் கொத்தளம் போடவைக்கிருர். இப்படி மத்தியானமட்டுக்கும் சேதி கேழ்க்கப்பட்டது.

இற்றைநாள் பகலுக்கு மேல் இரண்டுமணிக்கு துரையவர் கள் என்னை அழைப்பித்து ஆத்தூரண்டையிலே இருந்தாப் போல் நம்முடைய வெள்ளைக்காரர் மாயேயிலிருந்து வருகிறவர் களை இப்படி பெருமுக்கல் மார்க்கமாய் வரச்சொல்லி மாயே பிரா மணர் இரண்டுபேரையும் அனுப்பிவைக்கிறேன் நீயும் முன்னே அங்கேபோயிருக்கிற பிராமணனுக்கு யெழுதியனுப்பு துரை யவர்கள் வெள்ளைக்காரர்கள் வருகிறபேருக்கு காகிதமனுப்பி ஞர்; அந்தக் காகிதம் பார்த்துக்கொண்டு அவாளெப்படி போரார்களோ எப்படி சொல்லுகிருர்களே அந்தபடிக்கு நடந்துக்கொள்ளச் சொல்லி யெழுதியனுப்பச் சொன்னர். அந்தப்படிக்கு பெருமாள்நாய்க்கன்பேருக்கு யெழுதிய காகிதத் தை போகிற இரண்டு பிராமணுள் கையிலே கொடுத்த பிற் பாடு தம்முடைய கணக்கு ரங்கப்பிள்ளையை அழைப்பித்து இருநூறு பொன் விராகன் வாங்கிக்கொடுத்து இரண்டுபேர் பிராமணரையும் உள்ளே பெண்சாதியண்டைக்கு அழைத்துப் போய் ரகசியமாய் சொல்லி அப்பால் இருநூறு விராகன்

ரங்கப்பனண்டைக்குப்போய் வாங்கிக்கொள்ளச்சொல்லி சொன்னுரென்றும் பிராமணர் என்னண்டைக்கு வந்தார்கள்; அப்பால் கணக்கு ரங்கப்பிள்ளை விராகனில்லையென்று ரூபாய் முன்னூற்றிநாற்பத்தேழு விழுக்காடு அபரஞ்சி வர்த்தகம் சிங்கன்னசெட்டி கையிலே கொடுக்க அவன் நக்ஷத்திரமும் புதுச்சேரி வராகனும் அகப்படவில்லை யென்று பழய புதுச்சேரி விராகனும் பழய நாகபட்டணம் விராகனும் பழயபரங்கிப்பேட்டை விராகனுமாய் கொண்டுவந்து கொடுத்து முன்னூற்றன்பது விலையென்று சொல்லி குறைகிற ஆறு ரூபாயும் நாங்கள் கடையின்பேரிலே போட்டுக் கொள்ளுகிறோமென்று கொடுத்த இரனூறு விராகனையும் அந்த மாயே பிராமணர் கையிலே கொடுத்து பயணம்பண்ணி அனுப்பிவிட்டேன்.

மற்றபடி இங்கிலீஷ்காரர் அசந்தாப்போலே இருந்தார்கள் பின்னையொன்றும் நடக்கவில்லை கனகராயமுதலிதோட்டம் பாதிரிதோட்டம் அப்புமுதலிதோட்டம் முசியே ஓசே தோட்டம் இதுகளையெல்லாம் வெட்டிப்போடச்சொல்லி உத்தாரம் கொடுத்தார்கள்.

அந்தப்படிக்கு வெட்டியும் போட்டார்கள். மற்றபடி விசேஷ விந்தைகள் சேழ்க்கப்படவில்லை.

1748 ஆ ஆகஸ்ட் மூ 26 உ க்கு விபவ ஞூ ஆவணி மீ 14 உ சோமவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் என்னை அழைத்தனுப்பி பட்டணத்து ஜனங்களுக்கு ஆதரவாய் வெளியிலிருந்து தானியம் வரவில்லையாவென்று கேட்டார். வெளியிலேயிருந்து வரவில்லை நேற்றையதினம் நெல் கொண்டுவந்து விற்கிற வர்த்தகர்களை அழைப்பித்து நீங்களிந்தச் சமயத்திலே தானியம் கொண்டுவந்து விற்கத் தேவையில்லையா? அப்படி விற்ருல் பட்டணத்திற்குச்சகாயம்பண்ணினதாகிறது. உங்களுக்கு நல்ல விலைக்குச் சம்மதியானபடிக்கு விற்றுக்கொள்ளலாமென்றும், இப்படிப்பட்ட சமயத்திலே பத்து பணம் சம்பாதிக்கவேணுமென்றும், எப்போதும் ஆதாயம் வருமா? இந்த சமயத்தில் தான் ஆதாயம் சம்பாதிக்கவேணுமென்று சொன்னதற்கு

அவர்கள் இராஜீகமானுல் எப்படி? முதல்பெரிதோ? ஆகாயம் பெரிதோ? என்று சொல்ல வந்தார்கள். எல்லாரும் லோகத் துக்குள்ளே இப்படி யாதொரு சமயம் பார்த்து ஒட்டுகிறதிலே தான் பத்து பணம் கிடைக்கிறதென்றும் இல்லாவிட்டால் பத்துக்குக் கொண்டு பத்தேகாலுக்கு விற்கிறதிலேயா மகராச ஞக போகிறதென்று மார்க்கமாய்ச் சொன்னதற்கு அதற்கு பத்து பணம் விசேஷித்து இருக்கிறவர்கள் ஒட்டவேண்டியது. நாங்களென்ன ஏழைகள் எங்களுக்குப் பரபத்தியம் ஆஸ்தியா யிருக்கிறவர்கள் எங்களுக்கு அவ்வளவு தூரம் ஒட்டக்கூடா தென்று சொன்னதின்பேரிலே இவர்களுக்கு பயமே குடியா யிருக்கிறவர்களானபடியினுலே இந்த வேளைக்கு அவர்களுக்கு தைரியம் சொல்லாவிட்டால் கூடாதென்று யோசனை பண்ணிப் பட்டணத்துக்கு தானியம் தாக்ஷியில்லாமல் கொண்டுவந்து வில்லுங்கள் வருகிறவர்களெல்லாம் வாய்வு மூலமாய் வடக்கு மூலமாய் கொண்டுவருகிறது ஒருவேளை இங்கிலீஷ்காரர் பவுன்சு சுற்றிக்கொண்டால் அப்படியே திரும்பிக்கொண்டுபோகிறது புதுச்சேரியோ சொல்ல கவை யில்லை சமீப கிராமங்கள் துலுக்கர் ஜாகீர்தாரன் பிரபலமாய் இருக்கிறவன்பேர் சொல்லுகிறது முன்னதாயனுப்பி விசாரித் துக்கொண்டு அப்பால் பொதியைகொண்டு வருகிறது. அவ னவனுடமைக்கு யெப்படி யெப்படி பிரயாசைப் படுகிருனே அப்படி மனவஞ்சனையில்லாமல் சத்தியத்துடனே பிரயாசைப் பட்டுக்கொண்டு வரும்போது ஒருவேளை இங்கிலீஷ்காரரை தொட்டு இராசிகமானுல் மகா-ா-ா-ஸ்ரீ துரையவர்களுக்கு மனுபண்ணி உங்களுக்கு ருசிகத்திலுலே வரப்பட்ட நஷ்டம் நான் வாங்கிக்கொடுக்கிறேன் என்று பரவசம் சொல்லி தானி யங்கொண்டுவரச்சொன்னேன். இப்படி யெல்லாம் சொல்லி யிருக்கும்போது கொண்டுவராமல்போனுல் அவர்கள் கையிலே ஆயிரத்தி இருனூறு விராகன் அபராதமும் வாங்கிக்கொண்டு காதும் அருத்து நூரடியும் அடித்து ஊர் கிடக்க தெருத்தி விடுகிறதென்று சொல்லி இப்படிக்கு சாவடிக்கணக்கப்பிள்ளை களையும் கூடவைத்துக்கொண்டு திட்டப்படுத்தி இந்தவயண மாம்படியே அவர்கள் கையினுலே யெழுதிவைத்தேனென்று துரையவர்களுடனே சொன்னதற்கு நல்ல காரியம் பண்ணி னுய் பட்டணத்துக்கு தானியம் தூஷியில்லாமல் அழைப்பிக் கிற உபாயமென்ன உண்டோ அந்த உபாயமெல்லாம் பண்ணி

முத்திகைமட்டு தானியம் வராமல்போனதென்கிற சொல் இல்லாதபடிக்கு நடப்பிக்கவேணுமென்றும் கும்பினீருக்கு இப்படிப் பட்ட சமயத்திலே பணத்தை பார்க்கிறவேளையல்ல எல்லாக் காரியம் சலாபிக்க பார்க்கவேணும் பணமேதாகிலும் கொடுத்துக்கூட தானிய மழைப்பிக்கிறது குணமென்று சொல்ல வந்தார். இந்தபடிக்கு இப்போ சொன்னபடிக்கு வெளி வர்த்தகருக்குக்கூடச் சொன்னால் வெகு பேர் கொண்டுவருவார்கள். கும்பினீர் பணத்தை ஒருவன் கொண்டுபோய் கொள்ளப் போனால் இன்னார் பணமென்று ஒங்கும். இங்கிலீஷ்கார மனுஷரங்கங்கே திரிகிறார்கள்; ஒருவேளை என்னமாயிருக்குமோ தெரியாது. இப்படியானால் அவனவன் எப்போதும் கொண்டு வருகிறவனானபடியினாலே இதன் சாடை வேறையாயிருக்குமென்று சொன்னதற்கு நல்லது அப்படித்தானே செய்யென்று சொன்னார்.

பார்த்தியா ரங்கப்பிள்ளை! நேற்று இராத்திரி ஒரு மணி வேளைக்கு நம்முடையவர்கள் வெளியே கஸ்து திரிகிறவர்கள் கடற்கரை கொத்தளத்தோரமாய் வந்தார்கள். இவர்களாரென்று கேட்டறியாமல் சந்து நேராயிருந்தவன் கூப்பிட்டுச் சுட்டமாத்திரத்தில் பின்னையும் ஐந்தாறு பேர் பத்து பேர் மாத்திரம் சுட்டார்கள். தாழ வந்தவர்கள் கொத்தளத்தின் பேரிலே இருக்கிறவர்களை சுட்டார்கள். இப்படி ஒருத்தருக்கொருத்தர் நம்முடையவர்கள்தானே சுட்டுக்கொண்டு காயப் படுத்திக்கொண்டார்கள். அப்பால் நான் போய் விசாரித்தால் நம்முடைய மனுஷர் அதன்பிற்பாடு அவரவர்களுக்குப் புத்தி சொல்லி இவர்களுக்கும் புத்தி சொல்லி மார்க்கமாய்க் கூப்பிட்டுப் போகச் சொன்னேன். அதன்பேரிலே இராத்திரி முப்பதும் தூக்கமில்லையென்று சொன்னார்.

அப்பால் கூலிக்காரருக்கு நெல் அரிசி வெளியிலேயிருந்து வராமல்போனால் போராட்டமாகுமே. ஆனபடியினாலே ஊரிலே அவரவர்களுக்கு மனவர்த்தி சிலவுக்கு வாங்கி வைத்திருக்கிறதிலே நாலிலொரு பங்கு கொடுக்கச்சொல்லி வாங்கி இந்தக் கூலி ஜனங்களுக்குக் கொடு; இதற்குள்ளே உன் வீட்டிலேயிருந்து கொடுத்தாலப்பால் நீ ஒருத்தர் வீட்டு தானியம் கொடுக்கச் சொல்லுகிறப்போது உன்னை ஒன்றும் சொல்லமாட்

டார்களென்று சொன்னார். அதற்கு நானிருந்துக்கொண்டு இந்த சமயத்திலே உதவாத நாங்கள் பின்னை எப்போ உதவப் போகிறோமப்படியே கூலிக்காரருக்குக் கடையிலே கொள்ளக் கிடையாமல் போனால் அப்படியே நடப்பிக்கிறேன் என்று சொல்லிவிட்டு நின்றேன். அதிலே திரும்பியும் வந்து கும்பினீர் நெல் உன் வசத்திலே எம்மாத்திரமிருக்கிறதென்று கேட்டார். என் வசத்திலே விழுப்புரத்திலேயிருந்து வந்தது மூன்று கரிசைக்கு மேல் நாலு கரிசைக்குள்ளே இருந்ததென்று சொன்னேன். நல்லது அதைக் கொடு; அது ஆன பிற்பாடு வேண்டுமானால் ஊரிலே முன்னே சொன்னபடிக்கு இருக்கிற நெல் அரிசி எடுத்துக்கொடென்று சொன்னார்; நல்லதையாவென்று சொன்னேன்.

அதன்பிறகு சந்தாசாயபு மகன் உங்களை வந்துக் கண்டு பேசவேணுமென்று கேழ்கிறான் என்று சொன்னதற்கு பகலுக்கு மேலாக வரச்சொல்லென்று சொன்னார், அந்தபடிக்கு வரச்சொல்லி ராசே பண்டிதனுடனே சொல்லி அனுப்பிவைத்தேன். அப்பால் லோகாபிராமமாய் பேசியிருந்து இங்கிலீஷ்காரர் பவுன்சு வந்து சண்டை பண்ணினது வெளி மனுஷர் என்ன சொல்லுகிறார்கள். உள்ளூரா ரென்ன சொல்லுகிறார்கள் என்று கேட்டார். அதற்கு நான் சொன்னது: வெளியிலேயும் உள்ளூரிலேயும் விவேகியா யிருக்கிற பேர்களுண்டே அவர்கள் சொல்லுகிறது. ஆனாலொருக்கால் வந்து முனைந்து நடத்தின மட்டுக்கும் அரியாங்குப்பம் கொத்தளங்கூட வாங்கமாட்டாமல் போனபடியினாலே அவர்களுக்கு ஜெயகாலமில்லை. ஆனால் சங்கடம் மாத்திரமுண்டாயிருக்குமென்று சொல்லிக்கொள்ளுகிறார்களென்று சொன்னதற்கு உன் புத்திக்கென்ன தோணுதென்று கேட்டார். என் புத்திக்கேற்க தமிழருடைய சாஸ்திரபடிக்கு இந்தப்பட்டணத்திற்கு புரட்டாசி மீ முதற்கொண்டு நல்ல யோக காலமென்றும், உமக்கும் வெகு சந்தோஷங்கள் எல்லாம் அடையபண்ணுவார் சுவாமியென்று சொல்லிக் கொள்ளுகிறார்கள். ஆனபடியினாலே இந்தப் பட்டணத்திற்கு அலசடைமாத்திரம் தோன்றி மாறுமென்று முன்னே சொன்னபடிக்குத்தானே அலசடை உண்டானபடியினாலே நமக்குக் கப்பல்களும் வந்து சத்துருக்களும் நாசத்தை அடைந்து

உமக்கும் இதனாலே வெகு கீர்த்தி வருமென்று தோன்றுகிறது என்று சொல்லி இதுவரைக்கும் இப்படிக்கு நான் சரிபார்த்துக் கொண்டுவந்தேன். இந்த சாடையின்பேரிலேதான் உங்களுக்கு சென்னப்பட்டணத்துக் காரியங்கள் முதலானதுகள் நான் சொன்னதும் நான் சொன்னபடிக்குச் சரிப்பட்டு வந்தது. உங்கள் மனதுக்கு தெரிந்திருக்கிறதே யென்று சொல்லி இந்த மாதத்திலே அலச்டையாய் இதன்பேரிலே மனதுகிலேசமும் இப்படியிருக்கும். பிறக்க வருகிற மாத முதற்கொண்டு கப்பல்கள் முதலானதுகள் வரும்; சமஸ்த ஜெயமும் நீர் அடையுறதென்று சொல்லி இது தெய்வ கதியென்று சொல்லுகிறது லோக விவகாரப்படிக்குப் பார்த்தால் இப்போ இந்தப்பட்டணமிருக்கிற பிலனுக்கும் மனுஷர் பிலனிருக்கிறதறகும் எத்ராளிகளிலே இருபதுனாயிரம் பேர் வெள்ளைககாரரிருந்து செத்தவன் செத்தானென்று பிணத்தின்பேரிலே மெரித்தேறி பதினாயிரம் பேர் பதினையாயிரம் பேர் சாவு கொடுத்தாலப்போ இதுலேயும் இரண்டாயிரம மூவாயிரம் சாவுண்டாயிருக்கும். அப்போ கோட்டையவர்கள் கைவசமானால், ஆனபிதயல்லாமல் மற்றபடி ஆகத்தக்கதில்லையென்று தோன்றியிருக்கிறது. என் மனப்பூர்வீகமாக எனக்குத் தோன்றினதை நான் ஒளியாமல் சொன்னேன் என்று சொன்னதற்கு ஏழாயிரம் எண்ணாயிரம் வெள்ளைக்காரர் சாகிறது, எத்தனை காயக்காரரிருந்து, ஆனபடியினாலே அந்தமட்டுக்குஞ் சாவு உண்டாயிருந்தால கோட்டை போய்விடுமென்று சொன்னார். அதற்கு நான் சொன்னது: அவன் கப்பல்களிலிருக்கிறவர்கள் கூடப்பார்த்தால் ஐயாயிரம் போ ரொம்ப ஆராயிரம் பேர் இருக்கிறதென்று சொன்னேன். அது மெய்தானென்று சொல்லி பின்னையும் லோகாபிராமமாய் பேசியிருந்து அப்பால் வீட்டுக்குப் போனேன்.

இற்றைநாள் சாயங்காலம் முசியே லோர்போல்டை அழைத்து முகத்துவாரத்தை வெட்டிவிடச் சொன்னார். வெட்டினவுடனே ஆற்றுத் தண்ணீர் குறைந்து சமுத்திரத்தில ஓடின சாடை அறிந்து முசியே பாரதி ஆற்றுத் தண்ணீர் வாங்கினால் சத்துருவுக்கு வருகிறதற்கு இடமுண்டாயிருக்குமே யென்று எழுதினதின்பேரிலே மறுபடி முகத்துவாரத்தை துத்துப்போடச் சொல்லி முசியே லோபோல்டுபேரிலே கோபித்துக்கொண்டதும் காகிதத்திலெழுதி முடியாது. அந்தபடிக்கு முகத்துவாரத்தை தூத்துப்போட்டார்கள். நான் கேட்டமட்டுக்கும் இது சேதி.

*1748* ஆ ஆகஸ்ட் மீ *27* உக்கு விபவ ஸு ஆவணி மீ *15* உ மங்களவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் என்னை அழைத்தனுப்பி வைத்து பெருமுக்கல் மகம்மதுசாயபு அவர்கள் குமாரன் மிய்யான் சாயபுக்கு எழுதச்சொன்ன வயணம்: நம்முடைய பிரான்சுக்காரர் மாயேயிலேயிருந்து அவ்விடத்திற்கு வந்து சேருவார்கள். வந்தவுடனே தாங்களவர்களை ஆதரித்து வைத்து நமக்கு எழுதியனுப்பினால் அப்படியே யவர்களை அழைப்பித்துக்கொள்ளுகிறோமென்று உபசாரமாய் எழுதச் சொன்னார். இதுதான் சமயமென்று முத்துமல்லாரெட்டி. இப்படி ஆத்தூர் தாலுக்கு நான் குத்தகை வாங்கியிருந்தேன். அந்த கிராமங்களை புதுச்சேரியின்பேரில் இங்கிலீஷ்காரர் இருபத்தைந்து கப்பலுடனேயும் பன்னீராயிரம் பேருடனேயும் போய்ச் சுற்றிக்கொண்டார்கள். இனிமேல் புதுச்சேரி பிரான்சுக்காரருக்கு ஆசையில்லை என்று தீர்த்துக்கொண்டு மேலே எழுதப்பட்ட கிராமங்களிலே மூவாயிரம் வராகனது விலையுள்ள தானியமும், மாடுகளும், ஆடுகளும் பின்னையும் குடியானவர்கள் தட்டுமுட்டு உள்பட ஏகத்துக்கு எடுத்துக் கொண்டுபோனதுமல்லாமல், என் மனிதரிருந்தவர்களை நாலு பேர் அமுல்பண்ணினவர்களைப் பிடித்துப்போய் கொரடாவினாலே ஆயிரமிரண்டாயிரம் அடி அடிக்கிறதும் அவர்கள் கையிலேயிருக்கிறதை வாங்கிக்கொண்டதுமல்லாமல் இன்னும் நூறு கொடு; ஐம்பது கொடுயென்று கேழ்க்கிறதும் அடித்த அடியின்பேரிலே உப்பைக் கறைத்து வார்க்கிறதும் இப்படிப்பட்ட அலங்கோலம் என்னஉண்டோ அதுகளெல்லாம் நடத்துகிறான். இங்கே உங்களுடனே சொல்லி அதற்கேற்ற படி நடப்பிப்போமென்றால் அதற்கு சமய பேதகமாயிருக்குதென்று சொல்லுகிறதற்குக்கூட யோசனைபண்ணிக்கொண்டிருக்கிறேன். ஆனாலும் உங்கள் கடாக்ஷத்தினாலே நூறு சிப்பாய்களைமாத்திரம் தயவுபண்ணினால் அவனையும் அவன் புத்திரமித்திரர்களுடனே கொண்டுவருவேன். ஆனால் பட்டணத்தின்பேரிலே சத்துரு வந்தானென்றுதானே அவனிப்படி நடப்பித்ததென்று சாடையாய் லகுவாய்ச் சொன்னதற்கு அதற்கவர் முசியே துய்ப்ளேக்ஸ் சொன்னது: அந்த நாய் அப்புடி நடப்பித்தானல்லவா? நல்லது சுவாமி அவனெப்புடி நடப்

பித்தானே அப்படி அவனுக்கு அனுபவிக்க பண்ணிவைப்பார். இப்போ கழுத்திலே சத்துரு ஏறி யிருக்கும்போது ஒரு சேவகன் பதினாயிரம் சேவகர்களுக்குச் சமானமா யிருக்கிற வேளையான படியினாலே இப்போ அதுகளுக்குச் சமயமல்ல. ஆனால் உன்னுடைய உடமையை அழைப்பித்துக் கொடுக்கிறதுக்கும் அவனுக்கேற்ற ஆக்கினைபண்ணுகிறதற்கும் எனக்குப் பைத்தியமாயிருக்கும்போது உனக்கென்ன கவை. நாலு நாள் மாத்திரம் மனம் பொறுமென்று சொன்னாரதற்கு நான் சொன்னது: முன்னாலே அந்தக் கிராமம் குத்தகை வாங்கினது போலே சற்றே தொந்தரவுபண்ணி நினைத்து அதற்கேற்றபடி அப்போதானே நான் நடத்துகிறதாய் நபாபு மற்ற பேருக்குக் காகிதங்களெழுதி இவன் கிராமங்கள்கூட இவனைக்கூட பிடிக்க பிரயத்தனம்பண்ணி அப்போது பெருமுக்கல் மியா சாயபு எனக்கு அவன் ஜோலிக்குப் போகத் தேவையில்லை. உன் கிராமத்து வழி வராதபடிக்கு அவனுக்குத் தாக்கீது பண்ணி இருக்கிறேன். அவனும்மூடைய சிநேகம் கோரியிருக்கிறான். இனிமேல் ஏதாகிலும் உண்டானால் நமக்கெழுதி வையும்; அப்படி நாம் நடப்பித்துத் தருகிறோமென்று எழுதி இருக்கிறார். ஆனபடியினாலே நீங்கள் வெள்ளைக்காரர் சேதிக்கு எழுதச் சொன்ன காகிதத்திலே முத்துமல்லா ரெட்டி இப்படி நடப்பித்தானல்லவா? அந்த நாயை அதற்கேற்ற புத்தி சொல்லி வைக்கிறேனென்று எழுதியனுப்பி வைக்கிறேன் என்று சொன்னதற்கு நல்லது எழுதியனுப்பென்று சொன்னார். அவ்வளவு கவை யில்லை; முன் நான் சொன்னபடிக்கு எழுதி நானும் ஒரு காகிதமெழுதியனுப்புகிறேனென்று சொன்னதற்கு நல்லது எழுதியனுப்பென்று சொன்னார். அந்தபடிக்குக் காகிதங்கள் எழுதி பெரிய பிள்ளையை அழைப்பித்து உங்கள் துரைக்கு வயணமாய்ச் சொல்லென்று சொல்லவேண்டியதெல்லாம் சொல்லி காகிதங்களும் கொடுத்து ஒரு சேவகனையும் கூட கூட்டி அனுப்பிவைத்தேன்.

இதிலே அவாசாயபு ஊருக்குப் போகிறதாய் கலியாண காரியம் மெத்த மெத்த அவசரமா யிருக்கிறது. மாப்பிள்ளை வீடு சகல சாஞ்சாமியும் பண்ணுகிறார்கள். நாங்கள் பெண் வீட்டுக்காரர் சும்மாயிருக்கிறதா யிருக்கிறது. இப்போ துரையவர்களுக்கு மனது சண்டையின்பேரிலே யிருக்கும்போது

எப்படி கேழ்க்கிறதென்று யோசனை பண்ணிக்கொண்டிருக் கிருனென்று சொன்னதற்கு இந்த சமயத்திலே அவரென்ன மாய்க் கேழ்ப்பார். நான்தானெப்படிக் கொடுப்பேன்; இந்த வேளையிலே நானின்னும் பரபத்தியமாகிலும்பண்ணி பணம் சேர்த்து வைக்கவேணுமேயல்லாமல் கையிலிருக்கிற பணத் திலே ஒருகாசாகிலும் சிலவிடப்போமா உனக்குத்தெரியாதா? நீ சொல்லப்போகாதாவென்று சொன்னர். நான் அப்படித்தான் சொல்லி சண்டைக்காரியம் பார்த்துக்கொண்டு ஆகட்டுமென்று சொன்னால் கலியாணக் காரியமானதே அங்கே இருக்கிற இமாம்சாயபு பெண்சாதி என்பேரிலே நிஷ்டூரம் சொல்லுவா னென்று தாபந்தப்படுகிருனென்றும் லகுவாய் சொன்னதற்கு இல்லை இல்லை சண்டையென்று பயப்பட்டுப் போரோமென் கிருன். இப்போதானே போகச்சொல்லென்று சொன்னர். இனிமேல் ரெட்டிக்கிறதல்லவென்று, நல்லது சொல்லுகிறே னென்று சொல்லிவிட்டு அப்பால் சந்தாசாயபு மகன் வந்து உங்களைக் கண்டு பேசவேணுமென்று மூன்று நாளாய் சொல்லி அனுப்புவித்துக்கொண்டு நேற்றையதினம் உங்களைக் கேட்ட தற்கு சாயங்காலம் வரச் சொன்னீர்களே? சாயங்காலம் சமய மில்லையென்று இப்போ வந்து ராசோபண்டிதன் காத்துக் கொண்டிருக்கிருனென்று சொன்னதற்கு இப்போ என்னுடைய அலுவலுக்குத் தெரியாதா; எதாகிலும் சொல்லவேண்டிய பேச்சு உண்டானல் உன்னுடனே சொல்லச்சொல்லு. நீ வந்து என்னுடனே சொன்னல் நடக்கவேண்டியதற்கு நீயவனுடனே சொல்லவேண்டியது சொன்னல் அதற்கு உத்தாரம் சொல்லு கிறேன். அந்தப்படிக்கு ராசோபண்டிதனுக்குச் சொல்லியனுப் பென்று சொல்லிவிட்டு உள்ளே கபினேத்திலே எழுதப் போனர். அந்தபடிக்கு ராசோபண்டிதனுக்கும் சொல்லி அவா சாயபுக்கும் சொல்லி வீட்டுக்குப் போகச் சொன்னேன். அதற்கு அவர்கள் நாங்கள் துரையை வந்துக் கண்டுபேசிக் கொள்ளுகிறோமென்று சொன்னர்கள். அவசியம் கண்டு பேசிக் கொள்ளுங்களென்று சொல்லிவிட்டு பாக்கு கிடங்கிலே வந் திருந்து அப்பால் பனிரெண்டு மணிக்கு வீட்டுக்குப் போனேன்.

இங்கிலீஷ்காரர் வீராம்பட்டணத்தண்டையிலே இறங்கின விடத்திலே நூறு கூடாரமட்டுக்கும் கொண்டுவந்து போட்டுக் கொண்டு இரண்டு கொத்தளங்களும் போட்டுக்கொண்டு பல

காய்ச்சுக்கொண்டு பலமெல்லாம் ஏகத்துக்கு அங்கே சேர்த்துக் கொண்டு பலமாயிருக்கிறதாய் அப்துலயிமான் சமேதாரன் துரைக்கு கபுறு சொல்லப்போரேனென்று என்னுடனே விட்டுக்குப் போகும்போது சொல்லிவிட்டு துரையவர்கள் விட்டுக்குப் போனுன்.

வேட்டவலத்து அண்டையிலே இறங்கியிருக்கிற நபாபு பவுன்சு பிலன் போதாதென்று உள்ளே இருக்கிற வேட்ட வலத்துப் பாளையக்காரன் பெலத்து இருக்கிறுனென்று போளூர் வரதையன் மகன் வெங்கடராயனுக்குக் குண்டு பட்டு செத்துப்போனதாகவும் சேதி வந்தது. திருச்சினுப்பள்ளியின் பேரிலே மைசூரார் வந்து பவுன்சுடனே இறங்கினதாய்ச் சேதி வந்தது. சந்தாசாயபு வருகிறுரென்று அவாசாயபு ரொம்ப சுறுக்காயிருக்குதென்று வக்கீல் சுப்பையனெழுதி அனுப்பி வைத்தான். இப்படி யிருக்கிறது ராச காரியங்களுடனே சேர்ந்ததெல்லாம்; மற்றப்படிக்கு நாசற்சங்குக்கு லக்ஷம் வராகன் மாத்திரம் சிலவழித்து இங்கிலீஷ்காரர்கள் தாங்கள் புதுச்சேரியின்பேரிலேயும், சென்னப்பட்டணத்தின்பேரிலே யும் ராசக் காரியம் பண்ணும்போது கில்லேதார், மனசுபேதார் கள் நபாபு அன்வர்திகான்கூட மத்தத்தாய் வருகிறவர்கள் பவுன்சுகூடக் கூட்டி மத்தத்து பண்ணச்சொல்லி வாங்கிவந்த சன்னதுகளை அவரவருக்குக் கொடுத்து அனுப்பிவைத்து இங்கி லீஷ்காரர் குவர்னதோரும் கூட இப்போ நீங்கள் தயவுபண்ணி வந்து மத்தத்துப்பண்ண சமயமென்று காகிதமெழுதினதற்கு தங்கள் தங்களுக்கு இப்போ சமயமில்லையென்று எழுதின பேர் களும் உபயத்திரவர்களும் சமமாயிருக்கிறபடியினுலே நாங்கள் உங்களுக்கும் அவர்களுக்கும் மத்தத்து வரத்தக்கதில்லையென்று எழுதினுர்கள் என்று கபுறும் வந்தது. அவரவரெழுதின காகி தத்திற்கு சவாதும் வந்து பார்த்ததுமுண்டு. நபாபு அன்வர்தி கானவர்களும் உபயத்திரவர்களுக்கு மத்தத்து வரத்தக்கதில்லை யென்று எழுதி அனுப்பிவிட்டாரேயானுல் மற்றபேர் பதில் எழுதப்போவதில்லை. இதனுலே இங்கிலீஷ்காரர்கள் வெகு பணம் சிலவழித்து மோசம் போனுர்கள். இந்த துலுக்கரை நம்பினவர்கள் யார் கடத்தேரினுர்கள். பிலத்து சாத்துகிற வனுக்குக் காலமே யல்லாமல் மற்றபடி காலமல்லவென்கிறது எல்லோருக்கும் தெரிந்திருந்தாலும், மறுபடி மோசமும் போறதுதான் லோகப்பழக்கம்,

இற்றைநாள் பகலுக்கு மேலாக இங்கிலீஷ் கப்பல் அக்கினி மூலையாய் வைத்துப் பிடித்திருந்த கப்பலை கோட்டை வாசலுக்கு நேரே பிடித்துவைத்து அப்பாலே கோட்டைக்கு ஈசான்ய மூலையாய் ஒரு இரண்டு பாய்மரம் சுலுப்பும் அக்கினி மூலையாயொரு சுலுப்பும் கொண்டுவந்து வைத்துப் பிடித்தான். இனி என்ன யோசனை நடத்தவோ தெரியவில்லை.

அப்பாலே துரையவர்கள் சாயங்காலம் சுவாரி போய் வந்தவுடனே என்னை அழையென்று சொல்ல சேவகன் வந்து அழைக்க நான் போனவுடனே முசியே புரியும், முசியே துய்ப்ளேக்சும், முசியே கில்லியாரும் இருந்தார்கள். அப்போதென்னைப் பார்த்து மெய்தானா நம்முடைய பட்டணத்திலே யிருந்து வெளியே புறப்பட்டுப் போன ஜனங்களிலே இரண்டுமொருத்தர் கையில் பணம் காசுகள் பிடிங்கிப் போனார்களாமே மெய்தானா வென்று கேட்டார். மெய்த்தான் கூடப்பாககத்தண்டையிலே இரண்டு பிராமணரும் அவர்கள் வசத்திலே யிருந்த பணத்தை எம்முட்டு சேவகராய் வந்து பிடுங்கிக்கொண்டு போனார்கள். இது அல்லாமல் இரண்டு பெண்டுகளும்; இருபது முப்பது மாய் போககடித்துக்கொண்டாராம்; என்று சொன்னதின் பேரிலே முசியே புரி அப்படி நடக்குமாவென்று கேட்டார். அதற்கு துரை யிருந்துக்கொண்டு ரங்கப்பிள்ளை குத்தகை கிராமத்தலே ரெட்டி ஒருத்தன் புதுச்சேரியை இங்கிலீஷ்காரர் பிடிததுககொண்டார்கவென்று மூவாயிரம் நாலாயிரம் வராகன் மதிப்புள்ள நெல் நீர் இருந்ததெல்லாம் எடுத்துக்கொண்டு போய அவன் மனுஷரையும் பிடித்துப்போயடிக்கிறானென்று சொன்னார். அவனாரென்று முசியே கில்லியார் கேட்டார். திண்டிவனம் நாட்டான் முத்துமல்லா ரெட்டி என்கிறவன் என்று சொன்னேன். அப்பாலே அவனுடைய பூர்வோத்திரமெல்லாம் சொன்னதற்கு அதிலே துரை இருந்துக்கொண்டு அவனுக்குப் பொல்லாத காலமென்று சொல்லி உன் பணம் போவதில்லை யென்று சொன்னார். இதிலே முசியே கில்லியாரிருந்துக்கொண்டு இப்படிப்பட்ட நாய்களை அதற்கேற்றபடி நடத்துவார். எப்போதும் நினைக்கத்தக்கதாகவென்று சொன்னார்.

இதிலே முசியே தோத்தேல் அரியாங்குப்பத்து ஆற்றோரத்தில் இறங்கி யிருக்கிற தண்டியிலே யிருந்து வந்தாரவருடனே

பேசிக்கொண்டு எழுதுகிற கபினேத்தைப் போனார். நானும் பாக்கு கிடங்குக்கு வந்தேன்.

இற்றைநாள் ஆற்றங்கரையிலேயிருக்கிற தண்டியிலே யிருந்து வாசற்படி 1-க்கு ஐம்பது பேர் வெள்ளைக்காரர் விழுக்காடு வந்தார்கள். அதிலே இருபத்தைந்து விழுக்காடு கடற்கரைக்குப் போனார்கள். இதுவரைக்கும் ஆற்றங்கரையிலே இறங்கியிருக்கிற பவுன்சிலே ஐந்நூறு பேர் மாத்திரம் வந்து ராத்திரி ஒன்பது மணிக்குக் கடற்கரை கொத்தளங்களிலேயும், அலங்கத்தின்பேரிலேயும் வரிசையாயிருந்து பொழுதுவிடிய நாலு நாழிகை இருக்கும்போது இரண்டாம் பேர் அறியாமல் மறுபடி ஆற்றங்கரையே போய்விட்டார்கள். இன்றைக்கு வாசற்படிக்குக்கூட வந்தார்கள். ஆனபடியினாலே சற்று அமதி.

இதல்லாமல் மதாம் துய்ப்ளேக்கீஸ் சந்தாசாயபு பெண்சாதிக்கும் தங்களவர்களுக்கும் சந்திரமதிபிள்ளை, முத்தியப்பிள்ளை, சின்ன பரசுராமப்பிள்ளை புதசாய்க் கட்டின வீடு வேணுமென்று சொல்லிப்போய்ப் பார்த்து வந்தது. பாதிபட்டணத்திலுண்டானவர்கள் வெளியே போனவர்கள் போக மற்ற பேர் இன்று இராத்திரிக்கு இங்கிலீஷ்காரன் ஏதாகிலும் சிலமஷம் பண்ணுவானென்று யோசனையாயிருக்கிறார்கள்.

இற்றைநாள் இராத்திரி ஏழு மணி வேளைக்கு மூன்று பிராமணர் மாயே காகிதம் கொண்டுவந்தார்கள். அந்த மூன்று பிராமணர்களும் சொன்ன சேதி: நாங்கள் புறப்படுகிற அன்று ஒரு சீர்மைக் கப்பல் வந்தது. அந்தக் கப்பல் வந்த காகிதம் படித்தவுடனே இருபத்தொரு பீரங்கிப் போட்டார்கள். அப்பால் சுவாமி தயவுபண்ணினார். நம்முடைய கப்பல்கள் வந்ததென்று ஒவ்வொருத்தர்களுடைய சொல் அந்தக்ஷணமே சீர்மைக் காகிதங்களும் கொடுத்து அவர்களும் காகிதங்களும் கொடுத்து எங்களை எத்தனை சுறுக்காய்ப்போனால் அத்தனை வெகுமானங்கள் கொடுப்பார்களென்று சொல்லி போகச்சொன்னார்கள். நாங்களும் பனிரெண்டாம் நாள் புறப்பட்டு இவ்விடத்திற்கு வந்துசேர்ந்தோமென்று சொன்னார்கள். துரையவர்களுக்கும் காகிதங்களைப் பார்த்துக்கொண்டு வெகு உச்சாகமாயிருக்கிறார்களென்றும், எங்களைக் காலமே வரச்சொன்-

ஞர்களென்றும் சொன்னார்கள். இந்த சேதி நாளைக்கு துரையவர்களண்டைக்குப் போனால் வெளியாகும்.

நேற்று 14 தேதி சோமவாரம் மத்தியானம் 11 மணிக்கு ஷேக் அஜான் சின்ன ஜமீன்தாரனையும், அல்லிகானையும், துரையவர்களழைத்து இரண்டுபேருக்கும் அன்பது அன்பது ரூபாயிலே சிரோப்பா நம்முடைய வசத்திலே யிருக்கிறதை கொண்டுவரச்சொல்லி அழைத்து வெகுமானம் கொடுத்து இதல்லாமல் இரண்டு வர்ண சகலாத்து பேருக்கு மும்மூன்று கெஜமும் இரண்டு இரட்டைக்குழா துப்பாக்கியும் இரண்டு சோடு பிஸ்தோலும் வெகுமானம் கொடுத்தார்கள். அவர்கள் வியாழக்கிழமையன்றும், சனியன்றும் அவர்கள் சண்டை பண்ணினதற்குக் கொடுக்கவேண்டிய வெகுமானம் பேருக்கு ஆயிரமாயிரம் வராகன் கொடுத்தாலும் அது வெகுமானமல்ல. ஆகிலும் அதமபக்ஷம் ஆயிரம் ரூபாயாகிலும் கொடுக்கவேணும் அது தவிர இப்போ கொடுத்த வெகுமானம் அவர்கள்பண்ணின சண்டைக்கு ஒருக்காலும் வெகுமானமேயல்ல. அவர்களுமிதை வாங்கி தங்களுடனே கூடயிருந்து சண்டைபண்ணின பேருக்கு பேருக்கு கொஞ்சம் கொஞ்சமாய்க் கொடுத்து தீர்த்துப்போட்டார்கள் என்று வந்து கபுறு சொன்னார்கள்.

1748 ஆ ஆகஸ்ட் மீ 28 உ க்கு விபவ ஸு ஆவணி மீ 16 உ புதவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் (என்னை) அழைத்தனுப்பிவைத்து முசியே பராதியண்டைக்கு இரண்டு டோலி முஸ்தீதுபண்ணி அனுப்பென்று சொன்னார். அந்தபடிக்குப் பெரிய போயண்டேவுடனே சொல்லி இரண்டு டோலி மனுஷரை அழைப்பித்து முஸ்தீதுபண்ணி முசியே பராதி இருக்கிற இடத்திற்கு அனுப்பிவைத்தேன். சந்தாசாயபு அவர்களுக்குப் பதிலுத்தாரமெழுதியானது ராசோபண்டிதர் இருக்கிறவர்கள் வசம் ஒப்புவைத்துப் போடுகிறேன். அவர்கள் காகிதம் முஸ்தீதாயிருக்கிறது; ஆறு முத்திரைக் காகிதங்கள் கேழ்க்கிறார்கள். கொடுத்தனுப்புகிறதற்கென்று சொல்லி கேட்டதற்கு கொடுத்தார். அதை ராசோபண்டிதர் கையில்

கொடுத்து அவர்கள் காகிதங்கள்கூட பயணம்பண்ணி அனுப்பி விடச் சொன்னேன். துரையவர்கள் வீட்டிற்குப் பெரிய கதவு இரண்டும், அதன்பிறகு சாத்திப்போட்டு இப்புறத்திலே யிருக்கிற குசினிக் கதவு திறந்து அந்த வழியாய் யாராகிலும் போகத் தக்கினவர்கள் மாத்திரம் குசினிக்குப் போகிறதேயல்லாமல் மற்றபடி ஒருத்தரையும் விடத் தேவையில்லையென்று கட்டுப் பண்ணி கட்டுமரத்தின்பேரிலே போய் கப்பலை கொளுத்திவிடுகிற உபாயங்களை சிறிது பண்ணினார்கள். அதை அழைப்பித்துப் பார்த்துக்கொண்டிருந்தார்.

அப்பால் இங்கிலீஷ்காரர் வீராம்பட்டணத்தண்டையிலே மொற்சாவுக்கு ஞாயிற்றுக்கிழமை முதலெத்தனம் பண்ணினவர்கள் நேற்றையவரைக்கும் தாங்களங்கே வந்து இருக்கிறதற்கு இடம் பார்த்து பந்தோபஸ்து பண்ணிக்கொண்டிருந்து தங்கள் பவுன்சையெல்லாம் அழைத்துக்கொண்டு பதினெட்டு ராத்தல் குண்டு ஓடுகிற பீரங்கியும் பனிரெண்டு ராத்தல் குண்டு ஓடுகிற பீரங்கியும் வைத்துக்கொண்டு ஆற்றங்கரைக்கிப்புறம் இருக்கிற பவுன்சுபேரிலே அரியாங்குப்பத்து கொத்தளத்தின்பேரிலேயும் சுடுகிறதும் முருங்கப்பாக்கத்தண்டையிலே குதிரை சுவார்கள் வெள்ளைக்காரர் இறங்கி இருந்தவர்களிலொருத்தனை அடித்து அவன் செத்தான். பறயர்களுக்குக் கஞ்சி கொண்டுபோகும் பெண்டுகள் இரண்டு பேரை அடித்தது அவர்கள் செத்துப்போனார்கள். அப்பால் நாலு காப்பிரிகளுக்கு ஆற்றங்கரையிலே இருக்கிறவர்களுக்கு அடித்தது இந்தடுக்கிலே சாவிலே நாலைந்துபேரும் காயத்திலே பத்து பேருக்குமுண்டு. நயினார்மண்டபம், முருங்கப்பாக்கம் எங்கும் மனுஷர்கள்கூட நடமாடவில்லையென்று முதலாகிய சேதியெல்லாம் பொழுது விடிந்து ஐந்தாறு நாழிகைக்குள்ளே சேதி வந்தது.

அப்பால் துரையவர்களும் பொர்த்துகல் (Partugais) காரன் நெடுவல் பீரங்கி மேஸ்திரியுடனே இருக்கிறவனும் காட்டும் கப்பல் போய் கொளுத்துகிறதற்கு சின்ன கப்பல் போலேபண்ணி இராத்திரி இருட்டிலே கட்டுமரத்தின்பேரிலே வைத்துக்கொண்டுபோய் கிட்ட அதை கொளுத்திவிட்டதும் அந்த போய் கப்பலை அரை சுணத்திலே போய்ப் பிடித்துக்

கொண்டு கொளுத்திவிடுகிறதாய் யோசனைபண்ணி முன்னே தானே முஸ்தீதுபண்ணி வைத்தார்கள். அதை இப்போ கொண்டுவந்து பார்த்து அதுகளுக்குப் பின்னை என்னயென்ன முஸ்தீதுபண்ணவேணுமோ அதுகளெல்லாம் முஸ்தீதுபண்ணி வைத்து அதைக் கொண்டுவரச் சொல்லிப்பார்த்து அனுப்பி விட்டார். காயப்பட்டவர்களை கோவாளி கிடங்கிலே கொண்டு போனார்கள், செத்தவர்களை அங்கே புதைத்துப்போட்டார்கள். முசியே பாராதி ஆற்றங்கரையிலே போக்கு வரத்தாயிருக்கும் போது அவர் தலையின்பேரிலே இரண்டு குண்டு ஓடிப்போன தாகவும் இங்கிலீஷ்காரர் சுடுகிற குண்டு நிதானமாய் வந்து அடிக்கிறதென்றும் சொல்லிவிட்டு சுடுகிறதுகூட மகா திட்ட மாய் வந்து அடிக்கிறதென்றும், ஆற்றங்கரைக்கு இக்கரையில் இறங்கியிருக்கிற நம்முடையவர்கள் சுடுகிற பீரங்கிக் குண்டு ஆறு ராத்தலானபடியினாலேயும் பீரங்கி சின்னதானபடியி னாலேயும் அவன் சுடுகிறது மோடானபடியினாலேயும் நம் முடையவர்களிருக்கிற தாவு பள்ளமானபடியினாலேயும் நம் முடையவர்கள் பீரங்கிக் குண்டு அவர்கள் பவுன்சிலே போய் விழவில்லையென்றும், இப்புறத்திலே நெட்டிப்படி போடுகிற தென்றும் இப்படியாக முசியே பாராதியண்டையிலிருந்து வந்த சட்டைக்கார பிள்ளையாண்டான் காயம் பட்டவர்கள் செத்த வர்கள் சேதிகூட வந்து சொன்னான். அதன்பேரிலே நம் முடைய குதிரை சுவார்கள் வெள்ளைக்காரர் திராகோன். முசியே நோத்தேல்கூட இங்கிலீஷ்காரர் குண்டு அவ்விடத் திற்கு வருவதற்கு பயந்து முசியே பாராதியை உத்தரம் கேட்டுக்கொண்டு குண்டுசாலைக்குள்ளே வந்துவிட்டார்கள் என்றும் சொன்னதின்பேரிலே துரையவர்களண்டைக்கு முசியே பாராதி வந்துக்கண்டு பேசினபிற்பாடு சென்னப் பட்டணத்து வாசற்படியிலிருந்த இருபத்திநாலு ராத்தல் குண்டு ஓடுகிற பீரங்கிகளில் ரெண்டும் கோட்டையிலே யிருந்து பதினெட்டுருத்தல் குண்டு ஓடுகிற பீரங்கி ஒன்றும் லிமித்துக்கு (எல்லைக்கு) கொண்டுபோனார்கள். இந்தபடிக்கு அரியாங்குப்பத்து கொத்தளத்தின்பேரிலே யிருந்தும் ஆத் துக்கு அக்கரையிலேயிருந்தும் ரெண்டு கொத்தளத்து பீரங்கி யினாலேயும் போட்டுக்கொண்டே யிருந்தார்கள். இவர்கள் போடுகிற குண்டு அவர்களுக்குப் பட்டதோ யில்லையோ சுவா மிக்குத்தெரியும் நம்முடையவர்கள் பாளயத்து கபுறு நமக்கு

அடிக்கடி வருகிறபடியினாலே காயப்பட்டதும் சாவும் அதிக மாய் மத்தியானம் வரைக்கும் யெழுதினேன்.

நேற்று சாயங்காலம் அவா சாயபு சொக்கப்பமுதலி பிராஞ்செழுத்திலே தங்கள் காரியம் யெழுதிக்கொண்டு வைத்து இருந்ததைக்கொண்டுபோய் துரைக்குக்கொடுத்து நாங்களூருக்கு போகவேணுமென்று கேட்டதற்கு இப்போ சமயபேதகமாயிருக்கிறதே ஊருக்குப் போகவேணுமானால் போங்கள் இருக்கவேணுமானால் இருங்கள் யென்று சொல்லி யெல்லாத்துக்கும் உங்களெஜமானண்டைக்குக் காகிதமெழுதி போயிருக்கிறதே வரட்டும் நீங்கள் ஊருக்குப் போவதற்கு கெவுனி வாசலுக்கும் மேட்டுக்கும் காகிதமுஞ் சீட்டும் கொடுத்துப்போகச்சொன்னதாய் இற்றைநாள் காலத்தாலே அவா சாயபு சொக்கப்பமுதலி கரீம்சாயப்பு இவர்கள் இற்றைநாள் சூரிய உதயத்துக்கு என்னண்டைக்கு வந்து நேற்று சாயங் காலம் நடந்த சேதியும் துரையவர்களனுப்பிவைத்ததும் சொல்லி நீங்களும் அனுப்பிவைத்தால் நாங்களூருக்குப்போகிறோம். எப் போதும் நாலாறுதரம் பத்துதரம் கடன் சம்மதிக்கு கொடுக் கிறதற்கு வந்து கேட்டபோதெல்லாம் புதுச்சேரியிலே பணக் கடிசையாயிருந்தபோது நினுசுகளாய்க்கூட ரொக்கமாய்க்கூட நாற்பதுனாயிரம் அன்பதுனாயிரம் கொடுத்தீர்கள். இப்போ கல்யாணத்திற்கு சகல சரஞ்சாமியும் பண்ணிக்கொடுக்கிறோ மென்கிற நீங்கள் ஊருக்குப்போகிற மரியாதையாய் பாக்கு வெத்திலைகூட கொடுக்கிறதற்குயில்லாமல் அவமரியாதையாய் போகச்சொல்லுகிற காலம் வந்ததென்று அவாசாயபு பின்னை யும் நிஷ்டூர வார்த்தைகள் செனே சொன்னார். அதற்கு சண்டைவேளையிலே சத்துருவு வந்து பிடரிமேலேறிக் கொண்டு யிருக்கும்போது என்ன காரியத்தின்பேரிலே புத்தி தோத்தமானபடியினாலே இப்போ நடக்கிற காரியத்தை பரிச் சேதமாய் மனதிலே வைக்க தேவையில்லையென்று முன் நடந் ததும் பின் நடந்ததும் சொல்லி சமாதானப்படுத்தி அப்பால் அவாசாயபுக்கு அறுபது ரூபாய் அறுபத்தஞ்சி ரூபாயிலே ஒரு சிரோப்பாவும் கரீம் சாயபுக்கு இரண்டு கெஜம் சகலாத்தும் சொக்கப்பமுதலியாருக்கு சறசாலுவையும் பாக்குவெத்திலை யும் கொடுத்து உபசாரம் சொல்லி அனுப்பிவைத்தேன். துரை யவர்கள் காகிதமொன்று இமாம்சாயபு மகன்பேருக்கு

இப்போ சண்டை வேளையானபடியினாலே வந்த காரியமனு கூலம்பண்ணி அனுப்புகிறதற்கு சமயமில்லை மற்ற சேதி யெல்லாம் அவா சாயபு சொல்ல தெரியவரும் யென்று யெழுதி காகிதமும் கொடுத்து இசுமத்துக்காரனுக்கு பத்து ரூபாயும் கொடுத்து அவரை அனுப்பிவைத்தேன்.

இற்றைநாள் பகலைக்குமேலாக நம்முடைய் அரியாங்குப் பத்திலே யிருக்கிற கொத்தளத்தின்பேரிலே கிரனுத் (grenades) என்கிற சின்ன தீக்குடுக்கை இரனூறுமாத்திரம் ஒரு பீப்பா யிலே போட்டு மேலே வைத்திருந்தது அதிலே இங்கிலீஷ்காரர் சுடுகிற பீரங்கிக் குண்டு ஒன்று விழுந்து அது பற்றிக்கொண் டது. பீப்பாயை தூக்கிக்கொண்டு அக்கரையிலே தண்ணீரிலே போட்டுவிட்டது அதினாலே ஒருத்தருக்கும் காயம்படாமல் சுவாமி ரக்ஷித்தாரென்று க்புறு வந்தது. மற்றபடி அவர் களிலே சாவு யெம்மாத்திரமுண்டோ தெரிஞ்சதில்லை அப்பால் துரையவர்கள் யென்னை அழைப்பித்தார் நான் போய் மெத் தையின்பேரிலேறி துரையவர்கள் போனவிடத்தில் அப்போ துரையவர்களண்டையிலே இருந்தவர்கள் முசியே பிரியேல், முசியே ஸெராபேர், முசியே கில்லியார் முசியே சொல்மனியாக், முசியே செற் முசியே கொத்தெரேல் முசியே துக்கேன், முசியே புரி இவர்களிருந்தார்கள். எத்தனைபேர் காயக்காரர் என்று கேட்டார்; ஐந்துபேர் சாவும் பதினைந்துபேர் காயக்காரரும் யென்று சொன்னார்கள். அவர்களிலேயானால் நூத்தைம்பது மட்டுக்கும் உண்டென்று சொல்லுகிறார்கள் அவர்களும் ஆரா யிரக்காதவழியிலிருந்து வெகு கோபத்துடனே சென்னப்பட் டணம் வாங்கிக்கொண்டார்கள் என்கிற ருக்கத்தின்பேரிலே /வந்தவர்கள் இவ்வளவாகவும் போராடினேம்; ஆக்கிருக்கு (முடிவில்) கூடாதே போனதே என்னசெய்யப் போகிறோ மென்று இருக்கிறவர்கள் தாங்கள் தப்பித்துக்கொள்வதற்கும் சீர்மையிலே இருக்கிறவர்களுக்கும் சொல்லுகிறதற்கு ஒரு அடமானமும் பண்ணிக்கொண்டு நடந்துவிடுவார்களென்று சொன்னதற்கு துரை மெய்தான் நீ சொன்னது; ஆனாலெப்போ போவார்களென்று கேட்டார். (நான்) இன்னும் நாலு நாள் பார்ப்பார்கள். அப்பால் அதைவிட்டு கடல் மார்க்கமாய் ஒரு நாள் இரண்டு சிறிது பீரங்கிகளை சுட்டுப் பார்த்துவிட்டு அதிலே நமக்கு கப்பலாகிலும் வரும். இதிலே அவர்கள் கப்பு

லிலே இரண்டொன்று மோசத்துக்காகிலும் வரும். அது ஒரு சாடைப்பண்ணிக்கொண்டு நடந்துவிடுவானென்று தோனு தென்று சொன்னதற்கு துரை நீ சொன்னது மெய்தான் அப்படித்தான் நடக்கப் போகிறது என்று சொன்னார். இருந்த வெள்ளைக்காரரெல்லாம் அப்படியே சொன்னார்கள். ரங்கப் பிள்ளை சொல்லுகிற பேச்செல்லாம் மெத்த தைரியத்துடனே சொல்லுகிறான். இவன் பிராஞ்சுக்காரனென்று முசியே பிரியேல் சொன்னதினாலே துரையவர்களிருந்து நம்முடைய பட்டணத் திலே நம்முடன்கூட அவன் புத்தி அறிந்தநாள் முதற்கொண்டு பழகினவனுமல்லாமல் படித்து இந்த சாடையெல்லாம் அவ னுக்குத் தெரிந்ததுபோல் ஒரு பிராஞ்சுக்காரனுக்குத் தெரியா தென்று பின்னையும் சற்று ஸ்தவுத்தியமாய் (ஸ்தோத்திரமாய்) சொன்னார். வெள்ளைக்காரர்களிருந்தவர்கள் எல்லாருமப்படியே விஸ்தரித்து விஸ்தாரமாய் ஸ்தவுத்தியம் (ஸ்தோத்திரம்) பண்ணினது நான்தானே எழுதுகிறது (உக்குத்தமல்ல) யுக்தமல்ல என்று எழுதவில்லை. அப்பால் துரையவர்களிருந்துக்கொண்டு மதாம் ரெங்கப்பிள்ளே பொர்த்தேல் பியேன் (Pore-t-elle bien) என்று கேட்டார். உம்முடைய ஊழியத்திற்குப் பாத்திரமா யிருக்கிறானென்று சொன்னேன். ஒதர் பெத்தி பீஸ்ம் எப்படி இருக்குதென்று கேட்டார். உம்முடைய ஊழியத்திற்குப் பாத்திரனாயிருக்கிறானென்று சொன்னேன். ஆனால் துரை உன் பமிலி (குடும்பம்) இருக்கிறதற்கும் என் பமிலி (குடும்பம்) இருக்கிறதற்கும் எங்கே முஸ்தீதுபண்ணி வைத்தேனோ அங்கேதானே ஒரு சின்ன காம்பிரா அலாதியா (அனுமத்தாய) முஸ்தீது பண்ணிவைத்தேன். மேலுக்குப் பஞ்சுகூடப்போட்டு மிசியோன் கோவில் பாதிரி மோன்சியே பேர் மர்த்தேனுடனே ரங்கப்பிள்ளை பமிலிருக்கிற (குடும்ப)தற்கென்று சொன்னேன். அவரும் நல்லதென்று உன்னுடனே சொல்லுகிறோமென்று சொன்னார். உன்னுடனே சொன்னாராயென்றவுடனே (நான்) சொன்னாரென்று சொல்லி அப்படி என்பேரிலே நினைப்பிரிந்து சொன்னதற்கு அவருக்கெப்படி உபசாரம் செய்யவேணுமோ அப்படி உபசாரம் சொன்னேன். கிட்டே இருக்கிற துரைத் தனக்காரரெல்லாம் துரையவர்களுக்கு உன்பேரிலே யிருக்கிற பக்ஷம் ஒருத்தர்பேரிலேயுமில்லையென்று சொன்னார்கள். அதற்கு நானும் அவர்கள் பாதத்தைக் கெட்டியாய் நம்பி னேன். சுவாமிக்குத் தெரியும்; மனுஷருக்குத் தெரியாதென்று

அதற்கெந்தெந்த விதத்திலே சொல்லவேணுமோ அந்தந்த விதத்திலெல்லாம் சொல்லி, அப்பால் இது பிரஸ்தாபமாய் அரை நாழிகை நேரம் நடந்தது.

மற்றபடி முத்துமல்லாரெட்டி நம்முடைய கிராமத்தைக் கொள்ளையிட்டதுமாய் எங்கள் மனுஷரை பிடித்து போயடிக்கிறதும் அவனுக்கு இங்கேயிருக்கிற ஆசளவும் அவன் பணம் காசு இங்கேயிருக்கிறதும், அதைத் தாண்டவைக்கவேணுமென்று வெள்ளைக்காரரிலே ஒரு பெரிய மனுஷனும் தமிழரிலே ஒரு செட்டியும் யோசனைபண்ணியிருக்கிறது. இது முதலாகிய சேதியெல்லாம் அவருக்கு சொல்வ அவர் நல்லது அந்த மனுஷர் வெளியே பணம் அனுப்புகிறபோது பிடித்து வரச்சொல்லியும் அவர்கள் மனுஷர் வந்திருக்கிறவர்களை பிடிக்கச்சொல்லியும் சொன்னார். நல்லதென்று அதற்கு முன்னே அவர்கள் மனுஷர் வந்திருக்கிறவர்களை பிடித்தால் பணம் வெளியாகமாட்டாது. ஆனபடியினாலே பணத்தைப் பிடித்த பிற்பாடு மனுஷரை பிடிக்கவேணுமென்று சொன்னேன். (துரை) உனக்கெப்படி சம்மதியோ அப்படி செய்யென்று சொன்னார்.

அப்பால் பின்னையும் லோகாபிராமமாய் பேசிக்கொண்டிருக்கும்போது துரையிருந்துக்கொண்டு ரங்கப்பிள்ளை வேணுமானால் இந்த இங்கிலீஷ்கார மனுஷர் வெளியே திரிகிற பேர்களை திரிய ஒட்டாமலும் அவர்கள் வேலை எங்களுக்கு வெளி மனுஷர் போக ஒட்டாமலும் செய்யலாமென்று துரையவர்கள் சொன்னார்கள். நான் மனதிலே எண்ணிக்கொண்டது. பெண்சாதி பேச்சைக் கேட்டுக்கொண்டு விருதாவாய் வேகுக்காரனென்று சின்ன மனுஷர் பேச்சைக் கேட்டுக்கொண்டு மாட்டை ஓட்டிக்கொண்டு வந்த மனுஷரை பிடித்து விலங்கிலே போட்டு மண்ணெடுக்கச்சொல்லி சுத்தியிருக்கப்பட்ட சாகிர்தார் கிராமங்களெல்லாம் பகைப்பண்ணிக்கொண்டு இப்போ அவர்கள் தானே சத்துருக்கலாயிருக்கும் போது நான் செய்யவேண்டியதென்ன? அப்போ நான் சொல்லப்போனால் இங்கிலீஷ்கார மனுஷர்களுக்கு நீ உளவாயிருக்கிறதுபோல் காணுதென்று சொல்லி இப்போ வெளி மனுஷரை அனுகூலமாயிருக்கச்சொன்னால், எப்படியிருப்

பார்களென்றும், நீரெப்படி விசுவாசமாய் சகல ஏக்கிந்தியாருடனே ஒருமுகமாய் நடத்துகிறீரோ அப்படி காரியமும் நடவாதாவென்று இப்போ யோசனைபண்ணிக்கொண்டு என்னைத்தொட்டு ஆகப்போவதென்ன இருக்கிறது. உம்முடைய யோகத்தினாலே சமஸ்தமும், உங்கள் மனோரதப்படிக்கு நடந்து சத்துருக்களும் நாசத்தை அடைந்துபோவார்களென்று சொல்லி இந்த மாதம் போனால் பிறக்கும் (வருகிற) மாதம் நடக்கிற சேதியிலே உங்கள் சித்தத்திற்குச் சந்தோஷம் வரப்போகிறதென்று சொன்னேன். அதிலே முசியே கீல்லியாரும் முசியே மிரியேலும் இந்தப் பட்டணத்திலே இருக்கப்பட்ட தமிழருக்கெல்லாம் குவர்னதோரானபடியினாலே தமிழர்களைப் பார்த்து நீ என்ன வேலை செய்யச் சொன்னாலந்த வேலையெல்லாம் செய்யத்தக்கதாயிருக்கும்போது இந்த சமயத்திலே யாராரைக்கொண்டு எந்த வேலை செய்விக்கவேணுமோ அந்த வேலையெல்லாம் செய்நுவைத்துக் காரியத்தைச் சலாயிக்கப் பண்ணவேணுமென்று சொன்னார்கள். அதற்கு துரையவர்கள் இருந்துக்கொண்டு என்னைப் பார்த்து இனிமேல் சும்மாயிராமல் காரியத்திலே ஜாக்கிறதையாயிருந்து எந்தெந்த வேலை எப்படி செய்யவேணுமோ அப்படி செய்யென்று சொன்னார். உன் பெண்சாதியை மாத்திரம் மூலை வீட்டிலேயிருவென்று வெளிப் பேச்சுக்குப் போகவேண்டாமென்று அடக்கிப்போட்டால் அந்தப்படி நீரெப்படி நடத்தவேணுமென்றால் அப்படி நடக்குமென்று யோசனைபண்ணிக்கொண்டு அவன் ஓரிடத்தில் வெங்கலமென்னும்போது ஓட்டையென்று அடிக்கும்போது எப்படி நடக்குமென்று சாடை சொல்லுவமாவென்றத் தக்கதாக தோன்றியது; திரும்பியும் ஏக தேசத்தில் இவரிந்தப் பேச்சு சொன்னாரே! ஆனால் சொல்லலாம் வெகுபேரிருக்கிறபடியினாலே சொல்லுகிறது உக்குத்தமல்ல (யுக்தமல்ல) வென்று யோசனைபண்ணிக்கொண்டு நல்லது உங்கள் சித்தத்தின்படியே நடந்துக்கொள்ளுகிறேனென்று சொல்லிப்போட்டு இருந்தேன். அப்பால் எட்டு மணி தேசகாலமானபடியினாலே துரையவர்கள் மேல் மெத்தைவிட்டு இறங்கி தாழைசாலையே போனார்கள். நானும் புறபட்டுப் பாக்கு கிடங்குக்கு வந்தேன்.

விபவ ஞு ஆவணி மீ 15-ம் தேதி அசரதுல்லா சாயபு அவர்கள் குமஸ்தா நல்லா செட்டியாருக்கு ஆனந்த ரங்கப்

பிள்ளை கவில் கொடுத்தபடி இற்றைநாள் முதலாக தம்முடைய மாரிபத்திலே எனக்குத் தந்த கிராமத்து தானியங்கள் அழைப் பிக்கவேணுமே அதுகளெல்லாமழைப்பித்துத் தங்கள் பணத் திற்குச் சம்மதியான விலைப்படிக்குக் கொள்முதல் ஆதாயம் சத்தமும் கட்டுபடி பார்த்துக்கொண்டு பாவதோஷத்திற்கஞ்சி உள்ளபடிக்கு விற்றுக்கொண்டு எப்போ போகவேணுமோ அப்போ போகிறது தங்கள் பேர் சொல்லிக்கொண்டு வருகிற நெல்லுக்காரருக்குப் போக்குவரத்துக்குத் தடை இல்லாமலும் மாடுகள் மனுஷர்கள் மறுபடி வெளியே போகிறதற்கும், நெல் விற்ற பணங்காசு வெளியே போகிறதற்கும் தடை இல்லாமல் உத்தாரம் கொடுத்தோம். இந்தக் கவுலை நம்பி சுகமாய் தானியங் கொண்டுவந்து புதுச்சேரி பட்டணத்திலே விற்றுக் கொண்டு சுகமாய் நடந்துக்கொள்ளவும்.

இற்றைநாள் காலத்தாலே முசியே பாாதி புதுசாய் ஒரு மோர்சாவொன்று முஸ்தீதுபண்ணி அதன்பேரிலே பீரங்கிகள் இருபத்துநாலு ராத்தல் குண்டு ஓடுகிற பீரங்கியும் பதினெட்டு ராத்தல் ஓடுகிற பீரங்கியும் ஏற்றி முன்னூற்றங்கரையிலே இருக்கிற கொத்தளத்தின்பேரிலே மூன்று கொத்தளத்திலு மிருந்து அரியாங்குப்பம் கொத்தளத்திலுமிருந்து ஏகமாய் பீரங்கி சுடங்காட்டியும் அவர்கள் போட்டிருந்த கொத்தள மும் செவுர் வளர்த்தியிருந்ததும் ஏகமாய் பிடிங்கிக்கொண்டு அங்கே வெகுபேர்களுக்குக் காயமும் சாவும் காணுங் காட்டிலும் அவர்கள் அவ்விடத்திலிருந்து நியாயிக்காவிட் டால் (நிர்வாகிக்கமாட்டாமல்) அப்புறம் போனார்கள். சாவு காயம் இவ்வளவென்று தெரியாது. இப்படி இருக்கும்போது குண்டு போய் ஒரு மருந்து பீப்பாயிலே விழுந்து பற்றிக் கொண்டது; கூடாரம் பற்றிக்கொண்டது. இந்தமட்டுக்கும் அவர்கள் பாளையத்திலே கூச்சல் ரொம்ப உண்டானது. வெகு ஜனங்கள் முறிச்சல் கொடுத்து அப்புறம் போய்விட்டார்கள். மத்தியானம் வரைக்கும் இப்படி நடந்தது; அந்தக் கும்பலிலே யிருந்து மூன்று வெள்ளைக்காரர் இவ்விடத்திற்கு ஓடிவந்து விட்டார்கள். ஒரு தொப்பாசு ஒருத்தன் கூட வந்துவிட்டான். மற்றபடி இன்றையதினமெல்லாம் நம்முடையவர்களது ஜெய மும் எதிரிகளுக்கு அப ஜெயமுமாக இருக்கிறது.

மற்றபடி மூன்தாநாள் துரையவர்கள் தமுக்குப் போட வைத்தபடியினலே கனகராயமுதலி தோட்டம் பாதிரித் தோட்டம் முதலானதுகளெல்லாத்திலும் வெட்டின மரங்களை யெல்லாம் சரிபோனவர்கள் எடுத்துவரலாமென்று உத்தாரம் கொடுத்தபடியினலே அவரவர் குஞ்சுக் குழந்தைகள் போய் தாராளமாய் எடுத்து வருகிருர்கள். மற்றபடி என்ன அதிசய மிருக்கிறது. முசியே தோத்தேல், காகோத் கண்டதென்று தண்டுக்கும் போகவில்லை; வீட்டிலேயே யிருந்தான்.

1748 ஆ௵ ஆகஸ்ட் ௴ 30 உயீத விபவ ஹூ ஆவணி ௴ 18 உ சுக்கிரவாரம்.

இற்றைநாள் காலத்தாலே அரியாங்குப்பத்துக் கோவி லிலே நம்முடையட்டாணு யிருந்த சிப்பாய்களை வாங்கிவந்து விடச்சொன்னபடியினலே இங்கிலீஷ்காரர் அந்தக்கோவிலை நேற்று இராத்திரித்தானே வந்து பிடித்துக்கொண்டு அதிலே சொலுதாதுகளையும் வைத்துக்கொண்டு எதிரே ஒரு கொத் தளம்போலே போட்டு சுற்றிலும் சுவர் வைத்து ஏழு பீரங்கி வைத்து அடிக்க எத்தனம்பண்ணி பொழுது விடியுங்காட்டிலும் அங்கே யிருந்து ஆற்றங்கரைக்கு இக்கரையில் இருக்கிற பவுன்சின்பேரிலேயும், கொத்தளத்தின்பேரிலேயும் குண்டு விடங்காட்டிலும் ஆற்றங்கரைக்கு இக்கரையிலே யிருக்கிற வர்களுக்கு ரொம்ப வருத்தம் தோன்றினபடியினலே ஒலாந்தே கும்பினி ஐம்பது அறுபது ரூபாயும் குதிரைக்காரர் வெள்ளைக்காரரையும், கால்நடை சிப்பாய்களையும், ஐம்பது அறுபது காப்பிரிகளையும், கூடக்கூட்டி அனுப்பிவைத்தார்கள். அவர்கள் போய்ப் பாதிரி கோயிலண்டையிலே யிருக்கிற மோற்சாவும் போய்ப் பிடிங்கிக் குதிரைக்காரரும் அங்கே இருந்தவர்களைப் போய் துப்பாக்கியினலே சுடங்காட்டிலும் அவர்கள் ஏகவேளையிலே ஆயிரம் பேர் வந்து விழுங்காட்டி லும் ஒலாந்தியோ பின்வாங்கிப் போனர்கள். சிப்பாய்கள் போனவர்களும் பின் வாங்கிப் போனர்கள். துலுக்கர் சுவார் கள் பெனிகாமல் (எதிர்க்காமல்) நின்று போனர்கள். இதனலே அவர்களுக்கு ஐம்பது அறுபது பேர் சாவு காயமுமாய் ஒரு சொல்தாது கப்பித்தானும் தேவனும்பட்டணம் மேஜரும் கைப் பிடியாக அகப்பட்டார்கள். பின்னையும் ஆரேழு வெள்ளைக்

காரர் அகப்பட்டவர்களைப் பிடித்துக்கொண்டு குதிரை சுவார்கள் வெள்ளைக்காரரெல்லாம் ஏகத்திற்கு அவர்கள்மாத்திரம் சண்டைபண்ணிப்போட்டு பலன் விஸ்தாரமாய் வருங்காட்டிலும் திருப்பிக்கொண்டு ஆற்றுக்கிக்கரையிலே நம்முடைய பாளையமிறங்கி வந்து சேருகிறதற்குள்ளே எதிரிகள் பின் துடர்ந்து வந்தபடியினாலே முசியே பராதி கொத்தளத்திலேயிருந்தும் பின்னுமிருக்கிற கொத்தளத்திலேயிருந்து விடாமல் பீரங்கி சுட்டபடியினாலே இவர்கள்பேரிலே வந்து கவிஞ்சு இங்கிலீஷ் சேனை பின்வாங்கிபோனது; இதிலே கோசினாவுக்கு இரண்டு காயமும் ஒரு பகினேத்து காயமும்பட்டு அவர்கள் கையிலே அகப்பட்டுப் போனான். பின்னையும் திராகுன்சு என்கிற வெள்ளைக்கார சுவாரிலே ஐந்துபேர் சாவும், ஐந்துபேர் காயமும் குதிரைகளில் மூன்று குதிரை சாவும் ஒன்பது குதிரை காயமும் இந்தபடிக்கு அவர்கள் வந்து நம்முடைய இரங்குப் பாளையம் ஆற்றங்கரைக்கு இக்கரை வந்துசேர்ந்து தேவனும் பட்டணம் மஜோரும் சீர்மையிலிருந்து (வந்த) இங்கிலீஷ் சொல்தாதுகளுக்குக் கப்பித்தான் பெரிய மனுஷனொருத்தனும் மற்ற ஐந்தாறு ஏழு சொல்தாதுகளும்கூட துரையவர்களண்டைக்கு அழைத்து வந்தார்கள். அப்போ சொல்தாதுகளை முன் காவலிலே வைத்துயிருக்கிறவர்களைக்கூட கொண்டுபோய் வைக்கச் சொன்னார்கள். இந்த சொல்தாது கப்பித்தானும் தேவனும் பட்டணம் மஜேரும் இரண்டு பேரும் வரும்போது முசியே தொத்தேல் வீட்டுக்குப் போய் தொத்தேலுடனே சொல்தாது இவ்வளவென்று அவன் கையிலே எழுதியிருந்த கணக்கைக் கொடுத்து இவர்களுடனே அவர்களுடனே அவ்விடத்து மர்ம சாடைகள் என்ன சொன்னார்களோ அதன்பேரிலே இவர்களுக்கு வெகு மரியாதைப்பண்ணி உடுபாவனை மற்றதுகளெல்லாம் கொடுத்து இரண்டு பேருக்கும் இரண்டு வச்சிர மோதிரம் கொடுத்து அவர்களை அநுகூலம் பண்ணிக்கொண்டு அவ்விடத்துமர்மமெல்லாம் அறிந்தார்கள். அதன்பேரிலே அவர்களை கத்திக் கட்டிக்கொள்ளச்சொல்லியும் உத்தாரம் கொடுத்து நடத்தி வைத்துக்கொண்டார்கள்.

பத்தரை மணிக்கு (இங்கிலீஷ்காரர்) அவர்கள் சுடுகிற குண்டு முசியே பாரதி கொத்தளத்தண்டையிலே யிருக்கிற மருந்து பெட்டியிலே வந்து விழுந்து நாலு பெட்டி ஏக வேளை

யிலே பத்திக்கொண்ட சப்தம் துரை வீடுகூட அதிர்ந்தது. அதிலே எண்பது வெள்ளைக்காரருக்கு மருந்தப்பட்டு வெந்துப் போனதுசாவு காயமும், பின்னையும் நாலத்து இரண்டு பேருக்கு சிப்பாய்களுக்குக்கூட சாவு காயமும் உண்டானது. அப்பால் அவர்கள் மிஞ்சி சுடுகிற பிரங்கிக் குண்டுகளினாலே ஆற்றங் கரைக்கு இக்கரையிலே[1]யிருக்கிற நம்முடைய பவுல்சுகளுக்கும் அரியாங்குப்பத்துக் கொத்தளத்தின்பேரிலேயும்[2]குண்டு போய் விஸ்தாரமாய் விழுங்காட்டிலும் இங்கே இருக்கிறவர்கள் அரியாங்குப்பத்துக் கொத்தளத்திலே இருக்கிறவர்களுக்கு அடையாளங்காட்டி வந்துவிடச் சொன்னார்கள். அதிலே யிருந்த முசியேலாகும், முசியேலத்தூரும் இரண்டு பேரும் இருந்த சிப்பாய்களையும், சொல்தாதுகளையும் இறக்கிப்போட்டு அதிலே யிருந்த மருந்து குண்டுகள் திக்குடுக்கைகளையும் பலகை மரங் களெல்லாம் ஏகத்திற்கு சேத்துக் கொளுத்திப்போட்டு ஆற்றங் கரைக்கு இக்கரையிலே யிருக்கிற நம்முடைய பவுன்சை வந்து சேர்ந்தார்கள்; அது ஒண்ணரை மணி இரண்டு மணி வேளை அப்போ அதரு சப்தமுண்டானது. இந்தப்படிக்கு அவர் களிலேயும் சாவு காயமும் நூத்தைம்பது பேருக்கு குண்டு நம் முடையவர்களிலேயும் மருந்துப்பெட்டி பத்திக்கொண்டதுகூட சிப்பாய்கள் வெள்ளைக்காரர் உள்பட நூத்தைம்பது பேர் காணும். இதன்பேரிலே அரியாங்குப்பமெல்லாம் இங்கிலீஷ் காரர் வந்தவர்களை அழைத்துக்கொண்டு போவதற்கு அரி யாங்குப்பம் தங்களாதினம் பண்ணிக்கொண்டு இரண்டு கொடி இங்கிலீஷ் கொடி போட்டார்கள். கொத்தளத்தின்பேரிலே ஒரு கொடி போட்டார்கள். இந்தச் சேதி பட்டணத்திலுண் டான ஜனங்கள் முன் பின் போனவர்கள் போக இருக்கிறவர் கள் கேட்டதே வெகு காபிரா அடைந்து கொஞ்சனெஞ்சம் பெண்டுகளிருக்கிறவர்களைக்கூட புறபட்டுப்போனார்கள். சந்தா சாயபு பெண்சாதி முதலானவர்கள் போகவேணுமென்று பயணப்பட்டார்கள். என்னை வந்து கேட்டதற்கு ராசோ பண்டிதருக்கு துரையவர்களைக் கேழ்க்கிறது உக்குத்தமல்ல (யுக்த)வென்று என்ன சொன்னாலும் அவர்கள் எங்களை வெட்டிப்போடுகிறது உத்தமம்; அல்லது எங்களை அழைக்க வேணுமென்று நினைத்தால் நாங்கள் வெளியே போய் சண்டை தீர்ந்தவுடனே மறுபடி உள்ளே வருகிறோம். அதற்கு சம்மதி இல்லையென்றால் நாங்கள் பயணம் புறப்பட்டு நடப்போம்;

நீங்கள் வாசற்படியிலே தடைபண்ணுமல் எங்கள் கழுத்தை அறுத்துக்கொள்ளுகிறேமென்று இப்படி சுறுக்காய்ச் சொல்லி அனுப்பினார்கள். இவர்களுக்கு இந்தப்படிக்கு ஆருதென்று படே சாயபு மகளும், மீராகுலாமுசேன் அவர்களும்வீடுயோசனை பண்ணிக்கொண்டிருக்கிருர்கள் என்கிற சேதிகூட வந்தது. இன்றையதினம் நம்முடையவர்கள் ஆற்றங்கரையில் தேங்கலாயிருந்தவர்களெல்லாம் குண்டுசாலையிலே வந்திருக்கிருர்கள் மற்றபடி இந்தக் கப்பல்களுக்கு நம்முடைய சண்டைக் கப்பல் கொண்டுவந்து விட்டு சுவாமி இங்கிலீஷ்காரரை நிவர்த்தி பண்ணுவாரென்றெண்ணிக்கொண்டிருக்கிறேன். ஆனுலித்தனை நாளும் கலாபமாய்த் தோன்றினதில்லை, இன்றையதினம் தோணுகிறது. இற்றைநாள் சாயங்காலம் சாராயம் விற்ருல் தூக்குப் போடுவோமென்று தமுக்குப் போட்டார்கள். கோட்டைக் கொடிமரமிறக்கிப் போட்டார்கள். இப்படி நடந்தது, கனகராயமுதலியார் பெண்சாதி ஷெயார் தம்பி தானப்பமுதலியார் பெண்சாதி பிள்ளைகளுட்பட சமஸ்தமான பேர்களும், பின்னையும் அரும்பாத்தைப்பிள்ளை வீட்டுப் பெண்டுகள் பிள்ளைகளுட்பட கோட்டை உத்தியோகஸ்தர் (வீட்டுப் பெண்டுகள்) சகலமான பேர்களும் நம்முடைய வீடு தவிர மற்றபேரெல்லாம் தட்டுமுட்டுகள் நகைகள் ரொக்கம் நாணயங்கள் உள்பட சமஸ்தமும் தாண்டவைத்துக்கொண்டு அவரவர்கள் வீட்டுக்கு ஒருத்தரிரண்டு பேரும் அல்லவென்ருல் பெண்டுகளிலே கிழவிகளிலொருத்தர் இரண்டு பேருமாய் இருக்கிறவர்களேயல்லாமல் மற்றபடி போகவேண்டிய பேர்களனைவரும்புறப்பட்டுப்போய் விட்டார்கள்.

1748 ஆ ஆகஸ்ட் மீ 31 உக்கு விபவ ஷூ ஆவணி மீ 19 உ சனிவாரம்.

நேற்றையதினம் நடந்த விபரீதத்தினுலே மருந்து பத்திக்கொண்டு செத்ததும் அந்தச் சாடையின்பேரிலே அரியாங்குப்பம் கொத்தளத்தையும், கோவிலையும் இங்கிலீஷ்காரர் பிடித்துக்கொண்டதும் இதனுலே நம்முடையவர்கள் அரியாங்குப்பத்து ஆற்றங்கரையை விட்டுப்போட்டு குண்டுசாலை வந்து சேர்ந்ததும் இதனுலே பட்டணம் காபிரா பட்டாப்போலே பிரபுவும் (Dupleix) கலங்கி முகம் ஒரு பாடாய்க்கண்டது.

இதின்பேரிலே சந்தாசாயபு அவர்கள் குமாரன் ரசா சாயபு துரையவர்களண்டைக்கு வந்து கலாபமானபடிப்படி இருக்கிறது. பெண்டுகள் குண்டு வருமென்று பயப்படுகிருர் கள். ஆனபடியினலே வழுதாவூரிந்த பிராந்தியங்களிலேதானே யிருந்து கலாபம் தீர்ந்தவுடனே வந்து இதிலே சந்தாசாயபு அவர்களும் வருகிருர்கள்; அப்போ உங்கள் கையில் வேடிக்கை யாய் சிலவு வாங்கிக்கொண்டு சகல சம்ரமத்துடனே புறப்பட்டு போகிருமென்று சொன்னதற்கு நீங்கள் வெளியே போகிறது யுக்த்தமல்ல, அன்வர்திகான் அவர்களுக்கும் உங்களுக்கும் போகிறது நபாயித்தினிலேயும் வெகுபேர் உங்கள் சிரேய்சுக்கு மனம் பொறுக்காமலிருக்கிறவர்களே யல்லாமல் ஒருத்தரும் சிரேய்சு கோரி இருக்கிறவர்களில்லை என்றும், இங்கிலிஷ்காரர் பாளையக்காரரை எடுத்து (தூக்கி) விட்டு சில்மஷ்மம் பண்ணு வார்களென்றும் இப்படி பலவிதமாய்ப் போக்கா யெப்படி சொல்லவேணுமோ அப்படியெல்லாம் சொன்னுர்கள், அவர் களும் அப்புறம் போகிற சாடையாய்ச் சொல்லாமல் வழுதாவூர் அதற்குள்ளே இருக்கிறதாய் அதற்கு உத்தாரம் பிறத் யுத்தாரம் சொல்லி நபாபுசாயபு அவர்களுக்குக் காகிதத்தில் 3000 குதிரைகளையும் மோருரிராயனையும் சீக்கிரமத்துக்கு முன்னதாயிந்தக் கலாபத்துக்கு வந்து உதவதக்கதாக அனுப்பச் சொல்லி எழுதி அனுப்பினேமென்றும், நாங்கள் வெளியிலே இருக்கிறதைத்தொட்டு உங்களுக்கு என்னயென்ன வேலை செய்யவேணுமோ அதுகளெல்லாம் செய்கிறோமென்று இப்படி யாக சந்தாசாயபு குமாரன் சொல்ல துரையவர்களதற்கு உப சாரம் சொல்லி இப்படி நடந்து கடசியிலே துரையவர்கள் (சாயபு) வெளியே போவதற்கு நல்லதென்று சம்மதித்து உத் தாரம் கொடுத்தார். அதன்பேரிலே ரசாசாயபு துரையவர்கள் பார்க்கிற துறபின் (Telescope) வைத்து கப்பல்களைப் பார்க்க வேணுமென்று கேட்டார். அந்தபடிக்கு நல்லதென்று துற பினங்கொடுத்து மேலே போய் கப்பல்களைப் பார்த்துப்போட்டு மறுபடி துறபினைக்குக் கொடுத்துப்போட்டு வீட்டுக்கு அனுப்பி வித்துக் கொண்டுபோனுர்.

அப்பால் (துரை) என்னை படேசாயபு அவர்களும், மிரு குலாமுசேன் அவர்களும் என்ன சாடையாயிருக்கிருர்களென்று கேட்டார். (நான்) படேசாயபு அவர்களுமிந்த சாடைதான்

மிருகுலாமுசேன் அவர்கள்மாத்திரம் பெண்டுகள் பத்துபேரை மாத்திரம் ஆலங்குப்பத்துக்கு அனுப்புகிறது மாத்திரமே யல்லாமல் ஆண்பிள்ளைகள் ஒருத்தரும் போகிறதாகவும் காண வில்லை. தட்டு முட்டுகளும் வெளியே புறப்படுகிறதாய் காண வில்லையென்று சொன்னேன். அவர்கள் செய்கிற வேலை நல்ல வேலை செய்கிறார்கள். இந்த சாயபு மகன் செய்கிறது நல்ல வேலையல்ல, தகப்பன் மேன் பாடாய் வருகிறானென்கிற குறுபம் (கர்வம்) மெத்த இருக்கிறதென்று சொன்னார். அப்பால் அவர் சரஞ்சாபி பண்ணுகிற எத்தனத்திலே இருந்தார்கள்.

இதிலே மாயேயிலிருந்து புறப்பட்ட வெள்ளைக்காரரும சிப்பாய்களும் நானூறுபேருக்கு வருகிறவர்கள் பாலகாட்டுச் சேரியிலே தடைபட்டதாய் எதிரி வந்ததுபோல் காட்டுச் சேரி மயிசூர் சீர்மையாவென்றுக்கேட்டார் கோயம்புத்தூர் முதற்கொண்டும் மயிசூர் சீர்மை பாலகாட்டுச்சேரிவந்து மலை யாளத்தாருதென்று சொன்னேன். ஆனால் நம்முடையவர்கள் எப்போதும் வரதக்கதானதே பணம் காசு இப்போ நூதன மாய் கேழ்க்கிறதேது சாமி பட்டன்யென்றும் கிஷ்ணபட்டன் யென்று வந்து இருக்கிறார்களே அவர்கள் இங்கே யிருந்து நீ அனுப்பின மனுஷனுவென்று கேட்டார். நான் அனுப்பின மனு ஷன் பெருமாளய்யன் அய்யாசாமி என்கிறவர்களிங்கேயிருந்து போனவர்கள் அவர்களிந்தக்கெட்டிக்காரரையெல்லாம் கண்டு பேசி உத்திரவு வாங்கிக்கொண்டு மயிசூர்கட்சி கெடி. கோயம் புத்தூருக்கு போனார்களென்கிறசேதிவந்ததுநீங்கள் சொல்லப் பட்டவர்கள் மாயே வர்த்தகர் பாலக்காட்டுச்சேரி மட்டுக்கும் நம்முடையவர்களுடனே கூடவந்து அனுப்பிவிட்டு மறுபடி போகவந்தவர்களாக வேணுமென்றுச் சொன்னேன். ஆமாம் காட்டு இப்பவும் அவர்களுக்கு இரனூறுவிராகன் சிலவுக்குக் கொடுத்து அனுப்பி நீயும் ஒரு காகிதம் பெருமாளய்யருக்கும் அய்யாசாமிக்கும் யெழுதி வெள்ளைக்காரரை சீக்கிறமத்துக்கு கூட்டிக்கொண்டு வரச்சொல்லியும் ஐந்தாறு நாளைக்கு முன் பாக இரனூறுவிருகன் கொடுத்து ஆத்தனூரிலே யிருந்து வரு கிற வெள்ளைக்காரர் சிலவுக்குக் கொடுத்து கூட்டிவரச்சொல்லி யனுப்பினேனமே யிப்போ விருகன் கொண்டுபோகிற ரெண்டு பேரையும் ஆத்தூரிலேயிருந்து ஆத்தூரிலே யிருக்கிறவர்களை வெள்ளைக்காரருக்கு யெதிரேபோய் சிலவுக்குக் கொடுத்து

அழைத்துவரச் சொல்லென்று சொன்னார். (நான்) நல்லது அப்படித்தானே உங்கள் கடுதாசியை கொடுங்கள் என்று கேட்டதற்கு (துரை) அந்த பிராமணர்கையிலே காகிதத்தைக் கொடுத்தார். நானும் இரண்டுதிறத்தார்களும் இரண்டு காகிதம் கொடுத்து துரை கணக்கு ரங்கப்பிள்ளைக்கையில் பொன் வராகனிருந்தால் கொடுக்கச்சொல்லிக் கேட்டால் வராகனில்லையென்றும் இரனூறு வராகனுக்கு வழக்கப்படிக்கு எழுனூறு ரூபாய் கொடுத்தார் அந்த எழுனூறு ரூபாயும் மாற்றி வராகனைகொடுக்கச்சொல்லி வழுதாவூர் இராமபத்திர ரெட்டிக்கு காகிதமெழுதிக்கொடுத்து அய்யமாரை பயணம் பண்ணி அனுப்பிவைத்தேன்.

மற்றபடி இன்றையதினம் இங்கிலீஷ்காரர் அரியாங்குப்பம் கொத்தளத்தின்பேரிலேயும் கோவிலின் பேரிலேயும் கொடிப்போட்டுக்கொண்டு ஒவ்வொரு பிரங்கி சாடையாய் சுட்டுக்கொண்டிருந்தார்கள். மற்றப்படி விசேஷித்த கலாபமில்லை.

ஆனால் இங்கிலீஷ்காரன் அரியாங்குப்பத்திலே தமுக்குப் போடவைத்தது அரியாங்குப்பம் முதலான குண்டு கிராமத்துக் குடிகள் சுகமாய்வந்து அவரவர் பயிர்செய்துக்கொண்டு குடுத்தனம் பண்ணுங்கள் ஒருவேளை யெங்களுக்கு கூலியாள் தேவையா யிருந்தால் மனது சம்மதியானபேர் வந்து கூலிவேலை செய்கிறது ஒவ்வொருபணமும் படியும் கொடுத்துவிடுகிறோம். மற்றப்படி வெள்ளைக்காரர் உங்களை சுலுமி பண்ணினால் அவர்களை தொழுவிலே போடுவேன் பின்னையும் சுருக்கான குற்றம் பண்ணினால் தூக்கிலே போடுவேனென்று தமுக்குப் போடச் சொல்லி சொன்னாரும்.

இதல்லாமல் அவர் தண்டிலே வெளியார் சமஸ்தமான பேரும் வந்து அரிசி, நெல், பால், தயிர், மோர், நெய், காய்க்கரிகள் பின்னையும் வேணுமென்ற வஸ்துக்கள் கொண்டுவந்து அவரவர் சம்மதியானபடிக்கு விற்றுப்போட்டு சுகமாய் போகிறார்கள். யாராகிலும் சுலிமி சாஸ்த்தி ஒன்றும் நடக்கிறதில்லையாம்; மகா நீதியுடனே நடத்துகிறார் என்று போக்குவருத்து மனுஷர் சகலமான பேரும் (இங்கிலீஷ்காரர்) மகா

நீதியுடனே நடத்துகிருரென்று சொல்லிக்கொள்ளுகிறதுமல்லாமல் புதுச்சேரியார் அங்கே வலசை போயிருக்கிறவர்கள் அங்கே பால், தயிர், காய் கறி விற்கப்போய் இந்த சாடை துக்காணி ரெட்டைக்கா சென்று சொல்லி அதை சிறிது பேர் வீணர் பிடித்துக்கொண்டுபோய் எஜமான் முன்னே விட்டால் பிடித்து வந்தவர்களைக் கோபம்பண்ணி அவ்விடம் விட்டு இவ்விடம் வந்தால் அவர்களுக்கு என்ன சகாயம்பண்ணவேணுமோ அது பண்ணவேணுமேயல்லாமல் அவர்களைக் கோபம்பண்ணுகிறவன் விவேகியாவென்று கூப்பிட்டு வந்தவர்களுக்கு திலாசா சொல்லிப் போகச்சொல்லுகிறபடியினாலே சமஸ்தமானபேரும் சகலசாமக்கிரிகளும் தாஷியில்லாமல் கொண்டுபோய் விற்கிருர்களென்று இப்போ வந்த மேஸ்தர் பொஸ்காவென் என்கிற கோந்திரு அமிரால் (Mr. Bascawes Reav Admeral) மெற்ற பெரிய மனுஷனென்றும், மகா தர்மவானென்றும் நீதியுடனே நடக்கிறவனென்றும் சகல ஜனங்களும் சொல்லிக்கொள்ளத்தக்கதாக கேழ்க்கப்பட்டது. அப்பால் மணி பனிரெண்டான பிற்பாடு வீட்டுக்குப் போனேன்.

அப்பால் சாயங்காலம் ஆறு மணி வேளைக்கு துரையவர்கள் (என்னை) அழைத்தனுப்பிவைத்தவிடத்திலே மெத்தையின் பேரிலே அங்கே யிருந்து பிடித்துவந்த பிரிசோனேர்கள் (Prisonniers) சொல்தாதுக் கப்பித்தான் முதலான பேருடனேயும்பேசிக்கொண்டிருந்தார். ராசோபண்டிதன் வழிசீட்டுக்காக காத்துக்கொண்டிருக்கிருன்; அப்போ நான் போனவிடத்திலே என்னைப் பார்த்தாப்போலே துரை எழுந்திருந்து இப்பால் வந்து என்னைப் பார்த்து நீயும் கலாபமென்று போய்விடத்தக்கதாயிருக்கிருயென்று கபுறு கேட்டேன். மெய்யாவென்று கேட்டார். அதற்கு நான் சொன்னது: உம்முடனே சொன்னவர்களை சொல்லும் ருசு முகாவனி பண்ணி அதற்கேத்த தண்டனை பண்ணவேணும் யில்லையா பொய்யானால் எதிராளியை அந்தப்படி தண்டனை பண்ணும் நீருமென மனதிருந்தாலும் நான் என்னமாய் நடந்தாலும் உங்களுக்கெத்தனை தயவிருந்தாலும் உம்முடனே சொன்னதெல்லாம் பொய்யாய் போயும் என்னுடைய பொல்லாதவேளை குணம் திரும்பியும் உங்களுக்கு அவ்விசுவாசம் தோத்தது இனி விட்டு விடுங்கள் (வித்தியாசம்) யென்ன நான் நடந்துக்கொண்டாலும் யென்ன

சொன்னாலும் என்ன சீ விடுயென்று வேசாரினாப்போலே உறத்துச் சொன்னாப்போலே (துரை) கூவாதே கூவாதே மெள்ள என்னுடனே வந்து ஒருத்தரும் சொல்லவில்லை நானும் கலாபமாச்சே யென்று கேட்டேனென்று சொன்னார். அதற்கு நான் சொன்னது: இந்த ஊரிலே உள்ள கிருஸ்தவர் தமிழர் முதலானவர்களிலே வீட்டிலே பெண்டுகளொருத்தருமில்லை தட்டு முட்டுமில்லை எங்கள் வீட்டிலே மாத்திரம் என் சமாசரம் என் தட்டுமுட்டு மாத்திரமிருக்கிது இது வேணுமானால் பரிக்ஷைப்பாரும் இதுவரைக்கும் யெங்கள் வீட்டிலே இருக்கிறார்களென்று சொன்னேன். எனக்கேத்ததாயிருக்கிறாயா வென்று கேட்டார். நீர் கேட்டாலும் சரி கேளாமல் போனாலும் சரி உம்முடையஜீவனுக்கொத்ததாய் நானும் என்ஜீவனை யெண்ணிக்கொண்டு என்ன சண்டை வரட்டும் யெதுவரட்டும் உமக்கொத்ததாய் உம்முடனே கூட நான் மாத்திரமிருக்கிறேனென்று என்ஜீவனை உமதென்று தீர்த்துவைத்தேனென்றுச் சொன்னேன். அது யெனக்கு தெரியுமென்று சொல்லி அப்பால் பேச்சு நடத்தாமல் கும்பலிலேபோய் உட்கார்ந்துக் கொண்டு ருசோபண்டிதனுக்கு வழிக்கு சீட்டெழுதிக்கொண்டு வா கையெழுத்துப்போட்டு தாரேனென்று சொன்னார்.

இதிலே ஷேக்கு இப்ராம் இருந்துக்கொண்டு இருநூறு எருது மாத்திரம் போகுதென்று துரையுடனே சொன்னான். மறுபடி என்னையழைத்து இந்தச் சமயத்திலே எருதுகள் கொடுக்கக் கூடாது. இவர்களை வேணுமானால் வெளியிலே யிருந்து அழைத்துக்கொண்டு போகச்சொல்லு; மற்றபடி ஊரிலே இருக்கிற எருதுகளைக் கொடுக்கிற சமயமல்ல வென்றும், பின்னை ஏதாகிலும் பார்த்து மார்க்கமாய் உங்கள் தட்டுமுட்டெல்லாம் கொண்டுபோங்கள் நான் தடை சொல்லுகிறதில்லை. எருதுகள் மாத்திரம் கொடுக்கக்கூடாதென்று சொன்னார். அதன்பேரிலே ஐந்து எருதுக்கும் ஐம்பது கூலிக்காரருக்கும் நூறு பேர் சேவுகருக்கும் ஐந்து குதிரைகளுக்கும் ஐந்து பயினத்துக்கும் (ஒட்டகம்) ஐந்து வண்டிகளுக்கும் இந்த படிக்கு சீட்டெழுதி துரை கையெழுத்துப் போட்டுக்கொடுத்து மேட்டுக்கும் முத்திரைக்கும் கடுதாசியும் கொடுத்தார். அதை வாங்கிக்கொண்டு ராசோபண்டிதர் வீட்டுக்குப் போனார். நானும் பாக்கு கிடங்குக்கு வந்தேன். இது கேட்ட சேதியும் நடத்தின சேதி எழுதினது.

வந்த பிரிசோனேர் இங்கிலீஷ்காரரைக்கொண்டு தேவனும் பட்டணத்து குவர்னதோருக்கு காகிதமெழுதிவைத்து தன் சோபுதார் கையிலே கொடுத்து தேவனும்பட்டணத்துக்கு அனுப்பினர்.

இதெல்லாம் முசியே துப்ப்ளேக்ஸ் துரை பெண்சாதி நூறு சேவகரை வைத்து அவர்களிலே பதினைந்து பேர் பத்து பேர் விழுக்காடு குண்டுசாலை வழிக்கு வழியில் வைத்து போகிறவர் போங்கள் பெண்டுகள் ஆண் பிள்ளைகளைக் கையிலே காதிலே உடம்பிலே யிருக்கிற உடமை பணங்காசுகளைப் பிடுங்கிக் கொடுக்கச்சொல்லி அவர்களைக்கொண்டுதான் உள்ளாந்தரங்க மாயமைத்துக்கொள்ளுகிறுன். இந்தபடிக்கு மனுஷரை வைத்து பறிக்கத் துவக்கிருன். இதுகளுக்குக்கூட கேழ்பாரில்லை வழியிலே இருக்கிற சிப்பாய்கள் வெள்ளைக்காரர் ஷேக்கு இப்ராம் கூட அறிவார்கள். அறிந்தாலும் அம்மாளவர்கள் காறுபாறு அவளென்ன செய்துக்கொண்டுபோனுலும் போகட்டுமென்று பயந்து அவளுடைய அபாண்டத்துக்கு நடுநடுங்கி யிருக்கிருர்கள். முசியே துப்ளேக்சு துரைத்தனம் போய் நாலுமாசமாச்சுது முசியே துப்ளேக்சு பெண்சாதி நாலுமாசமாய் துரைத்தனம் பண்ணுகிருளென்று வெள்ளைக்காரர் ஆண் பெண் தமிழர் ஆண் பெண் துலுக்கர் ஆண் பெண் அடங்கலும் இதென்னமோ கேடுகாலமென்று சொன்னபடிக்கு பட்டணத்துக்கு கேடும் வந்து சமஸ்தயிக்கட்டு மனுபவிக்கிருர்கள் சுவாமி இந்த முசியே துப்ளேக்சு பெண்சாதி அதிகாரத்தை நிவர்த்தி பண்ண சகல ஜனங்களையும் எப்போ ரக்ஷிக்கிருரோ நான் அறியேன் இப்போ பட்டணத்திலுள்ள ஜனங்கள் தண்ணீர் குடம் தளும்புராப்போல் ருத்திரியும் பகலும் திகிலிலே செத்துப்போகிருர்கள். இந்த ஜனங்கள் திகிலை எப்போ நிவர்த்தி பண்ணுகிருரோ தெரியாது. ஆனுல் நிவர்த்தி பண்ணுவாரென்று பரவசமுமிருக்குது இதற்குள்ளே என்னமோவென்று சனங்கள் அங்கலாயக்கிறதை காகிதத்திலே எழுதி முடியாது.

1748 ஆ செப்டம்பர் மீ 1 உ க்கு விபவ ஞு ஆவணி மீ 20 உ ஆதிவாரம்

நேற்று சாயங்காலம் சந்தா சாயபு பெண்சாதி அல்லி தோஸ்துகான் பெண்சாதி அசனல்லிகான் பெண்சாதி

முதலானபேர் போகாமல் இற்றைநாள் கால்மே ஏழுரை எட்டு மணி வேளைக்கு பயணமாகி நடந்தார்கள். இவர்கள் போரார் களென்று ஊரிலே வர்த்தகர் செட்டி முதலானபேர்கள் எல் லாம் ஏகத்துக்கு ரெண்டாயிரம் மூட்டையுங்கூட கொண்டு போகவேணுமென்று யோசனை பண்ணி காத்துக்கொண்டு தெத்துவாசலிலே தெத்துவாசல் சந்தாசாயபு வீடு மட்டுக்கும் ஏக மூட்டை மூட்டைகளாக யிருந்து சந்தாசாயபு அவர்கள் சீட்டிலே யெழுதப்பட்டது ஐந்து எருதுகளும் அன்பது கூலிக் காரர்களானபடியினாலே அந்தப்படிக்கு எண்ணி விடுவேனே யல்லாமல் அதனமாயொரு மூட்டையாகிலும் விடுகிறதில்லை யென்று வாசற்படியிலே யிருக்கிற சாரசந்து ராஜா சாய புடனே சொன்னதும் அவர் குதிரை விட்டிறங்கி தங்கள் மூட் டையை மாத்திரம் அப்புறம் கையைக் காண்பித்து அப்புறத் திலே யிருக்கிறதும் மற்றவர்களாராகிலும் வந்தால் இதுக ளெங்களுதல்லவென்று சொல்லுகிறதும் சொன்னமாத்திரத் திலே வெள்ளைக்காரன் அவனை துப்பாக்கியினாலே இடிக்கிறது மானது அப்படி பத்துபேருக்கு மாத்திரம் துப்பாக்கியிடிபட்டு போகாமல் இரண்டுபேர் மூட்டைகளை பிடிங்கினார்கள். அத் துடனே எங்கே நின்றவன் அங்கே பாயை விரித்து வீட்டுக்குக் கொண்டுபோய் மூட்டைகளைச் சேர்த்துபோட்டார்கள். சந்தா சாயபு அவர்கள் தட்டுமுட்டுகளும் அவர்கள் பெண்டுகளும் குஞ்சகளும்கூட மேட்டுதாண்டினார்கள்.

இதிலே ராசோபண்டிதர் யென்கிறவர் துரை பெண்சா திக்கு சலாம் சொல்லி வரப்போனார். அவன் அங்கே போய் சொன்ன உடனே துரையும் அங்கே வந்தார் என்னவென்று துரைக்கேட்டார். நன்றியரிந்த உபசாரம் சொல்லிவரச் சொன் னார்களென்று சொன்னதற்கு துரை பெண்சாதி நாங்களுங் களைக் காப்பாற்றினதற்கு எங்களுக்கு ஒரு இக்கட்டு வந்த வேளையிலே விட்டுப்போட்டுப் போகிறது உங்களுக்கு நல்ல தல்ல வென்று சொல்ல அப்படி போகிறதில்லை குண்டுக்கு பயந்து வெளியேயிருந்து வருவோமென்கிறதேயல்லாமல் மற்ற படி நாங்களுங்களை விட்டுப் போகிறதில்லையென்று உபசார மாய் பின்னையும் சொல்லத்தக்கபடிக்கு யெப்படி உண்டோ அப்படிச் சொல்லிப்போட்டு வந்து என்னுடனே வந்து சொன் னார் அப்போதானே எனக்கு அய்யம் தோன்றியது அப்படி

யிருக்க அதிலே துரையுடனே அவர்களின்மேல் பரிச்சேதமாய் வருகிறதில்லை வீட்டிலே யிருந்த முறம், விளக்குமாற் கூட நாலுபணத்து உடமையை ஒரு பணத்துக்கு விற்றுப்போட்டு வருகிறதேது? இனிமேல் வருகிறதில்லை யென்றும் யென் பேரிலே இவன் அரிந்திருந்தும் உம்முடனே சொல்லவில்லை யென்று சொல்லி பின்னையும் என்னென்ன சொன்னாரோ தெரியாது நான் அவருடனே அல்லிதோஸ்துகான் மகன், அசனல்லிகான் மகன் வந்தவாசி ஆற்காடு வேலூர் போகிறதில்லை கலாபமான பிறகு இவ்விடத்திற்கு வருகிறதேயல்லாமல் அப்பால் போவதில்லை. அந்தமட்டுக்கும் வழுதாவூரிலே இருப்பார்கள் சந்தாசாயபு பெண்சாதிமாத்திரம் ஒருவேளை வந்தவாசிக்குப் போவார்களோ போகார்களோ தெரியாது என்று சொன்னதற்கு துரை இருந்துக்கொண்டு எனக்குமப்படித்தான் தோணுது. சந்தாசாயபு அவர்களினிமேல் இவ்விடத்திற்கு வருவதில்லை யென்று அவர் வாயினாலே சொல்லி தீர்ந்திருக்கிற பேச்சானபடியினாலே என்னைக் கண்டிக்கக்கூடாது.

அப்படியிருந்து துரையவர்களழைக்கிறாரென்று சேவகன் வந்து அழைப்பதற்குள்ளே அப்புமுதலி தம்பி நூறு வராகன் தட்டுமுட்டு வெள்ளி நகையும், பொன் நகையும் வெளியே கொண்டுபோனதாகவும் அதைச் சாந்தப்ப சேருவைக்காரன் பிடித்துக்கொண்டு துரை பெண்சாதியண்டையிலே விட்டதாகவும் அவளதை துரைக்கு காண்பித்தாபோலேயும் அதற்கு (துரை) அப்பை கோவித்துக்கொண்டு சாவடியிலே கொண்டு போய் காவல் வைக்கச் சொன்னாரென்றும், அப்புமுதலி சாவடிக்கு சோபுதாரன் கிடங்கு வழியாய் அழைத்துக் கொண்டு போகும்போது என்னைப்பார்த்து நான் செய்த மகா அபராதத்திற்குச் சாவடியிலே கொண்டுபோய் வைக்கச் சொன்னார்கள். நான் போகிறேன் சாவடிக்கு நீங்களறிந்திருக்க வேணும். இதனாலே சொல்லிப்போட்டுப் போகிறேனென்று சொல்லிப்போட்டு சோபுதாரன் பிறகே சாவடிக்குப் போனான். நான் துரையண்டைக்குப் போனதும் துரை என்னைப்பார்த்து அப்பு என் வேலைக்காரனாயிருந்து இவன் செய்த வேலையைப் பார்த்தியா? அதனாலே கொண்டுபோய் காவல் வைக்கச் சொன்னேனென்று சொன்னார். அதற்கு இது உத்தாரம் சொல்லுகிற வேளையல்லவென்று சும்மாயிருந்தேன்.

அப்பால் (துரை) சந்தாசாயபு அவர்கள் குஞ்சு குழந்தைகள் நேற்று போகவில்லையாவென்று கேட்டார். நேற்று போகவில்லையென்றும் காலத்தாலே போனார்களென்றும் (நான்) சொன்னேன். அவர்கள் வீட்டிலேயிருந்த முறங்கூட விற்றுவிட்டுப் போனார்களாம். நமக்கு பணம் வரவேணுமே அதை கொடுத்துப்போட்டுப் போகச்சொல் என்று (துரை) என்னுடனே சொல்லிப் போகச் சொல்லிப்போட்டு அப்பால் ஒரு கப்புருலை அழைத்து மேட்டுக்கு அப்புறம் விடவேண்டாமென்று மேட்டிலே இப்போயிருக்கிற ஓபிசியேமாருடனே சொல்லி விட்டுவா வென்று அனுப்பினார். நான் வழுதாவூர் வாசற்படியண்டைக்கு சந்தாசாயபு மகனண்டைக்குப் போகும்போது அவரும் சங்குவார் இடங்கண்டையிலே யெதிரே வந்தார். அவரை நீர் அப்புரம் போகவேண்டாம் கண்டுபேசக் கவையாயிருக்குதென்று அவர் வீட்டை அழைத்துப்போய் துரையண்டையிலே நடந்தசேதியைச் சொன்னேன்; அவர் பணத்தை சம்மதிபண்ணிபோட்டு அப்பாலே போகிறேனென்று சொன்னார் நல்லதென்று அவரை அனுப்பிவைத்துக்கொண்டு துரையண்டைக்குப்போய் சந்தாசாயபு மகன் சொன்ன சேதியைச் சொன்னேன். ஆனால் பெண்டுகள் தட்டு முட்டு போகிறவர்களை மறுபடி யழைத்து வந்து சாத்து வெளியிலே மரித்துப்போட்டார்கள். அவர்களை விட்டு விடச் சொல்லி வழுதாவூர் வாசற்படி சாரசந்துடனே சொல்லியனுப்பினார். அவன் போய் மேட்டிலே யிருக்கிற வெள்ளைக்கார ஒப்பிசியாலுடனே சொல்லி மறித்திருந்த சந்தாசாயபு குஞ்சி கொழுந்தைகள் தட்டுமுட்டுகள் சமஸ்தமும் வெளியே அனுப்பிவிட்டார்கள்; இத்தனை அவமரியாதை எங்கள் ஜென்மத்திலேயும் அறியோமென்று அவர்கள் மனது நொந்துக்கொண்டது காகிதமுகாந்திரத்திலே யெழுதி முடியாது ரவுத்திர ௵ வைகாசி ீ துவக்கி நாளதுவரைக்கும் அவர்களுக்குப் பண்ணபட்ட உபகாரமெல்லாம் இன்றையதினம் நடத்தியதுடனே தீர்ந்துபோனது யென்று பட்டணத்திலுண்டான ஜனங்கள் சமஸ்தமானபேரும் சொல்லிக்கொண்டார்கள். மறுபடி துரை என்னை அழைத்து சந்தாசாயபு மகனை தழைஞ்சது கொஞ்சபணத்து நிமித்தியமாதழைவென அவர்களை வெளியே அனுப்பாதபடிக்கு இன்னேரத்துக்கு நிறுத்தவேணுமே அதற்காக பணத்தைக் கொடுத்துப்போ என்று சொன்னது இப்பவும்

பணம் கேழ்க்கவேண்டாம் மார்க்கமா யுத்தரவு யெப்படி சொல்லவேணுமோ அப்படி சொல்லென்று (துரை) சொன்னூர் மற்றப்படி விசேஷங்கள் ஒன்றும் நடக்கவில்லை நானும் நல்லதென்று வீட்டுக்குவந்தேன் இங்கிலீஷ்காரரும் அரியாங்குப்பத்தை பலகாயித்துக்கொண்டு அங்கே யிருந்தார்கள் இவர்கள் பவுனசும் குண்டுசாலையிலே யிறங்கினபடிக்கு யிருந்தார்கள் சண்டைகள் நடக்கவில்லை.

இற்றைநாள் மேட்டுக்கு வெளியே ஆடு மாடு பெண்டுகள் ஆண்பிள்ளைகள் ஒருத்தரையும் விடவேண்டாமென்று துரையவர்கள் முசியே பாரதி அவர்களுக்குச் சொல்லி அனுப்பிவிடச் சொன்னூர்.

*1748* ஆ (செப்பதம்பர் மீ 3 உக்கு விபவ ஹு ஆவணி மீ *22* உ மங்களவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்களுடனே நேற்றிய காகிதசேதி சொல்லுவோமென்று போய் பாக்கு கிடங்கிலே உட்கார்ந்த உடனே மதனூந்தபண்டிதனிருந்துக்கொண்டு உங்களுத்தரவழி தெரிஞ்சுது நேற்று துரை பெண்சாதி உங்களுக்கு வக்கில் சுப்பய்யனனுப்பின காகிதம் கொண்டுவந்த பிராமணனையும் காவல்வைத்து காகிதமும் லக்கோடா அவிழ்த்து தானப்பமுதலி தங்கச்சி மகன் தைரியம் என்கிற பிள்ளையாண்டானை அழைப்பித்து படித்து பார்த்துக்கொண்டாள் அதிலே ஆத்தூர்தாலுக்கு சேதி. நாம் மாபுசுகான் முதலானபேருடனே பேசச்சொல்லி யெழுதினதற்கு மூலைக்கு மூலை அவர்களிருக்கிறபடியினாலே காகிதங்கள் கொடுத்துக்கொண்டு பேசி யெழுதி அனுப்புகிறேனென்று யெழுதியிருக்கும் பின்னை யென்ன எழுதியிருக்கப்போகுது அதைப்பார்த்துக் கொண்டு அவனை போகச்சொல்ல போரள் நாமுத்தரவளபடப்போகாது முன்னும் இருபது தரம் அந்தபடிக்கு நடத்தியிருக்கிறோமே அதை யெல்லாம் துரையுடனே சொன்னூர்களா அப்படித் தானிதை சொல்லப்போகிறதில்லை யென்று சொல்லி ஆகட்டும் அவளப்படி நடத்தினுள் மத்தியானத்துக்குள்ளே விட்டு விடுவான் அதைப்பார்த்துக் கொண்டு துரையுடனே எச்சரிக்கிறதே யுக்தமாயகாணுது அல்ல வென்று பதரியெச்சரித்தால்

ஆரோவிங்கப்பாப்பான் காகிதம் கொண்டு வந்தானென்று வழிச்சாரிக்காரர் பிடித்துவந்தார்கள் நல்லது அந்த பாப்பானை நயனர் வீட்டிலே காகிதத்தை இங்கே வைத்துவை அப்பால் விசாரித்து விட்டு விடுவோமென்று சொல்லி வைத்தேனென்றல் அதற்கு உத்தரம் என்ன சொல்லலாம் அவனெப்படிச் சொல்லவேணுமோ அப்படி யெல்லாம் சொல்லுகிறதற்கு இப்போ காலம் ஏனென்றால் இங்கிலீஷ்காரரவனை காத்துக் கொண்டிருக்கிறபடியினலே பிராமணனுடைய சாடை இந்த வேளையிலே துணிந்துக்கொண்டு வருவார்கள் என்கிறதைக் குறித்து விசாரிப்போமென்று வைத்தேனென்று சொன்னல் துரையுமவள பேச்சின்பேரிலே இப்போ நடக்கிறபடியினலே விசாரித்தாப்போலே உனக்கென்ன பயம் குற்றமில்லாதபடியினலே ஆர் வேணுமென்றலவர்கள் விசாரித்துக் கொள்ளட்டு மென்று சொல்லுவாரானபடியினலே உத்தரவளிபடப்போகாது, அவள் தானே மத்தியானத்துக்கெல்லாம் விட்டு விட்டு அந்த காகிதமும் உங்களுக்கு வந்து சேரப்போகுதென்று சொன்னரப்போ நான் யோசனை பண்ணினது இவன் போய் இராத்திரி அந்த காகிதம் படித்து வந்தானென்று கபுறுகேட்டதற்கும் இவன் அவனுடைய அபிப்பிராயம் சொன்னதும் சரிப்பட்டுப்போனது. இப்படி யெல்லாம் ஏன் நடத்துகிற கசாசா மாணியத்திலே தானல்லோ நடக்குது ஆனபடியினலே யின்னேரத்திற்கு ஒழுங்கு காரியமாய் யிருக்கிறதே உத்தமம் அல்லது பட பட வென்று போய் சொன்னேமானல் பெண்சாதி மயக்கம் ஒன்னும் அவரை கேழ்க்கவொட்டாது அப்பால் சண்டையினுடைய காபிரா ஒன்னு ரெண்டுலே புத்தி சிதறி சகல காரியமும் பெண்சாதி வழியிலே விட்டுவிட்டு இவர் சும்மா யிருக்கிறவேளையானபடியினலே நாமிப்போ சொன்ன விடத்தில் பலித்ததா உத்தமம், பலிக்காமல்போனல் இப்போ யிருக்கிற கெதிக்கு அதைவிட இளப்பம் வேறேயில்லை, ஆனபடியினலே இப்படி மார்க்கமாய்ப் பார்க்கிறது எதிரிக்குக் கூட பயமிருக்கும் என்னமோவென்கிறதாயிருக்குமென்று யோசனை பண்ணிக்கொண்டு துரையுடனே சொல்லுகிறதை நிறுத்திப்போட்டேன் [ ].

1748 ஆ. செப்டம்பர் மீ 6 உ க்கு விபவ ஹ ஆவணி மீ 25 உ குருவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் வீட்டுக்குப் போனவிடத்திலே துரையவர்கள் சியோரா (Seigneur) உசேன்

சாயபு, சந்தாசாயபு, படேசாயபுகூட இங்கே இருக்கிறவர்களை அவ்விடத்திற்கு அழைப்பித்துக்கொள்ளவேணுமென்று பிர யத்தினம் பண்ணுகிருனும்; மெய்தானுவென்று கேட்டார். நல்ல நாளையிலேதானே பிரயத்தினம் பண்ணினவன் இந்தக் கலக நாளையிலே நம்முடைய பட்டணத்துப் பெண்டுகள் சமஸ்தமானபேரும் வெளியே போகும்போது விட்டுவிடுகிருனு? இப்போ நன்ருய்ப் பிரயத்தினம் பண்ணுவான். இவர்களை கேழ்க்கிறதற்கும் அவர்களுக்கு இடமுண்டாயிருக்குமேஎன்று (நான்) சொன்னேன். 'துரை ஒருக்காலும் வெளியே போகச் சொல்லி உத்தாரம் கொடுக்கப்போகிறதில்லையென்று சொன்ஞர். அப்பாலிவ்விடத்திலே இருந்த பிராமணர்கள் எல்லாரும் போய் இங்கிலீஷ்காரருடனே கூடிக்கொண்டு இவ்விடத்துச் செய்திகளை எகத்தாளி பண்ணுகிருர்களாம். ஆனபடியினுலே பாப்பாரை உள்ளே விடவேண்டாமென்று (நான்) சொன் னேன். ஊரிலே இன்னும் (பிராமணன்) எவ்வளவென்று துரை கேட்டார். வெகுநாளாய் இவ்விடத்திலே வீடு வாசற்படி கட்டிக்கொண்டு இருக்கிறவர்கள் வீட்டுக்கு ஒருத்தர் ஆண் பிள்ளைகள்மாத்திரம் இருக்கிற வீடுகளுமுண்டு. பெண், பெண் சாதியிருக்கிற வீடுமுண்டாயிருக்கும். ஆனல் பிராமணர்கள் எல்லாரும் போய் இங்கிலீஷ்காரருடனே கூடிக்கொண்டு இவ் விடத்திலே பலன் இல்லையென்று சொன்ன வார்த்தை உங் களுக்கு யார் சொன்ஞர்களோ தெரியாது. அது விசாரிக்கப் போனல் பொய்யாயிருக்கவேணுமென்று (நான்) சொன்னேன். இப்போ வீடு (வீட்டுக்கணக்கு) எடுத்து எழுதுகிறபடியினுலே வெளியே போனவர்களெல்லாம் உள்ளே வந்து விட்டார்கள் அவர்கள் நினைப்பு நான் வீடு எடுத்துக்கொள்ளுவேனென்று பயந்தார்கள் அப்படியொருக்காலும் செய்கிறதில்லையென்று சொன்னுரதற்கு நான் நீங்கள் பயப்பட்டு ஜனங்கள் மறுபடி வரவேணுமென்று எடுத்த எடுபாடல்லவா நான் அறிவே னென்று சொன்னேன். (துரை) ஆனலும் இந்த ஜனங்கள் இத்தனை பயந்துஎனேடிப்போறார்களென்று கேட்டார். தமிழர் சண்டை அறிந்தவர்கள் அல்ல நன்ருய் படிப்புகளறிந்தவர் களல்ல. தேசம் தேசம் திரிந்து சமஸ்த இராச்சியங்கள் பார்த் தவர்களுமல்ல. அப்படிப்பட்டவர்களெல்லோரும் ஓடுகிறதும் அவதைரியபடுவதும் சரி. ஐரோப்பியர்கள் சமஸ்தகளரி அறிந்

தவர்கள் வெகு தைரியசாலிகள் சமஸ்த விபகாரங் களுமறிந்தவர்கள். பெண்டுகளும் புருஷரைப்போல் விவ கரிக்கப்பட்டவர்கள் அவர்கள் பயத்தைக் கேழ்க்கச்சேயும் பிறரிக்கச்சேயும் தமிழர் தைரியசாலியாய் காணுதென்று சொன்னதற்கு மெய்தானதுயென்று (துரை) ஒத்துக்கொண் டார். கீழண்டை பாரிசமாயிருக்கிற வெள்ளைக்காரரெல்லாம் சாயங்காலமானதும் மேலண்டைபாரிசம் தமிழர் வீடுகளில் ஓடிவந்து உட்கார்ந்து கொள்ளுகிறபடியினாலே அந்த பாரிசத் திலே தமிழர்களும், பின்னையும் பட்டணத்திலேயிருக்கிற தமிழர்களும் காபிராபட்டார்களென்று (நான்) சகஜமாய் சொன்னேன். அவரும் சகஜமாய்க் கேட்டுக்கொண்டு வந்தார். அப்பால் (துரை) கிருஸ்தவப் பெண்டுகள் விசேஷமாய் ஆரும் போகவில்லையென்றும் தாம் போகும்போது கோவிலுக்குப் போகிற சிறிது பெண்டுகளை கண்டோமென்றுச் சொன்னார். ஊரிலே தமிழப்பெண்டுகள் போனால் என்ன ஆக்கினை வருமோ வென்று பயந்துயிருந்தார்கள். கிருஸ்தவ பெண்டுகள் ஒருக் காலும் பெரியமனுஷர் வீட்டுபெண்டுகளும் அவரவர் விட்டு தட்டுமுட்டுகளும் தாண்டினபிறகுதான் தமிழர் வீட்டுப் பெண்டுகளும் தட்டுமுட்டு தாண்டவைத்தார்கள். கலகத்துக்கு தமிழர் வாடிக்கை ஓடி பிழையென்று கரிப்புக்குயிருந்து பிழை யென்றும் சொல்லுகிற வாடிக்கை ஒரு காரியத்துக்கு இந்த ஜனங்கள் வெளியே போனது மெற்றநல்லது. என்னத்தினாலே யென்றால் ஊரிலே தானியம் கட்டுக்கடைய யில்லாததினாலே யுத்தமமாய் காண்கிறது என்று (நான்) சொன்னேன். அது கேட்டும் கேளாமலும் போருப்போல் அப்பாலே போனார் நானு மங்கே உட்கார்ந்தேன்.

இற்றைநாள் துரை பெண்சாதி பண்ணின் திட்டம் தன் னண்டையிலே யிருக்கிற வலராம் தொப்பை மகன் சின்ன பிள்ளையாண்டானையும் திட்டம்பண்ணி துரையவர்களிடத் திலே ஒருத்தன் மாத்தி ஒருத்தன் வாங்காமலிருக்கவும் ஆரென்ன வந்து பேசினாலும் அடிக்கடி தனக்கு வந்து கபுறு சொல்ல இப்படி திட்டம்பண்ணி இவர்களிரண்டுபேரும் வாங் காமல் கிட்டயிருக்க நான் பேசுகிற பேச்செல்லாம் அடிக்கடி யிவர்கள் கேட்கிறதும் போய் சொல்லுகிறதும் வருவதும் துரை யழைக்கிறதற்கெல்லாம் முன் சோபுதார் யிருந்தல்லோ உத்

தாரம் சொல்லிக்கொண்டு அழைக்கிறவர்களை அழைக்கிறது இடுகிறவேலைக்கெல்லாம் வேலைக்காரனாயிருந்து நடத்துகிறது இற்றைநாள் வலாராமும் தொப்பை மகனும் ஏற்பட்டு நின்றார்கள். இனிமேல் என்ன நடத்துவாரோ தெரியாது. துரையவர்களை இப்படி இந்த காம்பிராவிலே நுழைந்ததும் தம் காம்பிராவில் போய் மறுபடி வருவதும் ஒவ்வொரு பேச்சு பேசுகிறது இப்படியாக அதற்கு நானுத்தாரம் சொல்லுகிறதும் இந்தபடிக்கு பேசியிருந்து மறுபடி வந்து இங்கிலீஷ்காரரெல்லாரும் போய்விடுகிறார்களாம். இதல்லாமல் முசியே ப்லோயர் தேவனும்பட்டணம் குவர்னதோர் தான் தானனுப்பின மனுஷரை மறுபடி கேழ்க்கிறாராம். ஒரு அரியாங்குப்பம் கொத்தளம் வாங்குவதற்கு இத்தனை பேர் சாவக் கொடுத்து நாமா வாங்குகிறதற்கில்லாமல் அவர்களாய் விட்டுவிட்டுப் போனதை நீர் கட்டிக்கொண்டதேயல்லாமல் நீர் சண்டைபண்ணி வாங்கினதில்லையென்று கோந்திரமினால் மேஸ்தர் மொஸ்காவெனுக்கும் இவனுக்கும் பேச்சாய் அதன்பேரிலே தேவனும்பட்டணத்திலே இருந்துவந்த சொல்தாதுகளை அழைத்துக்கொண்டு தேவனும்பட்டணம் போய்ச் சேர்ந்தது மெய்தானாவென்று கேட்டார். சரிதான் இதெல்லாம் பெண்சாதி வேகு அழைப்பித்துச் சொன்ன சாடை யுத்தமென்று அறிந்துக்கொண்டு யாராகிலும் கிட்டயிருந்து பேசச்சே பார்த்துக் கேட்டுவந்து சொல்லுகிற பேச்சல்லவே அவனவன் சரிப்போனாப்போலே யோசனைபண்ணி நடக்கிறதற்கு தக்கதாக கட்டிவிடுவான். அது ஒருவேளை சரிபடுகிறதுமுண்டு, சரிபடாமல் பேகிறதுமுண்டென்று சொல்லிக்கொண்டே இருக்கும்போது இங்கிலீஷ்காரர் பவுன்சு வந்து ஒழுகரை முதலான இடங்களெல்லாம் வந்து பரவி காட்டுமேட்டு வழியாலே புறப்பட்டு பெருமாள் நாய்க்கன்சாவடி வழியாய் வந்தார்களென்கிற கபுறு வந்தது. இதிலே நம்முடைய குண்டுசாலையிலே இறங்கியிருக்கிற வெள்ளைக்காரருக்கும் அவர்களுக்கும் சண்டை அத்திக்கொண்டதென்று துப்பாக்கி சப்தங்களும் பீரங்கி சப்தங்களும் கேழ்க்கப்பட்டது. இந்தச் சேதி துரை கேட்டு கூண்டுமேலே ஏறிக்கொண்டு கூடலூர் வாசற்படியே போனார். துரைத்தனம் பண்ணுகிறவன் சத்துரு வந்து கழுத்தப் பிடரியின்பேரிலே ஏறிக்கொண்டிருக்கும்போது அவனை வெல்லுகிற உபாயமும் தன் பட்டணத்தைக் காப்பாற்றுகிற யோசனையும் அகோராத்

திரங்களும் அதற்கேற்ற வேருக்காரரை அனுப்பிக்கொண்டு விசாரித்துக்கொண்டிக்கவேணுமே யல்லாமல் அதை விட்டுப் போட்டு ஊரிலே அவன் நின்றுகொண்டிருந்தான். இவன் தூங்கினுனென்று பெண்டாட்டி சொன்னுல் அதை விசாரித்துக்கொண்டு அதுவே பிரஸ்தாபம் பண்ணிக்கொண்டு பெண் சாதி சத்துருவாயிக்கிறவள் வாங்கிப்போருளென்ருப்போலே அதை மெய்யென்று எண்ணிக்கொண்டு அதை வரவர்கள் போரவர்களுடனே யெல்லாம் சொல்லிக்கொண்டு பட்டணத்திலே சரிபோனபடி கொள்ளை யிடுகிருன். பெண்சாதி ஒரு பக்கத்திலே நாரைக்குட்டிச் சுவளக்கியில்லாத அதிகாரமும் இல்லாத நேரத்தையும் போட்டுக்கொண்டுபோய் காவல் வைக்கிறதும், அடிக்கிறதும், விலங்கு போடுகிறதுமாய் கிருஸ்தவர்களை ரொம்ப பிரபல்யமாய் விரும்பிக்கொண்டு அவர்கள் என்ன கலாபதிபண்ணினுலும் யாரை அடித்தாலும் ஏனென்று கேழ்ப்பாரில்லாமல் அதற்கேற்ற சின்ன துரையும் பட்டணத்தை யாரென்ன செய்துக்கொண்டு போனுலும் தன்னைத் தான் வந்து ஒருத்தனிழுத்தாலும் ஏனென்று கேளாத மதிக்கெட்டு முசியே லேதெ ஒருத்தன் ஏற்பட்டபடியினுலே புதுச்சேரிக்கு ஏழரை நாட்டான் சனி கழிவானபடியினுலேயும் ஏகத்துக்கும் மதாம் துய்ப்ளேக்ஸ், முசியே துய்ப்ளேக்ஸ், சின்ன துரை முசியே லேதெ கோன்சேலியேர்கள் இப்படிபட்ட சுருட்டுப் பொருக்கிகளானபடியினுலே அதற்கு தக்கதாய் அன்னீதமென்கிற பயர் ஓங்கிவளர்ந்து தழைத்து விஸ்தாரமாய் பிரபலமானது. இதை போக்கடிக்க சுவாமி எப்போ கடாக்ஷிக்கிருரோ நான் அறியேன். இதிலே பட்டணங்கள் தனித்து அலக்கலக்காய் ஓடிப்போய் பட்டணம் தளும்புது இந்த பயத்தை எப்போ நிவாரணம் பண்ணுகிருரோ தெரியாது.

அப்பால் சாயங்காலம் இங்கிலீஷ்காரர் பவுன்சு வந்துக் குண்டுசாலை மட்டுக்கும் பிடித்து அவர்கள் சுடுகிற பீரங்கியினுலே நம்முடைய பவுன்சு குண்டுசாலையிலே நிற்கமாட்டாமல் ஓடிவந்து கெவுனிவந்து சேர்ந்தார்கள். ஓடிவரும்போது குண்டு சாலையெல்லாம் நெருப்புப்போட்டு கொளுத்திப்போட்டார்கள். அப்பால் துரை நம்முடைய தோட்டத்தண்டையிலே யிருந்த குசப்பாளையம் அதற்கப்புறம் சாரத்தண்டையிலே யிருந்த வீடுகள் தெய்வனுயகச்செட்டி சாவடி அண்டையிலிருந்த

பறச்சேரி முதலானதெல்லாம் மனுஷரை யனுப்பி கொளுத்திப் போடச் சொன்னர். அந்த சமயத்திலே அம்மாள் மறவரென்று கள்ள ஜாதியென்று தெற்கே யிருந்து அழைப்பித்தோமென்று துரைக்குச் சொல்லி ஆறு ரூபாய் விழுக்காடு சம்பளத்திற்கு வைத்த ஊரெல்லாம் கொள்ளையிடச் சொன்னவர்கள் போய் குசப்பாளையம் மத்தசா முதலிய இடங்களெல்லாமறைபாலிருந்த பெண்டுகள் புடவைகள் கூட உறிஞ்சிக்கொண்டார்களே, ஆனல் மற்ற பணம் காசு தட்டுமுட்டு பிடிங்கிக் கொண்டார்களென்றெழுதவேணுமா? அதிலே பார்த்துக் கொள்ளவேண்டியது. இந்தபடிக்கு முசியே துய்ப்ளேக்ஸ் துரைத்தனம் பண்ணிக்கொண்டு வருகிறவேடிக்கையை என்னவென்றெழுதப் போகிறேன். சுவாமி ரக்ஷிக்கவேணுமேயல்லாமல் மனுஷரெத்தனத்திலே ஜனங்கள் சுகப்படுகிற ஏஷியம் காண்பிக்கவில்லை. இந்தமட்டிலே இவர்களும் சும்மாயிருந்தார்கள். குண்டுசாலை ஒழுகரை முதலான இடங்களிலே இறங்கி யிருந்தார்கள்.

*1748* ஆ செப்டம்பர் மீ 7உக்கு விபவ ஞு ஆவணி மீ 26உ சனிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் வீட்டுக்குப் போனவிடத்திலே நடந்த சேதி: நேற்றையதினம் இங்கிலீஷ்காரர் பெருமாள்நாய்க்கன் சாவடி வழியாய் வருவதற்குள் நம்முடைய குண்டுசாலையை விட்டுப்போட்டுக் குண்டுசாலையெல்லாம் நெருப்புப்போட்டு அப்பால் குசப்பாளையம் பறச்சேரி முதலானதெல்லாம் கொளுத்திப்போட்டு பட்டணத்தை சுற்றி சுவர் போட்டிருக்கிற கெவுனி வாசல்கள் கொத்தளங்களிலே சமஸ்தமான வெள்ளைக்கார சிப்பாய்கள் அனைவரும் வந்து சேர்ந்தார்கள். நம்முடைய பெரிய தோட்டம் முதல் குண்டுசாலைக்குள்ளே எல்லாமவர்கள் மனுஷர் வந்து நிறம்பிப் போனர்கள்.

இற்றைநாள் காலத்தாலே சம்பாவுலு கோயிலண்டையிலேயும் உள்ளேயும் கூடாரம்போட்டு இருநூறு சொல்தாதுகளும் நூறு சிப்பாய்களும் கொண்டுபோய் வைத்தார்கள். அப்பால் துரையவர்கள் முசியே பாரதி முதலான பேர் சம்பாவுலு

கோயிலுக்குப் போய் அங்கே குந்தானி பீரங்கி ஏற்றிப்போட்ட தாகக் கேட்டதற்கு அவர்கள் ஈஸ்வரன் கோயிலைப் பிடித்துப் போட வேணுமென்று கேட்டதற்கு, இதல்லாமல் துரையவர் கள் பெண்சாதி வழியிலே பின்னையும் சிறிது சீர்மைக் காரியங் களுக்கு உதவி ஒத்தாசை பண்ணத்தக்கதாக உள்ளே பேச்சு பேசியிருக்கும்போது சண்டை சமயமானபடியினாலே இதையே பலத்துப் பேசி அங்கேதானே கோன்சேல் கூடி சம்பாவுலு கோயில் பாதிரிகளுக்கு ஈஸ்வரன் கோவில் இடித்துப் போடு கிறோமென்று வார்த்தைப்பாடு கொடுத்துப்போட்டு புறப்பட்டு வீட்டுக்கு வந்தார்.

துரையவர்களுக்கு அபகீர்த்தி வந்தது ஏதென்றால்: பெண் சாதி பேச்சைக் கேட்டுக்கொண்டு சகல காறுபாறும் பெண்சாதி வழியிலே விட்டுப்போட்டுச் சத்துரு வருகிறதுகூட தெரியாமல் சத்துரு வந்து முத்திரசப்பிள்ளைசாவடி அண்டையிலே வந்து நம்முடைய சிப்பாய்களுடனே சண்டை கொடுக்கிறமட்டுக்கும் கபுறு இல்லாமல்போனது ஒன்று, இரண்டாவது அம்மாள் சேவகரென்று நூறு பேரை வைத்து சகலத்துக்கும் போக்கு வருத்து ஜனங்கள் கையிலே அடித்துப் பறித்தது ஒன்று. மூன்றாவது பட்டணத்தை வெள்ளரிக்காய் விற்ற பட்டணம் சாடையாய் அம்மாள் காறுபாறு என்று பட்டணத்தைக் கண்டவனை நின்றவனை, சுத்துபட்டு கிராமங்களிலே இருக் கப்பட்ட நாட்டார் குடியானவர்கள், வர்த்தகர் சமஸ்த மான பேரை அன்வர்த்திகான் அபசீதரை அமுலானபடியி னாலேயும் வெளிக்குக்கூட மனுஷரைப் பிடித்துவந்து கழுத்துக்குச் சங்கிலிபோட்டு மண் சுமக்கவிட்ட அபகீர்த்தி ஒன்று. சென்னப்பட்டணத்துக் காரியத்தையெல்லாம் கும்பினிருக்கு ஆதீராக்காமல் தனக்கும் பிரயோஜனமில்லா மல் பெண்சாதி பேச்சைக் கேட்டுக்கொண்டு வெகுபேரை அமுலுக்கு அனுப்பி அவனுக்குச் சரிப்போனாப்போலே யெல் லாம் கொள்ளையிட்டுத் தின்னுவதற்கவனை சேரவொட்டாமல் பட்டணத்தையும் பெடிசி வளக்கினது ஒரு அபகீர்த்தி முசியே துய்மா நாளையிலே மராட்டியர் கலாபம் வந்தபோது ஆற்காடு சுபாவை கற்தாவென்கிற கீர்த்தி டில்லியிலே பாற்சாக கேட்டு சந்தோஷப்பட்டு அவனால் தயவுபண்ணி நாலாயிரத் தன்னூறு குதிரைக்கு மனசுபாவும் நபாபுகிரியும் நவபோத்து

முதலான மேன்பாடு தயவுபண்ணினது சூரியப்ரகாசம் போலே இருக்கப்பட்ட கீர்த்தியை அந்த கலாபமென்று அந்த சுபாக் காரர் வெளியே போகவேணுமென்ருல் முன்னே போகச் சொல்லி உத்தாரம் கொடுத்து மறுபடி ஒருனுழி வழிபோன வர்களை பெண்சாதி பேச்சைக் கேட்டுக்கொண்டு மறுபடி சொல்தாதுகளை விட்டு யிழுத்து பரித்து அலங்கோலம்பண்ணி வெய்யலிலே மறித்துப்போட்டுவைத்து பின்னேயும் எந்த விதத் திலே அவர்களைச் சலாபண்ணவேணுமோ அதெல்லாம் நடத்தி சந்தாசாயபு மகனேயும் பதினுயிரம் ரூபாய் விஷய மெல்லாம் யெவ்வளவு அது கொடுத்துப்போட்டு போகச் சொல்லி கோன்சேனுது பண்ணபடியினுலே எவர்களைத் தொட்டு முன்பாற்சாபரியெந்திரமாய் நவபொத்து நவாபு கரிமுதலான மேன்பாடு கீர்த்தியும் லோகத்திலே பிறகாசித் ததோ இப்போ அவர்கள்தானே யிப்போக சாலாபண்ணி மறித்து தழைந்து அதைப்போலே தானே லோகமெல்லாம் ப்ரசித்தமாக இராஜா அரிய அபகீர்த்தி சம்பாதித்தது ஒன்று. வேதபுரீசஸ்வரன்கோயிலை சம்பாகோயில் பாதிரிகள் அன்பது வருஷமாய் பிடிக்கவேணுமென்று பிரயத்தினம் பண்ணினதற்கு முன்னிருந்த கொவர்னதோர்கள் இது தமிழ் ராஜ்யம் இந்த கோயிலுக்கு இன்னம் வந்தால் அபகீர்த்தி, வர்த்தகர்கள் வந்து சேராமல் போவார்கள் பட்டணம் மாமூலாகாதென்று செம்மன முடிப்போமென்று யோசனைப் பண்ணி இடித்துப்போடச் சொல்லி பிராஞ்சு இராசா உடைய கையெழுத்துப் போட்டு வந்த ஒடுதிகூட தள்ளிப்போட்டு கீர்த்திபெற்று சூரியப்ரகாசம் போலே யிருந்ததை பெண்சாதிப்பேச்சைக் கேட்டுக்கொண்டு இருட்டுப்போலே யிருக்கிற அபகீர்த்தியை ப்ரகாசிக்கப் பண் ணும் பொருட்டு பெண்சாதிப்பேச்சைக்கேட்டுக்கொண்டுவேத புரீஸ்வரன்கோவிலை இடித்துப் போடச்சொல்லி உத்தாரம் கொடுத்தார். இந்த காரியங்கள் தானே யிப்படியானுல் மற்றக் காரியங்களெப்படியோ பார்த்துக்கொள்ளுங்கள் எத்தனே யென்று நானெழுதப்போரேன் இப்படிப்பட்ட வேளேயாயி ருக்கிறது இந்த அனியாயத்துக்கு தக்கதாக பட்டணத்துக்கும் இக்கட்டு வந்திருக்கிறது ஸ்வாமி யென்னமாய் ரக்ஷிக்கிருரோ நான் அரியேன்.

முசியே கோர்னேத் வந்து ரங்கப்பிள்ளை வெளியிலே கொண்ட கெல் அழைப்பிக்கவில்லை யென்று சொன்னதற்கு

துரையிருந்துக்கொண்டு இங்கிலீஷ்கார்ரர் மனுஷர் பரவினபடி யினாலே நான் தான் அழைப்பிக்கவேண்டாமென்று சொன்னேன் என்று சொல்லி யென்னையழைத்து உன் வசத்திலெம் மாத்திரம் நெல் வெளியிலேயிருந்து வந்திருக்கிறதென்று கேட்டார். ஆறுகரிசைமட்டுக்கும் உண்டென்று சொன்னேன். அதையினிமேல் வேலைசெய்கிற கூலிக்காரருக்கு கொடுவென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன். உன் வசத்திலே யிருக்கிற சாராயத்தை கோட்டையிலே கொண்டுபோய் முசியே கோர்னேத் வசம் அளந்து ஒப்புவித்து உள்ள கிறயம் வாங்கிக்கொள்ளென்று சொன்னார் இனிமேல் காந்தினுக்கு சாராயம் கொடுக்ககவையில்லை முசியேகோர்னேத் சொல்தாதுகளுக்கு யெல்லாம் கொடுப்பான் என்று சொல்லி அப்பால் தமிழர் வெள்ளைக்காரர் சட்டைக்காரர் துலுக்கராகிலும் சாராயம் வைத்துக்கொண்டிருந்தால் முசியே கோர்னேத் வசம் ஒப்புவித்துப்போட்டு உள்ள கிறயம் வாங்கிக்கொள்ளுகிறது-அப்படி கொண்டுபோய் ஒப்பியாமல் வைத்திருந்தால் தூக்கிப்போடுவோமென்று தமுக்குப்போடச் செய்யென்று சொன்னார். நல்லது ஊரிலே வெள்ளைக்காரர் சிப்பாய்கள் வீட்டுகளிலே புகுந்து சோராவரியாய் புகுந்துஅரிசி எடுக்கிறதும் அகப்பட்ட வஸ்துக்களையெல்லாம் கொள்ளை யிடுகிறார்களென்று சொன்னதற்கு அதற்கும் தமிழர் வீடுகளிலே வெள்ளைக்கார சிப்பாய்கள் புகுந்து சோராவரிபண்ணினால் தூக்குப்போடுகிறதென்றும், தமுக்குப் போடவைக்கச் சொன்னார். அந்தப்படிக்கு தமுக்குப் போடச்சொல்லி சொன்னோம். அவனும் தமுக்குப் போட்டான். துரையாக்கினையை எவனாகிலும் சட்டைபண்ணினால் அல்லவோ? இப்படி தமுக்குப்போடும்போதே ஒருகாபிரி வந்து ஒரு வீட்டிலே புகுந்து அரிசி எடுத்தானென்று வந்து சொன்னாலவனை ஆக்கினைபண்ணினால் அல்லவோ மற்றபேர் பயப்படுவார்கள் அது ஒன்றுமில்லை. போய்ச் சொன்னவனை கோபித்துக்கொண்டார். காபிரி புண்ணியவானானபடியினாலே அரிசியைமாத்திரமெடுத்துக்கொண்டு செட்டியை சும்மாவிட்டான். பின்னையொருத்தனேயானால் செட்டியை நன்றாயடித்து பின்னையும் வீட்டிலே புகுந்து உள்ளதெல்லாம் எடுத்துப் போவான். இப்படி பட்டணத்திலே சோரு வரி நடக்கிறது மிதமில்லை. அம்மாள் உத்தாரமென்றுசேவகர் வீட்டுக்குள்ளே புகுந்து அவனவனுக்குச் சாப்பாட்டுக்கிருக்கிற அரிசியைக்கூட

கட்டிக்கொண்டு போகிறதுமல்லாமல் யாராகிலும் கேட்டால் அவர்களை சாகப்பிழைக்க அடிக்கிறார்கள். இந்தபடிக்கு நடக்கிற அநியாயமெல்லாம் வெள்ளைக்காரர், வெள்ளைக்காரச்சிகள் தமிழர் பட்டணமெல்லாம் அறிந்திருந்தும் சின்னதுரைகூட அறிந்திருந்தும் ஏன் என்று கேழ்ப்பாரில்லை. இதென்ன காலமோ நானறியேன். இனிமேலுமென்ன நடக்கயிருக்கிறதோ அதுவும் நான் அறியேன்.

மற்றபடி சாயங்காலம் சீர்மைக்குக் காகிதங்களெழுதி சூரத்துசோடாக் (messenger) காரர் கையில் கொடுத்து அவர்களை கட்டுமரத்தின்பேரிலே யேத்தி கூனிமேட்டுத் துறையிலே இறக்கிப்போடச்சொல்லி அனுப்பிவிட்டார்கள். அந்தபடிக்கு இறக்கிப்போட்டு கட்டுமரக்காரர் வந்து கபுறு சொன்னார்கள். கூலிக்காரர் குடியானவர்கள் சமஸ்தமான பேர் கூலிவேலை செய்யத்தக்கபேரெல்லாம் நாளைக் காலத்தாலே கூலிவேலைக்கு வருகிறது. வந்தால் சின்னபடியாலே ஒரு படி அரிசியுங் கொடுத்து உள்ள கூலியும் கொடுத்துவிடுகிறதென்று தமுக்குப் போடச்சொன்னார். அந்தபடிக்கு தமுக்குப்போட வைத்தேன். துரையண்டையிலிருக்கிற அப்புவை காவல் வைத்திருந்ததே அது நிமித்தியம் முசியே பாரதியும் அப்துலாயிமானும் மனுச்சொல்லி விடுவித்தார்கள்.

*1748* ஆ செப்டம்பர் மீ 8 உ க்கு விபவ ஸ்ரீ ஆவணி மீ *27* உ ஆதிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே நடந்த விபரீதமென்னவென்றால்: முசியே டெலர்போல்டு இஞ்சினீர் பாதிரி முதலானவர்கள் இரனூறுபேர் கர்மாட்டிகள், கொலுத்துக்காரரும் கூலிக்காரர் இரனூறுபேரும் மண்வெட்டி குந்தாலி மற்றும் செவுர் களிடிக்கிறதற்கும் நிறவிப்போடுகிறதற்கும் சாமான்களும் கொண்டுவந்து ஏற்கன்வே சம்பாவுலுகோயிலிலே இரனூறு சொல்தாதுகளையும் குவாகுதி குதிரைக்காரர் அருபத்தெழுபது குதிரைக்காரரும் சிப்பாய்களிலே இரனூறு சிப்பாய்களும் ஏற்னவே யிருந்த யெத்தனத்தை மனதிலே வைத்துக்கொண்டு சம்பாவுலுகோயிலிலே நேற்று காலத்தாலேதானே கொண்டு

போய் வைத்து வைத்தசேதி நேற்று தினசரியிலே எழுதினேன். அந்தபடிக்கு அவர்களை முஸ்தீதுபண்ணி வைத்துப்போட்டு மேலெழுதப்பட்ட கொலுத்துக்காரர் முதலான கூலிக்காரரை வைத்துக்கொண்டு வேதபுரீஸ்வரன்கோயில் தென்வண்டை மதிலையும் மடப்பள்ளியையும் இடிக்க துவக்கினார்கள். அவர்களிப்படி இடிக்க துவக்கின உடனே கோவில் ஸ்தானிகர் சில, பிராமணர்களும் ஆண்டிகளும் வந்து சொன்னார்கள். நேற்று இராத்திரி சேதி கேட்டபடிக்கு தினசரியிலே யெழுதியிருக்கிறேன்.

ஆனபடியினாலே முசியே துய்ப்ளேக்ஸ் துரைத்தனத்திற்கு வருவதற்கு முன்னே இவ்விடத்திலே கோன்சேலியேர் இருக்கும்போதுதானே இவர் துரைத்தனத்திற்கு வந்தால் ஈஸ்வரன் கோவிலை இடித்துப்போடுவார் என்று சமஸ்தமான வெள்ளைக்காரர் சிறிதுபேர்கள் தமிழர்கள்கூட சொல்லிக்கொண்டிருந்தபடிக்கு சரிபட்டுவிட்டது இதல்லாமல் ஜனங்கள் சொன்னபடிக்கு முசியே துய்ப்ளேக்சு துரை ஸ்தானத்துக்கு வந்தநாள் முதற்கொண்டு இந்த எத்தனத்தின்பேரிலே யிருந்தார்; சமயம் வாய்க்காமல் போனது முன் ருத்ரோத்காரி ௵ சித்திரை, வைகாசி ௴ ஒரு தரம் ஆரம்பம் செய்து முத்தியப்பிள்ளையைக் கொண்டு இடிக்கவேணுமென்று பிரயத்தினம் பட்டபோது அவரதற்கு சம்மதியாமல் போனாப்போலே அவரை தூக்குப்போடுகிறோமென்று காதறுத்து பிரசித்தமாய் கட்டிவைத்து அடிப்பேன் என்று இப்படி யெல்லாமிருக்கிறதின்பேரிலே, இப்படியல்லடா இவனை எக்கிறதென்று வேறே ஒருவிதமெடுத்து அதுபிடிக்கத்தக்க நியாயம் சொல்லத்தக்க ஒரு பிராமண பெரியவர் திருப்பாதிரிப்புலியூரிலே வந்து இருக்கிறார். அவரை அந்த ஊர் திருநாளனபடியினாலே திருநாளுக்கு போகிறாப்போலே அவரை அழைத்துக்கொண்டு வந்து அவரைக்கொண்டு இந்த மகாநாட்டாருக்குச் சொல்லவைத்து அப்புறத்திலே அந்த லிங்கத்தைப் பேர்த்துக்கட்டிக்கொள்ளத் தக்கதாகப் பண்ணி விடுகிறேனென்று மோசம்பண்ணி சொல்லிப்போட்டு நாமேனிந்தப் பழியை ஏற்றுக்கொள்ளவேணும் சாசுதமாயிருக்கவேணுமென்று என் தகப்பனார் இந்த கோவில் நிமித்தியம் போராடி சேர்த்து கீர்த்தி சம்பாதித்ததை நாம் போக்கடிக்கப்போமாவென்று யோசனைப்பண்ணி இது நிமித்தியம்

என்ன இக்கட்டு வந்தாலும் வரட்டும் சரீரமே அனித்தியமா யிருக்கும்போது மற்றது யென்ன நித்தியமாயிருக்கப்போகி றது நித்தியமாயிருப்பது கீர்த்தியானபடியினாலே யென்ன போனாலும் போகுதென்று ஐஸ்வரியம் பாளையக்கார உத்தி யோகம் அதிகாரமிதுகளை யெல்லாம் விட்டுப்போட்டு கோபால் நாராயணப்பையனை பிடித்துவந்த தருணமானபடியினாலே கரைவழிபோனால் துலுக்கர் மனுஷர் தொந்திரவு பண்ணு வார்களென்று துரையை உத்தாரம் கேட்டுக்கொண்டு பாக்கு சலங்கு வாங்கிக்கொண்டு தம்முடைய தட்டுமுட்டு சமஸ்தமும் சலங்குப் பேரிலே ஏற்றிக்கொண்டு பெண்டுகளை அதற்கு முன்பாகத்தானே திருநாளுக்கென்று கரைவழியே அனுப்பி விட்டுத்தான் சலங்கின்பேரிலே போய் கூடலூரிலே யிறங்கி அப்பால் வெங்கடம்மான் பேட்டையைப் போய் சதாசிவம் பிள்ளை ஆஜரிலே சேர்ந்தார் அப்போ அவர் மோசம் பண்ணிப் போட்டபடியினாலே அந்த வேளைக்கு தப்பிப்போனது இப்போ இங்கிலீஷ்காரர் கலாபத்தினாலே பட்டணத்திலுண்டான ஜனங்கள் சமஸ்தமானபேரும் வெளியே போயிருக்கிறது மல் லாமல் இங்கிலீஷ்காரன் சுற்றி வளைத்துக்கொண்டிருக்கிறான் ஊரிலே கொஞ்சனஞ்சம் போயிருக்கிறவர்களும் வெளியே போவதற்கு யிடமில்லாமலிருக்கிற வேளை அப்பாலும் கலாபத் தினாலே மருந்து குண்டுகள் பீரங்கிகள் துப்பாக்கிகள் முத லானதெல்லாம் எங்கும் நிரம்பிப் பார்க்கிறவனுக்கு பயங்கர மாயிருக்க அல்லது ஒரு வேளையிலே யிப்படியெல்லாம் இருந் தாலும் துணிந்து பத்து இருபதுபேரை ஆகிலும் சாகக்கொடுக் கிறதற்கும் பின்வாங்காமல் சாகிறவர்களென்றுப் பாப்பார் வேகு சொல்லுகிறவர்களென்று யிருந்த பிராமணரா யெல் லாம் வெளியே போனாலும் போகட்டுமென்று தாராளமா யுத்திரவு கொடுத்தும் போன பிராமணரை மாத்திரம் உள்ளே விடவேண்டாம் மற்ற எந்த ஜாதிவந்தாலும் விடச் சொல்லி கலகத்தைச் சாட்டி சொன்ன உத்திரவுகளும் இந்த படிக்கு சமயம்பார்த்து கலகவேளையென்று சமஸ்தமான பேர் களும் ஆண் பெண் கூட வெளியே போயிருக்கிறது மல்லாமல் அல்லவென்று நூறு ஐம்பதுபேர் பேசவந்தால் பயங்கரமிருக் கிறதாக அவ்விடத்திலே சொல்தாது முதலான பேரையும் வைத்துக்கொண்டு கோட்டை கெவுனி நாலு வாசலும் தான் கலகத்தினாலே சாற்றியிருக்குது இடித்து அவன் துள்ளச்சே

நாம் செய்யவேண்டியதென்ன யிப்போ பத்துபேர் மகாநாட்டார் கூடி பேசுகிறதற்கும் மனுஷரில்லே. இதல்லாமல் கலக வேளே இந்த சமயங்கள் பார்த்து அவர் நாளது வரைக்கும் நினைத்துக்கொண்டிருக்கிற காரியம் முடிக்கிறதற்கு இது சமயமென்று அவர் கோவிலே இடித்துத் தள்ளும்போது இப்போ வேறே அடைமானமில்லே, இருக்கிற விக்ரகங்கள் மற்று முண்டானதையெல்லாம் யெடுத்துக் கொண்டுபோய் காளத்தீஸ்வரன்கோவிலில் கொண்டுபோய் சேருங்கள் என்று சொன்னேன். பேசுகிறதற்கு கூடாதாவென்று கேட்டார்கள். மேல் எழுதியிருக்கப்பட்ட அடமானமெல்லாம் சொல்லி சீக்கிரமத்துக்கு உச்சவிக்ரகம் முதலானதெல்லாம் விக்ரகங்களும் சாமான்களும், வாகனங்களும், கொண்டுபோய் சேர்த்துக் கொள்ளுங்களென்று சொன்னதற்கு நல்லது மகாநாட்டாருடனே சொல்லுகிறோமென்று சொல்லி ஸ்தானிகர் போனார்கள்.

நான் பழையது சாப்பிட்டு ஏழுமணி வேளேக்கு துரையவர்கள் வீட்டண்டையிலிருக்கும் பாக்குக் கிடங்குக்கு வந்தவுடனே தில்லேயப்பமுதலி பவழக்கார வுத்திர பெத்துசெட்டி அம்மையப்பன், பிச்சாண்டி, நாகப்பட்டணம் தெய்வநாயக செட்டி, கொலுத்துக்கார வெங்கடாசலம் தம்பி, லச்சிகான் குட்டியாப்பிள்ளே, சின்னமுதலி கைக்கில அனந்தநாயகமுதலி பின்னேயும் இரண்டுபேர் இப்படி கைக்கிலவர்களிலே இரண்டொருத்தர்களும் வெள்ளாழரிலே அரியபுத்திரிமுதலி மகன் முத்து குமரப்பமுதலியும் அகம்மடிய முதலிகளிலே சடையப்ப முதலி (சகலப்பாடி) பேர்விளங்காது பின்னேயும் நாலத்து இரண்டுபேர் குடியானவர்களும் கோவில் சாத்தானியர்களும் வந்து கோவிலிடிக்கிறார்களிது சமயமென்று நடத்துகிறார்கள். நாங்கள் துரைகளே ஒரு வார்த்தைக்கேட்டு இடிக்கிறதானால் நாங்கள் நாலுபேரிரண்டுபேர் கூட சாவுகிறோமென்று இனி இந்தவூர் ஆசை என்னயிருக்குதென்றும் நீங்கள் வந்து சொன்னால் நல்லது நீங்கள் சொல்லாவிட்டால் ஒரு வார்த்தைக் கேட்டுப்போட்டு ஊரைவிட்டு அப்பாலே போரோமென்று சொன்னார்கள். ஊரைவிட்டு அப்பாலே யெல்லாரும் போயிருக்கிறாப்போலே ஆனதே இனிமேல் ஊரிலேயிருந்துபோக தக்கினவர்கள் நீங்கள் பத்துபேர் வந்தீர்களே அல்லவென்றால் பின்னே

யும் நூறு நூத்தன்பதுபேர்தானிருக்கிறார்களா? கேட்டுப் போட்டு போகவேணுமென்றேனுயமென்ன போகிறதானால் முன்னே தானே கலகமென்று ஆண் பெண் அடங்கலும் போயிருக்கிறாப்போலே தானே ஆனதே நீங்கள் பத்துபேர் போனாலென்ன யிருந்தாலென்ன போகிறது தானே யென்று கேட்டதற்கு நாளை மற்றும் நாள் நீங்கள் கும்பல்கூட வேண்டாம் வெளியே போகவேண்டாம் ஏதாகிலும் உண்டானால் எங்களுடனே வந்து சொல்லிக்கொள்ளுங்கள் நாங்கள் நடப்பித்துக்கொடுக்கிறோம்; நாங்கள் நடப்பித்து கொடாவிட்டால்நீங்களும் கும்பல்கூடுங்கள் வூரைவிட்டு போங்கோ உங்களுக்குசம்மதியானபடிக்கு நடத்திக்கொள்ளுங்கள் என்று துரைகளுத்தாரம் கொடுத்திருந்தபடியினாலே இப்போ எங்களுக்கு ஜீவனுக்குஜீவனாயிருக்கிற கோவிலை இடித்துப்போடுகிறபடியினாலே நாங்கள் கும்பல் கூடுகிறதற்கும் ஏதாகிலும் ஒரு காரியம் கவை நடப்பிக்கிறதற்கும் இப்போ கலக வேலையாய் பட்டணத்துக் கயிக்கியப்பட்டுவந்து சகல ஜனங்களும் வெளிப்பட்டு போயிருக்கிற வேளையானபடியினாலே ஒருவார்த்தை துரையவர்களைக்கேட்கிறது. நிறுத்தினால் நல்லது நிறுத்தாமல் போனால் மெற்ற நல்லதென்று சொல்லிப்போட்டுபோவோமென்று சொன்னார்கள் நல்லது அதுக்கு நான் சொன்ன உத்திரம் வூரிலே யாராகிலும் பலவந்தராயிருக்கப்பட்டவர்கள் சோளபாரியாய் நடத்தினாலதுக்கு மகானாட்டார் உள்ளபடியினாலே தங்களை அறியாமல் ஒருத்தர் ஒருவேளை தங்களுடனே வந்து சொல்லிக்கொள்ளச் சொல்லியும் தங்களுடனே சொன்னால் தாங்களவர்களுக்கு தாக்கிதுபண்ணுகிறோமென்று சொன்னார்களேயல்லாமல் தாங்களே சோருவாரியாய் நடத்துகிறதற்கு சொன்னதல்லவே இப்போ துரைகளாய் நடத்துகிறபடியினாலே நீங்களவர்களைப்போய் கேழ்க்கிறதிலே ஸ்வார்சியமில்லை கோவிலுடைய சாமான்கள் உச்ச விக்ரகங்கள் முதலானதுகளெல்லாம் எடுப்பித்துக் கொண்டுபோய் பெருமான் கோவில் காளத்திஸ்வரன்கோவிலிலே கொண்டுபோய் சேருங்கள் என்று சொன்னால் அவர்கள் கேழ்க்கமாட்டோமென்று நாங்கள் போரோமென்று கேழ்க்கிறோமென்றார்கள். உன்னிடத்திலே அந்த மட்டுக்கும் கட்டுண்டானால் உன்னுடனே அழைத்துச் செல்லுகிறதற்கு சாடைகூட யில்லாமல் கோவிலை இடிக்கச்சே வீண்பேச்சு பேசிக்கொண்டிருக்கிறதிலே காரிய

மென்ன? சாமான்களைக்கூட கொண்டுபோக போகிறார்கள். அப்பால் கோவில்போனாலும் போகுது சாமான்களை கொடுங்களென்று கேழ்க்கவேண்டியிருக்கும் கச்சொற்கள் சாமான்களை கேழ்க்கவந்தார்களா கோவிலைப்பிடித்தால் நூறுபேர் அன்பதுபேர் சாவார்கள் யெல்லாரும் வூரைவிட்டு போவார்களென்கிற பயமொன்று நாளதுவரைக்கும் இருந்ததுதான் போகாமல் மற்றுப்போய் கொளுத்தும்போது இப்படி செய்கிறோமே யென்னமோ வென்கிற அனுமானத்தினாலே சொல்தாதையும் சிப்பாய்களையும் குதிரைக்காரரையும் யேர்க்கனவே கொண்டுபோய் வைத்துக்கொண்டு நடத்தினான். அந்த பயத்தையும் நீங்கள் போய் கேட்டுத் தீர்த்து போடுகிறுப்போலேயிருக்குது. வேண்டாம் சீக்கிறமத்துக்கு கோவிலேபோய் சாமான்களை சேருங்கள் யென்று சொன்னால் அத்தனை எள்ப்பமாகவாப்பார்த்தீர்கள் எங்கள் சுருக்கு நீர் அரியீர் என்று சொல்லவந்தார்கள். அதற்கு உங்களுடனே கூட வந்திருக்கிற ஆள்களுக்குள் ஆறுமுகத்தாமுதலியுங் கொலுத்துக்கார் வெங்கடாசலம் தம்பி லச்சிகானும் இரண்டொருபேரும் அன்னபூறணய்யருக்கு சாவடி துபாசித்தனங்கொடுத்தால் வேதபுரீஸ்வரன்கோயிலை யிடித்து அப்பாலே கட்டுகிறதற்கு நாங்கள் வூராருக்கு சம்மதி பண்ணிப்போடுகிறோ மென்று வந்து சொன்னவர்கள் உங்களுடனே கூட இருக்கிறார்கள் இப்போ இரண்டு மாசமாய் துரை பெண்சாதியண்டைக்குப் போய் பெரியதுபாசித்னம் தம்பிச்சாமுதலி மகன் மலையப்பமுதலிக்கும் தனக்கு சாவடி துபாஷித்தனமும் கொடுத்தால் வேதபுரீஸ்வரன் கோயிலை இடித்துப்போடுகிறோமென்று பேசவில்லையா? இதுவுமல்லாம் சம்பாவுலுகோவிலு பாதிரிகளண்டைக்கு அன்னபூரணய்யன் போய் வூராரையெல்லாம் சம்மதிபண்ணினேன். நீங்கள் தனக்கும், மலையப்பமுதலிக்கும் உத்தியோகம் கொடுத்தால் அந்தபடிக்கு ஈஸ்வரன் கோயிலை இடித்துக் கட்டிக் கொள்ள பண்ணிப்போடுகிறோமென்று பேசவில்லையா? முன்னே துரையவர்களழைப்பித்து அந்த கோவில் எங்கள் கோயில் கிட்ட இருக்கிறபடியினாலேயும் உங்களுக்குமெங்களுக்கும் என்னேரமும்போராட்டமாயிருக்கிறது. அதை அப்பால் கட்டிக் கொள்ளுங்கள் செல்லுமான சிலவு கொடுத்து நல்ல ஸ்தலமும் காண்பிக்கிறோமென்று சொன்னதுமல்லாமல் இனிமேலுங்களுடைய மதத்தினுடைய காரியம் நாங்கள் சர்வாத்துமானகப்

பேசுகிறதில்லே. உங்களுக்குச் சம்மதியானபடிக்கு நடப்பித்துக். கொள்ளுகிறுமென்று எழுதிக்கொடுக்கிறுமென்று ஐம்பது வருஷமே வருகிறதுகளெல்லாம் பிரயத்தினம்பண்ணி வருந்தி வருந்தி கேழ்க்க சுயம்புலிங்கம் பேத்துக் கட்டப்போகாதென்று நீங்கள் சொல்லிக்கொண்டு வந்த உங்களுக்குள்ளே அப்பாலே கட்டிக்கொள்ளுகிறதற்கு சம்மதியென்று எப்போ பேச்சு நடந்ததோ அந்தக்ஷணமே அவர்களை யோசனைபண்ணி இவர் களுக்குள்ளே அப்பால் கட்டிக்கொள்ளுகிறுமென்று சொன்ன மட்டுக்கும் இவர்களை அழைத்துக் கேட்டால் இவர்கள் அது வேணும் இது வேணும் என்று சொல்லுவார்கள். உங்களுக் குள்ளே ஒருத்தருக்கொருத்தர் உளவாயிருக்கிறபடிஞலே எப் படி அடித்தாலும் பேசுவாரில்லையென்று துரை பெண்சாதி நன் ருய் போதித்து இருக்கும்போதுதானல்லோ உங்களை அழைத் துக்கூடச் சொல்லுகிறதற்கு இல்லாமல் நடத்திப்போடுகிருன். இவ்வளவு தெரியாதா அல்லவென்று உங்களுக்குள்ளே தைரிய மாய் நிர்வாகமாய் பேசுவதற்கு இப்போ பேசவந்த பத்து பேர் மனதும் ஒரு மனதாயிருக்கிறதா. ஆறுமுகத்தா முதலியும் லச்சிகானும் தான் அப்பிறத்திலே கட்டிக்கொள்ளத் தக்கதாக சமஸ்தமான பேருக்கும் தாங்கள் சம்மதிபண்ணுகிறுமென்று சொன்னவர்கள் இனிமேல் கெட்டியாய்ப் பேசப்போகாதே அப்பால் நீங்களிருக்கிறதற்குள்ளே பெத்துசெட்டி கெலித்தவ னுடனே பாதிக்கு நிற்கிறவர் அல்லவென்ருல் காத வழியிலே ஒரு பனைமரம் விழுந்தால் இங்கே எனக்கொரு தத்து என்று சொல்லுகிற சாடை அப்படியிருக்க நீங்களென்ன பேசினீர் கள். பேசாமலிருந்தாலும் இன்னும் பயமிருக்கும் பேசி வெளுத் துப்போகிறதிலே காரியமில்லே. அவர்களிந்நேரம் தென்னண்ட மதிலும் மடபள்ளியும் இடித்து ஆகி அப்பால் அர்த்தமண்டபம், மகாமண்டமம், இடிக்கிருர்களென்று சேதி வந்தது. இனிமேல் தாமசமாயிருக்கிறீர்கள். இப்போ யிருக்கிற அந்த மாமூலா வுக்கு சம்பாவுலு கோவிலிலே யிருக்கிற பாதிரிமார்களும்புறப் பட்டு அங்கே இரங்கியிருக்கிற வெள்ளைக்கார சொல்தாதுகளை காப்பிரிகளை சட்டைக்காரர் குலம்புகுந்த பறையர்களைக்கூட எடுத்துவிட்டு அவர்கள்கூடி தாங்கள் கூடுமாயிருக்கிறசாமான் களைக்கூட எடுத்துப்போயும் உடைத்துப்போட்டும் இப்படி நாலாவிதமாய் ஆபாசம் பண்ணுவார்கள். அப்போ நீங்கள் யாராகிலும் கேழ்க்கப்போனுல் அடிகூட நடப்பிப்பார்கள்.

அப்போ கோவில் போனதுமல்லாமல் சாமான்கள்கூட உற்சவ விக்கிரகங்கள் பிள்ளையார் முதலானதுகூட போக்கடித்துக் கொள்ளுவீர்கள். இப்போ பட்டணத்திலேயாரென்ன செய்து போட்டாலும் ஏனென்றுக் கேழ்ப்பாரில்லை; அதிலேயும் நம்முடைய மத்தத்து கோவில்போச்சென்றால் சொல்லவே தேவையில்லை. ஐம்பது வருஷம் சற்வ பிரயத்தினம்பண்ணி ஆகாத காரியம் முசியே துய்ப்ளேக்ஸ் துரைத்தனத்திலே அவர் பெண் சாதி போதனையின்பேரிலே இந்தக் கோவிலை காலா காலங்களிலேயும் இடிக்கப்போகாதென்று இருந்த காரியம் சுளுயாசமாய் இடிக்கிற வேளைவந்தால் சம்பாவுல் கோவில் பாதிரிகளுக்கும் கிருஸ்துவனென்னப்பட்ட தமிழர் பறையர் முதலான பேருக்கும் மதாம் துய்ப்ளேக்சுக்கும், முசியே துய்ப்ளேக்சுக்கும் இருக்கிற உச்சாகமும் சந்தோஷமும் இத்தனை அத்தனையென்று சொல்ல மிதத்திலே யிருக்கிறதா? அப்படிப்பட்ட உற்சாகம் வந்திருக்கும்போது இந்த வேளையிலே கோயிலிலே புகுந்து அவர்கள் மனதுபடியே உடைத்துமெரித்து ஆபாசம் பண்ணாமல் போகார்கள். நீங்கள் சீக்கிரமத்துக்குப் போய் சாமான்களைக் கொண்டுபோய்ச் சேருங்கள் என்று என்ன சொன்னாலும் அனந்தநாயகமும், தில்லையப்பமுதலி, குட்டியாப் பிள்ளை, சின்னமுதலியும் பின்னையும் நாலத்து ரெண்டுபேருக்கும் துரையை போய்க் கேழ்ப்போம். துரையைக். கேட்டால் அப்படியிருக்க உத்தாரம் கொடார் என்கிற நினைப்பும்பேரிலே அப்படிப் போனாப்போலே போனார்கள். நானெப்போ ஆறுமுகத்தா முதலியும் லச்சுகான் பேச்சும், அவர்களுள்ளபடியினாலே நடத்தின பேச்சைச் சொன்னமாத்திரத்திலே ஆறுமுகத்தா முதலி இப்படி. செய்வார்களென்று அறுவாயிடமுங் காட்டி சரிபோனபடிக்குக் கட்டிக்கொள்ளச்சொல்லி வராகனும் கொடுப்பார்களென்று இருந்தோம். வழுவழுவென்று பேசிப்போட்டு முகம் செத்தாப்போலே அப்பாலே போனான். லச்சிகான்மாத்திரம் பேசுகிறதிலே காரியமில்லையென்றாப் போலே மெய்தானய்யா மெய்தானய்யாவென்று சொல்லுவான் முன்னேயும் நடப்பான். அப்பால் உளவாயிருந்தப் பேச்சு பேசினாப்போலே அவனும் முகம் செத்தாப்போலே அவர்களுடனேகூட நின்றான். இப்படி இருக்கும்போது சம்பாவுலு கோவில் பெரிய பாதிரி கேற்து என்கிறவர் வந்து சுவாமி இருக்கிற கோவிலை உதைத்துக் காப்பிரிகளை விட்டு கதவைப்

பேர்க்கச்சொல்லி, கிருஸ்தவப் பசங்களை விட்டு வாகனங்களை
உடைக்கிறதுமாயிருக்கிறதென்று கபுறுவந்து சொன்னார்கள்.
ஏங்காணும்! நான் இந்நேரம் சொன்னப்பேச்சு அனுபவமாச்
சுதா? இனியாகிலும் சீக்கிரமாகப் போங்களென்று சொல்லி
விட்டு துரைவீட்டுக்குப் போனேன்.

துரை என்னுடன் பேசினால் அதை இதை சொல்லப்
போகிறானென்று பேசாமல் சம்பாவுலு கோவிலுக்குப் போகிற
தற்கு பயணம் புறப்பட்டு பெண்சாதி ஏறுகிற கூண்டின்
பேரிலே ஏறிக்கொண்டு நடந்துவிட்டார். நமக்கென்ன அவர்
பேசாமல் போகிறதும் இந்தப் பிரசங்கமே நம்முடனே எட்
டாமல் போகிறது மெத்த உத்தமமாச்சுதென்று நான் பாக்கு
கிடங்குக்குப் போவோமென்று துரை பிறகேதானே புறப்பட்
டேன். இதிலே ஆறுமுகத்தாமுதலி, பெத்துசெட்டி, தில்லை
யப்பமுதலி முதலான மகாநாட்டார் பத்துபேரும் துரை
வீட்டுக்கு மேலண்டையிலே மாட்டுக்கொட்டகையண்டையிலே
போகும்போதுபோய் சலாம்பண்ணிக்கொண்டார்கள். எங்கே
வந்தார்களென்று கேட்டார். வர்லாமிருந்துகொண்டு கோவிலை
இடிக்கிறார்களே அந்த சாமான்களை எடுத்துப்போகிறோமென்று
கேழ்க்கிறார்களென்று மாறுபாடாய்ச் சொன்னாப்போ அங்
கும் பிரிதியாயிருக்கிற சரடையானபடியினாலே உங்கள் தட்டு
முட்டை நீங்களெடுத்துப் போங்களென்று அப்பாலே சேவ
கரைப் பார்த்து இந்தக் கும்பலை அடித்துத் துரத்தென்றுசொன்
னாரிதிலே அப்துலாயிமான் சமேதாரர் ஓடி கப்சுக்கோயிலுக்கு
எதிரே மேல் பார்சத்திலே மசியே கோடேதீ விட்டின் பிற
காலே துலுக்கருக்கு வெகுநாளாய் இருக்கிற மசூதியைக்
கூட தாட்டியுந்துரையுமிடிக்கச் சொன்னதின்பேரிலே ஈஸ்
வரன்கோவிலை இடிக்க ஆள் விட்டபோது அந்த மசூதியும்
இடிக்கிறதற்கு ஆள் விட்டார்கள். அவர்கள் சுற்றிலும்
கொஞ்சமிடித்தமாத்திரத்திலே சோனகர்கள் போய் அப்து
லாயிமானுடனே சொல்லிக்கொண்டபடியினாலே அப்துலாயி
மான் அங்கே துரையண்டையிலே வந்து சலாம்பண்ணி எங்கள்
மசீதை இடிக்கச்சொல்லி உத்தாரங் கொடுத்தீராம். அதை
இடித்தால் ஒரு சிப்பாய் இருக்கப்போகிறதில்லை. இடிக்கிற
மட்டுக்கும் இடிக்கிறவர்கள்பேரிலே போய்விழுந்து சாவார்

கள்; என்று சொன்னதும் அந்த வேளையிலே அவர்களைத் தொட்டு காரியமிருக்கிறபடியினாலே மசூதியை இடிக்கவேண்டா மென்று சொல்லி அனுப்பிப்போட்டு சம்பாவுலுகோவிலுக்குப் போனார்கள். அப்படி செய்யாவிட்டாலும் பேசுகிறதற் காயிலும் தைரியமானவர்கள் தமிழருக்குள்ளே உண்டாயிருந் தால் அந்தக் கோவிலை தீண்டினாலும் தீண்டினானே அப்பால் அப்துலயிமான் தங்கள் மசீதை இடிக்கவேண்டாமென்று உத்தி ரவுவாங்கி அனுப்பிப்போட்டு நம்முடைய பாக்கு கிடங்குக்கு வந்து சண்டை காரியங்களுக்கு துரை தப்பு தப்பு ஆலோசனை பண்ணி அரியாங்குப்பம் குண்டுசாலை விட்டுப்போட்டு வந்த தும் சத்துருவுவந்து பட்டணத்தை வாங்கிக் கொள்ளுவே னென்று இறங்கியிருக்கும்போது மந்ததினுடைய காரிய முத் தாரனை பண்ணிக்கொண்டு அவரவர் மனதை முரித்துப்போடு கிறார். இந்த வேளையிலே சகல ஜனங்களும் சந்தோஷமாயிருந்து காரியத்திலே சீவனை உத்தரிக்கதக்கதாக மனதுவர உச்சாகம் பண்ணி முதுகை தட்டிக்கொடுத்து காரியம் கொள்ளுகிறதை விட்டுப்போட்டு பெண்டாட்டிப் பேச்சைக் கேட்டுக்கொண்டு பட்டணத்திலுண்டான ஜனங்களுக்கு இவனுக்குப் புதுச்சேரி போய் இங்கிலீஷ்காரனுக்கு ஆகாதாயென்று நினைக்கத்தக்க தாக வெகுவெகென்று இடி வந்திப்போட்டு பட்டணத்திலுண் டான ஜனங்களை வெகுபேரை விலங்குப்போட்டு மண் சுமக்கச்சொல்லிவிட்டும் பட்டணமெல்லாம் கிருஸ்துவருடைய மயமாய் நியாயமில்லாமல் எவன் கடன் கொடுக்கவேணும் தீர்ந்துப்போன சீட்டிருந்தாலும் கிடங்கிலே அடைத்து அம் மாள் சலிகையின்பேரிலே பணத்தை வாங்கிப் போடுகிறது. அம்மாள் சேவகரென்று ஊரிலே கொள்ளையிடுகிறதனாலேயும் போதும் போதாததற்கு தமிழர் கோவிலை இடித்து இப்படி பட்டணம் நடுங்கப்பண்ணுகிறது துரைக்கு அழகா? ஆனால் என்ன காலமோ தெரியாது என்றும் பின்னையும் துரையவர்கள் பெண்சாதிபண்ணப்பட்ட அநியாயங்களினாலே இந்தப் பட்ட ணத்திற்கு சுவாமி இக்கட்டைக் கொண்டுவந்து கொடுத்தா ரென்று எப்போ பெண்சாதி புருஷனை கையாலாகாதவனுக்கித் தான் அதிகாரம்பண்ண தலைபட்டாளோ அப்போ அந்தப்பட்ட ணத்திற்கு அழிவல்லவா என்றும் இதை ஒருகோன்சேல்கார ராகிலும் கும்பினீர் காரியமோ உன் காரியமோ உன் பெண் சாதிக்குத் துரைத்தனம் கும்பினியார்கள் கொடுத்தார்களா?

உனக்குக் கொடுத்தார்களா? உன் பெண்சாதி பண்ணுகிற அநி யாயமிப்படியென்று சொல்லத்தக்கதாயில்லாமல் வாயை அடைத்துப்போட்டது, என்னமோ ஒரு விபரீதம் நடக்கிற தற்கு ஏஷயமல்லவா? சண்டைக்குக்கூட துரையைக்கேளாமல் தான் தானே எங்களை அழைத்து உத்தாரம் கொடுத்தால் அப்பால் என்ன துரைத்தனமென்று இப்படி பின்னையும் அம்மாளுடைய லாசாபு கோசமாயிருக்கப்பட்ட சரித்திரங்களை எல்லாரும் கேழ்க்க தாராளமாய்பேசியிருந்து அனுப்பிவித்துக் கொண்டு விட்டுக்குப்போனான். அப்பால் சம்பாவுலுகோவில் பாதிரிகள், மகாநாட்டார் மனுஷர்களை அழைத்துக்கொண்டு போய் சாமான்களை எடுக்கப்போனால் காபிரிகளையும் சொல் தாதுகளையும் பறையரையும் விட்டு அடிக்கச்சொல்லி அந்த கோவில்வழி வரவொட்டாமல் வாகனங்கள் தண்டு மரங்கள், கோவில் பத்திரங்கள் சமஸ்தமும் எடுத்துப்போகும் போது இவர்களௌரவ்வொருத்தன் இருபதடியும் பத்தடியும் பட்டுக்கொண்டு உச்சவ விக்ரகத்தையும், பிள்ளையாரையும் மாத்திரம் இப்புரம் கொண்டுவரத் தக்கதாக பிரம்ம பிரயித் தினமாய் போனது இதிலே பெரிய அலவாங்கு ஒன்று யெடுத் துக்கொண்டுவந்து காரைக்கால் பாதிரி கேர்து என்கிறவன் மகாலிங்கத்தை காலாலே உதைத்து, கையிலேயிருந்த அல வாங்கினாலே உடைத்து பின்னம் பண்ணினதின்பேரிலே பின் னையும் காப்பிரிகளையும் வெள்ளைக்காரரையும் விட்டு இருந்த விஷ்ணு விக்ரகங்கள் முதலானதெல்லாம் உடைத்து தடுத்துப் போடச்சொல்லினார். இதிலே அம்மாள் அங்கேபோய் உங்க ளுக்குயெப்படி சம்மதியோ எதுகளை உடைக்கவேணுமோ அப் படியெல்லாம் அதுகளை உடைத்துக்கொள்ளுங்கள் என்று பாதிரியுடனே சொன்னாள் அவர்கள் அன்பது வருஷமாய் ஆகாத காரியத்தை நீ செய்தாயென்று அவளுக்கு ரொம்ப மட்டுமிதமில்லாத உச்சாகம் சொல்லி முன்னேயிந்த மத உத் தாரணம் பண்ண மகாத்துமாக்களிலே நீ ஒருத்தியென்று நாங் கள் வூரிலேயெழுதி பரசித்தம்பண்ணி இராச்சியமெல்லாம் விரைத்து போடுகிறோமென்று உச்சாகம்பண்ணி அனுப்பிவிட் டார்கள் அப்போ அம்மாளும் பாதிரியாரும் பார்த்துயிருக்க வரலாம் மகாலிங்கத்தை செருப்புக்காலாலே பத்துதர மெட்டு தரமுதைத்தது. உமிஞ்சி (எச்சல் உமிழ்ந்து) திருப்தி பண்ணிக் கொண்டு அம்மாளும் பாதிரியாரும் இவனும் ஒருமகாத்மா

வென்று சந்தோஷப்பட வேணுமென்று செய்துப்போட்டு தாட்டியின் பிறகே போனான்.

பின்னையுமந்த கோவிலிலே நடத்தின அபாசத்தை காகிதத்திலே எழுதி முடியாது, வாயினாலேயும் சொல்லமுடியாது. இப்படியெல்லாம் நடப்பித்தவர்கள் என்னபலனை அநுபவிப்பார்களோ நான் அறியேன் ஆனால் இன்றையதினம் தமிழரென பட்டவர்களுக்கு யெல்லாம் லோகாஸ்த்தமானமாய் போறாப் போலே இருந்தது பாதிரிகளுக்கும் தமிழ கிருஸ்தவர்களுக்கும் துரைக்கும் துரை பெண்சாதியவர்களாயிசுலே காணாத சந்தோஷத்தை இன்றையதினம் அடைந்தாப்போலே மகிழ்ச்சியாயிருந்தார்கள். இனிமேல் அநுபவிக்கப் போகிறதுக்கத்தனை யோசனைபண்ணாமலிருந்தார்கள். இப்போ எழுதினதெல்லாம் அவரவர் சொன்னதும் அதற்கு உத்தாரமெழுதினதும் ஆனால் எனக்கு தோற்றுகிற ஞாயமென்னவென்றால்; துரையவர்கள் மனதிலே ஐம்பது வருஷமாய் பண்ணப்பட்ட துரைத்தனக்காரர் நாளையிலே ஆகாத காரியம் பிரான்சு இராசாவைப்போலொத்தவர் புதுச்சேரி குவர்னதோராயிருந்த முசியே லேனுவாருக்கு எழுதி அதற்குக்கூட இந்த கோவிலை இடித்துப்போட இது தமிழர் இராச்சியமானபடியினாலே அவர்களொருத்தர் இருக்கத்தக்கதில்லையென்று மூன்றுதரம் எழுதியனுப்பிவிட்ட காரியத்தைத் தனது துரைத்தனத்திலே தானிடிப்பித்து அதனாலே ஒரு பழுவுமில்லாமற்படிக்கு பண்ணிப்போட்டேனென்றால் சீர்மையிலே இராசாவினிடத்திலே தன்னைப்போலொத்த சமஸ்தரும் திருணி பரனுமில்லையென்று பேருண்டாகவேணுமென்றும், இதை சம்பாவுலுகோவில் பாதிரிகள் லீவுறுபண்ணி இராச்சியமெல்லாம் பேருண்டாக்குவார்கள் என்று யோசனைபண்ணி இந்த சமயம் பார்த்து இடித்தாலும் செய்யவேண்டியதெப்படியென்றால், மகாநாட்டார் கலகத்திலே போனவர்கள் போகயிருக்கிற பத்துபேரையும் அழைப்பித்து எங்களுக்கும், இங்கிலீஷ்காரருக்கும் சண்டை மூண்ட அவர்கள் வந்து ஊரைச் சுற்றிகொண்டிருக்கிற வேளையிலே இப்போ கோயிலென்றும், கோட்டையென்றும் பார்த்துத் தீராது. எந்தெந்த வேளைக்கு எதையெதை இடிக்கவேணுமோ அப்படி செய்யவேண்டிய வேளை வந்திருக்கிறபடியினாலே உங்கள் கோவிலை எங்களுக்கு வைக்கக்கூடாது. அவ்விடத்தில்

சம்பாவுலுகோயிலிருக்கிறது ஒன்று சரியாய்க்கட்டி அதன் பேரிலே பீறங்கி ஏத்தவேண்டியிருக்கிறது. ஏதாகிலுமதற்குத் தக்கதாய் ஒரு போக்கு சொல்லி உங்கள் கோவில் சாமான்களை யெல்லாம் எடுத்துக்கொண்டு போங்கள் அப்புறம் கலகம் தீர்ந்தாப்போலே இடம் விடுகிறோம் உங்கள் கோவில் கட்டுகிற படிக்கு கட்டுங்கள் என்றொரு வார்த்தை எச்சரித்து அவ்விடத்திலே அந்தக்கோவில் சாமான்களை கோவில்காரரெடுத்துக் கொண்டு போகச்சொல்லி அப்பால் இடித்துப் போடுகிறது நியாயம். அப்படி ஒருதரம் சொல்லி கோவில் சாமன்களை எடுக்காமல்போனால் அப்பால் நாங்கள் சொல்லிப்போட்டோம். நீங்களெடுத்தாலும் சரி, எடாவிட்டாலும் சரியென்றிடிக்கிறது துரைத்தனம் பண்ணுகிறதற்கு அழகு. பட்டணத்தில் துரைத்தனம் பண்ணுகிறவன் சுவாமி எப்படி பாரபக்ஷமில்லாமல் லோகத்தில் சகல ஜனங்களையும் சகல ஜீவத்துக்களையும் ரக்ஷிக்கிறானோ அப்படி பட்டணத்திற்கு துரையாயிருக்கிறவனும் அந்தப் பட்டண ஜனங்களுக்கு சுவாமி ஸ்தானமான படியினாலே சமஸ்தமானபேரையும் சமனாகப்பார்த்து நடப்பிக்கவேண்டிய கடனாளியானபடியினாலே மேலெழுதப்பட்ட படிக்கு நடப்பிக்கிறது. ராஜரீகத்திற்கு அழகு அது இல்லாமல் உள்ளே பாரபக்ஷமாயிருந்தாலும் வெளிக்கு மேலே எழுதப் பட்டபடிக்கு நடப்பிக்கவேண்டியது. சுவாமி மேரை தப்பு நடந்தால் ஒருத்தராலே இருக்குதா? உத்தாரம் சொல்லுகிறதற்கு அப்படிப்போலே இந்தப் பட்டணத்திற்கு அவர் நியாயத்துடனே நடத்தவேண்டியது. அவர் நியாயம் தப்பி நடந்ததினால் இதற்கு உத்தாரம் சொல்லவேண்டியதும் செய்ய வேண்டியதுமுண்டா யென்று எனக்குத் தோணுது.

அப்பால் இற்றைநாள் கோவிலை இடித்துச் சரிகட்டி போட்டார்களென்று கபுறு சொல்லிவந்து சகல ஜனங்களும் தாபந்தப்பட்டார்கள். இந்தபடிக்கு ஐம்பது வருஷமில்லாத காரியம் இன்றையதினம் நடந்தேறிப்போனது ஞானி மார்க்கத்திற்குப் பார்த்தால் நளபோகஞ் சிலாபோகமென்கிற ஞயம் எத்தனைநாள் நடக்கவேணுமோ அத்தனைநாள் நடந்து அப்பால் அது எப்படி போகவேணுமோ அப்படி போச்சென்று எனக்கு தோன்றியபடிக்கு எழுதினேன்.

பகலைக்குமேலாக இங்கிலீஷ்காரர் பவுன்சு குண்டுக்குள்ளே வந்து நடமாடுகிறபடியினாலே வழுதாவூர் வாசற்படி மூலை

வாணியத் தெருவு கொத்தளமட்டுக்குமிருக்கிற கொத்தளங் களிலேயிருக்கிற பீறங்கியெல்லாம் கொளுத்திக்கொண்டே இருந்தார்கள். வழுதாவூர் வாசற்படி அண்டையிலே ஒரு குந் தானி பீறங்கிவைத்து அதின்பேரிலே தீக்குடுக்கை வைத்து தண்டிலே விழப்போட்டார்கள் இந்த குண்டுபோய் விழுங் காட்டிலும் அவ்விடத்து ஒழுகரை மோட்டுப்பேரிலே கூடாரம் போட்டிருக்கிறவர்கள் எல்லாரும் ஓடுகிறதும் வருகிறதுமா இருக்குதென்று சொன்னார்கள். நானும் வழுதாவூர் வாசற் படியேபோய் அந்த குந்தானி பீறங்கி சுடுகிறது பார்த்தேன்; துரையுமங்கேவந்திருந்தார் ஆனால் குந்தானி பீறங்கியிலே அந்த நூற்று முப்பத்தாறு ரூத்தலிருக்கிற தீக்குடுக்கயை வைத்து தாழச்சுடுகிறது அந்தத் தீக்குடுக்கை ஆகாசமட்டுக்கு முசந்து அங்கேயிருந்து ஒழுகரைக்கு வடபாரிசமிருக்கிற மேட் டும்பேரிலேயிருக்கிற தண்டின்பேரிலே விழுகிற விசித்திரமும் அந்த தீக்குடுக்கை போகும்போது நெருப்பு கக்கிக்கொண்டு போகிறதும் த்வனியும் பார்த்தால் முன் அக்கினி நக்ஷத்திர மென்று முன் ராமாயணங்களிலே சொல்லியிருக்குதே அதுதா னிது என்கிறதுமல்லாமல் சுவாமி உண்டாக்கப்பட்ட இடி விழு கிறது பார்க்குயிருக்கிறோம் கேட்டுமிருக்கிறோம் அதற்குபதில் மனுஷன் சிரிஷ்டித்த இடியென்று எண்ணினேனேயல்லாமல் பின்னே ஒன்றும் யெண்ணநானல்ல. இது புறப்படும்போது ஒரு சப்தம் அப்பால் விழும்போது ஒரு சப்தம் விழுந்த பிற்பாடு வெடிக்கும்போது ஒரு சப்தம் இப்படி மூன்றுவிதமாயுண்டாகி யிருக்கிறது; இது வெள்ளைக்காரர் ஆனபடியினாலே யுக்தியா யெடுத்து இதை நடத்தினானேயல்லாமல் மற்றயெந்த ஜாதி யிலேயும் எந்த தேசத்தானாலேயுமாகாது அப்படிப்பட்ட தீக் குடுக்கயை கொளுத்திப்போட்டும் கொத்தளங்கள் பேரிலே இருக்கிற பீறங்கிகளெல்லாம் விடாமல் கொளுத்தினார்கள். இந்தபடிக்கு சாயங்கால பரியந்திரம் சுட்டு அப்பால் ஆறு மணிக்கு நிறுத்திப்போட்டு துரை முசியே பாதி கூட வீட்டுக் குப் போனார்கள்; நானும் வழுதாவூர் வாசற்படியிலேயிருந்து வேடிக்கைப்பார்த்துப்போட்டு பாக்கு கிடங்குக்குப் போனேன்.

துரையவர்கள் என்னை அழைப்பித்து வேலை செய்கிற கூலி யாட்களுக்கெல்லாம் பெரிய படியாலே ஒருபடி நெல் ஜனம் ஒண்ணுக்குக் கொடுக்கச்சொல்லி உத்தாரம் கொடுத்து முசியே

சோற்போவுக்த முகாபன் பண்ணிப்போட்டார், நல்லது அந்த படிக்கு கொடுக்கிறேனென்று சொல்லி நெல் கிடங்குக் கணக்கு சின்னதுக்கு முசியே மெர்போ மனுஷர்வந்து யெப்போ கேழ்கி ருர்களோ அப்போ அளந்துவிடச்சொல்லி உத்தாரம் கொடுத் தனுப்பிப்போட்டு வீட்டுக்குப் போனேன் குந்தானி பீறங் கிக்கு போடுகிற மருந்து வீசை 1 க்கு ஒரு மணங்கென்று சொன்னுர்கள்.

ஆனுலிந்த கோவிலே இடிக்கிறதற்கு முசியே துப்ளேக்சு பெண்சாதியும் முசியே துப்ளேக்சும் துரைத்தனத்துக்கு வந்த னுள் முதற்கொண்டு யெத்தினமாயிருந்து அதற்குத்தக்கதாக நடத்திக்கொண்டு வந்தாலும் இடித்தாலத்தைத்தொட்டு வூர் கலேயும், அப்பால் கும்பீனியார் ஏனப்படி வேலேசெய்தா னென்று நேரஸ்தனுக்குவார்கள். எவன் தலேயிலேயாகிலும் போட்டு செய்வோமென்று உள்ள கசமாயிருந்ததை முசியே துய்ப்ளேக்ஸ் குவர்னதோருடைய அச்சமற்றவர்களிரண்டுபேர் ஆரென்ருல் முசியே துய்ப்ளேக்சுனுடைய பெண்ஜாதி கால் பங் கும் முசியே பாரதி முக்கால் பங்குமாயிருந்து பெரியவருடைய அச்சம் திர்த்து கோவிலே நிர்தாக்ஷண்யமாய் இரண்டாம் பேரரியாமல் இடித்துப்போட்டது. முசியே பாரதி மகா துணிச் சக்காரனுனபடியினுலே என்ன. இந்த கோவிலே இடித்தாப் போலே அதைத்தொட்டு இந்த தமிழர் சிறிது காரியம் நடத்துவார்களென்று யோசனேபண்ணினுய். தஞ்சாவூர் ராசரீகத்தின் கீழே முழு தமிழ் ராச்சியமாயிருக்கிற விடத் திலே நான் நடத்திப்போடவில்லேயா? அதினுலே வரப்பட்ட காரியத்திற்கு நான் பேசிக்கொள்ளுகிறேன், அல்லாமல் இரண் டாம்பேருக்கறிக்கை இல்லாமல் சீக்கிரமத்துக்குப்படிப்படியாய் செய்துப்போட்டால் அவர்களும் நாலு காரியத்தையும் யோசனே பண்ணி சும்மாயிருந்துவிடுவார்கள் என்று எப்படி தைரியம் சொல்லவேணுமோ அப்படி தைரியம் சொல்லி இடிப்பித்தான். முசியே பாரதி மதாம் துய்ப்ளேக்சும் அப்படித்தானென்றும் நடக் கத்தக்கதில்லேயென்று அவன் எப்போதும் தூண்டுகோலா யிருந்து தூண்டிக்கொண்டிருந்தாலும் அதற்கு சேனே வய ணங்கள் முன் அன்னபூரணய்யன் முதலான பேர் சொன்ன சம் மதியும் நாகப்பட்டணத்திலே ஒலாந்தாக்காரர் நடுவார் கோவிலே இடித்ததும் காரைக்காலிலே கோவிலிலே யிருந்த

விக்ரகத்தைக்கூட இடித்து அகற்றிப்போட்டு கோட்டையாய் கட்டிக்கொண்டு சம்மதி சொன்னாலும் பெண் பெண்சாதியானதேயென்று சேர்த்துவைத்துப்பார்ப்பார். அப்படி வைத்துப் பார்த்தபடிக்கு தாராளமாய் இடிக்கத்தக்கதாக தைரியம் கொடுத்து நடத்தியவன் முசியே பாரதீ என்று எனக்கு நன்றாய் தெரிந்திருக்கிறது. பிரபுவினுடைய தைரியம் எனக்கு நன்றாய் தெரிந்திருக்கிறபடியினாலே எழுதினேன். ஆனால் இந்தகோவில் காலம்வந்து இடிப்பட்டாலும் இடிப்பித்த பெரிய மனுஷருக்கு யாதொரு துக்கம் காண்பியாமல் விருதாவாய் ஒருக்காலும் போகத்தக்கதில்லை.

1748 ஆ செப்டம்பர் மீ 9 உ க்கு விபவ ஸு ஆவணி மீ 28 உ ஆதிவாரம்.

இற்றைநாள் இங்கிலீஷ்காரர் ஒரு இரண்டு பாய்மரச் சுலுப்பு அதைச் சுற்றிலும் எட்டு வத்தலும் வைத்துப்பிடித்து இன்றையதினம் இருட்டோடே தீக்குடுக்கை எரிய ஆரம்பித்து எட்டு பத்து தீக்குடுக்கைகள்மாத்திரம் பட்டணத்திலே போட்டான். இதிலே ஒரு குண்டு துரையவர்கள் வீட்டிற்கு அடுத்த மேலண்டை சந்து வீதி இருக்கிறது; அந்த வீதிக்கு மேல் சிறகு துரை கிடங்கு ஒன்று அப்பால் பீரங்கி மேஸ்திரி வீடு ஒன்று அடுத்தாப்போலே பின்னையுமிரண்டு வீடு வெள்ளைக்காரர் முசியே கேர்ழான் இருக்கிற வீடு முதலானது இருக்கிறது அதிலே பீரங்கி மேஸ்திரி முசியே புரேல் வீட்டுக் கிழக்கண்டை சுவரிலே வாசற்படியண்டையிலே இருக்கிற பூவரச மரத்துக் கிளையை முறித்துக்கொண்டு பீரங்கி மேஸ்திரி வீட்டு அடி சுவரிலே விழுந்தது. வெடிக்காதபடியினாலே விழுந்த அதிர்ச்சியிலே சுவர் பக்க பக்கலாய்விட்டது. அப்பால் ஒன்று துரை வீட்டுக் கிழக்கண்டை பாரிசம் வீட்டோரத்திலே விழுந்து முசியே பெடுந்தரான் துரை எழுதுகிற வீட்டுக் கிழக்கண்டை சுவர் கொற்னேசுவை பேற்றுகொண்டு ஓரத்திலே விழுந்தது. சுவர் கொஞ்சம் மூச்சு விட்டது அது வரும்போது நடு பாதையிலே வெடித்து அதிலே எட்டிலே ஒரு பங்கு துண்டு விழுந்ததினாலே ஆசுறவயாய்ப்போனது பின்னை ஒன்று கோட்டைக்கு கிழக்கண்டை வாசலுக்கு அடுத்த வடவண்டையிலே இரண்டு தீக்குடுக்கைகள் விழுந்து இடித்துக்கொண்டு போனது வானூர் பாபுசெட்டி

வீட்டு நடு வாசலிலே ஒரு குண்டு விழுந்து அரை அளவு புதைந்தது. பின்னை ஒரு தீக்குடுக்கை கனகராயமுதலி வீட்டுத் தெரு நாறசத்திலே பவழக்காரன் வீட்டுக்கடுத்தாப்போலே விழுந்தது. இந்தபடிக்கு அங்கங்கே பத்து குண்டு மாத்திரம் விழுவதற்குள் வெள்ளைக்கார தெருவிலே யிருக்கிற பெண்டுகள் சமஸ்தமான பேரும் நம்முடைய வீட்டுக்கு மேல் பக்கத்திலேயும் நம்முடைய வீட்டுக்கு எதிரிலே யிருக்கிற பாதிரி கோவிலிலேயும் ராவில் வருகிறதும், பகலில் மறுபடி அவரவர் வீட்டைப் போய்விடுகிறதும், இப்படி யிருந்தார்கள். மதாம் துய்ப்ளேக்ஸ் மதாம் தோத்தேலு மாத்திரம் நம்முடைய வீட்டிற்கெதிரே இருக்கிற கோவிலிலே வீடுகள் முஸ்தீதுபண்ணிக் கொண்டு தட்டுமுட்டு சமஸ்தமானதுகளும் கொண்டுவந்து வைத்துக்கொண்டு தீக்குடுக்கைப்போட எப்போ ஆரம்பிக்கிறார்களோ அந்த உத்திரக்ஷணமே போவோமென்று காத்துக் கொண்டிருந்தவர்கள் குண்டு எப்போ வந்து விழத் துவக்கினதோ சுருட்டி மடக்கிக்கொண்டு அஞ்சு மணி நேரமெல்லாம் ஓடிவந்து கோவில் சேர்ந்தார்கள். வரும்போது குண்டு விழப்போகுது சீக்கிரமத்துக்கு உள்ளே கொண்டுபோ கொண்டுபோ என்கிற வாக்கியத்துடனே வருகிற வெள்ளைக்காரச்சிகள் கோவிலுக்குள்ளே போய் எப்போ சேருவோமோ இதற்குள் என்னமோ என்ற பயத்தின்பேரிலே கோவிலுக்குள்ளே துரை பெண்சாதி முதலான பெண்டுகள் போனார்கள். துரையவர்களும் கோட்டைக்குள்ளே வாய்வு மூலையிலேயிருக்கிற புறாக்கூண்டின் கீழே இரண்டு காம்பிரா பின்னதிருக்கிறது அதிலே ஒரு காம்பிராவிலே தாமும் பின்னையொரு காம்பிராவிலே சின்ன துரையும் முசியே கில்லியார் பராதி முதலான பேருக்கும் ஒவ்வொரு கட்டில் மாத்திரம் போடுகிறதற்கு இடம்பண்ணி அதற்கு சுற்றிலும் பெரிய பெரிய தேக்கு உத்திரங்களும் முழு முழு தென்னை மரங்களையும் சாத்தி அதிலே யிருந்தார்கள். இந்தபடிக்கு அவரவர்கள் முஸ்தீது பண்ணிக்கொண்டு யிருந்து கடற்கரையிலேயும். வழுதாவூர் வாசற்படியிலேயும் வாணியத் தெருவு கொத்தளத்திலேயும், நடுக் கொத்தளத்திலேயும் சென்னப்பட்டணத்து வாசற்படியண்டையிலே இருக்கிற கொத்தளங்களிலே யிருக்கிற சட்டி பீரங்கியுமிறுத்தி நாலு ராத்தல் குண்டு ஓடுகிற பீரங்கிகள் விடாமல் சுட்டார்கள்;

சற்றேறக்குறைய ஆயிரம் பீரங்கி குண்டுகள் இதிலே அவர்களுக்கு ஒருத்தருக்கும் சேதமில்லை ஏனென்றால் இவர்கள் போடுகிற பீரங்கி சுமார் அவர்கள் பார்த்துக்கொண்டு அதற்கப்பாலேயும் இப்பாலேயுமாக இருந்தார்கள். இந்த குண்டு போகமாட்டாது தீக்குடுக்கைப் போகிறது. விழுகிற சுமார் அவர்களுக்குத் தெரிந்திருக்கிறபடியினாலே வெளியானபடியினாலே வருகிற போது நன்றாய் சப்தம் தெரிகிறபடியினாலே வருகிறது வெகு மெதுவின்பேரிலே வருகிறதானபடியினாலேயும், வரும்போது அப்புறத்திலே இடஞ்சி போகிறதினாலே ஒன்றும் செய்ய மாட்டாமல் போனது. இந்தபடிக்கு சாயங்காலம் பரியந்திரம் இவர்கள் சுட்டு நிருத்திப்போட்டார்கள்.

சாயங்காலம் கேழ்விபட்ட சேதி யென்னவென்றால்: கடற்கரையிலே வைத்துக் கொளுத்தின இரண்டு வெண்கல சட்டி பீரங்கியும், வெடித்துப்போனதென்றும் வழுதாவூர் வாசற்படியிலே வைத்து சுட்ட சட்டி பீரங்கியும் அடிப் பலகையெல்லாம் அணுக்கணுக்காய் போனதென்றும், அதனாலே அடிப் பலகை முஸ்தீதான பிறகு சுடவேணுமேயல்லாமல் அதற்கு முன் சுடப்போகாதென்று கடற்கரையிலே சுட்ட இருபத்தி நாலு ராத்தல் குண்டு ஓடுகிற பீரங்கிகளிப்படி நாலு பீரங்கிகள் விட்டுப்போச்சென்றும் சொன்னார்கள். இங்கிலீஷ்காரர் சாயங்காலமட்டுக்கும் பீரங்கி பாம் ஒன்றும் போடவில்லை சும்மாயிருந்தார்கள்.

கான் காலத்தாலே போய் (துரை) யவர்கள் விட்டு வாசலிலே விழுந்த தீக்குடுக்கையைப் பார்த்து அப்பாலிந்த தீக்குடுக்கை உடையாமல் விழுந்திருந்தபடியினாலே அதை துரையவர்களுத்திரவுபடிக்கு பீரங்கி மேஸ்திரி மனுஷரும் கூலிக்காரரும் வந்தெடுத்துக்கொண்டு போனார்கள். பின்னையும் அங்கே விழுந்து வெடியாத தீக்குடுக்கைகளையெல்லாம் கோட்டையை எடுத்துப்போய் பீரங்கி மேஸ்திரி வசத்திலே ஒப்புவித்தார்கள்.

(நான்) அதை பார்த்துப்போட்டு அப்பாலிப்படி குண்டு வந்து விழுகிற வேளையிலே கோட்டைக்கு எப்படி போவதென்று செவ்வையாய் வீட்டைப்போய் தெருவாசற் கதவை

சாத்தி தாள்போட்டு காங்கு கட்டு, எழுத்து கட்டு முதலான தினுசுகளெல்லாம் வரிசையாய்க் கட்டுக் கட்டாய் அடுக்கி அந்தக் கதவு திறக்கத் தேவையில்லே. போக்குவரத்தெல்லாம் வெள்ளாழ வீதி வாசற்படியாலே போகச்சொல்லி திட்டம் பண்ணி காகிதங்கள், சீட்டுகள் மற்றுமுண்டானதெல்லாம் எடுத்துக் கட்டி வெவ்வேறே வைத்து முஸ்தீதுபண்ணினேன். காகிதங்கள் அலமாரியிலே வரிசை வரிசையாய் வெள்ளைக் காரர் சட்டமாய் அவனவன் சம்மதி வேறே அலமாரி அறையிலே இருந்தபடியினாலே ஒரு வேளையிலே எதிர் கோவிலிலே துரை பெண்சாதி இருக்கிறபடியினாலே திரகோமென்கிற குதிரை வெள்ளைக்காரர், சிப்பாய்கள், நம்முடைய வீட்டுத் திண்ணை முடிய (பூராவும்) இராத்திரியும், பகலுமாயிருக்கிற படியினாலே துரை பெண்சாதியும் சற்று என் பேரிலே கோபமாயிருக்கிறபடியினாலேயும், மேலெழுதப்பட்டபடிக்கு முஸ்தீது பண்ணி பத்திரமாய் எங்கெங்கே தாவிலே வைக்கவேணுமோ அப்படி வைத்து குஞ்சு குழந்தைகளையும் (பெண்டுகளையும்) பெருமாள்பிள்ளை வீட்டை பெருமாள் கோவிலுக்கு வடவண்ட தெருவே அனுப்பிவைத்து நானுமந்த வீதி கிழக்கே அறுப்புக்கார வரதப்பன் வீட்டிலே வீடு அமர்த்திக்கொண்டு இருந்தேன். இராமசந்திரய்யன், வாசுதேவபண்டிதன் முதலான பிராமணத்தெருவார் சங்கரப்பய்யர் முதலானவர்கள் கூட சென்னப்பட்டணம் வாசற்படி பக்கமாய் லக்ஷிமண நாய்க்கன் வீட்டை வந்து சேர்ந்தார்கள். அழகப்ப முதலான பேர் வீரநாய்க்கன் வீட்டே போனார்கள்.

இப்படி அவரவர்கள் சென்னப்பட்டணத்து வாசற்படிக்கு அடுத்த வீதிகளிலே வந்து சேர்ந்த பிற்பாடு சாயங்காலமான பிற்பாடு முதல் பொழுது விடிகிறமட்டுக்குள்ளே (இங்கிலீஷ் காரர்) முப்பது முப்பத்தைந்து தீக்குடுக்கைகள் சுலுப்பு பேரிலே யிருந்து பட்டணத்தின் பேரிலே போட்டான்; அது விழுந்த இடமும் அப்போ ஜனங்கள் கலைந்த அலைச்சலும் எழுதுகிறேன்.

சாயங்காலமான ஆறு மணிவேளை துவக்கி (தீக்குடுக்கைகள்) போடும்போது நான் பாக்கு கிடங்கிலே அன்னபூர்ணய்யன் வீரநாய்க்கன் முதலாக ஐந்தாறு பேர் தெருவீதியிலே யிருந்து

பேசிக்கொண்டிருக்கும்போது தீக்குடுக்கை வந்தபடியினலே நாங்களொருத்தருக்கொருத்தர்மேல் விழுந்து பாக்கு கிடங்குக்குள்ளே ஓடினேம். அப்போ மெறிபட்டு என் அங்கிகூட கிழிந்தது. அப்போ சிறிது மிஷ்த்திசுக்கார்ச்சிகள் முதல் சட்டைக்கார்ச்சிகள்கூட குழந்தைகளை இழுத்துக்கொண்டு வந்து அழுத அழுகையும் அவர்கள் பட்ட தாபந்தமும் காகித முகாந்தரத்திலே எழுதி முடியாது. அப்பால் அந்த குண்டு பாக்கு கிடங்கு எதிரே சின்னதுரை வீட்டுத் தோட்டத்திலே விழுந்தது; உடனே பின்னையொன்று அந்த சாடையிலே விழுந்தது. அப்பால் நாம் அங்கே இருக்கிறது உத்தமமல்லவென்று புறப்பட்டு வீட்டிற்கு வந்தேன். அப்பால் ஒரு தீக்குடுக்கை புகையிலை கிடங்கு அண்டையிலே வந்து விழுந்து உடைந்தது; ஒன்று வந்து மிசியோனேர் கோவில் தோட்டத்திலே விழுந்தது. இப்படி மீராப்பள்ளியிலே மீர்குலாமுசேன் வீட்டு சமீபத்திலேயும், அடுத்த வீதிகளிலேயுமாக பத்து பனிரெண்டு திக்குடுக்கைகள் விழுந்து இரண்டொன்று கைக்கள தெருவண்டையிலே சேட்த் தெருவண்டையிலே இந்தபடி சிதற பட்டணமெங்கும் போட்டார்கள். அவன் போடவேணுமென்றால் பட்டணத்திலே எங்கே விழப் போடவேணுமோ அங்கே விழப் போட சாமர்த்தியமுண்டென்று தோன்றதக்கதாக எங்கும் விழப்பட்டன. நாலு மூலைகளிலும் போட்டான். அப்போ இந்த குண்டு வரும்போது சிறிது நடு ஆகாசத்திலே வெடித்து எட்டு துணுக்குகளாய் (துண்டுகளாய்) சிதறி விழுகிறது. சிறிது பூமியின் பேரிலே விழுந்தவுடனே வெடிக்கிறது விழுந்து அரை (இடுப்பு) அளவு ஆழம் கழுத்தளவு ஆழம் பூமியிலே பதிந்துபோகிறது. இந்தபடிக்கு விழுந்து மீராப்பள்ளியிலே நாலு இரண்டு வீட்டின்பேரிலே விழுந்து சேதப்பட்டது. சிறிது கோட்டையிலேயிருக்கிற கோவிலின் ஓரத்திலே விழும்போது வெடித்த துணுக்கு விழுந்து ஒரு பாரிசமிடித்துக்கொண்டுபோனது இரண்டொன்று அகரதையிலே விழுந்தது. இரண்டொன்று கோட்டைக்கு மேற்கண்டை அகரதையிலே விழுந்தது. கோட்டை மேற்கண்டை வாசலுக்கு எதிரே விழுந்து இப்படி எங்கும் சர்வத்திரஸ்மானமாய் போட்ட பிற்பாடு ஒரு தீக்குடுக்கை கனகராயமுதலி வீட்டுத் தெருவிலே சடையப்ப முதலி வீட்டுக்குக் மேற்கண்டைப் பக்கத்திலே படேசாயபு வீட்டில் குடியிருக்கிறபடியினலே அந்த வீட்டிலே தெற்கு

பார்த்த கூடத்திலே மேலண்டையிலிருக்கிற அறைவீட்டிலே விழுந்து கைகள் வலைச்சல் தட்டோடு எல்லாமுடைந்து சுக்கு சுக்காக்கி அந்த வீட்டிலே பெட்டி இருந்ததையும் உடைத்து இப்படி அலங்கோலம் பண்ணினது அந்த அறைக்கு அடுத்தாப் போலே இருக்கிற தெற்கு பார்த்த கூடத்திலே அறைக்கு அடுத்தாப்போலே படேசாயபு புத்திர ஸ்வீகாரப்பிள்ளை காதரல்விகானென்கிறவன் படுத்துக்கொண்டிருந்தான். அந்த தட்டோடு சிதறி இரண்டொரு துணுக்கை (அவன்) தலையிலேயும் கழுத்திலேயும் பட்டு கொஞ்ச ரத்தம் புறப்பட்டு போட்டுக்கொண்டிருந்த குல்லா, சட்டை, கட்டில் எல்லாம் ரத்தமாவது. துரை பெண்சாதி மிசியோனேர் கோவிலிலே இருக்கிற படியினாலே படேசாயபு வீட்டுத் தாதிகளும், சேவகரும், கிசுமத்நக்காரருமாய் பத்து பதினைந்து பேர் படேசாயபு வீட்டிலே குண்டு விழுந்து படேசாயபு மகன் செத்துப்போனானென்று தலையிலே கையை வைத்துக்கொண்டு அழுதுக்கொண்டு போய் மிசியோனேர் கோவில் கதவைத் தட்டி இவர்கள் வாயிலே வாயிலே அடித்துக்கொண்டதும் (மதாம் துய்ப்ளேக்ஸ்) அவள் கதவை திறக்கச்சொல்லி உள்ளே அழைப்பித்துக் கேட்ட உடனே ஆ! நீ எப்படி படேசாயபு செத்துப்போய்விட்டானென்று எப்படி சொல்வாய் இந்த ஊருக்குப் படேசாயபு என் புருஷனுச்சே என் புருஷனுக்கு மோசம் வந்ததென்று எங்கள் மனதெல்லாம் கலங்கிப்போனதே! இப்படி செய்யலாமா? இப்படி கூப்பிட்டுக்கொண்டு வரலாமாவென்று துரை பெண்சாதி வந்தவர்களைக் கோபித்துக்கொண்டு அதற்கென்ன? ஓட்டுத் துணுக்கை இம்மாத்திரம் பட்டு ரத்தம் புறப்பட்டதற்கு லோகமெல்லாம் முழுகிப்போனாப்போலே இந்த நடு பாதி இராத்திரியிலே கூப்பிட்டுக்கொண்டு வந்தாயென்றும், படேசாயபு செத்துப்போனானென்று நீங்களெப்படி சொல்லுவீர்களென்று அது கேட்டாற்போலே தானும் தரப்பிலும் எல்லாரும் அழுதாப்போலே ஒரு பிரளிபண்ணி காலத்தாலே புருஷன் வந்தான். அப்போ கிட்டயிருக்கிற பேரெல்லாம் ராத்திரி படேசாயபு செத்துப்போய்விட்டானென்று தலையிலே கையை வைத்து அழுதுக்கொண்டு இருபது முப்பது பேர் கூக்குரலாய் வந்ததும் மதாம் துய்ப்ளேக்ஸ் பேச்சு மூச்சில்லாமல் தத்தளித்துப் போனாளென்று அவரவரெப்படி சொல்லுகிறதற்கு பேச்சு வார்த்தை நடத்தத்தக்க அங்கமென்னமோ

அதற்கடுத்தாப்போலே தான் தாபந்தப்பட்ட பாவனையாய் நடத்தி படேசாயபு வீட்டுத் தாதிகள் முதலான பேர் கூவிக் கொண்டு வந்தவர்களை செத்துப்போகவில்லை இம்மாத்திரம் ரத்தம் புறப்பட்டாப்போலே இதற்கு பயப்படுகிறதாயென்று சொல்லி தன் புருஷன் செத்தானென்று வந்து சொல்லலாமா வென்று அதுதானே ஒரு கோபமாய்ப்பண்ணிப் போகச் சொன்னாள். அந்தமட்டுக்குமவர்கள் வீட்டுக்கு வந்து சொன்னார்கள். முன்னமே குண்டு குண்டென்று பயந்துக்கொண்டிருந்தவர்களுக்கு பிரத்தியக்ஷமாய் வீட்டுக்குள்ளே விழுந்து எவ்வளவாகிலும் காயமுமானால் அப்பால் அவர்கள் தாபந்தமெழுத வேண்டியதென்ன? பார்த்துக்கொள்ளவேண்டியது.

அப்பால் சந்தாசாயபு மகன் வீட்டண்டையிலே ஒரு தீக்குடுக்கை விழுந்தது. அவன் ஓடிப்போய் நம்முடைய சந்திரமதி முத்தியப்பிள்ளை வீட்டைப் போய்ச் சேர்ந்து அங்கேயுமிருக்க பயந்து இராத்திரி பனிரெண்டு மணி ஒரு வேளைக்கு மேற்கு புறம் அம்பட்ட திருவேங்கடம் வீட்டுத் தெரு திண்ணையின் பேரிலே படுத்திருந்து அப்படி இராத்திரி பொழுதைப்போக்கி பொழுது விடிந்ததும் அரும்பாத்தைப்பிள்ளை, முத்தியபிள்ளை வீட்டைப் போனார். மற்றபடி கும்பினீர் வர்த்தகரானால் குஞ்சு குழந்தைகள் தட்டுமுட்டு சமஸ்தமும் அனுப்பிவிட்டு அவரவர் ஒண்டி ஒண்டியாயிருக்கிறவர்கள் தெருவுக்கு தெருவு அலைந்ததும் அவர்களுக்கெடுத்த திகிலும் குண்டு வரும்போது ஆகாசத்தைப் பார்த்து அடித்துக்கொண்டு தாபந்தப்பட்டது காகிதத்திலே எழுதி முடியாது. தானியப்பமுதலி வலராம் பிள்ளையும் அவர்கள் குடும்பம் கலவை குமரப்பிள்ளை வீட்டிலே போய் இருந்தார்கள். மற்றபடி பட்டணத்திலுண்டான ஜனங்களை சமஸ்தமான ஜனங்களும் இராத்திரி முப்பதும் அலைந்ததும் அவர்க்ள் துக்கப்பட்டதும் அவர்களுடைய இலேசத்தை காகிதத்திலே எழுதி முடியாது. துரையவர்களிந்த கலாபமான வேளையிலே வெளியிலே போவதற்கு உத்தாரம் கொடாமல் போனாரென்கிற துக்கம் இந்த ஜனங்களெல்லாம் அது பேச்சாய்ப் பேசினார்கள்.

மற்றபடி அவன் (இங்கிலீஷ்காரன்) போட்ட தீக்குடுக்கை தன் எல்லாம் நாற்பதுக்கு உண்டு. அது இப்படி சகல ஜனங்

களும் அவஸ்தைப்பட்டார்கள். இந்த தீக்குடுக்கை 1-க்கு சிறிது நூற்றைம்பது ராத்தல் முதல் இருநூத்தி பத்து, பதினைந்து மட்டுக்குமிருக்கிறது. இது வரும்போது ஒரு சோதி போலே புறப்படுகிற வேடிக்கையும், அப்பாலே மெள்ள அசைந்து அசைந்துக்கொண்டு அப்பாலே விழுந்தவுடனே வெடிக்கிறவேடிக்கையும் பார்க்கிறதற்கு ஒரு வேடிக்கையாகத் தானே இருந்தது. இத்தனை தீக்குடுக்கை விழுந்தும் ஒரு மனுஷருக்கும் சேதமில்லை, ஒருத்தருக்கும் காயம் பட்டதுமில்லை. இன்றையதினம் இராத்திரி இப்படி நடந்தேறிபோனது தீக்குடுக்கையினுடைய மகத்துவம். அதனுடைய சப்தமானதும் இந்த மட்டுக்கும் அது ஒருத்தருக்கும் தெரியாது. இன்றையதினம் சிறு பெண்கள் பிள்ளைகள் சமஸ்தமான பேருக்கும் தெரிய வந்தது. தீக்குடுக்கை பயம் சிறிது பேருக்கு பயம் அரைவாசி தீர்ந்தது. சுட்டதும் ஒரு சப்தம் புறப்படும்போது ஒரு சூரியன் தோன்றுகிறதென்று வருகிறாப்போலே வருகிறது, வருகிறது வெகு சப்தத்துடனே வருகிறதுமல்லாமல் வெகு தொந்தியுள்ளவன் நடக்கமாட்டாமல் மெள்ள வருவானே அப்படி வருகிறபடியினாலே சமீபத்திலே வரும்போது மனுஷர் தப்பித்துக்கொள்ள விலகிப் போகலாமென்று வெகு பேருக்கெல்லாம் தைரியமுண்டாகி தீக்குடுக்கையென்றால் அதை சட்டைபண்ணி அது வருகிறதா போகிறதா என்கிறதுகூட கேழ்க்கிறதுகூட விட்டுவிட்டார்கள். இப்படி நடந்ததைப் பார்த்து கேழ்விபட்டதையும் சுருக்கமாயெழுதினேன்.

ஆனால் இன்றையதினம் பயந்தவர்களுக்குள்ளே வெள்ளைக்காரர் வெள்ளைக்காரிச்சிகளுக்கு நம்முடைய தமிழர்கள் வெகு தைரியவான்களென்று நூறுதரம் சொல்லலாம்.

1748 ஆ செப்டம்பர் மீ 10 உக்ர விபவ ஸு ஆவணி மீ 29உ செவ்வாய்க்கிழமை.

இற்றைநாள் காலத்தாலே ஏழரைமணிக்கு துரையவர்கள் கடற்கரை கொத்தளங்கள் பார்க்கப்போன விடத்திலே தீக்குடுக்கை சமீபத்திலே விழக்கண்டதும் துரையவர்கள் தாழ கவிழ்ந்து படுத்துக்கொண்டார். அவரைப்போலவே இரண்டு மூன்று பொம்பார்தேர் (Bombardeur) படுத்துக்கொண்டார்கள்

அது தெய்வாதீனமாய் வெடிக்காமல் பூமியிலே அமிழ்ந்து போனது: உடனே புறப்பட்டு துரை கோட்டையை போய்விட்டார். அப்பாலே கோட்டையை போனவர் வழுதாவூர் வாசற்படி சென்னபட்டணத்து வாசற்படியே போய் அங்கேயெல்லாம் விசாரித்துவிட்டு மிசியெனேர் கோயிலுக்கு பெண்சாதியிருக்கிற இடத்திற்கு போனூர். தான் படேசாயபு பெண்சாதி பிள்ளைகளை அனுப்பிவிடுகிறதற்கு இரண்டு விராகனும் பெத்ரோ மேரசு பெண்சாதி மத்தியஸ்தம் பேசுகிறவர்களுக்கு ஒரு பணமும் கொடுத்தால் வெளியே போகிறதற்கு உத்தாரம் வாங்கிகொடுக்கிறேனென்று சின்னதம்பிசெட்டி மகன் ரங்கய்யசெட்டி முகாந்திரமாகவும் பேச்சுவார்த்தை நடக்கிறது அதற்கு அடுத்ததாகவும் படேசாயபு வீட்டுப்பேச்சு நேற்று இராத்திரி நடந்த பேச்சுப்படியே பின்னேயும் அதற்கு சாகயும் மரமும் கிளையும் கற்பித்து யெப்படி சொல்லவேணுமோ அப்படியெல்லாம் சொன்னதின்பேரிலே அவரென்ன சொல்லிப்போட்டு வந்தாரோ தெரியாது. அப்பால் நான் கோட்டையைப்போன உடனே துரையும் மிசியெனேர் கோவிலிலே இருந்துவந்தார். அப்போ துரையை சேத்தியதினமெல்லாம் பேசினது யில்லையே யென்று துரையவர்களைக் காண்பித்துகொள்ளுவோமென்று துரையவர்களிருக்கிற குகைக்குப்போனேன்; அங்கே முசியே புசி, முசியே லந்தார், முசியே சேறே, முசியே கோர்னேத்துகூட இருந்தார்கள். நான் போனதும் ஆசாரம்பண்ணினேன் அவரும் போன்றூர். முசியே ரங்கப்பிள்ளையென்றூர். அப்பால் உனக்கும் உன் பமிலுக்கும் (Famille) இருக்கிறதற்கும் மிசியெனேர் கோவிலிலே ஒரு அறை விட்டு வைத்திருக்கிறது. தீக்குடுக்கை வருகிற வேளையிலே நீயும் உன் பமிலும் அந்த அறையிலே போயிருக்கலாமென்றும் ஆனல் இப்போ அந்த அறையிலே சில பேர் பெண்டுகளெல்லாம் போய் நிறைந்திருக்கிறூர்கள். அவர்களுக்கேயிடம் போதாமல்மெத்த கஸ்திபடுகிறூர்கள். கூடலூர் வாசற்படிக்கு மேலண்டை செவிரோரத்திலே வளவு வளவாய் வளைச்சு இருக்கிறதே அது நல்லதாவு இந்த கோவிலைப்பார்க்க மெற்ற கேர்த்தியானயிடம் அங்கே யாராகிலும் வெள்ளைக்காரச்சிகளிருப்பார்கள் இருந்தாலும் அவர்களை வெளியே யனுப்பி இடம் பார்த்துக்கொண்டு போகச்சொல்லி உன் பமிலும் நீயும் அதிலே போயிருங்களென்று சொன்னூர். அய்யா

மெத்த நல்லது அப்படியே செய்கிறேனென்று சலாம் பண்ணினேன்.

அப்பால் படேசாயபு மகன் வீட்டிலே திக்குடுக்கை விழுந்து அவன் மகனுக்கு யென்னமோ தலையிலே கல்லோ என்னமோ தெரிச்சு கொஞ்சம் ரத்தம் புறப்பட்டதாம் இராத்திரி இரண்டுமணி வேளையிலே படேசாயபு செத்துபோய்விட்டானென்று என் பெண்சாதியண்டையிலே கூவிக்கொண்டு நூறு பேராய் போய் கதவைத் தட்டினதும் என் பெண்சாதி படேசாயபு செத்துப்போய் விட்டானென்றுப்போலே பறங்கிப்பேச்சிலே சினியோர் கிருந்திக்கு துலுக்கப்பேச்சிலே படேசாயபு என்று சொல்லுகிறதானபடியினாலே நான் செத்துப் போனேனென்று என் பெண்சாதி தாபந்தப்பட்டு அழுது அங்கலாச்சது மிதமில்லை. அப்பால் விஸ்தரித்துக்கேட்டால் சந்தா சாயபு தம்பி படேசாயபு குமாரனுக்கு எவ்வளவோ ஒரு சின்ன எறும்பு கடித்தமாத்திரமில்லை காயப்பட்டது. அதற்கு இராத்திரி கூந்தல் போட்டு எங்களுக்கு உத்தாரம் கொடுத்தாலாச்சுது நாங்கள் தாயும் பிள்ளையும் இங்கே கழுத்தை அறுத்துக்கொண்டு சாவுறோமென்று சொன்னார்களாம். அதற்கென் பெண்சாதி கழுத்தை அறுத்துக்கொண்டால் ஒப்பித்தாவிலே போனால் காயம் கட்டுவார்களென்று கோபித்துக்கொண்டு சொல்லிப் போகச்சொன்னாளாம் என்று சொன்னார். அதற்கு நான் சொன்னேன் முன்னே இவர்கள் எப்படி சுபாபண்ணினார்களோ இவர்களைப்போலவே பயந்து திகிலடைந்தவர்களை பிரபஞ்சத்திலே காணேன். சந்தாசாயபு மகனால் படேசாயபு வீட்டிலே விழுந்தது என்ற சேதி கேட்டதும் இராத்திரி முப்பதும் அவன் பட்ட கிலேசத்தைச் சொல்லிமுடியாது. இவர்கள் திகிலிலே செத்துப்போராப்போலே காணுது என்று சொன்னேன். அதற்கு உத்தாரம் சொல்லவில்லை. இராத்திரி கும்பினி வர்த்தகர் பட்ட அவஸ்தை என்ன சொல்லுவேன். அவர்கள் போகப் புறப்பட்டாப்போலே மூலைக்கு மூலை ஒடுகிறது ஒருத்தரை ஒருத்தர் இப்படி வந்திருக்கிறதே என்று மினவிகொள்ளுகிறதும் அவர்கள் திகிலும் என்ன சொல்லப்போகிறேன். சிறுது மித்திசுக்கார்ச்சிகள் ஐரோப்பியர்களுடைய பெண்சாதிகள் பெரிய மனுஷர் இருக்கப்பட்டவர்களவர்கள் திகிலென்ன

வென்று சொல்லப்போகிறேனென்று சொல்லியதின்பேரிலே துரையவர்கள் விஸ்தரித்தால் துலுக்கர் கூட்டத்துக்கும் மெத்த பயப்படுகிறவர்களுக்கும் உத்தாரம் வாங்கிக்கொடுக்கலாமென்று சொன்னயிடத்திலே (துரை) ரங்கப்பிள்ளை தீக்குடுக்கை வந்து விழுகிறது உன் பெண்சாதி பிள்ளையும் சீக்கிரமத்துக்கு அந்த ஸ்தானத்திலே கொண்டுபோய் சேர் என்று சொல்லிப் போபோவென்று இரண்டுமூன்று தரம் சொன்னார். நானுமிந்தப்பேச்சு விஸ்தரிக்கப்போகிறேனென்று போகச் சொல்லுகிருரென்று அறிந்துக்கொண்டு அனுப்பிவித்துக் கொண்டு வீட்டுக்கு வந்து சிதம்பரமுதலியாருடனே கிண்டன் சீட்டி காங்குகளிதுகளெல்லாம் கோட்டையிலே கொண்டுபோய் மூசியே கோற்னேத்துடனே எச்சரித்துக் கோட்டைக் கிடங்கிலே வைத்துப் போடச்சொல்லியும், வீட்டிலே பத்திரமாயிருக்கச் சொல்லியும், சொல்லிப்போட்டு எம்பெருமாபிள்ளை வீட்டுக்கு வந்து சாப்பிட்டு விடுதியே போனேன்.

வீராம்பட்டணத்துத் துறையிலே கப்பல்களிலே ஐந்து கப்பல்களை நிறுத்தி மற்ற கப்பல்களையும் பாயெடுக்கச்சொல்லி தானும் பாயெடுத்து மேஸ்தர் புஸ்காவேன் என்கிற கோந்தரமினுல் கோட்டைக்கு வடவண்டை பாரிசமாய் கோட்டைக் குப்பத்துத் துறைக்கு நேராய் கொண்டுபோய் வைத்துப்பிடித்து லங்கோரம் போட்டான்.

*1748* ஆ செப்டம்பர் மீ *11* உ க்ஷ விபவ ஸு ஆவணி மீ *30* உ புதவாரம்.

இற்றைநாள் காலத்தாலே இங்கிலீஷ்காரன் சலுப்புக் கோட்டைக்கு நேராய் கொண்டுவந்து வைத்துப்பிடித்துக் கோட்டையைப் பார்த்தாப்போலே தீக்குடுக்கையைப் போட்டுக் கொண்டிருந்தான். அந்த தீக்குடுக்கைகள் கோட்டையிலிருக்கிற மருந்து கிடங்கின்பேரிலே ஒன்று விழுந்தது. அதன்பேரிலே உத்திரமும், தென்னமரமும் போட்டுயிருந்தபடியினுலே அதிலே விழுந்து வெடித்து அந்த தென்னமரங்களையும், உத்திரத்தையும் சேதமாக்கிப்போட்டுப் போனது. இதிலே தண்ணீரை வார்த்து மறுபடி மரங்களையும், மண்ணையும்போட்டுப் பத்திரம் பண்ணினுர்கள். கோட்டையிலே புடவை பார்க்கிற சாலையிலே

ஒரு தீக்குடுக்கை விழுந்து முண்டி கனம் வ்ளவை் பெரிய பொத்தலாக்கி தாழ விழுந்து வெடித்தது. பின்னையொன்று கோட்டையிலே பிரான் கூண்டின்பேரிலே விழுந்து வெடித்தது. பின்னேயும் கோவில் வாசற்படியிலேயும், இஞ்சினீர் குளத்தண்டையிலேயும், முசியே துப்றம் வீட்டிற்கு எதிரே சின்ன துரை வீட்டுச் சமீபத்திலேயும், இந்தபடியாக விழுந்ததென்று வந்து கபுறு சொன்னார்கள். நானுமந்த பாரிசம் குண்டுபோய் விழுகுதேயென்று யோசனைப்பண்ணி இங்கிலீஷ்காரர் பவுன்சு பாக்குமுடையான்பட்டு கருப்பம் (கரும்பு) தோட்டத்திலேயும் வெத்திலைத் தோட்டத்திலேயும் இருந்துக்கொண்டு பறச்சேரியை ஓட்டிப்பிடித்துக்கொண்டு கொத்தளம் போடுகிறார்களென்றும்சொன்னார்களென்று கொத்தளத்தின்பேரிலே ஏறிப்போய் பார்ப்போமென்று யோசனைப்பண்ணி வாணியத்தெருவு மூலை கொத்தளத்திற்கு எஜமான் முசியே வின்சேன்ஸ் அண்டையிலே அதற்கு தென்னண்டை கொத்தளத்திற்கு எஜமானயிருக்கிற முசியே கெற்ழாழம் கூட வந்து இருந்தானப்போ நொண்டி சவரிமுத்து என்கிற பள்ளிப்பயல் இப்பேர் சேருவக்காரனையிருக்கிறவன் அவன் அம்மானுடைய வேகுக்காரர் நூறு பேர் சேவகருக்கு எஜமானயிருக்கிறபடியினாலே கும்பினீர் சேவகருக்கும் சேருவைக்காரனயிருக்கிறபடியினாலே அந்த நொண்டி சவரிமுத்து மூலை கொத்தளத்திலே வைத்திருக்கிறது. அப்போ அந்த நொண்டிக்கு அம்மாள் வேகுக்காரர் வீசிங்கிநாட்டு கள்ளர் சண்டையிலே பயப்படாதே போய் குதிரைகள் கொண்டுவருவார்கள்; கபுறு கொண்டுவருவார்கள். மனுஷரை எப்படிப்பட்டவனை கொன்றுப்போட்டு வரவேணுமானால் அப்படிப்பட்டவர்களைப்போய்க்கொன்றுபோட்டு வருவார்கள் என்றும் பின்னையும், கள்ளர்கள் சாடை யென்ன . உண்டோ அந்த சாடையெல்லாம் நடத்துவார்களென்றும், சிறிது வெகுமானங்கள் நூறு இருநூறு வராகனுக்குக் கொண்டுபோய்க் கொடுத்து அழைத்து வந்தோமென்று சிறிதுபேர் பள்ளிப் பசங்களை தொல்லலாய் அவர்களைப்போட்டு அழைத்து வந்தேனென்று என்பித்து அவர்களுடனேகூட இந்த ஊர் சிறிது பள்ளிப்பசங்கள் சூதுக்காரர்கள் திருடிக்கொண்டு திரிந்து ஊர் கடக்க அடித்து ஓட்டிவிட்டவர்களுமாய் திரிகிற சிறிது பேரையும் மைலாப்பூர் பள்ளிகள் அந்தக் கள்ளருக்குச் சமானமென்று ஏகத்துக்கு நூறுபேரைச் சேர்த்து அவர்களுக்கு

குமாரபாளையங்கள் முதலானது சம்பாதித்துக் கொடுத்துப் புருஷனுடனே இங்கிலீஷ்காரர்கள் தண்டை முழுக்க திருடி வரத்தக்கதாக தெற்கே யிருந்து அழைப்பித்தேனென்று சொல்லி அவர்களுக்கு ஆறு ரூபாயும், படியும் மாசம் ஒன்றுக்கு திட்டம்பண்ணி இருக்கப்பட்ட கள்ளர் என்று பேரிட்டுக் கொண்டு ஊரையெல்லாமிப்போ கொள்ளையிடுகிற கள்ளர் களிலே ஒருத்தன் வந்து அதோ தெரியுதே அந்த பறச்சேரி யிலே கொத்தளம் போடுகிறார்களாம். அதிலே இருநூறு பேர் காமாட்டிகளும், நூறு பேர் வெள்ளைக்காரர்களும், சிப்பாய் களுமாக யிருந்துக்கொண்டு வேலை செய்கிறார்களென்று சொன்னமாத்திரத்திலே அந்த பறச்சேரிக்குள்ளே இருக் கிறவர்களைப் பார்த்து பீரங்கியாலே போடவேணுமென்று வெளியிலே இருந்தாப்போலே கூப்பிட்ட வாக்கிலே சொல்ல அந்தச் சேதியை நொண்டி சவரிமுத்துக் கேட்டு முசியே வேன் சானுக்கு சொல்ல முசியே வேன்சான் என்னைப் பார்த்து நாம் போடுகிறதற்கு நம்முடைய சிப்பாய்கள் இருநூறு பேர் மாத் திரம் அவ்விடத்துக்கு சமீபமாயிருக்கிற வெத்திலைத் தோட் டத்தைச் சுத்திக்கொண்டிருந்துக்கொண்டு அதைப் பார்த்து சுடுகிறோமென்று தூர தூர சுட்டு மருந்தை விருதாப்பண்ணு கிறார்கள். அவர்களிருக்கிறதற்கும் இவர்களிருக்கிறதற்கும் அரை நாழிகை வழியுண்டு. அவர்களந்தப் பறச்சேரியிலே இருக்கிறதுமில்லாததும் தெரியவில்லை. அப்படியிருக்க ஒரு நாழிகை வழியிலே யிருந்து தப்பும் தாறுமாய்ச் சுட்டுப்போட்டு மருந்தையும், குண்டையும் விருதாவாய் கரிசைப்பண்ணிப் போட்டு இங்கே குவர்னதோரண்டை வந்து நாங்களப்படி சுட்டோம் இப்படி சுட்டோம் அதிலே இருபது பேர் முப்பது பேர் விழுந்தார்களென்று சும்மாய் பொய்களைச்சொல்லி வெகு மானம்கூட வாங்கிக்கொண்டு போகிறார்களென்று சொல்லி கல்லது அந்தக் கச்சோர்களை வந்துவிடச்சொல்லி இங்கே யிருந்து வெள்ளை விசிறி வந்துவிடச் சொல்லென்று சொன்னான். அந்தபடி சேவகனுடனே சொல்லி வெள்ளை விசிறச் சொன் னேன். வழுதாவூர் வாசற்படி முதற்கொண்டு வாணியத் தெருவு மூலையிலே கொத்தளமட்டுக்கும் முசியே லத்தூஸ் என்கிற ஒப்பிசியே பெரியவனானபடியினாலே அவனண்டைக்கு முசியே வின்சேன் கேட்டனுப்பிவைத்தான். இப்படி பறச்சேரி யிலே மனுஷர்களிருக்கிறார்களென்று வேகுக்காரர் வந்து

சொல்லுகிறார்கள். அவர்களைப் பார்த்து பீரங்கியாலே போடட்டுமாவென்று கேட்டுவாயென்று மூசியே கேர்ழாமுடனே சொல்லி அனுப்பினானந்தபடிக்கு அவன் போய் கேட்டதற்கு போடச்சொல்லி உத்தாரம் கொடுத்து அனுப்பினான். இதிலே பின்னையொரு வேவுக்காரன் வந்து வெளியிலேயிருந்து கூப்பிட்டுச் சொன்னது: காணூறுபேருண்டென்று சொன்னானதற்கு மூசியே வேன்சன் அந்த நொண்டியைப் பார்த்து இதென்ன வேவு ஒவ்வொருத்தன் வந்து ஒவ்வொரு வகையாய்ச் சொல்லுகிறது பார்த்தால் ஒருவேளை அங்கே மனுஷர் ஆயிரம் பேர் இருந்தாலும் இருப்பார்கள். ஒருவேளை ஒருத்தருமில்லாமல் நாலைந்துபேர் கடமாடினதையும் பார்த்துச் சொல்லுகிறார்களோ என்னமோ தெரியாதென்று சொல்லி, அப்பால் பீரங்கியை ஏகவேளையிலே வழுதாவூர் வாசற்படி முதற்கொண்டு மூலை கொத்தளமட்டுக்கும், அப்பால் மூலை கொத்தளமட்டுக்கும் அப்பால் மூலை கொத்தள முதல் கிழண்டை சென்னப்பட்டணம் வாசற்படி மேலண்டை கொத்தளமட்டுக்கும் பீரங்கிசுட துவக்கங்காட்டிலும் அங்கே போயிருந்த இருநூறு சிப்பாய்களும் வெத்திலைத் தோட்டத்தைக் கொள்ளையிட்டுக்கொண்டு உள்ளே வந்துவிட்டார்கள். அல்விகானென்கிறவன் நயினியப்பிள்ளைசாவடி மட்டுக்கும் போரோமென்று சொல்லி மீனாட்சியம்மை சத்திரமட்டுக்கும் போயிருந்து முத்தாலுப்பேட்டையை கொள்ளையிட்டுக்கொண்டு இருநூறு சிப்பாய்களுடனே உள்ளே வந்து சேர்ந்தான். முன்னெழுதப்பட்ட கொத்தளக்காரரெல்லாம் பீரங்கியை வாங்காமல் விடாமல் பறச்சேரியைப் பார்த்து சுட்டார்கள்.

இதிலே துரையவர்கள் வழுதாவூர் வாசற்படியே வந்து அங்கேயிருந்து மூலைக்கொத்தளம் சென்னப்பட்டணம் வாசற்படி மட்டமாய் போயங்கேயிருந்து மிசியேனேர் கோவிலிலே பெண்சாதியிருக்கிற இடத்திற்குப் போனார்.

அங்கே அப்துலாயிமான் சேக்கு அசேனுக்கு தாட்டி வெகுமானம் கொடுத்த வயணமென்னவென்றால்: நம்முடையவர்கள் காலத்தாலே சிறிது சிப்பாய்கள் புறப்பட்டு முருங்கப்பாக்கத்து தெத்தண்டையிலிருந்த பீரங்கியை இழுத்துவரத்தக்கதாக போயிழுத்து வரும்போது அவர்கள் மனுஷர்கள் வந்து

பீரங்கியைக் கொண்டுபோகாதபடிக்கு தடை பண்ணினதின் பேரிலே இவர்களுக்கும் அவர்களுக்கும் சண்டையாகி அதிலே இரண்டுபேர் குதிரைசுவார்கள் செத்ததின்பேரிலே உள்ளே கொண்டுவந்து சேர்த்தார்கள். அவர்களும் வெகு தூரம் பின் தொடர்ந்து வந்ததின்பேரிலே அவர்களுக்கும் சிறிது பேருக்குக் காயம் பட்டதின்பேரிலே பின்னடைஞ்சுப் போனார்கள். அதன்பேரிலே துரையவர்களண்டைக்கு வந்த விடத்திலே மதாம் துய்ப்ளேக்ஸ் கூட யிருந்தும் மத்தியானத் திற்குமேல் சண்டைக்குப் போகிற ஏவியத்தை மனதிலே வைத்துக்கொண்டு அதற்கு உற்சாகம் கொடுக்கத்தக்கதாகவும் இந்த பீரங்கி இழுத்துக்கொண்டு வந்ததற்குத்தானே இவ்வளவு வெகுமானமானதே எதிராளியைக் குண்டுசாலேக்கு வெளியே துறத்தி அவர்களவர்கள் போட்ட மோர்சாவையும் கலைத்துப்போட்டு அவர்களிலே வெகு மனிதரை சேதம்பண்ணி வந்தால் விஸ்தாரமாய் வெகுமானம் அகப்படுமென்று யோசனை தோக்கத்தக்கதாக இருக்கட்டுமென்று வெகுமானம் கொடுத்த வயணம்: அப்துலாயிமானுக்கு ஷியார் தம்பி அசேனுக்கும் கொடுத்ததும் (டெக்கா முசலீன் ஒரு பீஸ்)

| | |
|---|---|
| கமதாக்கா | 1 |
| இரண்டு வர்ன சகலாத்து கெஜம் | 6 |
| இதுவு மல்லாமல் குதிரை சுவார்களுக்கு ரூ | 100 |
| கால் நடையாய்ப் போன சிப்பாய்களுக்கு ரூ | 220 |
| ஆக சிப்பாய்களுக்கு ரூ | 320 |

கொடுத்தார்கள் கொடுத்த பிறகு மதாம் துப்ளேக்சு சொன்னது அவர்கள் நூறு வெள்ளைக்காரரும் நூறு சிப்பாய்களும் இரு நூறு காமாட்டிகளையும் வைத்து பாக்குமுடையான்பட்டு பறச்சேரி அண்டையிலே கொத்தளம் போடுகிறார்கள். அவர்களைப் போய் வளைத்துக்கொண்டால் அந்த நானூறுபேரிலேயும் சேதப்பட்டது போக மற்றப்பேரை பிடித்துக்கொண்டு வரலாமென்று சொன்னாள். இந்தபடிக்கு வேகுக்காரரை முன்னே விட்டு இவர்கள் தான் வந்துச்சொன்னார்கள்; இது நல்ல சமயம் அவர்கள் தண்டுயிரங்கி இருக்கிறகதற்குமவர்கள் இப்பால் பட்டுவந்து மோர்சாபோடுகிற யிடத்துக்கும் நான்கு இரண்டு நாழிகை வழி உண்டானபடியினாலே இந்த சமயத்திலே இவர்களைப் போய் வளைத்துக்கொண்டால் அவர்களைத் தண்டியிலே

யிருந்து மத்தத்து வருகிறதற்கு இரண்டு நாழிகை தேசகாலம் ஒன்றரை நாழிகை தேசகாலம் செல்லுமானபடியினாலே இதற்குள்ளே நம்முடையவர்கள் போய் வளைத்துக்கொண்ட மாத்திரத்திலே செத்தவர்கள்போக மற்றபேரைக் கைப்பிடியாக அகப்பட்டுப் போவார்கள் என்று மதாம் துய்ப்ளேக்ஸ் சொன்ன மாத்திரத்திலே துரையவர்கள் முசியே பாரதியைப் பார்த்து மதாம் சொல்லுகிறபடி செய்யலாமென்று தோணுதென்றார். முசியே பாரதியுமிருந்துக்கொண்டு அந்தபடிக்கு நடத்துகிறதே யுக்தமென்று சொல்லி சண்டைக்குப் போகத்தக்கதாக சொல்தாதுகளுக்குஞ் சிப்பாய்களுக்கும் சொல்லியனுப்பி சண்டை முஸ்தீதாய் ஒரு மணி வேளைக்கெல்லாம் சென்னப்பட்டணம் வாசற்படியே வந்து சேரச்சொல்லி அனுப்பி சேக்கு அப்துலாயிமானுக்கும் சேக்கு அசேனுக்கும் உச்சாகமாயிருக்கத்தக்கதாக எந்த வார்த்தை சொல்லியனுப்பவேணுமோ அந்தபடிக்கு அனுப்பி வைத்தார்கள். அதன்பேரிலே சேக்கு அப்துலாயிமான் முதலான சிப்பாய்களை அனுப்பிவைத்துக்கொண்டு உற்சாகமாகத்தானே ஒன்பது மணி வேளைக்கெல்லாம் அவர்கள் வீடுகளுக்குப் போனார்கள்.

அப்பால் பனிரெண்டு மணி வேளைக்கு துரையவர்கள் என்னையழைத்துச் சென்னப்பட்டணத்திற்கு அனுப்புவதற்கு ஐம்பதினாயிரம் ரூபாய்க்கு உண்டிகை வேணும் தருவாடியைக் கேட்டு உண்டிகை எழுதிவைத்து வாங்கிக்கொண்டுவா என்று சொன்னார். அதற்கு நான் சொன்னது: தருவாடி வில்லியநல்லூருக்கு திதி பண்ணப் போனவிடத்தில் இதிலே இந்தக் கலாபமானபடியினாலே அப்படித்தானே ஆலம்புரத்தைப் போய்ச் சேர்ந்தானென்று சொன்னேன்.

அதன்பேரிலே சந்தாசாயபு அவர்கள் குமாரனுக்கு இன்றையதினம் கடுதாசி வந்ததே! அதிலே சந்தாசாயபு வருகிற சேதி ஏதாகிலும் உண்டாவென்று கேட்டார். இன்றையதினம் வந்த காகிதம் சந்தாசாயபு அவர்களண்டையிலேயிருந்து வந்த காகிதமல்ல, அவர்கள் தாயார் வழுதாவூரிலேயிருந்து எழுதியனுப்பி வைத்தாரென்று சொன்னேன். அப்படி ஏதாகிலும் சந்தாசாயபு வருகிற சேதி உண்டாயிருந்தால் சீக்கிரமத்துக்கு வந்து என்னுடனே கபுறு சொல்லென்று

சொன்னூர். நல்லதென்று சொல்லி அனுப்பிவைத்துக்கொண்டு வந்தேன். அப்போ பனிரெண்டடித்து ஒரு மணி வேளை உண்டு.

வீராநாய்க்கன் தோட்டம் வாரத்திற்கு பயிரிடுகிற வனுடையவர்களிலே இரண்டுபேர் வெத்திலைத்தோட்டத்திலே எல்லாரும் போய் வெத்திலை பறிக்கிறூர்களென்று அவர்களும் போய் வெத்திலை பறிக்கப்போன விடத்திலே மதாம் துய்ப் ளேக்ஸ் சேவகரும் வெத்திலை கொள்ளையிடப்போரார்கள். அவர்களிந்த இரண்டுபேரையும் கண்டு நீங்களெங்கே வந் தீர்களென்று கேட்டார்கள். இந்தத் தோட்டத்திலே பறச்சி கள், பறயர்கள், சட்டக்காரர் ஏகத்துக்கு இருநூறுபேர் வெத்திலை பரிக்க வந்தோம் என்று சொல்லும்போது அவர் களைப்போலே நாங்களும் வெத்திலை பறிக்க வந்தோமென்று சொன்னூர்கள். நல்லது நீங்கள் பறித்த வெத்திலையைக் கொடுத்துவிடுங்களென்று கேட்டார்கள். நீங்கள் பறித்தது போலவே நாங்களும் பறித்தோம்; நாங்களேன் உங்கள் கையிலே கொடுப்போம் என்று வேறு சொல்லி சொன்னதற்கு இவர்களிரண்டு பேர் கையிலிருக்கிற வெத்திலையைப் பிடிங்கி னூர்கள். நல்லது நாங்கள் போய் வீராநாய்க்கருடனே போய் சொல்லுகிறோமென்று சொன்னதற்கு அவர்கள் இவர்களைப் பின் கட்டு முறையாய்க் கட்டிக்கொண்டு வந்து மதாம் துய்ப் ளேக்ஸ் அண்டையிலே விட்டு வீராநாய்க்கன் தோட்டத்து ஆள்கள் வெத்திலை திருடிவந்தார்களென்று சொல்லி சொன்ன தின்பேரிலே அதற்கு மதாம் துய்ப்ளேக்ஸ் அப்படி சொல்ல வேண்டாம். இங்கிலீஷ்காரருக்கு வேகு பார்க்கப் போனூர் களென்று சொல்லி சொல்லச்சொல்லி இவர்கள் இரண்டு பேருக்கும் சாவடி கிடங்கிலே கொண்டுபோய் வைத்து விலங்குப்போட்டு வைக்கச் சொன்னூள். அந்தபடிக்கு மரச்சி விலங்குப்போட்டு வைத்தார். ஆனூல் பட்டணத்திலே அநியா யங்களிப்படி இருக்கிறபடியினூலே சுவாமி என்னமாய் கடத் தேற விடுவாரோ நான் அறியேன்.

இற்றைநாள் பகலைக்கு மேலாக மூன்று மணிக்கு முசியே பாதி படைக்கு கொமாந்தான் ஆனபடியினூலே அவர் சமஸ்த மான குதிரைக்காரர், துலுக்கர், வெள்ளைக்காரர், சிப்பாய்கள் ஏகத்துக்கு எண்ணூறு துலாயிரம் பேர் மட்டுக்கும்

கூட்டிக்கொண்டு இரண்டு பீரங்கியுமிழுத்துக்கொண்டு துரையவர்கள் சென்னப்பட்டணத்து வாசற்படியண்டையிலிருக்க அவர்கள் கையில் உத்தாரம் வாங்கிக்கொண்டு இங்கிலீஷ்காரர் பவுன்சு பாக்குமுடையான்பேட்டு பறச்சேரி அண்டையிலே இருந்துக்கொண்டு அவ்விடத்தில் அவர்கள் மனுஷர்கள் கொத்தளம் போடுகிறார்கள். அவர்கள் பேரிலே போய் சண்டை பண்ணி அந்தக் கொத்தளம் போடுகிறதையும் கலைத்துவிட்டு அவர்களிலே செத்தப்பேர் போக மற்றபேரை கைப்பிடியாய்ப் பிடித்துக்கொண்டு வருவோமென்று புறப்பட்டுப் போனார்கள்.

துரையவர்கள் சென்னப்பட்டணம் வாசற்படியண்டையிருந்தவர் இவர்கள்போய் சண்டைபண்ணுகிறதைப் பார்போமென்று சொல்லி வாணியதெருவு மூலைக் கொத்தளத்தின் பேரிலே போனார்கள். அப்பால் முசியே பாராதீ அவர்கள்முன்னே நடக்கும்போது முசியே துய்ப்ளேக்ஸினுடைய பெண்சாதி வேகுக்காரனாயிருக்கிற நொண்டி சவரிமுத்து என்கிற பள்ளிப்பையன் வந்து சொன்னது; அதோ பறச்சேரிக்கு அடுத்த கிம்பாரிசமவர்கள் கொத்தளம் போடுகிறதிலேயும் அந்தப் பறச்சேரியிலேயும் அவர்கள் மனுஷர் காமாட்டிகள் இருநூறுபேரும், வெள்ளைக்காரரும், சிப்பாய்கள் இருநூறுபேரும் இருக்கிறார்கள். நாம் போய் அந்தக் கொத்தளத்தையும் கலைத்துப்போட்டு அவர்களையும் கைப்பிடியாய்ப் பிடித்துக்கொண்டு வருகிறதற்கு இது நல்ல சமயமென்று சொன்னான். அதற்கு முசியே பாராதீ இருந்துக்கொண்டு இந்த சேதி மெய்தானாவென்று கேட்டார். அதற்கு மெய்யான சேதியென்று சொல்லி இரண்டு பெயரை முன்னேவிட்டு இவர்களிப்போதான் போய்ப் பார்த்து வந்தார்களென்று சொல்லிவைத்தான். ஆனால் அவ்விடத்திற்கு போவதற்கு வழி எப்படியென்று கேட்டதற்கு நாங்கள் போகிறோம் எங்கள் பிறகாலே வாருங்களென்று சொன்னான். ஆனால் முன்னே போவென்று சொன்னார், நல்லதென்று அந்த நொண்டி சவரிமுத்து என்கிற பள்ளிப்பயல் வழிக்காட்டுகிற சாடையாய் முன்னே நடந்தான் இவர்களும் பிறகாலே போனார்கள்.

இவர்கள் பவுன்சு புறப்பட்டு வருகிற சாடை இங்கிலீஷ்காரர் பவுன்சு பார்த்து வெள்ளைக்காரரும் சிப்பாய்களுமாக

ஆயிரம்பேர் மட்டுக்கும் முஸ்தீதாய்ப் பறச்சேரிக்கு வட வண்டை பாரிசம் ஒரு ஓடை யிருந்தது. அந்த ஓடையிலே அவர்கள் பவுன்சு பதுங்கியிருந்து ஒட்டு தீர்ந்துக்கொண்டு தயார் இருந்தார்கள். பறச்சேரிக்குக் கீழண்டை பாரிசம் மோற்சா போடுகிற இடத்திலே இருநூறுபேர் காமாட்டிகளை வைத்து வேலை செய்யச்சொல்லி இவர்கள் கிட்டவந்ததும் வேலைக்காரரை ஓடிப்போகச்சொல்லி சொல்லிப்போட்டு தயாராயிருந்தார்கள். நம்முடையவர்கள் அந்த இங்கிலீஷ் காரர் பவுன்சு அந்த ஓடையிலே யிருக்கிறதை அறியாமல் அந்த பறச்சேரியையும், அந்த மோற்சாவையும் வளைத்ததும் பறச் சேரி வடவண்டை பாரிசமாய்ப் படையையும் படைத் தலைவர் களையும் நொண்டி சவரிமுத்து வேகுக்காரரையும், அழைத்துக் கொண்டு போனார்கள். குதிரை சுவார்கள் தென்னண்டை பாரிசமாய்ப் போனார்கள். அவர்கள் பவுன்சு பறச்சேரிக்கு வடவண்டை பாரிசம் ஓடையிலே இவர்களுக்குத் தெரியாமல் பதுங்கி ஒட்டு தீர்ந்துக்கொண்டு துப்பாக்கிகளை முஸ்தீது பண்ணிக்கொண்டு இருக்கிறவர்களுடைய வுலிமுகத்திலே இந்த பவுன்சு பறச்சேரி பார்த்தாப்போலே போகிறபோது ஓடையிலே பதுங்கியிருந்த அந்த இங்கிலீஷ்காரர் பவுன்சு ஆயிரம் துப்பாக்கியையும் ஏகவேளையிலே பளபளவென்று நெரித்தார்கள். ஏகவேளையிலே நெரிப்பதற்குள் இவர்கள் பவுன்சிலே காயம்பட்டதும், செத்ததும் சற்றேறக்குறைய நூறுபேருக்கு உண்டு. அதற்கு வயணம்: முசியே லமேந்திரி உடன் பிறந்தான் மகன் முசியே லரோஷ் என்கிறவன் காயத்தி னாலே செத்துப்போனான். பின்னையும், சிறிது வெள்ளைக்கார ரிலேயும், சிப்பாய்களிலேயும் கையற்தியாய் செத்துப்போனார் கள். காயப்பட்டு ஊரே எடுத்துக்கொண்டு வந்தவர்கள் முசியே பாதிக்கு தலையிலே சாவுகாயம். சேக்கு அப்துலாயிமான் தம்பி சேக்கு அசேனென்கிற சின்ன சமேதாரனுக்கு முழங் காலுக்குங் கீழே குதிரை முகத்திலே நடு எலும்பிலே பட்டு எலும்பு ஒடிந்துபோனது. பின்னையும், சிறிது காபிரிகளை சிறிது, வெள்ளைக்காரரை, சிறிது சிப்பாய்களை நாலுபேர் ஒப்பிசியேமார்களையும் இப்படியாக நாற்பதம்பதுபேருக்குக் காயம்பட்டு, கட்டிலின்பேரிலேயும், டோலியின்பேரிலேயும், பல்லக்கின்பேரிலேயும் ஆள்கள் சிப்பாய்களை எடுத்துவந்தவர் கள் சட்டைக்காரரையும் எடுத்துவந்தவர்களுமாக காயக்

காரரை எடுத்துவந்து ஒப்பித்தாலிலே கொண்டுபோனார்கள். ஆனால், இங்கிலீஷ்காரர் பவுன்சு சுட்டுத் தீர்ந்த பிறகு நம்முடையவர்கள் சுட்டதினாலேயும், வழுதாவூர் வாசற்படி முதற் கொண்டு வாணியத்தெருவு மூலைக் கொத்தளம் சென்னப் பட்டணத்து வாசற்படி மட்டுக்குமிருக்கிற கொத்தளங்களிலே சுட்ட பீரங்கி ஆயிரம் கணக்காய் இங்கிலீஷ்காரர் பவுன்சின் பேரிலே சுட்டதினாலே அவர்களில் எம்மாத்திரம் சேதமுண்டோ தெரியாது. அதுவுமினிமேல் நாளதுவரையிலே வெளியாகும். ஆனாலிந்த சண்டைக்குப் போனதுமங்கே நடந்த சேதியுமென்னுடனே ஒரு வெள்ளைக்கார ஒப்பிசியே சொன்னபடிக்கு அவன்கூட இந்த சண்டைக்குப் போயிருந்து மறுபடி கோட்டைக்குப் போகும்போது அவனென்னுடனே சொன்ன சேதியும், அப்பாலிவர்கள் சண்டைக்குப் போய் வடக்கு வாசற்படிக்கு உள்ளே நுழைந்த பிற்பாடு நடந்த சங்கதிகளும் சுருக்கமாயெழுதினேன்.

*1748* ஆ செப்டம்பர் மீ *19* உக்கு விபவ ஸ்ரீ புரட்டாசி மீ *7* உ குருவாரம்.

இற்றைநாள் காலத்தாலே சூரிய உதயத்திற்கு இங்கிலீஷ்கார திருடன் போட்ட தீக்குடுக்கை இரண்டும் சேன்லூய் கொத்தளத்துக்கு நேராய் வந்து வடவண்டை அகரதியிலே விழுந்துப்போனது. இற்றைநாள் இங்கிலீஷ்காரன் பாக்குமுடையான்பட்டு பறச்சேரியை மொற்சா போட்டது தெரியாமலிருந்ததே இன்றைக்கு நன்றாய் தெரிந்தது. அதைப்பார்த்து நம்முடையவர்கள் போடுகிற பீரங்கியும் படுது, போம்பூம் விழுந்து கலைத்துப்போடுகிறது. கலைத்துப்போட்டாலும் சண்டித்தாபோழி மறுபடி கொத்தளத்தை மண்போட்டு முஸ்தீது பண்ணிக்கொண்டிருக்கிறான். அவர்கள் மனுஷர்களிலேயும், நம்முடையவர்கள் போடுகிற பீரங்கியினாலேயும், தீக்குடுக்கையினாலேயும் வெகு மனுஷருக்கு சேதமுண்டு. இதல்லாமல் நம்முடைய சேக்கு அப்துலாயிமான் தாலுக்கு சிப்பாய்கள் இன்று ஐந்து நாள் துவக்கி ராமார் முந்நூறு சிப்பாய்களும், அறுபதெழுபது குதிரை சுவார்கள் இருக்கிறவர்களும் புறப்பட்டு வடவண்டை நயினியப்பிள்ளைசாவடி மட்டுக்கும் போனோமென்று சொல்லிப்போனோமென்று எண்பித்து குண்டுசாலை

டிருக்குள்ளாக போயிருந்துக்கொண்டு முத்தாலுப்பேட்டை யிலே அவரவர் கலகமென்று புதையல் போட்டுவைத்த தவலைகள், சொம்புகள், உலக்கை, உரல், எந்திரங்கள், கட்டில், புடவை, சீலைகள், பெட்டிகள், தேக்கு உத்திரங்கள், செம்மரத் துண்டு, செம்மரத்தூண்கள், பூவரசம் பலகைகள், பூவரச உத் திரங்கள், வேப்பம் பலகைகள், வேப்பம் உத்திரங்கள், தென்னை மரங்கள் கொஞ்சனஞ்சமிருந்த பணம், காசு உடமை, தட்டு முட்டுகள், நெல் முதலாகிய நவதானியங்கள் குழிப்போட் டிருந்ததுகளையெல்லாம் இந்த சிப்பாய்களும், குதிரை சுவார்கள் மதாம் துய்ப்ளேக்ஸ் வேகு சேவகரென்று இருபதுபேர் கூட போகிறவர்களும் ஏகத்துக்கு இவர்கள் காலத்தாலே கோட் டைக்குள்ளே வரும்போது பிரதி தினமும் மேலெழுதப்பட்ட தினுசுகளை அவரவர்கள் சரிபோலபடிக்கெல்லாம் கொள்ளை யிட்டுக் கட்டிக்கொண்டு வருவதே வேலையல்லாமல் மற்றபடி அவர்கள் வெளியே போய் சண்டைப்பண்ணுகிற சேதி கேட் டதுமில்லை பார்த்ததுமில்லை. முத்தாலுப்பேட்டை குடிகள் மேலெழுதப்பட்ட தானியம் முதலான தினுசுகள் இவர்கள் எடுக்கிறதை நாலைந்து பேர் போய்க் கேட்டதின்பேரிலே அவர் களை வேகுக்காரரென்று பிடித்துக்கொண்டுபோய் மதாம் துய்ப்ளேக்ஸ் அண்டையிலே விட்டவிடத்திலே அவள் அவர் களை பேருக்கு நூறு நூறு அடி அடித்து கழுத்திலே சங்கிலி யைப் போட்டு இவர்கள் சொல்லிக்கொள்ளுகிற மறைபாட்டை கேளாமல் மண் சுமக்கச் சொல்லிவிட்டபடியினாலே மற்ற பேர்கள் என்ன போனாலும் போகுது இங்கிலீஷ்காரன் வந்து எடுத்துக்கொண்டால் நாம் கேழ்க்கப்போகிறதில்லையே அப்படி யென்று எண்ணிக்கொண்டு சும்மாயிருக்கிறதே உத்தமமே யல்லாமல் அல்லவென்று உடமை போகுதென்று வாயைத் திறந்து சொன்னால் உடமை போகிறதுமல்லாமல் சரீரத்துக்கு வேதனையும் வந்து அடிமைப்பட்டு, விலங்குப் போட்டுக் கொண்டு மண் சுமக்கவேண்டியல்லோ பிராப்தமாகுது. ஆன படியினாலே இந்தப்பேச்சை பேசுகிறதல்லவென்று அவரவர் சும்மாயிருந்துவிட்டார்கள். இப்படிப்பட்ட கஸ்தி சுவாமி பிரப்ராதியாய் இருக்கப்பட்டவர்களுக்குக்கூட கட்டளை யிட்டது எது நிமித்தியமோ நான் அறியேன். இப்படி அகா ரணமாய் நடக்கப்பட்ட அநீதிகளை சுவாமியினுடைய ஆக்கினை யென்று எண்ணினேனல்லாமல் மற்றபடி வேறே விதமாய் எண்ணவில்லை.

இதல்லாமல் கலகத்திற்குப் பட்டணத்திலே இருக்கிறவர்கள் வெளியே போய் இருக்கிறபடியினாலே வெளியே போய் இருக்கிறவர்கள் சேதி இவ்விடத்திலே இருக்கிறவர்களுக்குத் தெரிகிறதற்கும் இவ்விடத்திலே யிருக்கிறவர்கள் சேதி வெளியே இருக்கிறவர்களுக்கும் தெரிகிறதற்கும் மனுஷர் போக்கு வருத்தா யிருக்கிறவர்கள் மூசியே துய்ப்ளேக்ஸ் பெண்சாதி வேகுக்காரர் நாங்கள் வெளியே போய் இங்கிலீஷ்காரர் வேகுக்காரர் இந்த வட்டங்களிலே வந்துப்போக இருக்கிறவர்களைப் பார்த்துப் பிடித்துக்கொண்டு வரப்போகிறோமென்றும் சிப்பாய்கள் குதிரை சுவார்கள் ராமார் (இராத்திரியில்) வெளியே போகிறவர்களுக்கு இங்கிலீஷ்கார மனுஷர் அங்கங்கே தாணியங்களிருக்கிறவர்களையும் போக்குவரத்தாயிருக்கிறவர்களுடைய நிலவரம் விசாரித்து சொல்லத்தக்கதாக போகிறோமென்று இருபது முப்பது பேர் வெளியே புறப்பட்டு முத்தியாலுப்பேட்டை முதலான இடங்களெல்லாம் கொள்ளையிட்டுக்கொண்டு குதிரைகள், சிப்பாய்களுடனே கூட வரும்போது முன்னும் பின்னுமாய் வரும்போது நம்முடைய ஊர் குடிகள் அவாளவாள் தட்டுமுட்டு கொள்ளைப்போகுதென்று பார்க்கப் போகிறவனையும் வெளியிலே அவரவர்களிருக்கிற யோக க்ஷேமங்கள் அறியத்தக்கதாகப் போக்குவரத்தாயிருக்கிறவர்களையும், இங்கிலீஷ்காரர் வேகுக்காரர் வேகுக்காரரென்று பிடித்துக்கொண்டுவந்து அம்மாளண்டை விட்ட மாத்திரத்தில் தன் வேகுக்காரனாயிருக்கப்பட்ட திருட்டுப் பசங்கள் பேச்சை வேத வாக்கியமாயெண்ணிக்கொண்டு இது முன்னிலையாய்தான் வெகுபேரை அடிக்கவும், காதறுப்பிக்கவும் விலங்குப்போட்டு மண் சுமக்கச்சொல்லவும், தன்னுடைய அதிகாரத்திற்கு பட்டணத்திலே யிருக்கிற ஜனங்களெல்லாம் நடுநடுங்குகிறதே ஒரு சந்தோஷமும், உற்சாகமும், மேலிடத்தக்கதாக இதனாலே மகத்தாகிய பாவம் சம்பவிக்குதென்கிற தோற்றமில்லாமல் பட்டணத்துக்குள்ளே தன் அதிகாரமே இல்லாமல் மற்றொருத்தன் வேறே துரைத்தனம்பண்ணி அவன் அதிகாரம் நடக்கிறதென்று சமஸ்த ஜனங்களுக்கும் தோற்றுகபடிக்கு அதிகாரம் பண்ணுகிறதுதானென்றும், சமஸ்த ஜனங்களும் அறியவேணுமென்கிற கருத்து எப்போதுமிருந்ததற்கு இப்போ சமயமென்று உத்தேசித்து நடத்துகிறபடியினாலே பிடித்துக்கொண்டு வந்தவர்களை எவ்விடம் யார் என்று பூரு

வோத்திரம்கூட விளங்காமல் பிடித்தபடியினாலே நூறடி இரு நூறடி அடிப்பிக்கிறது, காதறுக்கிறது, கழுத்துக்கு விலங்குப் போட்டு மண் சுமக்கச் சொல்லுகிறதும் இந்தபடி வெகுபேரை பொழுது விடிந்து அந்திமட்டும் இது வேலையா நடத்துகிற படிபடியினாலேயும் தமிழன் மதமென்று பேரில்லாமல் எல்லாம் சுவமதமாக்கவேணுமென்கிற புத்தியினாலே பிராமணாள், கோமுட்டிகள், வெள்ளாமூர்கள், இப்படிப்பட்டவர்களிருக்கிற வீடுகளிலேயெல்லாம் பறயரைப்போய்க் குடியிருக்கச்சொல்லி அவர்கள் போய் குடியிருக்க அந்த வீட்டுக்காரர் பறயர் வரலாமாவென்று தரத்தினால் அவர்கள் போய் அம்மாளுடனே பிராது சொல்ல, அம்மாள் அந்தவீட்டுக்காரரை அழைப்பித்து ஆக்கினை பண்ணுகிறபடியினாலே அவரவர்கள் வீடு போனாலும் போகுது, தட்டுமுட்டுகள் போனாலும் போகுது, என்ன போனாலும் போகுது. இந்த வேளைக்கு மானம் மாத்திரம் காப்பாற்றிக்கொண்டால் போதுமென்று அவர்கள் பயந்து, நடுங்குகிறதை நான் என்னவென்று காகிதத்திலே எழுதப் போகிறேன். பட்டணத்துக்குள்ளே இருக்கிற ஜனங்கள் சொல்லிக்கொள்ளுகிறதென்னவென்றால்: கலியுக அந்தியத்திலே சகல மதங்களும் கெட்டுச் சங்கரசாதியா வர்ணாஸ்ரம தர்மங்களில்லாமல் போகுமென்கிற சொல் இப்போ புதுச்சேரி பட்டணத்திலே மதாம் துய்ப்ளேக்கனுடைய தயவினாலே இப்போ தானே கலியுக அந்தியம் பார்த்தோமென்று வெகு ஜனங்கள் சொல்லிக்கொள்ளுகிறார்கள். இந்தபடி பட்டணத்துக்குள்ளே வர்ணாஸ்ரமங்கள் தப்பியும், சகல மதங்களும் போய் சங்கர சாதியாயிருக்கவும், சுவாமிக்குச் சித்தமிராவிட்டால் முசியே துய்ப்ளேக்கனுடைய அதிகாரம் நின்று மதாம் துய்ப்ளேக்ஸ் அதிகாரம் பண்ணத்தக்கதாக புறப்படமாட்டாளென்றும் தோத்துது. இப்படிப்பட்ட அநியாயங்கள் பட்டணத்திலே நடக்கத் தக்கதாக அவனவன் தான் தான் துரையாய் அதிகாரம் செலுத்துகிறதும் பட்டணத்திலே காப்பிரிகள் சிப்பாய்கள், வெள்ளைக்காரர் சட்டைக்காரர் அவரவர் சரிபோனபடிக்கு அம்மாள் வேருக்காரரென்று நூறுபேர்கூட வீடுகளிலே பூரவும் கொள்ளையிடவும், பிராமணாள் கோமுட்டிகள் வெள்ளாமூர்கள், செட்டிகள் இப்படிப்பட்டவர்கள் வீடுகளிலே பறயர்போய் குடியிருக்கவும் ஸ்திரீ ஜனங்களை பலவந்தமாய்க்

கெடுக்கவும் இதுகளுக்கு தாது பிராது யில்லாமல் போன தென்னவென்ருல். [ ]

மற்றபடி அவனவன் காபிரி சட்டைக்காரன், வெள்ளைக்காரன், கோடாலி, மண்வெட்டி எடுத்துக்கொண்டு வருவதும் தெருவிலே யிருக்கிற தென்னைமரங்களை வெட்டுகிறதும் குருத்தெடுத்துக்கொள்ளுகிறதும் (மரங்களை) போட்டுவிட்டுப் போகிறதுமல்லாமல் மரத்தை வீட்டின்பேரிலே தள்ளிப் போட்டுப் போகிறதினலே அது வீட்டின்மேலே விழுந்து சேதப்படுத்துவதும் அப்படி சிறிது வீடுகள் சேதப்பட்டுப் போனது. தன்னரசு நாடாயிருக்கிறது இப்போ புதுச்சேரி பட்டணம் முசியே துய்ப்ளேக்ஸ் குவர்னதோரிடமில்லை. மதாம் துய்ப்ளேக்சாம் காட்டும், மதாம் துரைத்தனம் பண்ணுகிருள். அதினல் அவள் மனுஷர் ஊரிலே அவரவர் வீட்டிலே புகுந்துக் கொள்ளையிட்டால் அம்மாள் மனுஷரை ஒருத்தரும் பேசப் போகாது அல்லவென்று எவனுவது இங்கிலீஷ்காரனல்லவே வந்து கொள்ளையிடுவானென்று பத்திரம் பண்ணினேம், நீங்கள்தானே கொள்ளையிடுகிறீர்களாவென்று கேட்டால் அவனைக் கட்டாயக்கட்டுகிறதும் வேகுக்காரனென்று கொண்டு போய் அம்மாளண்டையிலே விடுகிறதும் அவன் காதறுக்கிறதும், நூறு இருநூறு அடி அடிக்கிறதும் கழுத்துக்குக் காலுக்கு சங்கிலியை ரெவ்வெண்டுபேருக்குப் பின்னலாய் மாட்டுகிறதும், மண் சுமக்கவிடுகிறதும், இப்படியாக இருக்கிற படியினலே எவர்களும் தன்னைத்தான் தப்பித்துக்கொண்டால் போதும் என்ன போனலும் போகட்டுமென்று இருக்கிருர்கள். ஆனபடியினலே ஒருக்கால், எப்போ பிராது இல்லையென்று கண்டார்களோ சரி போனவன் சரி போனபடிக்கு எல்லாம் கொள்ளையிடுகிருர்கள். வந்து செட்டிகள், வீடுகளிலே, கோமுட்டிகள் வீடுகளிலே வந்து குடி யிருக்கிருர்கள். அந்த வீட்டுக்காரர் ஏண்டா பறயா இப்படி எங்கள் வீட்டிலே குடி யிருக்கலாமாவென்று கேட்டால் அவனை அடிக்கிறது மல்லாமல் அவனை அம்மாளண்டைக்குப் போவோம் வாருங்கள் என்று இழுக்கிருர்கள். இந்தபடிக்குப் பட்டணத்

---

[ ] பல விஷயம் ரெட்டித்து எழுதியிருக்கிறபடியால் அதுகள் நீக்கப்பட்டது.

திலே நடக்கிற அலங்கோலத்தைக் காகிதத்திலே என்ன வென்று எழுதப்போகிறேன். இப்படி அலங்கோலம் வந்த காரியமென்ன? பிரபுவுக்கு இப்படி பட்டணத்துக் காரியத்தை சரிபோனவன் சரிபோனபடிக்குக் கொள்ளையிட்டுக்கொள்ள சொல்லிச்சொல்ல புத்தி வந்ததென்னவென்றால்: இவர் சுபாவமே யிப்படி; அது எனக்கு நன்றாய் தெரியும். இப்படி துரைத்தனத்திலே இந்த கலாபம் வந்ததென்னவென்றால்: முன் அக்ஷய ஞு புரட்டாசி மீ 9உ (Septembre 1746) சென்னப் பட்டணம் இவர்கள் வாங்கி அந்தப் பட்டணத்திலுண்டான ஜனங்களெல்லாம் எப்படி பிராஞ்சுக்கார மனுஷர் போய்க் கொள்ளையிட்டு அவரவர்களெப்படி அந்தப் பட்டணத்தார் அலைந்தார்களோ அந்தபடிக்கு இங்கிலீஷ்காரன் வாங்கிக் கொண்டு அந்தபடிக்கு அவர்கள் கொள்ளையிட்டு இந்தப் பட்டணத்து ஜனங்கள் அலைந்தும் கொள்ளைக் கொடுத்து வலசை போயும் சேதப்பட்டு, கெட்டுப்போகவேணும். அதற்கு புதுச்சேரிக்கு கஷ்ட திசை மாத்திரமே யல்லாமல் நாசப்படுகிற தற்கு இல்லாதபடியினாலே இங்கிலீஷ்காரன் வசமாய் அந்த அநுபவம் இந்தப் பட்டணத்திற்கு இங்கிலீஷ்காரரைத்தொட்டு இல்லாததினாலே நம்முடையவர்களைத்தொட்டுத் தானே பட்டணத்திற்கு இந்த அவஸ்தையெல்லாம் சுவாமி கட்டளையிட்டா ரென்று எண்ணுகிறதுமல்லாமல் சுவாமிக்கு அவனெப்போது முன் சுபாவம் அளந்த நாழிகைக்கொண்டளப்பானென்று ஞயம் லோகப்ரசித்தமாய் இருக்கிறபடிக்கு அநேக விடத்திலே நடந்திருக்கிறபடியினாலே இது சமஸ்தமான ஜனங்களும் அறிந் திருக்கிறபடியினாலேயும், இதை நான் விஸ்தரித்து எழுதவேண் டியதென்ன? விவேகிகளா யிருக்கிறவர்கள் இதன்பேரிலே பார்த்துக்கொள்ளுகிறார்கள். அவ் விவேகிகளாயிருக்கிறவர் களுக்கு எழுதினாலும் தெரியப்போவதில்லை; ஆனபடியினாலே சூக்ஷமமா யெழுதினேன்.

மற்றபடிக்கு இன்று இராத்திரி பதினாறு குண்டு போட்டான். அந்த பதினாறு தீக்குடுக்கையும் [ ]

1748 ஆ. செப்டம்பர் மீ 20 உக்கு விபவ ஞு புரட்டாசி மீ 8 உ சுக்கிரவாரம்.

இற்றைநாள் காலத்தாலே இங்கிலீஷ்காரர் மேலண்டையிலே தெய்வநாயகசெட்டி சாவடியண்டையிலே இறங்கியிருக்

றவர்களுக்கும் நம்முடைய அல்லிகான் சமேத்து இருநூறு சிப்பாய்களும், குதிரை சுவார்களும் போனவிடத்திலே இவர் களுக்குமவர்களுக்கும் கை கலந்த சண்டையாய் அதன்பேரிலே நம்முடையவர்களிலே நாலுபேர் காயக்காரரும், இரண்டுபேர் சாவும் இரண்டு குதிரை சாவுமென்று சொன்னார்கள். அவர் களிலே தமிழன் தாட்டியும், அவன் சிப்பாய் சட்டமாய்ப் பொச்சயம் உயர்ந்தவனாயிருக்கிறான். அவன் குதிரையின் பேரிலேயிருந்து விழுந்தான். பின்னையும் நாலாறுபேர் விழுந் தார்கள்; பத்தைந்துபேருக்குக் காயம். அதன்பேரிலே குண்டு சாலையைவிட்டு, எல்லப்பிள்ளைசாவடியே முறிந்தோடினார்கள். அங்கே நாலு பீரங்கி வைத்திருந்தது. அதை இழுத்துவருவோ மென்று பார்த்தோம், அதற்கு மனுஷரில்லாததினாலே பீரங்கியை விட்டுப்போட்டு வந்தோமென்று சொன்னார்கள். இந்த சேதி அப்துலாயிமான் துரை கோட்டை மேலண்டை வாசற்படிவிட்டு வில்லியநல்லூர் வாசற்படிக்குப் போகவேணு மென்று முசியே சின்யோர் வீட்டுக்குநேராய் போகும்போது அப்துலாயிமான் சமேதாரர் வந்து சொன்னானென்று கணக்கு ரங்கப்பிள்ளை வந்து கபுறு சொன்னார். அப்பால் கோலக்கார னென்கிறவன் காரைக்கால் காகிதத்தை சிதம்பரத்து தபாலிலே கொண்டுபோய் கொடுத்து மறுபடி அரியாங்குப்பத்து வழியாய் நானும் மதராம் துய்ப்ளேக்குனுடைய சேவகன் ஒருத்தன் கனக ராயமுதலி தோட்டத்தண்டையிலே நின்றான். அவனுமென் னுடன்கூட வந்தான்; அவனும் நானுமிரண்டுபேரும் தெத்து வாசற்படியண்டையிலே வந்தவுடனே மாயே சிப்பாய்கள் துரையுடனே கொண்டுபோய்விட்டார்கள் யாரென்று கேட் டார். கேட்டவுடனே பிள்ளை காரைக்கால் தபாலுக்குக் காகிதம் கொடுத்து அனுப்பினார். கொடுத்துப்போட்டு வந்தே னென்று சொன்னான். அதற்கு துரை பிள்ளையண்டைக்குப் போய் கபுறு சொல்லென்று சொன்னார். அதன்பேரிலே உங்க ளண்டைக்கு வந்தேனென்று சொன்னான். நல்லது நீ வந்தாயே இங்கிலீஷ்காரர் கண்டு கபுறு என்னவென்று கேட்டதற்கு அவன் சொன்னது: தேவனாம்பட்டணத்திலிருந்து முப்பது நாற்பது பொதியிலே அரிசி போனதாகவும், அதற்கு மூன்று நாள் பெண்ணையார் தண்ணீர் நீச்சானபடியினாலே தேவனாம் பட்டணத்து மனுஷர் போக்குவரத்துக்கூட இல்லாமல் அரிசி

மத்தது இங்கிலீஷ்காரர் மசுக்கரையிலே யில்லாமல் வெருசாய் கஸ்தி பட்டார்கள். ஆறு தண்ணீர் வடிந்து நெல் முதலான பதார்த்தங்கள் போய் தண்டுக்கு சேர்ந்தது. அங்கே நேற்று பதிமூன்று காயக்காரரை எடுத்துப்போனார்கள் என்றும், இன்னுமேமெட்டு நாளிலிருந்து அப்பால் மழைகாலம் வருகிற படியினாலே கப்பல்களை எல்லாம் சமீபத்திலேதானே திருக்கோண மலை நக்கவரம் இந்த விடங்களிலே வைத்துக்கொண்டு மறுபடி தை மாத முதல் தேதியிலே வந்து சண்டை கொடுக்கிறோமென்று அந்தமட்டுக்கும் அரியாங்குப்பத்தை பலப்படுத்திக்கொண்டு அதிலே ஆயிரம்பேர் சொல்தாதுகளை வைத்துக் கொண்டு இருக்கச்சொல்லியும், இப்ப வந்த கோந்திரமிரால் மேஸ்தர் பொஸ்காவேன் தேவனாம்பட்டணம் துரைக்கு எழுதி அனுப்பினதாகவும், அதற்கு பதில் சேதி வந்தவுடனே கப்பல் காரர் வாங்கிப்போகிறதாகவும் சமஸ்த ஜனங்களும் சொல்லிக் கொள்ளுகிறதாய் வந்து சொன்னதுமல்லாமல் இங்கிலீஷ்காரர் தண்டிலே வெகு சேதமென்றும் கூலிக்காரரை மெற்ற அடிக்கிறார்களாம்; அதைத்தொட்டு கூலிக்காரர் மற்றபேர் போக்கு வருத்து இல்லை; மட்டாயிருக்கிறதாகவும், சேதி சொன்னான். இந்த சேதியை வீட்டிலே அதிகாலமே கேட்டவுடனே பழையது சாப்பிட்டு கோட்டைக்குப்போய் துரையுடனே எச்சரித்தேன் நல்லது நான் கொத்தளங்கள் வாசற்படி யெல்லாம் போய் விசாரித்துக்கொண்டு வருகிறேன் அந்த மட்டுக்கும் (இங்கே) இருவென்று (துரை) சொன்னார். நல்லதென்று புடவை பார்க்கிறசாலையிலே நானிருந்தேன். அப்பாலே துரையவர்கள் பதினேருமணிக்கு வந்தவர் வந்த உடனே போய் காண்பித்துக் கொண்டேன். அவர் புதுசாய் துரையிருக்கிற வீடு கட்டியும் கட்டாமலும் கிடக்கிறதே அந்த வீட்டிலே சொல்தாதுகளை விட்டு கொடிகளைக்கொடுத்து தொம்பைக் கூண்டுகளை பின்னச் சொன்னார்கள். அவர்களை சற்றேறக்குறைய தொம்பைக்கூண்டுகளை ஆக்கினார்கள். அதை பார்க்கப்போனாலே அவர்கள் யெங்களுக்கு இங்கே வேலைக்கு சரீர ப்ரயாசம்திர சாராயம் கொடுக்கவெணுமென்றுக் கேட்டார்கள்; அதற்கு சாராய முத்தாரமும் கொடுத்தார். குறவரிருந்து தொம்மைக்கூண்டு யெப்போது கட்டுகிறது அவர்களுக்கு நாள் கூலியாய் ஒரு பணம் கொடுப்பார்கள் அவர்கள் போதாதென்று ஒன்னரை பணம் கேட்டார்கள், (துரை) கொடுக்கமாட்டோமென்று சொன்னார்

கள் அதின் பிறகு சிறிதெல்லாம் குறவர் அந்த கூலிக்குத் தானே பண்ணினர்கள் அப்பால் கலகம் வந்த உடனே போய் விட்டார்கள். அந்த விசாரிப்பு முசியே பொச்சேத்து ஆனபடி யினலே அவர் இப்போ அஞ்சஞ்சுப்பணம் கொடுக்கிறேன் அமுப்பியென்று சொன்னர். வராதபடியினலே சொல்தாதுகள் கப்பல்களிலே சீர்மையிலே முடைகிறதுமுண்டாம். இதல்லா மல் அந்த சாடையை காண்பித்தால் சற்றே பார்த்தால் ஒரு ப்ரகாரமாய் நடத்துகிற வேலையானபடியினலே சொல்தாது களும் ஒரு விதத்திலே தொம்பைக்கூண்டு ஆக்குகிறதாய் தீர்த்துப்போடுகிருர்கள். அந்த சாடையைப் பார்த்துப்போட்டு துரை உள்ளே போய் வழுதாவூர் மீருஉசேன்கான் என்கிற கில்லேதார் முதலாயிருக்கப்பட்டவர்களில் இங்கிலீஷ்கார ருக்கும் மத்தத்துபண்ணுகிருர்களாம்; மெய்தானுவென்று கேட்டார். அதற்கு நான் சொன்னது: ஒருக்காலுமவர்கள் அப்படி மத்தத்து பண்ணுவார்களா பண்ணத்தக்கதில்லை. இங்கிலீஷ்கார மனுஷர் ஊருக்கூருக்குப்போய் புதுச்சேரியார் மனுஷரிருக்கிறவர்களைப் பிடிக்கிறதும் அந்த ஊரிலே இல்லை யென்ருல், அந்த கிருமத்தார் கையிலே ஸ்கையெழுத்து வாங்கு கிறதும் வாங்கின பிறகு பத்துபேர் ஐந்துபேர் ஒளிந்திருந்தவர் களை அப்பாலே போகச்சொல்லுகிறதும் இந்தபடிக்கு நடத்து கிருர்களிந்தபடிக்குத்தானே வழுதாவூரிலே வெகு ஜனம் போயிருக்கிருர்களென்று அவ்விடத்திற்கும் இங்கிலீஷ்கார மனுஷர் போய் கேட்டதற்கு நீ என் ஊரிலே வந்து கேழ்க்க நியாயமென்ன யிருக்கிறது. முன் பிராஞ்சுக்காரர் சென்னப் பட்டணம் மனுஷர் வந்தவர்களைக் கேட்டார்களா? சுற்றுபட்டிலே அந்த கிராமத்திலே மிரட்டுகிருப்போலே மிரட்டுகிருயாவென்று வெகு கோபம்பண்ணிப் போகச் சொன்னனென்கிற கபுறு கேழ்க்கப்பட்டதுமல்லாமல் பெரு முக்கலார் கிருமம் கோட்டைக்குப்பமென்று இருக்கிறது. அதிலே கொள்ளையிட்டு, அதிலே யிருந்த குடியானவர்களை இரண்டொருத்தரைக் காயப்படுத்தினதாய் சேதி கேழ்க்கப் பட்டது. இந்த பயத்துக்குப் பாதி அந்தந்த கிருமத்திலே இருக் கிற பேர்கள் தாண்டிவந்து நெல் அரிசி விற்கிறதும் மோர். பால் தயிர் முதலான சாப்பாட்டு திரவியமெல்லாம் விற்கிருர் கள். இதல்லாமல் கூலிக்கும் வேணுமென்றபேர் வந்து கூலிக்கு (வேலை) செய்கிறதேயல்லாமல் அந்த ஊரார் துலுக்கர்கள் உத்

தாரத்தின்பேரிலே வந்து செய்கிறவர்களல்ல. அந்த ஊர் எஜமான்கள் ஒருத்தரும் இவ்விடத்திலே யில்லை. அதுவும் நம்முடைய புதுச்சேரிக்கு நாலு நாழிகை வழி மாத்திரத்துக்குள்ளே இருக்கப்பட்ட ஜனங்களேயல்லாமல் மற்றபடி வேறே இல்லை. இதல்லாமல் முத்துமல்லா ரெட்டி என்கிறவன் மாத்திரம் இங்கிலீஷ்காரர் இறங்கி யிருக்கிறவனுக்கு தானிய தவசம் ரஸ்துக்கள் தாஷியில்லாமல் அனுப்புகிறதுமல்லாமல் அவன் மூன்னூறுபேர் ராணுவமனுப்பி அவர்களுக்கு மத்தத்து பண்ணிக்கொண்டு வருகிறதுமல்லாமல் நம்முடைய புதுச்சேரி மனுஷர்களை எங்கே கண்டால் அங்கே கொள்ளையிடச் சொல்லி அவனுட்டுத் தனத்தின் கீழே சிறிது பாளையக்காரரென்று போக்கிரி, தலையாரிகளவர்களை விட்டு சுலுமிபண்ணுகிறது. தன் கிருமங்களெங்கே உண்டோ அந்த கிருமங்களுக்கெல்லாம் எழுதி அனுப்பி புதுச்சேரி மனுஷர் யார் வந்தாலும் கொள்ளையிட்டுக்கொண்டு தரத்திவிடச்சொல்லி கிராம, கிராமங்களுக்கும் எழுதியனுப்பினான்.

இதல்லாமல் மாத்தூர் நயினர் ஒருத்தன் லட்சுமண தந்திரி என்கிறவன் நம்முடைய காலாப்பேட்டண்டையிலே மாத்தூர் என்று அவனுக்கு கிராமமிருக்கிறது. அவனுடைய காடெல்லாம் கும்பினியார் கரி கால்வாய்க்கு வெட்டிப்போட்டார்கள். அவன் எப்போதும் காலாப்பேட்டையிலே துலுக்கருக்கும், ரெட்டிக்கும் பயந்திருக்கிறது. அவனைப் பிடித்துப்போய் அடிக்கிற அடியும் பண்ணுகிற கஸ்தியும் மிதமில்லை. அவனை அடிக்கிற போதெல்லாம் புதுச்சேரியார் ஆஜராவிலே யிருந்துக்கொண்டு மிரட்டிக்கொண்டு இருந்தாயே! இப்போ புதுச்சேரியைப்பிடித்துக்கொண்டு இங்கிலீஷ்காரன் கொடியைப்போட்டு குவர்னதோர் முதலானபேரையெல்லாம் காவல் வைத்துக்கொண்டானே இப்போ அந்த பிராஞ்சுக்காரர் சூத்துக் கிழிந்துபோய்விட்டதே அவனிப்போ உனக்கென்ன மத்தத்து வரப்போகிறான், இன்னும் பிராஞ்சுக்காரனுக்கும், புதுச்சேரியாவென்றும், பிராஞ்சுக்காரனை இந்த ராஜ்யத்திலே இருக்க ஒட்டுகிறதில்லையென்று இப்படி நானுவிதமாய் பேத்துப்பேத்துப் புரட்டிப் புரட்டி அடிக்கிறார்களாம். அவனொருத்தன் தவிர மற்றபேர் வெளி சீர்மையிலே இருக்கிறபேரிலே ஒருத்தராகிலும் உங்களுக்கு எதிரியாய் நடக்கிறவர்களில்லையென்று சொன்னதற்கு

நல்லது ரங்கப்பிள்ளே சுவாமியினுடைய கடாக்ஷத்தினலே பத்துநாளேயிலே கலாபம் தீர்ந்து அவனே ஜீவனுடனே வைக்கத் தேவையில்லே. இந்தப் பழி பிராஞ்சுக்காரனுயிருக்கிறவன் எவனுயிருந்தாலும் பழிக்குப்பழி வாங்காமல் போவதில்லே. நானிருந்தால் (உயிருடன்) நடத்தப்போகிற காரியம் வேறே அது இப்போ நான் சொல்லுகிறதில்லே. நடத்தின் பிற்பாடு நீயறிவாயென்று அது எத்தனே பிளப்பாய் சொல்லவேணுமோ அத்தனே பிளப்பாய் சொன்னுர். அப்படி நடத்தாவிட்டால் பிராஞ்சுக்காரருக்கு அதைவிட அப்பிரதிஷ்டை வேறேயில்லே. பார்த்த கணக்காய் இருக்காது. இனிமேலும் நம்முடைய காரியங்களிலே ஒருத்தர் தப்பிதமாய் நடந்துக்கொள்ள பயப் படுவார்கள். பிரஞ்சுக்காரர் பழிவாங்காதே போகார்கள் என்றெவர்களும் நம்முடைய காரியங்களிலே வித்தியாசமாய் நடந்துக்கொள்ள பயப்படுவார்கள்.

நபாபு மாபுசுகான், அன்வர்த்திகானேப்போலே ஒத்தவர் கள் இங்கிலீஷ்காரன் லக்ஷம் ரூபாய்க்கு சிர்மையிலிருந்து வெகுமானம் வந்திருக்கிறது. தண்டுக்குச் செல்லுமென்கிற சிலவு கொடுக்கிறேம். இதுவுமல்லாமல் லக்ஷ வராகன் ரொக்கம் கொடுக்கிறேமென்றும், அழைத்ததற்கு பிராஞ்சுக்காரர்கள் மெற்ற பொல்லாதவர்கள் நான் மத்தத்து வருகிறதில்லே என்று நமக்கே அநுகூலமாயிருக்கும்போது உங்கள் செருப்பு எடுக்கக் கூட யோக்கியனல்லாதவன் சத்துருக்களுடனே கூடிக்கொண்டு இந்த வேளேயிலே இப்படி நடத்தினுன். அவனுடைய குண் டையை (மாரை) நானென்னவென்று சொல்லுவேன். ஆனல் நிர்மூலமாய் கெட்டுப்போவதற்கு ஏஷியமில்லாமல் அவனுக்கு இந்த புத்திவராதென்று எண்ணிக்கொண்டேனென்று எப்படி சொல்லவேணுமோ அப்படி சொன்னதற்கு பிராஞ்சுக் காரருக்குப் பிறந்தவனுனல் அவனுக்கேற்ற புத்தி செய்யாதே விடானென்று சுருக்காய்ச் சொன்னேன்.

அதன்பேரிலே இந்தமட்டுக்கும் போதுமென்று நபாபு மாபுசுகானுக்கும், அன்வர்த்திகானுக்கும் உபசாரமாய் யோக க்ஷேமம் விசாரிக்கிற சாடையாய் எப்போதும் எழுதுகிற படிக்கு உபசாரமாய் எழுதினுலது மெத்த மகா பிரிய மாகவுமிருக்கும். உங்களுடைய தைரியமும் மெற்ற பிரகாசிக்கு

மென்று சொன்னதற்கு மெய்தானென்றெடுத்துக்கொண்டு எப்போதும் ஒரு மாசத்துக்கொருதரம் காரியமில்லாமலிருந்தாலும் உபசாரமா யெழுதுகிற வாடிக்கையுண்டே அந்தபடிக்கு எழுதி வைக்கிறேனென்று இந்தக் காகிதத்தைக் கொண்டுபோகிறதற்கு மூன்றுபேர் வெளியே போவதற்கு வாசற்படிக்கு ஒரு ஒடுதி ஒன்றெழுதிக்கொடுக்கச்சொல்லி வாங்கிக்கொண்டு துரை கையிலனுப்பிவித்துக்கொண்டு புறப்பட்டு வரும்போது அங்கே முசியே மேநும் முசியே புறுத்தும் பேசியிருந்தார்கள். என்னைக் கண்டழைத்து சொன்ன சேதி என்னவென்றால்: நீயும் பின்னை ஒரு மனுஷனும் இரண்டுபேராய்க் கூடிக்கொண்டு துரைக்கு கபுறுகள் தப்பிதமாய்ச் சொல்லி சொல்லி இங்கிலீஷ்காரர் வந்து ஊரை வளைத்துக்கொண்டு எங்கள் தலையெல்லாம் வெட்டத்தக்கப் பண்ணிவைத்தீர்கள். இந்தமட்டுக்கும் இங்கிலீஷ்காரன் வாரதில்லை வாரதில்லை என்று சொல்லி ஊரைவந்து வளைத்துக்கொண்டானே அவனுக்கு பலனில்லை இல்லையென்றும் சொல்லியும் போய்விடுவான் போய்விடுவான் என்று சொல்லியும், ஊரை ஒழித்துப் போடுகிற யோசனைபண்ணி இருக்கிறார்கள் என்று முசியே மேர் சொன்னதற்கு நானிருந்துக்கொண்டு நானிந்த வேகு சமாசாரம் சொல்லுகிறது விட்டுப்போட்டு எட்டு மாதமானது அறியீராவென்று கேட்டதற்கு மெய்தான் அறிவேன் இப்போ நீ எதற்கு அந்தப் பேச்சை சொன்னாய் என்று கேட்டார். ஊரிலே எவனுகிலும் வந்து சொல்லச்சொன்னபேச்சை நான் சொன்னேனென்று சொன்னதற்கு அது மெய்தான் சொல்ல வேண்டியதுதானென்று மதாம் துப்ளேக்சு பட்டணத்துக்குள்ளே பண்ணுகிற அனியாயத்தை கொவர்னதோருடனே நீ சொல்லப்போகாதாவென்று கேட்டார்கள். கோன்சேலியேர் இருக்கிற நீங்கள் இப்படி பயப்படும்போது நான் என்னசொல்ல போகிறேன் என்று சொல்லிப்போட்டு வரும்போது ஒரு திரகோம் இங்கிலீஷ்காரனண்டையிலிருந்து ஓடிவந்துவிட்டான்; அவன் சாதி அல்மான் அவனை வைத்துக்கொண்டு இங்கிலீஷ்காரனுடைய தண்டு சமாசாரமெல்லாம் கேட்டதற்கு அவன் சொன்னது நானிருந்தமட்டுக்கும் கேட்ட சேதிமாத்திரம் யெழுதுகிறேன் அவன் சொன்னது ஆயிரத்தரநூறு சொல்தாதுகளிவ்விடத்துக்கென்று வந்தவர்களிதல்லாமல் கப்பலுக்கு கப்பல் இருநூறுபேர் வீழ்க்காடு கரையிலே இறக்குகிறான்,

நாங்கள் குதிரைக்காரர் எழுபதுபேரிருக்கிறோமென்று சொன்னான். இதல்லாமல் முன் தேவனாம்பட்டணத்திலே இருந்த சொல்தாதுகள் பொம்பாய், தலைச்சேரி இந்த விடங்களிலே இருந்துவந்த சொல்தாதுகளும் என்று சொன்னமாத்திரத்திலே உனக்கு இங்கேயும் திரகோம் ஒப்பிசியேல் உத்தியோகம்கொடுக்கிறோமென்று முசியே தோத்தேல் திரகோமுகளுக்கு கப்பித்தானானபடியினாலே அவன் வசம் பண்ணி ஒபிசியேல் உத்தியோகம் பகலைக்குமேல் கொடுக்கிறோமென்று துரை சொன்னார் அதன்பேரிலே நான் வீட்டுக்கு வந்தேன் அப்பால் என்ன நடந்ததோ தெரியாது.

இற்றைநாள் மூன்று சொல்லாதுகள் இங்கிலீஷ்காரர் தண்டுக்கு ஓடிப்போனார்கள். அதிலே இரண்டு பிராஞ்சுக்காரனும் ஒருவன் ஒலாந்தேக்காரனும் என்று சொல்லிக்கொண்டார்கள். இற்றைநாள் நீக்குடுக்கை மேலண்டையிலிருந்து போடத் துவக்கினான். வழுதாவூர் வாசற்படி மதில்களுக்கு அப்புறமிப்புறமும், எழுபத்தொன்பது குண்டு விழுந்தது ஒருத்தருக்கும் காயமில்லை.

*1748* ஆ. செப்டம்பர் மீ *21* உக்கு விபவ ஞு புரட்டாசி மீ *9* உ சனிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே சிப்பாய்கள் வெளியே போய் சண்டை கொடுக்கவில்லை. நேற்று துலுக்கருக்கு 27 தாரிக்கு என்று ஆகாததினம் என்று துரையுடனே அப்துலாயிமான் முதலானபேர் போய் சொல்லிக்கொண்டபடியினாலே மோக்கூப்பர்ச்சுது; ஆகையினாலே இற்றைநாள் போய் சண்டை கொடுக்கவில்லை. நான் கோட்டைக்குப் போவதற்கு முன்பே காரைக்கால் தபாலுக்குப்போயிருந்த இரண்டுபேர் மலையப்பன் சேவகர்கள் காகிதத்தைச் சிதம்பரத்து தபாலிலே கொடுத்துப் போட்டு வந்து சொன்ன சேதி என்னவென்றால்: சிதம்பரத்து தபால் காகிதம் இரண்டு மூன்று காகிதங்கள் புதுச்சேரிக்கு வந்ததை வழி நடக்கவில்லையென்று திரும்பியும், காரைக்காலுக்கு அனுப்பிவிட்டோமென்று சொன்னார்கள்; என்று மிதமில்லாமல் தஞ்சாவூரார் அடமான கிராமங்களை ஒப்பித்துப் போடச்சொல்லி ஆயிரம் குதிரைக்காரர்களும், சிப்பாய்களும்

காரைக்காலண்டையிலே இறங்கியிருக்கிருர்கள் என்றுமதற்கு காரைக்காலிலே இருக்கிற ழசியேரீஷ் புதுச்சேரியை இங்கிலீஷ் காரர் பிடித்துக்கொண்டால் அப்போ கொடுக்கிறதேயல்லாமல் அதற்கு முன்னே கொடுக்கப்போகாதென்று சொல்லிக்கொண்டு வருகிருனென்றும் சொன்னதாய்ச் சொன்ஞர்கள். அப்பால் வழிகளிலே என்ன சொல்லிக்கொள்ளுகிருர்கள் என்று கேட்டால் புதுச்சேரி பிடிப்பட்டுப்போனதாகவும் அதற்குமேலவன் சரிப்போனுப்போலேபிதத்துகிறதுமாய் சொன்ஞர்கள். அப்பாலிந்த ஆளை நீங்களேது கூட அழைத்துவந்ததென்று கேட்டதற்கு தடி அருணுசலசெட்டி பெண்சாதி, பிள்ளைகள் திருவிதி பண்ணுருட்டியிலே இருக்கிருர்கள். அவர்களுக்குப் புதுச்சேரி தடி அருணுசலசெட்டி சாப்பிட்டுத் தெருவிலே உலாத்திக் கொண்டிருக்கும்போது குண்டு வயிற்றிலே பட்டு வயிறு பூரிப் போய் செத்துப்போனதாய் ஊர்சித கபுறு சொன்னதின் பேரிலே அவர்கள் சாவுக்கு என்னயென்ன அங்கமாய் நடத்த வேணுமோ அந்தபடிக்குத் துக்கம் கொண்டாடி அப்பால் சாயுத்திக்காரனைபடியினலே மோக்ஷ விளக்குமெடுத்துத் தீர்த்துப்போட்டு அவர்கள் துக்கத்துடனே இருக்கும்போது நாங்கள் சிதம்பரத்திலேயிருந்து திருவிதி பண்ருட்டி வந்தோம். அங்கே அருணுசலசெட்டி மனுஷன் பொன்னனென்கிறவன் எங்களைக் கண்டு நீங்கள் புதுச்சேரியல்லவா என்று கேட்டான். ஆம் கலகத்துக்கு வலசை வந்துவிட்டோமென்று சொல்லிப்போட்டு, அப்பால் நாங்கள் வருவதாயிருக்கும்போது தடி அருணுசலசெட்டியைக் கண்டீர்களா? நீங்கள் என்று புறப் பட்டீர்களென்று கேட்டார். நாங்கள் புறப்பட்டு நாலைந்து நாள் ஆனது. நாங்கள் புறப்படும்போது ஆனந்த ரங்கப்பன் அண்டையிலே கும்பினீர் வர்த்தகர்களும் தடி அருணுசல செட்டியுங்கூட வந்து பேசிக்கொண்டிருக்கும்போது நான் கண்டேனென்று சொல்ல, அதன்பேரிலே அவர்கள் அடமானங்கள் கேட்க அதுகளுக்கெல்லாம் சாதகங்கள் சொல்ல, அதன்பேரிலே அவர்கள் கேட்ட கபுறுகளுக்கு இவன் சொன்ன நாளுக்கும் வித்தியாசமானபடியினலே இவர்கள் பேச்சு மெய் யென்று அவர்கள் மனது தாபந்தீர்ந்து எங்களுக்கு சிறிது ஆசை வார்த்தைச் சொல்லி மெய், பொய் என்று அறிந்துவரச் சொல்லி எங்கள் பிறகே இந்த ஆளையுங்கூட்டி அனுப்பி வைத்தார்களென்று சொன்ஞர்கள். அதன்பேரிலே அந்த

ஆளை கேட்டதற்கு கருமாந்திரமுமாய்போய் அவர்கள் மெய்யா பொய்யாவென்று என்னைப் போய் அறிந்துவர சொன்ன சேதி மெய்யென்று சொன்னதின்பேரிலே பின்னை ஏதாகிலும் சேதி உண்டாவென்று கேட்டதற்கு விழுப்புறத்தை வந்தோம்; அங்கே ஐன்னூறு குதிரைக்காரர்களும் துலுக்கர்களும் வந்திறங்கினுர்கள். கிராமங்களெல்லாம் கொள்ளையிடுகிறுர்கள் என்று அவர்கள் எங்கும் சோராவரி பண்ணுகிற படிக்கு நபாபுசாயபு அவர்கள் அனுப்பினதாய் சொன்னுர்கள் யென்று சொன்னுர்கள். அது மெய்யா நீங்கள் பார்த்தீர்களா வென்று கேட்டதற்கு மெய்தான் நாங்கள் குதிரைக்காரரை பார்த்தோம் என்று சொன்னுர்கள். ஐன்னூறு குதிரைகளும் இல்லாவிட்டால் இருனூறு குதிரைகளாகிலுமுண்டு என்று தோணுது. அப்பாலந்த சேதியெல்லாம் கேட்டு கோட்டைக்குப்போய் துரையவர்களண்டையிலே தடி அருணுசலசெட்டி சேதி தவிர மற்ற சேதியெல்லாம் சொன்னேன். அதற்கவர் சிறிதுபேரைவிட்டு கிராமங்களை கொளுத்தச்சொல்லு அதன் பேரிலே இங்கிலிஷ்கார மனுஷர் கொளுத்துகிறுர்களென்று நபாபு அண்டையிலே பிராதுகள் போமென்று சொன்னுர். ஆனல் வெளியே போவதற்கு மனுஷர்களுக்கு வாசற்படிக்கு ஒடுதி யெழுதி கொடுமென்று கேட்டதற்கு ஆறுபேர் வெளியே போவதற்கு கடுதாசி எழுதிக்கொடுத்தார். அந்தக்காகிதத்தை வாங்கிக்கொண்டு புடவை பார்க்கிற சாலையிலே வந்தேன். அதற்கு மேற்கே இங்கிலீஷ்கார மனுஷர் போடுகிற போம்பு மூலை கொத்தளத்தண்டையிலே இருக்கிற சேஷாசலசெட்டி தோட்டத்திலேயும் இப்புறமிருக்கிற வாணியத்தெருவிலேயும் ஐந்தாறு தீக்குடுக்கைகள் வந்து விழ்ந்ததென்றும் நம்முடைய குஞ்சு குழந்தைகள் எம்பெருமான்பிள்ளை வீட்டிலே யிருப்பதற்கு பயமாயிருக்கிறது மற்றப்படி வித்தியாசமாய் இருக்கிற வாணியத்தெருவிலே விழுகிறபடியினலே ரொம்ப பதருகிறுர்களென்று ஆறுமுகம் வந்து கபுறு சொன்னுன். ஆனல் மீராப்பள்ளியைப் போய் முன் சானுர குப்பன் வீட்டை விசாரித்து வைத்தோமே இன்னுமதற்கு சமீபமாய் இரண்டொரு வீடுகளை விசாரித்துப்போட்டு அப்பால் குஞ்சு குழந்தைகளை மீராவெளிக்கு அனுப்பலாமென்று யோசனை பண்ணிக்கொண்டு மீராவெளிக்கு சின்னது முதலினையயும்

மதனந்தபண்டிதரையும் அழைத்துக்கொண்டு மீரர்வெளிக்குப் போனார்கள். பிச்சைக்குப்பன் வீடு இரண்டும் கட்டுக்காரன் வீடொன்றும் நம்முடைய குஞ்சு குழந்தைகளுக்கும், படே சாயபு வீட்டுப் பெண்டுகள் பிள்ளைகள்கூட இருக்கிறதற்கும் இடம்கூட பார்த்துக்கொண்டு அப்பால் வரவேணுமென்று திரும்பினவுடனே ஒரு சேவகன் வந்து சொன்ன சேதி யென்னவென்றால்: ஒரு தீக்குடுக்கை அரும்பாத்தைபிள்ளை தெருவிலே கட்டியிருந்த மாடியின்பேரிலே விழுந்து மாடிவுருத் தெரியாமல் சேதப்பட்டு போனதென்றும் அந்த கபுறு மதாம் துய்ப்ளேக்சுக்கு நம்முடைய வீட்டிற்கெதிரிலே இருக்கிற பாதிரி கோவிலிலே இருந்தவர் கேட்டு அந்தக்ஷணமே கூண் டின்பேரிலே ஏறிக்கொண்டு கோட்டையை புருஷனிருக்கிற இடத்திற்கு போய்விட்டாள். மற்ற பெண்டுகளிதிலே இருந்த வர்கள் மெற்ற பயந்தவர்கள். சிறிதுபேர் கூடலூர் வாசற்படி அண்டையிலே வளவு வளைத்திருக்கிறதிலே எலியாசு வீட்டுப் பெண்டுகள் முதலானபேர் இருக்கிறார்களே அங்கே சிறிது பெண்டுகள் போயிருக்கிறார்கள் என்றும் கபுறு வந்தது. அதன் பேரிலே அவ்விடம் விட்டு நம்முடைய வீட்டுக்கு வந்தவுடனே வந்த கபுறு என்னவென்றால்: வழுதாவூர் வாசற்படி நடு மய்யத்திலே ஒன்று விழுந்து ஒருவெள்ளைக்காரனும் தமிழனும் செத்துப்போனார்களென்றும் சட்டி பீரங்கிவைத்து சுடுகிற விடத்திலே ஒரு தீக்குடுக்கை விழுந்து அவ்விடத்திலே ஒரு வெள்ளைக்காரன் சேதப்பட்டானென்றும் ஆதிநாராயணப் பிள்ளை வீட்டிலே ஒன்று விழுந்ததென்றும் சேக்கு அப்து லாயிமான் வீட்டிலே ஒன்று விழுந்து அவர்கள் வீட்டுப் பெண்டுகளெல்லாம் ராணிவசம் விட்டுப்போட்டு ஓடி மீராப் பள்ளி சானார பிச்சைக்குப்பன் காம் முஸ்தீது பண்ணின வீட்டிலே போய் சேர்ந்தார்களென்றும் நம்முடைய மனுஷர் வீடு விடுகிறதில்லையென்று மல் கட்டினார்கள் என்றும், சேதி வந்தது. அதற்கு அப்போ ஆபத்தென்று வந்தமட்டுக்கும் நாம் வேறே வீடு பார்த்துக்கொள்ளுகிறோமேயல்லாமல் அவர்கள் தானே இருக்கட்டுமென்று சொல்லி அனுப்பிப்போட்டு எம் பெருமாள்பிள்ளைவீட்டிலே இருந்த நம்முடைய குஞ்சு குழந்தை களை மலையப்பமுதலி விடாகிய நம்முடைய கிடங்கிலே அழைப் பித்துவைத்து நானும் சாப்பிட்டு அந்த வீட்டுக்குதானே போனேன்,

வெளியே வீடுகொளுத்துகிற பேச்சுக்கும் மனுஷரை நேமித்து அத்துடனேகூட நம்முடைய திருவமுடையப்பிள்ளை, வரதப்பிள்ளை சதுரங்கப்பட்டணத்து சேவகரையும், முத்துப் பிள்ளை அண்டைக்கு அனுப்பிவைத்தேன். பட்டணத்திலே இருக்கிற ஜனங்கள் ரொம்பவும் தத்தளித்தார்கள். மிசியோனேர் கோவில் சாதி அடி இரண்டரை மூன்று அடி தளம்வைத்து வளவு வளைத்து அதன்பேரிலே பஞ்சு கட்டுக் கட்டாய் போட்டது. அதன்பேரிலே தேக்கு உத்தரங்களை அடிக்கி அதுவும் பூரிக்கொண்டு வரப்போகுதென்று எதிரே எங்கள் வீட்டிலே யிருந்த தென்னைமரங்களை யெல் லாம் வெட்டி அடிக்கிவைத்து இப்படி எத்தனை தீக் குடுக்கைகள் விழுந்தாலும் சேதமில்லாமல் பத்திரம்பண்ணி இருக்கும்போதே அடுத்தாப்போலே இருக்கிற அரும்பாத்தைப் பிள்ளை வீட்டு எதிரே குண்டு விழுந்ததென்றுப்போலே பயந்து கோட்டையை யோடிப்போன மதாம் துய்ப்ளேக்ஸ் ஊரிலே ஒரு பலமுமில்லாத தமிழர் போய்த் தீக்குடுக்கை, தீக்குடுக்கை விழு மென்று பயமாயிருக்கிறதென்று சொல்லிக்கொண்டால் எந்த தீக்குடுக்கை விழுந்து யார் செத்தார்கள்? நீங்கள் சும்மா பயப்படுகிறீர்கள்; என்ன செப்புதென்று அநேக விதவிதமாய் சட்டமாய்ப் புருஷனுக்குக்கூட சொல்லிவைத்து தானும் சொன்ன தைரியம் எங்கே போய்விட்டதென்றும் ஊர் குடியை சாங்கமாய்க் கெடுக்கிறதற்கு புத்தி கொடுக்கிறுப்போலே மற்றபடி தன் காரியத்துக்கும் தோத்தாதென்றும், இப்படி பட்டணத்திலே உண்டான சமஸ்தமான ஜனங்களும் சொல்லிக் கொண்ட சிந்தனையை நானெத்தனையென்று எழுதப் போகிறேன்.

மற்றபடி இன்றையதினம் அவன் மேலண்டையிலே யிருந்துப்போட்ட தீக்குடுக்கை நூறுமட்டுக்குமுண்டு. இராத் திரி கீழண்டையிலே சுளுப்பு, மேலேயிருந்து போட்டத் தீக் குடுக்கை நாற்பது ஐம்பது மட்டுக்குமுண்டு. அப்பாலிந்த இரண்டு பக்கத்திலேயிருந்து வருகிற தீக்குடுக்கைகளுக்கு ஜனங்கள் பயப்படவில்லை. மதாம் துய்ப்ளேக்ஸ் வேகுக்கார ரென்று பட்டணத்து ஜனங்கள்பேரிலே அபாண்டம்போட்டு ஆக்கினைபண்ணுகிறதற்கு பயப்பட்டு நடுங்குகிறுப்போலே இங்கிலீஷ்காரருடைய தீக்குடுக்கைகளுக்கு அவர்களுக்கும் பயம் சற்றுகிலும் தோணவில்லையென்று சமஸ்தமான ஜனங்

களும் தாபந்தப்படுகிறதை நான் காகிதத்திலென்னவென்று எழுதப்போகிறேன்.

இற்றைநாள் மத்தியானம் வழுதாவூர் வாசற்படியிலே இருக்கிறவர்களண்டைக்குப் பாதிரி போனவிடத்திலே அவர்களெல்லாரும் கோன்பேச்சியம் (Confessions) பண்ணிக்கொண்டு சக்கரமண்டு (Sacremant) வாங்கிக்கொண்டார்கள் என்று சொன்னார்கள்.

இற்றைநாள் ஷேக் இப்ராமை அழைப்பித்து முந்நூறு சிப்பாய்களைக் கூட்டிக்கொண்டு நாளை பொழுது விடிவதற்குள் தெய்வநாயகசெட்டி சாவடி அண்டையிலே இறங்கியிருக்கிற இங்கிலீஷ் பவுன்சின்பேரிலே போய் சண்டைபண்ணச்சொல்லி துரையவர்களுத்தாரம் கொடுத்து பேருக்கு இருபது கடுதாசி (Cartouches தோட்டா) விழுக்காடு ஆயிரம் கடுதாசும் (தோட்டாக்கள்) கொடுத்தார்கள்.

இதல்லாமல் ஜனங்கள் சொல்லிக்கொண்டது: மதாம் துய்ப்ளேக்ஸ் கோவிலிலேயும், முசியே துய்ப்ளேக்ஸ் கோட்டையிலேயும் இருந்தபடியினாலே பதிமூன்று நாளாய் சுகப்பட்டார்கள். இனி கோட்டையே போனானே என்னமாய்ப் பட்டணத்திலே இருக்கிற ஜனங்களுக்கு உபாதி கொண்டுவந்துவிடுகிறானோவென்று நடுநடுங்குகிறதாய்ச் சொல்லிக்கொண்டார்கள். தீக்குடுக்கை விழுகிறதென்று துரையவர்கள் காலத்திலே சரி போகிறதை நிறுத்தினார்கள்.

*1748* ஆ செப்டம்பர் மீ *22* உ க்கு விபவ ஹு புரட்டாசி மீ *10* உ ஆதிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் அண்டைக்குப் போய் சலாம்பண்ணிக்கொண்டு இருந்தவிடத்திலே சந்தா சாயபு எப்போ வருவான்? அவர்கள் மனுஷருக்கு ஏதாகிலும் சேதி வந்ததாவென்று கேட்டார்; சேதி வரவில்லையென்று சொன்னேன். மழை எப்போ பெயுமென்று கேட்டார். இத்தனை அனல் காணுகிறமட்டுக்கும் ஒருமிக்க மழை துவக்கி காற்று மழையுமடிக்கப்போகுது. இங்கிலீஷ்காரரும் போய் விடப்போறார்கள். உங்கள் மனதும் சந்தோஷம் வரப்போகு

தென்று சொன்னதற்கு அப்படி காணேனென்று சொன்னர். அப்படியும் நடக்கப்போகிறது. அப்படி நடவாவிட்டால் பின்னேயொரு விதத்திலேயாயினும் நடந்து இங்கிலீஷ்காரர் இந்தமாசத்திற்குமேலே இருக்கத்தக்கதில்லையென்று சொன்ன தற்கு நீ சொன்ன பேச்சு நல்ல பேச்சு ஆகவேணுமென்று மெத்த வருத்தத்துடனே சொன்னதற்கு அப்பால் முன் சின்ன துரை இவர் காம்பிராவுக்கு அடுத்த மேலண்டை காம்பிருவிலே அல்லோ சின்ன துரைக்கூட பின்னையும் நாலைந்து கோன் சேலியருமிருந்தார்கள். மதாம் துப்ப்ளேக்ஸ் நேற்று தீக்குடுக் கைக்கு பயந்து கோட்டையைப் போனதும் அந்த காம்பிருவை மதாம் துய்ப்ளேக்சுக்கு விட்டு, அப்பால் நெடுங்காம்பிரு முன் சொல்தாதுகள் தாமுயிருக்கவும், துப்பாக்கி கிடங்கையும் சகலாத்துக் கட்டுகள் முதலானது மேலே வைக்கவும் கட்டி யிருந்த நெடுவளவு முழுக்க அடிக்காம்பிருவிலே முசியே துலோம் முதலானபேர் இருந்தார்கள். அவர்களுடனேகூட இவர்களையும் போயிருக்கச் சொன்னபடியினலே அதிலே இருக்கிருர்கள். அதற்குமிதற்கும் ஏக வழியும், ஏக வளவு மானபடியினலே துரை அந்தப் பக்கமாய்ப் போரார்; நானும் அங்கே போய் சின்ன துரை முதலானபேரைக் கண்டு பேசிப் போட்டு அங்கேயிருக்கும்போது இதிலே துரை வில்லியநல்லூர் வாசற்படி அண்டைக்குப் போனர்; நானும் பாக்கு கிடங்குக்கு வந்தேன்.

அப்பால்நேற்று இராத்திரி ஷேக் இப்ராமை அழைப்பித்து உன் தாலுக்கு மனுஷரை அழைத்துக்கொண்டு இன்றைய தினம் நீ சவாரி போகவேணுமென்றும் இத்தனைநாளும் அப்து லாயிமான் சிப்பாய்கள் போனர்கள். எனக்கும் என் வசமா யிருக்கிற சிப்பாய்களுக்கும் உத்தாரம் கொடுக்கவேணுமென்று கேட்டுக்கொண்டிருந்தாயே தெய்வநாயகசெட்டி சாவடி அண்டையிலே ஒரு கொத்தளமும் போட்டுக்கொண்டு ஆயிரம் பேர் கற்னட்டகத்தாரும் சிப்பாய்களும் சொல்தாதுகளு மிருக்கிருர்கள் என்று எனக்கு கபுறு வந்திருக்கிறது. நீ போயங்கே அவர்களை இருக்கவொட்டாமல் தெருத்திவிட்டு அந்த கொத்தளத்தையும் இடித்துத் தள்ளிப்போட்டு அவர் களது [ ]

*1748* ஆ. செப்டம்பர் மீ 26 உக்த விபவ ளு புரட்டாசி மீ *14* உ தருவாரம்.

இற்றைநாள் காலத்தாலே பொழுதுவிடிய நாலு நாழிகை ஐந்து நாழிகை இருக்கும்போது அப்துவாயிமானும் மூந்நூத்தைம்பது நானூறு சிப்பாய்களும் சேக்கு இப்ராம் தாலுக்கு சிப்பாய்களிலே ஐம்பது அறுபதுபேர்களும் துலுக்க குதிரை அறுபதெழுபதும் வடவண்டை கருக்கடிகுப்பம் குண்டுசாலையிலே போய் நிற்கவே இங்கிலீஷ்காரர்கள் கற்னுடகத்தாரும் வெள்ளைக்காரரும் பவுன்சு ஆயிரம்பேர் மட்டுக்கு வந்து இருந்தார்கள். இவர்களுக்குமவர்களுக்கும் சண்டை அத்திக்கொண்டு (இங்கிலீஷ்காரர்) குண்டுசாலை பனைமரத்துக்கு அப்புறமும், நம்முடையவர்கள் இப்புறமுமாக சண்டை கொடுத்து அவர்களுக்கும் (இவர்களுக்கும்) கைகலந்து சண்டையான விடத்திலே (இங்கிலீஷ்காரருக்கு) வெள்ளைக்காரர்களிலே நாற்பது ஐம்பதுபேர் சாவும் எழுபது எண்பதுபேர் காயமும் கற்னுடகத்திலே (வெகுபேர்) சாவும் அந்தமட்டுக்குக் காயமும் சாவும் ஆனது. அதன்பேரிலே அவர்கள் சேனை முறிவு கொடுத்து அப்பால் ஓடினபேரை சிறிது குதிரைக்காரர்கள் போய் முறிச்சித்திருப்பினார்கள். இவர்களில் (பிராஞ்சுக்காரர்) ஒருத்தனுக்கு சாவு காயமும் பத்து பதினைந்துபேருக்குக் காயமும் பட்டது. இதிலே மகா-ா-ா-ஸ்ரீ துரையவர்கள் போய் சென்னப்பட்டணத்து வாசற்படியே கொத்தளத்தின்பேரிலே போய் இருந்து இந்த வேடிக்கையெல்லாம் பார்த்திருந்தார். நானும் சக்கிலி கொத்தளத்தின்பேரிலே போய் பார்த்துக்கொண்டிருந்தேன். கருக்கடி குப்பத்துத் தெத்து குண்டுசாலைக்கு வெளியே மோடானபடியினாலே அவர்கள் மனுஷர்கள் வருகிறதும் போகிறதும் சமஸ்தமும் நன்றாய் தெரிகிறபடியினாலே அவர்கள் முறிஞ்சிப்போகிறதும் அவர்களைக் குதிரைக்காரர்கள் மடக்குகிறதும் மறுபடியுமிப்பால் சொல்தாதுகள் நானூறு ஐந்நூறுபேர் வருகிறதைக் கண்டும், மகா-ா-ா-ஸ்ரீ துரையவர்கள் அல்லிகானையும் அவர் சமேத்து சிப்பாய்களையும் (சண்டைக்கு) சீக்கிரமத்துக்குப் போகச்சொல்லி அனுப்பினார். அப்போ ஒன்பதரை மணி வேளை உண்டு. நம்முடையவர்களுக்குக் கொண்டுபோன கடுதாசியெல்லாம் போய் (தோட்டாக்கள்) அவர்கள் கடுதாசி (தோட்டாக்கள்) கேட்டனுப்பினதின்

பேரிலே கடுதாசிகள் (நோட்டாக்கள்) விஸ்தாரமாயனுப்பி னார்கள். இதிலே வெள்ளைக்கார திராகோன்மார்கள் குதிரைக் காரரையும் அனுப்பினார்கள். அப்பால் அவர்கள் முறிந்தவர்கள் திரும்பியும், முனைக்குடாமல் இப்போ பலம்வந்த ஆயிரம் சொல் தாதுகளும் இங்கே யிருந்து ஓடிப்போகிற இங்கிலீஷ் பவுன்சும் ஏகத்துக்குப் போய் இரண்டு நாழி வழிக்கப்புறம் போய் நின்று அங்கே யிருந்து அவர்களிருக்கிற பாளையத்துக்கு அபஜயப்பட்டு வெகுபேரை சாவு கொடுத்துப் போய்விட்டார்கள். அப்பால் இங்கிலீஷ்காரருக்கும், மத்தத்துவந்த அப்துல்சலீல் ஒரு யானையின்பேரிலே கொடி ஒன்று பிடித்துக்கொண்டு தானொரு பல்லக்கின்பேரிலே ஏறிக்கொண்டு நூற்றைம்பது இருநூறு குதிரைகளுடனே மொரட்டாண்டிசாவடி மேட்டின்பேரிலே இருந்து தாழ இறங்கிவரும்போது (இங்கிலீஷ்காரர்) முறிஞ்சி ஓடிவருவதைக் கண்டு அவனப்படித்தானே ஓடிப்போயடிக் கானு சேர்ந்தான். இந்தமட்டுக்கும் நம்முடையவர்களிலே பத்து பதினைந்துபேர் காயக்காரரும் இரண்டு குதிரைகள் காயமும், இங்கிலீஷ்காரர் பிணங்களைப் போட்டுவிட்டு, ஓடிப் போன பிணங்களிலே குத்துயிராயிருக்கிறவர்களை ஐந்துபேரை எடுத்துக்கொண்டு விழுந்த இங்கிலீஷ்காரருடைய ஆடைகளும் குல்லாய்களும் பிடிங்கிப்போட்டு காப்பிரிகளிருபதுபேரும் வரும்போது மூன்று நான்கு இங்கிலீஷ்காரரும் வழியிலே செத்துப்போனார்கள். மகா-ா-ா-ஸ்ரீ துரையவர்கள் செத்துப் போனவர்களை அங்கேதானே எறிந்துப்போட்டு வரச்சொல்லி சொல்லியனுப்பினார். அந்தபடிக்குக் காப்பிரிகளெறிந்துப் போட்டார்கள். நம்முடைய பவுன்சு அப்பால் ஜெயபேரிகை அடித்துக்கொண்டு மீனுட்சியம்மை சத்திரத்தண்டை வந்து வீவ்-லெ-ருவா (Vive le roi) என்று மூன்றுதரம் கூப்பிட்ட சப்தம் இங்கே மகா-ா-ா-ஸ்ரீ துரையவர்களுக்கும் மற்றபேர் கள் கொத்தளங்கள்பேரிலே யிருந்து வேடிக்கைப் பார்க்கிற வெள்ளைக்கார பெரிய மனுஷர்கள் தமிழர்கள் சமஸ்தமான பேருக்கும் அந்த சப்தம் கேழ்க்க இவர்களையெல்லாரும் உற் சாகத்தை எதிரே அடைய எதிரே போன வெள்ளைக்கார திற கோமுகள் என்கிற குதிரைச் சுவார்களையும் அழைத்துக் கொண்டு அப்துலாயிமானும், அல்லிகானும் சென்னப்பட்ட ணத்து வாசற்படி கொத்தளத்திலே இருக்கிற பிரபுவை வந்துகாண பிரபு அவர்களுக்கு மிகுந்த மரியாதையும்பண்ணி

உபசாரமும்சொல்லி அவர்களைக் கொண்டாடி அவர்களை விடுதிக்கு அனுப்பிவைத்து தாமும் வெகு உற்சாகத்துடனே கோட்டைக்குப்போனுர். முன் இந்த சண்டைக்கு ஆதிமுனைந்து இங்கிலீஷ்காரர் பவுன்சின்பேரிலே விழுந்தவர்கள் காப்பிரி களானபடியினுலே துரையவர்கள் கோட்டைக்குப் போன உடனே காப்பிரிகள் ரெவ்வெண்டுபேருக்கு ஒரு ரூபாயும் ஜனம் ஒன்றுக்கு ஒரு பாட்டல் சாராயமும் விழ்க்காடு வரிசை வைத்துக்கொடுத்து பின்னையுமிருக்கிற காப்பிரிகளுக்குயெல் லாம் துப்பாக்கி கொடுத்தார்களென்று சொன்னுர்கள். நானும் நம்முடைய பாக்கு கிடங்குக்கு அடுத்த மேண்டைத்தெருவுக்கு நேரானபடியினுலே அங்கேயிருந்த முசியே சோல்மிஷியாக்ரு, கொத்ரேல்புரி மகன் பின்னையும் ஒப்பிசியேல்மார்கள் கையில் அனுப்பிவித்துக்கொண்டு செவ்வையாய் பாக்கு கிடங்குக்கு வந்து அங்கே பதினேருமணி வேளைக்கு வீட்டுக்கு வந்தேன்.

இன்றையதினம் சாவல்லாமல் நித்தியம் நம்முடையவர்கள் அவர்கள் பாக்குமுடையான்பேட்டு பறச்சேரி அண்டையிலே போடுகிற கொத்தளத்துக்கும் அங்கே மனுஷர்பேரிலே போடு கிற தீக்குடுக்கைகளினுலேயும் பீரங்கியினுலேயும் பதினைந்து பேர் இருபதுபேர் சாவுகாயமும் சதா நித்தியமாகச்சேயும் இதல்லாமல் வியாதியினுலே சாகிறதினுலேயும் வியாதியினுலே அவ்விடத்திலே இருக்ககூடாமல் தேவனும்பட்டணத்துக்கு அனுப்பின மனுஷர் கற்ருடகத்தார் சிப்பாய்களல்லாமல் அரியாங்குப்பத்து சண்டை துவக்கினது முதல் இன்றைய வரைக்கும் வெள்ளைக்காரர் மாத்திரம் ஆயிரத்தன்னூறு பேருக்குண்டென்று தோணுது இவ்விடத்திற்கு 35,36 நாளாய் இவன் வந்து பின்னை ஒரு வேலை நிர்வாகம்பண்ணுமல் போனு லும் ஜனங்கள் மாத்திரம் சாகக் கொடுத்தான் என்றும் இன்று முதல் பிராஞ்சுக்காரருக்கு ஜெயகாலமும் இங்கிலீஷ் காரருக்கு அபஜெயகாலமும் என்னுமென்று இனிமேல் சூரி யன் துலாசத்தில் பிறவேசித்து ஐப்பசி மாத முதல் தேதியாகிற துக்குள்ளே இன்னும் சிறிதுபேரை சாகக்கொடுத்து அப ஜெயப்பட்டுப் போவானென்றும் சமஸ்தமான ஜனங்களும் கெட்டியாய் சொல்லுகிருர்கள் என் புத்திக்குமப்படியே தோணுதி.

இதுவுமல்லாமலிதுவரைக்கும் மேண்டையும்மேலண்டையு மிருந்து போட்ட தீக்குடுக்கை ஆயிரத்துக்குமேலே அதனுலே

சேதப்பட்ட மனுஷர் பத்து பதினேந்துபேருக் கதிகமில்லை இதுவுமல்லாமல் சிறிது வீடுகளின்பேரிலே விழுந்தது அது தவிர, அது பின்னே என்ன செய்யப்போகிறது அல்ல வென்றால்: இன்னமெட்டு பத்து நாளை யிருந்துப்போட்டால் மனுஷர் சேதம் வரமாட்டாது வீடுகள் மாத்திரம் ஏதாகிலும் நாலு ரெண்டு சேதப்பட்டால் பட்டது. மற்றபடிக்கு இங்கிலீஷ்காரருக்கு இருந்த கீர்த்தி சென்னப்பட்டணம் போனதுடனே போனாலும் சீர்மையிலிருந்து வந்து என்னமோ சிறிது செய்வானென்று விவேகமில்லாத ஜனங்கள் சொல்லிக்கொண்டதற்கு சீர்மையிலிருந்து இருபத்திரெண்டு உருபடியுடனேயும் ஏழாயிரம்பேர் சொல்தாதுகளுடனேயும் வந்து கடசியிலே வெகுபேரை போக்கடித்துக்கொண்டுதானும் அபஜெயப்பட்டு அபகீர்த்தியை அடைந்து போனானென்கிற பேர்மாத்திரமிப்போ உண்டாகிக்கொண்டு போனானே யல்லாமல் மற்றபடி பின்னை யொன்றும் செய்யத்தக்கதில்லை யென்று முன் விவேகமில்லாமல் பூச்சிச் சொல்லிக்கொண்டிருந்தவர்களுக்குக் கூட தீர்த்துப்போட வந்தானென்றும் சொல்லிக்கொள்ளுகிறார்கள். ஆனால் ஸ்ரீ துரையவர்கள் முசியே துய்ப்ளேக்குக்கு முன் சென்னப்பட்டணம் பிடித்த கீர்த்தி சூரிய பிரகாசம்போலே இருந்தாலும் அதை ஆயிரம்காடி சூரியனுக்குள்ள ப்ரகாசமாடும்படியே தேயம் (தேஜசு) உண்டாக்கத்தக்கதாக இந்த இங்கிலீஷ் கோத்திரமிரால் கொண்டுவந்து விட்டு சண்டை உண்டாக்கினதென்று வெகு ஜனங்கள் சொல்லிக்கொள்ளுகிறார்கள். எனக்கானால் முன்னமேத்தானே தோற்றினால் அத்துடனேயும் துரையவர்களுடனேயும் கூட சொல்லி வந்தேன்,

1748 ஆ செப்டம்பர் மீ 27 உக்கு விபவ ஞு புரட்டாசி மீ 15 உ சுக்கிரவாரம்

இற்றைநாள் காலத்தாலே அப்துல் ஜாவிலுக்கு யெழுதின காகிதம் கொடுத்த உடனே மேஸ்தர் பொஸ்காவேலுக்கு யெழுதியனுப்புகிற காகிதத்துடனே கூட அனுப்புகிறேனென்று வாங்கிக்கொண்டு. மேஸ்தர் பொஸ்காவேலும்

[ ]

போட்டு சுடுகிறது நியாயமாவென்றும் பின்னையும் எந்தெந்த சங்கதிக்கோ காகிதங்களுடனே யெழுதி அத்துடனே கொடுத்து நம்முடைய சோபுகாரன் கையில் கொடுத்தனுப்பி னவர் [ ]களுக்கு கொடுக்கிறது வேணு மென்று நேற்று சாயங்காலம் கேட்டிருந்தது கேருப்பெட்டி கச்சா பதினுலுசேர் இருக்குமென்று ஐந்து விராகன் விலே இருக்குமென்றுஞ் சொல்லிக்கொண்டு போய்க் கொடுத்தேன் தாம் தானே வாங்கி தம்முடைய காம்பிராவிலே கொண்டு போய் வைத்தார்.

***1748* ஆ செப்டம்பர் மூ 28 உ.க்கு விபவ ஸு புரட்டாசி மீ *16* உ க்கு சனிவாரம்**

இற்றைநாள் காலத்தாலே சூரிய உதயத்திற்கு கேழ்க்கப் பட்ட சேதி என்னவென்றால்: நேற்று இராத்திரிபோட்ட அன் பத்தினலு தீக்குடுக்கைகளிலே வெள்ளைக்காரர் வீட்டிலே அஞ்சாறுபேர்வழி விழுந்தபேர் மாத்திரம் யெழுதுகிறேன் முசியே புரி வீட்டிலே ஒன்று விழுந்து உடுப்பிடவை கண்ணடி நாற்காலி முதலானதுகளை சேதப்படுத்தியது பின்னையொன்று முசியே சொல்மினியாக் விட்டிலே விழுந்து அதுவுமப்படித்தான் சேதப்படுத்தினதென்று சொன்னார்கள். பின்னை ஒன்று தச்ச வெள்ளைக்காரன் வீட்டிலே விழுந்தது அதுவும்மப்படித்தான் சேதப்படுத்தியதென்று சொன்னார்கள். பின்னை யொன்று (பெர்ஷோன்) பேரேமிலென்கிற வெள்ளைக்காரன் வீட்டிலே விழுந்து அதுவும் உன்னத்துக்குள்ளே சேதப்படுத்தினதென்று சொன்னார்கள். அப்பால் சின்னதுரை வீட்டிலே வராந்தா விலே இருக்கிற கபினேத்து வீட்டிலே விழுந்து அங்கே யிருந்து வராந்தாவை ஓடி வந்து வராந்தாவிலே யிருந்து நடு வாசலிலே ஓடி வந்து வெடிச்சபடியினாலே பின்னை யொன்றும் சேதமில்லாமல் போனது; பின்னையும் கோட்டையிலே நாலைந்து விழுந்தும் ஒரு உடமைக்கும்; ஒருத்தருக்கும் சேதமில்லை யென்று சொன்னார்கள். பின்னையும், அங்கங்கே வீடுகளிலே விழுந்ததுகளிலேயும் தெருவுகளிலே விழுந்ததுகளினாலேயும் சேதமில்லையென்று சொல்லிக்கொண்டார்கள்.

மற்றுநாள் காலத்தாலே துவக்கி பீரங்கி வீச்சு மேற்கே யிருந்து சுடத்துவக்கினான். பதினலுராத்தல் குண்டு ஒன்று

செட்டித்தெருவிலே மேல்மார்சத்திலே நமசிவாயசெட்டி வீட்டிலே ஒன்று வெங்காரசெட்டிவீட்டிலே ஒன்று விழுந்து அந்த குண்டுகளையும் கொண்டுவந்து காண்பித்தார்கள். அதிலே வெங்காரசெட்டிவீட்டிலே விழுந்தகுண்டை மாத்திரம் வாங்கி வைத்தேன். பின்னையுமிரண்டு குண்டு மிசியேனேர் கோவிலிலேயும் வந்து விழுந்ததாக சொன்னார்கள். பின்னே ஒரு குண்டு புகயிலை கிடங்குக்கு நேராய் வந்து விழுந்ததென்றும் சொன்னார்கள். பின்னை இருபது குண்டுமாத்திரம் அப்துல்ரயிமான் வீட்டிலே ஒன்று விழுந்ததென்று மகா-ள-ள-ஸ்ரீ துரையவர்களுக்கு காண்பித்தானென்று சொல்லிக்கொண்டார்கள். பின்னையும் வழுதாவூர் வாசற்படி முதலான விடங்களிலே விழுந்ததென்று சொல்லிக்கொண்டார்கள். அவனெப்போதும் வாடிக்கையாய் காலத்தாலே துவக்கி தீக்குடுக்கைகளையும் போட்டுக்கொண்டு வருகிறான். ஆனால் நெடும் பீறங்கி வைத்து இன்றுதான் சுட துவக்கினபடியினாலே இதுவும் ஏழெட்டு பத்துநாள் சுட்டால் அல்லாமல் அவனுசை தீராது அதையும் சுட்டுப்போட்டு வாலை முருக்கி தோல்மேலே போட்டுக்கொண்டு போய் விடுவானென்றும் சொல்லிக்கொண்டார்கள். இதல்லாமல் இந்தனாள் காலத்தாலே கொலுத்துக்கார வெங்கடாசலம் தம்பி வந்து சொன்னசேதிதான். தங்கள் தமயனையும் குஞ்சுக்குழந்தைகளையும் பார்க்கப்போய் பட்ட அவஸ்தையையும் நான் பார்த்துப்போட்டுத் தப்பித்துக் கொண்டுவந்தது சுவாமிக்கு தெரியுமென்று சொன்னான். அவ்விடத்து சேதி யென்னவென்று கேட்டதற்கு உங்கள் மாமா வீரப்பிள்ளையுமவர் பெண்சாதியும் உப்புவேலூரிலே யிருந்தார்களே அவ்விடத்துக்கு இங்கிலீஷ்கார மனுஷர்களும் இவ்விடத்திலிருந்து ஓடிப்போன பட்டு நூல்கார வெங்கனென்கிற பயலும் கூடப்போய் வீரப்பிள்ளையை பிடித்துக்கொண்டு கொஞ்ச னஞ்சம் தட்டு முட்டையும் பிடுங்கிக்கொண்டு இருந்த் புடவைகளையும் மெடுத்துக்கொண்டு இங்கிலீஷ்காரர் இருக்கிற பாராயத்துக்கு பிடித்துப் போனதுமல்லாமல் அடி தடி விஸ்தாரமாய் அடித்தார்களென்றும் வீரப்பிள்ளையை ஆலங்குப்பத்து வழியாய் கட்டிக்கொண்டு போகும்போது முத்துனாய்க்கன் தம்பி ரகுபதினாய்க்கனென்பவன் அந்த சேவகருக்கு ரொம்பவும் தெரியப் படச்சொல்லி பத்தஞ்சு கொடுக்கிறோமென்று பேசின விடத்தில் கூட விடாமல்இங்கிலீஷ்காரரிறங்கியிருக்கிற பாளயத்தே

கொண்டுபோனார்களென்று சொல்லி இதல்லாமல் ஆறுமுகம்
தம்பியை பிடித்து அடித்து தண்டிலே போட்டு மெரித்து அலங்
கோலம் பண்ணினவிடத்திலே சிறிது பணங்காசு புதைத்
திருந்த விடத்திலே எடுத்துக் கொடுத்தபிறகு அவனை விட்டுப்
போட்டு போய்விட்டானென்று தங்களண்ணனை பிடித்த
விடத்தில் பொம்மலாட்ட பாப்பய்யன் வந்து பத்து ரூபாய்
கொடுத்து விடுவித்தானென்றும் பின்னையும் நம்முடைய
ஊரார் கெடி ஸ்தலனங்களிலே கோட்டை ஸ்தலங்களிலே
இருக்கிறவர்கள் தவிர மற்றபேரையெல்லாம் பிடித்துக்
கொண்டுபோகிறதும் அடிக்கிறதும் பணங்காசுகளை வாங்கிக்
கொள்ளுகிறதும் இப்படியாக நடக்குதென்று சொல்லி நம்
முடைய சேஷய்யங்கார் சத்திரத்து பிராமணாள் திருமங்களத்
திலே போயிருந்தவர்களைக்கூட பிடித்துக்கொண்டு வந்து
அடித்து சிறிது வாங்கிக்கொண்டு விட்டதாய் சேதி கேட்டோ
மென்றும் ஆடுமாடு நெசலிலே யிருந்தது முச்சூடும் ஓட்டிப்
போய் விட்டதாகவும் பின்னையும் இங்கிலீஷ்கார மனுஷர்
துலுக்கர் கிராமங்களிலே இருக்கிறவர்களைப்போய் (பிராஞ்
சுக்காரரை) பிடித்துக்கொண்டு வருவதும் அடிக்கிறதும் அவர்
கள் கையிலே யிருக்கிறதை பறித்துக்கொண்டு விட்டு கழட்டு
கிறதும் இப்படி நடக்கிறதுகளை நானென்னச் சொல்லப்
போறேன். புதுச்சேரியார் வெகுதூரம் போய்விட்டார்க
ளென்று சொன்னார்.

வீராப்பிள்ளை உப்பு வேலூரிலேயிருந்தது நானறியாதபடி
யினாலே அப்பால் வீராப்பிள்ளைக்குமாரன் முத்துவை அழைப்
பித்து நான் கேட்டவிடத்திலே அவன் மெய்தானென்றுச்
சொன்னான் ஆனாலினி செய்யத்தக்கதென்ன ஸ்வாமியினுடைய
சித்தத்தின்படியே நடக்குதென்று சொன்னேன்.

பிறகு கோட்டைக்குவந்து ப்ரபுவினுடைய தரிசனம்ஆனப்
போலே அவர் ஏதாகிலும் சேதியுண்டாவென்று கேட்டார்.
வெளியிலேயிருந்து ஆற்காடு முதலான விடங்களிலேயிருந்து
போக்கு வருத்து மனுஷர் [redacted]வில்லையே வந்தாலல்லவோ
வெளிசேதி தெரியுமென்றுசொன்னேன். சந்தா சாயபு குமார
னுக்கு ஏதாகிலும் சேதி வரவில்லையாவென்று கேட்டார்.
அவனுமிப்படியே என்னத்தினாலே வரவில்லையோ என்று

தாபந்தமாய் பேசிக்கொண்டிருக்கிறதாய் சொல்லிப்போட்டு சற்றுநேரமிருந்து நம்முடைய வசத்திலே யிருந்த நெல் கூலிக் காரர், தச்சர், கருமார், கிலிக்காரர் (cobillers) பீரங்கி மருந்துமுதலான இடங்களிலே இருக்கிற கூலிக்காரருக்கும் மகா-ா-ா-ஸ்ரீ துரையவர்கள் உத்தாரம்படிக்கு நாளதுவரைக் கும் கொடுத்து வந்தோமே இனிமேல் மேலெழுதப்பட்ட வேலைக்காரருக்கு கொடுக்கிறதற்கு நாளைமுதல் நெல்லில்லையே அதற்குக் கணக்கு யெழுதிக்கொடுப்போ மென்று புடவை பார்க்கிற சாலையிலே வந்தேன். அதிலே ஷேக் இப்ராமை துரையவர்கள் மனுஷர் அழைத்துப் போனார்களென்று சொன் னார்கள்.

அப்பால் ஒரு நாழிகைக்கு ஷேக் இப்ராம் புடவை பார்க் கிற சாலையே வந்து மதனந்த பண்டிதன் முதலானபேரிருக் கிற கும்பலிலே வந்து சொன்னது அம்மாளவர்கள் நேற்று யெங்கள் தாலுக்கு சிப்பாய்களையும் கூட்டி அம்மான் சேவகர் புதுசாயிருக்கிறார்களே அவர்களையும் கூட கூட்டி மோசாவின் பேரிலே போய் கொஞ்ச மனுஷர் இருக்கிற சேதி வந்தது ஒரு கை பார்த்து வாருங்களென்று சொல்லிப் போகச் சொன்னாள் அந்தப்படிக்குப் போனோம் போனவிடத்திலே மோர்சா அரை நாழிகை வழி இருக்கும்போதே கறனைதுகளைக் கொளுத்திக் கொளுத்திப்போட்டு துப்பாக்கிகளை வீணாய் சுட்டுப்போட்டு ஓடினார்கள். அப்படி சுடும்போது தப்புக்குண்டாய் இருட்டு வேளையானபடியினாலே அவர்கள் மனுஷரில் இரண்டுபேருக்கு பட்டதென்றும் இப்படி வீணாய் மருந்து குண்டும் சிலவழித்து விட்டு ஓடிப்போவது எங்கள் வேலையல்ல. நாங்கள் மோர்சா கிட்டப்போய் அந்த மனுஷரைப்பார்த்து சுடவேணும் அவர் கள் மனுஷர் வந்து எங்களுக்கு எதிரே சுட்டால் நாங்கள் நின்று சுடவேணுமேயல்லாமல் இப்படி ஓடிப்போவது எங்கள் வேலையல்ல என்று அவர்களுடனே சொன்னேன். அதற்கவர் கள் மதாமுடனே வந்து சொல்லிக்கொண்டதற்கும் மதாமவர் கள் பெரிய துரையவர்களுடனே சொல்லிக்கொண்டதின் பேரிலே என்னை அழைப்பித்து நீங்கள் இராத்திரி மோர்சா வின்பேரிலே ஏன் சுடமாட்டோமென்று சொன்னீர்களென்று கேட்டார். அங்கே நடந்த வயணமப்படியே மேலெழுதின படிக்கு நான் சொன்னதின்பேரிலே அவர்களெல்லாரும் வாயை

முடிக்கொண்டார்கள். அம்மாள்மாத்திரம் என்பேரிலே கோபமாயுத்தாரஞ் சொன்னுள். துரையவர்கள் நகைத்து காரியத்திலே ஜாக்கிறதையாயிருங்களென்று சொல்லிப்போகச் சொன்னுர். அப்போ ழசியே துமீகோன் புசி சேரோ பின்னையுமிரண்டொரு ஒப்பிசியே மார்களிருந்தார்கள் அதன்பேரிலே அனுப்பிவைத்துக் கொண்டுவந்து விட்டேன் என்று சொல்லி அம்மாள் சேவகர் நித்தியம் இந்தபடிக்கு கறணுதுகளைக் கொண்டுபோய் வெளியிலே சுட்டுப்போட்டு அப்பால் துப்பாக்கி வேட்டுகளை பலபலவென்று 2000 வேட்டுகளை சுட்டுப்போட்டு அம்மாளண்டையிலே வந்து அவர்கள் போடுகிற கொத்தளத்திலே கறணுதுகளெல்லாம் கொளுத்திப்போட்டோம்; அவர்கள் மனுஷர் வெளியே புறப்பட்டார்கள். அதன்பேரிலே துப்பாக்கியினுலே இருபது வரிசை தீர்த்தோம்; அவர்கள் முறிந்துப்போனுர்கள். நாங்கள் வந்துவிட்டோமென்று வந்து சொன்னுலதை அம்மாளவர்கள் மெய்யென்று கேட்டு துரை அவர்களுக்கு மெய்யென்று சொன்னுல் அவர்களும் மெய்யென்று இருப்பார்களென்று சொல்லி இதுவரைக்கும் இப்படி சொல்லிக் கொண்டுவருகிற சாடைக்கு நாங்கள் போனது அவர்களுக்கு ரொம்ப வருத்தமாய்க் கண்டதுமல்லாமல் நான் நீங்களப்படிச் செய்கிறீர்களென்று சொன்னதே அவளுக்கு துரையவர்கள் காதிலே விழப்போகுதென்றுதான் மிஞ்சிவந்து சொல்லிக் கொண்டு இனிமேல் தங்களை அலாயிதாவாயனுப்புகிறதற்கும் மார்க்கம் பண்ணிக்கொள்ளுவோமென்று எடுபாடு எடுத்துச் செய்யப்போனுன். அது ஒன்று நினைக்க ஒன்ருய்ப் போனதென்று சொல்லிப்போட்டு வீட்டுக்குப்போனுன்; நானும் வீட்டிற்குப்போனேன்.

பகலைக்குமேலாய் (இங்கிலீஷ்காரர்) போட்ட பீரங்கிக் குண்டு மிசியொனேர் பாதிரி கோவிலிலே இரண்டு குண்டுகள் வந்து விழுந்ததென்றும், பின்னையும் வழுதாவூர் வாசற்படி முதல் பில்லுக்கடைத்தெருவு மட்டுக்கும் விசேஷித்துக் குண்டுகள் விழுந்ததென்று சொன்னுர்கள். இராத்திரி எட்டு மணிக்கு தீக்குடுக்கைப்போட துவக்கி பனிரெண்டு மணி யடித்து இரண்டு மணி மட்டுக்கும் தீக்குடுக்கைகள்போட்டு அப்பால் நின்ருன். அப்பால் இரண்டு சேர் மழை பெய்தது. திரும்பியும் நாலரை மணிக்கு கிழக்கேயிருந்து முன் போட்டாப்போலே

தீக்குடுக்கை ஐந்தரை மணி மட்டுக்கும் பத்து தீக்குடுக்கைப் போட்டுவிட்டான்.

இதல்லாமல் காரைக்கால் காகிதம் சிதம்பரத்து தபால் காரன் குமாரன் முதலான இரண்டுபேர் துரைக்கு இற்றை நாள் காலத்தாலே காகிதம் கொண்டுவந்து கொடுத்து எனக்கு கந்தப்பன் ஆவணி மீ 30உ எழுதின காகிதம் ஒன்றும் இந்த மாதம் 8உ எழுதின ஓலை நறுக்கொன்றும் கொண்டுவந்து கொடுத்து முந்நூறு வெத்திலையும் கொண்டுவந்து கொடுத் தான். ஆவணி மீ 30உ எழுதின காகிதத்திலே எழுதியிருந்தது: முசியே ரீஷ்க்ந, முசியே தெப்ரேன் சம்மதி இருபத்தினலு (விழ்க் காடு) மோடி ஆயிரம் வராகன் செலுத்தி ரசீது வாங்கிக் கொண்டேன். அவள் வராகனென்று கேழ்க்கிருள் வயணு மெழுதியனுப்பச்சொல்லி இருந்தது.

*1748* ஆ செப்டம்பர் மீ *29* உக்கு விபவ ஸ்ரீ புரட்டாசி மீ *17* உ ஆதிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் தரிசனம் பண்ணிக்கொண்ட பிறகு நேற்று இராத்திரி போட்ட தீக்குடுக் கையிலே துரையவர்களிருக்கிற வீட்டு வாசற்படியண்டையிலே உத்திரங்களடுக்கியிருக்கிறதற்கு அடுத்தாப்போலே விழுந்து வெடித்தது. அது கோட்டையிலே வாய்வு மூலையிலே புருக் கூண்டு கொத்தளத்திற்கு போகிற வழியிலே துரையவர்களும் அம்மாளவர்களுமிருக்கிற காம்பிராவுக்கு அடுத்தாப்போலே விழுந்தது. பின்னை ஒன்று கணக்கு கூடத்தண்டையிலே விழுந்தது. அப்படி கோட்டையிலே எட்டு பத்து விழுந்தது. வெளியிலே ஆதிவராகசெட்டி வீட்டுக்கு எதிரிலே அவர் தம்பி வீட்டிலே ஒன்று விழுந்தது; அப்படி பின்னையும் ஏதாகிலும் வீட்டுக்கு வீடு விழுந்தும் தெருவுகளிலேயும் இந்தபடிக்கு ஐம்பத்தாறு தீக்குடுக்கைகள் கிழக்கேயிருந்து போட்டது விழுந்ததென்று சொன்னார்கள். நம்முடையவர்களும் பத்து பதினைந்து தீக்குடுக்கைகள் அந்தக் கவிபாரத்தைப் பார்த்துப் (bamb-koth) பார்த்துப்போட்டார்கள்யென்றும் அக்கவி போர்த்துக்குப் படவில்லையென்று சொன்னார்கள்.

மத்தியானமட்டுக்கும் நெல் கணக்கெழுதிவைத்து பகலைக்கு மேலாக வந்து துரையவர்களுக்குக் கொடுப்போமென்று பவி ரெண்டு மணிக்கு வீட்டுக்குப்போனேன்.

ஆனால் துரையவர்களை ஏன் கண்டுபேசவில்லை என்றால், அவர் வெளியே வந்தவுடனே தரிசனமாய் உபசாரம்பண்ணிய பிறகு அவர் செவ்வையாய் வெளியே இருந்தவர் உள்ளே காம்பிராவிலே போனார். (நானும்) பின்னையும், முசியே கர்வலோ யும் மற்றுமுள்ள வெள்ளைக்காரர் பத்துபேர்மாத்திரம் பிறகே போய் வெளியே நின்றோம். படுத்துக்கொண்டு நித்திரை பண்ணுகிறாரென்று உள்ளே இருந்த சட்டைக்காரன் கபுறு சொல்ல, அதன்பேரிலே வெள்ளைக்காரர் அவரவர் சாகையைப் போனார்கள். நானும் போய் (கணக்கு) எழுதிவைத்துப் பனி ரெண்டுமணிக்கு வீட்டுக்கு வந்தேன்.

அப்பால் பகலைக்குமேலாய் வெளியே போகவில்லை. இங்கிலீஷ்காரர் போடுகிற பீரங்கி பதினாறு ராத்தல் குண்டும் ஆறு ராத்தல் குண்டும் வந்து திரளாய்ப் பட்டணத்திலே விழுந்தது. ஆனால் தீக்குடுக்கைக்குப் பயப்படவில்லை. இதற்கு பயப்பட்டு ஜனங்கள் தத்தளிக்கிறாப்போலே எதினாலே யென்றால் தீக்குடுக்கை உயர எழும்புகிறதும் ஏணிவைத்து ஏறுகிற சாடையாய் எழும்புகிறதும் மறுபடி தாழ விழச்சேயும் அப்படி சாய்ந்து மெதுவா வருகிறபடியினாலேயும் சப்தத்தி னாலேயும் மனுஷருக்கு அறிக்கையாய் தப்பிபித்துக்கொள்ளு கிறார்கள். இது சப்தமுமில்லை, பீரங்கி வாயிலே குண்டு புறப் பட்டால் எந்த இடத்திலேவிழவேணுமோ அங்கேயே வந்தடிக் கிறதும் தெரிகிறதேயல்லாமல் மற்றபடி தெரியாததினாலேயும் வருகிறது வெகு வேகமானபடியினாலேயும், ஜனங்கள் ரொம்பவும் பயப்படுகிறார்கள். இதல்லாமல் இன்றையதினம் அவன் போட்ட பீரங்கிக் குண்டுகள் இங்கிலீஷ் 18 நம்முடைய பிராஞ்சு 16 ராத்தல் குண்டு சென்னப்பட்டணத்து நெடுந் தெருவுக்குப் பிராமணத்தெருவு கடந்தாப்போலே இரண்டு பார்சமும் இருக்கிற சம்பாகோவில் தோட்டத்து சுவரிலே வழுக்கி கிழண்டை யிருக்கிற கல் சுவரிலே அடிப்பட்டது என்றும் அந்தக் குண்டை எடுத்து கோட்டைக்குப் போனதாய் கபுறு சொன்னார்கள். சென்னப்பட்டணம் பழைய வாசற்படி அண்டையிலே முசியே லெனுவார் பழைய குவர்னதோர் கட்டின நீலக்கூடம் சமீபத்திலே இரண்டு பீரங்கிக்குண்டு வந்து விழுந்தது எடுத்துவைத்தாயா? ராசோபண்டிதர் வந்து சொன்னார், வழுதாவூர் வாசற்படியிலே மேலே கொத்தளத்தின் பேரிலே யிருந்த இரண்டு வெள்ளைக்காரரை அடித்ததாய்க்

கபுறு. முசியே லத்தூஸ் என்கிற ஒப்பிசியேல் கோட்டையிலே சொல்லிக்கொண்டிருக்கும்போது நான் கேட்டுக்கொண்டிருந் தேன். அப்பால் சென்னப்பட்டணத்து வாசற்படி சாந்திநேர் கூண்டிலே பட்டு சாந்திநேர் கூண்டு உடைந்துபோய் அந்தக் கூண்டை சட்டைக்காரன் எடுத்துக்கொண்டு கோட்டையிலே வந்து முசியே புரிந்து கபுறு சொல்லும்போது நான் கூடயிருந் தேன். அப்பால் சுத்துக்கோட்டை அலங்கத்தின்பேரிலே ஆனமறைவு கட்டியிருக்குதே அதிலே பட்டு அதை இடித்துக் கொண்டு இப்புறத்திலே ஊரிலே வந்து விழுகிறது என்றும் கொத்தளங்கள்பேரிலே நடமாடுகிற மனுஷருக்கு வந்து படுகிறதென்றும் வருகிறது வாயு வேகமும் தெரியாதபடியி னாலே கொத்தளங்களிலே யிருக்கிற மனுஷரைக் காவற் காரன் தவிர, மற்றபேரை தாழ இறங்கச்சொல்லியும் கொத்தளங்கள்பேரிலே மனுஷர்கள் இருக்கவேண்டாமென்றும் அந்தந்தக் கொத்தளங்களுக்கு வாசற்படிகளுக்கு எஜமானனா யிருக்கிறவர்கள் உத்தாரம் கொடுத்ததின்பேரிலே சிப்பாய்கள் சொல்தாதுகள் தமிழ் சேவகர்கள் எல்லாரும் தாழயிருக்கிற தாய்ச் சேதி வந்து ஷேக் இப்ராம் மனுஷர்கள் கொத்தளங் களிலே வாசற்படிகளிலே இருக்கிற சிப்பாய்கள் வந்து கபுறு சொன்னார்கள். ஒன்று முத்திரைசாவடி அண்டை யிலே விழுந்தது. இன்று பிராமணத்தெருவு அருணாத்திரி அய்யன்வீட்டிலே விழுந்தது. செகப்பு முதலி வீட்டிலே வெள் ளாழத்தெருவிலே ஒன்று விழுந்தது; இப்படி அங்கங்கே விஸ் தாரமாய் விழுந்தது. ஒவ்வொன்று குறிப்புக்கு அறிந்திருக்க வேணுமென்று யெழுதினேன். மனுஷர்களிலேயும் பத்து பேருக்கு சேதமுண்டு. நேற்றும் இன்றும் பிரங்கிக்குண்டுபோட துவக்கின பிறகு பட்டணத்திலே ஜனங்களுக்கும் அச்சமுண் டானது. எதனாலே வருகிறது துலைவாய் வருகிறதுமல்லாமல் சப்தம் தெரியவில்லை நடமாடுகிறதே பிரயாசயாயிருக்குதென் கிற யோசனையாய் வருகிறதின்பேரிலே சிந்தையாயிருக்கிறார் கள். என் புத்திக்கு போருபோய் ஒரு குடத்தை உடைச்சுப் போடுகிற சாமித்தையா பிறங்கி குண்டையும் போட்டு தீர்த்து விட்டு அவனுட சீர்மையிலிருந்து ஆங்களத்தேர் இராசாவை யில் புதுச்சேரியை பிடிக்கிறோமென்று சொல்லி முப்பதுமில்லி யோம் லிவுருக்கு வராகனெண்ணுக்கு எட்டுலிவுரு விழுக்காடு

முப்பத்தேழு லக்ஷம் வராகனும் சிலவு பண்ணிவைத்து தானும் ஜெயித்து வந்தால் அமிராலுத்தியோகம் கொடுக்கத்தக்கதாக பேசிக்கொண்டு, பிடிக்காமற்போனால் தன் தலைக்கு ஆக்கினைக் கூட ஒத்துக்கொண்டு இருபத்திரண்டு உருபடி கப்பல்களுடனேயும் ஏழாயிரம் வெள்ளைக்காரருடனேயும் சண்டைக் கடுத்த வேண்டிய சாமான்கள் பீரங்கிகள் துப்பாக்கிகள் தீக்குடுக்கை போடுகிற சட்டி பீரங்கிகள் இதுகளென்னென்ன சாமான்களுண்டோ ஐரோப்பியருக்குள்ளே அதுகளுக்குள்ளே பொறுக்காய் புதுசாய் முஸ்தீதுபண்ணி வைத்துக்கொண்டு (இங்கிலீஷ்) ஆராயிரக்காதத்துக்கு Leugues நம்முடைய தமிழர் (இந்த தேசத்திய) இரண்டாயிரக் காதவழி வந்தது. கோக்திர மிராலாகிய மேஸ்தர் பொஸ்காவேன் சும்மா போகக்கூடுமா இப்போ தன்னாலே ஆனமட்டுக்கும் போராடி அப்பால் தலை தப்பித்துக்கொள்வதற்கு ஒரு பலத்த முசாபுக்காக ஏதாகிலும் ஒன்று துவக்கினப்போலே அதன்பேரிலே நேரத்தைப்போட்டு போவோமென்று இப்போ ராத்திரி பகல் தியானமாயிருப்பான் அது எதனாலே யென்றால்: சீர்மையிலேயிருந்து வரும் போது சுளுயாசமாய்ப் புதுச்சேரியை வாங்கலாமென்றே வந்தான். இங்கே வந்தபிறகு கோட்டையிருக்கிற பலமும் இருக்கிற ராணுவம் எஜமான் தைரியங்கள் முதலான பிலவன்களை (பலங்களை)க்கேட்டும் தான் வந்து இந்த பாரிசத்திலே சண்டைக்கு ஆரம்பித்து இன்றையதினம் கூட நாற்பது நாளாய் ஒரு காரியமும் சாதகத்துக்கில்லாமற்போய் தான் கொத்தளம் போடுகிறதற்குக்கூட இருபத்திநாலு நாளாய் குண்டுசாலைக்கு உள்பட்டு வழியில்லாமல் கிடந்து அலைகிற அலைச்சலினாலே இனிமேல் காரியம் சாதகமில்லையென்று எண்ணிக்கொண்டு மனதிலே பகருமைபட்டு புறப்படுகிறதற்கு இவர்களுக்கும் மத்தத்து ஒரு கப்பலாகிலும் அல்லது ஒரு காத்துமழை அடிக்க துவககிறதாகிலும் முசார்பாகிலும் Mur:sars கடுமுசாமபாகிலும் அல்லது மழையாகிலும் விஸ்தாரமாய் பெய்தாலும் குருட்டுக்குதிரைககு சறுககினது சாக்கென்று போகத்தக்கதாக மேஸ்தர் பொஸ்காவேன் நினைத்துககொண்டிருக்கிறான். ஆனால் எப்போ சுவாமி தயவுபண்ணுகிறாரோ சத்துருவாகிய இஙகிலீஷ்காரன் எப்போ போவானோவென்று சகல ஜனங்களும் சுவாமியை பிரார்த்தித்துக்கொள்ளுகிறார்கள். எப்போ கடாக்ஷிக்கிறாரோ அறியவேண்டியது ஆனாலிந்த கஷ்டகாலம்

பட்டணத்துக்கு வந்ததற்கு எதுவய்யோ எதுவோ என்னமோ தெரியாது. கொசு கருப்பு நிறமாய் ஊரெங்கும் புறப்பட்டு சமஸ்தமானபேரையும் பகல்கூட இராத்திரிகூட பிடிங்கி தின்னுகிறது. இந்தப் பட்டணத்திலே நாலும் வந்து இருபத்தாறு வருஷம் இருபத்தேழு வருஷமாகிறது ஒரு நாளையிலேயும் இப்படிபட்ட கொசு பட்டணமெல்லாம் ஏகத்தியாய் புறப்பட்டு ஜனங்களை பிடுங்கி தின்னுகிறது பார்த்ததில்லை. இப்போ பிரத்தியக்ஷமாய் அனுபவிக்கிறபடியினாலே அந்த கொடூரத்தை யென்னவென்று சொல்லப்போகிறேன் எழுதப் போகிறேன். முன் சென்னப்பட்டணத்திலேயுமிப்படிதான் கண்டுதென்று நம்முடையவர்கள் முசியே லபுர்தோனேயும் போனவர்களெல்லாரும் வந்து சொன்னார்கள். அப்படியானாலும் துரைக்கிது ஒரு நயமிருக்கிறது. உப்புதண்ணியாய் வாயிலே வார்க்கப்போகாத தண்ணீரெல்லாம் பட்டணத்திலே நல்ல தண்ணீரானாப்போலே இதனாலே பட்டணத்துக்கு ஆக்ஷேபனை யில்லை இக்கட்டுமாத்திரமென்று எண்ணினதுமல்லாமல் நல்ல பாம்பு மிச்சமாயிருந்ததென்று சொன்னார்கள். அப்படி பாம்புகளுமில்லாததினாலேயும் பட்டணத்துக்கு ஆக்ஷேபனையில்லை பிரபு வந்து மெத்த யோகசாலி அதிர்ஷ்டசாலி, ஆனபடியினாலே மலைப்போலே வந்த பொல்லாப்பு பனிபோலே நீங்கி சமஸ்த ஜனங்களும் சுகப்படுவார்கள் அதற்கு சந்தேகமில்லை என்று என் புத்திக்கேற்க கெட்டியாய் தோன்றியிருக்கிறது. இதல்லாமல் பிரபுக்கு இதைத்தொட்டு வெகு கீர்த்திவர பிருப்தி. ராச்சியமெல்லாம் பிரகாசிக்கப்போக இருக்கும்போது மேஸ்தர் புஷ்காவேன் இருபத்திரண்டு கப்பல்களுடனே சீர்மையிலிருந்து வந்து இதுக்குமுன் வந்த மேஸ்தர் கிருபின்சு கப்பல்கள் முதலாய் ஏகத்துக்கு நாற்பது கப்பல்களுடனே வந்து தோத்துப்போய் விட்டார்களென்று அபகீர்த்தி இங்கிலீஷ்காரருக்கு வரவும் இத்தனை பலமாய்வந்த இங்கிலீஷ்காரனை பின்னில்லாமல் ஜெயித்தானென்கிற கீர்த்தி இராச்சியமெல்லாம் பிரகாசிக்க பிரான்சு இராசாவுடைய அதிகாரம் செலுத்தி வந்த ஷெவாலியே முசியே துப்ளேக்சு ஜெனரல் குவர்னதோர் அவர்களுக்கு பிராப்தமிருக்கும்போது இந்த சண்டை வருகுதென்று யோசனைபண்ணுகிறேன்; விவேகிகளெல்லாமப்படியே எண்ணுவார்களென்று எண்ணுகிறேன். இன்று எல்லாம் வாடைக்காற்று அசவியாயிருக்கிறது நேற்று இராத்திரி பெய்

தாப்போலே இன்றைக்கும் மழை துவக்கினால் இங்கிலீஷ்காரர் பவுன்சி இருக்காதென்று சொல்லிக்கொள்ளுகிறார்கள் நேற்று இராத்திரி மழையானபடியினாலே வெளியே மோர்சாவின் பேரிலே போகவில்லையென்று இன்றைய இராத்திரிக்கு வெள்ளைக்கார சிப்பாய்கள் காபிரிகள் முஸ்தீதாய் போகிறதாகச் சொன்னார்கள். இற்றைநாள் இராத்திரியும் இங்கிலீஷ்காரர் கிழக்கேயிருந்து தீக்குடுக்கைகள் போட எட்டு மணிக்கு துவக்கினான் பகல் மேற்கே யிருந்து நிறைய பீரங்கிப் போட்ட துடனே திக்குடுக்கைகளும் போட்டான். நம்முடையவர்களும் இத்தனை நாளும் போட்டாப்போலே பீரங்கி சுறுக்காய்ப் போடவில்லை. இன்றைக்கு சற்று மெதுவாயிருந்தது. இராத்திரி அவன் (இங்கிலீஷ்) சுலுப்பைப் பார்த்து பதினேரு மணிக்குள்ளாக ஏழெட்டு தீக்குடுக்கைகள் போட்டார்கள். இன்று இராத்திரி அவன் போடுகிற தீக்குடுக்கை எங்கேவிழுந்ததோ நாளைக்குத் தெரியும்.

*1748* ஆ செப்டம்பர் மீ 30 உக்கு விபவ ஞூ புரட்டாசி மீ 18 உ சோமவாரம்.

இற்றைநாள் காலத்தாலே நான் கோட்டைக்குப் போன உடனே சாவடி அழகப்பமுதலியாரும், திருச்செல்வராயமுதலியாரும் இரண்டுபேரும் என்னண்டைக்கு வந்து சொன்ன சேதி என்னவென்றால்: தங்களை முசியே தெலார்ஷ் அழைப்பித்து மகா-ா-ா-ஸ்ரீ குவர்னதோர் அவர்களுடைய உத்தாரம் கொடுத்து தாம் நூறு வெள்ளம் நெல் கொடுக்கிறோம். அதை கொண்டுபோய் மீரவெளிக் கடையிலே போட்டு சிப்பாய்கள் பெண்டுகளுக்கும், ஏழைகளுக்கும் சின்ன படியாலே இரண்டு படி விழுக்காடு ஜனம் ஒன்றுக்கு விற்கச்சொல்லியும், அதற்கு மூன்று படி பணத்திற்கு கணக்குப் பார்த்துக்கொண்டு கொடுக்கப்பட்ட நெல்லுக்கு உள்ள காசு வாங்கச்சொல்லியும், அப்பால் தமிழ் தெருவிலே அவரவர் வீட்டிலே போய் இருக்கிற நெல் அரிசியை சோதித்து இருக்கிறதிலே அந்த வீட்டுக்காரருக்கு கால்வாசிவைத்து மற்ற முக்கால் வாசியை அளந்துக் கொண்டு உள்ள கிரயம் கொடுத்துவிடச்சொல்லியும் உத்தாரம் கொடுத்தாரென்று சொல்லி நீங்கள் நாளை காலத்தாலே துரையவர்கள் வீட்டிலே யிருக்கிற நெல்லிலே நூறு வெள்ளம் எடுத்துக்கொண்டுபோய் மீரவெளிக் கடையிலே

போட்டு மேலெழுதினபடிக்கு வில்லுங்கள். மற்றபேர் போய் ஊரிலே யிருக்கிற நெல்லை மேலெழுதி யிருக்கப்பட்ட உத்தாரம் படிக்கு எடுத்துச் சேருங்களென்று சொன்னார். அதற்கவர் வீட்டிலே போய் எடுக்கிறதற்கு ஒரு வெள்ளைக்காரனைக்கூட்டி சேவகரையும் கூட்டினால் நாங்கள் போயந்தபடிக்கு இருக்கிற இடங்களிலே போய்ப் பார்த்து எடுத்துச் செல்கிறோமென்று சொன்னாரென்று சொன்னார். பட்டணத்திற்கு தவக்கம் வந்தால் பட்டணத்துக்குள்ளே இருக்கப்பட்டவர்களிருக்கிற ஜனங்களுக்கு அவரவர் வசத்திலே யிருக்கிற தானியம் கொடுத்து நடப்பித்துக்கொள்ளவேண்டிய கடன்தானென்று சொல்லிப்போட்டு நானும் முசியே பொலோ, முசியே தெப்ரேஸ் பிள்ளை (ஒருத்தன் பேர் விளங்கவில்லை) லோகாபிரமமாய்ப் புடவை பார்க்கிற சாலையிலே உட்கார்ந்து பேசி இருக்கும் போது முசியே தெப்ரேனுடனே நம்முடைய கணக்காக முசியே ரீஷ் துகையிலே ஆயிரம் வராகன் செலுத்துகிறேன். நீரொரு காகிதம் காரைக்கால் கொம்மாந்தான் முசியே ரீஷ் செலுத்திக் கொள்ளச்சொல்லி காகிதமெழுதிக் கொடென்று கேட்டதற்கு எழுதிக்கொடுத்தீரே அந்தக் காகிதத்தைக் காரைக்காலிலே இருக்கிற எங்கள் மனுஷன் கந்தப்பனண்டைக்கு அனுப்பி ஆயிரம் வராகனும் முசியே ரீஷ் துரைவசம் செலுத்தி ரசீது வாங்கிக்கொள்ளச்சொல்லி எழுதியிருந்தேனே. முந்நாள் எழுதிவந்த காகிதத்திலே இருபத்தினாலு மோடி ஆயிரம் வராகன் பணம் செலுத்தி ரசீது வாங்கிக்கொண்டேன். முசியே ரீஷ் துரை சொல்லுகிறதானால் முசியே தெப்ரேன் எழுதின காகிதத்திலே ஆயிரம் வராகன் புதுச்சேரி வராகன் என்று எழுதியிருக்கிறது. நீயானால் இருபத்தினாலு பணமோடி ஆயிரம் வராகன் செலுத்தினாயென்று கேட்டார். நான் புதுச்சேரிக்கெழுதியனுப்புகிறேன். அங்கேயிருந்து எப்படி எழுதிவருகிறதோ அப்படி குறைவு உண்டானால் நான் சம்மதி பண்ணுகிறேனென்று சொன்னதற்கு அவர் எழுதியனுப்பி உத்தாரமறிந்து அந்தபடிக்கு நடப்பித்துக்கொள் என்று சொன்னாரதற்கு இருபத்தினாலு பணமோடி இப்போ ஆயிரம் வராகன் செலுத்தினோமே அது சரிதானா? அல்லவென்று முந்நூற்றிருபது ரூபாய் விலைக்கு செலுத்துகிறதா? எட்டு மாத்துப் பொன் வராகன் செலுத்துகிறதா? அந்த வயணம் எழுதி அனுப்பினால் அந்தபடிக்கு உண்டானது செலுத்திப்போடு

கிறேனென்று எழுதியனுப்பினுனென்று சொன்னதற்கு (நான்) எனக்கானுல் காகிதம் வந்ததில்லையென்று சொல்லி முந்நூத்தி இருபது ரூபாய் விலைக்கு அவ்விடத்திலே எப்படி வழக்கம். பணத்துக்கும் ரூபாயிக்குமிருக்கிறதோ அந்த வெயனுண்டானது செலுத்தி மூவாயிரத்து இருநூறு ரூபாய்க்கு ஆயிரம் வராகனென்று ரசீதெழுதிக் கொடுக்கச்சொல்லி, வாங்கிக் கொள்ளச்சொல்லி காரைக்காலிலே இருக்கிற உங்கள் மனுஷருக்கு எழுதி அனுப்பென்று சொன்னதற்கு நல்லது அந்த படிக்கு காரைக்காலுக்கு தபால் காகிதம் போகும்போது எங்கள் மனுஷருக்கு எழுதியனுப்புகிறேன். நீரும் முசியே ரீஷ் துரைக்கு எழுதியனுப்புங்களென்று சொல்லிப்போட்டு அப்பால் முசியே தேப்ரேன், முசியே போலே முதலான பேர் கையில் அனுப்பிவித்துக்கொண்டு துரையவர்களண்டைக்குப் போய் அவருடனே என் கையிலிருந்த கும்பினீர் நெல்லெல்லாம் கூலிக்காரன் முதலான வேலைக்காரர்களுக்கு சிலவாகிவிட்டது. நான் எழுதிப்போன ரெக்காப்பித்திலாசிம் என்கிற நெல் சிலவு கணக்கை கையில் கொடுத்தேன். அவர் இந்த நெல் சம்மதி அழகப்பமுதலியார் என்னுடனே சொன்னபடிக்கு துரையவர்கள் என்னுடனே சொல்லி இதுக்கெல்லாம் முசியே தெலார்ஷ் கட்டளை யிட்டிருக்கிறது. அவர் நெல் கொண்டுவந்து நீ காண்பிக்கிற கிடங்கிலே சேர்ப்பார். அதன்பேரிலே வித்தியக் கடலை சிலவுபடிக்கு நீ சிலவிட்டுக் கணக்கெழுதிக் கொடென்று சொன்னுர். நல்லதையா ஒரு சார்ஜெண்டைக்கூட அந்த சாவடி கணக்கருடனே கூட்டவேணுமென்று அழகப்பமுதலியார் என்னுடனே சொன்னபடிக்கு சொன்னதற்கு முசியே துய் வைச்சோவென்ருெரு சார்ஜண்டை அழைத்து மேலே உத்தாரம் கொடுத்திருக்கிற வயணத்தை அவனுடனே சொல்லி ஊரிலே எடுக்கிற நெல்லெல்லாம் கடைத்தெருவிலே ரங்கப்பிள்ளை காட்டுகிற கிடங்கிலே சேருங்களென்று சொல்லி உத்தாரங்கொடுத்து என்னைப்பார்த்து சாவடி கணக்கப்பிள்ளைகளையும், வெள்ளைக்காரரையும் கூட்டியனுப்பென்று சொல்லி கப்பே குடித்தெழுந்திருக்கும்போது சந்தாசாயபு சேதி ஒன்றும் வரவில்லையாவென்று கேட்டார்.

இதல்லாமல் மதாம் அல்லிதோஸ்துக்காளைப் பிடிக்க அன்வர்த்திகான் சிறிது குதிரை சுவார்கள் அனுப்பினுராம் மெய்

தானுவென்று கேட்டார். வெளியிலே யிருந்து உள்ளே மனுஷர்களே வருகிறதில்லையே இதென்னவென்று சந்தாசாயபு மகனும் தாபந்தமாய்ச் சொல்லிக்கொண்டிருக்கிறுனென்று சொல்லி இப்பவும் தங்கள் மனுஷர் இரண்டுபேர் வெளியே போவதற்கு வழிக்குச் சீட்டு கேழ்க்கிறுர்களென்று சொன்ன தற்கு நல்லதென்றுர். இதிலே மதனுந்தபண்டிதனிருந்துக் கொண்டு படேசாயபு வீட்டு மனுஷன் ஒருத்தன் மீர்குலா முசேன் மனுஷருக்கு இரண்டுபேருக்குக்கூட சீட்டு வாங்க வேணுமென்று சொன்ன வயணம் துரையவர்கள் கேட்டு பின்னே ஆகுதென்று சொல்லிப்போட்டு ஊர் விசாரிக்க வண்டியின்பேரிலேறிக்கொண்டுபோனுர். அப்போ துரையவர் களுடனே கூடஇருந்த பேர் முசியே லாசு, முசியே ரோபேர், முசியே தோத்தேல் பாதிரி கேர்துக்சு இவர்களல்லாமல் துரை கணக்கன் பெர்தாரன்கூட இருந்தார். அப்பால் துரையவர்கள் போய்விட்ட பிறகு நானும் பாக்கு கிடங்குக்கு வந்து அழகப்ப முதலியார் திருச்செல்வராயமுதலியாருடனே துரையவர்களுத் தாரமும் சொல்லி அந்த சார்ஜண்டையும் சேவகரையும் கூட கூட்டிப் போகச்சொல்லிப்போட்டு நம்முடைய விடுதியாகிய பாலயப்பமுதலி கிடங்கிலே வந்து இன்றையதினம் நம்முடைய வீட்டைச் சுற்றிலும் பீரங்கிக்குண்டு சுறுக்காய் வருகிறபடியி னுலே வீட்டுக்குப் போகாமல் பகலுக்கு கிடங்கிலேதானே ஸ்நானம்பண்ணி சாப்பாடு அழைப்பித்துக்கொண்டு சாப் பிடுகிறதாய்த் தீர்த்து அப்பால் பெய்ண்டரை (வேலைக்காரரை) தண்ணீர் மற்றது எல்லாம் இங்கேதானே முஸ்தீது பண்ணச் சொனனேன. இற்றைநாள் காலத்தாலே கேழ்விபட்ட சேதி: அவன் (இங்கிலீஷ்காரன்) நாலு பீரங்கி வைத்துப் போடுகிற பீரங்கிக்குண்டினுலே வழுதாவூர் வாசற்படியிலே ஒரு வெள்ளைக்காரனுக்கு தோள்பட்டை அடித்துக்கொண்டு போய் விட்டதென்றும், அப்துவாயிமான் குதிரைகளுடைய பில்லுக் காரர் சென்னப்பட்டணம் வாசற்படியிலே புறப்பட்டவர்களைப் பார்த்துப் பேசுவதற்குள் ஒருத்தன் தலையை தூக்கிக்கொண்டு போனதாய் அதன்பேரிலே வெளியே போன பில்லுக்காரரெல் லாரும் உள்ளே ஓடிவந்தார்கள் வந்து என்னுடனே கபுறு சொன்னுர்கள். பின்னையும் அவனிந்தமட்டுக்கும் நூறு குண்டு கள் மட்டுக்கும் தீக்குடுக்கைகள் கூடப் போட்டதாய் அதுகள் செட்டித்தெருவு முதல் வெள்ளாழத்தெருவு பிராமணர்தெருவு

பெரியத்தெருவிலே கூடவந்து விழுகிறதாய் வந்து கபுறு சொன்னார்கள். நம்முடைய வீட்டுக்கடுத்த மேலண்டை சிதம்பரம்பிள்ளை வீட்டிலே பதினொரு ராத்தல் குண்டு ஒன்று வந்து விழுந்து அதை எடுத்துவந்து காண்பித்தார்கள். நேற்று இராத்திரி போட்ட தீக்குடுக்கை ஒன்றிரண்டு ஏறக்குறைய ஐம்பது; ஊரிலே எப்போதும் விழுகிற சாடையாயங்கே விழுந்தது,

ஊரிலே வந்து விழுகிற குண்டைக் கொண்டுபோய் கோட்டையிலே முசியே கோர்னேத் கையிலேயாவது பீரங்கி மேஸ்திரி கையிலேயாவது ஒப்பித்துக் குண்டுக்கு ஒவ்வொரு பணமும் தீக்குடுக்கைக்கு ஒவ்வொரு ரூபாயும் தடையில்லாமல் அவரவர் கொண்டுபோய் கொடுத்து வாங்கிக்கொண்டு போறார்கள். தீக்குடுக்கை உடைந்த துண்டுகள் கொண்டு வந்தவர்களுக்கு நானும் ரெவ்வெண்டு காசு விழுக்காடு ஒவ்வொரு காசு விழுக்காடு கொடுத்து சிறிது துண்டுகளைச் சேர்த்தேன்,

இற்றைநாள் பகலைக்கு மேலாகக்கூட அவன் சுட்ட பீரங்கி குண்டுகள் மிதமில்லாமல் வந்து விழுந்து வீடடிலேயும் சுவரின் பேரிலேயும் இந்தபடிக்குப் புகையிலை கிடங்குக்கு மேற்கு மீர் குலாமுசேன் வீட்டுக்கு வடக்கு இதற்குள்ளாக விழுந்து எடுத்துவருகிறதெல்லாம் பதினாறு ராத்தல் குண்டுதான் விஸ்தாரமாய் வந்து விழுகிறது; மனுஷருக்கு நாலொருபேருக்குச் சேதமுண்டு. அப்பால் நேற்று இராத்திரி மழை பெய்ந்து விட்டவுடனே சிப்பாய்களை வெளியே அவர்கள் மோர்சாவின் பேரிலே போய் சண்டைப்பண்ணச்சொல்லி உத்தாரமானபடியினாலே மழையில்லாததினாலே வெளியே சிப்பாய்கள் போகவில்லை.

அவ்விடத்திலிருந்து இங்கிலீஷ்கார திமர்கோம் ஒருத்தன் ஓடிவந்தான். அவனுக்கு இவ்விடத்திலே உத்தியோகம் கொடுத்து வைத்துக்கொண்டார்கள். மற்றபடி இன்று இராத்திரி ஐம்பது போம்சுமட்டுக்கு கிழக்கே சுலுப்பின்பேரிலே இருந்துப்போட்டான்.

*1748* ஆ அக்டோபர் மீ *1* உ க்கு விபவ ஸு புரட்டாசி மீ *19* உ மங்களவாரம்.

விஜயதசமியானபடியினாலே இன்றையதினம் ஆயுதங்களையும், கணக்குகளையும் வைத்து பூஜைபண்ணினோமென்று

பேருக்குப் பூஜைப்பண்ணி நடப்பித்துப் போடச்சொல்லி தேவாம்பரமுதலிக்குச் சொல்லியனுப்பி நான் கோட்டைக்குப் போனேன். சிதம்பரமுதலியும் அப்படித்தானே பூஜைபண்ணி வைத்து அந்த சமாசாரம் சொல்லியனுப்பினுன். நான் கோட்டைக்குப் போனவிடத்திலே துரையவர்கள் புடவை பார்க்கிற சாலேயிலே வந்தார்கள். வந்தவுடனே போய்க் காண்பித்துக்கொண்டு ஆசாரம் பண்ணினதின்பேரிலே துரை அவர்களிருந்துக்கொண்டு நேற்றையதினம் நெல் வேகு கொஞ்சம் எடுத்தார்கள் என்று கேட்டார். ஒருத்தன் வீட்டி லிருந்து எடுத்தார்கள்; பின்னேயுமவரவர் வீட்டிலே யிருக்கிறது மீராமல் போகாது பார்த்திருக்கிறதை எடுப்பார்களென்று சொன்னேன். அவரவர்கள் வீடுகளிலே புதைத்து வைப்பார் களாம். அதை சோதித்துப் பார்த்து எடுக்கச்சொல்லென்று சொன்னுர்; நல்லதையாவென்று சொன்னேன். சந்தாசாயபு அவர்கள் மனுஷரென்றும் வெளி கபுறு கொண்டுவரவில்லேயா வென்று கேட்டார். அவர்கள் மனுஷர் வெளியே போகிறதற் கில்லே. அவ்விடத்திலே இருந்தவர்களேப் பிடித்துக்கொண்டு போனுர்களோ என்னமோ தெரியாதென்று இப்பவும் வெளியே போவதற்கு மனுஷர்களுக்கு வழிக்குச் சீட்டு கேழ்க்கிறுர்கள் என்று சொன்னேன். அப்பால் நேற்று கேட்டபடிக்கு மீர்குலா முசேன் மனுஷர் படேசாயபு மனுஷர், சந்தாசாயபு மனுஷர் ஏகத்துக்கு ஐந்து துலுக்கர் வெளியே போகிறுர்கள். சீட் டெழுதிக்கொண்டு வரச்சொல்லி முசியே பொந்ராமுக்குச் சொன் ஞர். அந்தபடிக்கு எழுதிவந்ததிலே கையெழுத்துப் போட்டுக் கொடுக்கும்போது சந்தாசாயபு மகன் வெளியே போகப் போகிறுன். உன் மனுஷர் கையிலே சீட்டைக்கொடுத்து அவர் மனுஷரைக் கூட்டிக்கொண்டு கெவுனி வாசலுக்கப்பாலே விட்டுப்போட்டு வரச்சொல்லி, இதல்லாமல் சந்தாசாயபு மகன், படேசாயபு மகன் இவர்களிருக்கிற சாடை அப்போதைக்கப்போ விசாரிக்கச்சொல்லி நயனுருக்குப் பத்திரமாய்ச் சொல்லி வை என்று சொன்னுர். நீங்களின்றைக்கல்லவா நயினுருடனே சொல் லச்சொல்லி உத்தாரங் கொடுத்தீர்கள். நானிருபத்தைந்து நாளாகிறது நயினுருக்குச் சொல்லிவைத்தேனென்று சொன் னேன். அப்பால் சந்தாசாயபு மகனும் படேசாயபு வீட்டுப் பெண்டுகளும் பயப்படுகிற பயத்தை நான் என்னவென்று

சொல்லுவேன். இராத்திரி முப்பதும் இருந்த யிடத்திலே இருக்கிறதில்லையென்று பயத்துக்கடுத்த சாடை என்னமோ அந்த சாடையாய் சொன்னேன். சற்றேயாகிலும் விவேகம் போதாது; இத்தனை ஜனங்களிருக்கிறுர்களே இவன்தான் (இங்கிலீஷ்காரன்) முப்பது நாளாய் (புதுச்சேரியை) பிடித்துப் பார்க்கிறுனே யென்று சொல்லிப்போட்டு ஆனுல் கேள். இரண்டு பாரிசமும் போம்சு விழுகிறது மேலண்டை பாரிசம் மாத்திரம் பீரங்கிக் குண்டு வருகிறதே எத்தனை எத்தனை பேர் செத்துப்போனுர்கள்; எத்தனை பேர் காயப்பட்டார்கள். காயப் பட்டதும், சாவும் பத்து பதினைந்து பேருக்குண்டா? வீடுகளின் பேரிலே மாத்திரம் அங்கே விழுந்து சேதப்பட்டது அது என்ன பரவாயிருக்கிறது. அவர்களுக்குள்ளே இந்தமட்டுக்கும் சாவும், காயமும், வியாதியஸ்தருமாய் ஆயிரத்துக்குமேலே உண்டு. வெள்ளைக்காரர் சேதமில்லாமல் கர்னுடகத்தார் சிப்பாய்கள் வேறேயுண்டு; அதுகள் கணக்குத் தெரியாது. இதுவுமல்லாமல் அவர்களிலே சொல்தாது, கப்பித்தான்மார், மேஜேர்மார், ஒப்பிசியேமார் இப்படி அநேகம்பேர் மனுஷர்கள் நம்முடைய கையிலகப்பட்டும் அபஜெயப்பட்டபோது காயத் திலே சிறிதுபேரும் சாவிலே சிறிதுபேருமாக போனது. சீர்மை (இங்கிலீஷ்) இஞ்சினீரொருத்தன் மேஸ்தர் புஷ்காவேன் கோபிக்க கூடலூரிலே போய்விட்டான். ஆனபடியினுலே அவர்களுக்கு அபஜெயம்; இதல்லாமல் வந்திறங்கினவன் கிழண்டை சமுத்திரக் கரைக்கு அடுத்தாப்போலே பாளையத்தை வைத்துக்கொண்டால் அவனுக்குக் கப்பல்களிலே யிருந்து சாமான்கள் இறங்குகிறதற்கும் மனுஷர்கள் ரஸ்துக்கள் முதலான சண்டை சாமானகளிறங்குகிறதற்கும் இதல்லாமல் இருக்கிறதற்கும் மெதபிலப்பும், எவ்வளவு மழை பெய்தாலும் காலிலே சேரிடாது. கப்பல்கள் மத்தது ஒன்ருெலொன்று இராமற்போனுல் எல்லாம் எலப்புத்தான், அதை என்ன வென்று அப்படிப்பட்ட இடத்தை விட்டுப்போட்டு மேற்கே இறங்கினதினுலே சாமான் போய்ச் சேருகிறதற்கு மெத்த வம்பு. காதவழி கொண்டுபோவதற்குள்ளே நாமின்னதென்று அறியலாம். அதை நாம் கொண்டுவரத்தக்கதாக மனுஷரை அனுப்பிக்கொண்டு வரலாம். இதல்லாமல் சமயத்திற்குப் போயுதவாது கொண்டுபோகவேணுமென்றும் அப்படி சாமான் கள் போகிறபோதும் வருகிறபோதும் மத்தத்து ஆயிரம் பேர்

ஐந்நூறு பேர் போகவேணுமானுல் சண்டைக்கு நாலாவிடத்திற்கு மனுஷரை அனுப்புகிறதற்கு இங்கே; இதல்லாமல் சேறு, கழனிவெளி, வெள்ளவாரி ஒரு முசாய்பு (முச்சொன்) பிடித்து நாலு நாள் மழை பேய்ந்தால் சருவாத்துமனுகயிருக்கப் போகாது. இப்படி பின்னையும் யோசனைபண்ணிப் பார்க்க அவனிறங்கியிருக்கிற இடம் மெத்த அவனுக்கு இளப்பான யிடமேயல்லாமல் ஒருக்காலுமவனுக்குப் பிலப்பானயிடமல்ல. இப்படி பட்ட யிடத்திலே அவன் ரங்கஸ்வாமிதானே அவனுக்கு அந்த புத்தியை கொடுத்தாரேயல்லாமல் மனுஷராலே அங்கேயிறங்க வேணுமென்று நினைத்ததல்ல நமக்கு நல்லகாலம் சுவாமி தயவு பண்ணியிருக்கும்போது அவனுக்கு முத்திரைக்கரை வடவண்டை பாரிசமிறங்காமல் நம்முடையவூருக்கு மேலண்டை பாரிசமிறங்கினுனென்று சொன்னுர். அவன் மேலண்டை பாரிசமிறங்கவும் அவனுக்கு புத்திகொடுத்தது.

இங்கிலீஷ் காரருடைய இராஜாவுக்கு இந்த இஸ்காதுருவையும் மேஸ்தா புஷ்காவேனேயும் அழைப்பித்து இவ்விடத்திலே சண்டைகொடுக்க பண்ணி அப்பால் அவர்கள் அபஜெயபட்டு ஓடிப்போக அப்பாலந்த பெலத்தை முறியடிக்க பிரான்சு இராஜா அறிந்திருந்தும் கும்பினியார் அறிந்திருந்தும், இங்கிலாந்திலேயிருந்து மேஸ்தர்புஷ்காவேன் பலத்தப்படைக் கூட்டிக்கொண்டு இஸ்காதுருடனே இந்தியாவுக்கு, புதுச்சேரியின் பேரிலே போரானென்று அறிந்திருந்தும் உமக்கு அதற்கேத்த பலத்தை மத்தத்து அனுப்பாமலிருந்த குத்தமவர்கள் பேரிலேயிருக்கிறது அது அந்தப்படியிருக்கட்டும் ஆனுலப்படி ஆருயிரம் காதவழியிலிருந்து ஆங்கிலத்தேர் ராஜாவினுலே அனுப்பப்பட்ட இஸ்காதருமிங்கே தேவனும்பட்டணத்தார் சேர்த மெலனும் ஏகத்துக்கு திரண்டுவந்ததை ஒரு சகாயமும் மத்தத்துமில்லாமல் முறியடித்து துறத்தி சகல ஜெயமும் அடைந்தீர் என்கிற கீர்த்தி டில்லி அக்கமட்டுக்கும் இங்கேயும் ஏரோப்பு இராச்சியமெல்லாம் ஏக சூரிய பிரகாசமுமாய் முன்னிருந்ததற்கு இப்போ ஆயிரம் சூரியபிரகாசம் போலே உம்முடைய கீர்த்திபரவி யிருக்கும்போது அந்த மேஸ்தர் புஸ்காவேனுக்கு நம்முடைய பட்டணத்துக்கு வடவண்டை சமுத்திர காரையோரமாய்ப் பயனப்பட்டு இங்கே அவனுக்கு ஸ்வாமியேன் புத்திக்கொடுப்பாரென்று சொல்லி ஆனுல் பிரான்சு இராசாவும்

கும்பினியாருமாய் உபசரிக்கப் போனார்களோ நானறியேன்; ஆனால் பிரான்சு இராஜாவுக்கும் இந்த பிரான்சு ஜாதிக்கும் உம்மாலே செய்யப்பட்ட உபகாரத்துக்கு கீர்த்தியெப்போதும் ஸ்வாஸ்வதாயிருந்தாலும் எந்தடுக்கிலே தத்திக்கொள்வார்களோ தெரியாது யென்று சொன்னதற்கு (துரை) ரங்கப்பிள்ளை மூக்குத்தண்ணீ விழுகுதென்றார். (அதற்கு நான்) மூக்குதண்ணீர் இப்படி னூரத்தனை தண்ணீர் விழுகிற பேர்களுக்கெல்லாம் இப்படி வருகிறதா மூக்குதண்ணீர் விழுந்தாப்போலே இப்படிப்பட்ட சூரியெப்ரகாசம் போலே இராச்சியமெல்லாம் ப்ரகாசிக்கிற கீர்த்திவரும், ஆனாலிப்போ எல்லாருமிதைவிட நூறு பங்கு ஆயிரம் பங்கு கஷ்டப்பட்டாப்போல் மாராமல் கஷ்டப்படுவார்கள் அப்படி ஆயிரம் பங்கு கஷ்டப்பட்டாலும் வராதவர்களுக்கு கீர்த்தி ஒருக்காலும் வரத்தக்கதில்லை சற்றே பிரயாசை காண்பித்து உம்மைப் போலொத்தவருக்கு சகல கீர்த்தியையும் சுவாமி அடைய பண்ணுகிறதற்கு நீங்கள் சந்தோஷ படதேவையில்லையாயென்று சொன்னதற்கு முசியே தோத்தேல், முசியே சேறு, முசியே தெப்ரானேல் இவர்கள் ரங்கப்பிள்ளை சொல்லுகிறது மெற்ற மெய்யென்றும் சொல்லி ரங்கப்பிள்ளை மெற்ற விவேகி அப்படியென்று துரை தாரீபு பண்ணினார். அப்பால் என்னைப்பார்த்து கும்பினீர் வர்த்தகர் பேரிலே எனக்கு இன்றைக்கு காலத்தாலே ரொம்ப கோபம் வந்தது என்றார் என்னய்யாவென்று கேட்டேன். வெளியே போகிறோமென்று உத்தரவு கேழ்க்கவந்தார்கள் குண்டுக்கு பயமிருக்குதென்று சொன்னார். நானறியேன் நானறிந்தால் அப்படி அவர்கள் கேட்பதில்லை என்றேன். அதற்கவர் சொன்னது நீ அறியாமலவர்களை என்னண்டைக்கு வருகிறதற்கிருக்கிறதா நானறியாதுபோலே இருக்கிறேன் நீங்களாய்ப்போய் கேட்டுக்கொள்ளுங்களென்று சொல்லியிருமல் அவர்கள் வருவார்களா? கும்பினீர் (வியாபாரிகள்) உன் அசவில்லாமல் ஒருத்தரிடத்துக்கு போகிறவர்களா? நான் அறியேனா? இவர்களுக்கென்ன பெண்சாதி பிள்ளைகள் ஒருத்தரில்லை பணங்காசு தட்டுமுட்டுகள் கூட அப்புறத்திலே தாண்டவைத்துவிட்டு ஒண்டியாயிருக்கிறார்கள் ஆண்பிள்ளைகள் இப்படி பயப்பட்டால் பெண்டுகள் குஞ்சு குழந்தைகள் யெப்படிப்பயப்படவேணும் அவர்களுடைய பொல்லாத நினைப்பை நான் அறிவேன் இனிமேலப்படி வந்து கேழ்க்கவந்தால் நான் மனம் பொருக்கத்தக்க தில்லையென்று

சொன்னார். இனிமேல் நானறிந்தேனே இனிமேலவர்களைத் தாக்கிதுபண்ணி உங்களிடத்திற்கு வராமல் பண்ணிவிடு கிறேன் என்று சொன்னேன்.

தமிழர் சாஸ்திரக்காரர்கள் இங்கிலீஷ் காரனெப்போ போவானென்று சொல்லுகிறார்களென்று கேட்டார். எங்கள் புரட்டாசி மீ முப்பதாம் தேதிக்குமேல் போய்விடுவார்க ளென்று சமஸ்தமான பேரும் சொல்லிக்கொள்ளுகிறார்கள்; இனிமேல் இருப்பத்தோராந் தேதி முதற்கொண்டு அதற்கு சுப சூசிகம் காண்பித்துக் கொண்டேவரும். எங்கள் மாதம் 13 தேதி மட்டுக்கும் ரொம்ப பட்டணத்திற்கநிர்ஷ்டமென்றும் நாளது 14 தேதி முதற்கொண்டு சுபம் கொடுக்குமென்றும் சொன்னபடிக்கே 14 தேதி வியாழக்கிழமை நம்முடையவர்கள் ஜெயம்பெற்று வந்தார்கள்; இனிமேல் 21-ம் தேதி முதற் கொண்டு நாளுக்குநாள் நமக்கு ஜெயமும் இங்கிலீஷ்காரருக்கு அபஜெயமும் வருமென்று சொன்னதற்கு துரையிருந்துக் கொண்டு இருக்கிற வெள்ளைக்காரரைப்பார்த்து தமிழர் சொல் லுகிறது தப்புகிறதில்லை சரிப்பட்டுவருகிறது வுண்டென்று சொன்னார். அதற்கு முசியே துப்ரேன் மனைபாலத்திலே மெற்ற வென்று சொல்லிக்கொண்டார். அப்போது ஒரு போம்சு கடற் கரையிலே விழுந்ததை இங்கிலீஷ்காரர் நேற்று இராத்திரி போட்டது அதை பட்டணவப்பசங்கள் ஆறுபசங்கள் வாரை போட்டுக்கொண்டு எடுத்துக்கொண்டு வந்தார்கள்; அதை முசியே கோர்னேத்து பார்த்து ஆலங்கிடங்கை கொண்டுபோகச் சொல்லி வழக்கப்படிக்கு ஒரு போம்சு எடுத்து வந்தவனுக்கு ஒரு ரூபாய் படிக்கு கொடுத்துவிட்டான். அதை துரையவர்கள் புடவைபார்க்கிற சாலையிலே உட்கார்ந்திருக்கிறவர் பார்த்து அதைக் கொண்டுவரச்சொல்லி என்னைப்பார்த்து இரங்கப் பிள்ளை இது இருனூத்தி இருபது இராத்தல் அல்லோ இருக் கிறது மருந்து அல்லாமல் சீர்மையிலே ஐந்நூறு ராத்தல் திக் குடுக்கைகள் இதைக்காட்டும் (இதைவிட) விஸ்தாரமாய் போடுகிறது அதிலே இது யெவ்வளவு இதுதானே பெரிய தென்னீரா அதே அது உசந்து தாழவிழும்போது இருபத் தோராயிரம் ராத்தல் பாரத்துடனே விழுகிற படியினாலே எப்படிப்பட்ட மேல் மெத்தைகள், எப்படிப்பட்ட மேல் மெத்தை வளவுகள் கூட நுக்கு நுக்காய் (துண்டு துண்டாய்)

போகுமென்று சொன்னார். அப்படிப்பட்ட குண்டு இந்த இராச்சியத்து வீடுகள் மெத்தைகள் வளவுக்குக் கவையில்லை இப்போ இருனூத்தி நாற்பது ராத்தலுக்குள்ளே இந்த ராச்சியத்துக்கு மெத்தை வீட்டுக்கும் போதுமென்று சொல்லி ஒரு பெரிய நெயசித்தை வாறைப்போட்டு, கோட்டையிலே கொண்டுபோகிறதை கிட்டே கொண்டுவரச்சொல்லி காண்பித்து இதற்கு ஒன்றையத்தனை இருக்குமென்று சொல்லி, அப்பால் அந்த நெயசித்தயைக் கொண்டுபோகச் சொன்னார். அதிலே முசியே நோந்தேல் நான் ஐந்நூத்தைம்பது ராத்தல் கிக்குடுக்கை சீர்மையிலே பார்த்தேனென்று சொல்லிக்கொண்டு அப்படி சீர்மை சண்டையை நீ பார்த்தாயானால் ஆச்சரியப் படுவாய் அது முன்னே இது சண்டையாய் உனக்கு ஒருக்காலும் தோத்தாதென்று இப்படி லோகாபிராமமாய் பேசிக்கொண் டிருந்தார்.

அப்போது இன்றைக்கு மநாம் லமோராந்தியேர் செத்தான் முசியே மாச்சி என்றொரு கப்பித்தான் அவன் மகன் அரியாங்குப்பத்து சண்டையிலே செத்தான். அது முதற்கொண்டு விசாரமாயிருந்து (அவன்) இன்று செத்தான். முசியே ஷேவாலியே என்றொரு ஒப்பிசியேல் வியாதியாயிருந்து செத்தானென்று முசியே தேப்ரோன் துரையுடனே சொல்லி அப்பாலவர்கள் ப்ரஸ்தாபம் பேசிக்கொண்டிருந்தார்கள்.

அப்போது வெளியிலே முத்துமல்லாரெட்டி என்கிறவன் இங்கிலீஷ்காரருக்கு ரொம்ப மத்தத்து பண்ணுகிறதும் நம்முடையவர்கள் வெளியிலே போயிருக்கிறவர்களையெல்லாம் இங்கிலீஷ்காரர் கையிலே ஒப்பித்தும் தான் பிடித்துப்போய் அடித்தும் இப்படி மெத்தவும் தூற்நடத்தை நடக்கிறானென்று கேட்டார். அப்போதானே நான் உங்களுடனே சொல்லவில்லையா? என் கிராமங்கள் கொள்ளையிட்டதும் நம்முடைய ஊரார் வலசைப் போனவர்கள் முதலானவர்களுக்குப் பண்ணுகிற இக்கட்டும் உங்களுடனே சொன்னதற்கு இந்த சண்டையாய் நான் சுவாமி தயவுபண்ணட்டும் அப்பாலவன் தலையை அவன் வைத்திருக்கமாட்டானென்று சொன்னீர்கள். ஆனால் அவன் பண்ணுகிற அநியாயத்தை நானென்னவென்று சொல்லப்போகிறேனென்று சொல்லி சிறிதுகளெல்லா முட்டாகிச்சு (விவரித்து) சொன்னதின்பேரிலே இந்த புத்தி அவனுக்கு

வ்ந்தது அவன் ஆசையைப் போக்கடிக்கிறதற்கு வரத்து. அது சந்தேகமில்லையென்று பின்னையும் அதற்கு பலனுய் எப்படி சொல்லவோணுமோ அப்படியெல்லாம் சொல்லி அழிசபாக்கத்து ரெட்டிகளும் அரியாங்குப்பம் குடியான பேர்கள் சிறிதுபேர்களும் இவ்விடத்து சிலவரங்கள் சொல்லிக்கொண்டு அவர்கள் மேலே குடுத்தனம்பண்ணுகிருர்களாம். அவர்களெல்லாரும் இனிமேல் நல்ல அனுபவம் அனுபவிப்பார்களென்று சொன்னுர். அதற்கு ஐயா நானுமப்படித்தான் கேழ்விபட்டேன். இந்த வேளையிலே புத்தியில்லாமல் ஆங்காரத்துடனே நடக்கிறவர்களுக்கு இனிமேல் புத்திவரப் பண்ணுவிட்டால் முன்னுக்கு சிறிது எளகாத மனதுள்ளவர்களுக்கு முன் அவன் நடந்தவனை என்ன செய்து போட்டார்கள் நம்மை செய்ய? அதற்கு தக்காப் போலே அந்நேரத்துக்கந்நேரம் ஒரு அடமானம் பார்த்துக் கொள்ளுவோமென்று பின்னையும் ஒரு சமயங்களிலே நினைக்காமல் புத்திவர நடப்பிக்கவேணுமென்று சொன்னதற்கு இப்படிப்பட்ட வேலை செய்தவனை ஒருக்காலும் பொறுக்கத் தக்கதில்லை என்று எப்படி சுறுக்காய் சொல்லவேணுமோ அப்படி சொன்னுர். அப்போ கூடயிருந்த வெள்ளைக்காரரும் இப்படிபட்ட கலாப வேளையிலே சமஸ்தமான துரோகம் பண்ணுகிறவனை ஒருக்காலும் மனம் பொறுத்துவிடத்தக்கதில்லை. அவன் லக்ஷ வராகன் கொடுத்தாலும் விடுவார்களென்று நீ எண்ணுதே என்று சொன்னுர்கள்.

இப்படி பேசிக்கொண்டிருக்கும்போது நம்முடைய வீட்டிலே மூன்று குண்டுகள் விழுந்ததென்று முசியே நொத்தேல் துரைக்கு கபுறு சொன்னுர். (துரை) என்னைப் பார்த்து இப்போ எங்கே இருக்கிருய் என்று கேட்டார். வழுதாவூர் வாசல் நெடுந்தெருவிலே முச்சயன் வீட்டுக்குக் கீழண்டை சடையப்ப முதலி வீட்டுக்கு மேலண்டை என் புடவை கிடங்கிருக்கிறது. அதிலே இருக்கிறேனென்று சொன்னேன். உன் பெண்சாதி பிள்ளைக்கூடதானு இருக்குதென்று கேட்டார். ஆமென்று சொன்னேன். பெதுரு பெண்சாதி லாசரு பெண்சாதி இவர்களெங்கே யிருக்கிருர்களென்று கேட்டார். ஆலம்புரையிலே போயிருக்கிருர்கள் என்று சேதி கேட்டேனென்று சொன்னதற்கு முசியே சேலே என்கிறவன் யாரென்று கேட்டதற்கு ரங்கப்பிள்ளைக்கு முன் கும்பினீர் குர்த்தியேயாக இருந்தவன் பெண்சாதியும் இந்திரபிரேத்தா யிருக்கிறவர் லாசரு என்...

வன் (பெத்ரேரா) தம்பி அவனுடைய பெண்சாயும் அவர்கள் ஊரிலே ஒருத்தரும் போவதற்கு முன்னே தங்கள் தட்டுமுட்டு களை எடுத்துக்கொண்டு போனார்களென்றும் பின்னையும் சிறிது விசேஷங்களுமாய் சொல்லி என்னைப்பார்த்து மீராவெளித் தெருவிலே போயிரு இவ்விடத்திலே இரண்டு பார்சத்திலு மிருந்து குண்டு வருகுதென்று சொன்னார், அதிலே முசியே தெப்ளேக்ஸ் இருந்துக்கொண்டு உனக்கு என்ன போம்சுக்கு பய மில்லையா? நீயிருக்கிற விடத்திலே போம்சு விழவில்லையா என்று கேட்டான். முதலாவது ஆண்டவனாயிருக்கப்பட்ட ஸ்வாமினுடைய கடாக்ஷமும் இரண்டாவது முசியே நோவர்னு தோர் அவர்களுடைய பரிபூர்ண தயவும் என்னபட்ட ஒரு பலத்த மெத்தையின் கீழே இருக்கப்பட்ட என்னை போம்சு எப்படி (எட்டி) பார்க்கக்கூட மாட்டாது. ஆனபடியினாலே தான் போம்சு விழுகிற நடுமய்யத்திலே பயமில்லாமல் இருக்குறே னென்று சொல்லி பின்னையும் சற்றுநேரம் பேசியிருக்கும்போது உன்வீட்டின் பேரிலே குண்டுவிழுந்ததே பத்திரமாய் போய் விசாரி என்றார். நல்லதய்யாவென்று சொல்லி அனுப்பி வித்துக்கொண்டு நம்முடைய வீடுதிவிடாய புடவை கிடங்கை வந்தேன்.

நயினார்மார் ஒருத்தருக்கொருத்தர் அடித்துப்போட்டுக் கொண்டு ஊர்காரியங்கள் கூட விசாரிக்காமல் இருந்தார்கள் அவர்களை அழைத்து அம்மாளவர்கள் நினைப்பு உங்களை பிடிங் கிப்போட்டு கிருஸ்தவர்களுக்கு பாளையக்கார உத்தியோகம் வாங்கிக்கொடுக்க வேணுமென்று நினைத்துக்கொண்டிருக்கி றான் அதற்குத்தக்காப்போலே நீங்கள் ஊர்காரியங்களை விசா ரிக்காமல் போனாலும் போகுதென்று நான் மேல்வாங்கிக் கொண்டு விசாரித்துக் கொண்டாலும் நீங்களண்ணன் தம்பி மார் ஒருத்தருக்கொருத்தர் அடிச்சுவிடாமல் (அடித்துக்கொள் ளாமல்) ஒருமையாயிருப்பீரென்று பார்த்தால் அதுகூடயில்லா மல் இப்படி அடித்துவிடுகிறதின் பேரிலே (அடித்துக் கொள் வதின்) உங்கள் காணியாக்ஷியை கவலிமுந்துப் போவீர்கள் அவர வர் சந்துகட்டு பார்த்துக்கொண்டிருக்கிறவர்களுக்கு இது லகு வாய் தோற்றபோகிறதென்று கூப்பிட்டு இவர்களுக்குள் ராசி பண்ணினேன்.

அப்பால் சந்தாசாயபு மகன் படேசாயபு மகன் இவர்கள் இராத்திரியிலே சிப்பாய்கள் வெளியிலே புறப்படுகிற

வெளியிலே குதிரை சுவாருடனே கூடப்போனால் யாருக்குத் தெரியப்போகிறது என்று மகா-ௗ-ௗ-ஸ்ரீ துரையவர்களுக்குச் சொல்லி அவர்களை அறியாமல் அவர்கள் பிறகே மனுஷர்களை வைத்துப் பார்த்துக்கொள்ளச் சொன்னார். அதிலே ஏதாகிலும் வித்தியாசங்கள் வந்தால் தூக்குப் போடுகிறதேயல்லாமல் மனம் பொறுக்கத்தக்கதில்லையென்று சொன்னாரென்று காருத் தம்பி நயனார், பெரியண்ண நயனார், வீரா நயனார்களுடனே கூட பத்திரஞ்சொல்லி அனுப்பிவைத்துப்போட்டு, அப்பால் துலுக்க மனுஷர்களை ஐந்தாறு பேரையும் வெளியே மூசியே டாங்கி அண்டைக்குச் சீட்டும் கொடுத்து பெரியண்ண நயினாரையும் கூடக்கூட்டி வெளியே அனுப்பிவிடச்சொல்லி அனுப்பிவைத்தேன். மற்றபடி வீட்டிற்கு வந்தேன்.

நேற்றும் யெதாக்கிரமமாயவன் போடத்தக்க போம்சு இங்கிலீஷ்காரன் கிழக்கே யிருந்து கடலோரத்திலிருந்தும் நாற்பத்தெட்டு போட்டான். டுஸ்துமாதுபடிக்கு இஞ்சினீர் குளத்தண்டையிலேயும் கோட்டையண்டை நம்முடைய பாக்கு கிடங்கண்டையிலுமாக விழுந்தது. பின்னையொன்றும் மனுஷர் சேதமில்லை. பீரங்கிக் குண்டுகளானால் இன்று சாயங்காலத்துக் குள்ளே போட்ட குண்டும் தீக்குடுக்கைகளும் மேல் பார்சத்தி லிருந்து மிதமில்லாமல் போட்டான். ஐந்நூறு அறுநூறு கணக்கேயல்லாமல் அதற்குத் தாழ்ந்ததில்லை. அவன் போடு கிற குண்டு வழுதாவூர் வாசற்படி முதல் வாணியத்தெருவு மூலைக் கொத்தளம் சென்னப்பட்டணத்து வாசற்படி அதுகள் எல்லாம் ஏகத்துக்குக் குண்டு போய் போட்டான். சென்னப் பட்டணத்து வாசல் நெடுவீதி துவக்கி மீராகுலாமுசேன் வீட் டிற்கு அப்புறமிருக்கிற உப்பாத்தங்கரை மட்டுக்கும் இதற்கு மேற்கே மிசியோனேர் கோவில் நம்முடைய வெள்ளாழத்தெரு பிராமணத்தெரு இதுகளெல்லாம் குண்டுபடாத விடமில்லை. தீக்குடுக்கைப் படாமல்போனாலும் பீரங்கிக் குண்டுகள் வீட்டுக்கு வீடு தப்பாமல் ஒன்றிரண்டு நம்முடைய வீட்டுக்கு மாத்திரம் நாலு குண்டு இப்படி அங்கங்கே தப்பாமல் பட்டது. பெருமாள்கோவில்தெரு, சேனியத்தெரு முதற்கொண்டு குண்டூர் ரமணய்யசெட்டி வீட்டுக்கு வடக்கு மதனந்த பண்டிதன் வீட்டுக்குகூட பீரங்கிக்குண்டு விழுந்தது. இரண்டு

மூன்று குண்டு சமமாக கோவிலிலே போயடித்தது. ஒரு குண்டு கோட்டை அகரதியிலே யிருக்கிற பொருக்கூண்டு பாரிசம் அகரதியிலே தனியே இருக்கிற கொத்தளத்திலேகூட ஒரு குண்டு அடிப்பட்டது. இதிலே சென்னப்பட்டணத்து வாசற்படியிலே அல்லிகானிருக்கிற வாணியத்தெரு மூலைக் கொத்தளங்களிலே இதுகளிலே இரண்டு மூன்று பேருக்குக் காயப்பட்டது சாவும் உண்டென்று சொன்னார்கள். நம்முடையவர்களும் திக்குடுக்கையும், பீரங்கியும் சுட்டது அறுநூறு எழுநூறு உண்டு. அதிலேயுமப்படியே சேதப்பட்டிருக்கும்; பின்னையும் விசேஷித்தசேதி யிருக்கும்.

மற்றபடி அம்மாள் மதாம் துய்ப்ளேக்ஸ் முதலான பேருடனே ஐந்தாறு அக்கியானி பிசாசுகளிருக்கிறது. இந்த ஊரிலே அவர்களை இங்கிலீஷ்காரர்களுக்கு பிடித்துக்கொடுக்க வேணுமென்று வெளியே மனுஷரை அனுப்புகிறோமென்று கேழ்க்கிறார்களே அப்படி வெளியே அனுப்பினால் கபுறு சொன்னார்களென்று சொல்லுவார்கள். நாங்கள் வேணுமென்றால்: உங்களம்மாளுக்கு நித்தியம் இருபது வெற்றிலை கொடுக்கிறோமென்று சொன்னேனென்றும் என்னைப்போலேதானே நீயென்றும் கொடுவென்று பெரியண்ணமுதலியைப் பார்த்துச் சொன்னதாய் பெரியண்ணமுதலி எனனுடனே கோட்டையிலே யிருந்து சாயங்காலம் போகும் துறையாலே கீழண்டை வாசலாலே புறப்படும்போது சொல்லிவிட்டுப் பாக்கு வெற்றிலை போடுகிறதற்குகூட மதாம் துய்ப்ளேக்ஸ் அபாண்டம் போட ஒரு எடுபாடு எடுத்தானென்று சொல்லிவிட்டு இப்படி யிருக்கிறது ஊருடைய அநியாயமிருக்கிறதைப் பத்திரமாயிருக்க வேணுமென்று சொன்னான். சுவாமியல்லோ பொதுவென்று சொல்லிவிட்டு வீட்டுக்கு வந்தேன்.

*1748* ஆ அக்டோபர் மூ *2* உ.க்கு விபவ ஹூ புரட்டாசி மீ *20* உ புதவாரம்.

இற்றைநாள் காலத்தாலே கோட்டைக்குப் போனவிடத்திலே துரையவர்கள் (ஒப்பித்தாலுக்கு) இஸ்தாலுக்குப்போய் கோவாளிகளைப் போய்பார்க்கப்போனபடியினாலே நான் பாக்கு கிடங்குக்கு வந்து உட்கார்ந்தேன். துரையவர்கள் சேவகன் வந்து அழைத்தான். யாரை அழைக்கச்சொன்னாரென்று

கேட்ட விடத்திலே உங்களையும் மூசியே தெலார்ஷையும் அழைக்கச் சொன்னாரென்று சொன்னான். சரிதான் நெல் பிராதுகள் என்று யோசனைபண்ணிக்கொண்டு கோட்டைக்குப் போனேன். அழகப்பிள்ளை முந்தாநாள் துரையவர்கள் தம்முடைய நெல் நானூறு வெள்ளம் கொண்டுபோய் மீராவெளிக் கடையிலே போட்டு பணம் ஒன்றுக்கு பெரிய படி ஒன்றரை படி நெல் விழுக்காடு விற்கச்சொல்லி உத்தாரம் கொடுத்தீர். அந்த நெல் முன் 18-ந் தேதி சரியாய் விற்றுப்போட்டு அந்தப் பணத்தை அழகப்பிள்ளைக்குக் கொண்டுபோய் யார் கையிலே முதலிடுகிறதென்று துரையைக் கேழ்க்க வந்தார். அவரும் நானும் துரையைக் கண்டோம்; ஆசாரம் பண்ணினோம். நேற்று ஒரு கரிசை மேலே இருநூறு மரக்கால் எல்லாம் ஊரெல்லாம் தடவி எடுத்தார்களாம். இதென்ன பரிகாசமா? சாவடி கணக்கர் போகிறவர்கள் விளையாடவா போனார்கள் என்று கேட்டு, அவரவர் குழியிலேப் போட்டுவைப்பார்கள், ஒளித்துவைப்பார்களென்று நேற்று இராத்திரி சாவடி ஏஷக்காரவர் (பேஷ்காரர்) அவர் மகன் கபுறு வந்து சொன்னதின் பேரிலே நீங்கள் பார்க்கிறபடிக்கு தடவித்தடவி தீராது. அவரவர்கள் வருஷாசலக் கட்டாக வைத்துக்கொண்டு வகைக்கிறவர்களுமுண்டு. நாலு மாதத்திற்கு ஆறு மாதத்திற்குக் கொண்டு வைத்திருக்கிற பேர்வழிகளுக்கு நன்றாய்த்தெரியுமே அவரவர்களை அழைப்பித்து உங்கள் கையிலே என்ன இருக்கிறதென்று கேழ்க்கிறது இவ்வளவுதானா? அதனமிருந்தால் வீட்டை எடுத்துக்கொள்ளுவோம், அடிப்போம்; அபராதம் வாங்குவோமென்று ஒரு முனைக்கிடாவி சீட்டை வாங்கினால் அவனவன் பயந்து உள்ளபடிக்குச் சொல்லுவான். அப்பால் பத்து விடத்திற்கு பத்து பெயரை அனுப்பி சோதித்துப் பார்த்து இருக்கிறதை அளந்தெடுத்துக்கொண்டு கால்வாசியை நிறுத்திப் போடலாமென்ற வயணம் சொல்லி திட்டம் பண்ணினேன். அந்தபடிக்கு இன்று முதல் நடக்குமென்று சொல்லி அதன்பேரிலே இருக்கிற நெல் சீக்கிரமாய் வெளிப்படுமென்று சொல்லியனுப்பினேனென்று சொன்னதற்கு அழகப்பிள்ளையைப் பார்த்து நீங்கள் வேணுமென்றால் திட்டமாய் வர வர கையில் இருக்கிற நெல்லெல்லாம் எடுப்பீர்கள். நீங்களெச்சலுக்கு ஆசைப்படுகிறபடியினாலே காரியம் கெட்டுப் போகிறது, உங்கள் காதுகளை அறுக்கவேணுமென்று ...து

(எசி) ஒரு வெள்ளைக்காரருனல் தாக்ஷண்யமில்லாமல் பார்ப்பா ரென்று சொல்லி மூசியே தெலார்ஷ் வருகிறமட்டுமிருமென்று சொன்னர். அதனுலே நானூறு மரக்கால் நெல் விற்ற பணம் இருக்கிறது யார் வசத்திலே கொடுக்கிறதென்று கேட்டதற்கு நம்முடைய கணக்கு ரங்கப்பிள்ளை கையிலே செலுத்தச் சொல்லி சொன்னர். அவர் செலுத்தப் போகிருர் நான் இருந் தேன். அதிலே தெலார்ஷ் வந்தான்; அவனைப் பார்த்துப் பட்டணத்திலே இருக்கிறவர்கள் நெல் வைத்துக்கொண் டிருக்கத்தக்கவர்கள். குடியானவர்கள் ஒரு மாதம் இரண்டு மாதம் வருஷகால கட்டளை வைத்துக்கொண்டிருக்கிறவர்கள் கையில் (தெக்லாராசியம்) திக்குல்சோம் எவ்வளவு இருக்கு தென்று கையெழுத்துவாங்கி அப்பால் பொதைபல்கள் சோதிக் கிற கோல்களுண்டே அதைக் கொண்டுபோய் குத்திப் பார்த்து தப்பிதமாய் சொன்னவர்களுக்கு வீடு வாசல் நெல் இருக்கிறது எடுத்துக்கொள்ளுகிறதுமல்லாமல் நூற்றிருபது வராகன் அப ராதமும் வாங்கி ஐம்பது அடியும் அடிக்கிறதென்று பிரசித்த மாய்ச் சொல்லி அவரவர் கையில் கையெழுத்து வாங்கி எப்படி தானியம் சேர்க்கப் பார்க்கவேணுமோ அப்படி சேத்துப்பாரு மென்று மூசியே தெலார்ஷுக்கு துரை சொல்லிப்போகச் சொன் ஞர். அப்பால் என்னைப் பார்த்து நீயும் கூடப்போய் பாரு மென்று சொன்னர். நல்லதென்று உத்தாரப்படிக்கு நாமும் மூசியே தெலார்ஷும் நம்முடைய பாக்கு கிடங்குக்கு வந்து சாவடி கணக்கப்பிள்ளைகளை அழைத்தனுப்பி தலையாரி, சேவ கர்கள் ஆறு பேரை நியமித்து அவரவரை வந்து நம்முடைய பாக்கு கிடங்குக்கு அழைப்பித்துக் கொண்டுவரச்சொல்லி திட்டம்பண்ணி மூசியே தெலார்ஷும், மதாமும் மூன்று மணிக்கு பாக்கு கிடங்குக்கு வந்து சேருகிருேம் நீரும் வாருமென்று நமக்குச் சொல்ல, அந்தபடிக்கு அனுப்பிவித்துக்கொண்டு வீட்டுக்கு வந்தேன்.

இங்கிலீஷ்காரன் நேற்றைய சட்டமாய் மேலண்டையி லிருந்து இரண்டு இடத்திலிருந்து போடுகிற போம்புகளும், பீரங்கிகளும் மிதமில்லை. ஒரு இடத்திலிருந்து போடுகிறது வாணியத்தெரு மூலைக் கொத்தளம் முதற்கொண்டு சென்னப் பட்டணம் வாசற்படி முத்தியப்பிள்ளை தோட்டத்திற்கு வடக்குந் தெருவெல்லாம் மதனந்தபண்டிதன் விட்டண்டையி

லிருக்கிற சக்கிலிக் கொத்தளம் மட்டுக்கும் மழை மாறி வருஷிக்கிறப்போலேயும், வருஷிக்கிறதில்லை மூன்று நாலு பெண்டுகளுக்கும். பிள்ளைகளுக்கும் சேதமேயல்லாமல் மற்றபடி சேதமில்லை. புகையிலை கிடங்குக்கு மேற்கு கும்பினீர் கிடங்கிற்கு தெற்கு மீர்குலாமுசேன் வீட்டுக்கு வடக்கு வழுதாவூர் வாசற்படி உள்படகடைத்தெருவுநம்முடையதெருவு, பிராமண தெருவு உள்பட செவுருகளுக்குள்ளாகவும் விபரீதமாய் பீரங்கி குண்டுகளும் தீக்குடுக்கைகளும் வருஷித்தான் அவரவர் வீட்டிலே படாததில்லை. ஆனால் சேதமில்லை மனுஷருக்குப் படவில்லை; போகிற குண்டுகள் மிசியோனேர் கோவில் நம்முடைய வீட்டின்பேரிலே குண்டுகள் தீக்குடுக்கைகள் போகிற பாட்டையாய் தீர்ந்தது. அந்தபடிக்கு சாயங்கால பரியந்திரம் நேற்றைய தினம் போலேதானே வருஷித்தான். அப்பால் சாயங்காலம் மூன்று மணிக்கு பாக்கு கிடங்குக்குப் போய் திக்கெபெரெசோம் (தெக்ளாராசியம்) எழுதி அதிலே முன்னே நெல்லும், அரிசியும் என் கையிலிருக்கிறது ஒன்றரை கரிசையன்று கையெழுத்துப் போட்டேன். அப்பால் அவர் கையெழுத்துப் போட்டார்கள். ஏகத்துக்குக் கையெழுத்தாய் நெல் அரிசி துரை ஏற்பட்ட பிறகு அதற்கு வயணமெழுதுகிறேன். அப்பால் சாயங்கால பரியந்திரமிருந்து துரை யெழுத்து வாங்கி வராதபேருக்கெல்லாம் சொல்லி நாளைக்கு வரச்சொல்லி தாக்கீது பண்ணிப் போட்டு முசியே நெலார்ஷ் காலத்தாலே வராரென்று அவரவர்கள் வீட்டுக்குப் போனார்கள்; நானும் சாயங்காலம் விடுதியே வந்தேன். இற்றைநாள் நம்முடையவர்கள் வெளியிலே இரண்டு விடத்திலே புதிதாய்க் கொத்தளமெழுப்பி அதன்பேரிலே பீரங்கியை வைத்துப் போட்டதும் சுற்றுக்கோட்டைக் கொத்தளங்கள்பேரிலே வாடிக்கையாய் போடுகிறபடிக்கு பீரங்கிகளும் மொடுத்யோ வைத்து தீக்குடுக்கை போட்டதுமாய் ஐந்நூறு அருநூறு குண்டுகள் அதல்மேலே யல்லாமல் தாழ்த்தியில்லை. இற்றைநாள் இராத்திரி மேல்பாரிசமும் கீழ்பாரிசமுமாய் அவனும் போட்ட தீக்குடுக்கைகளும், பீரங்கிக் குண்டுகளும் நூற்றைம்பது அருபதுமட்டுக்குமுண்டு. உயர நடுமய்யத்திலே வருகிற தீக்குடுக்கை வெடிக்கிறதே அந்த சிதள் இருபது முப்பது புறப்பட்டு அரை நாழிகை வழி ஒரு நாழிகை வழி போயடிக்கிறது. அதுகள் உடைந்த துணுக்குகளாய் போகும்போது காற்றடியின் வெகு சப்தமாயிருக்கிறது ஏப்படி தவனிக்குமோ அந்த விதானமாய் தவனித்து விழுகிறது

மீர்குலாமுசேன் வீட்டு வாசற்படியிலே ஒரு தீக்குடுக்கை விழுந்தது; துரை வீட்டு குசினியிலே ஒன்று விழுந்தது. சம்பா கோவிலிலேயும் தோட்டத்திலேயும் நாலு ரெண்டு விழுந்தது. புகையிலை கிடங்கு அண்டைக்கும் நம்முடைய வெள்ளாழத் தெரு குதிரை லாயத்தண்டை ஒன்று நம்முடைய பாக்கு கிடங்குக்குப் பிறகே மணக்குளத்தங்கரை பிள்ளையார் கிட்டே இருக்கிற சட்டைக்காரச்சி வீட்டிலே விழுந்தது. ஒரு சிறுக் கியைக்கூட இரண்டு கால்களையும் உடைத்துப் போட்டது. சேஷய்யங்கார் வீட்டுத் தெருவிலே ஒன்று விழுந்து வெடித்தது. இப்படி விழுந்து வெடித்த இடங்களிலே இரண்டு மூன்று பேருக்கும், மனுஷருக்கும் சேதமேயல்லாமல் மற்றபடி வீடு களுக்கு சேதமுண்டு; அதுவேயல்லாமல் வேறே சேதமில்லை. தீக்குடுக்கைகள் இரண்டு பாரிசங்களிலும் வருகிறபடியினாலே இராத்திரி ஜனங்களுக்கு அவஸ்தை ரொம்ப ஆனாலும் மிகுந்து ஒரு மாதமாய் பழகினபடியினாலே காலே அரைக்கால்வாசி பயம் தீர்ந்து அரைக்கால்வாசி பயங்காரரும் (பயப்படுகிறவர் களும்) கால்வாசி பயங்காரரும் அரைவாசி பயங்காரருமாய் இருக்கிறவர்கள் அநேகம்பேருண்டு.

வெள்ளைக்காரரைப் பார்க்கப்போனால் தமிழருக்கு பின்னை யும் நூறு பங்கு அத்தனை பயமென்று சொல்லவேணுமேயல்லாமல் மற்றப்படி வெள்ளைக்காரர் தீக்குடுக்கைகளுக்கு பயப்படாதவ ரொருக்கருமில்லை இந்தபடிக்கு தீக்குடுக்கைகள் அண்டைம் போடுகிறதெல்லா மிந்தடுக்கிலே நடந்தேரிப்போகுது சுவாமி யினுடைய சித்தம் பெரிதானபடியினாலே அந்த தீக்குடுக்கைகள் வெடிக்கிறதும் விழுகிறதற்கும் வெகுஜனங்களிறந்து போக வேணும். ஆனால் சுவாமியினுடைய ஆக்கினைபடிக்கு நடக்கிற தானபடியினாலே இத்தனை தீக்குடுக்கைகள் விழுந்தும் இத் தனை பீறங்கிக்குண்டுகள் விழுந்தும் மனுஷர் சேதமில்லாம லிருக்கிறது ஆனபடியினாலே சுவாமியினுடைய சித்தம் பெரிய தானபடியினாலே அவர் மாய்கையை அறியப்போகாது என்று சகல சாஸ்திரங்களிலே சொல்லியிருக்கிறதென்ன அபத்தமா? ஆனபடியினாலே லோகாசையை விட்ட பெரியவர்கள் விவேகி களாயிருக்கிறவர்கள் தபசுபண்ண வேணுமென்று சொல்லு கிறதும் தாங்கள் காசியாய் போனதும் திஷ்டாந்திரமல்லவா பார்த்துக்கொள்ள வேண்டியது. இற்றைனாள் சந்தோசி அண்

டையிலிருந்து முப்பது வருஷமாய் ஆடு அடிக்கிற கிழவன் அவன் வெற்றிலை விற்முன் என்று அவனைப்பிடித்து வந்து கேழ்க்க சிப்பாய்கள் சண்டைக்கு நேற்றுப்போனபோது கூடப் போயவர்கள் வெற்றிலை தோட்டத்திலே வெற்றிலை கிள்ளும் போது நானும் கூட வெற்றிலை கிள்ளிவந்தேன் அழைத்துப் போன சிப்பாய் என் கடையிலே வெகுனாளாய் ஆட்டிறைச்சி வாங்குகிறவன் அந்த சனுவின்பேரிலே கூடப்போய் வெற்றிலைக்கிள்ளிவந்து பணமொன்றுக்கு பதினறு வெத்திலை மேணிக்கு விற்முன். நான்போனதும் கூட வந்ததும் இருபது முப்பது சிப்பாய்கள் அறிவார்கள் என்று சொல்லும்போதும் இங்கிலீஷ்காரர் வேகுக்காரனென்று இரண்டு காதயுமறுத்து இருனூறு அடியுமடித்து கழுத்திலே சங்கிலிமாட்டி மண்சுமக்க விட்டார். இந்த அனியாயத்திற்கு பட்டணத்திலுண்டான ஜனங்கள் நடுங்குகிருர்களே யல்லாமல் இங்கிலீஷ்காரன் போடுகிற தீக்குடுக்கைகளும் பீறங்கி குண்டுகளும் இன்னம் வருஷம் வருஷித்ததுப்போல வருஷித்தாலும் இந்த சிப்பந்திக்கு நடுநடுங்கினுப்போலே அதற்கு ஒருக்காலும் பயப்படார்கள் அப்படி பட்டணமெல்லாம் நடுநடுங்குகிறது அதை எத்தனையென்றும் பலவிதமென்றும் எழுதப்போகிறேன்; ஆனல் நாளுக்குநாள் அதிலிருந்துஜனங்களுக்கு உபத்திரவமாகிறபடியாலே இந்த ஊழிக்காச்சலை ஸ்வாமி எப்போ நிறுத்துகிறுரோ தெரியாதென்று சகல ஜனங்களும் ஸ்வாமிக்கு முறையிட்டுக் கொள்ளுகிருர்கள். இதற்கு அவர் ரக்ஷிக்கவேணுமே யல்லாமல் மற்றப்படி வேறே ஒரு விதம் காணுமென்று பிறந்த குழந்தைகள்கூட சொல்லிக்கொள்ளுகிருர்கள இந்த முறைப்பாடு எப்போ ஸ்வாமி தயவு பண்ணுகிருரோ தெரியாது.

இற்றைனள் இராத்திரி ஐந்நூறு சிப்பாய்களும் அன்பது காபிரிகளும் முஸ்தீதாயிருக்கிருர்கள் வெளியே போகவேணுமென்றிருக்கிருர்கள். உப்பாத்தங்கரை அண்டையிலேயிருந்து ஒரு தாமதமா வளத்திக்கொண்டு அங்கேயிருந்து சுடுகிறபீரங்கியினலேயும் ஒ நத்தியேயினலேயும் போடுகிறதைக் கலைத்துப் போட்டு பீறங்கிகளை ஆணி அடித்துப்போட்டு வருவோமென்று எத்தனமாயிருக்கிறதாகவும் ஒருவேளை உப்பளம் வேணுமாகில் முன்னூறு சொல்தாது போகத்தக்கதாக சென்னப்பட்டணத்து வாசற்படியிலே யிருக்கவுமென்று சொல்லிக்கொள்ளு

ஒிருர்கள். இதல்லாமல் நாலு நாளாய் பிடித்து அம்மாள் சேவகர் குண்டுதாழைமட்டுக்கும் போய் வருகிறதேயல்லாமல் சிப்பாய்களும் வெளியே புறப்படுகிறதில்லே.

இற்றைநாள் சாயங்காலம் மூனு மணிக்கு ஒரு நெடும் பீரங்கி 18 ராத்தல் குண்டு ஓடிகிற பொடிச்சுனுல் ஐந்துபேர் சொல்தாதுகளும் மற்ற சொத்துகளும் ஒரு ஒப்பிசியல் போர் விளங்கனும் (பேர் தெரியாத) செத்ததாய் சொன்னுர்கள்.

1748 ஆூ ஒக்தோபர் மூ 3 உ க்கு விபவ ஸு புரட்டாசி மீ 21 உ குருவாரம்

இற்றைநாள் காலத்தாலே நடந்த அதிசய மென்னவென்ருல்: நேற்று இராத்திரி புறப்பட்ட சிப்பாய்கள் மோர்சாவின் பேரிலே போவதற்கு லகுவில்லாமல் வடக்கு நோக்கி குண்டு தாழையண்டை இவர்கள் போகும்போது இங்கிலீஷ்கார மனுஷர் போக்குவருத்தும் பீறங்கியிருக்கிற வண்டி இழுத்து போகிறவர்கள் ஒருவிதம் பாடிக்கொண்டு போவார்களே அந்த சத்தம் கேழ்விப்பட்ட மட்டுக்கும் ஏதோ கொண்டுபோகத்தக்கதாக போகிருர்கள் என்று நம்முடையவர்கள் குண்டு தாழையிலே பதுங்கி மனுஷர்களை அனுப்பிப் பார்க்கச் சொன்ன மட்டுக்கும் (இங்கிலீஷ்காரர்) அவர்கள் மனுஷர் பீறங்கி இழுத்துவர சீர்மையிலேயிருந்துக்கொண்டு வந்த வண்டி பெரியது அதை இழுத்துப் போனுர்கள். ஆனபடியினுலே பீறங்கி இழுக்கிருர்களென்று யோசனைபண்ணி தனமும் மட்டாய் போகிறதா விஸ்தாரமாய் போகிறதாவென்று பார்த்துக் கொண்டேயிருந்தார்கள் பொழுது விடிந்தவுடனே அவர்கள் மருந்துக்குண்டு இறங்கினது முன்னே கொண்டுபோனுர்கள் அப்பால் இங்கிலீஷ்காரர் இருபத்தினுலு இராத்தல், பிரஞ்சு ராத்தல் இருபத்திரெண்டரை இராத்தல், குண்டு போடுகிற பீறங்கி புதுசு அதன்பேரிலே இங்கிலீஷ் இராஜாவினுடைய முத்திரை போட்டிருக்கிறது இந்த சண்டை நிமித்தியம் வரவழைத்துக்கொண்டு வந்ததென்று சொல்லுகிருர்கள் அந்த இரண்டு பீறங்கிகளையும் இறக்கி இந்த வண்டியிலே அடியிலே சங்கிலியிலே மாட்டி அப்பால் ஜனங்கள் கயிறு கைகளினுலே பிடித்து இழுக்கிறதல்ல மார்பிலேபோட்டிழுக்கிறதாய் முஸ்தீது பண்ணியிருக்கிறது. அது மார்பிலே போட்டிழுக்கிறதற்கு

மனுஷருக்கு சோவில்லாமலும் அறுந்துப் போகாமலும் மெது வாய் துவண்டு கொடுக்கவும் மிருக்கத்தக்கதாக குதிரைமயிரிலே வெகு நேத்தியாய் பின்னிப்போட்டிருக்கிறது. அதை மாற்பிலே போட்டுக்கொண்டு வண்டியை இழுத்துக்கொண்டு போகிறது வண்டியிலும் மெற்ற பெரிய வண்டி ஒன்று அதற்குச் சின்ன வண்டி ஒன்று இப்படிப்பட்ட வண்டியாலே மாட்டியிழுக்கும் போது சேதி வந்தது. அவர்கள்பேரிலே நம்முடைய சிப்பாய் களும் காப்பிரிகளும் போய் விழுந்து துப்பாக்கி வழங்கும் போது அவர்கள் கொஞ்ச மனுஷருடனே இருந்தபடியினாலே அவர்களும் ஒருதரம் துப்பாக்கி வழங்கினார்கள். அதிலே இவர் களிலே இரண்டு மூன்று பேருக்கு காயமும் இரண்டு குதிரை கள் சாவும் ஆனது அவர்களிலே ஒரு பீரங்கி மேஸ்திரி பெரிய வெள்ளைக் குதிரையின்பேரிலே ஏறிக்கொண்டு வந்தவன் விழுந்தான். குதிரைக்கு இரண்டு காயங்கள் அவர்களிலே பத்து பதினைந்து பேர்களுக்கு சாவுகாயமுமானது ஆறுபேர் இங்கி லீஷ்காரரையும் பிடித்துக்கொண்டு பீரங்கிகளையும் வண்டிக ளுடனே இழுத்துக்கொண்டு நம்முடையவர்கள் வருகிற சேதி துரையவர்களுக்கு வந்து இங்கேயிருந்து பட்டணவர் கூலிக்கா ரர் போயண்டவர்களைக் கூட்டி அனுப்பினார்கள். இங்கிலீஷ் காரர் பவுன்சும் கூலிக்காரரும் அந்த மட்டுக்கும் ஓடிப் போனார்கள் அந்த மட்டுக்கும் நம்முடையவர்கள் சகல உச்சா கத்துடனேயும் வீவ் லெருவா (Vive le Roi) கூப்பிட்டுக் கொண்டு பீரங்கி வண்டிகளை இழுத்துக்கொண்டு வந்து சென் னப்பட்டணம் வாசற்படி வந்து சேர்ந்தார்கள். இதிலே துரை யவர்கள் அப்துலயிமானுக்கு கொடுக்கத் தக்கதாக கும்பினியார் முன் காரைக்கால் வாங்கினபோது முசியேநும்மா அழைப்பித்த தஞ்சாவூர் இராசாவுக்கு கொடுக்கவேணுமென்றது; ஒரு வெள்ளியின்பேரிலே கெட்டிப்பொன் மொலாம் பண்ணின காசு வேலை செய்தது ஒரு தட்டும் கிண்ணியும் அது அப்போ கொடாமல் கையிருப்பாய் நின்றது. அது நானூறு விராகன் விலையாம். அதுவும் ஒரு எக்தேபுதேள் (golde brocad) சிப்பம் இருபது கெஜமும் எடுத்து வைத்திருந்தது அப்போது துரை யவர்கள் என்ன கபுறு கேட்டு அதை முஸ்தீது பண்ணினாரோ அப்பாலவர்கள் என்ன கபுறு வந்து சொன்னார்களோ அதன் பேரிலே அதை நிறுத்தி அப்துலாயிமானுக்கு ஆறு கெஜம்

எச்தேபுதேன் கெஜம் பத்து பனிரண்டு பொரும்; அதுவும் தறங்கு இரண்டு வர்னசகலாந்து இரண்டு கெஜமும் பன்னீரும் பாக்கும் வெத்திலேயும் கொடுத்தார். அல்லிகானுக்கு இரண்டு வர்னசகலர்த்து இரண்டுகெஜம் கொடுத்தார், அப்பால் ஒப்பிசேமாருக்கு எட்டுபத்து பேருக்கு ரெவ்வெண்டு கெஜம் சகலாத்து தெமிபென் கொடுத்தார்கள். சிப்பாய்மார்களில் மமோர் ஒருத்தன் அவன் கோபித்துக்கொண்டு போனான் அவனுக்கு ரெட்டை குழல் துப்பாக்கி ஒன்றும் இரண்டு கெஜம் சகலாத்தும் கொடுத்தார்கள். அப்பால் சிப்பாய்களுக்கு எழுனூறு ரூபாயும் கொடுத்துப் போகச் சொன்னார்கள் இதுகள் வாங்கிக்கொண்டும் அப்துலயிமானுக்கு சந்தோஷமில்லை அல்லிகானுக்குமப்படித்தான் ஒரு இங்கிலீஷ் துப்பாக்கி ஒன்று, பயோனேத்து ஒன்று கொண்டுவந்தவனுக்கு எட்டு ரூபாய் கொடுத்து முசியே கோற்னேத் அந்த துப்பாக்கியை வாங்கிக்கொண்டான். அப்பால் அவர்களது தம்பூரு ஒன்று பிடிங்கி அடித்துக்கொண்டு வந்தார்கள். அவர்கள் மனுஷர் வடுகர்க்கப்பட்டார்கள் அவர்களைக் கூட கூட்டிக்கொண்டுவந்து காவல் வைத்தார்கள். மற்றப்படி முன் வெகுமானமெடுத்து வந்தபோதும் அப்துலாயிமான் மனுஷன் ஜெகன்னுதய்யன் கோட்டையிலே யிருந்தான் அவன் கண்டான் மறுபடி அதை கொண்டுபோய் கிடங்கிலே முசியே கோற்னேத்து வைத்துப் போட்டதும் ஜெகன்னுதய்யன் பார்த்திருந்து இந்த இரண்டு சேதியும் அப்துலாயிமானுக்குச் சொல்லி அனுப்பினான். அதன் பேரிலே அவர்களுக்கு பின்னையும் ரொம்ப விசனமாய் உச்சாக பங்கமாய்ப் போனார்கள் எனக்கேற்க தோணுகிறது. முன் கொண்டுவைத்த வெகுமானத்தை மறுபடி கொண்டுபோக காரிய மென்னவென்னல் முன்னே அவருக்கு சேதியானது அவர்களது (இங்கிலீஷ்காரது) வெகுதனம் வந்து அதற்கெஜமான் கொம்மாந்தானுனிருக்கிறவனொருத்தன் அவர்களுடனே சண்டைபண்ணி அவர்களிலே இரனூறு முன்னூறுபேர் செற்றதும் அந்த வெள்ளைக்குதிரைக்காரன் பீறங்கி மேஸ்திரியை படைக்கு கொம்மாந்தானென்று கபுறு கேட்டதின்பேரிலே அந்த வெகுமானம் யெடுத்து வைத்ததாய்க் காணுது. அப்பால் வந்த (இங்கிலீஷ்) பவுன்சு கொஞ்சம் செத்தவர்களும் காய பட்டவர்களும் பத்துபதினைந்தென்ருப்போலேயும் ஒருதரம் சுட்டதுடனே ஓடிப்போய் விட்டார்களென்கிறதும் மறுபடி.

அவர்களுக்கு (இங்கிலீஷ்காரருக்கு) மத்தத்து வருவதற்குள்ளே பிரங்கியை இழுத்துக்கொண்டு உள்ளே வந்துவிட்டார்கள் என்கிற கபுறு கேட்டும் மறுபடி முன்கொண்டு வந்த வெகுமானத்தை அனுப்பிப்போட்டு வேறே கொஞ்சமாய் கொடுத்ததாய் தோணுது அப்பால் துரையவர்கள் சித்தமென்னமோ தெரியாது ஆனாலிந்த வெகுமானம் அவரவருக்குக் கொடுக்கிற போது இவர்களுக்கு சரசமாய் வாங்கிக்கொள்ளவில்லை. துரையவர்களும் சரசமாய் கொடுத்ததாக காணவில்லை. அதெதினாலே யென்றால் அப்போதைக்கப்போது மல்கட்டு மறுகட்டும் பேரிலே இவர்கள் கேழ்க்கக் கேழ்க்க அழைப்பித்து கொடுத்தபடியினாலே அப்படிக்கண்டது சாடை. அப்பால் புலிக்கொடிக்காரர் அம்மாள் சேவகர்கள் வந்து நின்றார்கள் அதிலே நொண்டி சவரிமுத்துக்கு இரண்டு கெஜமும் பொன்னனென்றொருத்தன் அவனுக்கு இரண்டு கெஜமும் வெகுமானம் வாங்கிக்கொண்டு போனார்கள்.

அப்பால் அந்தாலுக்கு சேவகருக்கு நூற்றன்பது ரூபாய் கொடுத்தார்கள் இந்த வேடிக்கையெல்லாம் பார்த்து சந்தோஷமாய் (நான்) துரையவர்களுக்கு சலாம் பண்ணின உடனே ரங்கப்பிள்ளே பார்த்தாயா எப்படியிருக்கிறதென்றார். அதற்கு நான் சொன்னது இப்போ இரண்டு பீறங்கிகளும் இரண்டு வண்டிகளுமிழுத்து வந்தது மேஸ்தர் புஷ்காவென்று கோந்திரமிரால் வந்திருக்கிறானே அவனை பிடித்து வருவதக்கு அத்தியந்த சந்தோஷம் பார்த்தோமே அந்த சந்தோஷமும் கொஞ்ச நாளையிலே பார்ப்போமென்று சொன்னதற்கு (துரை) நகைத்து ஸ்வாமி அப்படி தயவுபண்ணவேணுமென்றார். அப்படியே தயவு பண்ணிதான் உமக்கு வெகு கீர்த்திவரப் போகிறதென்று சொன்னதற்கு பார்த்தாயா ரங்கப்பிள்ளை என் உடம்பு முகம் கருத்து போனதுபார்த்தாயா? எத்தனை சங்கடமென்று சொன்னார் உம்முடைய வம்ஸத்துக்குகூட உமக்குக்கூட பத்துக்கோடி திரவியம் சிலவழித்தாலும் வராத மகத்தாகிய கீர்த்தியை அடைகிறதென்று சொல்ல சற்றே சரேம் வருத்தப்படுகிறது தானே பார்பார்களா? இவ்வளவு வருத்தப்படுவதால் தான் இப்படிப்பட்ட மகத்தாகிய கீர்த்தியை அடைகிறதென்று சொன்னேன் கிட்டயிருந்த முசியே புசி, முசியே ரொபேர், முசியே சேறிற, முசியே துக்கிளவர்களெல்லாம் மெய்யென்றெத்துக்கொண்டு

நகைத்துக்கொண்டிருந்தார்கள். அப்புறம் துரை சாப்பிட மேஜைமேலே போய் உட்காரும்போது நானும் ஆசாரம் பண்ணி அனுப்பிவைத்துக்கொண்டு வீட்டுக்கு பனிரெண்டடித்து அரைமணிக்கு வந்தேன்.

இற்றைனால் அதிகாலமே நம்முடையவர்கள் சுடுகிற நெடும்பீறங்கிதானே இரண்டுபேரும் பீறங்கி வெடித்து எட்டு பத்து வெள்ளைக்காரர் செத்தும் காயமுமானார்களென்று கபுறு சொன்னார்கள். அதிலே நாலுபேர் காயக்காரர் காலத்தாலே ஆஸ்பத்திரிக்கு போகும்போது நான் பார்த்தேன்.

இரண்டு பீரங்கிகளும் (இங்கிலீஷ்காரரிடமிருந்து கொண்டுவந்தது) இரண்டுவரையிலும் சென்னப்பட்டணம் வாசற்படிக்கு ஒரு பெரிய வண்டி நுழையாதென்று நிறுத்தி இவ்விடத்திலேயிருந்து வண்டிக்கொண்டுபோய் அந்த வண்டியிலே ஒரு பீறங்கிக் கட்டிக்கொண்டு உள்ளே கொண்டுவந்து கோட்டைக் கிழண்டை கொண்டுபோய் போட்டுவைத்தார்கள். அப்பால் பெரியவண்டி உள்ளே வராதென்று அந்த வண்டியைக்கழட்டி உள்ளே கொண்டுபோய் சேர்த்தார்கள். ஆனாலவன் (இங்கிலீஷ்காரர்) சீர்மையிலிருந்து வரும்போது பீரங்கியிழுப்பதற்கு மூனுவண்டியை கொண்டுவந்ததாகவும் அதிலே இரண்டு வண்டி இருப்பதாகவும் அது பெரிய பீறங்கி இழுக்கமுடியாதென்றும் அவனுக்கு அபஜெயத்துக்கு ஆதியிது என்றும் நம்முடைய பிராஞ்சுக்காரருக்கு ஜெயத்திற்கு இது ஆதியென்றும் சொல்லிக்கொண்டார்கள். இந்த பீரங்கியை இழுத்துக்கொண்டு கும்பலுடன் வரும்போது இங்கிலீஷ்காரர் பறச்சேரி கொத்தளத்திலிருந்து பீரங்கியினாலே போட்டார்கள். அது ஒரு குண்டு வந்து ஷேக்வுசேன் மாயேயிலேயிருந்து வரும்போது கூட்டிவந்தவன் மருட்டியக்குட்டையனொருத்தன் மிறுத்தஞ்சயனாய்க்கன் யென்றவனை சொல்லுவார்கள். ஆனாலெல்லோரும் சொல்லிக்கொள்ளுகிறதும் மகா தைரியத்துடனே எதிரி பலத்தின்பேரிலே தடையில்லாமல் போய் விழுகிறவன்: நல்ல மனதுடையவனென்றும் அவனை தலையை தூக்கிக்கொண்டு போய்விட்டதென்றும் உடல்மாத்திரமங்கே விழுந்துபோனதென்று சமேதாரன் ரொம்ப அவன் விழுந்து போனதற்கு அங்கலாச்சானென்றும் சொல்லிக்கொண்டார்

க்ள். இதல்லாமல் பங்காளத்திலேயிருந்து துரையவர்கள் வரும்போது அஞ்சாறு மெத்தீஸ்க்கார பிள்ளையாண்டான்கள் கூட வந்தவர்களிலே லேரான்சு என்ற ஓர் பிள்ளையாண்டான் சற்றுக் குட்டையாய் அவர்களுக்குள்ளே யெல்லாம் அந்த காரனாகவும் இருப்பான், அவன்பேரிலே துரையவர்களுக்கு சற்றுப்ரிதி அதனமாகவுமிருக்கும் சங்கீத வித்தையிலே சற்றே நிபுணுதை (நிபுணர்) என்றுதான் துரைக்கும் பாரதியவர்கள் வண்டியின்பேரிலே போனால் பிறகே இவன் சின்ன குடை பிடித்துக்கொண்டு போவான். இவன் வயது இருப்பத்தைஞ்சு இருப்பத்தாறுக்குள்ளே யென்று தோற்றுகிறது. அவன் இந்த பீரங்கி இழுத்துவருவதை வேடிக்கை பார்க்கப்போனான். அவனுக்கு ஒரு குண்டுவந்து தொடையை அடித்துக்கொண்டு போனது. அவனொருவேளை செத்தாலும் சாவான். அல்லது தொடைமட்டுக்கும் வாங்கிப்போட்டால் ஆயிசு உண்டானால் பிழைப்பானோயென்னமோ தெரியாது. அவனை ஒப்பித்தாலுக்கு எடுத்துக்கொண்டுபோனார்கள். மற்றபடி பீரங்கித்துண்டுகள் இங்கிலீஷ்காரர் மேலண்டை வழங்கினதும் கிழண்டை வழங்கினதும் தீக்குடுக்கைகள் போட்டதும் நேற்றிய சட்டம்தான் நம்முடையவர்களும் நேற்றிய சட்டம்தான் பீறங்கிகள் போட்டதும் தீக்குடுக்கைகள் எரிந்ததும் அவர்கள் போட்டதிலே கொஞ்சம் பத்து எட்டு வீடுகள் சேதமுண்டு. ஐந்தாறு மனுஷருக்கும் பெண்டுகளுக்கும் ஆண்பிள்ளைகளுக்கும் சேதமுண்டு. நான் யெத்தனையென்று யெழுதப்போகிறேன் செத்ததைமாத்திரம் குறித்துவைத்தேன்.

மற்றப்படி காறுபாரும் வெகுமானம் கொடுக்கிறதும் நிருத்துகிறதும் எல்லாம் பெண்சாதி சொற்படி இல்லாமல் மற்றபடி சுதாவாய் நடக்கிறப் பேச்சில்லை. அவனதிகாரமேயல்லாமல் துரையதிகாரம் அடங்கிப்போயிருக்கிறது மற்றப்படி நாலும் முசியே தெலாரிஷாம் சாயங்கால பரியந்திரம் பாக்குகிடங்கிலேயிருந்து நெல், அரிசி நெக்லாரேசியம் பண்ணினவர்கள் கையிலேயெல்லாம் கையெழுத்து வாங்கி சாயங்கால பிற்பாடு வீட்டுக்கு அவரப்படி போனார்; நானிப்படி வந்தேன்.

இதல்லாமல் நேற்று இராத்திரி அம்மானவர்கள் வேகுகாரரிலே இரண்டுபேர் என்னண்டைக்கு வந்துசெட்டித்தெரு

பக்கமாகயிருக்கிற சீனுவாசசெட்டி வீட்டிலே வந்து என்னுடனே சொன்ன சேதி: அம்மாளுங்கள்பேரிலே மெத்த கோபமாயிருக்கிறுன். ஏதாகிலும் வந்து ஒன்று தப்பிதமாய் சொல்லச்சொல்லுவான்; அதற்கு நாங்கள் சொல்லுவோம். சொன்னல் ருஜுவிக்க கொண்டுவந்து விடச்சொன்னுல் பொய்யாய்ப்போனுல் எங்களைப் பிடித்துக்கொண்டு தண்டனை பண்ணுவார்கள். அப்படி எவ்வளவாகிலுமுண்டானுல் அதை மலையாய் வளர்த்திப் போடலாம். ஒன்றுமில்லாமல் எப்படி சொல்லுகிறது என்று சொல்லுவோம். அப்படி எந்நேரமும் உங்கள்பேரிலே ஏதாகிலும் சொல்லச்சொல்லி போராடிக் கொண்டிருக்கிறதுதான் இங்கிலீஷ்காரருக்கு வெகு அனுப்புகிறுனென்று சொல்லுங்களென்கிற வாக்கியமேயல்லாமல் வேறில்லை. நீங்கள் நடக்கிறது வெகு சுமுத்திரியா (சமுத்தாய்) இருக்கிறபடியினுலே ஒருத்தருக்கும் வாயில்லை; சற்று உண்டாயிருந்தால் அம்மாளுக்கிருக்கிற கோபம் மெத்த மோசத்திலே கொண்டுவந்து விடுவாள் என்று சொல்லி கொஞ்சம் நாலூறு வெற்றிலைக்காணுங் கொடுத்து இப்போ நாங்கள் ஒருத்தரை தலையை வெட்டிவைத்துப் போடவேணுமானுல் வெட்டிப் போடுவோம். அப்படியாங்காட்டும் (அப்படியாய்) எங்கள் பேச்சு அம்மாள் கேழ்க்கிறது என்று சொன்னுர்கள். இப்போ நடக்கிற காரியம் தெரியாதா? இந்த வெற்றிலை நம்மை நினைத்துக்கொண்டு வந்தீர்களே உங்களுக்கு வெகு மானம் நாளை காலைநன்றையிலே நான் தாரேன் இன்னும் ஏதாகிலும் வெற்றிலை அகப்பட்டால் கொண்டுவாருங்கள் என்று சொல்லி, பின்னையும் ஏதாகிலும் சேதியுண்டாகில் வந்து வந்து சொல்லுங்களென்று சொல்லியனுப்பிவைத்தேன். நல்லதென்று போனுர்கள்; அவர்களைக் கொண்டுவந்து விட்டவன் நம்முடைய சிதம்பரமுதலியார் அவர்களிரண்டு பேரிலே முன் அரியப்பமுதலியண்டையிலே யிருந்து திருடி ஓடிப்போனவன் அவன் பேர் முத்து பின்னெருத்தன் மன்னுதனென்கிறவன் ஒருத்தன் பின்னையும் அவர்கள் சொன்னது சேனே (ரொம்ப) உண்டு அதுகளெல்லாம் எத்தனை யென்று யெழுதப்போகிறேன். சுசனையா (சுட்சிமாய்) யெழுதிவைத்தேன்.

இற்றைநாள் அல்லிகான் அப்துலயிமான் காலத்தாலே சண்டை பண்ணிப்போட்டு துரையவர்களண்டைக்கு வந்த

உடனே மதாம்கூட இருக்கும்போது சொன்ன சேதி: இரண்டு தரம் மூனுதரம் சண்டைக்குப்போனதும் உங்கள் பிரான்சுக் காரர் வருகிறவர்கள் ஓடிப்போகிறதினலே காரியத்தாடி கெட்டுவந்தது உங்கள் குதிரைக்காரருக்கோ முடன், நாங்கள் போய் அவர்கள் பேரிலே (இங்கிலீஷ்காரர்) சண்டை பண்ணும்போது இவர்களை பிடவை வீசிறி அழைக்க இப்படி ஓடிப் போனல் அவர்களுக்கு யெந்த எண்ணமாயிருக்கும், மற்ற காரியத்தாக்ஷி (கெடுதி) வரும் அத்துடன் பயந்தவர்கள் ஏன் சண்டைக்கு வரவேணுமென்று முசியே நோந்நேலுக்கு நாலொருத் தரம் சொல்லி சொல்லி அனுப்பியும் இப்படி புறப்பட்டு ஓடிப் போவார்களுண்டா இனிமேல் உங்கள் வெள்ளைக்காரரே எங்களுக்கு கவையில்லை. அந்த வெள்ளைகாரர் ஏறுகிற குதிரைகளை மாத்திரம் எங்கள் பாரிசம் பண்ணிப்போடுங்கள் அப்பால் உங்களுக்கு நாங்கள் கொண்டுவருகிற ஜெயத்தை பாருங்கள் என்று நாலொருதரம் அல்லிகானும் அப்தலியிமானும் சொன்னர்கள்; அதற்கு துரையவர்கள் மற்றுமுண்டான வெள்ளைக்காரர் மதாமுக்குகூட மனதிலே தாங்கலுண்டானலும் ஒன்றும் செய்யப்போகாது என்று அந்த பேச்சுகளை மறைத்து வேறே பிரசங்களாய் (பிரசங்கங்களாய்) நடத்தினர்கள். அப்பால் துரையவர்கள் காப்பிரிகளைப்பார்த்து உங்கள் நூறுபேர்களை போகச்சொன்னல் முப்பதுபேர்கள் போவதென்று மெத்தவும் கோலம்பண்ணினர். அப்படி நடந்தபிறகு காப்பிரிகளையெல்லரம் பார்த்து பகலைக்கு மேலாக வாங்களென்று சொல்லி யனுப்பினர்.

அன்று இராத்திரி மேலண்டையும் கிழண்டையுமாய் அன்பது தீக்குடுக்கைகள் மாத்திரம் போட்டான் அங்கங்கே எப்போதும் விழுகிற சாடைபடிக்கு வீடுகளிலேயும் தெருவுகளிலேயும் விழுந்தது எழுததக்கயிடமில்லை. ஏழைகள் வீடுகள் போலே விழுந்தது.

1748 ஆ ஒக்தோபர் மீ 4௳ க்கு விபவ ௵ புரட்டாசி மீ 22௳ சுக்கிரவாரம்.

இற்றைனாள் நாலும் முசியே தீலாராசும் பாக்கு கிடங்குக்கு வந்து அங்கே அவரவர்களை அழைப்பித்து நெல்லுதெக்ளாராகியம் பண்ணிவைத்திருக்கும் போது துரையவர்களழைக்கிறுரென்று

சேவகன் வந்து அழைத்தான். அப்போ முசியே தெலாராகுடனே எச்சரித்துவிட்டு துரையவர்களண்டைக்கு கோட்டைக்குப் போனேன்; அப்போது துரையவர்களிருக்கிற காமிறாவிலே வேலூர் சாலிகான் (மூர்தாஜா அலிகான்) மனுஷர் மீர்பாக்தார் முகம்மது சய்யித் என்கிறவன் ஷேக் அப்துல் ரகிமான், ஜெமே தார், அவர்கள் மூணுபேரும் நாற்காலி போட்டுக்கொண்டு (நாற்காலிலுட்கார்ந்துக் கொண்டு) ஷேக் அப்துலாயிமானுக்கு வேலூரிலிருக்கப் போயிருக்கிற ஷே மனுஷன் மகம்மது ராஜா வென்கிறவன் யெழுதியனுப்பினதாய் ஒரு பார்சீ காகித மொன்று கையிலே பிடித்து துலுக்கர் பேச்சிலே அப்துலாயி மான், ஜெமேதார் துபாஷ் அப்பாயி மதா மண்டையிலேயிருக் கிற கருத்த துலுக்கன், பேர்விளங்காத அவன் துபாஷ்தனம் பண்ண மீர்பாக்த்கரி படித்து துலுக்கர் பேச்சிலே சொல்லு கிறதையெல்லாம் துரையவர்களுக்குச் சொல்லிக்கொண்டிருக் கும்போது நான் போய் சலாம்பண்ணி நின்றேன், அப்போ துரையவர்களுடனே சொன்னது: வேட்டவலம் பாளையத்து மேலே போய் மாபுசுகான் சண்டை பண்ணிக்கொண்டு சுற் றிக்கொண்டிருந்தானே அந்தபண்டாரி பெரிய அய்யாவை பிடித்துக்கொண்டு தலைவெட்டிப் போட்டான் என்றும் தலை வெட்டிப்போடும் போது மீர்அசாத் பணம் காசு கொடுத்து நவாபு சாயபு தலையைவெட்டச் சொன்னபடியினாலே நானிந்த த்ரேகத்தையும் பிடித்துக்கொண்டு இந்தமட்டுக்கும் சண்டை பண்ணினேனென்று சொன்னமற்போலேயும் அதன் பேரிலே மீரசாத் சாகிர்களெல்லாம் கட்டவும் அவன் ஜில்லா வைக்கூட வாங்கத்தக்கதாக யோசனைபண்ணி அப்துல்சலீல் வந்து இங்கிலீஷ்காரர் மேஸ்தர் புஷ்காவேனை கண்டுபேசி வழுதாவூர் கோட்டை வாங்குகிறதற்கு பீரங்கிகள் திக்குடுக் கைகள் முதலான சண்டைசாமான்களெல்லாம் கேட்டது மல் லாமல் கொஞ்ச பலனும் கேட்டதாயும் அதற்கு மேஸ்தர் புஷ்காவேன் சொன்னது: நாங்கள் புதுச்சேரி வாங்குகிறதற்கு நீங்கள் பவுன்சுடனே வந்து மத்தத்து பண்ணி புதுச்சேரியை வாங்கிக்கொடுத்தால் ஒரு நாளையிலே உங்களுக்கு நான் வழுதாவூர் வாங்கிக் கொடுக்கிறேனென்று சொன்ன தாகவும் அதன்பேரிலே அப்துல் ஜலீல் மறுபடி நபாபு மாபுசுகானண்டைக்கு செஞ்சிக்குப் போகவேணுமென்று இருக்கிறதாகவும் நபாபு மாபுசுகானண்டைக்கு இங்கிலீஷ்

கார மனுஷர்களை அனுப்பி பேச வைத்ததின்பேரிலே இங்கி லீஷ்காரருக்கும் மத்தத்துவருகிற தென்றதாகவும் திருச் சினுபள்ளியிலே பாளையக்காரர் விசும்பிச்சு (விசேஷித்து) சீர்மையெல்லாம் கொள்ளையிடுகிறது சீர்மையைக் கூட்டிக் கொண்டதாகவும் இன்னம் கோட்டையைக்கூட கட்டிக் கொள்ளுகிறதாயிருக்குதென்று எழுதிவந்தபடியினாலே முதல் தன்னுடைய காரியம் பார்த்துக் கொள்ளவேண்டியதானபடி. யினாலே இங்கிலீஷ்காரர் மதத்து வரமாட்டானென்றும் ஒரு ஜாடை செஞ்சியிலே இருக்கிருப்போலே இருக்குதென்றும் அப் பால் நபாபு முறுத்திசல்லிகான் குதிரைகளும், சிப்பாய்களும் அனுப்புகிறதற்கு மருந்துகுண்டானபடியினாலே சிப்பாய்கள் வரமாட்டோமென்று சொல்லுகிறார்களென்றும் அல்லவென்று நீர் வேணுமென்று யெழுதியனுப்பினால் பேசி அனுப்புகிறே னென்று மிதமில்லாமல் நம்முடைய ஜீவனுடனே தங்கள் காரியத்திலே ஆஜிராயிருக்கிறோமென்று எழுதினதாய் காகி தத்திலே எழுதினதாய் படித்து படித்துச்சொல்ல துரையவர் கள் கேட்டுக்கொண்டிருந்தார்கள் நானும் மேலே யெழுதபட்ட படிக்கு கேட்டுக்கொண்டிருந்து ஆனஉடனே ஷேக் அப்து லயிமான் என்னைப்பார்த்து இங்கேயிருந்து ஆற்காட்டுக்கும் மகம்மது ரஜாவென்றிருந்தவனை அனுப்பியிருந்தேன். அவ னெனக்கு எழுதின காகிதமிது ரங்கப்பிள்ளை, நீரும் படித்துப் பாரும் இந்த காகிதத்தை சுருட்டி மெழுகு சீலையிலே வைத்துக் கொண்டு வந்தான். ஆனபடியினாலே நலங்கியிருக்கிறதென்று சொல்லி மீர்யாத்காரியைப் பாத்து பிள்ளை கையிலே கொடு மென்றான்; அப்போ நான் என் பிறகே நின்ற மதனாந்தபண்டி தனைப்பார்த்து அந்த காகிதத்தை வாங்கி படியென்று சொன் னேன் அந்தபடிக்குவாங்கி மதனாந்தபண்டிதன் படித்து சொன்னதிலே அவர்கள் படித்து சொன்னதற்கும் இவர் படித்து சொன்ன சேதிக்கும் இதிலே இரண்டுசேதி அதிலே யிருக்காது அதிகமாய் துரைக்கு சொன்ன தென்னவென்றால்: அப்துல் சலீல் வழுதாவூர் வாங்குகிற நிமித்தியம் கண்டு பேச வந்ததாகவும் அதை மறைத்தபடியினாலே போரதாயிருக்கிற தாக படித்துச் சொன்னசேதி அதிகம் அதிலே யெழுதியிருக் கிறது. அப்துல் சலீல் வந்தான் போகிறதாயிருக்கிறதென்று யெழுதியிருக்கிறதேயல்லாமல் வழுதாவூர் சேதி எழுதியிருக்கா

தென்று அதனமாய் சொன்னது. இரண்டாவது முறுதுசல்லி கான் சேதியே அவன் பேரேயில்லே குதிரை சுவர்கள் சிப்பாய் களேயும் கண்டு பேசினல் இது மருந்து குண்டு துப்பாக்கி பீரங்கி சண்டையேயல்லாமல் கத்தி சண்டையல்லவென்று பயந்து வரமாட்டோமென்கிருர்களென்று யெழுதி அல்லவென் றெழுதினல் நான் ஆர்க்காட்டுக்குப்போய் அந்த சிப்பாய்களே யும் கண்டுபேசி யெழுதியனுப்புகிறேனென்று இருந்ததேயல் லாமல் வேலூர் முறுதுசல்லிகான் பேரே லூரே யில்லாதது யெழுதி இருக்கிறதாய் அதிகமாய் சொன்னுர்கள். என்னேப் பார்த்து துரையவர்கள் சொன்னது: அப்துசல்லி பயித்தியக் காரனேப்போலே வந்து இவர்களே (இங்கிலீஷ்காரரை) மத்தத் துக்கேட்டுக்கொண்டு அப்பால் குரங்குபோலே அங்கு மிங்கும் ஓடிக்கொண்டிருக்கிருனென்று சொன்னுர்; அதற்கு நாளிருந் துக்கொண்டு அப்துசல்லியினுடைய புத்தியை நாமறிந்த சாடையோ அறியாததோவென்று சொன்னமாத்திரத்திலே மீர்யாதகாரும் மகம்மதுசாயபும் தாங்கள் வந்தாப்போலே துரையுடனே சொல்லிக்கொண்டார்களோ தெரியாது இவர் கள் எங்களே லரச்சொல்லி யெழுதிவந்த மட்டுக்கும் போக வேணுமென்று சொல்லிக்கொண்டார்கள் அதற்கு துரை யவர்கள் சொன்னது: இந்த சண்டை வேடிக்கை இன்னம் ஐந்தாறு நாள் பார்த்துப்போட்டு அப்பாலே போகலாமென்று சொன்னுர். நான் வந்ததொன்று இரண்டாவது காகிதத்திலே எழுதியிருக்கிறதொன்று, இவர்கள் படித்துச்சொன்னதொன்று நான் காகிதம் படித்துச்சொல்ல கேட்டு வரும்போது தானே இவர்கள் முகமெல்லாம் வெளுத்துப்போனது. ஒருவேளே துரையவர்கள் என்னே காகிதச்சேதி என்னவென்று கேட்டால் சொன்னுல் தாங்கள் சொன்ன பேச்சு பொய்யாய்ப் போகு மென்று இவர்கள் முகமிருந்த வேடிக்கையைப் பார்க்கப் போகாது. இரத்தமெல்லாம் செத்துப்போய் பிணமுகம் பட்டு கண்டதொன்று இதல்லாமலிவர்கள் இராஜா அலிகான் மனுஷர் முருதுசல்லிகானுக்கு பயந்தோடி வந்திருக்கிருர்க ளென்று எங்கே நான் சொல்லிவிட்டால் இவர்கள் நாளது வரைக்கும் முருதுசல்லிகானுக்கு எழுதியனுப்பினேம். அவர் ஆயிரம் இரண்டாயிரம் குதிரைக்காரரையும், நாலாயிரம் ஐய்யாயிரம் ஷத்தோமும் கூட்டுகிறேமென்றெழுதி இருக்கிரு ரென்று அவர் அடிக்கடி காகிதமனுப்புகிறதாகவும் அந்தச்

சேதியை துரையவர்களுக்கு சொல்லுகிறப்போலே இவர் ஆம் என்று சொல்லுகிறப்போலேயும், பின்னையும் எழுதி வருகிறப் போலேயும், ஒரு புரடாயொன்று சொல்லவேக் அப்துலயிமான் கூட தப்புக் காகிதங்களை இங்கேதானே எழுதிவைத்துக் கொண்டு படித்துக் காண்பிக்கிறதும் மறுபடி எழுதியனுப்பு கிறதும் நானறியப்போகாதென்றும், பார்சி காகிதங்கள் துரையவர்கள் அவனுக்கு எழுதுகிறதைவிட தாங்கள் தானே எழுதிவைத்து முத்திரையை வாங்கிப்போய் போட்டு ஆயுதங் களை அனுப்பிவைத்தோமென்று இப்படியெல்லாம் இவர்களை புரடாபண்ணி அந்த சலுவின்பேரிலே கோவிந்தராயன் வியாச்சியம் பிரபு மத்தியஸ்தலத்திலே தீர்த்துக்கொள்ளச் சொல்லி சொன்ன கவையில்லாமல் பண்ணிக்காட்டி சின்ன துரைக்குச் சொல்லியனுப்பி காவலிலே கோவிந்தநாய்க்கனை வைத்துக்கொண்டு முசியே துய்மா சம்மதி மணிலா அரம்சாம் (பாதி) பங்குவைத்த ஆயிரம் வராகனுக்கு ஆயிரத்தைம்பது வாரகனுக்கு ஆக சீட்டெழுதிக்கொள்ளுகிறதற்கு ஆக உபாயம் பண்ணி சீட்டுமெழுதிக்கொண்டு அப்பாலிதற்கு துரையவர்கள் மத்தியஸ்தமென்று திரும்பியும் போகாதபடிக்கு அவருக்கிந்த புரடாவைச் சொல்லியெழுதியிருக்கிற கூட்டெழுத்தெல்லாம் எங்கே வெளியே போகுதோவென்கிற அச்சத்தினாலே சீக்கிற மத்துக்கு நல்லது நீங்களுத்தாரம் கொடுத்தபிறகு ஆகுதென்று நடந்தார்கள். நடந்து அப்புறம் போய் துரையவர்கள் வசத் திலே பாரீசு லீவுருகளிலிருக்கிறதே அதிலே இரண்டு லீவர்கள் கொடுத்தால் நாங்கள் வேலையில்லாமல் சும்மாயிருக்கிறபடி யினாலே படித்துக்கொண்டிருந்து கொடுக்கிறோமென்று துலுக் கப்பயன் துபாஷ்தனம் பண்ணினானே அவனுடனே வெளியிலே யிருந்து சொல்லி அனுப்பினார்கள். அதற்கு துரையவர்கள் தம்முடைய கணக்கன் முசியே பேர்த்ராமுக்கு உத்தாரம் கொடுத்து அவர்களுக்கு சரிபோன லீவுரெண்டு கொடுத்து மறுபடி வாங்கிக்கொள்ளென்று உத்தாரம் கொடுத்து அவர் களைக் கொண்டுவந்து மறுபடி படித்தான் உடனே ஒப்பித்துப் போடச்சொல்லி சொல்லென்று சொன்னார். நல்லதென்று துலுக்கப் பயல் வெளியேயிருக்கிறவர்களுடனே போய் சொன்னான். அப்பால் புறப்பட்டு போய்விட்டார்கள். அவர் களை சமீபித்து கேழ்க்கிறதற்குக் கூடயில்லாமல் வெளியே போய்க் கேட்டார்கள். இதிலே மனதச்சம் தெரிவித்

கொள்ளலாம் விவேகிகளுடையவற்கும் யென்னசொன்னாலும் தெரியாது. அப்பால் பிறபு காகிதம் படித்துப்பார்த்தாயே என்னயெழுதியிருக்கிறது சரிதானாவென்று கேளாதபடி யினாலே நான் அந்த காகிதத்திலே யெழுதியிருந்த சேதியை சொல்லவில்லை. அப்பால் துரையவர்கள் என்னைப்பார்த்து உன் வசத்திலே கொள் இருக்கிறதே ஏன் அப்துலயிமானுக்குக் கொடுக்கவில்லையென்று கேட்டார். மெய்தான் என் கையில் கொள்ளிருக்கிறது மெய்தான், அவர் என்னைக்கேட்டது மெய் தான் அதற்கு நான் சொன்னது வூரிலே கடைக்காரருக்கு நான் கொஞ்சம் விற்றிருக்கிறேன் அவர்களுமிவர்களுக்கு என் கையில் வாங்குகிறதற்கு முன்னும் இவர்களுக்கு விற்றிருக் கிறார்கள் அதற்கு பின்னுமிவருக்கு விற்றிருக்கிறார்கள். அந்த விலைபடிக்கு நான் கொடுக்கிறேனென்று சொன்னதற்கு அவர் சொன்னது: உங்களுடனே சொன்னேனென்று சொன்ன தற்கு துரை சொன்னது இந்த வேளையிலே அவர் கேட்ட மட் டுக்கும் விலை சொல்லாமல் கொடுத்து அவரேதாகிலும் கொடுத் ததை வாங்கிக்கொள்ளவேணு மென்று சொன்னார். அப்படி கும்பினீர் காரியத்திற்கில்லாதது என்ன கவைக்கு இருக்கிறது. நீங்களுத்தாரம் கொடுத்தால் அப்படிநானே செய்கிறே னென்று சொன்னேன். அதற்கு சும்மாயிருந்து யெழுந்து மதாம் காம்பிராவைப்போனார் அப்துலயிமான் சலாம்பண்ணிக் கொண்டு புறப்பட்டான் நானும் ஒருசலாம் பண்ணிப்போட்டு செவ்வையாய் பாக்கு கிடங்குக்கு வந்தேன். அதிலே முசியே திலாரசு வீட்டுக்குப்போய்விட்டார் நானும் வீட்டுக்கு வந்தேன் ஆனால் எனக்குச்சொன்னது: துரையவர்கள் தாம் சிப்பாய் பெண்டுகளுக்கு ரஷ்ஷக்காரருக்கும் கொள்ளை கொடுக்கவில்லை யென்றுமிருக்கிற ஜனங்களை வெளியே போகச்சொன்னால் குணமென்றும் விருதாவாய் நாலு பட்டினி ஐந்து பட்டினியாய் செத்து போறார்களென்றும் சிப்பாய்களுக்கு தினம் நீங்கள் அரிசி கொடுக்கிறீர்கள்; அவர்கள் பெண்டுபிள்ளைகள் சோற்றுக்கில்லாமல் செத்துப்போகிறதினாலே சிப்பாய்களெல் லோரும் வந்து பெண்டுகளை வெளியே அனுப்பிவிடச்சொல்லி கூக்குறள் போடுகிறார்களென்று சொன்னமாத்திரத்திலே முசியே அழைத்து வூரிலே அவரவர் வீட்டிலே யிருக்கிற நெல்லை யெல்லாம் சோதித்து எடுத்து அவரவருக்கு சாப்பாட்டுக்கு யெவ்வளவு கொடுக்கவேணுமோ அதைக்கொடுத்து மற்றஞ்த

ஒரு கிடங்கிலே சேருங்கள் தம்முடைய வீட்டிலே யிருக்கிற நெல்லிலே நாம் நானூறு மரக்கால் கொடுக்கிறோம் அதை சின்னக்கடையிலே போட்டு பணம் ஒன்றுக்கு சின்னபடியினாலே மூன்றுபடி விற்கச்சொன்னார். அதில்லாமல் முன் பனிரெண்டாம்நாள் சோமவாரம் என்னை அழைப்பித்து ஒப்பிசியேல்மார் கப்பித்தான்மார்கள் முதலானவர்களுடைய வேலைக்காரருக்கு ஒரு லீஸ்து இருநூத்தி சிலவானம் பேருக்கு எழுதிக் கொடுத்திருக்கிறேன். அவர்களுக்கு ஜனம் ஒன்றுக்கு பெரிய படியாலே ஒருபடி விழ்க்காடு தினம் தினம் உன்னுடைய நெல்லிலே கொடுத்துவரவேணும் அது விலை பணம் ஒன்றுக்கு பெரியபடியாலே மூன்று படி விழுக்காடு உள்ள இரயம் வாங்கிக்கொள்ளும் இந்த சமயத்திலே சொல்லவனுமென்று தம்முடைய நெல்லுக்கும் அப்படிப்பட்ட உத்தாரம் கொடுக்க வேணும் தங்கள் நெல் சின்னபடி விற்கச்சொல்லாமே அதெப்படி பெரியபடி மூனுபடி விற்கச்சொல்லி அதற்கடுத்த அஞ்சாறுநாளைக்குப் பிறகு தாம் சின்னபடி மூனுபடி விற்கச் சொன்ன நியாயம்போலேயிருந்தது. கொள்ளுப்பேச்சுக்கு சொன்ன உத்தாரமென்று மனதிலே எண்ணிக்கொண்டு வந்ததுமல்லாமல் பின்னை ஒருத்தர் இந்த உத்தாரம் கேட்டால் நான் சொல்லப்போகிற உத்தாரம் வேறே பிறபு அவர்களனியாயமாய்ச் சொன்னாலும் கேட்டு நடந்துக்கொள்ள வேண்டிய கடனானபடியினாலே நான் வாயை மூடிக்கொண்டு வந்தேன் பிரபுக்களுடனே ஆராகிலும் சொன்னாலிந்த இக்கட்டு வேளையிலே ஊரிலேயிவர்கள் வைத்துக்கொண்டு இருந்தாரென்று சந்தோஷப்பட்டு அவன் சொன்னவிலைக் கொடுத்து வாங்கினால் பின்னையும் வளுசையைக் கடுத்து எங்கேயிருந்தாலும் அழைப்பித்துக்கொடுப்பான். அதைத்தொட்டு ஒரு வஸ்துவாகிலும் தாஷ்யில்லாமல் சமற்றியாயிருக்கும் அதை விட்டுப்போட்டு தமக்கு சக [ ] ஒபிரிகசமு இந்த சமயத்திலே சிப்பாய் பெண்டுகளுக்கு சும்மா நெல்கொடுக்க வேண்டியிருக்கிறதாம் மூன்று சின்னபடி நெல்விற்று என்னை பெரியபடி மூன்றுபடி நெல்விற்கச் சொல்லியும் அப்துலயிமான் குதிரைகளுக்கு கொள் சும்மாய் கொடுத்து அவரேதாகிலும் கொடுத்தால் வாங்கிக்கொள்ளவும் இல்லாவிட்டால் சும்மா விட்டுவிடச் சொல்லியும் சொன்னது: அவர் உள்ள மனத்தைக் குறித்தோவென்று யோசனை பண்ணிப்பார்த்தேன். ஒன்றுமதோணாத

திஞல் ஒருவிதத்தில் பிரித்துப் போட்டு மெழிதினேன். எல்லோரும் கேட்டுப்போய் தாமொருத்தனும் சுகப்பட வேணுமென்று நினைக்கின்ற நினைப்புமல்லாமல் ஒருத்தருக்கு ஒரு ஆதாயமும் வரப்போகாது அவனுக்கு பணமுமிருக்கப்போகாது ஒருத்தனுக்கு என்னபொல்லாப்பு வந்தாலும் மனதிலே எண்ணுமல் ஒருத்தர் நோவு தொத்தாமலிருக்கிற புத்தியானபடியிஞலேயும் பூத்தையலென்கிறது இந்தவூரிலே கூட குடியிருந்தவரல்லாதபடியிஞலேயும் அப்படி எனக்கு அந்த நியாயஞ்சொல்லி தாமொன்று ஆறேழு ஆதாயம் வைத்துக்கொள்ளவும் என்னை தலை விலையிலே தாம் இந்தவூரிலே வருகிறநெல்லை கொள்ளுகிற நிமித்தியம் உசந்தவிலை கட்டு பண்ணிஞரே அந்த விலை விற்கச்சொன்ஞர். ஆஞலிது ரெண்டரைபடி நெல் கடசியிலே விற்றபோதும் வாங்கினது மூணுமூணரைபடி நெல் விற்றப்போதும் வாங்கினதுமுண்டு ஆஞலு மிதிலே வருகிற எனக்கொரு ஆதாயமுமல்ல நஷ்டமில்லாவிட்டாலும் பிறபுவிஞுடைய ஞாயம் இன்னவிதமென்று தெரியவேணுமென்று யெழுதினேன். பிரபுவினுடையமனது இந்தசாடையென்கிறது இப்போது மாத்திரமல்ல எப்போதுமுள்ளதுதான், எப்போதுமுள்ளதாஞலும் சமயாசமயமறிஞ்சிக் கூட சொல்லத்தக்கதில்லை என்கிற ஞாயம் விசிதபடுத்துகிற நிமித்தியம் விஸ்தரித்து எழுதினேன். இதல்லாமல் நான் துரையவர்களண்டையிலிருந்து புறப்பட்ட மாத்திரத்திலே முசியே நோர்னேத் காகிதமொன்று அவர் ஜோபிலே போட்டிருந்ததை என்னைப்பார்த்த உடனே யெடுத்து கையில்வைத்துக் கொண்டு ரங்கப்பிள்ளை இந்த சமயத்திலே நான் ஒன்று பார்க்கிறதில்லை கும்பினீர் காரியம் பார்க்கவேணுமென்று சொல்லி இந்த காகிதத்திலே யெழுதி இருக்கிறபடிக்கு அவரவர் தெக்ஷாராசியம் பண்ணினது மல்லாமல் நெல்லை ஒளித்து வைத்திருக்கிருர்கள் அதை குவர்னதோருக்கு பேர் வயணமாம்படியே யெழுதிக் காண்பித்தேன். அவர் முசியே தீலாாசு கையில் கொடுத்து என் போர்மேரிடச்சொன்ஞர் (in former) அவரெங்கே யென்று கேட்டேன் பனிரெண்டடிக்கிற வேளையாகிறதே வருவார் அவருக்கு காண்பித்து விளங்கி அப்படி தெக்ஷாராசியம் பண்ணினது மல்லாமல் ஒளித்து வைத்திருந்தால் நெல் கிறயம் கொடாமலெடுத்துக் கொள்ளுகிறது மல்லாமல் ஆக்கினை அபராதம் கூட வாங்குகிறதல்லவா வென்று சொல்லி அந்த காகிதத்தைக் காண்பியும் ஆர்யார் காட்டுமென்று

சொன்னேன் அப்பால் அந்தகாகிதத்தைக் காண்பித்தார். அதிலே எழுதியிருந்தபேர் வயணம்; அழகப்பிள்ளை முருகப் பிள்ளை திருச்செல்வராயமுதலி மாரியப்பமுதலி பின்னை முத்து தரகு நல்லதம்பிமுதலி ரங்கப்பிள்ளை யென்றும் பின்னை ஒருபேர் செவ்வையாக பார்க்கவில்லை அந்தபேர் வயணமாப்படி யெழுதி பேருக்கு ரெவ்வெண்டு கிடங்கு நெல்லிருக்கிறதென்று யெழுதியிருந்தது. அந்தபடிக்கு நன்ருய் விசாரித்து தப்பாயிருந் தால் ஆக்கினை அபராதம் நெல் வைத்துக்கொண்டிருக்கிற பேர் கையிலே வாங்குவதுபோல் (வாங்கவேண்டி) யானதே பொய்யானுல் எவனெழுதிவைத்தானே அவன் கையிலே வாங் கவேணும். அந்தபடிக்கு பிராதைக்கொண்டு நன்ருய் விசாரி யும் என்று சொல்லி அனுப்பி வைத்துக்கொண்டு வீட்டுக்கு வந்தேன்.

மற்றப்படி மேலண்டையிலிருந்து போம்பு போட்டதிலே பழங்கும்பினீயிலே ஒன்று விழுந்து வெடித்தது மனுஷருக்கு சேதமில்லை. இந்தப்படிக்கு செட்டித்தெருவு மட்டுக்கும் வந்து விழுகிறது. குண்டும் கொஞ்சம் நஞ்சம் வருகிறது மனு ஷருக்கு ஆரேழு பேருக்குமாத்திரம் சேதம் மத்தபடி விசே ஷித்ததில்லை. இன்று இராத்திரி கீழண்டை பத்து போம்பு மாத்திரம் போட்டுவிட்டான் இன்று சற்றுமட்டுந்தான் பீரங் கியும் குண்டும் போட்டது நம்முடையவர்களுமப்படித்தான்.

இதல்லாமல் மதனுந்தபண்டிதன் உசேன்கான் சாயபு தாதாயி படேசாயபு பெண்சாதிக்கு யெழுதி அனுப்பினதா யவர்கள் புத்திரஷத்திரி ஸ்வீகாரப்பிள்ளையாண்டான் காதல்லிகானென்கிறவன் சொன்னதாய் அவனுடனே வந்து சொன்னது: வேட்டவலம் பண்டாரி பெரியய்யாவென்கிறவனை அவர்கள் மைத்துனன் உளவின்பேரிலே போய் கைபிடியாய் பிடித்துக்கொண்டதாகவும் நீயேது நிமித்தியம் இத்தனை சோராவரிபண்ணி எங்களுடனே எதிர்த்தாயென்று கேட்ட தாகவும் எனக்குத் திர்த்து (திரம்) இருக்குதாவுங்கள்பேரிலே எதிர்க்க? ஆனல் மீராசத்து எங்களுக்கும் சிப்பந்திகளுக்கும் சிலவுக்குக்கொடுத்தது பன்னீராயிர வராகன் இதுக்கொடுத்து உங்கள்பேரிலே சண்டைபண்ணி வெட்டப்பட்டால் ஆற்காடு சமாதானம் பண்ணவும் (செஞ்சி) க்குள்ளே தொரத்தனம் தனக்குக் கொடுக்கிறவனையும் இப்போ நான் கேட்கிற சீர்மை

யெல்லாம் எனக்கு இனுமாய் யெழுதிக்கொடுக்கவும் இப்படி யெல்லாம் எனக்குச்சொல்லி சிலவுக்கும் கொடுத்து சண்டை பண்ணசொன்னபடியினலே நானும் சண்டைபண்ணினேனே யல்லாமல் மற்றப்படி உங்களுடனே எதிர்ப்பதற்கு பாத்திரனு யென்று சொல்லிககொண்டதாகவும் அந்த விசேஷத்தை யெல்லாம் நன்ருய்க் கேட்டுக்கொண்டு அதற்கெல்லாம் தஸ்தாவேஜ் வைத்துக்கொண்டு அப்பாலவனை தலையை வெட்டிக்கொண்டு அப்பால் அந்த துர்க்கத்தின்பேரிலே தங்கள் மனுஷர்களேயுங் காட்டுக்கும் தங்கள் மனுஷர்களை வைத்தார் களென்றும், இங்கிலீஷ்காரர்கள் பனிரெண்டு லக்ஷ ரூபாயைக் கொடுக்கிருேமென்றும் அசர்த்து நவாபு பாபுஜிகானை அவர் பவுன்சுடனே வந்து வில்லியநூர் வாசற்படி கூட்டி மோர்சா போட்டுக்கொண்டு அந்த நடையிலே இறங்கி யிருக்கவும் பேசினதற்கு மாபுசுகான் சொன்னது: நீங்கள் பிராஞ்சுக் காரரைப்போலே தைரியசாலிகளுமல்ல; அவர்களைப்போலே பிடித்தக் காரியம் நிர்வாகம் பண்ணுகிறவர்களுமல்ல. மத்தி யில் விட்டுப்போய்விட்டால் அப்பால் விருதாவாய்ப் பிராஞ்சுக் காரருக்கும், எங்களுக்கும் துவேஷமாத்திரம் அதிகமாகிறதே யல்லாமல் காரியமில்லை. ஒன்று உங்களுக்கு காரியம்பண்ணிக் கொடுத்தாற்போலேயும் அல்ல. அவர்களுக்கு சிநேகமாகவும் இருந்தாப்போலேயுமல்ல. உபயப் பிரஷ்டத்துவம் வரும் ஆன படியினலே உங்களை நம்பி வரப்போகாதென்று சொன்ன தாகவும், அதற்கு இங்கிலீஷ்காரர் சொன்னது: முதலில் இராசாவின் உத்திரவுமில்லை [ஆதரவுமில்லை] இப்போ புதுச் சேரியை வாங்கச்சொல்லி எங்கள் ராசா இது நிமித்தியம் பெலனும் கப்பல்களும் திரவியமும் கொடுத்து (புதுச்சேரியை) வாங்கச்சொல்லி தேவையானமட்டுக்கும் நாங்களத்தினை பலத்தவனுய் திரிகிறது. இல்லையென்றல் புதுச்சேரியை வாங்குகிறது இதுவேயல்லாமல் மற்றபடி நாங்கள் ஜீவனுடனே போகத்தக்கதில்லை என்று எப்படி பலனுய் சொல்லவேணுமோ அப்படியெல்லாம் சொன்னதின்பேரிலே மாபுசுகானும் சம் மதித்து ஆயிரத்து அருநூறு குதிரை மூவாயிரம் சிப்பாய் களுடனே வந்து இறங்க சம்மதித்து செஞ்சியிலே யிருக்கிற பீரங்கிகளை இறக்கிக்கொண்டு வருவோமாவென்று கேட்ட தாகவும் அதற்கு இங்கிலீஷ்காரர் வேணுமென்கிற பீரங்கி கள் மருந்து குண்டுகளைப் பின்னையும் சண்டை சரணசாயிக ளென்ன உண்டோ அதுகளெல்லாம் தருகிருேம். நீங்கள்

வாருங்கோளென்று அழைத்ததாகவும், நல்லது வருகிறே மென்று சம்மதித்து பயணம் புறப்பட்டு வருகிறார்களென்றும் இந்த சேதியை ஒருத்தருடனே தாங்கள் சொன்னதாய் சொல்லவேண்டாமென்றும் சொன்னதாய் என்னுடனே எட்டாம் நாள் சொன்னாரிப்பால் முசியே தெலார்ஷுடனே பாரிசு பேச்சிலே இரண்டு மூன்று நாளைக்கு முன்பாக நெல் தெக்ளாராசியம் பண்ணுகிறபோது நம்முடைய பாக்கு கிடங் கிலே இருக்கும்போது சொன்னார்.

இதல்லாமல் நம்முடைய மாயேயிலே யிருந்துவந்த முசியே பேன்லன் கப்பல் மத்தலோத்துகள் சொல்தாதுகள் ஒப்பி சியல்மார் வந்தவர்களில் சிறிது தூரம் முன்னும் பின்னுமாய் வந்தவர்கள் சேதி முத்துமல்லாரெட்டி இங்கிலீஷ்காரருக்கு எழுதியனுப்பி அவர்கள் மனுஷர்களை அழைத்துக் காண்பித்த விடத்திலே சிறிதுபேர் இங்கிலீஷ்காரருக்கு சேதி போகவும் வரவும் அடிப்பட்டபடியினாலே முன் வந்தவர்களை உத்திரம நல்லூர் சாலைபக்கத்து மேலே இராத்திரி பகலாய் விழுந்துக் கெட்டுப்போய் சென்னப்பட்டணம் போய்ச் சேர்ந்ததாகவும் பின்னை நின்று வந்தவர்களில் முப்பது நாற்பது பேர் மட்டுக்கும் இங்கிலீஷ்காரர் கையிலகப்பட்டதாகவும் அவர்களை மேஸ்தர் புஷ்காவேனண்டைக்குப் பிடித்துவந்தார்களென்றும் அப்புறம் மிஞ்சிப்போனவர்களை பிடிக்கும்போது சம்புதாஸ் இங்லீஷ் காரருக்கு எழுதியனுப்பினானென்றும், இங்கிலீஷ்கார மனுஷர் போகிறதற்குள்ளே அவர்கள் மிஞ்சி சென்னப்பட்டணம் போய்ச் சேர்ந்ததாய் என்னுடனே படேசாயபு புத்திரஷத்திர ஸ்விகாரப்பிள்ளை காதரல்லிகான் சொன்னான். நானும் ஊருக் குள்ளே அவரவர் குஞ்சுக் குழந்தைகளை அந்தரங்கமாய்ப் பார்த்துவரப்போகிற அதிரகசியமாய் மதாமுடைய சேவகருக்கு ஏதாவது கைக்காட்டிப்போட்டுள்ளே வருகிறபேருண்டே அவர்களை சொல்லத்தக்கதாக கேழ்விப்பட்டதுமுண்டு. இது மாத்திரமல்ல, முத்துமல்லாரெட்டி வெளியிலேயிருந்து இங்கி லீஷ்காரர் தண்டுக்கு நெல் முதலான ரஸ்துக்களை அனுப்பு கிறதுமல்லாமல் புதுச்சேரி மனுஷர் எங்கே போயிருக்கிறார் களோ அவர்களை அங்கே தன் மனுஷர்களை அனுப்பிப் பிடித்துவந்து இங்கிலீஷ்காரர் மனுஷர் வசத்திலே ஒப்புவிக் கிறானென்று இங்கிலீஷ்கார மனுஷர் பயமில்லை. முத்துமல்லா

ரெட்டி பயம் ரொம்ப வேணும் (உண்டு) புதுச்சேரி மனுஷரைப் பிடித்துக் கொள்ளையிட்டு போட்டானென்று இதல்லாமல் இங்கிலீஷ்காரருக்கு வெளிச் சமாச்சாரமெல்லாம் அப்போதைக்கப்போது எழுதி அனுப்பிக்கொண்டிருக்கிறனென்றும் அந்த சம்புதாசனும் பயந்தான் சம்புதாசனுடனே கூட பின்னையும் காலத்துரெண்டு சென்னப்பட்டணம் வந்தவர்களை கூட செங்கல்பட்டிலேயிருந்துக்கொண்டு மேலே முத்துமல்லாரெட்டி நடத்துகிறபடிக்கு அவரவருக்கும் அந்த வட்டங்களிலே அப்படி நடத்துகிறார்கள். எல்லாம் ஆலங்குப்பத்திலிருந்துக்கொண்டு கூனிமேட்டு சீர்மை நாட்டுத்தனமும் முத்துநாய்க்கனென்கிற பொல்லாத மனதுடைய துற்சனனென்கிறவன் புதுச்சேரியைத் தொட்டு சகலமும் நாளது வரைக்கும் பிழைத்தவனிப்போது முத்துமல்லாரெட்டியுடனே எப்போது ஷத்தினைகமியவனுபிருவிலே இருந்து அவன் சொன்னபடிக்கு கேழ்க்கிறவனானாலும் புதுச்சேரி பேச்சென்றுலே பயந்து இருந்தவன் இப்போது பயத்தை விட்டுவிட்டு முத்துமல்லாரெட்டிக்கு சகல சேதியும் சொல்லி அனுப்பி வைத்துக்கொண்டு இங்கிலீஷ்காரர் தனக்கு போகிறதும் அவர்களுக்கு கபுறு சொல்லுகிறதும் அங்கேயிருந்து முத்துமல்லாரெட்டிக்கு கபுறு அனுப்புகிறதும் புதுச்சேரி சேதி விசாரித்து இங்கிலீஷ்காரருக்கு சொல்லுகிறதுமாக இருக்கிறன். இப்படி இந்த பட்டணத்தைத் தொட்டுச் சில (ஜனங்கள்) சந்தோஷமும் அயிஸ்வரியமும் அனுபவித்தவர்களெல்லாம் இப்போ இப்படி இதற்கு (சகல) கேடு நினைத்து நடத்துகிறமட்டுக்கும் ஒருக்காலுமவர்கள் சுகப்படப்போகிறதில்லை. கெட்டுப்போவார்கள் அதற்கு சந்தேகமில்லை; ஏனென்றால், ஸ்வாமிலோகத்துக்குள்ளே உண்டாயிருக்கிறது மெய்யானால் இந்த பட்டணத்தை தொட்டு சுகப்பட்டவர்கள் இதுக்கு கேடு நினைத்தார்களானால் அவர் அவர்களைக் கெடுத்துப் போடுகிறதற்கு சந்தேகமில்லையென்று எழுதினேன். ஆனலிந்த அனுபவம் எங்களுக்கு இப்போ ஆனப்போலே மேலே இப்போ துற்சனமாய் நடத்துகிறவர்களுக்கு அனுபவமாகிறது சந்தேகமென்ன இருக்கிறது. அதுவும் கொஞ்சநாளையிலே சகல ஜனங்களும் பார்க்கப்போகிறார்கள் பேசப்போகிறார்கள், நகைக்கப்போகிறார்கள், அது அறியப்போகிறார்கள்,

**1748 ஆ ஒக்தோபர் மீ 5 உ க்கு விபவ ஸு புரட்டாசி மீ 23 உ சனிவாரம்.**

இற்றைநாள் காலத்தாலே இங்கிலீஷ்காரர் கொஞ்சம் நெடும்பீரங்கிகுண்டுகளும் போம்புகளும் மேற்கேயிருந்துப் போட்டுக்கொண்டு வருகிறார்கள் அதுகள் சென்னப்பட்டணம் வாசற்படி செவுர் வாணியத்தெருவு மூலைகொத்தளம் வழுதாவூர் வாசற்படி மட்டுக்கும் அடிசெவுரிலேயும் (செவுத்து) மேலே ஆள்மறவு கட்டி இருக்குதே அதுகளையெல்லாம் யிடிந்துக் கொண்டுபோகிறது அங்கே குருக்கே நெடுக்கே மனுஷர்கள் போனவர்களை சரிபிடிக்கிறது இந்தடுக்கிலே நடந்தேரிவருகிறது இவர்களும் அடிசெவுர்கள் போகிறது போறதெல்லாம் மறுநாள் கல்லும் சுண்ணாம்பும் போட்டு அடித்துமுடித்துப் போகிறதும் ஆள்மறவு இராத்திரிக்குளெப்போதும்போலேகட்டுகிறதும் பொழுது விடிந்தாப்போலே மறுபடி இங்கிலீஷ்காரன் பீரங்கிகுண்டுனாலே உடைக்கிறதும் இதுகளும் அப்போதைக் கப்போது முஸ்தீப்பு பண்ணுகிறதுமாகயிருக்குது போடுகிற குண்டுகளையெல்லாம் பசங்கள் சட்டைக்காரர் காப்பிரிகள் இருக்கிறபறச்சிகள் சிப்பாய்கள் சொல்தாதுகள் கூடிக் கொண்டுபோய் கோட்டையிலே முசியே கோர்னேத் கையில் ஒப்பிவைத்து குண்டுக்கு ஒருபணம் தீக்குடுக்கைக்கு ஒவ்வொரு ரூபாயும் வாங்கிகொள்ளுகிறார்கள். இது தினசட்டமாக நடக்கிறது இந்தமட்டுக்கும் குண்டு இரண்டாயிரம் குண்டுவுண்டு தீக்குடுக்கையும் வெடித்ததுபோக இருநூறுவுண்டு என்று கோட்டையிலே சொல்லிக்கொண்டார்கள்.

அப்பால் நான் காலையிலே துரையவர்கள் வீட்டுக்கு போவோமென்று கோட்டையிலே போனவிடத்திலே வழியிலே முசியே தெலார்ஷைக்கண்டு சொன்ன வயணம்: நாங்கள் இளகினமனது என்றும் சாடைமாடையிலே விட்டுவிடுகிறார்களே என்றதாகவும் இதல்லாமல் முசியே கொர்னேத் சிறிது பேர் வசத்திலே (நெல்) இருக்கிறதாய் இப்போ வண்டிமாடு விசாரிப்பு விசாரிக்கிறானே மீன்சக்காரன் பீரங்கி மேஸ்திரி ஒருத்தன் அவனுக்கு ஆரோ தமிழர் சொல்லி அவனெழுதிக்கொடுத்தானும் முசியே கோர்னே சாகயில் அவனதைப் பார்த்து துரைக்கு தன் கையெழுத்தாய் யெழுதிக்கொடுத்தான்

அதை நேற்று இராத்திரி துரையவர்கள் என் கையில் கொடுத்து இப்படி அவரவர்கள் ஏன் கையில் ஒளித்து வைத்துக்கொண்டிருக்கிறார்கள்? நீர் நன்றாய்ப்பார்க்கவில்லை என்றாப்போலே சொல்லவந்தார் அதிலே சாவடி கணக்கப்பிள்ளைகள் மூனுபேர் எழுதியிருக்கிறது உம்முடையபேரும் யெழுதியிருக்கிறது எல்லப்பிள்ளை பேரப்பிள்ளை அஞ்சாறுபேர்வழி எழுதி யிருக்கிறது. இதுகளையெல்லாம் பார்த்தோம் வெகு ஜனங்கள் திட்டுவார்கள் என்னத்திற்கு இந்தபடி என்று நான் யோசனைபண்ணி துரையவர்களுடனே என்னாலே ஆகாதென்று சொல்லிக்கொண்டேன். அதன்பேரிலே யாரை வைக்கலாமென்று கேட்டார் முசியே தெலாசேல் செட்டிக்காரன் தமிழ் பேச்சு நன்றாய் அறிந்தவன் முன் சிறுதனுள் சாவடி விசாரணை விசாரித்தவன் என்று சொல்லி அவனை அனுப்பலாமென்று சொன்னதின்பேரிலே அவனை நேமித்துப் போகச்சொல்லி அவனையுமழைத்து கொடுத்தான் அவனும் பின்னையும் இரண்டு பேர் சர்ஜண்டுகளைக் கேட்டான் அவர்களுக்கு முத்தாரம் கொடுத்து வெகு பத்திரமாய் சொல்லி அனுப்பினார் அவர்களு மின்றையதினம் காலையில் புறப்பட்டார்கள் முசியே கோற்னேத் எழுதிக் கொடுத்த காகிதமும் உமக்கு காண்பித்து இன்னார் இன்னார் வீட்டிலே நெல் இருக்கிறதென்று உம்முடனேயும் சொன்னானும் நேற்று யென்று சொன்னார். மெய்தானதற்கு முசியே கோர்னேத்துக்கு நேற்று நான் சொன்ன வுத்திரமும் சொல்லி நீர் வீட்டு விட்டதும் நல்ல காரியம் பண்ணினீர் ஆனாலும் கும்பினீர் காரியம் தாழ்யில்லாமல் பத்திரமாய் பார்க்கிறது நல்லதுதானென்று சொல்லிப்போட்டு அப்பால் துரையவர்களிருக்கிற கச்சேரிக்குப் போகவேணுமென்று போனேன் இதிலே முசியே கோர்னேத் எதிரே வந்து துரையவர்கள் படுத்துக் கொண்டிருக்கிறாரென்று சொன்னார் அதன்பேரிலே முசியே கோர்னேத்துக்கு இரண்டாவது முசியே துருவேத் இருக்கிற யிடத்துக்கு வந்தேன். அங்கே முசியே பேறோ அவன் தம்பியும் வந்து என்னைப் பார்த்து நீர் எதற்கு நான்கொண்ட பஜார் வீட்டுக்குப் பணம் வாங்கவேண்டாமென்று தடைபண்ணினீராம். அது எதனாலே கும்பினியராய் அவனுக்குக் கொடுக்கிற குடக்கூலி எனக்குக் கொடுக்கட்டேன். (கொடுக்கட்டும்) அது எதனாலே யென்று கேட்டான். ஆனால்யிவன் கேழ்க்கும்போது அவன் தம்பி சின்ன பெறோ

என்கிறவன் சோபமாய்ச் சுருக்கான விசேஷமாய் சொன்ன
தற்கு அதற்கு அப்படித்தானே அவன் வாயை மூட அதற்கு
சுருக்கான பேச்சாய் நானெப்போ சொன்னேனோ அந்த
மட்டுக்கும் அவனடங்கி சற்றே படபடப்பாயிருக்கிறபோது
அவன் அண்ணன் பெரிய பொனோவென்கிறவன் சாந்தமாய்
மரியாதையாய் கேட்டான். அப்போ நடந்த பேச்சு என்ன
வென்றால்: நான் தெருவிலே இரண்டுபேர் தடஷ்த்தர் நிற்கும்
போது அவன்வந்து எங்கள் வீட்டிலே கும்பினீர் மருந்து பீரங்
கியிடுகிறார்களே அந்த வீட்டை ஒருவெள்ளைக்காரன் விலைக்கு
கேழ்க்கிறான் நானும் விற்றுப்போட வேணுமென்றுயிருக்கு
றேன். ஆனால் கும்பினீர் மருந்துபிடித்து முஸ்திப்பு பண்ணு
கிறார்களே அதினாலே உங்களிடத்திலே ஒருப்பேச்சு சொல்லிப்
போட்டு விற்றுப்போடவேணுமென்று எச்சரிக்க வந்தே
னென்று சொன்னான் அதற்கு நான் எத்தனை விராகனுக கேழ்
கிறார்கள் யென்று சொன்னேன் அதற்கு ஒருத்தர் கேட்டவிலை
படிக்கு உமக்கு கும்பினீரிலே ரூபாய் வாங்கித்தாரேன் கும்பி
னீருக்கு நீர் விற்கிறது நல்லது பின்னை ஒருத்தருக்கு கொடுக்
கிறதைவிட என்றுசொல்லி இதல்லாமல் கும்பினீர்வேலை செய்
கிறபடியினாலேயும் நீர் குடக்கூலிவாங்கி வருகிறபடியினாலே
யும் அவர்களுக்கு முன் எச்சரிக்கவேண்டியது நியாயமென்று
சொன்னதற்கு அவனும் அதினாலேதானே நானும் உங்க
ளுடனே எச்சரிக்க வந்தேனென்று சொன்னான். நல்லது நாளை
காலையில் நான் துரையவர்களண்டையிலே விசாரித்து நாளை
சாயங்காலம் நீர் வாரும் உமக்கு உத்தாரம் சொல்லுகிறே
னென்றுச்சொல்லிப் போகச்சொன்னேன். மறுபடி அவன்
என்னைக் கண்டுபேசினதில்லை அப்படியிருக்க நீர் இப்படியெல்
லாம் சொல்ல நியாயமென்ன? நல்லது இந்தநியாயம் துரையவர்
களிடத்திலே சொல்லுவோமென்று சொன்னதற்கு இப்படி நீர்
சொன்னது அறிந்தால் நாங்கள் என்னபேசுகிறோம் எங்களு
டனே சொல்லப்போனான் விற்றுப்போட்டோம் முசியே கோக்
கேந்து முன்னே சீட்டெழுதிக்கொடுத்து அச்சாரமும் கூட
வாங்கிக்கொண்டவன் மற்றப்பணம் வாங்கவேண்டாமென்று
நீர் தடைபண்ணினதாய் யென்னுடனே சொன்னார்கள் இந்த
பேச்சு நான் அறிய மாட்டேனென்று சொல்லிப்போட்டு எங்
கள் தம்பி நேற்று உன்னை இந்தசேதிக்கு கண்டுபேச வந்தால்
நீர் சூத்தை திருப்பிக்கொண்டு போனீரே என்கிறதற்கு அத

னாலே அவன் கோபமாய் பேசினானென்றுச் சொன்னான். நான் ஒரு கூலிக்காரன் வந்தாலும் அவனுக்கு உத்தாரம் கொடுத்து அவன் சொல்லுகிற உத்தாரமறிந்துக்கொண்டு அப்பால் அனுப்பிவைத்து போகச் சொல்லுகிற வாடிக்கை என்கிறது இந்தபட்டணத்திலே உண்டான ஜனங்களுக்கெல்லாம் தெரியுமே இல்லாமல் ஒருத்தன் விற்று கொத்தோர் முன்னே கையெழுத்துப்போட்டால் அது திரும்பும் திரும்பாதென்று தெரியாதா? நான் இன்றுதானா இந்த பட்டணத்துக்குள்ளே வந்தேன் இந்த நியாயம் எனக்குத் தெரியாதா? நல்லது அவன் சொன்ன பேச்சிக்கும் நான் அவனுக்குச் சொன்ன வுத்திரவுக்கும் மதனாந்த பண்டிதனென்று ஒருத்தன் கூடயிருந்தான். அவன் என்னுடனே சொன்னபேச்சும் நான் அவனுடனே சொன்னபேச்சும் கபூராய் கேட்டான் பொய்பேசப் போமா நடந்தப்பேச்சு அவன் வாயினாலேதானே சொல்ல வைக்கிறேனென்று சொல்லி அப்பாலிந்த நியாயம் அவனைக் கொண்டு என்பேரிலே நேரமில்லையென்று சொல்லிவைத்தால் அப்பால் என்னை உன்தம்பி என்னைச் சுருக்காய் பேசினதற்கு என்னசெய்ய வேணுமென்று கேட்டதற்கு நீ என் பேரிலே தயவு ஆச்சே அப்படியிருக்க நான் உனக்கு நான் என்னபொல்லாங்கு பண்ணினேனென்று தான் உன்னைக் கேழ்க்க வந்தேனென்று அப்பால் பல்லை இளிச்சான் நல்லது இதுகேழ்க்கிறவேளையிலாகாது என்று சொன்னேன் என் தம்பி ஒன்றுச் சொன்னால் நாலு சொன்னாயே யென்றான். ஆனால் அவன் ஒருதரம் சொன்னதற்கு பொருத்தேன்; மறுபடி இரண்டுதரம் பொருத்து அப்பால் நான் சொன்னேனென்று சொன்னேன். இதிலே முசியே கோர்னேத் வந்தான். முசியே சிரியமிரான் என்னைப் பார்த்து நீ செய்தது பொல்லாத வேலை செய்தாய் யென்றான். பின்னே ஒரு பூன்சுபிடித்தவனும் இந்த சாடையிலே சொன்னான். முசியே லத்தூசு மாத்திரம் வந்தவனைப் பார்த்து இந்த நியாயத்தைக் கேளென்றதும் எனக்கு ஒரு கவையிருக்குதென்று போய்விட்டான். குரங்கு முகமெல்லாம் ஒரு முகமாயிருந்ததேயல்லாமல் நியாயத்தை அறியாமல் போனார்கள். அப்பால் முசியே கோர்னேத் மாத்திரம் நான் சொன்னப் பேச்சைக்கேட்டு ஞாயமென்று ஒற்றுக்கொண்டு முசியே பனேவைப் பார்த்து உத்திரவு கண்டித்து சொன்னதின்பேரிலே அவன் பல்லைத் திறந்தான். இதல்

லாமல் கும்பினியார் குடகூலிக்கு வாங்கிக்கொண்டு மருந்து இடித்து வேலை செய்யும்போது கும்பினியாருக்கு விலைக்கு கவையில்லை என்றுலல்லவோ அபபால் நீ வாங்கவேணு மென்று கண்டித்தான். அதற்கு சாடையாய் யெழுந்து போய் விட்டான். மற்றக் காரியத்திலே முசியே கோற்னேத்துடைய வாய்பிரம்மை அறியாமல் முட்டாள்தனமாய் பேசினுலும் ஞாயப்பேசிவந்த விடத்திலே விவகாரமாய் குரங்குமுகமெல் ஒரு சாடயாய் தவராமல் மனுஷ சுபாவமாய் இருந்து விளம் பினதற்கு எனக்கு சந்தோஷமானது.

இப்படி பேசியிருக்கும்போது துரையண்டையிலே கணக்கு யெழுதுகிற முசியே பேத்ரான் என்கிறவன் வந்தான். நீ கும்பினீர் குர்தியே ஆனதே நீ எனக்கு பெரு அரிசியாயனுப்பு கிறது என்று அவன் கோபித்துக்கொண்ட கோபமிதமில்லை. ஏனடா இந்த அரிசி கிடையாத வேலையிலே அரிசி நீ கேட்டா யென்று இல்லையென்று சொல்லப்போகாது என்று அனுப் பினுல் நான் பெரும் அரிசி தின்னமாட்டேன் என்று சொல்லு கிறதல்லவோ நியாயம்; அதை விட்டுப்போட்டு கோபித்துக் கொள்ளுகிறது எந்த ஊர் நியாயம்? அல்லவென்று நீ சாப்பிட வேணுமென்று மெலுசு அரிசியாய் வேணுமென்று கேட் டாயா? அரிசி வேணுமென்றுல் வேலைக்காரருக்கு அல்லோ அவரவர் சினயோமார்களெல்லாம் கேழ்க்கிருர்களே அப்படி யென்று கொடுத்து அனுப்பினேன் என்று சொன்னேன் அவன் கோபம் சொல்லிமுடியாது அதை முசியே கோற்னேத் பார்த்து நீ ரொம்ப விவேகமற்றவன் இந்த (நெல்)க் கிடைக் காத வேளையிலே நீ கேட்டதற்கு அரிசி கொடுத்து அனுப்பி னுன் மெலுசு பெருசு வேணுமென்கிறதற்கு வேணுமா னுல் மாற்றிக்கொடு என்று நல்ல பேச்சாய் பேசவேணும் அல்லாமல் உனக்குக் கொடுக்கிறதுக்கு அவனுக்கு என்ன ஒப்ரிகாசம் (ஒப்ளிகாசியமா) அப்பால் நீ கொவர்னதோர் ஒடிதி (ஓர்தரா) யேதாகிலும் வாங்கிக்கொடுத்து கும்பி னீர் அரிசி நெல்லிலே கொடுக்கிறதானுல் அவனை நீ கண்டிக்க வேணுமென்று சொன்னதில்லபோரிலே நான் பார்த்த குவர்ன தோரிடத்தில் இருக்கிற இத்தனை அனியாயமாவென்று குவர்னதோரை ஷைசவாக்கிலே அப்பாலே போனுன்.

நான் பார்த்தேன் இன்றையதினம் நல்ல (முகம்) காண வில்லை ஏனென்றால் (காலையில்) நடந்த சங்கதிகளெல்லாம் குறித்து நியாயம் ஒன்றுயிருக்க ஒன்றாய் தோற்றி நல்லவர்களை யெல்லாம் விருதாவாய் கூக்குறள் போட்டபடியினாலே இன் றையதின மிருண்டசாடை சரியென்று இனிமேல் வீட்டை போவோமென்று பாக்குகிடங்கை வந்து தேத் தண்ணீர் குடித்து வீட்டைப் போவோமென்று வீட்டுக்கு வந்து இன்றைய தினம் வெளியே போகாதே வீட்டிலேயே யிருப்போமென்று வீட்டிலேத்தானே இருந்தேன்.

இப்படியிருக்க சாயங்காலமான இரண்டு நாழிகைக்கு தருமசிவனென்கிற ஒரு தலையாரி ஒரு மிட்டாய்க்காரனண்டை யில் வேலை செய்த பயல் ஒருத்தனை அழைத்துக் கொண்டுவந்து இவன் வெற்றிலை தோட்டத்திற்குப்போய் வெற்றிலை கொண்டு வந்தானென்று கொண்டுவந்து (என்) முன்னே விட் டான் வெற்றிலையை காண்பித்தான் என்ன விலை யென்று கேட்டதற்கு ஒருபண மென்று சொன்னான் ரெட்டைக்காசத் தினை அகலமுள்ள வெற்றிலை யென்ன செய்யபோவதென்று (அனுப்பிவிட்டேன்) [ ]

1748 ஆ அக்டோபர் மீ 6 உ விபவ ஸு புரட்டாசி மீ 24உ ஆதி வாரம்

இற்றை நாள் காலத்தாலே கோட்டைக்கு போன உடனே துரையவர்களை கோவிலுக்குள்ளே பூசைக் கேட்டு வெளியே புரப்பட்ட உடனே நான் சலாம் பண்ணினேன். அவர் உள்ளே போன உடனே கால் நாழிகையிருந்து அப்பால் புடவை பார்க்கிற சாலையிலேயிருந்து பாக்கு கிடங்கிலே வந்து உட்கார்ந்தேன். அதிலே துரையவர்களை உங்களையும் மூசியே கோர்னேத்தையும் அழைக்கச்சொன்னார். (ஒரு சேவகன்) மூசியே கோர்னேந்நை அழைக்கப்போனான். நானுங்களை அழைக்கவந்தேனென்று சொன்னான். அதன்பேரிலே துரை யண்டைக்கு போன உடனே ஊர் நெல் எடுத்து வருகிறீர் களே! அந்த நெல் யெத்தனை கரிசை வந்தது என்று கேட்டார்; எட்டு கரிசையும் நானூத்தி பதினைந்து வெள்ளமும் நேத்து இராத்திரி வரைக்கும் கிடங்குக்குள்ளே வந்து சேர்ந்தது. அதற்கு (அதில்) பாதி நெல் கூலிக்காரருக்கும் சிலவழிந்தது.

இன்னும் பாதி நெல் மாத்திரம் கையிருப்பு இருக்கிறதென்று சொன்னதற்கு குப்பினீருக்கு, வலியனுக்கு நெல் விட்டு ஆகிறதற்கு முசியே கோர்னேத் வரம் அளந்து ஒப்புவித்துப் போட்டேனென்று சொல்லி, கூலிக்காரருக்குக் கொடுத்தது போக பதினைந்து கரிசை நெல் மாத்திரம் அவரவர் வீட்டிலே யிருந்து எடுத்துவருகிற நெல்லிலே விடத்தக்கதாக பாரென்று சொல்லி முசியே கோர்னேத்தை அழைப்பித்து என்னுடனே சொன்னபடிக்கு சொல்லி ரங்கப்பிள்ளே இப்போ கொடுக்கிற நாலு கரிசை நெல்லைக்கூட பதினைந்து கரிசை நெல் மாத்திரம் கொடுப்பான் வலியனுக்கு விட்டு அரிசியை சேர்த்து கொடுத்துக்கோ என்று சொன்னர். நல்லதென்று சொல்லி அனுப்பி வைத்துக்கொண்டு வீட்டுக்கு போகிறபோது (கொர்னேத்) உன் பிறகே நாலு கரிசை நெல் அளந்து கொடுக்கிறதற்கு மனுஷரை அனுப்புகிறேன் என்று சொல்லிப்போட்டு நடந்தான்.

அப்பால் துரையவர்களண்டையிலே முசியே பிரியேல், முசியே லெகோன், முசியே சேற்று, முசியே கோங்கல் என்றும் பின்னையும் இரண்டு வெள்ளைக்காரர்கள் கூட இருந்தார்கள். அப்போ துரை அவர்கள் என்னைப் பார்த்து ரங்கப்பிள்ளே இன்றையதினம் மேற்கேயிருந்து புதுசாய்ப்போட்ட பத்திரி மேலே யிருந்து பீரங்கி விஸ்தாரமாய்ப் போடுகிறார்கள். கர்னல்ராயகர்னுக் அப்படி இருக்கும்போது நீ பயப்படாமல் (பயப்பட்டு) கோட்டைக்கு வந்தாயா? நீ வரும்போதுதானே உன் பிறகேதானே வருகிறதுமுண்டு பீதியில்லை பயம் தோற்ற வில்லையாவென்று கேட்டார். முதலாவது சுவாமியினுடைய கடாக்ஷமும் இரண்டாவது உங்களுடைய தயவும் பரிபூரணமா யிருக்கும்போது அது ஒரு வஜ்ர கவசமாய் எங்கள் பமீலுக்கு (famille) எவக்கும் இருக்கிறபடியினாலே அந்த வஜ்ர கவசத்தைப் பார்த்த போம்பு குண்டுகளெல்லாம் பயந்துப் போம்; எல்லாம் வெடித்துப்போகுது. பீரங்கி குண்டுகளெல்லாம் நாலு மூலையும் ஓடிப்போகிறதென்று சொன்னதும் முசியே பிரியேர் இருந்துக்கொண்டு, ஆனால் மேஸ்தர் புஸ்கா வேணை போய் ஜெயித்து ஓட்டிப்போட்டு வாவென்றான். அப்படித்தானே கொஞ்ச காலைக்குள்ளே புஸ்காவேன் ஓடிப்

போனுனென்று நான்தான் கபுறு சொல்லப் போகிறேன். நீங்கள்தான் சந்தோஷமாய் போனுனென்று அவன் சண்டை சாமான் பீரங்கி முதலான ஆயுதங்களென்ன? என்ன கொண்டு வந்தானோ அதையெல்லாம் நம்முடைய மனுஷர்களெல்லாம் எடுத்துக்கொண்டுவந்து சேர்த்தார்களாயென்று நீர்தான் கேழ்க்கப்போகிறீர் நான்தான் எடுத்துக்கொண்டு வந்தார்கள் என்று சொல்லப்போகிறேன் என்று சொன்னதற்கு எல்லாரும் நகைத்து துரையவர்கள் என்னைப்பார்த்து இத்தனை குண்டு வருகிறபோது நீயிருக்கிற வீடு மெத்த பலனல்ல; குண்டுகள் வருகிற இடம் அங்கே நுவர்த்துமாக இருக்கவேண்டாமென்று சொல்லி அந்தக்ஷணமே மூசியே கோர்னேத்தை அழை என்று சொன்னுர். அவர் வந்த உத்தரக்ஷணமே ரங்கப்பிள்ளை பமீலுடன் இப்போது இருக்கிற மகாசினிலே இருக்கிருன். அவனும் அவன் பமீலும் கோட்டைக்குள்ளே இருப்பதற்கு அகல கிடங்கிலே இருக்கிற காம்பிருவை விடென்று சொன்னுர். நல்லதையா விடுகிறேனென்று சொல்லி என்னை வரச் சொல்லி அழைத்தான். துரை அவர்கள் என்னைப் பார்த்து இன்றைக்குத்தானே நீயும் உன் பமீலும் கோட்டைக்குள்ளே வந்து அகல கிடங்கிலே காம்பிரு இருக்கிறது. அதிலே வந்து இறங்குங்கோளென்று சொல்லி அரை நாழிகை தாமதமா யிருக்கவேண்டாம் நாளை முதல் அவன் விஸ்தாரமாய் குண்டு களும் தீக்குடுக்கைகளும் போடுவான். அப்பால் வெளியே புறப்படுகிறது ரொம்ப பிரயாசை ஆனபடியினுலே உன் பெண்சாதி பிள்ளைகளை அழைத்துக்கொண்டு கோட்டையை வந்து சேரப்போ, நிற்கவேண்டாமென்று சொன்னுர். நல்ல தையாவென்று அவர் தயவாய் சொன்ன உத்தாரத்திற்கு நான் அறிந்த உபசரணை சொல்லவேண்டியபடிக்கு சொல்லிப் போட்டு அனுப்பிவைத்துக்கொண்டு அப்பால்மூசியே கோர்னேத் நான் வருகிறவரைக்கும் வெளியே நின்றபடியினுலே அவருடன் அகல கிடங்கிலே போய் [ ] அகல கிடங்கிலே பெண்டு பிள்ளைகளை வைத்துக்கொண்டிருக்கத்தக்கதாக சாவடியிலே நாங்கள் சில பேர்கள் இருக்கிறபடிக்கு இருக்கிற தென்று சொல்லி வெள்ளைக்காரர் இரண்டுபேர் இருக்கிறவர் களுடனே சாவடியிலே இருக்கிற கிடங்கிலே இரண்டொரு பொட்டி இருக்கிறதை எடுத்து வெளியே வைத்துப்போட்டு அதை பெருக்கி முடிந்ததும் ரங்கப்பிள்ளைக்கு விட்டுவிடென்று

சொன்னார். அதற்கு நான் சொன்னது: அப்படியே ஆகு தென்று உபசாரம் சொல்லிப்போட்டு, வீட்டுக்கு வந்தேன். கூடவந்த சுப்பய்யன் மகன் கிருஷ்ணய்யனும், இராமய்யன் தம்பியுமிருந்துக்கொண்டு உங்கள் குடும்பத்துக்குக் கோட்டை யிலிருக்கிறது நியாயமா? அகல கிடங்கிலே நீங்கள் பெண்டு களுடனே இருக்கிறதெப்படி? முசியே பிரியேல், முசியே கோர் னேத், முசியே துலோராம் முதலான ஆலோசனைக்காரரெல்லாம் சகல சாவடியிலே இருக்கிறார்களே; பெண்டுகள் போகிற தெப்படி வருகிறதெப்படியென்று சொல்லி வந்தார்கள். அதற்கு நான் துரையவர்கள் தயவாய் சொன்னமட்டுக்கும் அகல கிடங்கையும் போய்ப் பார்த்தோம். அவர்கள் மனது சந் தோஷமாயிருக்க உத்தாரம் சொல்லப்போனால் அப்பால் நம்முடைய மனதிற்கு எப்படி யுக்தமோ அப்படி நடப்பித்துக் கொள்ளுகிறதுதானே யென்று சொல்லிப்போட்டு, அப்பால் செவ்வையாய் நான் இறங்கியிருக்கிற பாலய்யமுதலி வீட்டுக் குப் போனேன்.

இதிலே சேதிவந்தது முன்மாதம் 12-ம் தேதி கடிதங்கள் கொண்டுவந்த கோலக்காரன் (சோல்தார்) என்கிறவன் கையிலே கனம் நவாபு மாபுசுகான் அன்வர்த்திகான் அவர் களுக்கும் நம்முடையவர்களுக்கும் காகிதங்கள் கொண்டு போன கோலக்காரன் வந்தவனை சிப்பாய்கள் வாசற்படியிலே இருந்தவர்களை அழைத்துக்கொண்டுபோய் துரையவர்கள் முன் விட்டார்கள். அவன் கையிலே காகிதங்களிருந்தது; அந்தக் காகிதங்களை துரையவர்கள் கையிலே வாங்கிக் கொண்டு உங்களையும், மதனந்த பண்டிதரையும் கூட அழைத் துக்கொண்டு வரச்சொன்னார் யென்று சிதம்பரமென்கிற சேவகன் வந்து அழைத்தான். அதன்பேரிலே நானும் மதனந்த பண்டிதரும் துரையவர்களண்டைக்குப் போனோம். அப்போ தான் பனிரெண்டு மணி அடித்து துரையவர்களும் சாப்பாட் டுக்கு உட்காருகிற வேளையிலே நாங்களும் போனோம். என் கையிலே இரண்டு பார்சி காகிதங்களும், இரண்டு தெலுங்கு காகிதமும் ஆக நாலு காகிதங்கள் கொடுத்து யாரார் காகித மென்று கேட்டார். முகம்மது தவாக்கல் உங்கள் பேருக்கு எழுதின பார்சி காகிதமொன்று என்பேருக்கெழுதின பார்சி காகிதமும் ஒன்று, ஆக இரண்டு காகிதங்களும் வக்கீல் சுப்பய் யன் (என்) பேருக்கு ஒரு தெலுங்குக்காகிதமும், மதனந்த

பண்டிதன் பேருக்கு எழுதின காகிதமொன்றும், ஆக இரண்டு காகிதமென்று வயணம்சொல்லி மதனந்த பண்டிதன் காகிதத்தை அவன் கையிலே கொடுத்துவிட்டேன். அப்பால் துரையவர்களுக்கு வந்த பாரீசு காகிதத்தை மதனந்த பண்டிதன் கையிலே கொடுத்து படிக்கச்சொன்னேன். அவர் பாஷைப் படுத்தி சொன்ன வயணம்: மரியாதைச்சொல்லி அப்பால் புதுச்சேரியை வெள்ளைக்காரர் கோட்டையைச் சுத்திவளைத்துக்கொண்டு சண்டைபண்ணுகிறார்களே அதற்கு உங்களுக்கு இதவுகோரி யோசனைபண்ணி எழுதினேன். உங்களுக்கு சம்மதியாயிருந்தால் சந்தாசாயபு அவர்களைப்பிடித்து உபயத்திரவர்க்கும் சமாதானம் பண்ணிப்போட சொல்லலாமென்று தோன்றுகிறது. அந்தபடிக்கு சம்மதியானால் சீக்கிறமத்துக்கு நபாபு சாயபு அவர்கள் பேருக்கு வரச்சொல்லி, காகிதமும் என்பேருக்கு நபாபுசாயபு அவர்களுக்குத் தெரியப்படுத்தச் சொல்லி எழுதியனுப்பி உசேன் சாயபு அவர்கள் பேருக்கு தெரியப்படச்சொல்லி, அழைத்துவரச்சொல்லி காகிதமெழுதவும். இல்லாமற்போனால் உசேன் சாயபு தாயாருக்கு மாத்திரம் ஒரு காகிதமெழுதி எங்களுக்கும் இங்கிலீஷ்காரருக்கும் சண்டையில்லாமல் சமாதானம் போகத்தக்கதாக அசரத்து நபாபு அன்வர்த்திகான் சாயபு அவர்களையழைத்துக்கொண்டு வந்து சமாதானம் பண்ணிப்போட வேணுமென்று உபசாரமாய் எப்படி எழுதவேணுமோ அப்படி எழுதியனுப்பினால் நான் அவர்களை அழைத்துக்கொண்டு வருகிறேனென்று என் புத்திற்கேற்க நன்றாய் காணுமென்றும் எழுதிவந்தது. அப்பால் நம்முடைய வக்கீல் சுப்பய்யனெழுதின காகிதத்திலே அவனால் எழுதியிருந்த வயணம்: முன்னாலே விஸ்வபதி முதலான பேர்கள் கையிலிரண்டுமூன்று காகிதங்களெழுதி அனுப்பினேனென்றும் [அதுகள்] விஸ்வபதி கையிலே எழுதியனுப்பின காகிதங்களில் சிறிது வயணமும் எழுதி காகிதங்கள் கொண்டு போய் கொடுக்கக்கூடாவிட்டால் அதைக் கிழித்துப்போட்டு நேரில் சொல்லும் வண்ணமாய் சொல்லி அனுப்பிவைத்தேன். அவன் வந்து சொல்லும்போது தெரியவருமென்றும், வேட்டவலம் சனிக்கிழமையன்று உடன்படிக்கையாய் துற்கத்திலே இருந்தவர்களெல்லாரும் ஆயுதத்தை வைத்துப்போட்டு போரேமென்று சுவர்களை ஒன்றும்செய்யக் கவையில்லையென்றும் அந்தபடிக்கு கவிலின்பேரிலே விட்டுப்போனதாய் சேதி

வந்ததென்றும், அதற்கு நபாபுசாயபு அவர்களுக்கு சீரும் கொடுத்து மோபார்க்கு பாதி காகிதமுமெழுதி அனுப்பினவக்கச் சொல்லியும், இங்கிலீஷ்காரர் நபாப்பு மாபுசுகான் சாயபு அவர்கள் முதலானபேருக்கு ஆசைவார்த்தையும் சொல்லி மத்தத்து வரச்சொல்லி பேசுகிறதாக இருக்கிறது. அவர்களும் அந்த சண்டையின்பேரிலே இருக்கிறதாக தோணுதென்றும், திருச்சிணுப்பள்ளியிலே பாளையக்காரர்கள் வெகுசாய் தொந்தரவுபண்ணுகிறார்களென்றும் அங்கேயிருந்து எழுதிவந்தது. அவ்விடத்திற்குப் போகிறதாகவும் ஒரு சேதி பிறக்கிறது. இவ்விடத்திலேதானே நிற்கிறதாக ஒரு சேதி பிறக்கிறது. வேட்டவலம் பாளையம் இப்போ பிடித்தே ஆச்சுதே இனிமேல் மாபுசுகான் அன்வர்த்திகானண்டைக்கு வந்தால் அப்போ விசிதப்பட்டுத் தெரியுமென்றும் உசேன் சாயபு ஒரு காகிதமும் சயிந்தல்லிகானவர்கள் ஒரு காகிதமும் எழுதியனுப்பினதற்கு துரையவர்கள் மறு காகிதங்கூட அனுப்பாமல்போனார்களென்றும், அவர்களுக்கு மனதிலே இருக்கிற குறை எழுதிமுடியாது. இதல்லாமல் முன் மாபுசுகான் கலகத்தும்போது [அவர்] காரியங்களுக்கு உசேன் சாயபு அவர்கள் மார்பத்திலே காரியம் நடக்கிறபடியினாலே இப்போதும் அவருக்குத்தானே உபசாரங்களாய் காகிதமெழுதி அனுப்பினால் உசேன் சாயபு அவர்கள் என்ன சொன்னாலும் அந்தப்பேச்சு நபாபு அன்வர்த்திகான் தட்டிப்போடுகிறதில்லை. ஆனபடியினாலே இப்போ இங்கிலீஷ்காரர் நடப்பிக்கின்ற காரியங்களுக்குக் காரியங்களெல்லாம் அநுகூலமாய் நடக்குமென்று தோணுது. இந்த வேளைக்கு எழுதியனுப்பிய காரியம் அநுகூலம்பண்ணிக்கொண்டு அப்பால் நேருக்கு நேராய் பார்த்துக்கொள்ளலாமென்றும் இதல்லாமல் தாங்கள் அசரத்து மாபுசுகான் பேருக்கும் அன்வர்த்திகான் அனுப்பின காகிதங்களிலே அன்வர்த்திகான் அவர்களுக்கு துரையவர்கள் காகிதத்தைக் கொடுத்து சேதி சொன்னதற்கு காகிதத்தை படித்துப்பார்த்து கிட்டயிருந்த முகம்மது தவக்காலைப் பார்த்து என்ன புதுச்சேரி குவர்னதோர் எழுதின காகிதத்திலே பின்னை ஒரு சேதியும் எழுதியிருக்கக்காணோம். உபசாரமும் க்ஷேமமுமாத்திரமே யல்லாமல் இந்த சண்டை பிரசங்கமே எடுக்கக்காணோமென்று கேட்டதாகவும், இனிமேல் உண்டாகுமென்று பதிலுத்தாரம் சொல்லி, அப்பால் நபாபுடனே என்னமோ அந்தரங்கம் பேசி அப்பால் துரையவர்

களுக்கு ஒரு காகிதமும், உங்களுக்கு ஒரு காகிதமும் எழுதிக் கொடுத்தாரதை என் காகிதத்துடனேகூட அனுப்பிவைத்தேன். அது என்னவென்றால்: தெரியவருமென்றும், அசலத்து மாபுசுகானுக்கு அனுப்பின காகிதம் அவர் வேட்டவலத்திலே இருக்கிறபடியினாலே அவரின்று நாளையிலே வருவார். வந்த உடனே அவருடைய காகிதம் அவருக்குக் கொடுத்து அதற்கு பதிலுத்தாரம் துரையவர்களுக்கும், உங்களுக்கும் வாங்கி அனுப்புகிறேனென்றும், அத்துடனேகூட அன்வர்த்திகான் காகிதம்கூட வாங்கி அனுப்புகிறேனென்றும், நபாபு அன்வர்த்திகான் சாயபு அவர்கள் கச்சேரி இருக்கும்போது என்னைப்பார்த்து உங்கள் புதுச்சேரி சுற்றுக்கோட்டை அகரத்தையை சுத்திக்கொண்டு இங்கிலீஷ்காரர் சண்டை பண்ணுகிறார்களென்று எங்கள் அமுல்தார் அங்கேயிருக்கிறவர்களெழுதி அனுப்பினார்கள். உமக்கென்ன எழுதிவந்ததென்று கேட்டார். ஒழுகரை மேல்பாரிசமாய்தானே இறங்கியிருக்கிறதாய் சேதிவந்ததென்று சொன்னதற்கு எங்கள் அமுல்தாரர்கள் எழுதியனுப்பினது பொய்யாவென்று கேட்டாரென்றும், எனக்கு வந்தசேதியை சொன்னேனென்றும் சொன்னதாகவும், அப்துல்சலி இப்போ விழுப்புரத்திலிருந்து அன்வர்த்திகானுக்கு வரச்சொல்லி எழுதி அனுப்பினதாகவும், அந்த அன்வர்த்திகான் முன்னூறு குதிரைகளும் ஐந்நூறு பேர் சேவகருடனேயும் மாபுசுகான் அனுமதியின்பேரிலே இங்கிலீஷ்காரருக்கும் மத்தத்தாய் அவ்விடத்துக்குப் பயணம் சாகிவந்து இரண்டு நாளானதென்றும் மாபுசுகான் முதலானதிலுக்கருக்கு நம்முடையவர்கள் பயமிருக்கிறபடியினாலே இங்கிலீஷ்காரர் நிர்வாகமில்லாதவர்கள் அல்ல [ஆனால் அவர்கள் முடிவு] எப்படியோ வென்றும் அச்சமென்றும் ஆளுடையிலே இருக்கிறதென்றும் இதுகளுக்கெல்லாம் சீக்கிரமத்துக்கு உசேன் சாயபு அவர்களுக்குக் காகிதமெழுதியனுப்பினால் அநுகூலமாய் காணுதென்றும் முத்துமல்லாரெட்டி நம்முடையவர்கள் மாயேயிலிருந்து வந்தவர்களிலே நாற்பது ஐம்பது பேரை பிறகே போகிறவர்களை இங்கிலீஷ்காரனுக்குப் பிடித்துக்கொடுத்தானென்றும் புதுச்சேரி என்றால் (இவன்) இங்கிலீஷ்காரனுயிருந்து வெகு தொந்தரவு பண்ணுகிறதும் பிடித்துப் பிடித்து இங்கிலீஷ்காரண்டைக்கு அனுப்புகிறதும் அடிக்கிறதும், பிடிக்கிறதும் தட்டுமுட்டுகளை பணம்காசுகளைக்

கொள்ளையிடுகிறதும் இப்படி அவன் பண்ணுகிற சோருவளி இன்றுமட்டிலும் மட்டென்று (இவ்வளவுதானென்று) எழுதி முடியாதென்றும் அப்பால் ஆத்தூர் தாலுக்கு கிராமங்கள் கொள்ளையிட்ட சங்கதிக்கு திவான் அவர்களுக்கு சொன்னால் நல்லது தாக்கீது பண்ணுகிருமென்று சொல்லுகிறமாத்திரமே யல்லாமல் அவன் ஜாதி ஆசாரங்கள் (சதா ஆகாரங்கள்) அரிசி, பருப்பு, நெய் இது முதலானதுகள் அப்போதைக்கப்போது அனுப்புகிறபடியினாலேயும் அவர்களைத்தொட்டு ரொம்ப பிரயோஜனப்பட்டிருக்கிறபடியினாலே நல்லது நல்லதென்று சொல்லுகிறதேயல்லாமல் காரியமாகிற சாடையில்லையென்றும் அப்பால் தன் பேச்சுக்கு சம்பளம் வரவில்லையென்றும், திருவீதி சேஷாசல செட்டி பேருக்கு உண்டிகை அனுப்பினால் வாங்கிக்கொள்ளுகிருமென்றும், இதல்லாமல் சந்தி முன்வர்த்திகான் முகாந்திரமாய் நடத்தினால் அவன் போகவிட்டு, ஏணியை வாங்குகிறவன் அந்தபடிக்குத்தான் திருவீதி சேஷாசல செட்டியை மோசம் பண்ணினானென்றும், ஆனபடியினாலே அவனை நம்பப்போகாதென்றும் முன்னும் பின்னும் நம்முடைய காரியங்களிலே உசேன்சாயபு அவர்கள் மார்பத்திலே நடத்தியிருக்கிறபடியினாலேயும், பற்றுள்ளவனானபடியினாலேயும் உசேன்சாயபு என்றால் நபாபு அன்வர்த்திகானுக்கு மெத்த விசுவாசமும் அவர் சொல் தள்ளுகிறதில்லையென்றும், அன்வர்த்திகான் முதலானபேர்கள் சுவாரி நடந்தால் முன் பல்லாக்கு உசேன்சாயபுடையது. அப்பால் அன்வர்த்திகான் பல்லாக்கு பிறகுமாக போகிறது என்றும் சகல யோசனைக்கும் உசேன் சாயபு உத்திரவில்லாமல் நடக்கிறதில்லை. அதனாலே என்னமாய்ப் பார்த்தாலும் உசேன்சாயபு அவர்கள் மார்பத்திலே நடக்கிறதே காரியமென்றும், இவ்விடத்திலே நடக்கிற காரியத்தினாலே உங்கள் சொத்து சாப்பிட்டதினாலே பயமில்லாமல் இப்படி எழுதினேனென்றும் இதுமுதலான சேதியெல்லாம் எழுதிவந்தது. எழுதிவந்தபடிக்கு துரையவர்களுக்குச் சொன்னேன். அவரதிலே சிறிது பேச்சு சாப்பிடும்போது கேட்டு, உடனே சாயபுக்கு எழுதலாகாதென்றும் இவர்களாய் சமாதானம் பண்ணுவார்களென்றும் சொல்லி, எதற்கும் நாளைக்கு சாவகாசமாய் பேசிக்கொள்ளுவோம்; வீட்டிற்குப் போவென்று சொன்னார். நல்லதென்று அனுப்பிவைத்துக்கொண்டு வீட்டுக்கு வந்தேன்.

அப்பால் இன்றையதினம் கேழ்விபட்ட சேதி என்னவென்றால்: இரண்டுபேர் இங்கிலிஷ்காரர் அவர்கள் பாளையத்திலிருந்து புறப்பட்டு சமுத்திரகரைக்குப் போய் அவ்விடத்திலிருந்து படகு மேலே ஏறி போகவேணுமென்று புறப்பட்டவர்கள் வழி தப்பி வடவண்டைக்கு குண்டுசாலே ஓரமாய் வரும்போது அப்துலாயிமான் சிப்பாய்கள் பொழுது விடிகிற காலத்திலே நூற்றைம்பதுபேர் இருநூறுபேர் மட்டுக்கும் தினவாடிக்கையாய்ப் போய் வருகிறவர்கள் கையில் இங்கிலீஷ்காரர் இரண்டுபேரும் அகப்பட்டபடியினாலே அவர்களிரண்டுபேரையும் பிடித்துக்கொண்டுவந்து துரையவர்கள் முன்னே விட்டார்கள். அதற்கு துரையவர்கள் அந்த இங்கிலீஷ்காரருடனே பேசிக்கொண்டிருக்கிறப்போலே யிருந்து அதற்கு முன் காலாப்பேட்டையிலிருந்து பிடித்துவந்த இங்கிலீஷ்காரனொருத்தன் நம்முடையவர்களுக்கு அநுகூலமாய் பீரங்கிகள் வேலைப்பார்க்கிறவிடத்திலே கூடயிருந்து பீரங்கி மேஸ்திரிகளுடனே கூட திரிகிறவனை இப்போ பிடித்துவந்த இங்கிலிஷ்காரர் மர்மம் அறியத்தக்கதாக அவனைக் கொண்டுபோய் கசேர்னில் வைத்து அதன்பேரிலே இந்த இரண்டுபேர் இங்கிலீஷ்காரரையும் கொண்டுபோய் அவனிருக்கிற கசேர்னில் போட்டமாத்திரத்திலே இவர்கள் இரண்டுபேர்களுடனேயும் அவனென்னை கொண்டுவந்துப்போட்டு நாலுமாதமானது. நம்முடையவர்கள் சண்டைக்கு வந்தார்களே இத்தனை நாளென்னத்திற்கு கோட்டையை வாங்காமலிருக்கிறார்களென்று சொல்லி, பிரான்சுக்காரர் நிந்தித்து இங்கிலிஷ்காரர்கள் வெகு தோத்திரமாய் சொன்னதுமல்லாமல் இங்கிலீஷ்காரருக்கு அநுகூலமாயிருக்கிற விசேஷங்களென்னென்ன சொல்லவேணுமோ அப்படியெல்லாம் சொல்லி, பின்னையும் அவர்களுடனே கலந்துபேசினவிடத்திலே அவர்களிவனுடனே மர்மம்விட்டு சொன்னதாய் அவன் துரையவர்களுடனே வந்து சொன்ன சேதி: இங்கிலீஷ்காரர் இறங்கியிருக்கிற பாளையத்திலே காச்சலினாலேயும் தென்னைமரத்து குருத்துகளை தின்று வயிறு கழிச்சலெடுத்து அதனாலேயும் இவ்விடத்திலிருந்து கொத்தளங்களிலே யிருந்து வருகிற பீரங்கிகளினாலேயும் எரோப்புராசியம் வெகு குளிர்ந்த இராச்சியமானபடியினாலே அந்த இராச்சியத்திலேயிருந்து இவ்விடத்திற்கு புதுசாய் வந்து கரையிலே இறங்கி தண்டு வந்து இறங்கி ஏற்கனவே இந்த இராச்சியம் அனல் ராச்சியம்

ஆனபடியினுலேயும், அத்துடனேகூட வீடு வாசல் முதலான ஆசோதாவா யிருக்கப்பட்ட இடங்களில்லாமல் இராத்திரியும் பகலும் கூடாரத்தின் கீழே வெய்யலிலே மணலிலே அனலிலே வேகிறபடியினுலே எட்டு நாள் பத்து நாள் அல்லாமல் நாற்பது நாள் ஐம்பது நாள் நெடுநாள் சென்றபடியினுலேயும், அநேக ராத்திரிகளும் சண்டையினுலே தூக்கமில்லாததினுலேயும் வந்து இருக்கிற வெள்ளைக்காரர்களுக்கு வியாதிகள் வந்து அதனுலேயும் இப்படி வெள்ளைக்காரர் நாலா விதத்திலேயும் சாவு விஸ்தாரமானபடியினுலேயும் இனிமேல் மேஸ்தர் புஸ்காவேன் கோந்திரமிராலாய் வந்திருக்கிறவர் ஆலோசனைபண்ணி தீர்த்ததென்னவென்ருல்: மூன்று நாள் கப்பலின்பேரிலே இருந்தும் மேலண்டையிலே இப்போ எழுப்பி யிருக்கிற கொத்தளத்தின்பேரிலே யிருந்தும், பின்னையும் இரண்டு மூன்று இடத்திலே தம்தாமா யெழுப்பி, அதன்மேலே யிருந்தும் பீரங்கி வைத்திருக்கிற நெடும் பீரங்கிகள் சுட்டு, பீரங்கிகள் இதுகளினுலே மூன்று நாள் தீக்குடுக்கைகளையும், பீரங்கி குண்டுகளையும் மூன்று நாள் இடைவிடாமல் குண்டுகள் மயமாய் வருஷம் வருஷித்தாப்போல் வருஷிக்கிறதின்பேரிலே கோட்டையை விட்டாலாச்சுது இல்லாமற்போனுல் இந்த இராச்சியத்திற்கு மழைகாலம் துவக்கமானபடியினுலேயும் கப்பல்கள் கடலின்பேரிலே இருக்கக்கூடதென்கிற ஞாயத்தின் பேரிலேயும் புறப்பட்டு போய்விடுவோமென்று யோசனை பண்ணி தீர்த்து கையெழுத்துப் போட்டதாயும், நாளை முதற்கொண்டு மூன்று நாள் குண்டு வருஷமாய் வருஷிக்கப்போரானென்று அந்த இங்கிலீஷ்காரர் சொன்னதாகவும் அந்த சேதி கேட்டுவந்த பழைய இங்கிலீஷ்காரன் நம்முடையவர்களுக்கு அநுகூலமாயிருக்கிறவன் கேட்டுக்கொண்டுவந்து ஸ்ரீ துரை அவர்களுக்குச் சொன்னதாய் இரண்டொரு வெள்ளைக்காரரிலே பெரிய மனுஷர்கள் என்னுடனே சொல்லி, பின்னையும் சொன்னதென்னவென்ருல்: நீயும் ஓர் இடம் பத்திரமாய்ப் பார்த்துக்கொண்டு இரண்டு மூன்று நாளும் பீரங்கிகள் தீக்குடுக்கைகள் விழாத இடமாய்ப்பார்த்து அதிலே நீயும் உன் பமீலும் ஜாக்கிரதையுடனே இருக்கவேணுமென்று சொன்னதுமல்லாமல் அவனுக்கும் பெண்டுகளுக்கும் குழந்தைகளுக்கும் இந்த மூன்று நாளைக்கு சாப்பாடும் மத்ததுங்கூட சமைத்து

முஸ்திப்பாய் வைத்துக்கொண்டு இருந்த இடம்விட்டு புறப் படாமல் பலத்த இடமாய்ப் பார்த்துக்கொண்டு இருக்கவேணு மென்று சொன்னார்கள். அவர்கள் என்பேரிலே தயவாய் நன்றி அறிந்த உபசாரணை சொல்லி, அப்பால் சொன்னதென்ன வென்றால்: சுவாமியினுடைய கடாக்ஷமும் உங்களுடைய தயவும் பூரணமாய் எனக்கொரு வஜ்ரத்தினாலே போட்ட மெத்தையுமாக பலனாய் எனக்கொரு இடமிருக்கிறது. அதன் கீழே சகல ஆரோக்கியத்துடனே நான் இருப்பேனென்று சொல்லிவிட்டு, அனுப்பிவைத்துக்கொண்டு வந்தேன். எனக் கேற்க யோசனைபண்ணிப் பார்த்தால் துரையவர்கள் என்னை குஞ்சுக் குழந்தைகளுடனே கோட்டையிலே வந்து இருக்கச் சொன்னதற்கும், இவர்கள் சொன்னதற்கும் தாக்கலா சரியா யிருந்தபடியினாலே இது நிஜ கபுறு இதற்கு சந்தேகமில்லை நாளையமுதற்கொண்டு அந்தபடிக்கு நடக்குமென்று தோணு கிறது. அப்பால் நடக்க நடக்க தெரியவருகிறது.

இற்றைநாள் அவன் மேல்பார்சத்திலிருந்துப் போட்ட நெடும்பீரங்கி குண்டுகளினாலேயும், தீக்குடுக்கைகளினாலேயும் பதினைந்து இருபதுபேர்மட்டுக்கும் சாவு காயமும் உண்டானது. இதல்லாமல் அந்த நெடும்பீரங்கி குண்டினாலே வழுதாவூர் வாசற்படிக்கு வடவண்டையிருக்கிற சேன் மொசேப் என்கிற பேருடைய கொத்தளம் வாணியத்தெருவு மூலை கொத்தளமும் வழுதாவூர் வாசற்படியிலே இருக்கிற கொத்தளங்களும் அந்த பாரிசத்திலே இருக்கிற செவுர்களும் பொத்தல்பொத்தலாய்ப் போனதென்று அந்த குண்டுகளினாலே அந்த பார்சத்திலே எங் கும் மனுஷர் தலைக்காட்டக்கூட யில்லையென்றும், அந்தகுண்டு கள் உப்பாத்தங்கரை மீர்குலாமுசேன் வீட்டுமட்டுக்கும் போகிறமனுஷரையெல்லாம் அடித்துக்கொண்டு போகுதென் றும், மீர்குலாமுசேன் அத்துப் புகையிலை கிடங்கு முதற் கொண்டு நம்முடைய தெருவு அரும்பாத்தைப்பிள்ளை வீட்டு மட்டுக்கும் கடைத்தெருவு, கோமுட்டித்தெருவு, செட்டித் தெருவு, கைக்களத்தெருவு உள்பட குண்டுகள் வருகிற சுருக்கி னாலே மனுஷரெங்கும் நடமாடக்கூடயில்லையென்று வந்து சொல்லிக் கொள்ளுகிறார்கள். இதல்லாமல் அரும்பாத்தைப் பிள்ளை மைத்துனி மகன் அரும்பாத்தப்பிள்ளை வீட்டுத் திண்ணை யிலே இருக்கும்போது குண்டுபட்டு செத்துப்போய்விட்டா

னென்று சொன்னார்கள். அப்பால் இன்று இராத்திரி பரசு ராமப்பிள்ளை வீட்டிலே ராயல் கிறனாத் என்கிறது வந்து விழுந்து செட்டிபிள்ளையாண்டான் நாசரி என்கிறவனுக்கு வந்து பட்டு செத்துப்போனானென்று வந்து சொன்னார்கள். அப்பால் இன்றையதினம் இந்தப் பட்டணத்திலே குண்டுகளினாலே வெகு பேருக்கு சாவு காயமுமென்றும், வீடுகள் சேதமென்றும் வெகு ஜனங்கள் தத்தளிக்கிறார்களென்று சொல்லுகிறார்கள். இவ்விடத்திலே குண்டுகள் வருகிற உபத்திரவத்தினாலே இந்த பட்டணத்திலே இருக்கிற ஜனங்களெல்லாரும் வெளியே போய்ச் சேர்ந்தார்கள். காயப்பட்ட பேர்களெல்லாம் ஆஸ்பத்திரிக்குக் காயம் கட்டச்சொல்லிப் போனால் கிருஸ்தவனானால் காயம் கட்டுகிறதேயல்லாமல் மற்றபடிக்கு தமிழருக்குக் காயம் கட்டுகிறதில்லையென்று சொன்னார்களென்று வெகு ஜனங்கள் தாபந்தப்பட்டுக்கொண்டு மனது நொந்துக்கொண்டு சொல்லிக்கொண்டார்கள். இற்றைநாள் இராத்திரி கிழ் பாரிசத்திலேயிருந்து பத்து போம்புமட்டுக்கும் போட அப்பால் நிறுத்திப்போட்டான். அதனாலே ஒரு போம்பு வந்து நம்முடைய சிராயுக்கிடங்கிலே வடவண்டை பாரிசத்திலே ஊரணி சாலிருக்கிற விடத்திலே விழுந்து (சால்) உடைந்து சேதப்பட்டதென்று வந்து கபுறு சொன்னார்கள். மத்தது அங்கங்கே வீட்டுகளிலேயும், தெருவுக்களிலேயும் விழுந்ததென்று வந்து கபுறு சொன்னார்கள்.

இற்றைநாள் இங்கிலிஷ்காரன் கையில் ஒரு கப்பல் மூன்று அலைமட்டுக்கும்கொண்டு ஓடிவந்தான். ஓடிவந்தவன் அந்தக் கப்பலைப் பார்த்து நம்முடையவர்கள் பீரங்கி குண்டுகளினாலே போடுவதற்குள் மேலே ஓசந்து போனான். என்னவென்று விசாரித்தால் கப்பல்களைக் கொண்டுவந்து வைத்துப் பிடிக்கிறதற்கு பிரமானம் பார்க்க வந்தானென்று சொன்னார்கள்.

*1748* ஆ அக்டோபர் மீ 6 உக்கு விபவ ஞு புரட்டாசி மீ 25 உ சோமவாரம்.

இற்றைநாள் இங்கிலிஷ்கார கப்பல்கள் இருபத்தொரு கப்பல்களுக்கு கரைக்கு ஐந்து [ ] பாவத்திலே பிடித்து கப்பல்களெல்லாம் இரண்டு வரிசை கோட்டையைப் பார்த்தும் பட்டணத்தைப் பார்த்தும் தீர்ந்தான். அது ஆறு மணி துவக்கி

ஆறரை மணிக்குள்ளாக இரண்டு வரிசை சப்பல்களெல்லாம் தீர்த்துக்கொண்ட காலத்து மழையானது ஒரு மப்புவந்து பட படவென்று அரை நாழிகை வருஷித்துப்போகுப்போலே சிறிது கோட்டை மேலேயும் சிறிது வெள்ளைக்காரத்தெருவுகளிலே யும், சிறிது பட்டணத்தின் மேலேயும், சிறிது கடலின்பேரிலே யும் விழுந்தது. அந்தக் குண்டுகள் விழுந்ததினாலே பத்து ஐந்து மனுஷருக்குச் சேதமும் சிறிது வீடுகளிலே இரண்டு மூன்று சுவர்கள் துளைத்துக்கொண்டுபோனதும் தட்டோட்டு களை அடித்துக்கொண்டுபோனதும் மருந்துகளை அடித்துக் கொண்டுபோனதும் இப்படியாக கிழக்கிலிருந்துக்கொண்டு போனது மேற்கே வழுதாவூர் வாசற்படி மட்டுக்கும் போய் விழுந்து அப்பாலும் தாண்டிப்போனதென்றும், வந்து கபுறு சொன்னார்கள். இனிமேலும் கப்பல்மேலே யிருந்துப் போடு வான் போடுவானென்று சொல்லி அவர்கள் சிறிதுபேர்களெல் லாம் வீட்டிலேதானே இருந்தார்கள். சிறிதுபேர் ஒன்பது மணி பத்து மணிவரைக்கும் வீடுகளிலே யிருந்து அப்பால் இனி போடத்தக்கதில்லையென்று சொல்லி, வெளியே புறப்பட்டார் கள். ஆனால் நேற்று நான் கேழ்விப்பட்டிருந்த சேதிக்கு இன்று காலையிலே அவன் துவக்கினதற்கும் சரிப்பட்டது. ஆனால் இன்றையதினம் இராவும் பகலும் விடாமல் சுடுவானென்று அநேகம் பேர்கள் மனதிலே அச்சம் வாங்காமல் குடிகொண் டிருந்தது. இந்த பீரங்கிக்குண்டாகிய நெருப்பு வருஷம் இன்றைக்கு ஆரம்பம் பண்ணினான் என்றைக்கு முடிப்பானோ தெரியாதென்று சொல்லி, பட்டணத்திலே உண்டாகிய வெள்ளைக்காரர், தமிழர்கள் முதலான ஜனங்களுக்கும் மனதுக் குள்ளே ஒரு திகிலுண்டாயிருக்கிறது. இந்த திகில் தீருகிற தற்கு முடிவு எப்போ உண்டாகுதோ அறியவேண்டியது. அப்பால் கீழ் பாரிசம் இன்றையதினம் பகலும் ராத்திரியும் பீரங்கி குண்டுகளும், திக்குடுக்கைகளுங்கூடப் போடவில்லை. காலையில் ஆறு மணிதுவக்கி ஆறரை மணிவரைக்கும் பீரங்கிக் குண்டுகள் வருஷமாய் வருஷித்த குண்டுகள் தினுசு வயணம்: இங்கிலீஷ்காரர் நிரை முப்பத்திரெண்டு ராத்தல் முதல் ஆறு ராத்தல் மட்டுக்கும் குண்டுகள் புறப்பட்டதுகள். பிராஞ்சு ராத்தல் இருபத்தெட்டு முதல் ஐந்து ராத்தல் குண்டு மட்டுக் கும் போட்டதாய் வெள்ளைக்காரர் சமஸ்தமானபேரும் வந்து விழுந்த குண்டுகள் பார்த்தபேர்களெல்லாம் சொன்னார்கள்,

இதுவுமல்லாமல் இந்த குண்டுகள் இவ்வளவு போட்டானென் கிற தொகையை எழுதுகிறதற்கு ஒருவரை விட்டுவைத்திருக் கிறது. அப்பால் மேற்கேயிருந்து நெடும் பீரங்கி குண்டுகள் சட்டி பீரங்கி திக்குடுக்கைகளும், சாயங்கால பரியந்திரம் விஸ் தாரமாய்ப் போட்டான். அந்த குண்டுகள் வழுதாவூர் வாசற் படி தென்னண்டை கொத்தளம் வடவண்டை கொத்தளம் துவக்கி சென்னப்பட்டணத்து பழைய வாசற்படி அத்துக்குச் செவருகளெல்லாம் குண்டு குண்டாக முழம் முழம் புதைந் ததும் இரண்டு முழம் புதைந்ததும் மேலே சட்டியிருக்கிற ஆள் மரவுகளெல்லாம் ஒடித்துக்கொண்டு இப்புறம் வருகிறது மல்லாமல் அதற்கு மேல்பட்ட குண்டுகளெல்லாம் பட்டணத் துக்குள்ளே வில்லியனூர் வாசற்படிக்குக் கிழக்கே பார்த்த இராஜ வீதிக்கு வடக்கு பெரியண்ணமுதலியார், அப்பு முதலியார் மீர்குலாமுசேன்சாயபு அவர்களை வீடு கட்டிக் கொண்டு சென்னப்பட்டணத்து வாசற்படி தெற்கு, வடக்கு ராஜவீதி மேற்காயிருக்கப்பட்ட வீதிகளுக்குள்ளே வீடுகளிலே குண்டுபடாத இடமில்லை. கோமுட்டித்தெருவு முதல் கைக் களத்தெருவு, சேடத்தெருவு, சேனியத்தெருவு, மதனந்த பண்டிதர் வீடு, குண்டூர் ரமணப்பசெட்டி வீடு மட்டுக்கும் எங்கும் மனுஷருக்குத் தலைகாட்ட இடமில்லை. ஆனபடியினாலே அந்த வட்டங்களிலே இருந்த ஜனங்களும் சென்னப்பட்டணம் வாசற்படிக்குக் கிழக்கு மேற்கு தெருவுகளிலே இருக்கிற ஜனங் களும் மீர்குலாமுசேன் வீடுமுதல் வில்லியனூர் வாசற்படி ராஜ வீதிக்கு வடக்கு பாரிசமாயிருக்கப்பட்ட தெருவுகளிலே இருக்கப்பட்ட ஜனங்களெல்லாரும் இந்த குண்டுகள் உபத்திர வத்தினாலே இருக்கக்கூடாமல் வில்லியனூர் வாசற்படி கிழக்கு மேற்கு நெடுந்தெருவு ராஜவீதிக்குத் தெற்கேயிருக்கப்பட்ட மீருப்பள்ளியிலே சமஸ்தமான ஜனங்களும் போய் சேர்ந்தார் கள். முன் மராட்டியர் தாம்தாமிலே வெளியே இருக்கப்பட்ட ஆற்காடுமுதல் சுற்றிலும் பத்து காதவழிக்குப் பத்துகாத வழி யிலே இருக்கப்பட்ட ஜனங்களெல்லாரும் வந்து நம்முடைய பட்டணத்திலே சேர்ந்து இருந்தபோது பட்டணமெல்லாம் எப்படி கஜவிந்தியமாயிருந்ததோ அப்படி இப்பவும் பட்டணத் திலே இருக்கிற ஜனங்களெல்லாரும் மீருப்பள்ளியிலே சேர்ந் ததும் மனுஷர் திரளானபடியினாலே எள்ளு போட்டால் கீழே விழாது என்று சொல்லிக்கொண்டார்கள். ஆனால் நான் மாத்

திரம் என் சம்சாரத்துடனே வழுதாவூர் வாசற்படி கிழக்கே மேற்கு ராஜவீதியிலே பாலப்பமுதலியார் வீடாகிய நம் முடைய கிடங்கிலே இருந்தோம். மற்ற சமஸ்தமானபேரும் வீட்டுக்கு ஒரு கூலிக்காரனை வைத்துப்போட்டு கோட்டைக்கு வடக்கு மேற்கு பவழப்பேட்டையிலேயும் இருக்கப்பட்ட ஜனங்கள் சகலமானபேரும் போய் மீருப்பள்ளியே சேர்ந்தார்கள். வீட்டுக்கு ஒருத்தராக கூலி ஆள் ஒவ்வொரு சேவகன் தவிர, மற்றபடி பட்டணமெல்லாம் சனகிதமாயிருந்தது [ஜன கினமாய்]. ஆனால் நாமிருக்கிற தெருவிலே மாத்திரம் படே சாயபு அவர்கள் பெண்சாதி பிள்ளைகளிருந்தபடியினாலே சவிஸ்தாரமாயிருந்தது. நாமிருக்கிற வீடுதிற்கு எதிரான வீட்டிலே அரியப்பமுதலியார் மாத்திரம் இறங்கியிருந்தார். மற்றபடி கனகராயமுதலியார் தம்பி தானியப்பமுதலியார் முதல் கிருஸ்தவ கூட்டங்களெல்லாம் ஏற்கவே பெண்டுகள் குஞ்சுகள் வெளியே அனுப்பிவிட்டு, ஆண்பிள்ளைகளை மாத்திரம் வீடுகளிலே இருந்தவர்கள் சதவுகளை சாத்திப்போட்டு ஒவ்வொரு கூலிக்காரனை வைத்துப்போட்டு முதல் முதல் கிழக்கே யிருந்து தீக்குடுக்கைப்போட துவக்கின மறுநாள் தானே மீருப்பள்ளியைப் போய்ச் சேர்ந்தார்கள். இப்போ எழுதப்பட்ட பவழப்பேட்டை முதல் பட்டணத்திலேயிருக்கப் பட்ட ஜனங்களெல்லாரும் மீருப்பள்ளியைப் போய்ச்சேர்ந் தார்களென்று எழுதினது இன்று அல்ல; எப்போ மேற்கே யிருந்து குண்டுகள் தீக்குடுக்கைகள் வரத் துவக்கினதோ அன்றும் மறுநாள் காலத்தாலே பவழப்பேட்டை ஜனங்கள் எல்லாம் மீருப்பள்ளியைப் போய்ச் சேர்ந்தார்களென்று அவன் போட்ட பீரங்கி குண்டுகளெல்லாம் இருபத்தினாலு ராத்தல், பதினெட்டு ராத்தல், பனிரெண்டு ராத்தல் மட்டுக்கும் விஸ்தாரமாய் வந்தது. இன்றையதினம் மேற்கேயிருந்து போட்ட பீரங்கி குண்டுகளும், அறுபத்தைந்து ராத்தல் எழுபது ராத்தல் தீக்குடுக்கைகளும் சுமாருக்கு இரண்டாயிரத்துக்குமேல் மூவாயிரம் மட்டுக்கும் உண்டு. மேல் பாரிசத்திலே போட்ட குண்டு பட்டணத்திலே எங்கும் நேற்று படாமல் வந்தால் கோட்டை சுவரிலேயும்பட்டு அகத்தையிலே விழுந்தது. சிறிது குண்டுகள் சமுத்திரத்திலேயும் விழுந்ததாகையால் மற்றபடி பட்டணத்திலே இன்னென்ன விடத்திலே பட்டதென்று எழுதக் கவையில்லையே ஆனபடியினாலே பட்டணமெங்கும்

குண்டுபடாத விடமெங்கும் இல்லையென்று எண்ணிக்கொள்ள வேண்டியது. வழுதாவூர் வாசற்படி. சென்னப்பட்டணம் வாசற்படி அந்த வட்டங்களிலே கூலி வேலை செய்கிற ஜனங்கள் சஞ்சாரமேயல்லாமல் மற்றபடி வேறே பட்டணத்திலே சஞ்சாரங்களில்லையே இன்றையதினம் சாவு காயமும் நாற்பது ஐம்பது, அறுபது மட்டுக்கும் உண்டென்று சொல்லிக்கொண்டார்கள்.

முன் இருபத்தோராந்தேதி வியாழக்கிழமை இங்கிலீஷ்காரர் இருபத்தினாலு ராத்தல் குண்டு ஓடுகிற பீரங்கியும் அந்த பீரங்கி இழுக்கிற வண்டியும் இரண்டும் நம்முடையவர்கள் கொண்டுவந்தார்களே அந்த இரண்டு பீரங்கிகளையும் வழுதாவூர் வாசற்படி கொத்தளத்துக்கும், வாணியத்தெருவு மூலை கொத்தளத்துக்கும் நடுமய்யத்தில் இருக்கிற சேன் புசேன் என்கிற கொத்தளத்திலே வைத்து இங்கிலீஷ்காரரால் ஷக்கரையும், மோர்சாவையும் பார்த்து சுட்டுக்கொண்டுவந்தார்கள். அப்பால் இந்த பீரங்கிகளைப் பார்த்தும் கொத்தளத்தைப் பார்த்தும் அவன் விஸ்தாரமாய் குண்டுபோட்டபடியினாலே இந்த இரண்டு பீரங்கிகள்தானே அவன் குண்டுகள் வந்து இரண்டு பீரங்கிலேயும் இரு பார்சமுமிருக்கிற இரசிகளையும் முரித்துப்போட்டு போனதுமல்லாமல் ஒரு ஒப்பிசியலும் ஐந்தாறுபேர் பீரங்கி மேஸ்திரிகளுக்கும் சாவு காயமுமென்றும் சொல்லிக்கொண்டார்கள். மறுபடியும் அந்த இரண்டு பீரங்கிகளையும் இழுத்துப்போட்டு அதற்கு பதில் முன் சென்னப்பட்டணத்திலிருந்துகொண்டு வந்த முப்பத்தாறு ராத்தல் குண்டு ஓடுகிற பீரங்கியையும் இருபத்தினாலு ராத்தல் குண்டு ஓடுகிற பீரங்கியையும் இழுத்துப்போய் வைத்தார்களென்றும் சொல்லிக்கொண்டார்கள். அவன் (இங்கிலீஷ்காரன்) போடுகிற பீரங்கியினாலே கொத்தளத்திலே அரங்கத்தின்பேரிலே மனுஷர்கள் இருக்கக்கூடாமல் காவற்காரன் தவிர, மற்றபேர்களையெல்லாம் தாழ அந்தந்த இடங்களிலே தாவு பார்த்து இருக்கச் சொல்லி, அந்தந்த இடத்து ஒப்பிசியேமார்கள் மூன்றுபேரை பிடித்து இந்த உத்தாரம் கொடுத்துக்கொண்டே வந்தார்கள். மூன்றுபேரையும் பிடித்துக்கொண்டே வந்தார்கள் என்று மூன்றுபேரை பிடித்து கபுறு வந்து சொல்லிக்கொண்டே இருக்கிறார்கள்.

**1748 ஆ அக்டோபர் மூ 8 உ க்கு விபவ ஹ புரட்டாசி மீ 26உ** மங்களவாரம்.

இற்றைநாள் காலத்தாலே ஐந்துமணிக்கு நடந்த அதிசய மென்னவென்றால்: இங்கிலீஷ்காரன் இருபத்தொரு கப்பல்கள் பட்டணத்துக்கும், கோட்டைக்கும் நேராய் வைத்துப்பிடித்து அமிரால் கப்பலிலே அதிகாலையில் அருணோதய வேளையில் வரிசைவைத்து தம்புரு அடித்து வலிய (வலிக்க) பாய்மரத்திலே சிகப்புக் கொடிபோட்டுக்கொண்டு பெரிய லாந்தர் கூண்டிலே பெரிய மெழுகுத்திரி கொளுத்தி கட்டினான். அப்பால் கப்பல்கள் ஓரமெல்லாம் கப்பலை ஒரு பிரியமாய் சாத்திவைத்துக்கொண்டு இங்கிலீஷ்காரரதலாலே முப்பத்தாறு ராத்தல் முப்பத்திரெண்டு ராத்தல் இருபத்தெட்டு ராத்தல் இருபத்திநாலு ராத்தல் பதினெட்டு ராத்தல் பதினாறு ராத்தல் பனிரெண்டு ராத்தல் இப்படிப்பட்ட குண்டுகள் ஓடுகிற பீறங்கிகளாய் வைத்துக்கொண்டு இதுவுமல்லாமல் ஒரு சுலுப்பின்பேரிலே யிருந்து ஐம்பது ராத்தல் தீக்குடுக்கைகள் ஓடுகிற முடுத்தியே ஒன்றும் வைத்துக்கொண்டு இதுகளினாலே சூரிய உதயம் ஆறுமணிக்கு துவக்கி சூரிய அஸ்தமாகிற ஆறுமணி மட்டுக்கும் பனிரெண்டுமணிநேரம் ஒரு நிமிஷ வேலையாகிலும் இடைவிடாமல் யுகாந்த காலத்திலே சப்தமேகங்களும் சப்தசமுத்திரங்களையும் பானம்பண்ணி தங்களுக்குண்டான பராக்ரமங்களுடனே மின்னிக்கெற்ஜித்து இடித்து மிக்க ஆர்பாட்டத்துடனே சில வருஷங்களும் கலந்து பிரளயக்காலமாய் மிக்க மகத்துவமுண்டாகிய மேரு பருவதத்துடைய சிகரத்தின்பேரிலே வருஷத்தரப்படியோ அப்படிப்போலே டில்லி அகனுமுதலாகிய தீவீதி பறந்த காலங்களுக்கும் சிலாக்கியமாகிய புதுச்சேரி பட்டணமாகிய மேரு கிரியின்பேரிலே பீரங்கிக்குண்டுகள் முப்பத்தோராயிரத்தி அன்னுத்தி நாற்பத்தேழும் தீக்குடுக்கைகள் இருனூத்தி எண்பத்தெட்டும் இதுவுமல்லாமல் மேற்கே போட்டிருந்த மோர்சாவின் பேரிலேயிருந்து போட்ட பீரங்கி இரண்டாயிரத்திநூறும் தீக்குடுக்கை எழுனூத்தி எழுபதும் இந்தபடிக்கு கீழண்டையும் மேலண்டையும் இருபுறத்திலேயும் ஆக குண்டு வருஷமாய் வருஷித்தான். இந்த குண்டுகள் சஞ்சரித்துப் பட்டணத்திலே எப்படி யிருந்ததென்றால்: அணுவானது எங்கும் நிறைந்து வைத்துக்கொண்டிருக்கிறதுபோலே

இருந்தபடியினலே விழாத இடமுமில்லை படாத வீடுகளுமில்லை. கப்பலிலே யிருந்து போட்ட குண்டுகள் மேற்கே குண்டுசாலை மட்டுக்கும் மேற்கே மோர்சாவின்பேரிலே இருந்துப்போட்ட குண்டுகள் கிழக்கே சமுத்திரபரியந்திரம் போய் விழுந்தது. இப்படியாகிய மகாமகா பராக்கிரமத்தை இங்கிலீஷ்காரன் கண் பார்க்க அதற்கு நம்முடையவர்கள் கிழண்டை பாரிசமும், மேலண்டை பாரிசமும் ஒரு வரிசை பீரங்கி குண்டுகள் தீர்த் தார்கள். அதன்பேரிலே மகா-ள-ள-ஸ்ரீ துரையவர்கள் சொன் னது: இங்கிலீஷ்காரன் ஒரு நாளைக்கு இந்தபிரகாரம் குண்டு வருஷமாய் வருஷித்து நம்முடைய கோட்டையை ஜெயிக்கலா மென்றல்லோ அவன் நினைந்துக்கொண்டிருந்தது. இந்தப் பிரகாரம் செய்து அவன் செய்கிறதை அறிவோம். நீங்கள் பதில் சுடத் தேவையில்லையென்று உத்தாரம் கொடுத் தார்கள். அந்தபடியே அவர்கள் சுடாமல் நிறுத்தினர்கள். ஆனல், அவன் சுட்ட குண்டுகளினலே பட்டணத்திலே சேதம் பட்டது. கூலிக்காரர் ஒருமிக்க இடமில்லாமல் தெருக்களிலே இருக்கப்பட்ட பிச்சைக்காரரையும் அவன் கொண்ட பணத் தாசையினலே ஓடுக்க ஓட்டினன். ஓடினபேர்களினலேயும் இறந்துபோன ஜனங்கள் நூத்திபதினறுபேரும் காயம்பட்ட வர்கள். அறுபத்தைந்துபேர் போக மற்றுமுண்டான ஜனங்கள் ஒரு உபத்திரவமில்லாமல் சுவாமி தயவினலே சுகமாகவே இருந்தார்கள். மகா-ள-ள-ஸ்ரீ அசாத்து நபாபு முசியே ஷேவா லியே துய்ப்ளேக்ஸ் பகதூர் முஜாபர்சங்கு கவர்னர் ஜெனரல் அவர்களுடைய ஒப்பு வகனம் இல்லாததை, இரியஷதை இரிய சவுரியகாம் பிரியபுசல் பராக்கிரமித்து முன்னே இங்கிலீஷ் காரன் யாவற்றும் பண்ணிய மார்க்கமெல்லாம் எப்படிபோன தென்றல்: சகல சருவாஷக்கர்த்தாவான மிக்க காந்தியுடைய சூரியனைக்கண்ட இருள் கூட்டம் பனி கூட்டம் எப்படி ஒன்றுமில்லாமல் போய்விடுமோ அப்படிப்போலே போனது.

இன்றையதினம் பாலையப்பமுதலியார் வீடாகிய நம் முடைய புடவைக்கிடங்கிலே நம்முடைய சம்சாரத்தை வைத் துக்கொண்டு நாமும் ஆரியப்பமுதலியாரும் முத்துபவன் ரெட் டியாரும் சூரிய உதயமுதற்கொண்டு பனிரெண்டு மணிமட்டுக் கும் தெருதின்ணையின் பேரிலேயும் நடையிலேயுமாக இருந் தோம்; அதன்பிறகு ஸ்தானம் பண்ணி சாப்பிட்டு நித்திரை

பண்ணி நாலுமணிக்கு எழுந்திருந்து ஆறுமணி மட்டுக்கும் பேசிக்கொண்டும் உலாவிக்கொண்டும் அங்கங்கே மனுஷர்களை அனுப்பி சேதியாதி தெரிந்துக்கொண்டு வரச்சொல்லி கேழ்வி பட்டுக்கொண்டு மிருந்தோம் மற்றும் பட்டணத்திலே உண்டான நாங்களெல்லாம் அவரவர்கள் இருந்தாற்போலே வெகு பத்திரப்படுத்திக்கொண்டு அந்தந்த தெருவுவிட்டு அசையாமலும் முகம் கழுவாமலும் சாப்பிடாமலு மிருந்தார்கள். அவனும் [இங்கிலீஷ்காரன்] ஆறுமணிக்கு அமிரால் கப்பலிலே வரிசைவைத்து தம்புரு அடித்து வலிய (வலிக்க) பாய்மரத்திலே போட்டிருந்த சிகப்புக் கொடியை வாங்கிப்போட்டான். அப்பால் கப்பல்காரரெல்லாரும் குணவருஷம் வருஷிக்கிறதை நிறுத்தினார்கள்.

இதுவுமல்லாமல் அவன் (இங்கிலீஷ்காரர்) தண்டிலேயிருக்கிற சகலமான பேர்களும் இன்றையதினம் நம்முடைய குண்டு வருஷத்தினாலே கோட்டையைவிட்டு பயந்து எப்படியும்கவில் மத்தத்து பேசவருவார்களென்று ஆசைப்பட்டு வந்திருந்த பேர்களெல்லாரும் வெழ்க்கி மறுபடி இருந்த ஸ்தானம்போய் சேர்ந்தார்கள். அப்பால் அவன் குண்டுவருஷம் நின்றபிறகு பட்டணத்திலே சாயங்காலமான ஏழுமணி எட்டுமணி வேளையிலே அவரவர்கள் வெளியே புறப்பட்டு அவர்கள் வீட்டேபோய் சமயல் சாப்பாடு பண்ணிக்கொண்டு சுகமேயிருந்தார்கள்.

அப்பால் ஏழுமணிக்கு நம்முடைய வீட்டேபோய் பார்த்திப்போட்டு ஒருமணிமட்டுக்கும் வீட்டிலேயிருந்து அப்பால் குஞ்சு குழந்தைகளுடனே இராத்திரி பனிரெண்டடித்து ஒருமணிக்கு கோமுட்டித் தெருவிலே இருக்கிற சுங்குசேஷாசல செட்டி வீட்டிலே சம்சாரத்துடனே வந்தோம், இதிலே முத்தியப்பிள்ளை மேல்வீட்டிலே இருப்போ மென்றதற்கும் மதாம் துய்ப்ளேக்சு தன் வுசிர் சேவகர் இருக்கவேணுமென்று மமுது சேனுடனே சொல்லி அனுப்பினாள்.

1748 ஆ அக்டோபர் மூ 9 உக்த விபவ ஸூ புரட்டாசி மீ 27௳ புதவாரம்.

இற்றைநாள் காலத்தாலே நேற்றியதினம்போலே இங்கிலீஷ்காரன் கப்பல்களிலேயிருந்து பீரங்கி சுடுவானென்று பயந்து அவரவரிருந்தாவிலே பத்திரமாயிருந்து அப்பால்

அவன் கப்பல் வந்து கூடாததினாலே சாம பத்துமணி நேரத்திற்கு அவரவர்கள் வெளியே புறப்பட்டு சஞ்சரித்தார்கள். அப்பால் நேற்று அவன் குண்டுவருஷம் வருஷித்ததற்கு நாம் ஆசுவதமாய் (ஸாஸ்வதமாய்) தீர்த்ததாக சுங்குவார் வீட்டிலேயும் திருவீதி பாலுசெட்டி வீட்டிலேயும் யிருந்தோம். நம்முடையவர்கள் புதிசாய் போட்ட மண்பத்திரி திறந்து அடித்ததின்பேரிலே அவன் மோர்சாவின்பேரிலே அடித்து அவன் கொத்தளமெல்லாம் சிக்கிற (சீரழிய) பண்ணினது. ஐந்தாறு பீரங்கிகளை அடித்துப்போனதின்பேரிலே அவரவர்களுக்கு கைகாலாடாமல் சுடுகிறதற்கு இடமில்லாமல் நின்றார்கள். அப்பால் (அவர்கள்) சாயங்காலம் மறுபடி துவக்கினான். துவக்கி போம்புப்போட்டான்; அதினாலே மண்பத்திரியிலிருந்து சுட்ட பீரங்கி மேஸ்திரியைக் கொன்றதுமல்லாமல் பின்னையும் அவ்விடத்திலே இவர்கள் மனுஷர் நடமாட ஒட்டாமல் அடித்தார்கள். இவர்களுமந்த மோர்சாவிலே தலைக்காட்டாமலடித்தார்கள். நம்முடையவர்கள் கீழண்டையிலிருந்து போட்ட போம்புகள் ஒரு கப்பலிலே விழுந்து கப்பல் கொம்மாந்தான் செத்தான். அந்தக் கப்பலை அப்பாலே கொண்டுபோய் வேலைபார்க்கிறார்கள் (மராமத்து செய்கிறார்கள்) என்று சொன்னார்கள்.

நாம் சுங்குவார் வீட்டிலே சம்சாரத்துடனே வந்து இருக்கிறபடியினாலே சேஷாசலசெட்டியார் வெகு மரியாதையெல்லாம் பண்ணினார்கள். அவன் (இங்கிலீஷ்காரன்) மேலண்டையிலேயிருந்து போடுகிற குண்டுகளினாலே சாவுகாயமும் சற்று விஸ்தாரமாகத்தானே விழுகிறது.

படேசாயபு மகன் ஷேக்கு அப்துலாயிமான் சமேதார் மார்பத்திலே துரையவர்களண்டைக்கு வெளியே போவதற்கு உத்தாரம் கேட்டதற்கு கூடாதென்று சொன்னார்கள். அவர்கள் கனகராய முதலியார் வீட்டிலே போயிருக்கிறதாக சேதி அப்பால் நான் தெருவீதி பாலுசெட்டியார் வீட்டிலிருக்கும்போது கூனிமேட்டிலே இங்கிலீஷ்கார மனுஷர் போய் முல்லா வீட்டிலே புகுந்து கொள்ளையிட்டு முல்லாவை கைபிடியாய் பிடித்துக்கொண்டு போனார்களென்று முல்லாமகன் வந்து கபுறுசொன்னான்.

**1748 ஆ அக்டோபர் மீ 11 உக்கு விபவ ஸு புரட்டாசி மீ 29 உ சுக்கிரவாரம்.**

இற்றைனாள் சேதி யென்னவென்றால்: நம்முடையவர்கள் போடுகிற குண்டுகளினாலே அவர்களுக்கு தலைகாட்டக்கூடயில்லையென்றும் அவர்களிலே வெகுபேர் சேதப்படுகிறார்களென்று இனிமேலவனுக்கு நிர்வாகமில்லையென்று சொல்லிக்கொள்ளுகிறார்கள் பட்டணத்திற்கு ஐப்பசிமாதம் பிறந்தால் கிரகசாரமனுகூலமென்றும் சொல்லுகிறார்கள் எனக்குசுக்கிர திசையிலே புதன் புத்தியிலே சுக்கிர சித்திரத்தில் சனி அந்திரம் பொசிப்பு ஐப்பசி மீ முதல் தேதியுடனே சரியென்கிற நியாயத்தினாலே 22 முதல் புதன் சித்திரம் 24 நாளைக்கு பூர்வார்த்தம் பனிரெண்டு நாள் போனால் உத்திரார்த்தம் பனிரெண்டு நாளையிலே சத்துருக்கள் நாசம் வருமென்று தோணுது அப்போ பட்டணத்தைவந்து சுற்றிக்கொண்டு சண்டைப்பண்ணின சத்துருவும் நாசத்தை அடைந்து போவானென்று தோணுது அப்பால் ஸ்வாமியினுடைய சித்தம்.

மற்றப்படி பிரபுவண்டைக்கு போனவிடத்திலே அவர் தரிசனமானவுடனே மழையெப்போ வருமோவென்று கேட்டார். ஐப்பசி மீ 2 தேதி மழை துவக்கும்படிக்கும் அதற்கு அடயாளம் நேற்று இராத்திரி மணலைக்கொழிச்சாப்போலே யிருந்தால் மழை என்று எங்களுக்குள்ளே வாடிக்கை அந்தபடி நேத்து இராத்திரியிருந்தது சுற்றிலும் விஸ்தாரமாய் பின்னாலே இரண்டு மூன்று நாளைக்குள்ளே மழைபிடிக்குமென்று வாடிக்கை அந்தபடிக்கு மின்னல் விஸ்தாரமாய் மின்னுகிறது. ஐப்பசி மீ 2-ந்தேதி எங்களிலே வாடிக்கையாய் வருகிறது மழை துவக்கி பெய்கிறது. இந்த குறிப்பெல்லாம் பார்த்துதான் மழை பேயுமென்று சொல்லுகிறேனென்று உசிதமாய்தானே சொன்னேன். மூசியே துக்கேன் மற்றபேரெல்லாம் அப்படி பேயுமா? பேயுமாவென்று எகத்தாளியாய்க் கேட்டார்கள். நானும் பேயுமென்று உறுதியாய்த்தானே சொன்னேன். துரையவர்களும் மெய்தான் இந்த இராச்சியத்திலே வழங்குகிற வாடிக்கை அப்படித்தானென்று சொன்னார்.

அப்பால் சாக்கு வரவில்லையென்று சற்றே கோபமாய் யனுருக்கு தாக்கீதுபண்ணச்சொன்னார். நல்லதென்று சொன்

னேன். எழுந்திருந்து துரையவர்கள் புடவை பார்க்கிற சாலை யிலே போனார் நானும் கூடப்போனேன். அப்போ கட்டுக்காரர் (கட்டுப்போடுகிறவர்கள்) சீக்கிரமத்துக்குத்தரவில்லையென்று கோபம்பண்ண நயனார் வந்தான். அவன் வர்த்தகர் வீட்டிலே சரக்கு எடுக்கிறதாவென்று கேழ்க்க வந்தான். அவனைக் கண்டாப்போலே கோபம் பண்ணினார். நானும் சற்று கோபமாய் சொல்லி யார் வீட்டிலே சரக்கு கோணியென்று இருந்தாலும் எடுத்துவரச்சொல்லி போகச்சொன்னேன். அப் பால் வீட்டுக்குப் பனிரெண்டு மணிக்கு வந்தேன்.

அப்பால் ஒரு மணிக்கு சாப்பிடுகிற வேளைக்கு துரையவர் களழைக்கிறார்களென்று வந்து அழைத்தான். என்ன சேதி யென்று கேட்டால் உபதேசி முத்தப்பிள்ளை மருமகன் நல்லத் தம்பிப்பிள்ளை என்கிறவன்பேரிலே அவன் மச்சினிச்சி மகன் இன்னாசி முத்தய்யனென்கிறவன் முசேல் சண்டைக்குப்போய் நல்லதம்பிப்பிள்ளை வீட்டிலே யிருந்த நெல்லென்று எழுபது மரக்கால் எழுதிவைத்தும் அதற்கு நான் சாப்பாட்டிற்கெடுத் துக்கொண்டது முப்பது போக நின்ற நாற்பது மரக்காலும் நீங்களெடுத்துக்கொண்டு குறைநெல் வராவிட்டால் இதையும் கொடுக்கிறதில்லையென்று சொல்லுகிறார்களே அது ஏனென் றால்: அவன் நெல் அலாயித்தா குழிப்போட்டுவைத்து உங்க ளுடனே சொல்லவுமில்லை. அது தெக்ளாராசியம் எழுதி வைக்கவுமில்லை. இப்போ அந்த நெல்லைக் கொண்டுபோய் மீர்குலாமுசேன் வீட்டிலே கொண்டுபோய் ஒளிக்கவைத்தே னென்று சொன்னமாத்திரத்திலே முசியே லசேல் போய் மீர் குலாமுசேன் வீட்டிலே பெண்டுகளெல்லாம் குண்டு வருகிற தென்று அப்புறம் பஜார்த்து தோட்டத்திலே போய் இருக்கிற படியினாலே ஐந்தாறுபேர் சேவகரும் இரண்டு மூன்றுபேர் வெள்ளாட்டிச்சிருக்கிகளும் உள்ளே இருந்தார்கள். அவர்கள் வீட்டுக்குள்ளே நுழைந்து வரச்செல்லாம் மண்வெட்டிக் காரரை விட்டு வெட்டிப்பார்த்து ஆக்கித் தின்கிற குசினி படுத்துக்கொள்ளுகிற வீடுகளெல்லாம் அந்த வேளையிலே கரு மானை அழைப்பித்துப் பூட்டுகளையெல்லாம் திறக்கச்செய்து, குசினியிலே வெள்ளாட்டுச் சிறிக்கிகள், சேவகர், ஆக்கித் தின்னுகிற பத்து பானை நெல்லும் அரிசியுமாயிருந்தால் அதை யெல்லாம் அளக்கச்சொல்லி, இருக்கச்சொல்லி இருக்கும்போது அங்கே சேதி அவர்கள் மனுஷர்கள் பசாரத்துத் தோட்டக்

திலே இருக்கிறவர்களுக்குப் பேர்ய்ச்சொல்லி, இருபது முப்பது பேர் தடியும், தாம்பும் எடுத்துக்கொண்டு வருகிறதற்கு முன்னே மீர்குலாமுசேன் புத்திர ஸ்வீகாரபிள்ளையும் அவனும் (தெலார் சேல்) பேசியிருந்தார்கள். அதிலே சேவர்கள், வந்தவர்கள் நெல் அளக்கிறவர்களையும், நயனர் சேவகர் இருந்தவர்களையும் தலைபட்டு நாலைந்தடி அடிக்குங்காட்டிலும் முசியே தெலாசேல் தன்னை எங்கே அடிக்கிறார்களோவென்று இவன் பயந்து ஓழைச்சுக்கொண்டு ஓடினான்; ஓட்டம் சொல்லமுடியாது. அந்தப் பயணம் துரையண்டையிலே வந்து சொன்னான். அந்த க்ஷணம் உங்களையும் மீர்குலாமுசேன் வீட்டு சதாசிவய்யனையும் அழைக்கச் சொன்னானென்று சொன்னான்.

அப்பாலே நான் ஸ்நானம் பண்ணவும், சாப்பிடவும் இரண்டு நாழிகையாகிலும் செல்லுமென்று மறுபடி வந்து சாப்பிடுவோமென்று கோட்டைக்குப் போய் துரையவர்களண்டைக்குப் போய் கண்டு பேசின மாத்திரத்தில் அங்கே முசியே தெலாசேல், அழகப்பிள்ளை நயனர் சேவகர்கள் கூட இருந்தார்கள். துரையவர்களென்னைக் கண்ட மாத்திரத்திலே மீர்குலாமுசேனவர்கள் நடைப்பித்த காரியத்தைக் கேட்டாயாவென்றார். நான் வந்த உடனே நீங்கள் நித்திரை பண்ணினீர்களே, அதனாலே நீங்கள் எழுந்திருக்கிற மட்டுக்கும் வெளியேயிருந்தேன். அப்போ முசியே தெலாசேல் சொன்னாரென்று சொன்ன மாத்திரத்தில் அவர்கள் என் மனுஷர் போய் சோதித்தால் அவர்கள் சும்மாயிருக்க வேணுமேயல்லாமல் எப்படி சேவகர்கள் வந்து அடிப்பார்கள்? இப்போதானே இருநூறு காப்பிரிகளை விட்டு வீடுவாசல்களெல்லாம் கொள்ளையிடச் சொல்லுவேனென்றுச் சொன்னார். அப்போ அவர் கோபத்தை மிதத்திலே சொல்லப்போகாது அத்தனை கோபமாய் சொன்னதற்கு நீங்கள் தயவுபண்ணி வெகுசாய் மரியாதையாய் நடப்பித்துவந்தீர்களென்று சொல்லி முசியே தெலாசேலைப் பார்த்து என்ன செய்யவேணுமென்று கேட்டதற்கு அவன்சொன்னது: இருபத்துநாலுபேர் சோல்ஜர்களை அழைப்பித்துப்போய் அவர்கள் சேவகர்களும் வெள்ளாட்டி பசங்களும் வந்தடித்தார்களே, அவர்களைப் பிடித்து வந்து அடிக்கவேணுமென்று சொன்னதற்கு அப்படி செய்யென்று வில்லியனல்லூர் வாசற்படிக்கு சோல்ஜர்களை கூட்டச்சொல்லி உத்தாரம் கொடுத்தார், அந்தமட்டுக்குமவன்

நடந்த உடனே நான் பெரிய மனுஷன் வீட்டிலே நெல் இருக்கிறதென்றால், அவர்களை அழைத்துக்கேட்டு அப்பாலிதற்கு சாதகத்தைச் சொல்லி நடத்தவேண்டியது. அப்படி செய்யாமல் போனது முசியே தெலாசேல் தோத்தாமல் செய்தான். அப்பாலிவர்கள் வந்தமட்டுக்கும் அவர்கள் பெரிய மனுஷர்களாயிருந்தால், இவ்விடத்திற்கு சொல்லி அனுப்புவார்கள்; சேவகர்களும் வெள்ளாட்டி பசங்களும் இருந்தபடியினாலே வீட்டை வெட்டினவர்களை என்ன சொல்லி நடத்தினார்களோ அது அவர்கள் பேரிலே நேரமென்று சொல்லி ஆகிலும் உங்களுக்கு கடன் தயவுபண்ணவேண்டியதென்று சொன்னதற்கு திரும்பியும் முசியே தெலாசேல் அங்கே சோல்ஜர்களை அழைத்துக்கொண்டுவந்தால் நான் சொன்னேனென்று முசியே தெலாசேலுக்குச் சொல்லி அவர்களை உபசாரமாய் சொல்லி வைத்து அதைக் கேட்டுப்போகச் சொல்லிவிடென்று சொன்னார். அப்போ முசியே தெலாசேல் கோட்டை வாசற்படி நடந்து போனவனை நிற்கச்சொல்லி அனுப்பி அப்பால் துரையவர்கள் சொன்ன உத்தாரத்தை சொன்னதற்கு அந்த துலுக்கர் நம்முடைய ஊரிலே குடியிருந்து நம்முடைய ஆக்கினையை தள்ளினதுமல்லாமல் (நம்முடைய) மனுஷரை அடிக்கவும் நியாயமா? அது உனக்கு சம்மதியாய் காணுகிறபடியினாலே துரையவர்களுக்குச் சொல்லி இந்த உத்தாரம் வாங்கிவந்தாயென்று சற்று கோபமாய்ச் சொல்லி எனக்குக் கொடுத்த ஒடுதிபடிக்கு நான் செய்வேனென்றான். ஆனால், உம்முடைய மனது துரையவர்களுத்தாரப்படி அப்பால் உம்முடைய மனது என்று சொன்னதின்பேரிலே என் பேரிலே கோபமாய் வில்லியநல்லூர் வாசற்படியே போய் சோல்ஜர்களை அழைத்துவரப் போனான், நான் மிருகுலாமுசேன் சாயபு வீட்டுக்குப் போய் அங்கே மிருகுலாமுசேன் புத்திரஸ்வீகார அப்பா சாயபையும் அவன் தமையனையும் சதாசிவய்யனையும் கண்டு துரையவர்கள் மனுஷர்கள் வந்து ஒருத்தருடைய நெல்விருக்குதென்று பார்க்க வந்தால் நல்லது மகாராசராய் பார்த்துக்கொள்ளுங்கள் ஒருத்தர் நெல் எங்கள் வீட்டிலே வருமா? அது எங்களுக்குள்ளே இந்த வேலையும் காரியமும் இருந்து செய்வோமா? என்று அவர்களுக்குச் சொல்லவேணும். எங்களுக்குச் சொல்லி அனுப்பிவைக்கவேண்டியதென்று பின்னையும் அதுக்கடுத்த நியாயங்களை எப்படி சொல்லவேணுமோ அப்படி

யெல்லாம் நான் சொன்னதின்பேரிலே அதற்கு அவர்கள் எங்கள் இராச்சியம்விட்டு, பூமிவிட்டு எங்கள் பந்து ஜாதி ஜனங்களை விட்டுப்போட்டு நீங்கள் சத்தியமுள்ளவர்கள் செய்த உபகாரம் மறக்கத்தக்கவர்களல்ல என்று எங்கள் ஆஸ்திபாஸ்தி ஜீவனுடனே நாங்கள் உங்கள் பட்டணமே யெங்களுடையதாய் எண்ணிவந்து இந்த கலாபத்துக்குக்கூட உங்களுக்கு அற்றதாய் நாங்கள் (உங்கள்) சினேகிதத்தைக்கோரி வெளியே போகாமலிருந்தால் இந்த நெருப்பு வருஷமாய் வருஷித்ததற்குக்கூட விசாரிக்காமல் போனுர். மூசியே துய்மா சினேகத்தை குறித்தல்லோ சீர்மையிலிருந்து கூட காகிதங்களெழுதி அனுப்பினர். ஆனுலிந்த துரை வீடு வாசல்களெல்லாம் குண்டுவந்து விழுந்து சேதப்பட்டுதே எங்கே இருக்கிருர்கள் என்றுகூட விசாரிக்காமல் போனுர். இந்த சிநேகம் கொண்டுதானே இனிமேலும் நடத்தப்போகிறது. அப்பாலே ஒருவன் வந்து என் வீட்டிலே இருபது மரக்கால் முப்பது மரக்கால் தானியம் கொண்டுவந்து வைத்தானென்று சொன்னுல் என்ன பெரிய காரியம். அதற்கு அந்த பெரிய மனுஷர்களைக் கேழ்க்கிறது நியாயமாவென்று பார்க்கிறது உத்தமம் அல்லாதபத்தியபக்ஷம் அழைத்தாகிலும் கேட்கிறது. எதுவுமில்லாமல் எங்கள் பணம், காசு, தட்டுமுட்டு, ஆஸ்தி சமஸ்தமுமிருக்கிற வீட்டை மூடிப்போட்டு குண்டுக்கு பயந்ததற்காக அப்பாலே நாங்கள் போயிருக்க எங்களுடனே சொல்லாமல் கருமானை விட்டு பூட்டைத் திறக்கச்சொல்லி உள்ளே புகுந்து வீட்டுப்பூட்டுகளையெல்லாம் கருமானை விட்டு திறக்கச்சொல்லி பார்க்கிறதும், வீடு வாசல்களெல்லாம் வெட்டிபார்க்கிறதும் என்ன நியாயம், இதெல்லோ நீங்கள் எங்களுக்குப் பண்ணின மரியாதை ஒரு அசேதனன் குடிக்க கஞ்சியில்லாதவனைக்கூட கேளாமல் அவன் வீட்டிலே நுழையப்போகாதே அப்படியிருக்க நாங்கள் உங்கள் குடியா? உங்கள் சிப்பாய்களா? உங்களுக்குக் கீழ்ப்பட்டவர்களா? உங்கள் மரியாதைக்கல்லோ இப்படி நெருப்பு வருஷமாய் வருஷித்ததற்குக்கூட வெளியே போகாமல் நின்றது. அதற்கு நல்ல மரியாதை நடத்தினீர்கள். இப்பவும் நீங்களென்னென்ன கொள்ளையிடவேணுமோ கொள்ளையிடுங்கள் என்று பின்னையும் நியாய நிஷ்டூர வார்த்தைகளென்னென்ன வுண்டோ. அதெல்லாம் அவர்கள் சொல்லி இப்படிப்பட்ட மரியாதை

நடக்குமென்று அறிந்திருந்தால் இந்த பட்டணத்துக்குள்ளே இருக்க பயித்தியம்பிடித்ததா வென்றும் இதிலே தெரிந்து போனது. இனிமேல் நடக்குற காரியங்கள் கூடவென்று சொல்லி வேண்டியதெல்லாம் சொல்லி அப்துலாயிமான் இங்கேயல்லோ குடிவந்திருக்கிறான் அழைத்து வாயென்று சொல்லி தங்கள் மனுஷனொருத்தனை அனுப்பினார்கள்.

இப்படியிருக்கும்போது முசியே நேலாசேல் இருபதுபேர் சோல்ஜர்களையும் அழைத்துக்கொண்டு மீர்குலாமுசேன் வீட்டேபோய் இங்கேயிருந்தவர்களெல்லாம் எங்கேயென்று கேட்கும் காட்டிலும் அங்கேயிருந்தவர்கள் வெளியிலே நின்றவர்களெல்லாரும் மீர்குலாமுசேன் வீட்டுக்கு எதிரே இருக்கிற தோட்டத்திலே இருக்கிறாமே! அங்கே ஓடிவந்து இருபது முப்பது சோல்ஜர்களை முன்னே இங்கேயிருந்து போன பீரங்கிகள் (பிரஜைகள்) கூடவந்து வீட்டிற்குள்ளே நுழைந்தார்களென்று சொல்லி திபதிபவென்று ஏழெட்டு பேர் ஓடிவந்து சொல்வதற்குள் முன் பத்து பதினைந்து துலுக்கர் இருந்துக்கொண்டு சட்டவட்டமாய் இந்த சேதி பேசிக் கொண்டிருந்தவர்கள் வாயிலே பல்லிலே தண்ணீரில்லாமல் நடுநடுங்கி பயந்து கழிஞ்சுக்கொண்டுபோயிருப்பார்கள்போலே காண்கிறது. அப்படி பயந்து இவன் முகத்தை அவனும் அவன் முகத்தை இவனும் பின்னையுமிருக்கிற பேர்கள் ஒருத்தருக்கொருத்தர்கள் முகத்தைப் பார்த்துக்கொண்டு அவர்கள் பயந்த பயத்தை என்னவென்று எழுதப்போகிறேன். அப்பால்பிள்ளையிருக்கிறார் பயமென்னவென்று ஒருத்தருக்கொருத்தர் சொல்லவும் என்னைப்பார்த்து யெப்படியாகிலும் சமாதானம் பண்ணிப்போகச் சொல்லவேணுமென்று எனக்குச் சொன்ன உபசாரமும் சொல்லமுடியாது. இப்படி நெலாசேலும் சோல்ஜர்களும் அங்கே நாங்களிருக்கிறவிடத்தே வந்தார்கள். வரும்போது அங்கே அடித்த மனுஷர்கள் எங்கே என்றபோது இவர்கள் போட்டகாலும் போட்ட கையுமாய் மெத்தவும் பயந்துப்போனார்கள். அப்பாலென்னைப் பார்த்து எப்படியாகிலும் சமாதானம் பண்ணிப்போட்டு அனுப்பிவிடுமென்று சொல்லவேண்டிய பேச்செல்லாம் சொல்லும்போது அப்பால் முசியே லசேலுக்கு அவர்கள் பிரியவசனம் சொல்லி மனம் பொருத்துக்கொள்ளச்சொல்லி சொல்லுகிறப்போலே

ரொம்பவும் தெரியப்பட சொல்லுகிற சாடையாய்ச் சொல்லி அதன்பேரிலே மனம் பொருத்துப்போட்டு போகிறதாய்ச் சொல்லி முசியே தெலாசேலேயும் சோல்ஜர்களையும் அனுப்பிவிட்டேன். துரையவர்கள் உத்தாரமென்று முன்னே தானேயெழுதி யிருக்கிறேனே, அந்த சாடையின்பேரிலே சோல்ஜர்களுமவனும் புறப்பட்டுப்போனார்கள். அப்பால் நான் மறுபடி வந்து உட்கார்ந்த உடனே அப்துலாயிமான் ஜமேதாரனும் வந்தான். அவனுடனே நடந்த பூர்வோத்திரமெல்லாம் சொன்னார்கள்; குலைக்கிற நாய் கடிக்க அறியாதென்று சொல்லுகிற படிக்கு நான் இருக்கும்போதே துலுக்க ஜாதி எனப்பட்டவனுக்கு மரியாதைதாழ்வு வரவொட்டுவேனா? அப்படியா நாங்கள் ஆயிறத்தன்னூறு பேர்களிருக்கிறோம். நாங்களெல்லாரும் செத்து மடிவோம். எல்லோரும் இப்போ கோட்டை வெளிக்கு போய்விடுவோம்; போகிறபோது ஒரு கை பார்த்து பின்னைப் போவோமென்று எப்போதும் ஒதருகிற ஜாடையாய் ஒதருனதற்கு இந்தவிதமென்று சொல்லாமல் சும்மாயிருந்து நான் போகிறேனென்று அனுப்பிவைத்துக்கொண்டேன்.

இற்றையதினம் சோல்ஜர்கள் வந்து நடந்த காரியத்திற்கு ரங்கப்பனிருந்தபடினாலே ஒரு மார்க்கமாய் போனது. இல்லாமல் போனால் விருதாவாய் மோசம் வர தெரியுதென்று அப்துலயிமானுடனே சொல்லி வீட்டை வந்து பார்க்கவேணுமென்று கதவுகள் பூட்டை உடைத்ததற்கு குழிகளை வெட்டினதும் காண்பித்தார்கள். அப்துலாயிமான் இப்போதானே துரையண்டைக்குப் போய் அடித்துவிட்டுப் போகிறேன், என்னமாய் நடக்கிறதோவென்று கன்னுபின்னுவென்று சொல்லிப்போட்டு என்னுடனே கூட அனுப்பிவித்துக்கொண்டு கோட்டை வந்தான். அப்பால் நாங்கள் இரண்டுபேரும் கோட்டைக்கு துரையவர்களண்டைக்குப் போய் நின்றமாத்திரத்திலே [ ]

1748 ஆ அக்டோபர் மீ 12 உ க்ஷய விபவ ஸு புரட்டாசி மீ 30 உ சனிவாரம்

இற்றைநாள் காலத்தாலே கோட்டைக்குப் போனவிடத்திலே மகா–ா–ா–ஸ்ரீ துரையவர்களும், முசியே ரொபேர், முசியே செப், முசியே துக்கேன், முசியே பிரியேல் முதலான பேர்கள்

உட்கார்ந்துக்கொண்டு கபே குடித்துக்கொண்டிருந்தார்கள். நான் போய் நின்று ஆசாரம்பண்ணினேன். துரையவர்க ளென்னைப்பார்த்து தமிழ் சாஸ்திரம் பார்த்துச்சொன்னவர் கள் உங்கள் ஒக்தோபர் மாத முதலானால் இங்கிலீஷ்காரர் கள் போய்விடுவார்களென்று சொன்னதாக சொன்னாயே எங்களுக்கு ஒக்தோபர் மீ 12 உ ஆனதே உங்களுக்கு இன்றைக்கு முதல் தேதி ஆகவேணுமே இங்கிலீஷ்காரர்கள் போகவில்லையேயென்று கேட்டார். மூசியே துக்கேனும், பிரியேலு மிருந்துக்கொண்டு இந்த புரட்டாசி மீ 30 தேதியுடனே இந்தப் பட்டணத்துக்குக் கஷ்டகாலம் போகுது. மலபார் ஒக்தோபர் மீ முதல்தேதியானால் புதுச்சேரிக்கு நல்லகாலமான படியினாலே இங்கிலீஷ்காரரும் போய்விடுவார்கள். நல்ல மழையும் பெயுமென்று சொன்னான். இந்தப்பேச்சை நம்பினால் ஆறுபேருடனே பந்தியம்கூடப்போட்டேன். என்ன சொல்லு கிறாய் ரங்கப்பிள்ளையென்று மூசியே துய்கேன் கேட்டதற்கு எங்கள் செப்தம்பர் மாதம் 30 தேதி, உங்கள் ஒக்தோபர் மீ 12 தேதி இன்றைக்கு நாளைக்கு எங்களுக்கு ஐப்பசி மீ முதல் உங்களுக்கு 13 தேதி முதல்கொண்டு நீங்கள் கேழ்க்கப்போகி றீர்கள். இங்கிலீஷ்காரர்கள் போகிறார்கள் என்கிற சேதியும் கேழ்க்கப்போகிறீர்கள். மழையும் நல்லமழை பெய்யப் போகிறது. நீங்கள் போட்ட பந்தயமும் கெலிக்கப்போகிறீர் ரென்று சொல்லி நேற்று இராத்திரி மணல் கோழிச்சாப் போலேயிருந்தது அது மழை பேய்கிறதற்கு அடயாளமென்று சொன்னேனதும் துரையவர்களிருந்துக்கொண்டு மெய்தானப் படியிருந்தது. அந்தப்படியுமிருந்ததுமல்லாமல் பின்னும் திர ளாய் மின்னுகிறது வாடைக்காற்றும் கொஞ்சம் அசைவாய் வந்தது, இதல்லாமல் நெடுநாளாய் காயுறபடியினாலே மழை யும் பிடிக்கும் காற்றும் துடருமென்று சொன்னார். அதற்கு நான் சொன்னது: ஒரு பெருங்காத்தடித்து அதினாலேயுமிங்கி லீஷ்காரருக்கு சேதமுண்டாச்சென்றும் கேழ்க்கப்போகிறீர் கள் என்று சொன்னதற்கு துரையவர்களிருந்துக்கொண்டு உங்கள் ஒக்தோபர் மீ முதல் நாளையென்று இங்கிலீஷ்காரர் போவார்களென்கிற சேதி கேழ்விபடுவாய் என்று சொன்னாயே அல்லாமல் அவர்கள் போகிறதெப்போ என்று கேட்டார் அவர்கள் போறார்களென்ற சேதி கேட்டு நீங்களும்

சந்தோஷப்பட போகிறீர்கள் நாளைமுதற்கொண்டு பனி ரெண்டு நாளையிலே புதுச்சேரியை விட்டு நிச்சயமாய் போய்விடுவார்கள். நாளை முதல் சண்டையும் விஸ்தார மாய் நடக்காது நாளுக்குநாள் மட்டாய்வரும் அவன் சாமான்கள் ஏத்தி அனுப்புகிற மட்டுக்கும் கொஞ்சனஞ்சம் நானுமிருக்கிறேனென்று (குண்டு) போட்டுக்கொண்டு ஐந்தாறு நாளைக்குள்ளே இவ்விடத்திலிருந்து போய்விடுவான் அப்பால் அரியாங்குப்பத்திலிருந்துப்போக குறைந்தது ஐந்தாறு நாளு ஏகத்துக்கு நான் சொன்ன கெடுவுபடிக்கு எங்கள் ஐப்பசி மீ 13 தேதிக்குமேல் இங்கிலீஷ்காரர் யிருர்களென்கிறது கெட்டியா எண்ணுங்கள் என்று சொல்லி நான் இப்போது இந்த வார்த்தை சொல்லவில்லையே ஒரு மாதத்திற்கு முன்னமே தானே எங்கள் செப்தம்பர் மீ 30 தேதி போய் அக்டோபர் மீ பிறந்தால் நமக்கு நல்லகாலம் அது முதற்கொண்டு இங்கிலீஷ் காரர் போகிற பிரயத்தினத்தின்பேரிலே யிருந்து அப்பால் பத்து பனிரெண்டு நாளையிலே சாடாவாய் போய் விடுவார்க ளென்று சொல்லி இருக்கிறது மல்லாமல் நீங்களெப்போ கேட்டீர்களோ அப்போதெல்லாம் இந்தப்பேச்சை சொல்லிக் கொண்டுவந்தேன் என்று சொன்னதற்கு மெய்தான் ரங்கப் பிள்ளை சொல்லிக்கொண்டு வருகிறது என்று சொல்லி பிராம மணுள் சொல்லுகிறது சிறிதுகளெல்லாம் சரியாய் நடந்து வருகிறது அனேக மெல்லாம் சரிப்பட்டுக்கொண்டு வந்தது நானும் திருஷ்டாந்திரமாய் அனேகமெல்லாம் பார்த்ததுண்டு என்று சொன்னுர். அதற்கு நான் சொன்னது உங்களுக்கு நான் முன் வரும் காரியம் பெரியகாரியமாய் அனேக காரியம் நான் சொல்லவில்லையா? உங்களுக்கு சரிப்படவில்லையா? என்று கேட்டதற்கு மெய்தானென்று சொல்லி இப்படி பேசிக்கொண்டிருந்தோம் அப்போது அப்துலயிமான் சமேதார். ஷேக் இபராகீம் இவர்களும் இவர்கள் தாலுக்கு சேவகர்களுமாக புதுப்பாளையத்திலே இங்கிலீஷ்காரர் வந்து மோர்சா போடுகிருர்களென்று எழுநூறு, எண்ணூறு சிப்பாய்களும் நூறுபேர் காபிரிகளும் குதிரை விசாரணை துலுக்கர் உண்டானவர்களும் போன விடத்திலவர்கள் மல்ராசா சேவகர்கள் முன்னூறுபேர் கற்ணுட்டகத்தார்களும் பொம்பாய் சிப்பாய்களும் பரவாரிகளென்கிற பறயர்களிருணூறு பேருமாக இருந்தார்கள். இவர்கள் வருகிறது அவர்களறியாததினுலே அவரவர்கள் அசந்து

தூங்கினவனும், குளத்திற்குப் போனவனும், நின்றவனும், இருந்தவனுமாய் ஏமாந்திருந்த வேளையிலே போய் விழுங் காட்டிலும் அவர்கள் நின்றவாக்கிலே இருந்தவாக்கிலே ஆயுதங்களைக்கூடப் போட்டுவிட்டு, ஓடிப்போனார்கள். இவர் கள் பக்கத்திலே துப்பாக்கிகளெல்லாம் போனாப்போலே ஒரு வரிசை தீர்ந்தபடியினாலே அவர்கள் ஓடினமட்டுக்கும் இவர்கள் அவர்கள் போட்டுப்போன ஆயுதங்களிலே அப்துலாயிமான் தாலுக்கு சிப்பாய்களிலே அகப்பட்டது. மூன்று துப்பாக்கி களும் பத்து ராச்சூர் பானமும் (rckets) நாலாறு கத்திகட்டாரி களும் அகப்பட்டது. சேக்கு இப்ராம் தாலுக்கு சிப்பாய் களிலே ஐந்தாறு துப்பாக்கிகளும் பத்து பனிரெண்டு ராச்சூர் பாணமும், நாலாறு கத்திகட்டாரிகளும் அகப்பட்டது. அதிலே ஒரு கத்தி நல்ல கத்தியென்று அதை அப்துலாயிமான் கேட்ட தாகவும் சேக்கு இப்ராம் தாலுக்கு சேவகர்கள் கொடுக்க மாட்டோமென்று சொன்னாரென்றும் சொல்லிக்கொண்டார் கள். இதவுமல்லாமல் சேக்கு அப்துலாயிமான் தாலுக்கு சேவகன் ஒருத்தன் ஒரு கத்தி சற்றே வளமா எடுத்ததைக் கேட்டால் கொடுக்கமாட்டோமென்றதின்பேரிலே அந்த சேவ கனை நாற்பதைம்பது அடி மட்டுக்கும் அடித்து வாங்கிக் கொண்டானென்று சொன்னார்கள். இதுவுமல்லாமல் பொம் பாய் பறயரிலே சேக்கு இப்ராம் தாலுக்கு மனுஷர் ஒருத்தனை யும் பிடித்துக்கொண்டு வந்தார்கள். இதல்லாமல் சேக்கு அப்துலாயிமான் தாலுக்கு யுமழோர் ஒருத்தன் ஒரு வடுகன் காது ஒன்றில் சின்ன முத்து கடுக்கன் ஒன்று ஒரு காதிலே போட்டுக்கொண்டு வந்தான். இதல்லாமல் இவர்களுடைய சிப்பாய்களிலே கொள்ளை சிறிதுபேர்களும், கொஞ்சநஞ்சம் ரூபாய்கள் அகப்பட்டது. சிறிதுபேருக்குக் கை காப்பு புடவை சீலை இப்படி சரிபோனவர்கள் சரிபோனாப்போலே நின்று அவர்கள் குண்டு புறப்பட்டால் ஒருநாழி வழிக்கப்புரம் ஓடிவந்ததேயல்லாமல் மற்றப்படி ஒருநாளாகிலும் முன்னே நின்றவனல்லாவிடிலும் இதற்கு இவர்கள் தாலுக்கு அல்வி கான் ஒருத்தனிருந்து முனைபண்ணி பேருண்டாகிறதே அன்றி இவனுடைய அதிர்ஷ்டமென்னபட்டது இவன் என்ன பிரயா சம் ஆனாலும் இவனுக்கு சவுரியத்தை உண்டாக்கி துரையவர்க ளிடத்திலே மேன்பாடும் கீர்த்தியுமுண்டாக்கும்போது இந்த துரதிர்ஷ்டன் ஷேக்கு இப்ராகீம் என்ன இவன் முந்திமுந்தி சொல்லப்போனாலும் தன் சிப்பாய்கள் பிடிங்கிக்கொண்டுவந்த

ஆயுதங்களெல்லாம் முன்னே கொண்டுபோய் வைத்துச் சொன்னாலும் துரையிவர் முகத்தையும் பாரார் இவனுடனே யும் பேசார். அப்பால் ஷேக் அப்துலாயிமானையும் அல்லிகானை யும் தாரீபு பண்ணிக்கொண்டு வந்த துப்பாக்கிகளெல்லாம் கும் பனீரிலே முதவிட்டு தஸ்தா தரீபுபடிக்கு உள்ள ரூபாயை வாங்கிக்கொள்ளச்சொல்லிப் போட்டு அப்பால் பிடித்துவந்த பொம்பாய் பறயர் மறவரிவர்களை இங்கிலீஷ்காரர் தண்டு சமாச்சாரம் என்னவென்று கேட்டால் ஊழிக்காச்சல்போலே வியாதியினாலே வெகுபேர் சேதம். இவர்களுக்கு குண்டுனாலே யும் சேதமுண்டு கூடலூர் விட்டுவந்த பிறகு வியாதியினாலே செத்ததும் வியாதியாய் யெடுத்துப்போனதும் காயபட்டு எடுத் துப்போனதும் குண்டுபட்டு செத்ததும் சற்றேரக்குறைய ஆயிரம் பேர்வுண்டு அதினாலே ஐந்தாறு நாளையிலே புறப் பட்டு போகிறதாயிருக்கிறது. நீங்களே வந்து விழுந்து மனுஷர்களை சாவுகொடுக்கவேணும், அவர்களாய் பட்டுப் போனார்கள். இனிமேல் சருவாத்துமனாக இருக்கிறதில்லை யென்று சொன்னப்பேச்சைக் கேட்டு இவர்களைக் கொண்டு போய் கோட்டை வாசலிலே வைத்து இருக்கச்சொல்லிப் போட்டு அப்பால் ஆஸ்பட்லுக்கு நோவாளிகளை போய் விசாரித்து போட்டுவரப்போனார். அப்துலயிமான் முதலான பேர் மதாம் துப்ளேக்சு அண்டைக்குப்போய் பேசிவிட்டு இந்த இரண்டு பொம்பாய் பரவாரிகளைக் கொண்டுபோய் விட்டு இங்கிலீஷ்காரர் போகிற சேதியைச்சொல்லி அப் பால் ஷேக் அப்துலாமிமான் முதலான பேர் அவர்கள் வீட்டுக்குப் போனார்கள். இந்த சண்டை துவக்கின இத்தனை நாளையிலே இன்றையதினம் சேக்கு இப்ராம் கொள்ளையிட்டார்களிதிலே அப்புரத்திலிருக்கிற வெள்ளைக் கார பவுன்சு சிப்பாய்கள் பவுன்சுகள் ஏகத்திற்கு வந்து விழுவதற்குள் நம்முடையவர்கள் மெலுக்கயிருந்த மட்டுக் கும் போதுமென்று திரும்பிக்கொண்டு வந்துவிட்டார்கள். அப்போ கொள்ளையிடப் போனவர்களிலே பத்து பனிரெண்டு பேர்கள் நம்முடைய சிப்பாய்களவர்கள் கையிலகப்பட்டுப் போனார்களாம். மதாம் துய்ப்ளேக்சு சேகரிலே பொன்ன னென்றொருத்தன் திருடப்போன விடத்திலே அதினாலே ஐந்தாறு குத்து தலையிலேயும் முதுகிலேயும் குத்தினார்கள். அதைப் பட்டுக்கொண்டு ஒடி வந்துவிட்டான். அவர்கள் பவுன்சு வந்த பிற்பாடு ஒரு சிப்பாய் ஒருத்தன் குதிரை

போட்டுக்கொண்டுவந்து நம்முடைய கும்பலிலே ரெண்டு சிப்பாய்களை வெட்டிப்போட்டுப் போனான். அப்பால் அவர்கள் பவுன்சு வந்தபிற்பாடு சுட்ட துப்பாக்கியினாலேயும் பீரங்கியினாலேயும் நம்முடையவர்கள் ஷேக் அப்துலாயிமான் தாலுக்கு ஷேக்இபராம் தாலுக்கு சிப்பாய்களிலேயும் ஏழெட்டு பேருக்கு காயமும் சாவுமானது முன்னே போன உடனே யேக வேலையிலே சுட்டார்களே அதிலே அவர்களுக்கும் ஐந்தாறு பேர்களுக்கு காயமாத்திரமுன்டென்று அப்துலாயிமான் சொன்னான். இந்தபடிக்கு நம்முடையவர்கள் அப்துலாயிமான் தாலுக்கு சிப்பாய்களும் ஷேக் இப்ராகிம் துலுக்கு சிப்பாய்களும் சண்டைபோட்டு மத்தே பண்ணிக்கொண்டு துரையவர்களண்டையிலே அப்துலாயிமானும், ஷேக் இப்ராகிம், அலிகான் முதலான பேர்கள் கூட முன் பிடிங்கி வந்தார்களென்று சொல்லப்பட்ட ஆயுதங்கள் கூட கொண்டுவந்து முன்னே வைத்து சலாம் பண்ணின உடனே துரையவர்கள் சந்தோஷமாய்த்தானே அப்துலராயிமானுடனே போன சேதியும் சண்டை பண்ணினதும் ஆயுதங்களை பிடுங்கி வந்ததும் முதலான சேதிகள் யெல்லாம் கேழ்க்க அப்துலாயிமான் சொல்ல மத்தியில் ஷேக் இப்ராகிம்தான் சும்மாயிருக்கலாகாதென்று ஒவ்வொன்று சொல்லுவான். என்ன சொன்னால்தானென்ன? ஷேக் அப்துலாயிமான் சமேதார் பிரிக்கிகளுக்கெல்லாம் (சோம்பேரி) குருக்கள் இத்தனை நாள் சண்டைப் போட போகிறபோதெல்லாம் ஒரு நாளாகிலும் தன் சிப்பாய்களுக்கு முன்னே நின்றவனல்ல; இதல்லாமல் யெல்லாரையும் முன்னே போகச்சொல்லி தான் பிறகேபோனதும் வந்ததும் இதுவுமல்லாமல் இத்தனை நாளும் மூலைக்கு முட்டாளாயிருந்து இன்றையதினம் போய் வந்ததும் துரையவர்கள் போனாயா வந்தாயாவென்று கேளாதே போனார். அதனாலே அவன் வெளியே புறப்படும்போது என்னைப் பார்த்து சகல கஷ்டப்பட்டவனும் நானும் எங்கள் சிப்பாய்களும் அப்துலாயிமான் எங்களுக்குப் பிறகு ஒரு நாழி வழியிலே நின்றவன் பேச்சு முனையாய் நின்றது; என் பேச்சு ஒன்றுமில்லாமல் போனது. நான் எத்தனைத்தாள் பிரயாசைப் பட்டாலும் பிரபுவினிடத்திலே ஒருத்தர் இருந்து சொல்லாவிட்டால் என்ன கவைக்கு வரப்போகுதென்றான். ஒடித் திரிந்தாலும் கும்பினீர் தஸ்திரத்திலே உம்முடைய கும்பினீர் சிப்பாய்களென்று பேர் உம்முடைய கும்பினீர் சிப்பாய்களுக்

நான் கப்பித்தான் என்று பேரிதிலே பிரதிஷ்டையாய் ஆனாலும் உம்மைச்சேரும். அப்பிரதிஷ்டையானாலும் உம்மைச்சேரு மென்று சொன்னான். அதற்கு என்ன சந்தேகமா? அதற்கு முன்னே மனுேசியுடனே சொல்லியனுப்பினதும் நான் முன்னே போய் துரையுடனே நம்முடைவர்கள் ஜெயம்பண்ணிக்கொண்டு வருகிறார்களென்கிற கபுறு சொன்னவன் நான் அல்லவா இப்போ நீர் நடப்பித்துக்கொள்ளுகிறதெல்லாம் துரையவர்கள் மனதிலே நன்றாய் தோத்தப்பட்டிருக்கிறது. நீர் செய்கிற வேலைக்குத் தகுந்தாப்போலே அநுபவமாவென்று லாட பாஷை யாய் நான் சொன்னதற்கு அவன் அது மெய்தான் நீர் துரை யவர்களுக்கு சொல்லி நடத்தவேணுமென்று திரும்பியும் உப சாரமாய் சொல்லிப்போட்டுப் போனான்; அப்பால் நான் வீட்டிற்கு வந்தேன்.

மற்றபடி இன்று சாயங்காலமட்டுக்கும் மேல் பார்சமா யிருந்து விஸ்தாரமாய் இத்தனை நாளும் சட்டமாய்த்தானே நெடும் பீரங்கி குண்டுகளும் தீக்குடுக்கைகளும் போட்டான். கடைத்தெருவு கும்பினீர் கிடங்குத் தெருவுமுதல் பரிச்சேத மாய் மனுஷர்கள் தலைக்காட்டாமல் வெகு பிரயாசமாயிருந்தது. ஊரிலே கோணிசாக்குகளெல்லாம் எடுத்துக் கோட்டையிலே கொண்டுபோய்ப் போடச்சொல்லி துரையவர்கள் கண்டிப்புச் சொல்ல முடியாது. நயனார் மனுஷர்களால் அகப்பட்ட சாக்கு களும், கோணிப் படங்களும் புதுசு பழசு கொண்டுபோய் சேர்க்கிறார்கள் கோட்டையிலே கட்டுகிறார்கள். சாக்குகள் தைத்து தைத்து வழுதாவூர் வாசற்படிமுதல் சென்னப்பட்டணம் வாசற்படி மூலை கொத்தளம் உள்பட கோணி சாக்கிலே மண்ணுகளைப்போட்டு ரொப்பி முடியவைக்கிறதே வேலை. அவன் போடுகிற குண்டுகளினாலே எடுபட்டுப்போகிறதே வேலை. இந்தப்படிக்கு எட்டுநாள் பத்துநாள் பிடித்து அகோர ராத்திரி முப்பதும் வேலையாய் நடக்கிறது. சாவு காயமும் ஊருக்குள்ளே ஏழுபேர், எட்டுபேர், பத்துபேர் உண்டு. மற்றபடி இதல்லாமல் இன்று இராத்திரி மூன்றுபேர் இங்கிலீஷ்காரர் இரண்டாயிரம் ரூபாய் மட்டுக்கும் திருடிக்கொண்டு புறப்பட்டு இவ்விடத்திற்கு ஓடிவந்து சேர்ந்தவர்கள் சொன்னது: இங்கிலீஷ்காரர் சகல ராணுவங்களும் ஏற்றிக்கொண்டு பயணம் சாகிப்போகிறார்களென்று துரையவர்களுடனே சொன்னார்கள். அதன்பேரிலே துரையவர்கள் சாவு காயமாய்

இருக்கிறார்களென்று கபுறு சொன்னார்கள். இந்த சேதி நாளை காலமே துரையவர்களிடத்திலே போனால்சமஸ்தமும் விசிதமாய் தெரியவரும். இந்த சேதி கேட்டவுடனே இந்த பட்டணத்துக் குள்ளே உண்டான வெள்ளைக்காரர், தமிழர், சமஸ்தமான ஜனங்களுடைய சந்தோஷத்தையும் உற்சாகத்தையும் என் புத்தியினாலே அணைப்பட்டு எழுதக்கூடாது. ஆனால், சுவாமி லோகத்திலே இருக்கப்பட்ட ஜனங்களை ரக்ஷிக்கிறது அவ ருக்குக் கடனபடியினாலே இங்கிலீஷ்காரன் செய்யப்பட்ட கரூரத்தை விலக்கிச் சகல ஜனங்களையும் ரக்ஷித்தார். ஆனால் ஸ்ரீ துய்ப்ளேக்சு துரை ஆகிற குவர்னதோர் சென்றுலவர் களுக்கு வந்த கீர்த்தியை என் புத்தியினாலே அகப்பட்டு எழுதப் போகாது. லோகத்துக்குள்ளே சூரிய பிரகாசம் எப்படி லோக மெல்லாம் ஒரு சூரியனாகயிருந்து பிரகாசிக்கிறாரோ அப்படி போலே இவருடைய கீர்த்தியும் பிரகாசிக்கத் தக்கதாக சுவாமி தயவுபண்ணினார்.

1748 ஆ அக்டோபர் மீ 13உக்கு விபவ ஸு ஐப்பசி மீ 1உ ஆதிவாரம்.

இற்றைநாள் கால்த்தாலே கேழ்விபட்ட சேதி யென்ன வென்றால்: நேற்று இராத்திரி இங்கிலீஷ்காரர் போட்டிருந்த பறச்சேரி கொத்தளத்தண்டையிலிருந்து மூன்று இங்கிலீஷ் காரர் நேற்று இராத்திரி ஓடிவந்து கூடலூர் வாசற்படி அண் டையிலிருந்துக்கொண்டு எச்சரித்து உள்ளே வந்து ஸ்ரீ துரை யவர்களுக்கு கபுறு சொன்னது யென்னவென்றால்: இங்கிலீஷ் காரர் பாத்ரியிலேயிருந்து வந்தோமென்றும் அந்த லசுக்கரிலே வெகு ஜனங்கள் காச்சலினாலேயும் இவ்விடத்திலேயிருந்து புறப்படுகிற குண்டுகளாலேயும் வெகுபேர் சேதப்பட்டு போனார்களென்றும் வெகுபேர் வியாதியஸ்தர்களையும் காயக் காரர்களையும் தேவனாம்பட்டணத்து டோலியின்பேரிலே அனுப்பின வண்ணமாயிருக்கிறார்களென்றும் மிதமில்லாமல் தாங்கள் கொத்தளம் போட்டுக்கொண்டு இருக்கிற இடமுழு தும் சேரும் தண்ணீரென்றும் அதில் இராப்பகல் வாங்காம லிருக்கிறதினாலே கைகள் கால்கள் எல்லாம் வீக்கம் கொடுத்து சாகிறார்களல்லவென்று தலையை யெடுத்தால் பீரங்கி குண்டு தலைகட்டக்கூடயில்லை யென்று மேஸ்தர் புஷ்காவேனும்

தன் கையினுலே ஆனமட்டுக்கும் பார்த்தான். ஜனங்கள் சாவ தினுலே இனிமேல் நிர்வாகமில்லையென்று பீரங்கிகள் சாமான்க ளெல்லாம் யேற்றுகிருர்கள்; இதல்லாமல் மழைகாலமும் வந்த தென்று கப்பல் காரர்களெல்லாம் தாங்களிருக்கிறதில்லை என்று சொல்லுகிருர்கள். ஆனபடியினுலே சகல சாமான்களு மேத்துகிருர்கள் அவர்களும் பயணம் போகிறதாக இருக்கி ருர்களென்கிற சேதியும் ஒலாந்துக்காரன் வந்தவன் மாத்திரம் இப்படி போகலாகாது மழைகாலமானுலென்ன? மனுஷர் செத் தாலென்ன சண்டைக்கு வந்தமட்டுக்கும் மனுஷர்கள் சாவில் லாமலிருக்குமாவென்றும் நாங்கள் இன்னம் மருந்து, குண்டு கள், மனுஷர், சாமான்கள் அழைப்பிக்கிருேம். கப்பல்கள் போய் மழைகாலத்துக்குப் பிறகு வெற்னேரிட்டு வரப்போகு தென்று ச்சொல்லுகிறதாகவும் மேஸ்தர் புஸ்காவேன் சம்மதிக் காமல் புறப்பட்டு போகிறதாயிருக்கிறதென்று சொன்னுர்க ளென்றும் அவர்கள் கையிலே கொஞ்சனஞ்சம் ரெண்டாயிர ரூபாய்மட்டுக்கும் கொண்டுவந்தார்கள் என்று அவர்களைக் கொண்டு இந்த சேதியெல்லாம் தெரிந்துக்கொண்டு அவர் களுக்கு ரொட்டி சாராயம் இறைச்சி அவர்களுக்கு இஷ்ட மானபடிக்கு கொடுத்து இருக்கச்சொல்லி கோட்டை வாச லிலே சகாயமாய் விட்டு அந்த சேதி கேட்டபிறகு துரையவர் கள் மிகுந்த உத்சாகமாய் இருக்கிருர்களென்று இதற்கு திருஷ்டாந்திரமாயிருக்குது. செவ்வாயன்று துவக்கி நெருப்பு வருஷமாய் குண்டு வருஷமாய் சாயங்காலம் ஆறுமணி மட்டுக் கும் வருஷித்தபிறகு ஒருநாள் இராத்திரிமாத்திரம் கிழக்கே பத்து போம்பு போட்டு பிறகு கிழக்கே போம்பு போடவில்லை மேற்கே புதவாரம் பரகஸ்பதிவாரமும் ரெண்டுனுளும் நெருப்பு பீரங்கி குண்டுகளும் தீக்குடுக்கைகளும் விஸ்தார மாய் போட்டான். அப்பால் வெள்ளிக்கிழமை முதல் மேற்கே யிருந்து போடுகிற நெடும் பீரங்கி குண்டும் கிறனுது ரொய் யால் என்கிற தீக்குடுக்கைகளும் ஒருனுளுக்கொருனுள் மட்டா யிருக்கிறதும் திருஷ்டாந்திரம் சரியாயிருக்குதென்று நேற் றைக்கு பரணிப்பேட்டை அண்டையிலே மோர்சா போட வேணுமென்று எத்தனம் பண்ணினதை நம்முடையவர்கள் முரியடித்து அங்கேயிருந்த கர்னுடகத்தாரையெல்லாம் பிள்ளை சாவடி வரைக்கும் துரத்தி அவர்கள் ஆயுதங்கள் கூடா ரம் முதலான ச்சாமான்கள் தட்டுமுட்டுகள் அரிசிகள்கூட

கொள்ளையிட்டுக் கொண்டுவந்தபோது பொம்பாய் மார்வாரிகள் முகம்மதுகான் சமேத்து சேவகரிலே இரண்டு பேரையும் பிடித்துவந்தார்கள். அவர்களைக் கேட்டவிடத்திலே அவர்களும் நீங்களேன் மோர்சாவின்பேரிலே விழுந்து சண்டை கொடுத்து மனுஷர்களை காயப்படுத்துகிறீர்கள் சாவுக்கொடுக்கிறீர்கள். அவர்களஞ்சாறு நாளையிலே சகல சாமான்களுமேத்திக்கொண்டு தன்னிச்சயாய் போகிறதாக இருக்கும்போது என்று மேலே இந்த இங்கிலீஷ்காரர்கள் சொன்ன வயணப்படிக்குச் சொன்னதினாலே எந்த விதத்திலேயும் எந்த சேதியும் அவர்கள் போகிறார்களென்கிற சேதி தத்ரூபமாய் ஓர் பட்டபடியினாலே அத்துடனேகூட நம்முடைய புதுச்சேரி துறைக்கு நேராய் பிடித்திருந்த கப்பல்களிலே கொம்மாந்தான் கப்பல் வட்டக்கொடி போட்டிருக்கிற கப்பலொன்று கலியோத்து என்கிற போம்பு சுடுகிற சுலுப்பு தவிர மற்ற கப்பல்களெல்லாம் பாயெடுத்து சூரிய உதயத்துக்கு எல்லாம் கோட்டைக்குப்பத்துக்கப்புறம் வெள்ளாமுசாவடிக்கு நேராய் வைத்து பிடித்து சாமான்களேத்துகிற சாடைக்கு சரியாய் நூறு படகுகள் இரனூறு மட்டும் மாத்திரம் கப்பல்களுக்கும் கரைக்கும் போக்குவரத்தாயிருக்கிற சாடை பார்த்தபடியினாலே நம்முடைய புதுச்சேரிக்கு மேற்கே மேஸ்தர் புஷ்காவேன் லஷ்கர் சாமான்கள் பீரங்கிகளெல்லா மேத்துகிறார்களென்கிற சாடை நன்றாய் தோத்தப்பட்டிருப்பதினாலேயும் இன்று காலையில் தேவனாம்பட்டணத்திலிருந்து ஒரு சின்ன கப்பல் ஓடிவந்து அமிரால் கொடி போட்டிருக்கிற கப்பலுக்கு ஆசாரமெழுதி பீரங்கியுடனே அமிரால் கப்பலிலேயும் பதிலுக்குப் போட்ட உடனே வந்த கப்பல்காரன் என்ன சேதி சொன்னானோ ஒரு பீரங்கி அடமானம் போட்டு பாயெடுத்து வெள்ளாமுசாவடிக்கு நேராய் மற்ற கப்பல்களெல்லாம் வைத்து பிடிக்கிற யிடத்துக்குப் போய் வைத்துப் பிடித்தான். போம்பு போட்ட சுலுப்புங்கூட தானெடுத்து (பாயெடுத்து) ஓடிக்கொண்டுபோய் கூடவைத்துப் பிடித்தான். புதுச்சேரி துறைக்கு நேராய் ஒரு கப்பலுமில்லையென்று ஏழு மணி வேளைக்கு வந்து கபுறு சொன்னார்கள். ஆனால் இன்று இருபது நாழிகைவரையோடே சனி சித்திரஞ்சரி அல்லவாயென்று யோசனை பண்ணிக்கொண்டு அதினாலே கலாமா சாடைதீர்ந்துக் காணுதென்கிற சாரமு மனுகூலமாயிலி

யிருக்குமென்று யோசனைபண்ணிக்கொண்டு ஆனால் புதன் இருபத்தினாலரை நாழி இருபத்தஞ்சு நாழியிலே புதன் சத்ருவானபடியினாலே சத்ருவான பூர்வார்த்தம் பணிரெண்டு நாளையிலே அடிப்படுகிறார்களோ அல்லவோவென்று உத்திரார்தம் பணிரெண்டு நாளையிலே அடிபடுகிறார்களோ அறிய வேண்டியது. இதில் பூர்வார்தத்திலே என்ன நடக்கிறதோ உத்திரார்த்ததிலே யென்ன நடக்கிறதோ அறியவேணும். அப்பால் இன்றையதினம் பிரபு சத்துரு போராரானென்று மிகுந்த சந்தோஷத்துடனே இருப்பாரே நாமும் போய் பிரபுவை தரிசனம் பண்ணிக்கொண்டு வருவோமென்று கோட்டையைப் போனவுடனே கோட்டை வாசற்படியண்டை யிலே போகும்போது மஞ்சகண்டமெதிராக வந்ததுமல்லாமல் அதிகாலமே எழுந்திருந்து முகம் கழுவிக்கொண்டு பாக்குப் போட்டுக்கொண்டு எதிரே இருக்கிற திருவீதி பாலுசெட்டி வீட்டிலே இறங்கியிருக்கிற லட்சுமணநாய்க்கர் மகனுந்த பண்டிதனண்டையிலே போய் நேற்று இராத்திரி ஆறுபேர் இங்கிலீஷ்காரர் புறப்பட்டதற்கு மூன்றுபேர் வந்துசேர்ந்து சொன்ன சேதியும் கப்பல்களெல்லாம் பாயெடுத்து வடவண்டை பாரிசமாய் வைத்துப் பிடித்து சாமான்களேத்துகிற சாடையும் இங்கிலீஷ்காரன் வருஷகாலமானதே அவனுக்கு நிர்வாக மில்லாமல் போய்விடுகிறானென்று குண்டுவிழாமல் வரவர மரத்துகளையும், தழைகளையும், மண்ணுகளையும்போட்டு முஸ்தீப்பு பண்ணினார்களே அதுகளின்மேல் கவையில்லை என்றும் அவர் வீட்டைவிட்டு வலசை வந்திருக்கிறோமே அந்த வலசை தீர்ந்து ஐந்தாறு நாளையிலே அவரவர் வீட்டைப் போவோமென்று முன்னமேதானே ஐப்பிசி மாதம் பிறந்தால் சத்துருவாங்கிப் போவானென்று சொன்னதற்கு சரியாய் இன்றைக்கு முதல்தேதி ஆனதே சுபசூசிகம் காணுதென்று பேசிக்கொண்டிருக்கும்போது கப்பல்களிலே பீரங்கி சத்தம் கேட்டவுடனே கப்பல் பீரங்கி எங்கே சுடுகிறானோவென்று பயந்தார்கள். பயப்படத் தேவையில்லை. இதோ ஒரு கப்பல் தேவனாம்பட்டணத்திலிருந்து பாயெடுத்து ஓடிவருகிறதென்று சேதிவந்து சொன்னதற்கு இரண்டுதரம் பீரங்கி கேட்டதற்கு சரியென்று ஏதாவது சமாசாரம் கொண்டுவந்ததாக வேணு மென்று சொல்லிக்கொண்டிருக்கும்போது அமிரால் கப்பலும் தலியோத்துங்கொண்டு துரைக்கு நேராயிருந்ததே அது

இரண்டுமிப்போது வந்தது கூட பாயெடுத்து ஓடுகிறதென்று கபுறுவந்து சொன்னார்கள். அப்போ லட்சுமணநாய்க்கரையும் மதனந்தபண்டிதரையும் பார்த்து நாம் சொல்லிக்கொண்டிருந்த சங்கதிக்கு சரியாயிப்போ பாயெடுத்து மற்ற கப்பல்களிருக்கிற வட பாரிசமே துறைவிட்டு ஓடுகிறுனென்கிற கபுறு வந்தமட்டுக்கும் இங்கிலீஷ்காரன் பயணமும் சாகிப்போகிறது உசிதமாச்சுதென்று பேசியிருந்துப்போட்டு சீக்கிரத்துக்கு பழையது சாப்பிட்டு, துரையவர்களண்டைக்குப் போகவேணுமென்று லட்சுமணநாய்க்கருடனேயும் மதனந்தபண்டிதனுடனேயும் சொல்லி, • நானிரங்கியிருக்கிற சுங்குவார் வீட்டுக்குப் போகவேணுமென்று நடந்தவுடனே லட்சுமண நாய்க்கருடனே ஆசீர்வாதம்பண்ணி கிச்சிலிப்பழமொன்று கொடுத்தார். அப்போ எனக்கு இத்தனைநாளாய் மனதுக்கு சங்கடமாயிருந்ததே அது நிவர்த்தியாய் இன்றுமுதல் நமக்கு சுப்ரமாய் சகல காரியங்களும் அனுகூலமாய் சத்துருக்களெல்லாம் நாசத்தை அடைவார்களென்று யோசனை பண்ணிக்கொண்டு போர்த்து ரொயால் ஆகிய (Porte royale) கிழண்டை வாசலிலே நுழைந்து போகும்போது கப்சுகோயில் பாதிரியாரெதிரே வந்தார். அவர் இருந்துக்கொண்டு ரங்கப்பிள்ளை, ஆரோக்கியத்துடனே இருக்கிறுயாவென்று கேட்டார். உங்களுடைய அநுக்கிரகத்தினுலே சகல ஆரோக்கியத்துடனேயுமிருக்கிறேனென்று சொன்னதற்கு, இங்கிலீஷ்காரன் போய்விட்டானென்று சொல்லி முழுக்கப்போனதாய் அல்ல இன்னம் கொஞ்சமிருக்கிறது அதுவும் ஒரு மழை துவக்கினுல் போய்விடுவானென்று சொன்னார். உங்கள் மனதிலெப்போ நினைத்தீர்களோ அப்பவே போய்விட்டானென்று எண்ணிக்கொள்ளுங்களென்று சொன்னேன். அப்பால் துரையவர்களிருக்கிற கோட்டைக்குள்ளே பொராக்கூண்டு மூலையிலே போனேன் அங்கே கச்சேரியண்டையிலே வெளியிலே மூசியே துக்கோன், பிரியேல், செறே, கோஜா சுல்தான், கோஜாசுவாக்கீசு, மதாம் துப்ளேக்சு மூசியே தெலாசேல், மூசியே வின்சன் பின்னையும் இரண்டொரு வெள்ளைக்காரர்கள் துரையவர்கள் கூட உட்கார்ந்துக்கொண்டு இங்கிலீஷ்காரன் புறப்பட்டுப் போகத்தக்கதாக சண்டைசாமான்களை பீரங்கி முதலானதுகளை எல்லாம் ஏற்றுகிற முச்சட்டைகளும் அவன் (இங்கிலீஷ்காரன்) வந்ததும்,

சண்டைபண்ணினதும் அப்போது பேசிக்கொண்டிருந்தார்கள். அந்த அவசரத்திலே நான் போய் நின்ற உடனே என் பிறகே மதனுந்தபண்டிதன் அன்னபூரணய்யன் கூட வந்து நின்றார்கள். என்னைக்கண்ட உடனே கும்பலைவிட்டு, துரையவர்களெழுந்து என்கிட்ட வந்து, இங்கிலீஷ்காரர்கள் போய் விடுகிறார்களா? சண்டைபண்ணி தீர்ந்து அவனும் போகிறாப் போலே ஆனதே, முன்னே பிராஞ்சு நாடகம் பத்தேபண்ணனது முதலானதுகளெல்லாம் பாடவைத்து நாடகமாடவைக்க தக்கதாக அடுக்குக்கூட பார்த்து திருத்தியிருக்கிறதே அந்த நாடகம் ஆடிவைப்பதற்கிப்போ குறையும் பூர்த்திபண்ணி ஆடி வைப்பதற்கு காலம்வந்தது. அந்தபடிக்கு முன் யாரைக் கொண்டு பாடவைத்தாயோ இதின்பிறகு சண்டை பூராவாயின்றைவரைக்கும் நடந்த சண்டையும் அவரைக்கொண்டு வெகு திட்டமாய் பாடவைத்து குறையும் நாடகம் தேவடியாள் முதலானபேருக்கும் குறையும் பாடம் பண்ணிவைத்து அடுக்குப்பார்த்து நாடகத்துக்கு வேஷ சாமான்களுக்கு என்ன சென்றாலும் பரசுராம பிள்ளையைக் கேட்டு வாங்கிக்கொண்டு சீக்கிரமத்துக்கு முஸ்தீப்பு பண்ணிவைத்து நாடகமாடிவை யென்று உத்தாரம் கொடுத்து மறுபடியும் ஆலசியம் பண்ண வேண்டாம். சீக்கிரம் முஸ்தீப்புபண்ணி நாடகமாடிவை யென்று சொன்னார். நீங்கள் சொல்லும்போது நான் தாமதப்பண்ணுவேனு அந்தப்படிக்குத்தானே சீக்கிரம் முஸ்தீப்பு பண்ணிவைக்கிறேன் என்று சொன்னேன்.

அப்பால் நல்லது இந்த துலுக்கர்கள் (இங்கிலீஷ்காரருக்கு) மத்தத்தும் வந்தார்களல்லவா? பின்னை இதுக்கு ஆர் ஆர் உபேக்ஷை செய்கிறதா இருக்கிறார்களோ அவர்களையெல்லாம் எப்போதுமவர்கள் நம்மை நினைக்கத்தக்கதாக பண்ணவேணுமென்று சொன்னார். அப்படியே செய்யாவிட்டால் நமக்கு இராஜ்யத்துக்குள்ளே கீர்த்திவுண்டாக மாட்டாது. அவர்களெப்போதும் பிரான்சுக்காரர்களுக்கு ஒரு தப்பிதம் பண்ணாமல் பழிவாங்காமல் விட்டார்கள் என்று பிள்ளைபிள்ளை தலைமுறைக்குக்கூட நினைக்கதக்கதாகச் செய்யவேணுமென்று சொன்னதற்கு அப்படித்தானே செய்கிறேன் பாரென்று சொன்னார். அப்பால் உங்களுக்கு பின்னையார் ஒரு மத்தத்தும் அனுப்பாமலிருக்க [ ]

*1748 ஆ அக்டோபர் மூ 14* உக்ரு விபவ ஞு ஐப்பசி மீ 2உ சோமவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்களண்டைக்கு கோட்டைக்குப் போனவிடத்திலே பிரபு புடவை பார்க்கிற சாலையிலே வந்து இருந்தவர் என்னைக்கண்டு அப்துல்சலீல் அனுப்பி வைத்துக்கொண்டு நேற்று இராத்திரி தீவட்டி வெளிச்சத்துடனே சாகிப் போய்விட்டானென்று கபுறு வந்ததென்று சொன்னார். சேவகர் சிப்பாய்கள் வெளியேயிருந்து வந்தவர்கள் அப்படித்தானே சொன்னார். ஆனால் புரட்டாசி மீ 8 தேதி வந்து நேத்துவரைக்கும் இருபத்திமூணு இருபத்தி நாலு நாளிருந்தான் நித்தியம் நானூறு ரூபாய்படிக்கு வாங்கிக் கொண்டார் என்று சொல்லுகிறார்கள். ஆயிரம் ரூபாயென்று சொல்லிக்கொள்ளுகிறார்கள். இதல்லாமல் புதுச்சேரி பட்டணம் மேஸ்தர் புஷ்காவேன் வாங்கிக்கொண்ட அன்றைக்கு நாலுதெருவுங் கொள்ளைக் கேட்டுக்கொண்டு அந்த நாலு தெருவுங் கொள்ளையிடத்தக்கதாகவும் காத்துக்கொண்டிருந்தவனிப்போ என்னமாக போகத்தக்க மனது வந்ததோ போகும்போது அவன் சரீரத்திலே பிராணன் இல்லாது ஏர்க்கனவே நம்முடைய நிமித்தியம் விழுப்புரத்திலே கூட இருக்க பயந்துக்கொண்டு செஞ்சியைப் பார்த்துக்கொண்டிருந்தான். இனிமேல் ஆர்க்காடு பிரவேசமேயல்லாமல் மத்தியில் எங்குமிருன். இதெல்லாம் ஆர்க்காட்டிலே இருந்துக்கொண்டு நபாபு ஆசராவிலே யிருந்தாலும் அவருக்கு உள்ளேயிருக்கிற பயம் அந்த ஆசராவும் தூரமும் தோணுது. அறியாமற்போனேமென்று குறை அச்சமும் இதினாலென்ன சம்பவிக்கிறதோ என்கிற திகிலும் குடிகொண்டிருக்குமென்று பின்னையும் அவனுடைய பிரகீர்த்தித்தனம் முதலான லோப குணங்களையும் சொன்னதற்கு முசியே பிரியேல் இருந்துக்கொண்டு பிராமணத்தெருவு முதல் உங்கள் தெருவுகூட நாலு தெருவு கொள்ளையிடவேணுமென்று யிருந்தானுமென்று சொன்னதற்கு துரையவர்கள் சொன்னது: ரங்கப்பன் தெருவு கோமுட்டி செட்டிகளிருக்கிற தெருவாய் நாலுத்தெருவு கேட்டு காத்துக்கொண்டிருந்தானும். இப்போ வெட்கினைப் போலே போய்விட்டான் என்று சொல்லிக்கொண்டிருக்கும் போது அப்துலாயிமான் சமேதரர் வந்தான்; வந்த உடனே உட்காரச்சொன்னார். அப்பால் அப்துலாயிமானைப் பார்த்து

உனக்கு ஆர்க்காடுநகர் பட்டம் கொடுக்கிறேனென்று சொன்னு ரதற்கு அப்துலாயிமான் சொன்னது ஆயிரம் சிப்பாய்களும் குதிரை சுவர்களும் பேரம்பு சுடுகிற மொடுத்தியோ நாலும் நெடும் பீரங்கினுலும் கொடுங்கள் நீங்கள் பணம் காசுகளை கொடுக்க தேவையில்லே. நான் போய் ஆர்க்காடு சீர்மையும் கட்டிக்கொண்டு உங்களுக்கு பணம் காசு கொடுக்கிரும் நீங்களுத்தாரமாத்திரம் கொடுங்களென்று சொன்னுன். அதற்கு நானிருந்துக்கொண்டு அவ்வளவு சிப்பாய்களும் அவ்வளவு பீரங்கிகளும், மொடுத்தியேயும் உண்டாயிருந்தால் கிஷ்ணுநதி உள்பட்ட சீமைகளெல்லாம் கட்டலாமென்று சொன்னேன்; அது மெய்தானென்று துரையவர்கள் சொன்னுர். அப்பால் மறுபடி அப்துல்சலீல் வந்ததும் போனதும் பிரஸ்தாபம் பண்ணிக்கொண்டிருந்து அப்பால் முசியே தேலார்ஷ் அழைக்கச்சொல்லி யெழுந்து தாமிருக்கிற காசிரியே போனுர். (Bureau) அப்துலாயிமானை அழைத்து பகலேக்கு மேலாக வடவண்டை போய் ஒரு ஒட்டு மோர்சா சாமான்களை திருப்பிக்கொண்டு வரலாமானுல் போய் கொள்ளையிட்டுக் கொண்டு வரச்சொல் (என்று) உத்தாரம் கொடுத்ததுமல்லா மல் இராத்திரிக்கு அப்துலாயிமான் சமேத்து சிப்பாய்கள் எத்தனை உண்டோ அத்தனையும் நம்முடைய சேக்கு இப்ராம் வசம் சிப்பாய்கள் கைதொக்கு கர்னுடகத்தார் உள்பட அன்னூறுபேர்களையும், முன்னூறு சோல்ஜர்களையும், இரனூறு காபிரிகளும் இரண்டு பீரங்கியும் கொண்டுபோய் சூரிய உதய வேளேக்கெல்லாம் மோர்சாவின்பேரிலே போய் விழுந்து சண்டைபண்ணி அவர்கள் மோர்சாவைவிட்டு, துறத்திவிட்டு மோர்சாவையும் கலேத்து மோர்சாவிலே இருக்கிறதையெல் லாம் கொள்ளையிட்டுக்கொண்டு வரச்சொல்லி உத்தாரம் கொடுத்து முசியே துக்கேனுக்கு ஒடுதி கொடுத்தார் யென்று அப்துலாயிமான் சமேதார் துரையவர்களுடனே கண்டு பேசிப் போட்டு வந்து என்னுடனே சொல்லிவிட்டு வீட்டுக்குப் போனுன். இதிலே முசியே தேலார்ஷ் துரை அவர்களண் டைக்கு போனவிடத்திலே[ ]

**1748 ஆ௵ அக்டோபர் ௴ 15 உ க்ஷ விபவ ௵ ஐப்பசி ௴ 3 உ மங்களவாரம்**

இற்றைனுள் காலத்தாலே கோட்டைக்குப்போன விடத் தில் பிரபு நம்முடைய சிப்பாய்கள் முதலானபேர்கள் ஆயிரத்தி

யெழுனூறு, ஆயிரத்தி என்னூறுபேர் மட்டுக்கும் போனவர்களை இங்கிலீஷ்க்காரர் பவுன்சுகள் கூடக்கூட்டிக்கொண்டு அவர்கள் இங்கு பாளையத்திலிருந்து பொம்மயப்பாளையத்து துறையிலே பிடித்திருக்கிற கப்பல்களுக்கு கொண்டுபோய் ஏத்தப்போகிற சாமான்களையும் பிரித்துக்கொண்டு அநேகம் சாவுக்காயப்படுத்தி அகப்பட்ட பேரைப் பிடித்துக்கொண்டு வரப்போனவர்கள் என்னமாய் சண்டை பண்ணுகிறார்களோ பார்க்கவேணுமென்கிற ஆசையைக்குறித்து பிரபுவானவர் மணிக்கூண்டுமேலே சோல்ஜர் கப்பித்தான் ஒப்பிசியேல்மார்கள் மதாம்கூட பத்து பனிரெண்டு பேருடனே போய் பார்த்துக்கொண்டிருக்கும்போது நானும்போய் சலாம் பண்ணிக்கொண்டு ஒருநாழிகை நேரமிருந்து அப்பால் புடவைபார்க்கிற சாலையிலே வந்து உட்கார்ந்துக்கொண்டிருந்தேன். செஞ்சியிலே நபாபு மாபுசுகான் லசுக்கர் வேட்டவலத்துப் பாளையத்தின் பேரிலே இரங்கி சண்டை பண்ணிக்கொண்டிருந்த விடத்திலிருந்து நம்முடைய வக்கில் சுப்பய்யன் முன் புரட்டாசி மீ 12 உ எழுதின காகிதம் இங்கிலீஷ்காரன் பாளையமிரங்கி இருக்கிறதினாலே வர பயந்திருந்து நேற்று இராத்திரி மதாம் துய்ப்ளேக்சு சேவகர் வேவுபார்க்கத் தக்கதாக வழுதாவூருக்குப் போய் சேதி விசாரித்துக்கொண்டு வருகிறவர்கள் பிறகே காகிதம் கொண்டுவந்து துரையவர்கள் கையிலே கொடுக்க அவர் என்னண்டைக்குக் கொடுத்து அனுப்பச்சொல்லி சேவகன் கையில் கொடுக்க அதை மதாமவர் வாங்கிக்கொண்டு அந்தரத்திலே காற்றினாலே பிராமண பிறப்பாய் பிறந்திருக்கிற மதனுந்த பண்டிதரை அழைப்பித்து படித்துக்கொண்டு அந்த காகிதத்தை சேவகன் கையில் கொடுத்தனுப்பினவன் கொண்டுவந்து என் கையிலே இன்றைக்கு ஒன்பது மணிக்கு புடவை பார்க்கிற சாலையிலே கொண்டுவந்து கொடுத்தான். இதேது இந்த காகிதம் படித்துப்பார்த்து கொண்டவர்கள் ஆரென்று காகிதம் கொண்டுவந்த கும்பினீர் சேவகனைக் கேட்டதற்கு மேலெழுதினபடிக்கு அவன் சொல்லத் தெரிந்துக்கொண்டு அவனைப் போகச்சொல்லி அந்த காகிதத்தை படித்துப்பார்க்க எழுதியிருந்த சேதி என்னவென்றால்: வேட்டவலம் பெரிய அய்யர் என்கிற பாளையக்காரன் முன்காரமலிகான் துலுக்கனுக்கினவன் மறுபடி சேறுயாத்திரை பண்ணிப்போட்டுவந்தவன்,

தக்கப்பனாகிய பெரிய பண்டாரம் தன் சமபாத்தியமாயிருக்கிற வேட்டவலத்தையும் அதினுடைய காட்டையும் ஆக்ரமித்துக் கொண்டு அப்பால் செஞ்சி துற்கத்திலே ஒரு துறுக்கத்தையும் கொண்டு சோராவரியாய் நவாப் ராச்சியமெல்லாம் கொள்ளை யிட்டதின்பேரிலே நவாப் அன்வர்த்திகான், மாபூசுகான் முதலானவர்கள் வந்திரங்கி சண்டை பண்ண அவனுக்கு ரஸ்து இல்லாமல் புறப்பட்டு ஓடிப்போனதும் அவனூழியக் காரன் ஒருத்தனை பிடித்துவந்து தலை வெட்டினுமென்று எழுதியனுப்பின சேதியும், அப்பால் இங்கிலீஷ்காரர் பவுன்சு நம்முடைய ஊரை சுத்திக்கொண்டிருக்கிற சாடையும், மாபூசுகானை வரச்சொல்லி அப்துல் சலீல் இங்கிலீஷ்காரர் பாளையத்திலிருந்து எழுதுகிறதும், அதற்கு இங்கிலீஷ்காரர் களை நம்பி போகப்போகாதென்று பார்த்துக்கொண்டிருக்கிற சாடையும், சந்தா சாயபும் மருட்டியர்கள் வருகிற கபுறு சுருக்காயிருக்குதென்றும், உடையார்பாளயத்தின் பேரிலே தஞ்சாவூரின் பேரிலேயும் போகவேணுமென்று இருக்கிற தாகவும் தன் சிலவுக்கு அனுப்பச்சொல்லியும் இப்படியாக எழுதியிருந்தது. ஆனாலிந்த சேதியும் சொல்லுவோமென்று பார்த்துக்கொண்டிருந்தேன். இதிலே மணிக்கூண்டுவிட்டு தாழ இரங்கி தாமிருக்கிற காசரியே போய்விட்டதாய் சேதி வந்தது. அதிலே ஷேக் இப்ராம் அன்னூறு பேருடனேயும் ஷேக்கு அப்துலாயிமான் ஆயிரத்து சிலவானம் சிப்பாய்கள், காப்பிரிகள், குதிரை சுவர்கள், வடவண்டையும் மேலண்டை யுமாகப்போய் அவர்கள் பவுன்சு இரண்டு பாரிசமும் பாரிய நின்று பீரங்கினாலே அடித்தும் ஓடிவந்துவிட்டார்கள். அப்துலாயிமான் சிப்பாய்களிலே இரண்டுபேர் சாவு, இரண்டு பேர் காயமும் சாவுடனே வந்து சேர்ந்தார்கள். அப்துலாயி மானும் ஷேக்கு இப்ராமும் துரையவர்களண்டைக்கு வந்த உடனே துரை அவர்கள் பேரிலே விழுந்து சண்டை பண்ணி மோர்சாப் போட்டதையும் கலைக்காமல் வந்ததென்னவென்று வெகு கோபம் பண்ணினார். அவர்களும் உச்சாயபங்கமாய் முகத்தை தொங்கப்போட்டுக்கொண்டு அவரவர் வீடே போனார்கள். இற்றைநாள் விடியற்காலத்திலே கற்னல் ரொய்யால் என்கிறது நேற்றுப்போட்ட சாடைபடிக்கு மேலண் டையிலே வாய்வுமூலையிலே ஒரு தண்டகத்துக்கு அவ்வாறு விழ்க்காடு அம்மாளனார் ஆடினார்போலே பொழுது விடியற் காலத்திலே துவக்கி சூரியன் உதயமாவதற்குள்ளே ஆரேழு

தண்டகம் போட்டான். அப்பாலும் போட்டுக் கொண்டிருந்தான் நெடும்பீரங்கிக் குண்டு சாயங்காலத்துக்குள்ளே 30 குண்டுமாத்திரம் வூரிலே வரப்போட்டது. அப்பாலே கொத்தளத்திலேயும் சுவரிலேயும் பட்டது கணக்குத் தெரியாது: இன்றுகாலத்தாலே ஒன்பது மணி வேளைக்கு நம்முடைய தம்பியிருக்கிற வீட்டுக்கு கிழக்கேயிருக்கிற அரிசி கிடங்கிலே ஒரு பதினாலுராத்தல் குண்டு விழுந்தது. அந்தபடிக்குபோகிறவன் பீரங்கி முதலான சாமான்களை ஏத்துகிறவன் இந்த சாடைக்கூட நடத்திக்கொண்டுவந்தான். அப்பால் இன்று இராத்திரி பனிரெண்டு மணி சரியாய் தான் போட்டிருந்த மோர்சாவை கொளுத்திப்போட்டு அங்கேயிருந்த ஜனங்களெல்லாம் குண்டு சாலைக்கு மேற்கே மேட்டுபேரிலே போட்டிருந்த கூடாரங்களிலே போய்விட்டார்கள். அந்த கூடாரங்களிலேயும் பெரியதெல்லாம் வாங்கி சாமான்களுடனே கூட கப்பலின் பேரிலே ஏத்தினதுமுண்டு. கரை வழியாய் மேல்பார்சமாய் தேவனாம்பட்டணம் போனதுமுண்டு. கொஞ்சமாயிலுமாத்திரம் போட்டிருந்தது. இந்த மோர்சாவும் கொத்தளமும் பனிரெண்டு மணிக்கு கொளுத்தினது மூணரை மணி மட்டுக்கும் எரிந்தது; நாலரை மணிக்கு புகைந்து அப்பால் தெரியவில்லை. மேஸ்தர் புஷ்காவேன் கோந்திரிமிருலாய் வந்தவன் நேற்று இரண்டாம் தேதி சோமவாரம் பத்துமணி வேலைக்குத்தானே புறப்பட்டு மேல்வழியாய் பல்லக்கின் பேரிலே அரியாங்குப்பம் தேவனாம்பட்டணம் போய் சேர்ந்தானென்று கபுறு நேற்று இராத்திரி வக்கீல் சுப்பய்யன் காகிதம் கொண்டுவந்த பாப்பு சமுத்திரத்து பிராமண பிள்ளையாண்டான் பேர் விளங்காவயணம் போகச்சே கூடயிருந்துவந்து பார்த்து வந்து சொன்ன கபுறு மெய்யாய் வந்து மறுபடி கபுறுச்சொன்னார்கள். இன்று நம்முடையவர்கள் புதுசாயெழுப்பின மண் கொத்தளத்திலேயிருந்து மத்தியானம் மட்டுக்கும் நூற்றிசிலவான மிருனூறு பீரங்கிமட்டுக்கும் உண்டு போட்டது. இன்றையவரைக்கும் இங்கிலீஷ்காரன் போட்டது அறுபதுனாயிரம் குண்டுக்கு கடலின் பேரிலே போட்டது. இருப்பத்தைந்து இருபதும் மற்றது மேற்பார்சத்திலே அரியாங்குப்பம் சண்டையிலே போட்டது கீழ்பாரிசம் போட்டது போம்பு ஆயிரம், மேல்பாரிசம் போட்டது மூவாயிரம் நம்முடையவர்கள் போட்டது முப்பதுனாயிரம் குண்டு போம்பு முன்னூறுயென்று சொன்னார்கள்.

1748 ஆ அக்டோபர் மீ 16 உ க்த விபவ ஸு ஐப்பசி மீ 4உ புதவாரம்.

இற்றைநாள் இங்கிலீஷ்காரன் பவுன்சு குண்டுசாலைக்குள்ளேயிருந்து பாக்கமுடையான்பேட்டு பறச்சேரி அண்டையிலே போட்ட பத்திரியும் மோர்சாவையும் நேற்று இராத்திரி கொளுத்திப்போட்டு பெருமாள்நாய்க்கன் சாவடிக்குப்போய் அதற்கு மேற்கே முத்திரபாளயத்து மேட்டுப் பேரிலே போட்டிருந்த கூடாரத்திலே போயிருந்து சாமான்களை யெல்லாம் யெடுத்து பொம்மயப்பாளையத்து துறை வெள்ளாமுச்சாவடி துறையிலே யேத்திப் போட்டதுபோக வில்லியநல்லூர் தென்னல்வழியாய் தேவனாம்பட்டணம் போய்ச்சேர சாமான்கள் மூன்று நாளுனாள் துவக்கி அனுப்புகிறதுபோக மற்றது நின்றது அனுப்புகிறநிமித்தியமிருந்தாலும் நம்முடைய பிரான்சுக்காரர் பவுன்சு வரப்போகுதென்று ஒவ்வொரு பீரங்கி சுட்டுக்கொண்டேயிருந்தான். ஆனால் நம்முடைய சிப்பாய்கள் மற்றபேர் அவ்விடத்திற்குப் போகவில்லை. நம்முடையவர்கள் குண்டுசாலை வாங்கினது முன் ஆவணி மீ 28 தேதி வெள்ளிக்கிழமை துவக்கி நேற்றையவரைக்கும் ஆயிரம் பீரங்கி சுட்டநாளுமுண்டு. 800, 700, 600, 500, 300, 200, கட்சி 100 க்கு குறைய சுட்டதில்லை. இந்த நாற்பதுநாளும் விடாமல் பீரங்கி சத்தம் போம்பு சத்தம் கேளாதநாளில்லை. அதற்கு இன்றையதினமிவர்கள் பீரங்கி சுடாமல் நின்றார்கள். மற்றப்படி அவர்கள் போட்டிருந்த மோர்சாவிலே ஜனங்கள் போய் எடுத்துவந்த பீரங்கி குண்டுகள் அவர்கள் போட்டுப்போனது 3000, 4000 குண்டு எல்லாம் 24 ரூ. 28 ரூ. குண்டுகள் முதல் 12 ரூ. மட்டுக்கும் தினுசு தினுசாய் குண்டுகளெடுத்தார்கள். இதல்லாமல் மண்வெட்டிகள், கோடாலிகள், வெட்டுகத்திகள் பின்னையும் மோர்சா போடுகிற ஆயுதங்களென்ன உண்டோ அந்த ஆயுதங்களெல்லாம் மிதமில்லாமல் போட்டுப்போனார்கள். இதுவுமல்லாமல் சீர்மை மரப்பலவைகள் ஆறுவிரல் கனம் முதல் பனிரெண்டு விரல் கனம் மட்டுக்கும் வெகு நேர்த்தியான பலகைகள், உத்திரங்கள் தேக்குவுத்திரம் பலகைகள் முதலானது மிதமில்லாமல் போட்டுப்போனதுமல்லாமல் அவனவன் சரிப்போனாப்போலே கொண்டுவந்து வீட்டிலே சேர்த்துக்கொண்டவனும் விற்றுப்போட்டு விட்டவர்களும்

இப்படி மிதமில்லாமல் யெடுத்துவந்தார்கள். இதல்லாமல் மதாம் துப்ளேக்சு சேவகர்கள் போய் முன் கொள்ளையிட்டது போக இன்றையதினம் நம்முடைய ஊராா்களுடைய சால் ஏத்தம் வீட்டுகைகள், தாவாரகைகள், உரல் உலக்கைகள் முதலானதும், வாழையிலே முதலானதும், தோட்டத்து வாழைக் காய், கருணைக்கிழங்கு முதலானதும் நெல் அறுப்பு சமயமாய் பசுங்காயாய் கொஞ்சநஞ்ச மிருந்ததையெல்லாம் சரியாயவர் கள் ஒரு யிடத்திலே கொள்ளையிட்ட வூரே அவரவர் கொண்டு போய் சேர்த்துக்கொண்டார்கள். இதல்லாமல் பயிர்களையெல் லாம் துத்து முறுக அறுத்துக்கொண்டு வாரார்கள். இங்கிலீஷ் காரன் இத்தனைநாள் இரங்பியிருந்தவன் மோர்சாவை சுற் றிலுமிருந்த தென்னமரங்கள் பயிர்களை ஒருத்தர்களையாகி லும் தீண்டவேண்டாமென்று சொன்னபடிக்கு ஒரு தருண மாகிலும் ஒழியாமல் வைத்துக்கொண்டிருந்ததை நம்முடைய உடமையை நம்முடைய வூரார்தானே கொள்ளையிட்டு தீர்த்துப் போட்டார்கள். எடுத்த குண்டுகள்மாத்திரம் கோட்டையிலே கொண்டுபோய் கொடுத்து வாடிக்கைபடிக்கு ஒரு பணம் விழுக்காடு குண்டுக்கு வாங்கிக்கொண்டார்கள்.

மற்றப்படி நான் கோட்டைக்குப்போன உடனே துரை யவர்களென்னைப்பார்த்து இங்கிலீஷ்காரர்கள் ஓடிப்போனூர் களென்றும் நேற்று இராத்திரி மோர்சாவை கொளுத்தினு னென்றும் இதுமுதலான சேதிகளெல்லாம் பேசிக்கொண்டி ருந்ததுமல்லாமல், துலுக்கர்கள் பொல்லாதவர்கள், நாய்கள் அவர்களுக்குயெல்லாம் புத்திசொல்ல வேணுமென்று ஒலாங் தக்காரன் ஆயிரம் சோல்ஜர்களும் அதற்கெஜமானனாக ஒலாந் தைக்காரரும் முசியே ருச்சேல் என்று முன் இவ்விடத்தில் மஸோராயிருந்து அப்பால் கப்பித்தானய் தச்ச வெள்ளைக்கார முசியே லெஸ்சீக் மகளைக் கல்யாணம்பண்ணி அப்பால் மாயே வுக்கு கப்பித்தானாக போயிருந்தவிடத்திலே முசியே பூர்திலுக்கும் இவனுக்கும் சண்டையான விடத்திலே அது நிமித்தியம் இங்கே அழைப்பித்து காவல்வைத்த விடத்திலே முசியே துப்ளேக்சு மேலே சீர்மையிலேபோய் பிருது பண்ணிக் கொண்டு அதிலே சபலமில்லாமல் அப்பால் ஒலாந்தாவுக்குப் போய் அங்கே வுத்தியோகம் வாங்கிக்கொண்டு இந்த சண் டைக்கு ஒலாந்த பவுன்சுக்கு எஜமானனாக வந்திருக்கிறனென்

றும் அவன் பெண்சாதி சீர்மைக்கு போனபிறகு மாயேயிலே யிருந்து இவ்விடத்திலே முசியே மோக்மேந்து பெண்சாதி அவன் தங்கச்சியானபடியினாலே பிள்ளைகளுடனே அவன் வீட்டிலே வந்திருக்கிறானென்று இதுமுதலான சேதிகளெல்லாம் துரையவர்கள் பேசியிருந்தார்கள்.

இன்றையதினம் தங்கள் வீட்டிலே ஒன்பதுநாளாய் வலசைக்கு வந்திருக்கிற நீங்கள் ஒருபொழுதாகிலும் சாப்பிடவில்லையென்றும் இன்று மத்தியானவிருந்து சாப்பிட வேணுமென்றும் (வீட்டுக்குடையவர்கள்) சொன்னபடியினாலே பனிரெண்டு மணிக்குப்போய் விருந்து சாப்பிட்டேன். அப்பால் நாளை காலையில் வீட்டுக்குப் போகவேணும் இன்றைக்கு ஒன்பதாம் நாள் ஆனபடியினாலே போகவில்லை; இங்கிலீஷ்காரனும் குண்டுசுடுகிறதை நிறுத்தினானே குஞ்சுக்குழந்தைகள் தப்பியுடனே நாளைக்காலையில் மகா நக்ஷத்திரம் வியாழக்கிழமை போகிறோமென்று சொன்னதற்கு நல்லது அப்படியே போங்களென்று சொல்லி நாளையதினத்திற்கு இங்கிலிஷ்காரர் கலகம் நிமித்தியம் வீடுவிட்டு புறப்பட்டு 39 நாள் ஆகிறது. வலசையிருந்து மாடிப்போறோமென்று இஷ்டமாய் பேசியிருந்தோம்.

அப்பால் இன்றைய இராத்திரி பனிரெண்டு மணிக்கு கூடாரம் போட்டிருந்த மேட்டுப்பேரிலே கூடாரம் முதலான சாமான்களை எடுத்துக்கொண்டு அனுப்புகிறதை அனுப்பிவிட்டு, அனுப்பக்கூடாதபடிக்கு 1000 சாக்கு அரிசி மட்டுக்கும் கற்கண்டு, சர்க்கரை, பேரீச்சம்பழம், முதலான சமஸ்தமான பருப்புகள் முதலான சாப்பாட்டு திரவியங்களை போட்டுவிட்டு அப்பால் போகிறதாய் அங்கேயிருந்த குடிசைகளெல்லாம் யேகத்துக்கு கொளுத்திவிட்டார்கள். அந்த சாடைப் பார்த்து அப்துலாயிமான் தாலுக்கு சிப்பாய்கள்கூட முசியே நோத்நேல் முதலான திராகேம் குதிரைக்காரர்களையும், துலுக்க சுவர்களையும் அவர்கள் போகிறவர்களை மரித்து சண்டைபண்ணி அவர்கள் கொண்டுப்போகிற சாமான்களையெல்லாம் பரித்துக்கொண்டு அவர்களை துரத்தச்சொல்லி நாளை சூரியஉதய வேளைக்கு மறுபடி வரவேணுமென்றும் இன்றை இராத்திரி நாலுமணி வேலைக்குப் போகச்சொல்லி உத்தாரம் கொடுத்தார்; மேலெழுதப்பட்ட முசியே ரூம்சேல் கும்பினீர் வெள்ளைக்காரர் இங்கிலிஷ்காரர் தண்டிலிருந்து ஓடிவந்து

முசியே நுசேல் சேதியெல்லாம் துரையவர்களுடனே சொன்ன தாய் சேதி சொன்னார்கள். இதல்லாமல் நித்தியம் 5 பேர் 6 பேர் இங்கிலீஷ்காரர் பவுன்சிலிருந்து ஓடிவருகிறார்கள். இதல்லாமல் ஒரு ஒப்பீசியே ஒருத்தன் ஓடிவந்ததாய் சொன்னார்கள்.

*1748* ஆ௵ அக்டோபர் ௴ *17* உ௳ விபவ ௵ ஐப்பசி ௴ 5 உ குருவாரம்

இற்றைநாள் காலத்தாலே முத்திரப்பாளையம் கதிராம பிள்ளையார் கோவில் இந்த வட்டங்களிலே இருந்த பவுன் சுகளெல்லாம் தேவனாம்பட்டணம் கூடலூர் போய் சேரத் தக்கதாக பயணம் புறப்படும்போது எடுத்து அனுப்பின அரிசி முதலான சாமான்களெல்லாம் அனுப்பினது போக நின்றது. அரிசி சரக்குகள் முதலானது சர்க்கரை, கற்கண்டு பேரிச்சம்பழம் முதலாகிய கூலிக்காரர் கண்ட கண்ட வாக்கிலே ஓடிவிட்டபடியினாலே இந்த சாமான்களெடுக்க மனுஷரில்லாததினாலே அரிசி முதலான சரக்குகளையும் சாமான்கள் முதலானதுகளை சேர்த்து கொஞ்ச மருந்தை வைத்து நெருப்பை கொளுத்திப்போட்டு இங்கிலீஷ்காரர் பவுன்சு நடந்தது நம்முடையவர்கள் அவர்களைத் துடர்ந்துக் கொண்டு போனார்கள். அவர்கள் முருங்கப்பாக்கம் ஆறு கடந்த உடனே இவர்கள் பிறகே துரத்திக்கொண்டு வருகிறவர்களைப் பார்த்து பீரங்கியை அங்கேயிருந்து முஸ்தீப்புபண்ணி நம் முடைய பவுன்சைப்பார்த்து சுட்டான். இங்கிலீஷ்காரன் அரியாங்குப்பத்திலே யிருக்கிறவன் அந்த கொத்தளத்து மேலேயிருந்து பீரங்கியினாலே நம்முடைய பவுன்சைப்பார்த்து சுட்டான். சுட்டமாத்திரத்திலே நம்முடைய சிப்பாய்கள், குதிரை சுவார்கள் சோல்ஜார்கள் யேகத்துக்கு முறிந்துக்கொண்டு திரும்பினார்கள். நம்முடையவர்களிலே அவர்கள் பீரங்கிப் பட்டு ரெண்டு குதிரை சாவுகாயம். இரண்டு சிப்பாய்கள் சாவுகாயம். 6, 7 சிப்பாய்கள் காயம் மதாம் துப்ளேக்சு சேவகர் பிறகே தூரத்திலே நின்றார்கள். அவர்களிலே இரண்டு பேருக்கு சாவு இந்தமட்டிலே திரும்பிக்கொண்டு அரிசி முதலான சாமக்கிரிகைப்பற்றிக்கொண்டு எரிகிறதே அதை சீக்கிரமாய் அவித்துப்போட்டு வேகாத அரிசி சாக்குகளை சிப்பாய்களும் சேவகர்களுமாய் விபரீதமாய்க் காட்டினார்கள். குதிரை சுவார்கள் குதிரை யெடுக்கும் பாரம் கட்டினார்கள்.

அவனவன் எடுக்கும் பாரமும் கட்டிக்கொண்டு கூலியும் கொடுத்து எடுப்பித்துக்கொண்டு வந்து ஒன்பதரை மணிக்கு கோட்டையே வந்து சேர்ந்தார்கள்.

அந்த சேதியப்படியிருக்க அப்பால் போம்பு முன் புரட்டாசி மாதம் 27 தேதி ஆதிவாரம் இராத்திரி பொழுதுவிடியற் காத்தாலே போட துவக்கினார்கள். 28 தேதி சோமவாரம் போம்புபோட துவக்கினேன். அப்போ வீடுவிட்டு எம்பெருமாள்பிள்ளை வீடுபோய் குஞ்சி குழந்தைகளுடனே போய் சேர்ந்தோம். அப்பால் மேலண்டை மோர்சா குண்டு புறப்பட்டதும் அவ்விடத்திலிருந்து 13 ம் நாள் புறப்பட்டு பாலயப்பமுதலி வீடாகிய நம்முடைய இடங்கு வந்து சேர்ந்தோம்; அங்கே 14 நாளிருந்து குண்டு வருஷம் வருஷித்த அங்காரக வாரமாகிய புரட்டாசி மீ 26 உ இராத்திரி அந்த வீடுவிட்டு ராத்திரி பனிரெண்டு மணிக்கு குஞ்சு குழந்தைகளுடனே சுங்குவர் வீடுசேர்ந்தோம். சுங்குவர் வீடுசேர்ந்து இன்றைக்கு பத்தாம் நாள் ஐப்பசி மீ 10 உ வியாழக்கிழமை காலமே சுங்குவார் விடுவிட்டு குஞ்சு குழந்தைகள் முன்னதாக அனுப்பி அப்பால் நானும் முத்துராம ரெட்டியார், சேஷாசலசெட்டியார், லக்ஷ்மணநாய்க்கர் முதலான பேர் கையில் அனுப்புவித்துக்கொண்டு வீட்டுக்கு வந்து உள்ளே நுழையும்போது கணகணவென்று எதிர் கோவிலிலே மணி சப்தம் நன்றாய் கேட்டது. நாகப்பட்டணம் தேவராய செட்டி சாமய்யன் ரெண்டுபேரும் வாசற்படியிலே நின்றவர்க களென்னைப் பார்த்து இத்தனை நாளும் நீங்கள் வீடுவிட்டு வலசை போயிருந்து இன்றையதினம் வீட்டிற்குள்ளே பிரவேசிக்கிறபோது தேவசன்னதியிலே பூசை மணி அடிபட்ட நேர்த்தி என்னசொல்லப்போகிறோம். என்ன இடத்திலே குடியிருந்தாலும் கலகமுமாய் மூன்று விடத்திலே குடியிருந்த படியினாலே வலசை பிச்சில்லையே. அப்பாலும் நாலு நாள் ஆறு நாளல்லவே. 30, 39 நாள் இன்றைதினம் கூட ஆகிற மட்டுக்கும் வலசை என்கிறதற்கு சந்தேகமில்லையே. அப்படி வலசை போய் நெடுநாளிருந்து மறுபடி வீட்டிற்குள்ளே நுழையும்போது திவ்யமான சகுனமானது இனிமேல் வெகு ஸ்ரேயஸ் நடக்கிறதற்கு ஏஷ்யமாயிருக்கும்போதுதான் இப்படிபட்ட திவ்ய சகுனம் கிடைத்ததென்று சொன்னார்கள். அப்பால் நம்முடைய வீட்டுக்கு குடிவந்து கோட்டைக்குப்

போய் பிரபு தரிசனம் பண்ணிக்கொள்ள வேணுமென்று போகும்போது எதிரே நம்முடைய வீட்டுக்கு நேராய் வரும் போது பிரபு எதிராக இங்கிலீஷ்காரன் போட்ட கொத்தளங்கள் மோர்சாக்கள் முதலான இடங்களெல்லாம் பார்க்கத் தக்கதாக போகிறவரை நான் பார்த்து பல்லக்கு விட்டிரங்கி சலாம்பண்ணின உடனே நீயும் வா என்றூர். அந்தமட்டுக்கும் அவர் பிறகே வழுதாவூர் வாசற்படியாலே புறப்பட்டு பாக்கமுடையான்பட்டு பறச்சேரி அண்டையிலே போட்ட மோர்சாவும் அப்பால் வளர்த்தி யிப்புறம் இரண்டு விடத்திலே கொண்டுவந்துப் போட்டதும் அதன்பேரிலே பதினலு பீரங்கி வைத்து சுட்டதும், அப்பால் மொடுத்தியே வைத்து போம்பு சுட்டதும் நம்முடையவர்கள் சென்னப்பட்டணத்து வாசலுக்கு வாய்வு மூலையிலே ஒரு கொத்தளம் வளர்த்தி அதிலே இரண்டு பீரங்கி வைத்து அவர்கள் மோர்சாவைப் பார்த்து அவர்கள் தண்டை பார்த்தும் சுட்டார்கள். அதற்கு பதில் அவன் ஒரு கொத்தளம்போலே யெழுப்பி நாலு பீரங்கி வைத்து எதிராக சென்னப்பட்டணத்து வாசற்படியிலிருந்து மனுஷர்கள் வெளியே புறப்படாமலும் நம்முடையவர்கள் வாய்வுமூலையிலே கொத்தளம் போட்டுக்கொண்டு எதிர் கொத்தளக்காரனுக்கு நேர் முகம் ஆடஒட்டாலும் பண்ணிக்கொண்டிருந்த கொத்தளத்தையும் மோர்சாவையும் போய்ப் பார்த்தோம். அப்பால் வழுதாவூர் வாசற்படிக்கு நேராய் பவழக்காரன்சாவடி அண்டையிலே நம்முடையவர்கள் மோர்சா போட்டுக்கொண்டு அதிலே இரண்டு பீரங்கி வைத்து சுட்டதற்கு பதில் ரெண்டு அவன் போட்டுக்கொண்டு இரண்டு பீரங்கி வைத்து சுட சின்ன கொத்தளம் மோர்சா முதலானதுகளெல்லாம் பிரபு போய்ப் பார்த்தார். ஆனல் நானும் கூட போய்ப் பார்த்தேன். அப்பால் மனுஷர் நாலுபேர் தடையில்லாமல் வருகிறதற்கு ஒரு வாய்க்கால் குண்டுசாலைக்கு அப்புறமிருந்து கொண்டுவந்து போட்ட மோர்சாவண்டையிலே கொண்டுவந்துவிட்டு அப்பால் அதிலே நாலாறு கவிருய் பிரித்து அந்தந்த மோர்சாக்களுக்கு நம் மனுஷர்கள் போகிறதற்கு நம்முடையவர்கள் போடுகிற குண்டுகளகப்படாமல் வாய்க்காலிலே போகவும் அந்த வாய்க்காலுக்கு அணை ஒன்று அந்த அணை மறைவிலே மனுஷர் போகவும் போகும்போது

குண்டு வந்தாலும் அணையிலே பட்டுப்போகவும் இப்படி யெல்லாம் முஸ்திப்பு பண்ணியது பார்த்து அப்பால் அந்த கொத்தளத்திலுள்ளே இருக்கிற மனுஷர்களுக்கு குண்டு விழுந்தாலும் படாமலும் போம்பு விழுந்தாலும் படாமலும் ஒரு மெத்தைப் போட்டான். அதற்கு சீர்மை நார்ப் பலகைகள் உள்ளூர் பலகைகளும் எட்டு அங்குல பத்து அங்குல கனமுள்ள பலகையாய்ப போட்டு அதன்பேரிலே தழைகளைப்போட்டு இப்படி என்ன என்ன பலக்க போட வேணுமோ அந்தபடி பலக்கப்போட்டு 100 போம்பு விழுந்தாலும் சங்கை யில்லாமல்போட்டு அதற்குள்ளே சோல்ஜர்கள் இருக்கத்தக்கதாக இட முஸ்திப்புபண்ணிய வேடிக்கையும், அப்பால் ஒப்பிசியல்மார் பெரிய மனுஷர்களிருக்கத்தக்கதாக ஒரு இடம் மேலே எழுதினபடிக்கு மெத்தை பலக்கப் போட்டதையும், மருந்துகள் வைக்கிற நிலவரையும், தீக்குடுக்கைகள் நிலவரையும் அதற்கு உபய பார்சமும், கிணறும். இப்படி பின்னை எந்தெந்த விதம் போடவேணுமோ அந்தந்த விதமெல்லாம் பலமாய்ப் போடுகிறதற்கு அவன் ஜனம் ஒன்றுக்கு கூடலூர் பணம் நம்முடைய ஒண்ணேகால் பணம் அப்படிப் பட்டகூடலூர் பணம் 3 விழுக்காடு கூலிக்காரனொன்றுக்கு கொடுத்தபடியினாலே பதினாயிரம் கணக்காய் கூலிக்காரர்கள் வந்து இந்தகுண்டு சாவுக்கு துணிந்து செய்தார்கள். ஆனபடியினாலே அவனுக்கு மேலெழுதப்பட்ட வேலைகள் சுறுக்காய் ஆனது. அல்லாமல் இல்லாமற்போனால் சுறுக்காய் வேலை ஆக மாட்டாது என்று வெள்ளைக்காரர் கூட வந்தவர்கள் துரையவர்கள்கூட ஆச்சரியப்பட்டார்.

இற்றைநாள் பகலைக்குமேலாக ஐந்து மணிக்கு கோட்டைக்குக் கிழக்கே சோல்ஜர்களையெல்லாம் வரிசை வைத்துக் கொத்தளங்கள்பேரிலே உண்டான சிப்பாய்களையும் மலையப்ப சேருவக்காரன் சேவகர் கும்பினீர் சேவகர் முதலானபேர்கள் இருக்கிறவர்களையெல்லாம் ஒவ்வொரு துப்பாக்கி சுட்டார்கள். அதன்பேரிலே சோல்ஜர்கள் துப்பாக்கிகள் மூன்று வரிசை தீர அப்பால் கொத்தளங்கள்பேரிலே இருக்கிற பீரங்கிகளெல்லாம் சுடச்சொல்லி நேமித்து இன்று 41 நாளாய் கொடிபோடாமல் கொடிமர முஸ்திப்பு பண்ணுகிறதற்கு நேரமில்லாமய் ஒரு மனிதன் தானே கொடிமரம் முஸ்திப்புபண்ணி அதிலே

வெள்ளைக் கொடியும்போட்டு சுவாமி சத்துருக்கள் துரத்தி விட்டு, ரக்ஷித்தாரென்கிறதற்கு கோவிலிலே பூஜை கேழ்க்கத் தக்கதாக மகா-ா-ா-ஸ்ரீ பெரிய துரை அவர்கள் அம்மாள் முதலான சகல வெள்ளைக்காரர்கள், வெள்ளைக்கார பெண்டு களெல்லாரும் நல்ல உடுப்புகளை உடுத்திக்கொண்டு முக மலர்ச்சியுடனே கோவிலுக்குப் போய் பூஜை கேழ்க்கும்போது கொத்தளத்திலே இருக்கிற சிப்பாய்கள் சேவகர்கள் வரிசை யாய் துப்பாக்கி சுட்டு அப்பால் 3 தரம் சோல்ஜர்கள் துப்பாக்கி கள் தீர்த்து உடனே 3 தரம் 21 பீரங்கி சுட்டு அப்பால் ஊரை சுற்றிலும் கொத்தளங்களிலே உண்டான பீரங்கிகளெல்லாம் சுட்டு தீர்ந்தவுடனே தொப்பியைக் கழட்டி மூன்றுதரம் இராஜா சிரஞ்சீவியாயிருக்க, சிரஞ்சீவியாயிருக்கவென்று கூப் பிட்டு ஆனவுடனே, துரையவர்கள் கோவில் பூஜை ஆனவுடனே கோவிலுக்கு வெளியே வந்து உடனே சமஸ்தமான வெள்ளைக் காரர்கள், வெள்ளைக்கார பெண்டுகள் அனைவரும் துரையவர் கள் தைரியத்தை பிரியத்துடனே யிருந்து சத்துருக்கள் மகா பலத்துடனே பட்டணத்தைச் சுற்றிக்கொண்டதற்கு பட்ட ணத்தையும் கார்த்து சத்துருக்களுடனேயும் சண்டைபண்ணி சத்துருக்களைத் துரத்திவிட்டு, பட்டணத்துக்கும் தங்களுக்கும் வந்த ஆபத்தைத் தீர்த்து எல்லாரையும் ரக்ஷித்ததற்கு நன்றி அறிந்த உபசாரணை துரையவர்களுக்குச்சொல்லி, கட்டி முத்த மிட்டானபிறகு அங்கே ஒருவிசை இராஜா சிரஞ்சீவியா யிருக்கவேணுமென்று மூன்றுதரம் சொல்லி ஆனவுடனே சமஸ்தமானபேரும் புடவை பார்க்கிற சாலையிலே பெரிய மேஜைப்போட்டு அவர்கள் வழக்கப்படிக்கு சாப்பிடவேண்டிய ஜாதி ஆகார பதார்த்தமெல்லாம் முஸ்தீப்புபண்ணி சாராயம் கூட வைத்திருக்கும் இடத்திற்கு வந்தார்கள். துரையவர்கள் கோன்சேலியக்காரர்கள் படைத் தலைவர்களுடனே கோட் டைக்கு வெளியே கீழ்ப்பார்சத்திலே சோல்ஜர்கள் வரிசை வைத்து இருக்கிற விடத்திற்குப் போனவுடனே அவர்கள் ஜாதி வழக்கப்படிக்கு படைத் தலைவர்களெல்லாம் துரையவர் களுக்கு ஈட்டி சலாம்பண்ணி அப்பால் அவர்களுக்கு எல்லாம் பதிலாசாரம்பண்ணி ஆனவுடனே சொல்தாதுகள் படைத் தலைவர்மாரெல்லாம் மூன்றுதரம் தொப்பியை விசிரி ராஜா சிரஞ்சீவியாயிருக்கவேணுமென்று ஏக தவனியைத் தவனித் தானபிறகு படைத்தலைவரெல்லாம் கோன்சேல்காரருடனே

மறுபடி கோட்டைக்குள்ளே வந்து இப்போ புதுசாய் கட்டுகிற குவர்னமாவுக்கு எதிரே அந்த கூட்டத்துடனே நின்று ஒரு பெரிய வெள்ளித்தட்டிலே 20, 30 வீதர்கள் வைத்து அதிலே சாராயம் வார்த்து ஆனவுடனே இராஜாவினுடைய ஆரோக்கியத்தைக் கோரி சாராயத்தைக் குடித்தானவுடனே மறுபடி தொப்பியைக் கழற்றி மூனுதரம் இராஜா சிரஞ்சீவியாயிருக்கவேணுமென்று தவனித்து அப்பால் மேஜை போட்டிருக்கிற புடவை பார்க்கிற சாலையிலே சமஸ்தமான வெள்ளைக்காரர் வெள்ளைக்கார பெண்டுகள் அரண்மனைகாரர்களிருக்கிற இடத்திற்கு வந்த உடனே அங்கே ஒருதரம் (அர்மேனியன்சு) அல்லாள மெனவிக்கொண்டு அப்பால் சாப்பிட்டு சாராயம் குடித்து துரையவர்களை பிடவை பார்க்கிற சாலையிலே உலாத்தும்போது நான் பழங்கும்பினீர் வர்த்தகர்கள், சுங்குசேஷாசல செட்டி, முத்துராமசெட்டி, லக்ஷ்மணநாய்க்கர் திருவீதி பாலுசெட்டி குமஸ்தா ஜலது வெங்கடாசலசெட்டி, தானப்ப முதலியார், கடற்கரை வுத்தியோகஸ்தர்கள் இராமச்சந்திர ராயர் வாசுதேவ பண்டிதர் கோட்டை சுப்பய்யன் குமாரன் முதலான கோட்டை உத்தியோகஸ்தர்கள் சாவடி கணக்கப்பிள்ளை கோட்டை கச்சேரி கணக்கு பரசுராமபிள்ளையும் பின்னையும் வூரிலேயிருக்கப்பட்ட பேர் சொல்லத்தக்க மனுஷர்களெல்லாம் வரிசையாய்நின்று ஆசாரம்பண்ணி மகத்தாகிய பிரதாபத்தைத் அடைந்தபிற்பாடு பிரபுவைப்பார்த்து வெகு பலனுடனே வந்து நாங்கள் பொருந்திருக்கப்பட்ட பட்டணத்தைச் சுற்றிக்கொண்டு பண்ணப்பட்ட இக்கட்டை நிவர்த்திபண்ணத்தக்கதாக நீர் இராத்திரிபகலென்று பாராமல் ஆகார நித்திரை பரிகரித்து சத்துருக்களை அபஜெயப்படுத்தி மத்தருத்தத்தக்கதாக யோசனை எவ்வளமோ அந்த யோசனையை இராத்திரிப்பகலாய்நினைத்து சத்துருவை போகச்செய்து அவன் பலஹீனமாய் போகத்தக்கதாக செய்து எங்களையும் எங்களுடைய சம்சாரங்களையும் எங்களுடைய ஆஸ்திகளையும் சத்துரு வசமாக்காமல் எங்களை ஆதீனத்தில்தானே நிலைக்கப்பண்ணி ரக்ஷிக்கப்பட்ட உமக்கு நாங்களென்ன ப்ரதிஉபகாரம் செய்யப்போகிறோமென்றால் நாங்கள் ஸ்வாமியைப்பார்த்து வேண்டிக்கொண்டிருக்கிறதென்னவென்றால்: நீர் சிரஞ்சீவியாயிருக்கவும். இந்த பிரான்சு தேசத்தை சூரியபிரகாசம் போலே லோகமெல்லாம் கீர்த்தியாகிய கிரணத்தினாலே ப்ரகா

சிக்கப்பண்ணியதுபோல் இன்னம் அனேக ஜெயமுண்டாக எப்போதும் உம்முடைய பேர் சொன்னமாத்திரத்திலே அங்கங்கே இருக்கப்பட்ட சத்துருக்கள் அப்படி அப்படித்தானே அபஜெயப்பட்டு போகவேணுமென்று சுவாமியை பிரார்த்திக்கின்ற உபகாரம் செய்கிறதற்கு நாங்கள் பாத்திரர்களானபடியினாலே அந்தபடிக்கு ஸ்வாமியைப் பிரார்த்தித்துக்கொள்ளுகிறோமென்று நன்றி அறிந்த உபசாரமே சொல்லுகிறோமென்று சொன்னதற்கு அவரும் பதிலுக்கு உங்களை ரக்ஷிக்கிறதற்காகத்தான் (கடவுள்) இத்தனைப் பிரையாசைப் பட்டாரென்று சொன்னார். அந்தப்படிக்கு அவரவர் ஆசாரம் பண்ணிக்கொண்டு அவரவர்கள் வீட்டுக்குப்போனார்கள். அப்பால் துரையவர்கள்மாத்திரம் புடவைப்பார்க்கிற சாலையை விட்டு ஒண்டியாய் நடந்து வீட்டே போகும்போது நானும் கூட பேசிக்கொண்டு போனேன். அப்பால் அவர் சொன்ன சேதி [



சந்தானம் பிரிண்டிங் ஒர்க்ஸ், புதுவை.